## கட்டுரை எழுதியவர்கள்

# படங்கள்




# பழனி இரட்டைமணி மாலை

உ. வே. சாமிநாதையர்

இரட்டை மணிமாலையென்பது தமிழிலுள்ள 96 வகைப் பிரபந்தங்களுள் ஒன்று. நிறத்தால் வேறுபட்ட மணியும் பவளமும் கோத்து அமைக்கப்படுவது போல யாப்பால் வேறுபட்ட வெண்பாவையும் கட்டளைக் கலித்துறையையும் அந்தாதியாகத் தொடுத்து அமைக்கப்படுவது இப்பிரபந்தம். இந்த வகையில் நூற்றுக்கணக்கான நூல்கள் உள்ளன.

ஆறுபடை வீடுகளுள் ஒன்றும் திருவாவினன்குடியென்று கூறப்படுவதுமாகிய பழனியில் திருக்கோயில் கொண்டெழுந்தருளியுள்ள முருகக்கடவுள் திறத்தில் இஃது இயற்றப்பெற்றது. இதனை இயற்றியவர் பெயர் தெரியவில்லை. இது தெள்ளிய இனிய நடை வாய்ந்து அன்பை ஊட்டுவதாக அமைந்துள்ளது. இதிலுள்ள செய்யுட்போக்கினால் இதனை இயற்றியவர் சிறந்த புலவரென்றும் முருகக் கடவுள்பால் மிக்க அன்புடையவரென்றும் அருமையறியாத பல செல்வர்கள்பால் அலைந்து அலைந்து வெறுப்புற்றவரென்றும் தெரிகிறது.

இந்த இரட்டைமணி மாலை எழுதிய ஏட்டுச்சுவடியொன்று இற்றைக்கு 53-வருஷங்களுக்கு முன்பு கும்பகோணம் காலேஜில் தமிழ்ப்பண்டிதராக இருந்து விளங்கிய அன்பர், திரிசிரபுரம் சி. தியாகராச செட்டியாரவர்களிடமிருந்து எனக்குக் கிடைத்தது. அதன் பழமை, சற்றேறக்குறைய 200 வருடங்களுக்கு முன்பு அஃது எழுதப்பட்டிருக்கவேண்டுமென்பதைப் புலப்படுத்தியது.

அன்பர்கள் பாராயணஞ் செய்வதற்கு அனுகூலமாக இருக்குமென்பதையும் நூல் இறவாது உலாவுதலையும் நினைந்து இதனை இங்கே பதிப்பிக்கலானேன்.

### காப்பு

ஞான விரகறியா நானுஞ் சிலதமிழால்
வானவரேத் தும்பழனி வந்தானைத்—தானவரை
வென்றானை வாழ்த்த விரைப்பா திரிவனஞ்சேர்
கன்றானை மாமுகத்தோன் காப்பு.

### நூல்

### வெண்பா

1. பூமாது கேள்வன் புகழ்மருகன் பொய்யாத
பாமாது வாழ்த்தும் பழனியான்—நாமத்
தனிவேலை யுந்தோகை தன்னையுமே பாட
இனிவேலை கண்டீ ரெமக்கு.

### கட்டளைக்கலித்துறை

2. எம்மைப் புரக்குஞ் சிவகிரி யானெம் மிரவொழிக்கும்
செம்மைத் தனிச்சுடர் தேவசிந் தூரந்தெய் வானைவள்ளி
யம்மைக் கிறைபொன் னடிகளல் லாம லடியவர்கள்
வெம்மைப் பிறவிப் பிணிக்கொரு மூலிகை வேறில்லையே.

### வெண்பா

3. வேறா விளக்கும் விளக்கொளியும் வேறிரண்டு
கூறா நவரசமுங் கூத்தாட்டும்—நாறுமலர்க்
கள்ளுயிர்க்குந் தென்பழனிக் கந்தன் குருபரனென்
உள்ளுயிர்க்கு வேற்றுமையா மோ.

### கட்டளைக்கலித்துறை

4. ஆமோ திருவெழுத் தாறறி யாததென் றஞ்சலிலா
நாமோவை காபுரி நாட்டிருப் போம்வினை நம்மைவிட்டுப்

---

காப்பு. விரகு - உபாயம். தமிழ் - செய்யுள். பாதிரி வனம் - ஸ்தல விநாயகர் எழுந்தருளியிருக்கும் இடம். கன்று ஆனை - ஆனைக் கன்று.

1. பாமாது - கலைமகள். நாமம் - அச்சம். வேலை-தொழில்; "அடித் தொழும்பு செய்தொழுகும், இவ்வேலை யீந்தா ரெமக்கு" காசிக்.

2. இரவு - யாசகம், இராத்திரி. சுடர் - சூரியன். சிந்தூரம் - யானை; தேவரிற் சிறந்தவரென்றபடி. மூலிகை - பச்சிலை.

3. விளக்கும் விளக்கொளியும் வேறா. நவரசம் - நகை முதல் சாந்தம் ஈறாக உள்ள ஒன்பது சுவைகள். கூத்தாட்டு - நாடகம். கள் - தேன். வேற்றுமையாமோ - வேற்றுமையாவனோ?

4. திருவெழுத்தாறு - சடாக்ஷரம். வைகாபுரிநாடு - பழனியுள்ள நாடு; வைகாபுரி, வையாபுரியெனவும் பழனியையுடைய நாடு வைகாவூர் நாடென

போமோ கொடுவினை போய்விட வேண்டிற் புனக்குறத்தி
மாமோக வேலன் பழனியை வாழ்த்தென் மடநெஞ்சமே.

வெண்பா

5. நெஞ்ச முருகா நிதிப்பெருக்க ரோவெனக்கோர்
தஞ்ச முருகா தனிமுதல்வா—செஞ்சதங்கைத்
தாளுடையாய் தென்பழனிச் சண்முகா பன்னிரண்டு
தோளுடையாய் நீயே துணை.

கட்டளைக்கலித்துறை

6. துணைக்குங் குமக்கொங்கை மங்கையுந் தானுந்த்ரி சூலனெடுத்
தணைக்குங் குழந்தை பழனிப் பிரான்விளை யாட்டென் சொல்கேன்
கணைக்குங் கடுங்கதிர்ச் செவ்வேல்விட் டேழு கடல்கலக்கும்
பணைக்குந் திசைக்களி றேரெட்டு மேவிடும் பாய்ச்சலுக்கே.

வெண்பா

7. பாயிருள்போற் சூர்மாப் பயந்தோடப் பானுவெனத்
தீயுமிழுங் கூரிலைவேற் செவ்வேளே—கோயிலுனக்
கேரகமோ வெங்கணுமோ வென்னெஞ்ச மோதிருச்செந்
தூரகமோ தென்பழனி யோ.

கட்டளைக்கலித்துறை

8. ஓங்கார மான முருகோன் மருங்கி லொருகைவைத்து
நீங்கா தொருகை பிடித்ததண் டாயுத நெஞ்சைவிட்டு
வாங்கா திவனைப் பழனிவெற் பேறி வணங்கினர்க்குத்
தீங்கா னதுவரு மோபொரு மோநமன் சேனைகளே.

---

வும் வழங்கும்; "சேரர் கொங்குவை காவூர் நனடதி லாவினன்குடி", "வைகாவூர் நாடதனிற் பழனிப்பதி" (திருப்புகழ்.) பழனியில் வையாபுரிக்குள மென்று ஒரு தீர்த்தமுள்ளது.

5. நெஞ்சம் உருகா. நிதிப்பெருக்கரோ - திரவியத்தின் மிகுதியை யுடைய செல்வர்களோ. தஞ்சம் - பற்றுக்கோடு.

6. மங்கை யென்றது உமாதேவியாரை. த்ரிசூலன் - சிவ பெருமான். கணைக்கும் - திரண்ட. கலக்கும் - கலங்கச் செய்வார். பணைக்கும் - பருத்த. பாய்ச்சலுக்கு எவிடும்; மேவிடுமென்று பிரித்துப் பொருள் கொள்ளினும் பொருந்தும்.

7. சூர்மா - சூரனாகிய மாமரம். ஓட உமிழுமென்க. ஏரகம் - மலை நாட்டகத்ததொரு திருப்பதி யென்பர்; திருமுருகு. 189, ந. உரையைப் பார்க்க; சோழநாட்டுள்ள சுவாமி மலையும் இத்திருப்பெயரால் வழங்கும்.

8. மருங்கில் - இடையில்.

வெண்பா

9. சேனைத் திரளுநெடுஞ் செங்கோலு மங்கையரும்
ஏனைத் திருவு மெளிதன்றோ—நானிலத்து
நம்பிடுவார்க் கும்பழனி நாட்டுக் குருபரனைக்
கும்பிடுவார் தம்மடியார்க் கும்.

கட்டளைக்கலித்துறை

10. அடியார்க் கெளிய பழனிப் பிரானுல கன்றளந்த
நெடியார்க்கு மார்க்கு நினைப்பரி யான்பக்க நின்றதெய்வப்
பிடியார்க் கிறைவன் பெயர்சொன்ன பேரைப் பிடிக்கிலன்னக்
கொடியார்க்குப் பூட்டுந் தளைபூட்டு வன்கொடுங் கூற்றிற்குமே.

வெண்பா

11. கூற்றையோ திங்கட் கொழுந்தென்றீர் கூற்றுயிர்த்த
காற்றையோ தென்றலிளங் கன்றென்றீர்—தேற்றக்
கடவீ ரெனிற்பழனிக் கந்தவேள் முன்போய்
மடவீர் மொழிவீரென் மால்.

கட்டளைக்கலித்துறை

12. மாலையுஞ் சாந்தும் புழுகோ டளைந்தபொன் மார்பையுமுந்
நூலையுந் தென்பழ னிப்பெரு மானன்பர் நோய்தணிக்கும்
வேலையும் பச்சை மயில்வாக னத்தையும் வெற்றித்தண்டைக்
காலையுஞ் சென்று தொழவேண்டு மாலையுங் காலையுமே.

---

9. எளிதென்பதனைத் திரள் முதலியவற்றோடு தனித்தனியே கூட்டுக. நம்பிடுவார்க்கும் - விரும்புபவர்க்கும்.

10. நெடியார்க்கும் ஆர்க்கும். தெய்வப் பிடியார்க்கு-தெய்வயானையார்க்கு. அன்னக்கொடியார்க்குப் பூட்டும் தளை - பிரமதேவர்க்கு இட்ட விலங்கை; பிரமதேவர்க்குக் குகப்பெருமான் விலங்கிட்டதை, கந்தரலங்காரத்துள்ள, "பங்கே ருகனெனைப் பட்டோ லையிலிடப் பண்டுதளை, தங்காலி லிட்ட தறிந்தில னேதனி வேலெடுத்துப், பொங்கோதம் வாய்விடப் பொன்னஞ் சிலம்பு புலம்பவரும், எங்கோ னறியி னினிநான் முகனுக் கிருவிலங்கே" (89) என்னுஞ் செய்யுள் தெரிவிக்கின்றது.

11. திங்கட் கொழுந்து - பிறை. தென்றல் இளங்கன்று - இளந்தென்றல்; "தென்றற், கன்றுவந் துலவு மரமிய மாடக் கலைசைவாழ் சிதம்பரேச் சரனே" மீ. பிரபந்த.

இது தலைவி கூற்று.

12. சாந்து - சந்தனக்குழம்பு. முந்நூல் - பூணூல். மாலையும் காலையும்- மாலைப் பொழுதிலும் காலைப் பொழுதிலும்.

### வெண்பா

13. காலைக் கமலமுகங் காட்டநெய்தல் கண்காட்ட
மாலைக் குமுதமெலாம் வாய்மலர—நூலிடையார்
கூந்தலெனப் பாசிவளர் கோட்டஞ்சூழ் தென்பழனிச்
சேந்தனிடத் தன்றோ செகம்.

### கட்டளைக்கலித்துறை

14. செகத்தா ரொருவர் திருவாவி னன்குடிச் செல்வன்றன்னை
அகத்தா மரைவைத்துப் பூசைசெய் தாரகத் தாமரைக்கே
நகத்தா மரையிரண் டுள்ளே நடிக்கு நடம்புரிவான்
முகத்தா மரைகளிற் பன்னிரு தாமரை முன்னிற்குமே.

### வெண்பா

15. முன்னிற்குந் தென்பழனி முத்துக் குமாரநீ
மன்னிக்கு மன்னருட்கோர் மட்டுண்டோ—உன்னமகிழ்
பார்ப்பானை லோகம் படையென்றாய் மூவடிமண்
ஏற்பானைக் காவென்று யே.

### கட்டளைக்கலித்துறை

16. ஏட்டுக் கணக்கு மெழுத்தாணி தேய்ந்தது மியாங்கள்விற்ற
பாட்டுக் கணக்கும் பலன்பெற லாமென்று பாடிச்சென்ற
வீட்டுக் கணக்குந் தொகைபார்க்கிற் கார்க்கடல் வெண்மணலைக்
கூட்டிக் கணக்கிட லாமே பழனிக் குருபரனே.

### வெண்பா

17. குருமூர்த்தி யாய்க்குடிலை கூறியிட்ட வுன்னை
ஒருமூர்த்தி யென்னு துலகம்—இருமூர்த்தி

---

13. கோட்டம் - நீர் நிலை. செகம் சேந்தனிடத்து - உலகம் முருகனிடத்தே தோன்றியது.

14. நகத் தாமரை இரண்டென்றது நகங்களையுடைய திருவடித் தாமரைகளிரண்டையும்; கையை "நகவனசம்" என்றார் ஒரு பெரியார். நடம் புரிவான் - முருகக்கடவுள். முகத்தாமரையிலுள்ள பன்னிரண்டு தாமரை யென்றது பன்னிரண்டு திருவிழிகளை.

15. பார்ப்பானை - பிரமனை; "பார்ப்பான், குண்டிகை யிருந்த நீருங் குளுகுளு கொதித்த தன்றே" என்றார் கம்பரும். மூவடி மண் ஏற்பான் - திருமால். கா - உலகத்தைப் பாதுகாத்திடுக; யாசகம் செய்பவனை உலகத்தைக் காப்பாயென்று சொன்னயென்பது ஒரு நயம்.

16. ஏடு - பனையேடு. கணக்கு-அளவு. வீடு - செல்வர்களுடைய வீடு.

17. குடிலை - பிரணவம்.

மும்மூர்த்தி யாய்ப்பழனி மூர்த்தியே கீர்த்திபுனை
எம்மூர்த் தியுமான தென்.

கட்டளைக்கலித்துறை

18. என்னையும் பார்க்கச் சிறியோர் பிறப்பு மிறப்புமிலா
உன்னையுந் தெய்வமென் றோதிய நாவி னுலப்பவரைப்
பின்னையுந் தெய்வங்க ளென்பார் பழனிப் பிரான்குமரா
பொன்னையும் பொன்னென் றுரைப்பா ரிரும்பையும் பொன்னென்பரே.

வெண்பா

19. பொற்கன்னி காரவனம் பூங்கற் பகவனமாச்
சொற்க நிகர்பழனித் தூயோனே—நற்கனியைத்
தந்தா வளமுகத்தான் றந்தருள வந்தருள்வாய்
நந்தா வளமெனக்கு நல்கு.

கட்டளைக்கலித்துறை

20. நல்லார்முன் னெங்ஙன முய்யவல் லேன்பழ நான்மறையும்
வல்லாய் பழனி மலைவள்ள லேயிரு மங்கையர்க்கும்
சல்லாப லீலைத் தலைவாவென் னேயைத் தணிக்கும்வண்ணம்
பொல்லா வினைவற்சி யென்றர்ச்சி யேனொரு பூவெடுத்தே.

---

18. என்னையும் பார்க்க - என்னைக் காட்டிலும். உலப்பவரை - இறப்பவரை. பழனிப்பிரான்: அண்மை விளி. பொன்னையும்.........பொன்னென்பரே: "மின்னுந் தமனியமும் வெற்றிரும்பு மோரினமாய்ப், பொன்னின் பெயர்படைத்தாற் போலாதே", "மூரியாம், பொருகா ரிரும்புங் கனகமும் பொன்" என்பவற்றிலும் இக்கருத்து அமைந்துள்ளது.

19. கன்னிகார வனம் - கோங்க வனம். தந்தாவளம் - யானை. நந்தா வளம் - குறையாத செல்வத்தை.

20. வற்சி - நீக்கு; வடமொழிச் சிதைவு.




# புராதன இந்திய ஓவியங்கள்

எம். எஸ். சுந்தர சர்மா

அரசகுமாரியின் அழகு வாய்ந்த ஓர் உருவை அவளது தலையினின்றிழிந்த ஒரு மயிரைக்கண்டே எழுதிய திறமை வாய்ந்த ஓவியரின் கதையையாவது அல்லது மற்றுமொரு மடந்தையின் அழகிய உருவை எண்ணெய்க் கிண்ணத்தில் தோன்றிய சாயையிலிருந்து வரைந்த ஓவியரின் கதையையாவது தனது பாட்டியின் மடியிலிருந்த வண்ணம் கேட்டுக்களிக்காத இந்திய வாலிபரும் உண்டோ? மக்களும் மன்னர்களும் ஒரே வகையில் ஓவியத் தேர்ச்சிபெற்று ஓவியங்கள் புனையாத வெறுஞ்சுவர்களே கிடையாதபடி நமது தேசம் இருந்தது. இவ்விதமாகக் 'குயில்பேனு ஓட்டும்' நாகரிகம் முற்றிய இக்காலம்வரை ஓவியப்பயிற்சி குன்ருது வழங்கிவந்தது.

இவ்வோவியப் பயிற்சி வெகு மேன்மைப்பட்டிருந்ததென்பது இப்பொழுது ஆங்காங்குச் சிதறுண்டு காணப்படும் மதிலோவியங்களிலிருந்து நாம் அறியக்கூடும்.

ஓவிய அமைப்புக்குச் சுபாவத்திலேயே சில வரம்புகளுண்டு. இயற்கையின் பிரகாசத்தையும், நுட்பத்தின் மகிமையையும், ஓயாத அசைவையும் யாரால் எடுத்து வரைந்து காட்டமுடியும்? இவைகளினுடைய ஜாடைகளைத்தான் காட்டக்கூடுமாகையால் ஓவியக்கலை ஒரு குறிக்கலையாகத்தான் இருக்க முடியும். எவ்வளவுக் கெவ்வளவு இலகுவாய் அக்குறிகள் வரையப்படுகின்றனவோ அவ்வளவுக் கவ்வளவு அவ்வோவியம் மேன்மை பெற்றதாகும். புராதன இந்திய ஓவிய நிபுணர்கள் வெகு காலத்திற்கு முன்பே மேற்சொல்லிய உண்மைகளை அறிந்திருந்தார்கள். கண்முன் பொருளை நிறுத்தி எழுதும் வாடிக்கையே அவர்கள் பால் கிடையாது. அவ்வெண்ணமே அவர்களுக்கு உதித்ததில்லை. அபார ஞாபக சக்திவாய்ந்த இத்தேசத்தில் மேலான காரியங்களெல்லாம் மனோபாவமாய்ச் செய்வது தான் மேன்மை யென்றும் அங்ஙனம் செய்யவேண்டியதே கடமை

யென்றும் சொல்லாமலே விளங்கிற்று. அக்காலத்திய ஓவிய அறிஞர்கள் தமது கண்களாகிய ஓவியப்பட்டையால் தமது மூளை யாகிய இதழ்களிலேயே குறிப்புக்கள் எப்பொழுதும் எடுத்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் உலகை உற்று நோக்கியவர்களா யிருந்தமையின் அவர்களது சிறு ஓவியத்திலோ அல்லது பெரிய ஓவியத்திலோ ஏற்பாடுசெய்த பாவத்தோடுகூடிய உருவமைப்பைக் காண்பதரிது. எல்லை வரி வரைவதிலேயே அவர்கள் பேரானந்தம் பெற்றவரானார்கள். எல்லை வரிதான் ஓவியக் கலையின் ஆதியுமந்தமு மாகும்.

உண்மை, அழகு, மனோபாவம் ஆகிய இம்மூன்றுந்தான் அவர்களது எல்லையும் முடிவுமாகும். உண்மை யென்பதை உருவபேதம் என்றும் பிரமாணம் என்றும் இருவகைப்படுத்தி யிருந்தார்கள். அநேக மாறுதல்களைப் பெற்று வெவ்வேறாகக் காணும் உருவங்களை உருவபேத தத்துவத்தினாலுணர்ந்து, அந்த அந்த உருவத்தின் அமைப்பைக் காட்டும் பிரமாணங்களைப் பாகுபாடு செய்து அறிந்தார்கள். பாவம், லாவண்ய யோஜனம் என்ற இரண்டுங் கூடியதே நாம் அழகு என்று கூறுவது. பாவத்தினால் வாழ்க்கையின் வெவ்வேறு இயல்புகளையும் லாவண்ய யோஜனத்தினால் வாழ்வின் சீர் போக்கையும் அறிந்து அழகு அமைத்தார்கள். பின்னும், ஸாத்ருச்யம் என்பதனால் மனோபாவ ஒற்றுமைகளையும், வர்ணீகபங்கத்தினால்* கவிசாதுர்யம் அல்லது வர்ணனைப் போக்கையும் அறிந்து மனோபாவம் முற்றிலும் பெற்றிருந்தார்கள். ஆகவே முற்கால ஓவிய நிபுணர்கள் ஓவியச் சிற்பக் கலைகளின் முக்கிய தத்துவங்களாகிய இவைகளை நன்றாய் ஆராய்ச்சி செய்து உணர்ந்திருந்தார்களென் பதில் சந்தேகமே கிடையாது.

நற்கலைகளில் எளிதில் அழியக்கூடியன ஓவியங்களேயாகும். ஆகையினால் இவ்வுஷ்ண தேசத்தில் இரண்டாயிர வருஷங்களுக்கு மேலாகவே நின்று இற்றைக்கு நமக்குக் கிடைத்திருக்கும் பூர்வகால மதிலோவியங்கள் அக்கலைப் பயிற்சியில் நம்மவர்களுக்கிருந்த ஆழ்ந்த திறமையைச் சொல்லாமலே விளக்குகின்றன.

---

* வர்ணீகபங்கம் என்பதற்கு இங்குச் சொல்லியிருக்கும் பொருள் நான் புதிதாகக் கூறுவதாகும். ஓவியத்திற்கும் சிற்பத்திற்கும் பொதுவாயுள்ள தத்துவம் என்பது எனது அபிப்பிராயம். இந்தியச் சிற்ப ஓவிய ஆராய்ச்சியில் வல்லோரான டாக்டர் குமாரசாமி முதலியோர்கள், புராதன வியாக்கியான கர்த்தர் ஒருவர் கூறியிருக்கிறபடி இதற்கு வர்ணங்கள் குழைத்துக் கூட்டும் தத்துவமென்று பொருள்கொண்டு இதனை ஓவியத்திற்கு மட்டுமே உரியது என்று கூறியிருப்பது சரியல்லவென்பது எனது அபிப்பிராயம்.



விளக்கம் 1.

*By courtesy of the artist Mr. M. S. Sundara Sarma, B.A.*



விளக்கம் 2.

*By courtesy of the artist Mr. M. S. Sundara Sarma, B.A.*



விளக்கம் 3.

*By courtesy of the artist Mr. M. S. Sundara Sarma, B.A.*



விளக்கம் 4.

*By courtesy of the artist Mr. M. S. Sundara Sarma, B.A.*

அப்படிப் புராதன ஓவியங்கள் காணப்படும் ஸ்தலங்கள் சிற்சிலவைகளே. அவ்விடங்களெல்லாம் விந்திய மலையின் தெற்கேயே காணப்படுகின்றன. சுருகுஜா சமஸ்தானத்தில் ஜோகிமாரா குகையிலும், குவாலியர் சமஸ்தானத்தில் பாக் குகைகளிலும், நைசாம் சமஸ்தானத்தில் அஜண்டா குகைகளிலும், இலங்கைத் தீவில் சிகிரி என்ற ஸ்தலத்திலும், புதுக்கோட்டை சமஸ்தானத்தில் சித்தன்ன வாசலிலும், சென்னை நகரினருகேயுள்ள காஞ்சீபுரத்திலுமே பழைய மதிலோவியங்கள் காணப்படுகின்றன. தஞ்சையிலும், மதனபள்ளியினருகே ஒரு தலத்திலும் சிற்சில ஓவியங்களிருப்பதாகக் கேள்வியே யொழிய வேறில்லை. நாடெங்கும் இக்கலை பரவிச் செழித்தமையின் இன்னும் அநேக விடங்களில் புராதன ஓவியங்கள் காணக்கூடும். இக் கலையினுணர்ச்சி விருத்தியடைந்தால் மேன் மேலும் புதிதாகக் கண்டுபிடிக்க இடமுண்டென்பதில் ஐயமில்லை.

முற்கூறிய இடங்களிற் காணும் புராதன மதிலோவியங்களிற் சிலவற்றை எடுத்து எல்லை வரி விளக்கங்களாக இங்குத் திரட்டிக் காட்ட முயற்சி செய்யப்பட்டிருக்கிறது. அவைகள் பொறுக்கி யெடுக்கப்பட்டவைகளல்ல. அவைகளிற் பெரும்பான்மை கூட்டத்தினின்றும் தனித்தெடுக்கப்பட்டவை. பரவி யிருந்தபோதிலும் அவைகளின் ஒற்றுமையைக் காட்டுவதற்காகவும் அவைகளை வரைந்த புராதன ஓவியவல்லோரின் மேலான நோக்கங்களையும் போக்கையும் காட்டுவதற்காகவுமே அவை திரட்டப்பட்டன. புராதன மதிலோவியங்களின் குணாதிசயங்களை விளக்கிக்காட்டும் பொருட்டுக் கூட்டிய இவ்வோவியத்திரட்டு அவைகளை முழுதும் காணவேண்டுமென்ற ஊக்கத்தை யளிக்குமென்றும், நமது நாட்டோர் அநேகர் அவ்வோவியங்கள் காணப்படும் ஸ்தலங்களுக்குச் சென்று கண்ணும் மனமுமாரக் காண அவாக்கொள்ளச் செய்யுமென்றும் நம்பப்படுகிறது. அங்ஙனம்போய்ப் பார்ப்பதினாலேதான் ஓவிய உருசியும் அறிவும் ஏற்படக் கூடும். நமது தாய் நாட்டின் முன்னேற்றத்தைச் சார்ந்த பொருள் நூலின் கேள்விகளுக்கு விடையளிக்கும் கைத்தொழில்களை விருத்தி செய்வன இவ்வோவியவுணர்ச்சியும் அறிவுமேயாகும்.

ஜோகிமாரா குகையானது மத்திய மாகாணத்தில் உதயபுரி யென்ற கிராமத்தினருகேயுள்ள இராமகார் குன்றத்திலுளது. வருஷ விசாரணையிலிருந்து இவ்விடங் காண்பவைகள்தாம் உலக ஓவியங்களிலேயே மிகப் புராதனமானவைகளென்று தீர்மானிக்கப்பட்டுள்ளது. அவைகளைப்பற்றிய சிறு விபரமுண்டேயொழிய ஒருவரும்

அவற்றை எடுத்தெழுதிக் காட்டியதில்லை. அவைகளைப் பார்க்கும் பாக்கியம் இதுகாறும் நான் பெற்றவனல்ல. ஆகையினால் இங்குக் கூட்டிய திரட்டில் ஒன்றேனும் அவ்விடத்திலுளதன்று. அவ்விடத்திற்குச் சமீபத்திலுள்ள யாவரேனுமோர் ஓவியர் அங்குச் சென்று அவைகளை எடுத்து வரைந்து காட்டுவாரேயாகில் அவர் செயல் மிகவும் மெச்சக்கூடியதாகும்.

ஒரு நூற்றாண்டிற்குமுன் கண்ட அஜண்டா குகைகள் மிகவும் பிரசித்தமுடையன. அநேகர் அங்குக் காணுமோவியங்களை அவரவர்கள் சாமர்த்தியத்திற்கேற்ப எடுத்து வரைந்துளார். நைசாமுடைய அரசாங்கத்தாரே ஒரு சிறந்த திரட்டு வெளிப்படுத்தியிருக்கிறார்கள். கண்டுபிடித்த காலத்தில் காணப்பட்டவைகளில் ஒரு சிறு பாகந்தான் இப்பொழுது அங்குக் காணப்படுவது மிகவும் பரிதாபமானது. 'விக்கிரக ஆராதனை செய்யும் பாமரர்கள்' ஆயிரக்கணக்கான வருஷங்களாகக் காப்பாற்றிவந்தவைகளை 'நாகரிகக் காட்டு மிராண்டிகள்' ஒரு நூற்றாண்டில் அழித்தது ஓர் வியப்பன்றோ!

பாக் குகைகள் குவாலியர் சமஸ்தானத்தில் குஜராத்துக்கும் மால்வாபுரிக்கும் இடையே யுள்ளன. நிறைந்து சிறந்து விளங்கிய ஓவியங்களில் சிறிதுதான் இப்பொழுது இங்கே காணலாம். அசிட் குமார் ஹால்டர் என்ற ஓவிய நிபுணர் இங்கே காணப்படுவனவற்றைத் திறமையாய் வரைந்து அச்சிட்டுளார்.

சிகிரி என்பது இலங்கையிலுள்ளது. அத்தீப அரசாங்கத்தினரால் நன்கு காப்பாற்றப்பட்டு வருகிறது. இவ்விடம் காணுமோவியங்கள் நூதனமானவைகளாயிருப்பினும் இந்திய தேசத்திற் காணுமோவியங்களுடன் மிக ஒத்திருக்கின்றன. கொளும்பில் ஏற்படுத்திய காட்சிச்சாலையில் இவ்வோவியங்களின் நல்ல பிரதிவரைகள் வைக்கப்பட்டிருக்கின்றன.

சித்தன்ன வாசல் புதுக்கோட்டைக்கு வடமேற்கே பத்து மைலுக்கப்பாலுள்ள ஒரு குக்கிராமம். அதனருகேயுள்ள ஒரு மலைச்சாரின் செங்குத்தான பாறையில் குடைந்த ஒரு சிறு மண்டபத்தில் அவ்விடமுள்ள ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன. இவைகளைக் கண்டுபிடித்த கவுரவம் டி. ஏ. கோபிநாத ராயரையும் அவைகளை எல்லோருக்கும் உடனே தெரியப்படுத்திய டேப்பிரியேல் அவர்களையும் சாரும். அங்கே காணப்படும் ஓவியங்கள் முழுவதும் யான் எடுத்து வரைந்துளேன். அவற்றில் சிலவற்றை அச்சிட்டு வெளியாக்கியும் இருக்கின்றேன்.

காஞ்சீபுர மதிலோவியங்கள் அவ்வூரின் மேற்கே பாழடைந்த பழைய கைலாசநாதர் கோயிலில் காணப்படுகின்றன. டேப்பிரியேல் தீர்மானத்துடன் சென்று அங்கு அவைகளைக் கண்டுபிடித்தது மிகவும் பாராட்டத்தக்கது. கண்டுபிடித்த சில நாளுக்கு முன்பாகவேயானவ்விடம் சென்று காணப்பட்டவைகளை எடுத்தெழுதியதுண்டு. 'கலைமகளில்' அவைகள் வெகு விமரிசையாக அச்சிடப்பட்டுள்ளன. தகுந்த முயற்சி எடுத்துக்கொண்டால் அவ்விடத்தில் இனியும் அநேக ஓவியங்களைக் கண்டுபிடிக்கக்கூடும். அப்படிச் செய்ய நல்ல காலம் கூடிய சீக்கிரத்தில் உண்டாகுமென்று நம்பப்படுகிறது.

முதல் விளக்கம் சித்தன்ன வாசலில் காணப்படும் நூதனம் பொருந்திய ஓர் ஆண்தலை. ஆத்மிக நோக்கம் பொருந்தியிருப்பதோடு மித்திரத்துவமும், தத்துவஞானமும், அமரிக்கையும் பொருந்திய முகமலர்ச்சி யிருப்பதால் யாவரும் விரும்பி நம்பக்கூடிய உருவாயமைந்துளது. மக்களும் மன்னர்களும் ஒருமை வாய்ந்த நடையையும் பாவத்தையும் முற்காலத்தில் பெற்றிருந்தமையால் இது மன்னரின் உருவோ அல்லது மக்களிலொருவரின் உருவோவென்று உறுதியாகச் சொல்லக்கூடவில்லை. இவ்வுருவம் கூட்டத்திடையே விளங்கி நிற்கும் ஒருவரது முகம். இம்முகத்திற் காணும் காது வளர்ப்பு, கன்னியாகுமரி முதல் ஹரித்துவாரம் வரை காணும் ஓவியங்களிலும் சிற்பங்களிலும் காணப்படுகின்றதனாலேயே ஓரே நாகரிகம் இத்தேசத்தில் எங்கும் வியாபித்திருந்த தென்பதை வேறு அத்தாட்சியின்றித் திறமாய்க் காட்டுகின்றது.

காஞ்சீபுரத்தில் காணப்படும் ஓவியங்கள் முழுவதும் 'கலைமகளின்' ஐந்தாவது பகுதியில் விளக்கிக் காட்டியிருப்பதனால் அவைகளிலிருந்து ஒன்றும் இங்குக் காட்டவில்லை.

இலங்கையில் சிகிரி என்ற விடத்தில் காணுமோவியங்கள் மிக்க விசித்திரமாயிருப்பதோடு வேறு உலகிற்கே நம்மை அழைத்துச் செல்லக்கூடிய புதுமை வாய்ந்துள்ளன. இங்குள்ள இரண்டாவது விளக்கம் அவைகளில் ஒன்றைக் காட்டுகிறது. இக்காலத்தில் மோட்டார் வண்டிகளிற் சென்றாலன்றி அசைய முடியாத கொழுத்துருண்ட வடிவங்களையே பார்க்கும் நமது கண்களுக்கு இவ் வுருவங்களின் மகிமை இலேசாய்ப் புலப்படாது. பவழக்கொடியினையும், மின்னற்கொடியினையும் போன்ற உருவைக் கொண்ட இவ்வோவியங்கள் பார்க்கப் பார்க்க நமது உள்ளத்தைப் பூரிக்கச் செய்து மேனாட்டு ஓவிய வல்லோரான பாட்டிசிலியின் மனோபாவத்திற்கு மேற்சென்று ஒரு புதிய பரலோகத்திற்கே கொண்டு செலுத்துகின்றன. மழையிலும் வெயிலிலும் தம்மை மூடிச் சுற்றிச் சுழலும்

கொடிகளை வளரவிட்டு ஆனந்தித்திருப்பது ராஜ விருக்ஷங்களுக் கன்றி வேறு எதற்கு முடியும்? அன்னையே முன்னறி தெய்வமா யும் பிரதானியாயும் விளங்குகிற சிறு இராஜ்யமாகும் இந்திய வீடுகளிற் பிறந்து வளர்ந்த ஓவிய நிபுணர்களாலன்றி மற்றவர்களால் இச்சிறப்பு வாய்ந்த மாதரின் உருவங்கள் வரையக்கூடா. பேதைமை யோடு கூடிய மாதரின் செழுசெழுப்பை இதைக்காட்டிலும் மேன் மையாக வரையவொண்ணாது. கனத்த ஆபரணங்களிட்டுப் பூங் கொடிபோன்ற வாட்டத்தினையுடைய இவ்வுருவங்கள் சிம்மள மாத ரின் சிர்தூக்கிய வுருவேயன்றி வேறில்லை. சிறைப்பட்டிருந்தும், சீதா தேவி தனது சிறந்த கருணையால், இராவணனுடைய தீபத்தில் ஜனித்த மாதருக்குக் கொடுத்த வரனுடைய மகிமையாலோ இவ் வுருவங்களமைந்தனவென்று எண்ண இடமுண்டு.

மூன்ருவது விளக்கம் பாக் குகைகளிலுள்ளனவற்றி லொன்று. அவ்விடம் காணும் ஓவியங்கள் வெகு எளிய முறையில் மிக்க சாமர்த்தியமாக வரையப்பட்டுள்ளன. இங்குக் காட்டியிருக்கும் உருவம் அதன் கூட்டத்தினின்றும் தனித்தெடுக்கப்பட்டுள்ளது. இஃது அதிக சிலாக்கியமான அமைப்புளது. கோலாட்டம் போடும் வட்டத்திலுள்ள ஒரு மாதின் உருவம் இது. முகவாய்க்கட்டையின் விற்போன்ற மெல்லிய வரையானது கன்னத்தின் வரையாக மறைந்து வளைந்து அலைஅலையாகச் செல்லும் தலையிலுள்ள அழகிய வரையை அடைந்து படிப்படியாயுள்ள வரைகளின் உதவியால் கீழே இறங்கிக் கழுத்தின் வளைவுடன் புணர்ந்து அவளது தோள்களினின்று தொங் கும் உடையின் விரிந்த வரைகளாகச் செல்லுகின்ற விமரிசை பேரா னந்தத்தைக் கொடுக்கிறது. முகத்தின் இருப்பும், சாய்வும், கோலாட் டக்கழியின் தாளத்தை அனுசரித்திருப்பதோடு கூட நடனத்தின் போக்கையும் சங்கீதத்தின் அணியையும் நன்கு விளக்குகின்றன. பிரகாசமான கண்களின் பிரியமான பக்கப் பார்வை, அவளது மெல் லிய மேனியைத் தெளிவாய்க் காட்டுகின்றது. சிறு சிறு எல்லை வரைகளின் உதவியால் இச் சிறந்த முகவுருவைக் காட்டக்கூடிய திறமை மேலான ஓவியர்க்கன்றி வேறு யாருக்குண்டு? மேனாட்டு வீனஸின் முகங்களையும் மடோனாக்களின் முகங்களையும் ஒருங்கு கூட்டித் திரட்டி நிறுத்தினும் இம் மங்கையின் முகவுருவின் லக்ஷ ணத்திற் கீடாகாதென்று சொல்வது மிகையான மொழியுமல்ல, கிணற்றுத் தவளையின் பெருமைக்கூற்றுமல்ல வென்று உறுதியாகச் சொல்லலாம்.

நான்காவது விளக்கத்தில் அஜண்டாவிலிருந்து காட்டியுள்ள உருவமானது ஒரு சிறவயதுள்ள மங்கையின் குணாதிசயங்களை

நன்கு புலப்படுத்திப் பார்ப்பவரின் மனதைக் கவரச் செய்யுமொரு விமரிசை பொருந்தியுளது. கெஞ்சிக் கேட்கும் கண்களும், வாயும் வணங்கிய அமைப்புப் பொருந்திய அவளது உடலின் இருப்புடன் ஒத்துள்ளன. உடலுடன் கூடிய பிரகிருதியானது உடலுடன்கூடிய புருஷனுடன் சர்வகாலமும் விளையாடி மயக்கிப் புருஷன் தனது உண்மை இயல்பைச் சற்றுநேரமேனும் மறந்து தானும் பிரகிருதி யோவென்று கருதும்படி செய்யும் உலக லீலையை வெகு விமரிசை யாகக் காட்டியுளது. ஓயாது ஆடம் என்பவனை மதிமயக்கும் ஈவின் உருவோஅல்லது அடோனிஸைக் கொண்டாடித் துதிக்கும் வீனஸின் உருவோவென்று கருத இடமிருக்கிறது.

இவைகளைப் போன்ற ஓவியங்கள் பலவற்றை இவ்விடங்களி லெல்லாம் நமது முன்னோர்கள் அமைத்துள்ளனர். நமது தேசத் தின் அருமை பெருமைகளைக் கண்டறியும் திறமையற்றிருக்கும் இயல்பை நீக்கி அந்நியர்கள் கட்டுரைகளைக் காதில் போட்டுக்கொள் ளாது நாமே நமது ஓவியப் பெருமையைக் கண்டறிய வேண்டியது நமது தேச முன்னேற்றத்திற்கு மிக்க அவசியமாகையால் இதனைப் படிக்கும் அனைவரும் இங்குக் கூறியிருக்கும் ஸ்தலங்களுக்கு யாத் திரை சென்று அங்கே காணப்படும் ஓவியங்களை யெல்லாம் கண்டு அவைகளின் பெருமைகளை ஊகித்து மனமும் கண்ணும் மாற்றிக் கொள்ளவேண்டு மென்பது எனது பேரவா.

# நாடகம்

## எஸ். இராமஸுப்ரமணியன்

ஸ்ரீமான் கே. எஸ். வேங்கடரமணி ஓரிடத்தில் கூறுவது போல் நாம் இப்பொழுது புனர்ஜன்மம் எடுத்துக் கொண்டிருக்கிறோம். சென்ற நூற்றாண்டின் இறுதியில் நம் நாடு பாரதி கூறிய வாறு தாழ்வுற்று வறுமை மிஞ்சி விடுதலை தவறிக் கெட்டுப் பாழ் பட்டு நின்றது. அதிலிருந்து சென்ற 30 அல்லது 40 வருஷங்களாக இந்தியாவில் நடைபெற்ற சம்பவங்களை நன்கு ஆராய்ந்தால் நவீன ஆசக்தியொன்று மக்களுள் தோன்றி வாழ்க்கைத் துறைகளெல்லாவற்றிலும் பிரதிபலித்து வருவதைக் காணலாம். அரசியலில் சுதேசி ஒத்துழையாமை இயக்கங்கள், பொருளாதார விஷயத்தில் கூட்டுறவு இயக்கம், சமூகத்துறையில் விதவா விவாஹச் சீர்திருத்தம், தீண்டாமை விலக்குத்திட்டம், மதவிஷயத்தில் பிரம்ம சமாஜம், ஆரிய சமாஜம், முதலியவையெல்லாம் இப்புதிய ஆசக்தியின் தேசீயமெனும் வெறியின் பலன்களேயாம்.

தொன்றுதொட்டு நம் நாட்டில் சிறப்புற்று விளங்கிய கலைகள் பலவற்றுள் நாடகமொன்றாகும். துரதிருஷ்டவசமாகச் சென்ற நூற்றாண்டினிறுதியில் இக்கலை மிகவும் சீர்கேடடைந்திருந்தது. இக்கலை முன்னொருகால் எவ்வித உன்னத நிலையிலிருந்தது, சில காலத்திற்குமுன் வரை எவ்வளவு தாழ்வுற்று நின்றது என்பதை நாம் நினைப்போமாகில் அவ் வீழ்ச்சி நெஞ்சு திடுக்கிடக்கூடியதாகவிருக்கும். 'காவ்யேஷு நாடகம் ரம்யம்' என்று ஒரு காலத்தில் கருதப்பட்டு வந்தது. வடமொழியில் இயற்றப்பட்டுள்ள நாடகங்களிலெல்லாம் தலைசிறந்து விளங்குவதும், கதே, ஜோன்ஸ், எமர்ஸன் முதலிய மேனாட்டு அறிஞர்களின் உள்ளத்தைக் கவர்ந்ததுமான 'சாகுந்தலம்' என்னும் நாடக ரத்தினத்தை இயற்றிய காளிதாஸ மஹாகவி, "தேவானாம் இதமா மனந்திமுனயஹ . . . . நாட்யம் பின்னருசேர் ஜலஸ்ய பஹுதாப்யேகம் சமாராதனம்" என்று இக்கலையின் பெருமையை மாளவிகாக்னிமித்ரத்தில் அழகுபட வர்ணித்துள்ளார். ஆனால் இப்பொழுதோ இக்கலையடைந்துள்ள இழிவை என்னவென்றியம்புவது? கவருடல், மைவிழியார் மனை முதலியவற்றுடன் நாடகமும் சேர்க்கப்பட்டுவிட்டது. சிறுர்கள் நாடகம்

பார்க்கப் பெற்றோர்களால் அனுமதிக்கப்படுவதில்லை. நாடகத்தில் நடிப்பவருக்குச் சமூகத்தில் எவ்வித கௌரவமும் கிடையாது. 'கூத்தாடி' என்ற பதம் இழிசொல்லாகவும் வசைமொழியாகவும் இப்பொழுது வழங்கி வருகின்றது. நாடகத்தில் சேர்ந்துள்ள ஸ்திரீகளோ 'வழுக்கி விழுந்தவர்'களிலும் கேவலமாகக் கருதப்படுகின்றனர்.

நாடகத்தை இவ்வளவு அருவருப்புடன் ஜனங்கள் கருதினார்களென்றால் அதற்கு நடிகர்களுடைய இழிகுணங்களும், அதனால் கலையே சீர்கேடடைந்து ஆபத்திற்கு உற்பத்தி ஸ்தானமாகிவிட்டதோ வென்று அஞ்சும்படியான நிலைக்கு வந்துவிட்டதுமே காரணங்களாகும். நல்ல வேளையாக நான் முற்குறிப்பிட்டவாறு 'தேசியப்புனருத்தாரணம்' என்னும் அலையடித்தபொழுது நாடகக் கலையிலுள்ள குற்றங்களை நீக்கி அதை மீண்டும் உத்தாரணம் செய்து பழைய உன்னத ஸ்தானத்திலிருத்த மஹத்தான முயற்சி எடுத்துக் கொள்ளப்பட்டது. இப்பொழுது நம் தமிழ்நாடு எங்கணும் ஆங்காங்குக் காணப்படும் அமெட்டியூர் நாடக சபைகள் எல்லாம் இப்புதிய உணர்ச்சியின் சொரூபமேயாம்.

மேலே கூறப்பட்டவாறு நாடகம் தாழ்வுற்றிருந்தகாலை அதில் காணப்பட்ட குற்றங்கள் அனேகம். அவற்றுள் மிகவும் முக்கியமானவற்றைக் கீழே குறிப்பிடுகின்றேன் : முதலாவதாக, நடிக்கப்படும் சரித்திரத்தின் காலதேச வர்த்தமானத்திற் கொவ்வாத நடையுடை முதலியன. உதாரணமாக நடிக்கப்படுவது நந்தனார் சரித்திரம். ஆனால் வேதியரோ ஆக்ஸ்போர்டு கிராப்புடனும் கையில் ரிஸ்டு வாட்சுடனும் காட்சியளிக்கிறார்! இரண்டாவதாக நாடகத்தில் நடிப்பே பிரதானமென்பதை மறந்து சமயசந்தர்ப்பத்திற் கொவ்வாத கீதங்களைப் பாடுதல். கூடலுக்குச் சிலம்பு விற்கச் செல்லும் பொழுது கோவலன் 'பண்டித மோதிலால் நேரைப் பறிகொடுத்தோமே' என்று பாடுகின்றான். பண்டித மோதிலால் நேருவைப் பறி கொடுப்போமே வென்று பாடினாலாவது அவன் ஒரு தீர்க்க தரிசி என்று எண்ணிக்கொள்ளலாம்! லீலாவதி தன் சகோதரிக்குச் செய்த சதியை எண்ணி வருந்தி இவ்வுலக வாழ்வை நீக்கத் தீர்மானித்துப் பாடுகிறாள் (பாடுவதற்கு எவ்வளவு அரிய சந்தர்ப்பம் பாருங்கள்! அன்னப்பட்சிகள் பாடிக்கொண்டே இறப்பதாகக் கேள்விப் பட்டிருக்கிறீர்களல்லவா ?) பாட்டு முடிந்தவுடன் கத்தியால் குத்திக் கொண்டு கீழே விழுகிறாள். உடனே 'ஒன்ஸ்மோர்' கேட்கப்படுகிறது. தற்கொலை புரிந்துகொண்ட லீலாவதி எழுந்து நின்று பாடிவிட்டு மீண்டும் பிராணத்தியாகம் செய்து கொள்ளுகிறாள்.

பூனையைப்போல் லீலாவதிக்கும் ஒன்பது ஜீவன்களுண்டுபோலும்! இதனுடன் சபையினருக்குப் பொருள் விளங்காத ஹிந்துஸ்தானி கீதங்கள், சாரமற்ற ஹிந்துஸ்தானி மெட்டுக்களில் தமிழ்ப் பாடல்கள் பாடப்படுவதையும் சேர்த்துக் கொள்ளவேண்டும். இது தவிர அந்த விதூஷகர்களென்ற திருக்கூட்டம்! ஆபாசப் பேச்சிலும், காமப்பாட்டிலும் அவர்களை எவர் மிஞ்ச முடியும்? மார்க்கண்டேயர் நாடகம் நடக்கின்றது. பார்ப்பவருக்கெல்லாம் சிவபக்தி கொழுந்து விட்டெரிகின்றது. ஆனால் அந்த விதூஷகன் சாதாரணப் பேர் வழியா என்ன? அவனை இச் சிவபக்தி சிறிதும் பீடிக்காது. அவன் வந்தவுடன் 'கத்திரிக்காய்க் கூடை கொண்டாடி' என்று ஆரம்பிக்கிறான். என்ன கரகோஷம்! கடைசியாக 'வழுக்கி விழுந்த' பெண்கள் நடிக்கும் நாடகங்களில் நடிகர்கள் மரியாதையின்றி ஹத்து மீறி நடித்தல். ஒரு தரம் தாராசசாங்கமும், டம்பாச்சாரி விலாசமும் பார்த்தேன். இனி ஏழு ஜன்மங்களுக்கு எனக்கு மோக்ஷம் கிடைக்குமா வென்பது சந்தேகமாகத்தானிருக்கிறது!

இம்மாதிரிப் பெரிய குற்றங்கள் அமெட்டியூர் நாடகங்களில் அனேகமாகக் காணப்படவில்லை. கௌரவம் வாய்ந்த கல்விமான்களுடைய ஆதரவைப் பெற்றிருப்பதால் இந்நாடகங்களுடைய மதிப்பு ஜனங்களிடை வெகு வேகமாகப் பரவி வருகிறது. சில வருஷங்களுக்குமுன் நீங்கள் உமது நண்பரொருவரை அமெட்டியூர் டிராமாவிற்கு அழைத்து, "என்ன, அமெட்டியூர் நாடகத்திற்கா பணம் கொடுத்துச்செல்வது! சே, ஏதாவது இலவசமாகட் டிக்கட் கிடைத்தால் போகலாம்" என்று அவர் பதில் கூறினால் நீங்கள் வியப்புற்றிருக்கமாட்டீர்கள். ஆனால் இன்றோ நிலைமை முழுதும் மாறிவிட்டது.

இந்த ராஜதானியில் எத்தனை அமெட்டியூர் நாடக சபைகள் இருக்கின்றனவென்று எனக்குத்தெரியாது. அவைகளிற் பல என் முன்னிலையில் (ஆதரவினும்!) நாடகம் நடத்தியதில்லை. அவைகள் என்னால் அறியப்படாமலிருப்பதே அதற்குரிய தண்டனை! நான் கேள்விப்பட்டவரையில் சென்னை சுகுணவிலாச சபைதான் இக்கலை வளர்ச்சியில் சிறந்து நிற்கின்றதென்றும் மிகுந்த செல்வாக்குள்ளதென்றும் தெரிகிறது. ஆனால் ஒன்றும் நிச்சயமாகச் சொல்லிவிட முடியாது. உதாரணமாக, வரும்படி விஷயத்தில் ஸெக்ரடேரியட் கோஷ்டியுடன் சுகுண விலாச சபை போட்டியிட முடியுமா வென்பது எனக்குச் சந்தேகமாகத்தான் இருக்கிறது.

சுகுண விலாசசபை அங்கத்தினர்களில் முக்கியமான பலரைப் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். சிலரை நான் நேரில்

அறிவேன். அந்தச் சபையைச் சேர்ந்த ஸ்ரீமான்கள் சம்பந்த முதலியார், சத்தியமூர்த்தி, நாகரத்தினம், கோபாலரத்தினம் முதலியவர்கள் எனக்கு உற்ற நட்பினர்கள்! கோப்பெருஞ்சோழன்—பிசிராந்தையார் நட்பைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்களல்லவா? ஆம், அதே ரீதியில் பாதிக் கல்யாணமான சமாசாரம்?

"புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதான்
நட்பாங் கிழமை தரும்"

எனச் செந்நாப் போதார் செப்பியுள்ளாரன்றோ!

ஸ்ரீ சம்பந்த முதலியாரை எனக்குத் தெரியாதென்றால் என்னைச் செவ்வாய்க் கிரஹவாசி யென்று நீங்கள் தவறாக எண்ணிவிடக்கூடுமாதலால் அவரை எனக்கு வெகு காலமாகத் தெரியுமென்பதைச் சங்கூதி அறிவிக்கிறேன். அவர் தமிழ்நாட்டு ஷேக்ஸ்பியர் என்பதையும் ஒத்துக்கொண்டுவிடுகிறேன். அவர் எழுதியுள்ள நாடகங்களில் அனேகமாக எல்லாவற்றையும் படித்திருக்கிறேன். "அவர் நாடகங்களிலனேகம் மொழிபெயர்ப்புகள்தாமே" என்று அபிப்பிராயப் படக் கூடியவர்கள் உங்களில் யாரேனுமிருந்தால் அவர்களைத் தயவு செய்து சர்விஸ் கமிஷன் பரீக்ஷைக்கு ஆஜராகுமாறு பலமாகச் சிபார்சு செய்கிறேன். அப்பொழுது தெரியும் தர்ஜமாசெய்வது எவ்வளவு சுலபமென்பது! 'பழைய புட்டிகளில் புதிய சாராயத்தை அடைத்ததற்காக' ஷேக்ஸ்பியரின் கீர்த்தி ஆசந்திரார்க்கம் பிரகாசிக்க வேண்டுமென்றால் ஸ்ரீ சம்பந்தத்தின் பங்கு மாத்திரம் ஏன் சொத்தையாக இருக்கவேண்டுமென்பது விளங்கவில்லை. ஆனால், "அவர் தமிழ் நாட்டிலே பிறந்து தமிழிலேயே தமது நாடகங்களை வரைந்த குற்றத்திற்குத் தண்டனை யளிக்கவேண்டாமா?" என்று நீங்கள் வினவுவதாயின், சரிதான், முன்னால் கூறியதெல்லாம் மன்னிப்புடன் வாபஸ் பெற்றுக்கொள்ளப்படுகிறது! கவிதையின் மூலம் பாரதி தமிழணங்கிற்குச் செய்து வந்த தொண்டைச் சம்பந்தம் நாடகத்தின் மூலம் செய்து வருகிறாரென்பதே எனது அபிப்பிராயம். நீங்கள் மாறுபட்ட அபிப்பிராயம் கொண்டிருந்தால், சரி, துவந்துவயுத்தம் செய்து ஒருகை பார்த்துவிடுவோம்; உங்கள் நிறை 90 பவுண்டுக்குட்பட்டிருந்தால் உடனே அறிவியுங்கள்.

இவரும் ஸ்ரீ நாகரத்தினம் ஐயரும் சமீபத்தில் லீலாவதி-சுலோசனா நாடகம் நடித்ததைக் காணும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. சம்பந்தம் சங்கீதத்தினருகே போகவேமாட்டார். ஆனால் நடிப்பு அபாரம் என்று ஒரு நண்பர் முன்னெச்சரிக்கையாகவே அறிவித்திருந்தார். இதை ஒருவாறு ஒத்துக்கொள்ள வேண்டியதுதான்.

ஆனால் நடிப்பில் நாகரத்தினம் ஐயர் அவரைவிட மேற்போனவர் என்பதைக் குறிப்பிட்டாகவேண்டும். எங்ஙனமென்று விஸ்தரிக்க நான் விரும்பவில்லை. ஆனால் ஒரே ஒரு விஷயம் மட்டும் குறிப்பிடுகிறேன். பாடும்பொழுதும் பேசும்பொழுதும் உணர்ச்சிகளை நன்கு வெளிப்படுத்தி, அவ்வுணர்ச்சிகளுக்கேற்றவாறு முகத்தோற்றத்தை மாற்றிக் கொள்ளும் அபார சக்தியை இதுவரை இவர் ஒருவரிடந்தான் பார்த்திருக்கிறேன். சம்பந்த முதலியாரிடத்தில் அதை நான் காணவில்லை. இதற்கு அவருடைய வயோதிகம் காரணமாயிருத்தலுங் கூடும். இதற்குள் நாகரத்தினம் ஐயர் குறையற்ற முதல்தர நடிகர் என்று எண்ணியிருப்பீர்களானால் ஏமாந்தே போவீர்கள்! உண்மையில் அவரிடமும் குறை இருக்கிறது. முதல் வகுப்பு நாற்காலியில் உட்கார்ந்திருப்பவர்கள்தாம் அவரது பேச்சையும் சங்கீதத்தையும் கேட்டு ரஸிக்க முடியும். தரையிலிருப்பவர்களுக்கு எல்லாம் சினிமாக்காட்சியோ அல்லது ஆங்கில மௌன நாடகமோ (*Pantomine*) வென்றே தோன்றும். இவ்வளவு தாழ்ந்த குரலுள்ளவர் நாடக மேடைக்கு வரலாமாவென்று கேட்டால் அந்தக்கேள்விக்கு நான் பதில் சொல்லப்போவதில்லை.

அப்படியிருக்க, தமிழ்நாட்டு அமெட்டியூர் நாடக பிதாவான சம்பந்தம் நடித்த நாடகத்திலேயே குற்றங்குறைகள் காணப்பட்டதென்றால்—சரி, அது நாடகம் பார்க்கப்போனவர்களின் துரதிருஷ்டம் என்று வைத்துக் கொள்ளுங்கள். அன்று நான் கண்டு களித்த லீலாவதி-சுலோசனா நாடகத்தில் காணப்பட்ட குறைகள் பொதுவாக எல்லா நாடகங்களுக்கும் பொருந்துமாதலால் அவைகளைக் கீழே குறிப்பிடுகின்றேன்.

முதலில் எவ்வித சம்பந்தமில்லாமலும், அனாவசியமாகவும் மேடையில் சிலர் தோன்றுவதைக் குறிப்பிடவேண்டும். ஆதிமுதல் அந்தம்வரை வாயைத் திறவாமலிருந்தாள் லீலாவதியின் தோழி (?) பாட்டிலோ பேச்சிலோ பாகமில்லாத பாத்திரம் அனாவசியம் என்பது எனது அபிப்பிராயம். இதாவது தொலைந்து போகட்டும். ஆனால் திரை தூக்குபவனும் (*Prompter*) நாடகமத்தியில் மேடையில் பிரசன்னமாவதை எங்ஙனம் சகித்துக்கொள்வது?

இரண்டாவதாக நாடகம் பாட்டுக் கச்சேரியல்லவென்பது சில நடிகர்களுக்கு ஞாபகமிருப்பதில்லை. அனேக நாடகங்களில் பிரதான நடிகர்களே சங்கீதத்தில் சிக்கனத்தை அனுஷ்டிக்கும்பொழுது சில்லரைப் பாத்திரங்கள், அசந்தர்ப்பமாகப் பாட ஆரம்பித்து விடுவதைக் கவனிக்கும்பொழுதுதான் தூக்குத் தண்டனையை ரத்துசெய்துவிட வேண்டுமென்ற இயக்கத்திற்கு ஆதரவளிப்பது

நியாயமாவென்ற ஐயம் பீறிட்டுக்கொண்டு கிளம்பி விடுகிறது. வம்சாபிவிருத்தி செய்வதாக வாக்களித்துவிட்டதற்கு வருந்தி ஸ்ரீதத்தன் பிராணத்தியாகம் செய்து கொள்ளக் கிளம்பிவிடுகிறான். அப்பொழுது பாடவாரம்பிக்கும் கமலாகரனின் சமயோசித புத்தியை வியப்பதா, அல்லது நண்பனின் பாட்டைக் கேட்டுவிட்டுத் தான் பிராணனை விடுவோமே என்று நிற்கும் ஸ்ரீதத்தன் பொறுமையை வியப்பதாவென்று என் உள்ளத்தில் அன்று எழுந்த பிரச்னை இன்னும் முடிவுக்கு வந்தபாடில்லை.

மூன்றாவதாக ஹாஸ்ய நடிகர்கள் எனப்படுவோர் தமிழ் மொழியைக் கொலைசெய்வதைப் பற்றிச் சில வார்த்தைகள். செந்தமிழ் நாடக மேடைக்கு ஒவ்வாது என்ற கொள்கை ஒரு புறமிருக்கட்டும். கலப்புத்தமிழ் அவசிய மென்றால் கலக்கப்படும் வார்த்தைகள் நல்லவைகளாகவாவது இருக்கக்கூடாதா? அன்று கானகத்தில் சுலோசனையுடன் வாதமிடும் சாரங்கன் 'சதாய்க்கிறாள்', 'டபாய்ச்சுக் கொண்டு' முதலிய பதங்களைத் தாராளமாக உபயோகித்தான். இம்முறை தமிழன்னைக்கு விஷத்தைக் கலந்து கொடுப்பதாகுமென்பதே எனது அபிப்பிராயம்.

கடைசியாகச் சீன்களின் முக்கியத்திற்குத் தக்கவாறு காலமளிக்கப்படவில்லை யென்பது குறிப்பிடத்தக்கதாகும். காதலர் சந்தித்துப் பேசும் சீனுக்கும், சேவகன் ராஜகுமாரனைத் தேடிவந்து விசித்திர சர்மனிடம் அகப்பட்டுத் தவிக்கும் அங்கத்திற்கும் ஒரே கால அளவு அளிக்கப்படுகிறது. சேவகன் ராஜகுமாரனைத் தேடிவருவது போன்ற சீன்களை ரத்துசெய்து முக்கியமான பாகங்களின் நேரத்தை அதிகரித்திருந்தால் நாடகம் மிகவும் நன்றாயிருந்திருக்கும். ராஜகுமாரன் காணப்படவில்லை யென்ற விஷயத்தை விதூஷகர்கள் மூலம் சபையோருக்கு அறிவித்திருக்கலாம். பிரதான பாத்திரத்தின் காதலை அபிவிருத்தி செய்வதற்கும், நடிக்க முடியாதனவும் நடித்தால் சிறிது காலமே எடுத்துக் கொள்ளக்கூடியனவுமான கதாபாகங்களைச் சபையோருக்கு அறிவிக்கவும் விதூஷகர்கள் வடமொழி நூல்களில் உபயோகப்படுத்தப்பட்டிருப்பதைக் காணலாம்.

இவையெல்லாம் அன்று எனக்குத் தென்பட்ட குறைகள். இவை தவிர நாடகம் முடிந்ததும் எனது உள்ளத்திலெழுந்த சந்தேகங்களோ அனந்தம். லீலாவதியின் பெற்றோர்கள் அவள் கல்யாண சம்பந்தமாகப் பஞ்சாபிற்கு வந்ததாக அறிவிக்கப்பட்டதே. ஆனால் சுலோசனையின் மணத்தின்போது அவர்கள் ஏன் காணப்படவில்லை? கானகத்தில் சர்வாபரண பூஷிதையாய்த் தவித்து நின்ற

சுலோசனையைப் பேயென்றும் எமனென்றும் கருதி வெறுக்கும் ஸ்ரீ தத்தன் அவள் கேவலம் பாங்கியாய் அலங்கார ரஹிதையாய் இருந்த பொழுது அவளிடம் காதல் கொண்டாரென்றால் இதனை எப்படி நம்புவது? ஒரு வேளை முன் சந்தர்ப்பத்தில் வியாமோனுகூலம் ஏற்படவில்லைபோலும்! ஸ்ரீதத்தனைப் பார்க்கவேண்டுமென்று சித்திர ரேகாதேவி சொல்லியனுப்பினளே. ஆனால் ஸ்ரீ தத்தன் ஏன் அந்தப்படி நடந்துகொள்ளவில்லை? தாயும் பெண்ணுதலால் அந்தப் பேய் சொன்னபடி. ஏன் கேட்கவேண்டுமென்று அவ்வேதாந்தி எண்ணி விட்டார் போலும்!

இவ்வாறே ஒவ்வொருவருக்கும் வெவ்வேறு குற்றங்குறைகள் தென்பட்டிருக்கும். ஆனல் அன்று நாடகம் நடிக்கப்பட்டதில் எனக்குப் புலப்பட்ட குறைகளிற் சிலவற்றை மேலே குறிப்பிட்டு விட்டேன். அமெட்டியூர் சபைகள் எந்த நோக்கத்துடன் ஆரம்பிக்கப்பட்டனவோ, கலாபிவிருத்தி எனும் அம்மனோரதம் சித்திக்க வேண்டுமென்றல், இக்குற்றங்கள் செவ்வனே களையப்பட வேண்டிய தவசியம்.




# வறுமைப் புலி

உ. வே. சாமிநாதையர்

மதுரைப் பக்கத்திலுள்ள ஒரு சிற்றூரில் சங்கர சிந்தாமணிப் புலவரென்ற ஒரு கவிஞர் இருந்தார். எளிய நடையிற் செம்பாக மான கவிகளை இயற்றுவதில் அவர் வல்லவர். அவருடைய உள்ளம் கல்வியறிவினால் உவப்புற்று நிறைவடைந்ததெனினும் அவர் இல்லம் வறுமைக்கு இருப்பிடமாக இருந்தது. தம் தாய் தந்தையர், மனைவி மக்கள், உற்றார் உறவினர் முதலியவர்கள் வறுமையால் மிக்க தளர்ச்சியை அடைந்து துன்பப் படுவதை அறிந்து அந்நிலையை அவர் மாற்ற நினைந்தார்.

ஆனாலும், பிறரிடத்துத் தம் வறிய நிலையை எடுத்துக் கூறி உதவி பெறுவதற்கு அவர் மனம் துணியவில்லை. அவருடைய நிலையைக் குறிப்பினாலறிந்து உதவி புரியும் பிரபுக்களும் அவ்வூரிலும் அயலிடங்களிலும் அக்காலத்தில் இல்லை.

எவ்வாறேனும் பசிப்பிணியைப் போக்கிக் கொள்ளத்தானே வேண்டும்? பிறர்பாற் சென்று கேட்பதற்கு அவர் நாணம் கொண்டா ரெனினும், உறவினர் படும் பசித்துன்பத்தினைப் பார்க்கையில் உண்டான இரக்கம் அந்நாண வுணர்ச்சியை வென்றது. பிறருடைய நலத்தின் பொருட்டு எத்தகைய முயற்சியையும் செய்யும் நினைவு அவருக்கு உண்டு. அருமையறியாதவர்களிடம் சென்று துன்புறுதலை அவர் விரும்பவில்லை. எனவே தமிழ்ப் புலவர்களை உள்ளுவப் போடு பாராட்டி ஆதரிக்கும் உபகாரி யாரென்று விசாரித்து வந்தார்.

போடிநாயக்கனூரில் அக்காலத்தில் இருந்த ஜமீன்தார் தமிழ்ப் பயிற்சியும் தமிழ்ப் புலவர்களை எப்பொழுதும் உடன் இருக்கச் செய்து அவர்களுடன் சல்லாபம் செய்யும் தன்மையும் உடையவரென்று அவர் கேள்வியுற்றார். அன்றியும் புலவர்களை உயிர் நண்பர்களாகக் கருதி அளவளாவும் இயல்பு அந்த ஜமீன்தார்பால் மிக்கிருந்ததென்றும் அறிந்தார். அவர்பாற்சென்று தம் வறுமைப்பிணியைப்

போக்கிக்கொள்ளலாமென்னும் எண்ணம் புலவருக்கு உண்டாகவே ஒருநாள் புறப்பட்டு அவர் போடிநாயக்கனூர் சென்றார்.

அவர் சென்ற அக்காலத்தில் ஜமீன்தார் ஒரு பிரார்த்தனையை நிறைவேற்றுவதற்காகப் பழனிக்குத் தம் பரிவாரங்களுடன் சென்றிருந்தார். புலவர் தாம் பேரார்வத்தோடு ஜமீன்தாரைப் பார்க்கவந்தும் உடனே காணக்கிடையாமைக்கு வருந்தினர். ஜமீன்தாருடைய உயர் குணங்களைப் பின்னும் பலபேர் வாயிலாக அங்கே கேட்டின்புற்றார். அவ்வாறு கேட்கக்கேட்க அப்பிரபுவை விரைவிற் பார்க்க வேண்டும் என்ற எண்ணம் அவருக்கு மிக்கது. ஜமீன்தார் பழனியிலிருந்து திரும்பிவரும் காலமாக இருந்தமையின் எதிர்சென்று காணலாம் என்று நினைத்தார். அவ்வாறே சென்று, ஜமீன்தார் பரிவாரங்களுடன் திரும்புங்காலத்தில் இடைவழியில் சந்தித்தார்.

புலவர்களோடு நட்புமுறையிற் பழகிவருபவரென்று ஜமீன்தாரைப்பற்றிக் கேள்வியுற்றிருந்தாராதலின், தம்முடைய வறுமை நிலையைச் சாதுரியமாகத் தெரிவிக்கவேண்டுமென்று நினைந்து, ஜமீன்தார்முன் ஓடிச்சென்று, “கூ, கூ, புலி துரத்தி வருகிறது” என்று கூவினர். அவருடைய செயலைக்கண்டு திடுக்கிட்ட ஜமீன்தார், “என்னையா பயமுறுத்துகிறீர்? நீர் யார்? புலி எங்கே இருக்கிறது?” என்று கேட்டார். புலவர், “ஐயோ! பாழும் புலி துரத்துகின்றது. அதைக் கொன்று என்னைக் காப்பாற்றவேண்டும்” என்று மீண்டும் ஓலமிட்டு விட்டு,

“பைபா டரவணி சொக்கேசர் கூடற் பதியைவிட்டு
வையா புரிக்கு வரும்வழி யேவழி தான்மறித்து
மெய்யா வறுமைப் புலிதான் மிகவும் வெருட்டுகின்ற
தையாதென் போடை யதிபா புலவர்க் கருணிதியே”

என்ற பாடலைக் கூறினர். ஜமீன்தார் தமது சாதுர்யத்திற்குத் தக்க பரிசும் உபசாரமும் அளிப்பாரென்று புலவர் நம்பினர்.

ஜமீன்தார் ஒரு கணப்பொழுது பேசாமல் இருந்தார்; பின்பு அருகில் இருந்த ஒரு வேலையாளை அழைத்து அதிகாரத்தொனியில், “இந்த மனுஷரை அழைத்துச் சென்று பந்தோபஸ்தில் வைத்திருந்து நாம் ஊர்வந்து சொல்லியனுப்பும்போது நம்மிடம் அழைத்துவா” என்று கட்டளையிட்டார். புலவர் அவ்வாறே அழைத்துச் செல்லப்பட்டார். அவருடைய மனநிலை அப்பொழுது எவ்வாறிருக்கும்!

“ஐயோ! வஞ்சகர்கள் இந்த ஜமீன்தாரைப்பற்றி இல்லாத குணங்களையெல்லாம் ஏற்றிக் கூறி நம்மை ஏமாற்றிவிட்டார்களே!

இவர் நமது செய்யுளைக் கேட்டுச் சந்தோஷிக்கக் கூடுமென்றல்லவோ சொன்னோம். கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டது போலவன்றோ ஆயிற்று! இவர் சிறந்த அறிவாளியென்றும் குறிப்பறிந்து கொடுப்பவரென்றும் நம்மிடத்திற் சிலர் சொன்னார்களே. அந்த இயல்பு இவரிடத்திற் சிறிதும் காணப்படவில்லையே. நம்முடைய செய்யுளைக் கவனிக்கவில்லையே. முகமலர்ச்சியையும் காணோம்; இன்சொல்லையும் காணோம். நம்மை என்ன செய்ய நினைத்திருக்கிறாரோ தெரியவில்லை. முன்பின் தெரியாமல் இவரிடம் வந்து அகப்பட்டுக் கொண்டோமே. நம்முடைய வறுமைக்குப் பயந்து இவரிடம் வந்தது தேளுக்குப் பயந்து பாம்பின் வளையிற் கையிட்டதுபோலாயிற்றே. நமக்கு ஏதாவது ஆபத்து நேர்ந்தால் நம் தாய்தந்தையர் முதலியவர்கள் என்ன செய்வார்களோ தெரியவில்லை. கடவுளுடைய சித்தம் எப்படியோ?" என்று நினைந்து நினைந்து ஏங்கினர்.

அவரை அழைத்துச் சென்றவர் அவரைத் தனியாக ஓரிடத்தில் இருக்கச்செய்து சரியான வேளைகளில் உணவு அளித்துவந்தார். ஒருவரும் அவரோடு பேசவில்லை. அவர் தூக்குத்தண்டனையை எதிர்பார்த்து நிற்கும் குற்றவாளியைப்போல் உயிர் உடம்பு உள்ளம் எல்லாம் நடுங்கிக்கொண்டிருந்தார்.

ஜமீன்தார் தம் அரண்மனை வந்து சேர்ந்தார். கவனிக்க வேண்டிய காரியங்களைக் கவனித்துவிட்டு ஆஸ்தானமண்டபத்தில் வந்து அமர்ந்தார். பின்பு புலவரை அழைத்துவரும்படி உத்தரவிட்டார். சிறிது நேரத்தில் வாடிய முகமும் நடுங்கிய உடம்பும் கந்தைத்துணியும் கொண்ட வறுமைத்திருக்கோலத்தோடு புலவர் ஜமீன்தார் முன்னே நிறுத்தப்பட்டார். அவர் தம் கண்களால் ஒருமுறை அந்த ஆஸ்தான மண்டபத்தினைப் பார்த்தார். ஜமீன்தாரின் இருபக்கத்திலும் கத்தி, தடி, துப்பாக்கி முதலிய ஆயுதங்களையுடைய சேவகர்கள் வரிசையாகநின்றுகொண்டிருந்தனர். யாவரும் கைகளைக் கட்டிக்கொண்டு நின்றனர். ஜமீன்தாரோ மீசையை முறுக்கிக்கொண்டிருந்தார். அவருடைய முகத்தில் கோபக்குறிப்புத் தாண்டவமாடியது. இவற்றை யெல்லாம் பார்த்த புலவருக்குச் சிறிதளவு இருந்த தைரியமும் போய்விட்டது. உடம்பெல்லாம் அச்சத்தால் வேர்த்துவிட்டது.

ஜமீன்தார் ஒரு கனைப்புக் கனைத்தார். அருகிலிருந்த உத்தியோகஸ்தரைப் பார்த்து, "நாம் பழனிக்குப் போய்விட்டு வருகையில் நமக்கும் பிறருக்கும் பயமுண்டாகும்படி வழிமறித்துக் கூ கூ வென்று சத்தம்போட்ட மனுஷ்யர் இவரல்லவா?" என்றார். அவர்,

"ஆம்" என்றார். "ஓய்! நீர் அப்படிச் செய்யலாமா?" என்று புலவரை நோக்கி ஜமீன்தார் கேட்கவே புலவருக்கு நா எழவில்லை. தம்முடைய கருத்தைச் சொல்ல ஆரம்பிக்கையில் வார்த்தைகள் குழறி வந்தன. ஒரு புலியைக் குறித்துச் சொல்லுதற்குமுன் 'கிலி' அவரைப் பிடித்துக்கொண்டது. கடைசியில் ஒருவாறு துணிந்து குழறிக்கொண்டே, "நீங்கள் வேட்டையாடித் துஷ்ட மிருகங்களைக் கொன்று ஜனங்களைக் காப்பாற்றும் மகாவீரராதலினால் இந்தப் புலியையும் கொல்லவேண்டுமென்று விண்ணப்பித்துக் கொண்டேன். வறுமையைப் புலியாக உருவகப்படுத்தித் தமிழருமை யறிந்த துரையவர்கள் சந்தோஷிக்கச் சமற்காரமாகச் சொன்னேனே யொழிய யாவருக்கும் அச்சமுண்டாக வேண்டுமென்பது என் கருத்தன்று. இவ்வாறு உருவகம் செய்து கூறுதல் முன்னோருடைய வழக்கம். அப்படி ஏதாவது நான் செய்தது பிழையாகத் தோற்றினால் அதனைப் பொறுத்தருள வேண்டும்" என்றார்.

ஜமீன்தார், "செய்ததைச் செய்துவிட்டுப் பொறுத்தருள வேண்டுமென்றால் முடியுமா? திடீரென்று புலி துரத்துகின்றதென்றால் எல்லாரும் என்ன நினைப்பார்கள்? உமக்குச் சிறிதேனும் சமய சந்தர்ப்பம் தெரியவில்லையே. நமது சமுகத்தில் இன்னபடி பேச வேண்டுமென்பது தெரியாதா?" என்று கடுமையான குரலில் கூறிவிட்டு அருகில் நின்ற ஒருவரிடம், "இந்த மனுஷருடைய மேல் துணியைப்பிடுங்கி என் எதிரே வை" என்றார். அவர், பல தையல்களோடும் முடிப்புக்களோடும் அழுக்கோடும் புலவரது வறுமை நிலையை புலப்படுத்திக்கொண்டிருந்த அந்தத் துணியை வாங்கிச் சுருட்டி எதிரே இருந்த ஒரு மேஜையின்மேல் வைத்தார். ஜமீன்தார் மருந்திட்டுவைத்திருந்த துப்பாக்கி யொன்றைக் கையிலெடுத்துக்கொண்டார். "அந்த மனுஷரை இப்படி நேரே கொண்டு வந்து நிறுத்துங்கள்" என்றார். புலவர் தமக்கு இனி ஆயுள் முடிந்துவிட்டதென்றே நிச்சயித்துக்கொண்டார். இந்த வறுமையினால் துன்புறுவதைக் காட்டிலும் இறந்து போதல் ஒரு வகையில் நல்லதென்றெண்ணினர். தமது முதிய தாய் தந்தையர்களையும் இளைய மனைவி மக்களையும் பிற உறவினர்களையும் நினைந்து கண்ணீர் வடித்தார்.

துப்பாக்கியுடன் இருந்த ஜமீன்தார், "ஓய்! உம்மைப் புலியா துரத்துகிறது? அந்தப் புலியை இதோ சுட்டுக் கொன்றுவிடுகிறேன் பாரும்" என்று சொல்லிக்கொண்டே, தம் எதிரில் இருந்த கந்தைத் துணியை நோக்கிச் சுட்டார். படீரென்ற சத்தம் கேட்டது; அந்தக் கந்தைத் துணியில் குண்டு பாய்ந்து அதனை எரித்துவிட்டது;

உடனே புலவர் ஒன்றும் தோற்றமல் சிறிது நேரம் மயக்கத்தில் ஆழ்ந்தார்.

ஜமீன்தார் புலவர் அருகிற் சென்று அவர் முதுகைத் தட்டிக் கொடுத்து, "இதோ உம்மைத் துரத்திய புலி இறந்துவிட்டது. இனி அந்தப் புலி உம்மைத் துன்புறுத்தாது" என்று சொல்லி ஓர் ஆசனத்தில் இருக்கச் செய்து நல்ல ஆடைகளை வருவித்து அணிந்துகொள்ளச் செய்தார். பின்பு அவருடைய உள்ளம் பூரிக்கும்படி உயர்ந்த உபசாரங்களையெல்லாம் செய்தார்.

வறுமைப்புலியின் அச்சம் நீங்கிய புலவர் சிலகாலம் அங்கேயிருந்து புதியபுதிய செய்யுட்களைப் பாடி ஜமீன்தாரை உவப்பித்தும் பலவகை உபசாரங்களைப் பெற்று உவந்தும் வந்தார். பின்னர்த் தம் ஊரிலுள்ள உறவினர்கள் தம் நிலையையறியாமல் வருந்துவார்களென்பதைக் கூறி ஜமீன்தாரிடம் விடைபெற்றுப் பல மாதங்களுக்கு வேண்டிய உணவுப்பொருள்களும் தக்க ஸம்மானங்களும் வழங்கப்பெற்றுத் தம்மூர் வந்து சேர்ந்து கவலையின்றி வாழ்ந்து வருவாராயினர். அக்காலத்துக்குப் பின்பும் அடிக்கடி ஜமீன்தாரிடம் சென்று அளவளாவி இருந்து விட்டு வருதல் அவரது வழக்கமாக இருந்தது.

இந்த நிகழ்ச்சியை யறிந்தவர்கள் அந்தப் பிரபுவினது பெருந்தன்மையை மிகப் பாராட்டினார்கள்.

இந்தச் சரிதத்தையும் பாடலையும் சொன்னவர் ஏறக்குறைய நாற்பது வருடங்களுக்குமுன் ஊற்றுமலை ஜமீன்தாராக விளங்கிய ஹிருதயாலய மருதப்பதேவருடைய ஆஸ்தான வித்வான் நால்வருள் ஒருவராகிய புளியங்குடி முத்துப் புலவர் என்பவர்.

# மஹாகவி தூர்ஜடி

எஸ். அனவரதவிநாயகம் பிள்ளை

கண்ணப்பர் வரலாறு எழுதும்பொழுது ஸ்ரீ காளஹஸ்தி மாஹாத்ம்யமு என்னும் ஆந்திரகிரந்தத்தை யெழுதியவர் தூர்ஜடி என்னும் ஆந்திரகவி யென்றும், இக்கவி யியற்றிய நூலே தமிழ்ச் சீகாளத்திப் புராணத்திற்கு முதனூலாகு மென்றும் குறிக்க நேர்ந்தது. அந்தத் தூர்ஜடி கவியின் சரித்திரம் தமிழ் நாட்டில் வழங்குவ தன்று. அவர் இயற்றிய நூலின் விவரணமும் தமிழ் மக்களுக்குத் தெரிந்ததன்று. இவ்விரண்டையும் சுருக்கியுரைப்பது இக்கட்டுரை யின் நோக்கம்.

ஸ்ரீமங் மஹாகவி தூர்ஜடியாற் செய்யப்பட்ட ஸ்ரீ காள ஹஸ்தி மாஹாத்ம்யமு என்னும் ஆந்திரகிரந்தம் க்ரொத்தபல்லி அந்நபூர்ணம்மையால் கி. பி. 1914-ல் பிரகடனஞ் செய்யப்பட்டது. மீண்டும் அக்கிரந்தம் 1930-ல் அச்சிடப்பட்டது.

இப்பதிப்புக்களிற் காணும் பீடிகை க்ரொ. பத்மநாப சாஸ்திரி, ர. வேங்கடஸுப்பய்ய என்னும் இருவராலும் 1895-ல் எழுதப் பட்டது. அப்பீடிகையில் தூர்ஜடி கவியின் வரலாறு சிறிது உரைக்கப்பட்டுளது. அதன் சுருக்க மொழிபெயர்ப்பு இங்கு எழுதப்படுகின்றது:

'இந்த ஸ்ரீ காளஹஸ்தி மாஹாத்ம்யமு என்னும் கிரந்தத்தை எழுதிய கவி தூர்ஜடி. இவருடைய பௌத்திரர் குமார தூர்ஜடி யெனப் புகழ்பெற்ற வேங்கடாரிய கவி கிருஷ்ணராஜ விஜயம் என்னும் கிரந்தம் எழுதினர். அந்நூலில் அதன் ஆசிரியர் தம்மைப் பாரத்வாஜகோத்திரம் ஆபஸ்தம்பஸூத்ரம் பாகநாடு ஆறுவேல வம்சம் என்றிவற்றிற் குரியரென்று சொல்லிக் கொள்ளுதலால் அவர்க்குப் பிதாமகராகிய தூர்ஜடி கவியும் அவற்றிற்குரியரென் றாகிக்க வேண்டியிருக்கின்றது. இன்னும் அந்நூலால் தூர்ஜடி கவி கிருஷ்ணதேவராயர் காலத்தவரென்று தெரிகிறது. ஆதலால் கிறிஸ்தவ சகம் 16-வது சதாப்தம் அஃதாவது ஏறக்குறைய 370 ஆண்டுகளுக்கு முன் இக்கவி வாழ்ந்தனரெனச் சொல்லலாம். கிருஷ்ண தேவராயர் சபையில் அஷ்ட திக்கஜங்களெனப் பிரக்கியாதி பெற்ற கவிகளுள் இவர் ஒருவர்.

'குமார தூர்ஜடி புத்திரராகிய லிங்கராஜ கவியென்பவர் ஸ்ரீ காளஹஸ்தி மாஹாத்யமு என்னும் பெயரால் ஒரு கிரந்தம் எழுதினர். அஃது இதனினும் நாலு பங்கு பெரிதாய்ப் பன்னிரண்டு ஆசுவாசங்களுடையதா யிருக்கிறது. லிங்கராஜ கவியின் மாஹாத்ம்யத்தில் பீடிகைச் செய்யுளில், "காளஹஸ்தி மாஹாத்ம்யம் ஆறு அத்தியாயத்திலடங்கிய கதையைத் தெலுங்கில் காவியமாகப் பெரிய தூர்ஜடி கவி செய்தார். சிவதத்துவசார மனைத்தும் கொண்டு சிவரஹஸ்யமென்று பெயர் பொருந்தியதாய ஓர் இதிகாசம் உளது. அதன் உத்தரபாகத்தில் காளஹஸ்தி மாஹாத்ம்யம் 120 அத்தியாயங்களில் அழகாக அமைந்திருக்கிறது. அதனைத் திராக்ஷாரஸம் பொருந்தப் பண்டிதர்கள் மெச்சத் தெலுங்கில் தமக்கு அங்கிதமாக ஒரு கிரந்தத்தைச் செய்ய வேண்டுமென்று காளஹஸ்தி ராஜா அக்கராஜு வேங்கடபதி ஆஞ்ஞாபித்தார்" என்று சொல்லப்பட்டிருக்கிறது.

'இரண்டு கிரந்தங்களுக்கும் ஆதிகிரந்தங்கள் இவை யென்பது காட்டப்பட்டது. நக்கீரர் சரித்திரம் லிங்கராஜ கவி செய்த கிரந்தத்தில் காணப்படவில்லை. மற்ற வசிஷ்டாதியர் சரிதங்கள் பேதமாகக் காணப்படுகின்றன.

'ஸம்ஸ்கிருதத்தில் ஒரு காளஹஸ்தி மாஹாத்ம்யம் உளது. அது வேங்கடகிரியில் அச்சிடப்பட்டிருக்கிறது. அதிலுள்ள கதைகளும் இந்த லிங்கராஜகவி செய்த காளஹஸ்தி மாஹாத்ம்யத்திலுள்ள கதைகளும் ஒத்திருக்கின்றன.

'தூர்ஜடி கவி சிவபக்தருள் முதன்மைபெற்றவர். காளஹஸ்தி புரவாசியாயினும் கிருஷ்ணதேவராயர் ஆஸ்தானத்தில் கௌரவம் வகித்திருந்தார். இவருடைய சந்ததியார்க்குக் காளஹஸ்தியில் கௌரவம் உண்டாயிற்று. இப்பொழுதும் காளஹஸ்தி யரசர் தர்பாரில் தூர்ஜடியாரதென்று ஓர் ஆசனம் கவிஸ்தானங்களுள் ஏற்பட்டிருக்கிறது.

'கிருஷ்ணராயர் போன்ற அரசர் காலத்தும் தம் கிரந்தத்தை நராங்கிதஞ் செய்ய மனமொவ்வாத இம்மஹாத்மாவின் பக்தி எத்தகையது!

'இப்படியிருக்கச் சிலர், "எல்லாராலும் புகழப்பட்ட ஆந்திர கவியாகிய தூர்ஜடியின் வார்த்தைகளுக்கு நிகாற்ற இப்பெருஞ் சாதுரியம் எப்படி உண்டாயிற்றோ" என்று கிருஷ்ணராயர் கேட்க, அவர் சபையாளரில் ஒருவர், "ஆ! தெரிந்தது. உலகத்தை யெல்லாம் மோகிக்கச் செய்யுந் தன்மையும் கர்வமும் சுகுமாரமு முடைய

வாரவனிதையர் சமூகத்தின் அதிக தாபத்தைப் போக்கடிப்பனவும் எப்பொழுதும் இனிப்பா யிருப்பனவுமான அதரத்தில் உண்டான அமிர்ததாரைகளைப் பானம் பண்ணுதலாலன்றோ" என்று அதனைப் பூர்த்தி செய்தாரென்று சொல்லி, அதனால் இவர் வேசியாலோலரா யிருந்தாரென்று ஊகிக்கின்றனர்.

'தூர்ஜடிக்குப் பொய்யாகவே இந்தக் கெட்ட பெயர் வந்திருக்க வேண்டுமேயன்றி, இக்காவியத்தைப் படித்தவர்க்கு இவருடைய பக்தி வைசித்ரியம் விளங்காமற் போகாது. அந்தச் செய்யுளில் பிரதிபதமும் பிரமாணமாகக் கிரகிப்போமானால் அஸமான கவிதா தோரணி உண்டாவதற்கு வாரவனிதையர் உச்சிஷ்டமா சாதனம்! அஃதல்லாமலும், இப்படிப்பட்ட சமஸ்யையைப் பூர்த்திசெய்த கவி அக்காலத்துத் திகழ்ந்த கவீசுவரனிடத்து ஏதோ தோஷத்தை ஆரோபித்து நகையுண்டாகச் செய்யும் ஹாஸ்யக்காரனென்று கேள்விப்படுகிறோமாகையினாலே தூர்ஜடி உண்மைப்பக்த ரல்ல ரென்றும் புறச்சின்னங்களால் பக்தர் தலைவரென்று புகழ்படைத்த வேஷதாரியென்றும் எண்ணமுடியாது. சமஸ்யையை மாத்திரம் குமார தூர்ஜடி கிருஷ்ணராஜ விஜயத்தில் குறிப்பிடுகிறதனால் அஃது அபத்தமென்று சொல்லமுடியாது. உத்தரபாகத்தை அவர் சொல்லாததனால் அது சந்தேகப்படத்தக்கது. வித்வஜ்ஜன சேகர ராகிய கிருஷ்ணதேவராயர் தாம் மிகவும் கொண்டாடிய கவியினிடத்தில் இப்படிப்பட்ட அஸம்பந்தமான பேச்சுக்கு இடங்கொடுத்திருப்பாரா? தூர்ஜடி கவி கிருஷ்ணதேவராயர் சபையில் மிக்க கவுரவத்தை யடைந்திருந்ததாக லிங்கராஜகவியும் குமார தூர்ஜடியும் கூறியிருக்கின்றனர். இப்படிப்பட்ட கதை நடந்திருந்தால் அஃது அவர் கவுரவத்தைக் கெடுத்துவிடுமன்றோ? வித்தையின் மிக்கவராய்த் தம் கிரந்தத்தை நரனுக்கு அர்ப்பணம் பண்ணாத பெருமைபெற்ற இக்கவி அந்த அவமானத்தைப் பொறுத்து ஒரு நிமிஷமாவது அந்தச் சபையி லிருக்கமுடியுமா?

'வேங்கடகிரி ஸம்ஸ்தானத்தில் காளூர், தூர்ஜடி அம்ம பாளையம் என்னும் கிராமங்கள் உள்ளன. காளூரில் தூர்ஜடியார் என்னும் இற்பெயர் உடையார் இன்றும் உளர். அவர்களிடத்தில் சில சாசனங்கள் உள்ளனவாம். அவற்றை யெல்லாம் பரிசீலித்துச் சாத்தியமானவரை இந்தக் கவியின் சரித்திரத்தைச் சம்பாதித்துக் கிரமமாகப் பிரகடிப்போம். துரைத்தனத்தார் புஸ்தக பாண்டாரத்திலே காளஹஸ்தி சதகமென்ற ஒரு நூல் தூர்ஜடி செய்ததென்று குறித்துவைக்கப்பட்டிருக்கிறது. அஃது இந்தத் தூர்ஜடியால்

எழுதப்பட்டிருக்குமென்று ஊகித்தற்குத் தக்க அம்சமெதுவும் அதிற் காணப்படவில்லை.'

இனி, தூர்ஜடிகவியாற் செய்யப்பட்ட ஸ்ரீகாளஹஸ்தி மாஹாத்ம்யமு என்னும் ஆந்திரகாவியத்தின் விஷய சூசிகை வருமாறு:

முதலாவது ஆசுவாசம்:—

1. இஷ்ட தேவதா ஸ்துதி.

2. ஷஷ்ட்யந்தங்கள் (கிரந்தத்தை அர்ப்பணமாகப் பெறும் கிருதிபதிக்கு ஆறன் முடிவோடு கூறும் செய்யுள்கள்.)

3. ஸ்ரீ காளஹஸ்திபுர வர்ணனம்.

4. மாயா ஜங்கம ஸ்வரூபம்.

5. கபட ஜங்கம ரூபியாகிய சிவன் ஒரு தாசி வீட்டில் தங்குதல்.

6. தாசியை அரசன் சிட்சித்தல்.

7. சிட்சையடைந்த தாசிக்குச் சிவன் அனுக்கிரகித்தல்.

8. மாயா ஜங்கமனை யாதவராஜன் தரிசித்தல்.

9. சிவன் யாதவராஜனுக்குக் காளஹஸ்தி மாஹாத்ம்யம் சொல்லல்.

10. வசிஷ்டனுக்குப் பரமேசுவரன் பிரத்தியட்சமாதல்.

11. ஸ்வர்ணமுகரியின் பிறப்பு விதம்.

இரண்டாவது ஆசுவாசம் :—

12. பிரமனுக்கு ஸரஸ்வதியால் குமாரர் தோன்றுதல்.

13. பிரமன் பிள்ளைகளின் துஷ்டச் செயல்கள்.

14. பிரமனுக்கு உக்கிரனென்னும் பிள்ளை உண்டாதல்.

15. பிரமன் ஆஞ்ஞையால் உக்கிரன் தன் அண்ணன்மாராகிய அரக்கரைக் கொல்லுதல்.

16. பிரமன் புத்திரஹத்தியாதி தோஷபரிகாரத்தின் பொருட்டுத் தவஞ்செய்தல்.

17. ஈசுவரன் பிரத்தியட்சமாய்ப் பிரமனுக்கு வரங்கொடுத்தல்.

18. ரிபுவின் பிறப்பு.

19. சிலந்திப்பூச்சி சிவைக்கிய மடைதல்.

20. கால சர்ப்பமும் யானையும் சிவ சாயுஜ்ய மடைதல்.

மூன்றாவது ஆசுவாசம் :—

21. கண்ணப்பனென்னும் திண்ணனுடைய ஜன்ம பூமி வர்ணனம்.

22. திண்ணன் ஜனனம்.

23. திண்ணன் வில்வித்தை பயிலல்.

24. திண்ணன் பரிஜனங்களோடு கூடி வேட்டைக்குப்போதல்.

25. ஸ்வப்நத்தாலும் வேட்டைவியாஜத்தாலும் ஈசுவரன் திண்ணனை வசஞ்செய்து கொள்ளல்.

26. திண்ணன் சிவலிங்கத்துக்குச் சேவை செய்தல்.

27. திண்ணனைப் பார்த்து வேடர்கள் துக்கித்தல்.

28. திண்ணன் சிவனுக்கு அநுதினமும் ஆகாரம் கொடுத்தல்.

29. சிவப்பிராமணன் ஆலயத்திலுள்ள ஆபாசத்தைப் பார்த்துச் சிந்தித்தல்.

30. சிவன் திண்ணன் பக்தியைச் சிவப்பிராமணனுக்குக் காட்டல்.

31. திண்ணன் பரமேசுவரனுடைய நேத்திர ரோகத்திற்குச் சிகிற்சை செய்தல்.

32. சிவன் திண்ணனுக்குப் பிரத்தியட்சமாதல்.

33. நற்கிரன் கதை, மதுராபுர வர்ணனம்.

34. சங்கப்பலகை பிறந்த முறை.

35. பஞ்சத்தின் வர்ணனம்.

36. ஈசுவரனுடைய செய்யுள் கொண்டுபோன சிவத்விஜனை நற்கிரன் திரஸ்கரித்தல்.

37. வருத்தமடைந்த பிராமணனைச் சிவன் சமாதானப்படுத்தி நற்கிரனேடு வாதுக்கு ஆரம்பித்தல்.

38. சிவன் நற்கிரனைச் சபித்தல்.

39. சிவன் கொடுத்த சாபத்துக்கு நற்கிரன் துக்கித்தல்.

40. நற்கிரனுடைய தீர்த்தயாத்திரை.

41. நற்கிரன் ஒரு பூதத்தினிடம் சிக்குதல்.

42. நற்கிரனைச் சுப்பிரமணிய சுவாமி ரக்ஷித்தல்.

43. நற்கிரன் சாயுஜ்ய மடைதல்.

நான்காவது ஆசுவாசம் :—

44. மதுராபுர வர்ணனம்.

45. மாணிக்கவல்லியென்னும் வாரவனிதை சிவபக்திபரவசைகளாகிய பெண்களிருவரைப் பெற்று வளர்த்தல்.

46. தாசிப்பெண்களின் செய்கைகள்.

47. தாய்வேசை பெண்களுக்குக் குலதர்மம் உபதேசிக்கை.

48. வேசைகளிருவரும் குல தர்மத்தை வெறுக்கை.
49. பெண்களின் விரக்திகண்டு தாய்வேசை சிந்தித்தல்.
50. ஈசுவரன் வழியில் வேசியரைக் காப்பாற்றுதல்.
51. வேசியரிருவரும் காளஹஸ்திக்குப் பயணமாகுகை.
52. திருடர் யத்தனங்களை யெல்லாம் பரமசிவன் தடுத்தல்.
53. வாலி பூசித்த சிவலிங்கக் கதை.
54. சூரியாஸ்தமயாதி வர்ணனம்.
55. திருடர் எண்ணம் பலிக்காமல் ஓடிப்போதல்.
56. இருவர் ஸ்திரீகளும் சாயுஜ்ய மடைதல்.

57. வாரகன்னியர் முத்தியடைந்த சமாசாரத்தை அசரீரி விளம்பரப்படுத்தல்.

58. சிலந்தியின் பூர்வஜன்ம விருத்தாந்தம்.
59. காளத்தின் பூர்வஜன்ம கதை.
60. யானையின் பூர்வஜன்ம கதை.
61. திண்ணனின் பூர்வஜன்ம கதை.

இனி, கருணைப்பிரகாச சுவாமிகள் சிவப்பிரகாச சுவாமிகள் வேலையசுவாமிகள் ஆகிய மூவரும் செய்த சீகாளத்திப் புராணம் தூர் ஜடிகவியின் ஸ்ரீகாளஹஸ்தி மாஹாத்ம்யத்தை முதனூலாக வுடையது. முதலாவது விடசங்கமச் சருக்கம் 3-9 பிரிவுகளையும், இரண்டாவது தென்கைலாயச் சருக்கம் 10-வது பிரிவையும், மூன்றுவது பொன்முகரிச்சருக்கம் 11-வது பிரிவையும், நான்காவது நான்முகச் சருக்கம் 12-18 பிரிவுகளையும், ஐந்தாவது சீகாளத்திச் சருக்கம் 19-20 பிரிவுகளையும், ஆறுவது கண்ணப்பச் சருக்கம் 21-32 பிரிவுகளையும், ஏழாவது நக்கீரச் சருக்கம் 33-43 பிரிவுகளையும், எட்டாவது கன்னியர்ச் சருக்கம் 44-57 பிரிவுகளையும், ஒன்பதாவது சிலந்தி முதல முற்கதைச் சருக்கம் 58-61 பிரிவுகளையும் ஆதாரமாக வுடையன.

ஆந்திர கிரந்தத்திற் காணும் செய்யுள்கள் முதலாவது ஆசுவாசத்தில் 164, இரண்டாவதில் 160, மூன்றுவதில் 226, நான்காவதில் 206, ஆக 756. இவற்றில் சில மிக நீண்டன. தமிழ்ப்புராணத்தில் ஒன்பது சருக்கத்திலும் உள்ள செய்யுள்கள் 1010. தமிழ்ப் புராணத்தைச் செய்தோர் தூர்ஜடி கவியின் கிரந்தத்தைச் செய்யுள் செய்யுளாக மொழி பெயர்த்தனரென்று சொல்லவியலாதாயினும் அதன் முறையையும் கதைகளையும் விடாது தம் நூலில் அமைத்தன ரென் றுறுதியாகச் சொல்லலாம். தூர்ஜடிகவி கிருஷ்ண தேவராயர்

காலமாகிய கி. பி. பதினாறும் நூற்றாண்டின் தொடக்கமாகவே கி. பி. பதினேழாம் நூற்றாண்டி னிடைக்காலத்தவர்களாகிய சீகாளத்திப்புராண ஆசிரியர்கள்* ஆந்திர கிரந்தத்தை யறிதற்கு ஏது இருந்ததென்பது நிச்சயம். அன்றியும் தூர்ஜடிகவியின் கிரந்தம் இமயமுதற் சேதுவரை பரவியிருந்ததென்று புகழப்பட்டிருத்தலால் தொண்டநாட்டிலேயே வசித்த தமிழ்ப்புராண ஆசிரியர்கள் அதனைப் பற்றிக் கேள்வியுறுதற்கு அவகாசம் நேர்ந்திருத்தல் இயல்பே.

* சிவப்பிரகாச சுவாமிகள் முதலியோர் பதினேழாம் நூற்றாண்டி னிடைக்காலத்தினர் என்பதற்கு, பிரபுலிங்கலீலை மான்மியகதியிற் காணப்படும்,

பார்கெழு சகாத்த மூவைஞ் ஞூற்றெழு பானுன் காவ
தாகிய கரநா மங்கோ ளாண்டுறு விடைஞா யிற்றிற்
சீர்கெழு மல்ல மன்றன் திருவிளை யாடற் காதை
கார்கெழு மிடற்றெங் கோமான் கருணைகொண் டியம்பி னூனே

என்னும் 23-வது செய்யுள் ஆதாரம். இவ்வாண்டு கி. பி. 1652.

# தாயுமானவர்

## குரு துதி

## சிறப்புப் பாயிரம்

### ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளை

இந்தக் குருஸ்துதி சிறப்புப்பாயிரச் செய்யுள் 80-ம் தாயுமானசுவாமிகள் திருவடியடியார் மரபில் அரக்கொந்தைச் சுப்ப நாயனரவர்கள் அருளிச் செய்ததென்றறிக.

வெள்ள மருவும் விரிசடையான் வேத வனத்தான் விமலேசன்
உள்ள மருவத் திருமூல ருறவின் மருவு மொருமௌன
வள்ள லருளுங் கருணைவெள்ள வாரி மடுத்தே மறைசைநகர்ப்
பிள்ளை யவர்க ளருண்முகிலாய்ப் பெய்த கருணைத் தமிழ்மழையே. 1

பெத்த மதிலு முத்தியினும் பிரியாப் பெருமான் பேருளே
சுத்த மவுனர் மூவர்களாய்த் தோன்று மவுனி துணைக்கரத்தால்
குற்ற மகலக் கருணையினுல் கொடுக்க வாங்கிக் கொண்டெழுந்த
அத்தன் ருயு மானவனு மறைந்த கவிதைக் கடிவரவே. 2

வேறு

ஆயுமா கமுமளக்க வருட்கடலைச் சுருக்கியே யனந்த மெய்ம்மைக்
கேயுமா னந்தமழை பொழியுமறை சைக்கேடி லிக்கு வாய்த்த
சேயுமா னவனுலகச் செய்கைபோன் றதிவர்ணுச் சிரமி யான
தாயுமா னவனுரைத்தா னருந்தமிழா லானந்த சதக மாமே. 3

வேறு

வேதவனத் திறையவனை யாழினையே பழித்த மென்மொழியாளுடன்வீர கத்திவிநா யகனைச், சாதகரைச் சந்தான சமயகுரு மரபைச் சரிதைமுத னெறிநான்குந் தாங்குதபோ தனரைத், தீதறவே திருமூலர் சுகர்வாமதேவர் திருமௌனி யவர்மரபிற் சித்தர்கணத் தோரை, நாதனருட் டாய்தாயு மானவனே டிவர்க ளுமனிலை நவிற்றிநறை யூர்தொழுவோ நாமே. 4

வேறு

வன்னிவனத் துறைவோனை வாழைவனத் திருப்போனை மலர்மா தென்னும், கன்னிகைபூ சித்தோனைக் கடலரசன் முதலரசர் காண்கின் ருேனைப், பன்னுமெழு முனிவருக் கருள்வோனை

வணிகன்விடம் பறிக்கின் றானைச், சென்னியைந்து முடையோனைத் திருமருகல் வாழ்வோனைச் சிந்தை செய்வாம். 5

விடந்தீர்த்த விநாயகனைச் சிங்கார வேலவனை விமல ஞானம், தொடர்ந்தேத்தென் றருள்கொடுத்த வண்டுவார் குழலுமையைச் சுருதி ஞானம், படர்ந்தேத்துஞ் சுயஞ்சோதி மாணிக்க வண்ணமயப் படிவந் தன்னை, அடைந்தேத்தும் படிக்கிரங்கித் தடுத்தாண்ட மருக லாற் கன்பு வைப்பாம். 6

பஞ்சசா தாக்கியமா யருவுருவா யெங்குநிறை பரமாய் ஞான, விஞ்சைகளா லைந்தொழிலும் விகாரமின்றிச் செய்யுநவ வித மாய் வேறற், றஞ்செழுத்துக் காருயிரா யானைமுத லெறும்பீறு மாவிக் குள்ள, வஞ்சமறுத் தொளிர்மருகன் மாணிக்க மலையினையாம் வணக்கஞ் செய்வாம். 7

வேறு

ஒருமுகமாய்ப் பலகோடி யனந்த சத்தி யுருவாகி யைந் தொழிற்கு முரித்தாய் ஞானத், திருவருளாய் மூவிதமா யொன்று யைந்தாய்ச் செடசித்தா யெவ்வுயிர்க்குஞ் சிறந்த தாயாய்த், தரும் விஞ்சை யொருநான்காய் விட்டு நீங்காத் தற்பரம நிலையெல்லாந் தானே தானாய், வருமருளா ரமிர்தாய்மா மருகல் வாழும் வண்டுவார் குழலுமையை வணக்கஞ் செய்வாம். 8

வேறு

பணிவிடைகள் பலகோடி செய்தானை மகிழ்வித்தே பத்த ரானோர், துணிவினொடுஞ் சுவர்க்காதி பதமடைந்தா ரெழுபிறவி தோயா நாயேன், திணியமநக் கற்கரைந்தே சிவபணிக ளநுதினமுஞ் செய்து வாழ, வணிகன்விடந் தீர்த்துய்த்த வாரணமா முகத்தானை வணக்கஞ் செய்வாம். 9

வெங்காம வேட்கைமுத லாசைபல கோடியினும் வீழ்ந்தே மாறித், தங்காவன் சுழல்கறங்காய்த் தரணியெலாந் திரிந்துழலுந் தவிப்புத் தீர்த்து, மங்காத பேரின்ப வாழ்வளிக்குஞ் சன்மார்க்க மருவி வாழச், சிங்கார வேலவனைச் சேவித்தே யவனருளைச் சிந்திப் போமே. 10

வேறு

இடைமருதா ரிறைவனை மாகாளத் தானை யிலந்துறைமா நகரானை யிருமருக லானை, விடைமருவுங் கொடியாடுந் திருமறைக் காட் டானை விளங்குநறை யூரானை வியனைக யானைப், புடையமருந் திருவம்பர் திருப்பனந்தா ளானைப் புறம்பயமா நகரானைப், பூசுரன் சோ மாசி, கடையறவே தொழவச்சந் தவிர்த்தவிநா யகனைச் சந்தத மும் புந்தியினல் சிந்தனைசெய் வோமே. 11

வேறு

இறையவனைத் திருவருளை யைங்கரனை யறுமுகனை யிமை யோர் தம்மை, மறையவரை மாதவரை முனிவர்சித்தர் கணத் தோரை மார்க்கமெல்லாம், அறையுமறை யாகமத்தை யஞ்செழுத் தை யாலயத்தை யறத்தை ஞானத், துறைநிறைவை மெய்ஞ்ஞானத் தொன்மையரை யருளோடுந் தொழுது வாழ்வாம். 12

வேறு

வகுத்திடுந் தெய்வ வணக்கமுங் குருவின் வணக்கமும் வாழிபா யிரமாய்த், தொகுத்திடுந் தமிழும் பரசிவ வணக்கத் தொகுதியு முன்னதாய்த் துதித்தே, பகுத்தறி வதனு லைஞ்னூற்றெண் பத்தேழ் பாடலுங் கண்ணியின் பகுதி, மிகுத்திடு. மெண்ணூற் றறுபத் தைந் துடனே விளம்புவோ மகவல்வண் ணமுமே. 13

வேறு

விண்ணுறுந்தே வர்கண்முனிவர் கணங்கள்சித்தர் புகழ்மௌனி வியப்பால் ஞானத், தண்ணுறுந்தண் டமிழ்மாலை யைஞ்னூற்றெண் பத்தேழுந் தாயு மானேன், எண்ணுறுங்கண் ணிகளெண்ணூற் றறுபத்தைந் தகவல்வண்ண மிரண்டும் பாடி, மண்ணுறுநால் வகை மாந்தர் தமக்காகப் பக்குவர்பால் வைத்தா னன்றே. 14

வேறு

சாந்தமுறுந் தவகுணமே வடிவாய் நின்ற தாயுமா னவன் ஞானத் தலைமை பூண்ட, வேந்தர்முதன் மேதினியோ ரெல்லாம் வாழ்த்த விரிதமிழா லநுபோக விளைவை யெல்லாம், பாந்தமுறப் பல பாவி னடக்கி வீசும் பைந்தமிழி னடிவரவே பதிக மாகச், சேர்ந்த தொகை யட்டவணை யதிகார மளவாய்ச் சேகரித்த திருவிருத்தத் திருநாமத் திரளே. 15

வேறு

பரசிவ வணக்க மெனுந்திருப் பாட்டும் பாயிரப் பனுவலும் பாங்காய், உரைசெய்த பெரிய கவிதையா தியதா யுள்ளசெங் தமி ழெலா மொருங்கே, திருமுறை யொன்றிற் றிகழ்ந்திடுங் கண்ணி சேருமீ ரடிவண்ண மகவல், ஒருமுறை யொளிருந் தாயுமா னவனு முத்தம னுரைத்தவுண் மைகளே. 16

வேறு

பொங்குதிரைக் கடலுடுத்த புவிகள்பதி னுலும் புகழ்மௌனி திருவருளாம் புணரியினின் மூழ்கிக், கங்குல்பக லற்றதிருக் காட்சி

யினிற் கலந்தே காசினியி லஞ்ஞானக் கங்குலிரிந் தோடச், செங்க மலக் கரமதனு லருட்படையை யேவிச் சிவஞானக் களிறேறித் தேச மெலாந் திகழத், தங்குசிவா னந்தமெனு மருண்மழையை வாயாற் ருயுமா னவன்பொழிந்த தமிழ்த்தொகையி தாமே. 17

வேறு

மருவுபர சிவவணக்க மாதி யாக மலைவளர்கா தலிமேற்பா வளரு மீருய்த், திருநடுவிற் பெரியதமிழ்க் கவிதை வாழச் செந்தமிழ்மூ விருநூறுஞ் செறிய வெங்கும், அருவுருவ முருவருவ மாயல் லாம லருமறையா கமநெறியி னநுபோ கத்தைக், குருவருளா லருள் வாயாற் ருயு மானேன் கூறுதமிழ் முறையருளாங் கோயி லாமே. 18

ஆதிபர சிவவணக்கங் காப்ப தாக வருட்பெரிய கவிதைநடு வாக மேவக், காதலிமா துமையிருங் காட்சி யாகக்கருணைவெள்ளக் கவிதை மழை கதிக்க வெங்கும், சோதிசிவா னந்தமயன் ருயு மானேன் சொரிதமிழா லநுபோகஞ் சொன்ன நூலை, ஆதரங்கூர்ந் தருள் வசத்தா யவனை நாடி யநுதினமும் வெகுமதிசெய் தறைவோம் யாமே. 19

வேறு

சிராப்பளிமா மலைமேவுந் தக்ஷிணு மூர்த்தியருள் செய்ய வாங்கிப், பராபரமு மென்நாளும் பைங்கிளியும் பலபாவும் பாடிப் பாடித், தராதலமா னிடர்க்கெல்லாந் தண்ணமிர்தாய்த் தந்தருளுந் தாயு மான, நிராமயனு ரருள்பெரிய கவிதையினுற் பொருளதனை நினைந்து நிற்பாம். 20

வேறு

வைய முழுது மகிழ்ந்தோங்க மறைசை நகரும் வாழ்ந்தோங் கத், துய்ய வடியார் தொழுதோங்கத் துதிக்கு மடியார் தொகை யோங்க, வெய்ய பிறவிக் கடனீங்க வீசுங் கருணை விளைந்தோங்க, ஐயன் ருயு மானவனு மறைந்த கண்ணிக் கடிவரவே. 21

வேறு

நீடிடு மாதி பரசிவ வணக்க நிறைதமி ழாதியாய் நடுவே, கூடிடுந் தமிழுந் தேவைமா துமைமேற் கூறிய தமிழ்க்கவி யீருய்த், தேடிடுந் தந்தை தாய்முதற் கண்ணித் திரண்டுனை வெழுந்தசெந் தமிழும், பாடிடு மகவல் வண்ணமீ றெழுதும் பைந்தமிழ்த் தொடைபதி னென்றே. 22

நீரணி சடையா னிருமல வாத னிட்கள சகளமாய் நிறைவோன், சீரணி கருணைத் திருவுரு வாகித் திருமறைக் காட்டெழுஞ் செல்

வன், ஈரடிக் கண்ணித் தொடையதாய்ப் புனைந்த விருந்தமிழ்த் தொகைக்கடி வரவாய்ப், பாரணைந்த தியங்க வவனரு ளுவாய்ப் பாடுவேன் றிருவருட் பண்பால். 23

அன்னையாய்ப் பிதாவாய்க் குருவுமாய்த் தேவா யமர்பிள்ளை யவர்கண்மெய் யருளால், சொன்னவர்க் கியத்தை யவனரு ளறியாத் தொழும்பனே னொருதலைத் துணிவாய், என்னறி வதனுக் கெட்டுமவ் வளவா யியம்பிய நூற்கடி வரவாய்ப், பன்னுசெந் தமிழா லாதியந் தமதாய்ப் பாடுவே னவனருட் பரிவால். 24

பரசிவ வணக்கம் பாட்டொரு மூன்றும் பரிபூர ணானந்தம் பத்தாம், தருபொருள் வணக்க மாறிரண் டொன்றுந் தருபது சின்மயா னந்தம், அருடரு மௌன குருபதீ ரைந்தா மருங்கரு ணாகரக் கடவுள், திரமுறு சித்தர் கணத்தொகை பத்தாந் தேர்தமிழ்ப் பெயர்வழித் தெரிவே. 25

ஆனந்த மான பரமொரு பத்தா மருட்சுக வாரியீ ராறும், மாநில மெங்கு நிறைகின்ற பொருளாய் வருவது மொருபதோ டொன்றும், ஞானமார் சச்சி தானந்த சிவமு நற்பதி னொன்றதா ஞானத், தேனுறுந் தேசோ மயம்பதி னொன்றுஞ் சிற்சுகோ தயமுமீ ரைந்தே. 26

அரியவா கார புவனமா றைந்து மாறரை கூடிடு மளவாம், பரியதேன் முகமும் பத்ததா ஞானப் பனுவல்பன் மாலையும் பத்தாம், நிருமல ஞான நினைவொன்று மொன்பா னிகழ்பொன்னை மாதரைப் புவியில், விரகினல் வேண்டா தெழுபதோ டெட்டா மேவுபத் தாரண மிகவே. 27

வாயினுற் சொல்லற் கரியதும் பத்தாம் வம்பனே னென்பதும் பத்தாம், சேயனே யெமையாள் சிவன்செயல் பத்தாந் திகழ்தன்னை யென்பதும் பத்தாம், நாயினே னுசை யெனுந்திருப் பாட னுற்ப தாஞ்செய லுறு ஞானம், ஏயுமா பாட லிருபதோ டெட்டா மெனக் கெனச் செயலிலை யென்றே. 28

மண்டல மென்னுந் தமிழ்ப்பதி னொன்று மற்பாயப் புலியைம்பத் தொன்பான், விண்டிடு முடல்பொய் யெண்பதா றரையாம் விரவுமே சற்றலும் பத்தாம், கண்டிடுங் காடுங் கரையுமோர் மூன்றுங் கணமுற வெடுத்ததே கத்தின், தண்டமி ழிரண்டா முகமெலா மொன்றுஞ் சார்பது திடமுறுந் தமிழே. 29

பருவர லாறத் தன்னையாக் குவையும் பாடினன் பைந்தமி ழிரண் டால், கருவறுங் கவிதை யேழினு லமைத்தான் கற்புறு சிந்தையாங்

கருத்தை, வருமலை வளர்கா தலிக்கிரு நான்கு வண்டமிழ் வழுத்தி னன் வாக்கால், பெரியநா யகியகி லாண்டநா யகியைப் பேணினு னிருதமிழ்ப் பிணையால். 30

தந்தைதா யேழாம் பெற்றவட் கேசாற் றியதமி ழுப்பதி னொன் ருரும், எந்தையார் கல்லா னீழன்முப் பதுவா மெண்ணிய பராபரக் கண்ணி, நந்திருப் பாடன்முந் நூற்றெண்பத் தொன்பா னல்லபைங் கிளியைம்பத் தெட்டாம், சிந்தையா ரெந்நா ளோரிரு நூறிற் சேர் தமிழ் முப்பதோ டிரண்டே. 31

கான்பேனு வென்னுந் தமிழ்முப்பத் தேழாங் காட்சியுங் காண்பதுங் காட்டா, ஆனவ மகற்றுங் கவிதைமூ வேழு மாகாதோ வென்றரு ளியதாம், வீண்பொழு தகல வில்லையோ ஞான விளக் கென விளம்பிய தாரும், பாண்பிறப் பகற்ற வேண்டாவோ வென்று பாடிய பைந்தமி ழாறே. 32

நல்லறி வேயென் தமிழொரு நான்கா நாடுதே-யே-வே-றே-னே யாய்ச், சொல்லிய வினுவ லைவகைக் கண்ணித் தொகைபனி ரண்ட தாந் தோய்மோப், புல்லிய வினுவ லைந்ததாம் யோ-னே புகல்வினு வேழதாம் புணர்ந்தோர், வல்லிதாய் நின்ற நிலையொரு மூன்று மறை சைநா யகன்வகுத் ததுவே. 33

பாய்புனற் பொன்னி வரத்ததாய் ஞானப் பகீரதி யெனுமருட் பனுவல், வாயினுற் சொரிந்தான் பாவினம் பலவாய் வகுத்ததி னநு பவம் வைத்தே, ஆய்பவன் பாடு கின்றதற் கைந்து மானந்தக் களிப் புக்கை யாறும், தோய்வுற வகவல் வண்ணமும் வகுத்தான் ருேன் மையன் ருயுமா னவனே. 34

வேறு

நீரு நெருப்பு நெடுங்காற்று நிறைபூ தலமு நீள்விசும்பும், சேருங் கதிருந் திகழ்மதியுஞ் சீவத் திரளுந் திருவுருவா, யாருங் கருணைக் கடன்மூழ்கி யருந்தி யெழுந்தே யருள்வாயால், சாருங் கண்ணித் தமிழ்மழையைத் தந்தான் ருயு மானேனே. 35

வேறு

மகபதிமா லயனமரர் தமக்குமரி தாய மந்திரமா லிகைமூலர் மரபிலெழு மௌனி, சுகர்வாம தேவர்முதன் ஞானிமார் கணங்கள் சுத்தர்நித்தர் முத்தர்சித்தர் பத்தருங்கொண் டாட, இகவாழ்வும் பரகதியு மெவ்வுயிர்க்கு மீயு மீசனரு ளாயெழுந்த வெழிற்ருயு மானேன், சகமேழு மணக்குமருட் டன்மலராற் புனைந்த தாமீர டிக் கண்ணித் தமிழ்த்தொகையி தாமே. 36

வேறு

தந்தைதாய் முதலாக வகவல்வண்ண மீருகத் தாயு மானேன், விந்தையா யநுபோக விதமெல்லாம் விவகார வினோத மாக, எந்தை யார் திருவருளா லீரடிக்கண் ணிகளாக வியம்பு நூலைச், சிந்தைநோய் தீர்ந்தருளைச் சேர்ந்தொளிர வனுதினமுஞ் சிந்திப் போமே. 37

வேறு

செய்யபரங் கிரிக்கோமான் செல்வ னாகித் தென்மறைசை வாழ் வானைச் சிறந்த ஞான, ஐயனரு ளாண்டவனை மௌன ஞான வநு போக மருந்தமிழா லருளின் வாக்கால், வையமுய்ய வகுத்தானைத் தாயு மான வரோதயனை மறவாமல் வாழ்த்தி வாழ்த்தித், தூய்யதிரு வகவலருள் விலாச நீதி சூழ்பலநூ றுருகுத்தானைத் தொழுது வாழ் வாம். 38

வேறு

திருவேத வனமதனிற் றிருவவதா ரந்தான் செய்துதிரு வரு ளுருவாய்த் திகழ்தாயு மானேன், பொருளுருவாஞ் சிவானந்த பூரணவி லாசப் பொலிவாகி யெழுந்தருளிப் பூரணமெய்ஞ் ஞான, அருளுருவா மநுபோக சம்பிரதா யத்தை யருள்வாக்கா லருந்தமிழா லமைந்தருளு மதற்குக், குருதுதிசெய் வதைவணக்கம் வாழிவரை லாறுங் கூறியபா யிரங்கூறிக் கூறுவதாங் குணமே. 39

வேறு

அடிவர வாதி குருதுதி வாழி யரியதே வதைவழி பாடும், நெடியபா யிரமும் பரசிவ வணக்க நிறைவுநற் சிந்தனை நிகழ்த்தி, வடிதமிழ் வகுத்த வள்ளலை நினைவில் வைத்தருட் கவிதைமா ரியினைப், பொடிமணி புனைந்த வன்புட னிதமும் போற்றுவார் புநிதமா தவரே. 40

சைவசித் தாந்த சமயசந் தானத் தபோதனர் நடுநிலை சார்ந் தோன், ஐவகைத் தொழிலு மத்துவா வாறு மாதார முங்கடந் தார் வோன், மெய்வகை யாய வநுபவ நிலையை விரிதமிழ்க் கவிதையால் விரித்தே, செய்தவந் தெரிந்த தாயுமா னவனைத் தினந்தொறும் சிந் தனை செய்வாம். 41

வேறு.

மாயுமா பாதகமு மறுபிறப்புந் துறவறத்தான் மாற வீசி, ஆயும்வே தாகமத்தா லருள்வலியாற் சிவஞான வாழி மூழ்கிப், பாயு மால் விடைப்பரமன் பலநிலையும் பார்த்துணர்ந்து பரத்தி னென்றும், தாயுமா னவனுபய சரண்மலரைச் சிரமதனிற் றரித்து வாழ்வாம். 42

(தொடரும்)

# கலைமகள்

கி. வா. ஜகந்நாதன்

உலகத்தை ஆக்கி அளித்து அழிக்கும் மூவகைக் கடவுளரின் தேவியர்களாகக் கலைமகள், அலைமகள், மலைமகள் என்னும் மூவரும் கூறப்படுகின்றனர். மும்மூர்த்திகளுடைய செயல்களுக்குரிய சக்திகளையே அவ்வாறு கூறுவரென்பர் பெரியோர். ஆக்கும் செயலுக்குரிய அறிவினைக் கலைமகளாகவும் அளிக்கும் செயலுக்குரிய திருவினை அலைமகளாகவும் அழிக்கும் செயலுக்குரிய ஆற்றலை மலைமகளாகவும் வணங்குவது பெரியோர்கள் வழக்கம். எனவே, அறிவு, திரு, ஆற்றல் என்னும் மூன்றினாலும் உலகம் நிகழ்த்தப்படுகின்றதென்பது பெறப்படும்.

கலைமகள் அறிவுத்தெய்வம்; அவள் பிரமன் நாவிலே அமர்ந்தவளென்பது புராணநூற் கிடக்கை. மறையை யோதும் நாவில் கலைமகளிருத்தல் பிரமன் அறிவின்றிறம் முற்றப் பெற்றவனென்பதனை உணர்த்தும். இது குறித்தே அறிவுடையார் நாவிலே கலைமகளுள்ளாளென்னும் உரையும் எழுந்தது. இங்ஙனமே பொருளும் பூமியும் பெற்ற மன்னர்பால் திருமகள் உறைகின்றாளென்பதனையும் வீரர்கள்பாற் கொற்றவை இருந்தருள்வா ளென்பதனையும் கொள்க.

"சொற்கும் பொருட்கு முயிராமெய்ஞ் ஞானத்தின் றோற்ற
மேன்ன
நிற்கின்ற நின்னை நினைப்பவர் யார்" (சகலகலாவல்லிமாலை)

என்பதனால் அறிவே உருவாயவள் கலைமகளென்பதும்,

"......................வடநூற் கடலும்
தேக்குஞ் செழுந்தமிழ்ச் செல்வமு மன்பர்செந் நாவினின்று
காக்குங் கருணைக் கடலே சகல கலாவல்லியே"

என்பதனால் அவள் அறிவுடையார் நன்னாவில் வீற்றிருப்பவளென்பதும் அறியப்படும். பிரமன் இயற்றும் தொழிலுக்கு அறிவு ஆதாரமாதலின் கலைமகளின் துணையினால் அவனது சிருட்டி இயல்கின்றதெனல் மிகையன்று.

"......................இந்த மூவுலகும்
செயலா லமைத்த கலைமகளே"

"......................கமலவயன்
தனிநா யகியை யகிலாண்டமும் பெற்ற தாயை"
(சரசுவதி யந்தாதி)

என்னும் செய்யுட் பகுதிகள் சரசுவதியையே உலகத்தை ஆக்கிய வளாகக் கூறுகின்றன. அவள் அச்செயலுக்கு இன்றியமையாத் துணையாக நிற்றலின் இவ்வாறு கூறப்பட்டது.

அறிவு யாவராலும் வேண்டப்படுவதாதலின் அறிவுத் தெய்வ மாகிய கலைமகளை யாவரும் போற்றுகின்றனர் ;

"இமையவர்கண் மோலி யிணைமலர்த்தாள் சூடச்
சமயந் தொறுநின்ற தையல்" (தண்டியலங்காரமேற்கோள்)

என்பது இங்கே அறிதற்குரியது. கலைமகளைப்பற்றித் தமிழ் நூல் கள் கூறுவனவற்றை இங்கே ஆராய்வோம்:

சங்கமருவிய நூல்களுள் நாலடியாரில் ஓரிடத்திற் கலைமகள் கூறப்படுகின்றாள் ;

"நாவின் கிழத்தி யுறைதலாற் சேராளே
பூவின் கிழத்தி புலந்து"

என்னும் செய்யுளில் திருமகளும் கலைமகளும் ஒருங்கே இராரென் பது சொல்லப்படுகிறது. கல்வியும் பொருளும் ஒருபாலிருத்த லில்லை யென்பதே கருத்து. இங்கே, கல்வியையே கலைமகளாகக் கூறுதல் காண்க.

"காலமுலகம்" என்னுந் தோல்காப்பியச் சூத்திர உரையில் நச்சினார்க்கினியர் 'சொல் நன்று' என உதாரணங் காட்டிச் சொல் லென்பது நாமகளாகிய தெய்வத்தை உணர்த்து மென்றார். பௌத்த சமயக்காப்பியமாகிய மணிமேகலையில் நாமகள் சிந்தாதேவி யென் னும் பெயரால் வழங்கப்படுகிறாள்.

"உணர்விற் றோன்றி யுரைப்பொரு ளுணர்த்தும்"
(மணிமேகலை)

காரணம் பற்றி அவள் அவ்வாறு கூறப்படுவதாகத் தெரிகிறது. சிந்தாதேவிக்கு மதுரையில் ஒரு கோயில் இருந்தது. அது கலைநிய மம் என்று வழங்கப்பட்டது. அங்கே எல்லாச் சமயத்தாரும் வந்து கலைமகளைத் தொழுதனர்.

"யாவரு மேத்து மிருங்கலை நியமத்துத்
தேவி சிந்தா விளக்கு"

என்று மணிமேகலை கூறும். அக்கோயிலில் ஒரு நாள் இரவில், இரந்துண்டு பிறருக்கும் இடும் ஆபுத்திரனென்னும் ஒருவன்

தூங்கிக்கொண்டிருந்தான். அப்பொழுது சிலர் வந்து, "பெரும்பசி எங்களை வருத்தா நின்றது" என்றார்கள். அதைக்கேட்ட அவன் அப்பசித்துன்பத்தை நீக்க ஆற்றலிலாதவனாகி மிக்க வருத்த முற்றான். அச்சமயத்திற் சிந்தாதேவி அவன் முன் தோன்றி ஓர் அட்சய பாத்திரத்தை அவன் கையிற் கொடுத்து யாவருக்கும் உணவளிக்கச் செய்தாள்; உவகை மிக்க ஆபுத்திரன்,

"சிந்தா தேவி செழுங்கலை நியமத்து
நந்தா விளக்கே நாமிசைப் பாவாய்
வானோர் தலைவி மண்ணோர் முதல்வி
ஏனோ ருற்ற விடர்களை வாய்"

எனத்துதித்தான். அவனே மறுபிறப்பையடைந்த பொழுது ஒரு சமயம் தன் முற்பிறப்பின் வரலாற்றை அறியப் பெற்றுச் சிந்தா தேவியை நினைந்து,

"அமுத சுரபி யங்கையிற் றந்தென்
பவமறு வித்த வானோர் பாவாய்
உணர்விற் றோன்றி யுரைப்பொரு ளுணர்த்தும்
மணிதிக ழவிரொளி மடந்தை நின்னடி
தேவ ராயினும் பிரம ராயினும்
நாமாசு கழூஉ நலங்கிளர் திருந்தடி
பிறந்த பிறவிகள் பேணுத லல்லது
மறந்து வாழேன் மடந்தை"

என்று ஏத்தினான்; இச்செய்தி மணிமேகலையிற் காணப்படுகின்றது. இதனாற் பௌத்தர்களும் கலைமகளை வணங்கி வந்தார்களென்பதனை அறியலாகும்.

சமணசமயக்காப்பியமாகிய சீவகசிந்தாமணியில் முதல் இலம்பகத்தின் பெயரே நாமகளிலம்பகமென அமைந்திருக்கின்றது. ஆசிரியர்,

"நாவீற் றிருந்த புலமாமகளோடு"

என நூலைத் தொடங்குகின்றார். காப்பியத் தலைவனாகிய சீவகன் பல கலைகளையும் கற்று வல்லவனாயினனென்பது இம்முதலிலம்பகத்திற் கூறப்படுகின்றதாதலின் இது நாமகளிலம்பகமென்று பெயர் பெற்றது; 'நாமகளைக்கூடின இலம்பகமென்க' என்பர் நச்சினார்க்கினியர். அறிவினையே நாமகளாகக் கூறுதல் இதனாலும் பெறப்படுகின்றது. சீவகனை வளர்த்துவந்த தாய்தந்தையர் அவனுக்குக் கல்வி கற்பிக்க எண்ணினரென்பதைத் திருத்தக்கதேவர்,

"குழைமுக ஞான மென்னுங் குமரியைப் புணர்க்க லுற்றார்"
என்கின்றார். அவன்,

"நாமக ளலத்தை யெல்லா நயந்துடன் பருகி நன்னூல்
எழுத லாய வெல்லாப் படைக்கலத் தொழிலு முற்றிக்
காமனுங் கனிய வைத்த புலங்கரை கண்டு"

விளங்கினனென்பர். சமணர்கள் அறிவினை நாமகளாகப் போற்றி வந்தமைக்கு இதனினும் பிரசான்று வேண்டுமோ ?

பிற்காலத்துப் புலவர்கள் பலர் கலைமகளைத் துதித்த செய்யுட்கள் பல. புறப்பொருள் வெண்பாமாலையுடையார், "நடையூறு சொன்மடந்தை" எனக் கலைமகளைக் குறிப்பர். தண்டியலங்கார வாசிரியர்,

"சொல்லின் கிழத்தி மெல்லிய லிணையடி
சிந்தைவைத் தியம்புவன் செய்யுட் கணியே"

என்னும் காப்பைக் கூறி நூலைத் தொடங்குகின்றார். பொருளணியியலின் காப்பொன்றும் கலைமகளைப்பற்றியே அமைந்துளது. அதில்

"என்னை யுடையாள் கலைமடந்தை யெவ்வுயிர்க்கும் அன்னை"

என அவளை வாழ்த்துகின்றார். உதாரணச் செய்யுட்களுக்குள்ளே ஒன்று எண்ணெண் கலைமடந்தையை நாவலோர் கண்ணாகவும் மலைமடந்தை மலர்மடந்தைகளாகவும் கூறுகின்றது. கம்பர் தம் இராமாயணத்திலே கலைமகள் வாழ்த்தொன்று அமைத்துள்ளார். அதில் அவளுடைய உருவம் கூறப்பட்டுள்ளது ;

"புத்தகம் படிக மாலை குண்டிகை பொருள்சேர் ஞான
வித்தகந் தரித்த செங்கை விமலையை யமலை தன்னை"

வணக்கம் செய்கையில் அறிவுத் தெய்வமாகிய அவள் கையிலுள்ள பல பொருள்களிலும் அறிவிற்குரிய கருவியாகிய புத்தகத்தை முதலிற் கூறியது அறிந்து பாராட்டற்குரியது. சரசுவதியந்தாதியென்னும் ஒரு நூல் அவராலியற்றப்பெற்றதாக வழங்கி வருகிறது. அது முப்பது கலித்துறைகளடங்கியது ; முதலில் இரண்டு வெண்பாக்களை உடையது. கலைமகளையும் செந்தமிழ்த் தெய்வத்தையும் ஒன்றாக வைத்து அந்நூலாசிரியர்,

"அருக்கோ தயத்தினுஞ் சந்த்ரோ தயமொத் தழகெறிக்கும்
திருக்கோல நாயகி செந்தமிழ்ப் பாவை"

எனப் பாராட்டுகின்றார். பிற்காலத்துச் சகலகலாவல்லியின் திருவருளைப் பெற்றுச் சகலகலாவல்லிமாலை பாடிய குமரகுருபர முனிவர்,

"....................உளங்கொண்டு தொண்டர்
தீட்டுங் கலைத்தமிழ்த் தீம்பா லமுதந் தெளிக்கும்வண்ணம்
காட்டும்வெள் ளோதிமப் பேடே சகல கலாவல்லியே"

என்று கூறுதல் இங்கே அறிதற்குரியது. கவிச்சக்கரவர்த்தியாகிய ஒட்டக்கூத்தர் கலைமகளிடம் பேரன்பு பூண்டவர். அரிசிலாற்றங் கரையிலுள்ளதும் இப்பொழுது கூத்தனூரென வழங்கப்படுவது மாகிய ஊரில் கலைமகளாலயமொன்று இப்பொழுதும் இருக்கிறது. அங்கே கோயில்கொண்டெழுந்தருளிய கலைமகள் ஒட்டக்கூத்தரால் உபாஸிக்கப் பெற்றவளென்று தெரியவருகிறது. கூத்தர் தாம் இயற்றிய தக்கயாகப்பரணியென்னும் நூலின் இறுதியில்,

"ஆற்றங் கரைச்சொற் கிழத்தி வாழியே"

என்று அம்மகளை வாழ்த்துகின்றார். ஒட்டக்கூத்தருக்குக் கலைமகள்பாலிருந்த அன்பைப்பற்றி அந்நூற் பதிப்பாசிரியர்களாகிய பிரம்மஸ்ரீ, மகாமகோபாத்தியாய ஐயரவர்கள் கீழ்வருமாறு எழுதியுள்ளார்கள்:

"துர்க்கா பரமேசுவரி கலைமகளை நோக்கி ஆளுடைய பிள்ளையார் கதையைச் சொல்லும்படி கட்டளையிட்டு அங்ஙனமே சொல்லிய கலைமகளை மனமுவந்து தன் அருகில் வீற்றிருக்கும்படி அருளிச் செய்ததாகக் கூறியிருப்பதும், தக்கயாக சங்காரத்தைக் கூறும் ஏனைய நூல்களில் வீரபத்திரதேவர் கலைமகளுடைய நாசியை அரிந்ததாகக் காணப்படும் செய்தியைக் கூறாதொழிந்ததும், வாழ்த்தில் 'ஆற்றங்கரைச் சொற்கிழத்தி வாழியே' என்று பாராட்டியிருப்பதும் இவருக்குக் கலைமகள்பாலுள்ள பேரன்பைப் புலப்படுத்துகின்றன."

கலைமகளைக் குறித்த பல தனிப்பாடல்களும் உண்டு. பல புலவர்கள் தங்கள் நூல்களிற் கலைமகளுக்குக் காப்புக் கூறியுள்ளார்கள். பிள்ளைத்தமிழென்னும் பிரபந்தத்திற் காப்புப்பருவத்துள் கலைமகள் காக்கவென ஒரு செய்யுள் கூறவேண்டுமென்பது தமிழிலக்கண விதி. கலைமகளைப்பற்றிப் புராணங்களிற் காணப்படும் செய்திகள் பல.




## மனித சரீரத்தின் இரசாயனம்

டாக்டர் காங்தேகர்—பி. என். அப்புஸ்வாமி ஐயர்.

(596-ம் பக்கத் தொடர்ச்சி)

பொதுவாகக் கூறின், உணவுப் பொருள்களை ஆறு வகைகளாக வகுத்தல் கூடும். அவையாவன:

1. நீர்
2. இனர்கானிக் உப்புக்கள் (ஜீவ சம்பந்தமற்ற உப்புக்கள்)
3. புரோடீன்கள்
4. கார்போ ஹைட்ரேட்டுகள்
5. கொழுப்புக்கள்
6. வைடமின்கள்.

இவை ஆறும் உடலுக்கு இன்றியமையாதன. இவற்றுள் ஒவ்வொன்றுமே முக்கியமானதாய் இன்றியமையாததாய் இருத்தலால் இவை யாவற்றினிலும் சிறந்தது எது, மேலானது எது என்று பிரித்துச் சொல்லுவது இயலாது.

### நீர்

'இவை யாவற்றுக்கும் முதலிலே நீரை ஏன் குறிப்பிட்டிருக்கிறது?' என்று கேட்கலாம். நாம் சாதாரணமாக நீரை ஓர் உணவுப் பொருளாகக் கருவதில்லை தான். ஏனென்றால் அது விலை கொடுத்து வாங்குகிற வஸ்து வல்ல; உலகத்தில் கிட்டத்தட்ட எங்குமே அது கிடைக்கின்றது. உடலிலுள்ள ஒவ்வொரு செல்லின் பெரும் பகுதியும் நீராகத்தான் இருக்கிறது. ஜீவி என்று சொல்லப்படும் ஒவ்வொரு சிற்றுயிரிலும் நூற்றுக்கு எழுபது முதல் தொண்ணூறு பங்குவரையில் நீராகவே காணப்படுகின்றது. நூற்றில் எழுபது பங்குக்கு அதாவது எழுபது பெர்செண்டுக்குக் குறைந்த அளவிலே நீரை யுடையதாயுள்ள ஜீவி (சிற்றுயிர்-ஆர்கனிஸம்) ஒன்றையுமே நாம் இது வரை கண்டறிந்ததில்லை. ஆகவே ஜீவ தத்துவ சாஸ்திரக் கண்ணைக் கொண்டு பார்க்கும் போது நீரைப்

போல் முக்கியமானது வேறொன்றும் கிடையாதோ வென்று தோன்றுகிறது. நீரானது நல்ல கரைப்பான் (கரைக்கும் பொருள்) ஆகையால் உடலினுள்ளே வேண்டிய பொருள்களை எடுத்துக் கொண்டு போவதற்கும், உடலிலிருந்து வேண்டாப் பொருள்களை வெளியே எடுத்து வருவதற்கும் அது மிகவும் உதவுகிறது. செல்லிலே அஃது ஒரு மின்சார விளக்கைப் போல ஒளியையும் தருகிறது. பட்டினி கிடந்து சாவதைக் காட்டிலும் தாகத்தால் உண்டாகும் சாவுதான் மிகவும் துன்பகரமானது. ஆரோக்கியத்தை நாடியோ, புண்ணியத்தை நாடியோ, அல்லது வேறெந்தக் காரணத்தாலோ பட்டினி கிடக்கும்போது கூட நாம் தண்ணீரை அருந்தாமல் இருப்பதில்லை. சுத்தப் பட்டினியிலும் தண்ணீரை அருந்தலாமென்ற விதியிருக்கிறது.

## உப்புக்கள்

உடலிலே உள்ள எலும்புகள் கால்சியம் பாஸ்பேட் என்னும் உப்பை ஏற்றுக் கொள்கின்றன. உடலில் காணுகின்ற உப்புக்களிற் சில, தசைகளின் சுறுசுறுப்புக்கு அவசியமுள்ளனவாக இருக்கின்றன. உடலிலே உள்ள செல்கள் அழிந்து போவதால் உடலிலே விளைகின்ற தீய விஷப்பொருள்களாகிய டாக்ஸின்களை அழிப்பதற்கும் அகற்றுவதற்கும் சிற்சில உப்புக்கள் உதவுகின்றன. அந்த உப்புக்களின் உதவியாலன்றி அக்கொடிய டாக்ஸின்கள் உடலினின்றும் அகற்றப்பட மாட்டா.

## புரோடீன்கள்

புரோடீன் என்னும் மொழிக்கு 'முதன்மையானது' என்பது பொருள். சுமார் ஐம்பது வருஷங்களுக்கு முன்பு நமக்குப் புரோடீன்களைப் பற்றி ஒன்றுமே தெரியாதென்று தான் சொல்லவேண்டும். நாம் எல்லாம் அறிந்து விட்டோம் என்று எண்ணும் இக்காலத்திலும் கூட, இவற்றைப் பற்றி நாம் அறிந்து கொண்டிருப்பதெல்லாம் மிகக் குறைவுதான். புரோடீன் மாலிகூலைப்பற்றி நாம் என்ன தெரிந்து கொண்டிருக்கிறோம் தெரியுமா? அதன் அமைப்பு எவ்வாறானது என்பதை நாம் இன்னும் சிறிது கூட அறிந்து கொள்ளவில்லை என்பது தான். அது மிகப்பெரிய மாலிகூல். நீரின் மாலிகூலோடு அதை ஒப்பிட்டுப்பார்த்தால் அது நீரின் மாலிகூலைப் போல ஆயிரமடங்கு எடையுள்ளதாய்க் காணப்படுகிறது. புரோடீன் மாலிகூலிலே கார்பன், ஹைட்ரஜன், ஆக்ஸிஜென், நைட்ரஜென் ஆகிய மூலங்கள் நான்கும் தவறாது காணப்படுகின்றன. சிற்சில போதுகளில் ஸல்பர் என்னும்

கந்தகமும், பாஸ்பரஸ் என்னும் மூலப்பொருளும் அதில் கலந்து கிடப்பதும் உண்டு. உதாரணமாக முட்டையிலுள்ள புரோடீனில் பாஸ்பரஸ் இருக்கிறது. நமது உடலிலே ஒரு புரோடீன் இருக்கிறது. அது தான் இரத்தத்திலே காணப்படும் ஹேமோகிளாபின் என்பது. அதிலே இரும்பும் கலந்து காணப்படுகிறது. இவ்வகையாயுள்ள புரோடீனனது சிக்கலான அமைப்பை உடையதாயிருப்பதால் அதன் அமைப்பைச் சுருக்கமாய் விளக்கும் வாய்பாட்டால் (சங்கேத அடையாளத்தால்) அதைக் குறிப்பிடுவதற்கில்லை. ஆனால் எமில் பிஷர் என்னும் நிபுணர் இதைப்பற்றி ஆச்சரியமான ஆராய்ச்சிகளை நடத்தி வந்திருக்கிறார். புரோடீன் மாலிகூலை உடைத்தால் அது படிப்படியாக உடைந்து போகும்பொழுது ஒவ்வொரு படியிலும் சிற்சில பொருள்கள் கிடைக்கின்றனவென்று காட்டினார். அவற்றுக்கு அமீனோ அமிலங்கள் என்று பெயர்.

புரோடீன்களெல்லாம் ஒன்றுபோல் இருப்பதில்லை. இயற்கையில் காணும் ஒவ்வொரு பிராணியும் குறிப்பிட்ட ஒவ்வொரு வகைப் புரோடீனையே தன் உடலில் இயற்றிக்கொள்கிறது என்பது ஆராய்ச்சியிலிருந்து தெரிய வருகிறது. உதாரணமாய்ப் பசுவின் பாலிலுள்ள புரோடீனனது வேறு, ஆட்டுப் பாலிலுள்ள புரோடீனனது வேறு. ஒவ்வொரு புரோடீனும் மற்றெவ்வொரு புரோடீனினின்றும் வித்தியாசப்படும். ஆகையால், இயற்கையிலே ஒவ்வொரு பொருளும் தனித்தனியென்று குறிக்கத் தகும்படியே தான் இருக்கிறது என்பது இதனால் விளங்குகிறது. மானுட உடலும் கூட, அதற்கு வேண்டிய புரோடீனை எடுத்துக்கொண்டு அதை உடலோடு ஒட்டச் செய்யும் பொழுது, அதைத் தனக்கே உரிய தனிப்புரோடீனாகவே அமைத்துக் கொள்ளுகிறது. மனித உடலில் காணும் பல வகை உறுப்புக்களையும் அமைக்கின்ற திசுக்கள் எனப்படும் நுண்மையான நார்களைக் கொண்டு மனித உடலை அப்படியப்படியே வைத்துக் கட்டிப் பாதுகாப்பது இயலாது. [மனித உடலானது திசுக்களைத் திசுக்களாகவே உட்கொள்ளுவதில்லை. ஆதலால், உடலுள் ஏதாவது ஓர் உறுப்பைக் கட்டவேண்டுமானால் திசுக்குவியலினின்று அவ்வுறுப்புக்கேற்ற திசுக்களைப் பொறுக்கி எடுத்துக் கட்டுவதற்கில்லை. அதுபோலவே, செப்பனிட வேண்டிய உறுப்புகளையெல்லாம் திசுக்களை அப்படியப்படியே நேராகவே கொண்டு செப்பனிடுவது என்பதும் இயலாத காரியம். அதாவது உடலிலே எலும்பை வளர்ப்பதற்கு எலும்புத் திசுக்களை உட்கொண்டு அவற்றை மாறுபடுத்தாமல் அப்படியே வைத்துச் செங்கல் சுண்ணாம்பு வைத்துக் கட்டுவதுபோல் கட்டுவதும், தசைத் திசுக்களைக் கொண்டு அவ்வாறே

உடலினுள்ள தசைத்திசுக்களின் இடையில் புகுத்தி அத்தசைகளை வளர்ப்பதும் இயற்கையில் நடந்தேறும் விஷயங்கள் அல்ல.] அவ்வாறு இயற்கையில் நடந்து வருமானால், நரமாமிச பக்ஷணந்தான் நமக்கு உசிதமென்பதற்கு அதைவிட வேறு ஆதாரம் வேண்டாம். உடலானது தான் உண்ணும் உணவை அப்படியப்படியே பயன்படுத்துவதில்லை. ஆனால் அது செய்கிறது என்னவென்றால், புரோடீன் மாலிகூலை அமீனோ-ஆசிட்டாகும்வரை உடைக்கிறது. பிறகு அந்த உடைபட்ட துண்டுகளை வைத்துக் கொண்டு தனக்கு உரியதாயுள்ள புரோடீனைச் சிருஷ்டித்துக் கொள்கிறது. இது தான் உடல் செய்வது. புரோடீன்கள் அமைப்பில் ஒன்றுக்கொன்று வித்தியாசப்படுகின்றன. அதுபோலவே தமது போஷணை சக்தியிலும் அவை ஒன்றுக்கொன்று வித்தியாசப்படுகின்றன. அவற்றுள் சில, ஜீவியின் வளர்ச்சிக்கு இன்றியமையாதன. வேறு சில, ஜீவிக்கு அவ்வளவு பயன்படுவதில்லை. எலி முதல் புலி வரையில் எந்த உயிர்ப் பிராணியை எடுத்துக் கொண்டாலும், அதற்கு நல்வகைப் புரோடீன்களிற் சில கிடைக்காது போய்விட்டால் அதன் வளர்ச்சி திருப்தியாயிருப்பதில்லை. வரவர அது க்ஷீணித்து வருவதோடு வெகு சீக்கிரம் மரித்தும் விடுகிறது. பொறுக்கி யெடுத்த சில எலிகளை அளவு கருவிகளாக வைத்துக் கொண்டு அவற்றைப் பல விதத்திலும் நன்கு பரிசோதித்துப் பரிசோதித்துப் பலவகைப் புரோடீன்களின் போஷக சக்தியை ஒருவாறு அறிவாளர் நிருணயித்திருக்கிறார்கள். அவற்றின் குணங்களைக் கொண்டு அவற்றையெல்லாம் வகுத்திருக்கிறார்கள். போஷக சக்தியின் அளவுக்கு ஏற்றபடி அவற்றை வரிசைப்படுத்தியிருக்கிறார்கள். இவ்விஷயங்களை எல்லாம் விளக்கும் அட்டவணைகள் பற்பலவற்றைத் தயார் செய்திருக்கிறார்கள். இயற்கையில் காணும் ஒவ்வொரு பொருளிலும் இன்ன இன்ன புரோடீன் இருக்கிறதென்பதை நாம் எளிதில் அறிந்துகொள்ள முடியும். நம்முடைய உடம்புக்கு ஒத்துக்கொள்ளக் கூடிய இன்றியமையாத உணவு இதுதான் என்று நாம் எளிதில் தேர்ந்தெடுக்கக் கூடும். கட்டடத்துக்குச் செங்கல்கள் எப்படியோ, அவ்வாறே உடலுக்குப் புரோடீன்களும். அவைதாம் உடலைக் கட்டுகின்ற செங்கல்கள். மானுட உடலிலே உள்ள ஒவ்வொரு செல்லிலும் ஒவ்வொரு திசுவிலும் புரோடீன்களைக் காணலாம்.

### கார்போஹைட்ரேட்டுக்கள்

தாவர உலகத்திலே இவைதாம் அடிப்படையாகின்ற திசுக்கள். சூரிய வெளிச்சத்தின் துணையைக்கொண்டும் நீரின் துணையைக் கொண்டும் தாவரங்கள் தமக்கு வேண்டிய கார்போஹைட்ரேட்டுக்

களைக் காற்றினின்றும் சிருஷ்டித்துக் கொள்கின்றன. இவைகளைச் சருக்கரைப் பொருள்கள் என்றும் சொல்லலாம். புரோடீன் களின் இரசாயனத்தைப்பற்றி நமக்குத் தெரிந்திருப்பதைவிடக் கார்போஹைட்ரேட்டுக்களின் இரசாயனத்தைப்பற்றிச் சற்று அதி கம் தெரியும். இவை எல்லாம் கார்பன், ஹைட்ரஜன், ஆக்ஸிஜென் ஆகிய மூன்று மூலங்களின் சேர்க்கையினால் உண்டாகியவை. இவற் றில் காணும் ஹைட்ரஜெனும் ஆக்ஸிஜெனும் நீரில் எந்த அளவில் சேர்ந்து காணப்படுகின்றனவோ அதே அளவில்தான் இதிலும் காணப்படுகின்றன. இயற்கையிலே, கார்போஹைட்ரேட்டுக்கள் பல வடிவங்களுடன் காணப்படுகின்றன. குளூகோஸ் போன்ற சாமானிய சருக்கரைகளும் அவைதாம். கருப்பஞ் சருக்கரை போன்ற விசே ஷச் சருக்கரைகளும் அவைதாம். இவற்றையெல்லாம் விட மிகவும் சிக்கலான வடிவமுள்ள சருக்கரை ஒன்று இருக்கிறது. அதற்கு ஸ்டார்ச்சு என்று பெயர். அரிசி, கோதுமை முதலிய உணவுக்கா கின்ற தானியங்கள் பெரும்பான்மையிலும் அது சாதாரணமாகக் காணப்படுகிறது. கருப்பஞ்சருக்கரை குளூகோஸ் முதலிய சருக் கரைகளோ வென்றால் பெரும்பாலும் பழங்களிலேயே காணப் படுகின்றன. பழங்களின் சாற்றில்தான் சருக்கரை இருக்கிறது. கனியாது புளிக்கும் பழத்தைக் காட்டிலும் கனிந்து தித்திக்கும் பழத்திலே யுள்ள ஸ்டார்ச்சுத்தான் அதிக ஜீவசக்தி வாய்ந்ததாகக் காணப்படுகிறது. அதன் தித்திப்பே இதற்குப் போதிய அத் தாட்சியாகும்.

நமது உடலினுள் செல்கின்ற கார்போஹைட்ரேட்டுக்கள் எல் லாம் முதன் முதலில் குளூகோஸ் ஆக உடைக்கப்படுகின்றன. பின்புதான் உடலிலே ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. கார்போ ஹைட்ரேட்டுக்கள் சாமானியமான சருக்கரைகளாக முதலில் உடைக்கப்படுகின்றன. பிறகு அவை ஆக்ஸிஜெனோடு சேர்ந்து எரிகின்றன. அப்பொழுது அச்சேர்க்கையால் கார்பன்-டை-ஆக் ஸைட் என்னும் கரியமில வாயு உண்டாகின்றது. இத்தொழில் நடந் தேறும்பொழுது ஏராளமான சக்தி பிறக்கிறது. உடம்பினுள்ளே சருக்கரை எரிவதால்தான் உடலுக்கு வேண்டிய சக்தி கிடைக்கின் றது. சிறுவர் சிறுமியர் எப்பொழுதும் ஓடியாடிச் சுறுசுறுப்பாக இருந்து வருகிறார்களென்பது நாம் எல்லாரும் அறிந்த விஷயம். அவர்களுக்குச் சருக்கரை என்றாலும் தித்திப்பான பொருள் எது என்றாலும் வெகுப் பிரீதி. அவர்கள் ஓயாது சளைக்காது விளையாடு வதற்கு வேண்டிய மிகுதியான சக்தியைத் தருவதற்கு, அவர்களு டைய உடலுக்குக் கார்போஹைட்ரேட்டுக்கள் மிகுதியான அள

வில் வேண்டியிருக்கிறது. சாதாரணமாய் எந்தக் குழந்தையைப் பார்த்தாலும், தித்திப்புப் பக்ஷணம் என்றால் ஆவலுடன் உண்ண ஓடிவரும். இஃது ஆரோக்கிய நிலையைக் குறிக்கின்ற அறிகுறியே யன்றி, இதில் சிறிதும் விபரீதம் கிடையாது.

ஆனால் இதிலிருந்து அவசரமாகச் சிற்சில முடிவுகளை நாம் கொள்ளக்கூடாது. 'நாம் மிகவும் மும்மரமாக ஒரு வேலையைச் செய்யவேண்டியிருந்தால் அதற்காக ஒரு பவுண்டு சருக்கரையை, ஒரு வாக்காகத் தின்றுவிட்டால் வேலைசெய்ய முடியுமா?' என்று கேட்கக்கூடாது. அது முடியவே முடியாது. ஏனென்றால் உடலானது ஓர் அளவு வரையில் மட்டிலுந்தான் சருக்கரையை ஏற்றுக் கொள்ளும். அந்த அளவுக்கு மிஞ்சியதாக உள்ள சருக்கரையையெல்லாம் அஃது ஏற்றுக்கொள்ளாது வெளியே எறிந்துவிடும். ஒருவன் ஒரு பவுண்டு சருக்கரையை ஓரே யடியாக விழுங்கிவிடுகிறான் என்று வைத்துக் கொள்ளுவோம். அப்பொழுது அவனுடைய உடலானது அதற்கு வேண்டிய அளவுதான் சருக்கரையை எடுத்துக் கொள்ளுகிறது. மிகுந்துள்ள சருக்கரையானது இரத்தத்தின் வழியாக வாரிக்கொண்டு போகப்படுகிறது. கடைசியாகச் சிறுநீரின் வழி உடலை விட்டு வெளியே கொட்டப்படுகிறது. அப்பொழுது சிறுநீரில் சருக்கரை காணப்படுகிறது. இதற்குத் தாற்காலிக க்ளைகோஸூரியா அல்லது தாற்காலிக டையபீடிஸ் என்று பெயர். நாள் செல்லச் செல்ல உடலானது சருக்கரையை எரிக்கவல்ல திறமையை இழந்துவிடுகிறது; அல்லது சருக்கரை எரிவது உடலில் பூர்த்தியாக நடைபெறுவதில்லை. இதனால் டாக்ஸிக் ஆசிட் என்று சொல்லப்படுகிற சிற்சில விஷங்கள் உடலிலேயே விளைந்து உடலை நஞ்சுறச் செய்கின்றன. உடலானது நாளுக்குநாள் மேன்மேலும் நஞ்சுறுகின்றது. கடைசியாக இதுகாரணமாக மரணம் சம்பவிக்கின்றது. சருக்கரை உடலினுள்ளே சரியாக எரிந்துவராது போனால் நஞ்சு சம்பந்தமான இத்தகைய அவஸ்தைகளெல்லாம் படிப்படியாக உண்டாகி வருமென்பது உறுதி.

## கொழுப்புக்கள்

புரோடீன்கள் என்றால் என்ன, கார்போ ஹைட்ரேட்டுக்கள் என்றால் என்ன என்பதைப் பொதுப்படக் கூறியாய்விட்டது. அவை இரண்டும் உடலில் இருக்கிற ஒவ்வொரு செல்லிலும் காணப்படுகின்றன. ஆனால் கொழுப்புக்கள் அவ்வாறானவை அல்ல. கொழுப்புக்களைச் சிற்சில தனியான செல்களில் மட்டுந்தான் காணலாம். கொழுப்பு அமிலங்கள் என்று சொல்லப்படும் சிற்சில அமிலங்களின் கிளிசேரால் எஸ்டேர்கள் தாம்

கொழுப்புக்கள் என்று நாம் கூறிவரும் பொருள்கள். அவற்றோடு சிற்சில ஜீவ வஸ்துக்களும் சம்பந்தப்பட்டிருக்கின்றன. உடலானது கொழுப்பை எடுத்துக்கொண்டு, கொழுப்பு மாலிகூல் ஒவ்வொன்றையும் இருவகையான கிளிசெரால்களாகப் பிரித்துவிடுகிறது. நாம் கொடுக்கின்ற உணவுப் பொருள்களை உடலானது அப்படி யப்படியே ஏற்றுக் கொள்வதென்பதே கிடையாது. நாம் கொடுக்கின்ற உணவுப் பொருள்களிலுள்ள பதார்த்தங்களை வைத்துக் கொண்டு தனக்கு வேண்டிய வஸ்துக்களை எல்லாம் கூட்டிக் கொள்வதுதான் உடல் பின்பற்றி வரும் முறை. தாவர வர்க்கத்திலிருந்துதான் அதிகமாகக் கொழுப்புக் கிடைக்கிறது. ஒலிவ எண்ணெய் (ஆலிவ் ஆயில்), பலவகைக் கொட்டைகள், தேங்காய் ஆகிய இவற்றில் மிகுதியாகக் கொழுப்பு இருக்கிறது. வெண்ணெயிலும் கொழுப்பு இருக்கிறது. வெண்ணெய் மிகவும் நல்ல கொழுப்பு. எளிதில் ஜீரணமாகக் கூடியது. எளிதில் உடலும் அதை ஏற்றுக் கொள்ளும். வைடமின் கொள்கையின் வெற்றியினாலேயே பிரசித்தி பெற்றிருக்கும் காட் லிவர் ஆயில் என்னும் எண்ணெயும் கொழுப்பு அதிகம் உள்ளது. இக்கொழுப்புக்களெல்லாம் உடலில் எளிதில் கலந்து விடுகின்றன. குச்சிபோல மெலிந்திருக்கும் மனிதனது உடலிலும் கூடக் கொழுப்பு இல்லாதிருக்காது. நாம் எதிர்பாராத அநேக இடங்களில் கொழுப்பு இருக்கிறது. எலும்புகளுக்கும் தோலுக்கும் இடையில் கொழுப்பு இருக்கிறது. கண்களின் விழிகள் கொழுப்பணையின் மீதிருக்கின்றன. நெஞ்சு கொழுப்பில் பொதிந்திருக்கிறது. இடுப்பெலும்பின் முன்புறம் கொழுப்புப் பட்டை ஒன்றிருக்கிறது. உடல் தடித்த ஒருவன் ஓரளவு கொழுப்பைச் சம்பாதித்தும் அதோடு நிறுத்தி விடுவதில்லை. வேண்டிய அளவுக்குமேல் மேன்மேலும் கொழுப்பை அவன் சேகரித்துக் கொண்டே இருக்கிறான். 'ஏன் சிலர் உடல் தடித்துப் போகிறார்கள், மற்றவர் அவ்வாறு ஏன் பருத்துப் போவதில்லை?' என்று நீங்கள் கேட்கலாம். உடலிலே பிட்யூடரி கிளாண்டு என்ற ஒரு கிரந்தி இருக்கிறது. அது ஹார்மோன் என்னும் ஒரு வகையான சத்தை உண்டாக்குகிறது. அந்த ஹார்மோனின் உதவியால்தான் உடல் பருக்கின்றது. சிற்சிலர் எவ்வளவோ சிரத்தையுடன் பரிபாலிக்கப் பட்டுப் போஷிக்கப்பட்டு வந்தபோதிலும், எத்தகைய சிறந்த ஆகாராதிகளை உண்டு வந்தபோதிலும் இளைத்துக் குச்சிபோலவே இருக்கிறார்கள். சிற்சிலர் அரை வயிற்றுக்கே சாப்பிட்டு வந்த போதிலும் காலம் கெட்டுப்போனதையும் கவனியாதவர்கள் போல் ஏராளமாய்க் கொழுப்பெடுத்துப் பொதிபோ லாகிவிடுகிறார்கள்.

இவை யெல்லாம் நாம் சாதாரணமாய்க் காணும் விஷயங்கள் தாம். கொழுப்பைச் சேகரிக்க உதவும் பொருளொன்று சிலர் உடலில் இல்லாமலிருப்பதும் சிலர் உடலில் அதிகமாக இருப்பதும் தான் இதற்குக் காரணம். தடியர் உடலில் அஃது இருக்கிறது. பொடியர் உடலில் அஃது இல்லை. ஆகவே அளவுகடந்த கொழுப்பை ஒரு விபரீதக் காரியமாகவும் உடல்வாசியானது பலஹீனத் தன்மை பொருந்தியது என்பதற்கு அறிகுறியாகவுந்தான் கருத வேண்டுமே யன்றி வேறல்ல.

(தொடரும்)

## சாஸ்திர சம்பந்தமான தமிழ்ச் சொற்கள்

*Amino-Acid*—அமீனோ அமிலம்.

*Carbohydrate*—கார்போஹைட்ரேட், சருக்கரை முதலியனவாக மாறும் பொருள்.

*Carbon*—கார்பன், கரிப்பொருள், கடினப் பொருளாகிய மூலம்.

*Cod Liver Oil*—காட்லிவர் ஆயில், மீனெண்ணெய்.

*Diabetes*—டையபீடிஸ், சிறுநீரில் சருக்கரை காணுவதை அறிகுறியா யுள்ள ஒருநோய்.

*Emil Fischer*—எமில் பிஷர், ஒரு பெயர் பெற்ற ஜீவ ரசாயனி.

*Ester*—எஸ்டர்.

*Formula*—வாய்பாடு, சங்கேத அடையாளம்.

*Glycerol*—கிளிசொரால்.

*Glycosuria*—கிளைகோசூரியா, சிறுநீரில் சருக்கரை காணுவதை அறி குறியாயுள்ள ஒரு நோய்.

*Haemoglobin*—ஹெமோகிளாபின், நமது இரத்தத்திலுள்ள ஒரு வகைப் புரோடீன்.

*Hormone*—ஹார்மோன், உடலிலே குழலற்ற கிரந்திகள் இயற்றி மீண்டும் உதிரத்திலே கொண்டுசேர்க்கும் விந்தையான குணங்களையுடைய ஒருவகை இரசாயனப் பொருள்.

*Hydrogen*—ஹைட்ரஜென், ஒரு காற்றுப்பொருளாகிய மூலம்.

*Inorganic*—இனர்கானிக், அஜீவிய, ஜீவசம்பந்தமற்ற.

*Molecule*—மாலிகூல்.

*Nitrogen*—நைட்ரஜென், ஒருவகைக் காற்றுப்பொருளாகிய மூலம்.

*Olive oil*—ஒலிவ எண்ணெய்.

*Organic*—ஜீவிய, ஜீவசம்பந்தமுள்ள.

*Organism*—ஜீவி, சிற்றுயிர்.

*Oxygen*—ஆக்ஸிஜென், பிராணவாயு, ஒருவகைக் காற்றுப்பொருளாகிய மூலம்.

*Pituitary Gland*—பிட்யூடரி கிளாண்டு, உடலில் அருகில் காணப் படும் ஒரு கிரந்தி ; உடல் வளர்ச்சிக்கு இது சரிவர வேலைசெய்து வருவது இன்றியமையாதது.

*Pound*—பவுண்டு, ஓர் எடை.

*Protein*—புரோடீன்.

*Salt*—உப்பு.

*Solvent*—கரைப்பான்.

*Starch*—ஸ்டார்ச்சு.

*Sugar*—சருக்கரை.

*Tissue*—திசு, உடலின் பல உறுப்புக்களிலும் காணப்பட்டு அவற்றை அமைக்கின்ற வெவ்வேறு வகையாயுள்ள நுண்ணிய நார்போன்ற வஸ்து.

*Toxin*—டாக்ஸின், உடலிலுண்டாகும் ஒருவகை விஷப்பொருள்.

*Urine*—சிறுநீர்.

---

*Dependence*—சார்பு.

*Definition*—வரைவு.

*Deduction*—இறக்கம், எடுப்பு.

*Direction*—போக்கு.

*Distance*—தொலை.

*Duplicate*—இருமடி.

*Elevation*—நிமிர்வடிவு.

*Enunciation*—விவரிப்பு.

*Enunciation particular*—சிறப்பு விவரிப்பு.

*Exception*—புறநடை, இகாது பட்டது.

*Except*—இகக்க.

*Extremity*—நுனி.

*Face*—பட்டை.

*Focus*—குவியம், குவிமையம்.

*Hollow*—பொல்.

*Hypothesis*—உன்னிப்பு, உன்னம்.

# ஆர்க்கிமிடீஸ்

## வில்லி

உலகியற் சாஸ்திரங்களில் மேனாட்டார் மிக்க முன்னேற்ற மடைந்துள்ளனர். பௌதிகம் (*Physics*), வான சாஸ்திரம் (*Astronomy*), இரசாயனம் (*Chemistry*), கணிதம் (*Mathematics*) முதலிய பல சாஸ்திரங்களில் அதிக ஆராய்ச்சி செய்து கணக்கற்ற புத்தகங்கள் எழுதியிருக்கின்றனர். இவ்வாராய்ச்சின் பயனாக உலக வாழ்க்கைக்கு வேண்டிய பல சௌகரியங்கள் எளியவாயின. ஓரிடம் நடப்பவைகளை ஆயிரக்கணக்கான மைல்களுக் கப்பாலுள்ள பல விடங்களில் அப்பொழுதே அறிவதும், வெகு துரிதமான போக்கு வரவு சாதனங்களை அமைப்பதும், நாடகங்களைப் படம் பிடித்துத் திரும்பக் காட்டுவதாகிய படக்காட்சிகளை (*Cinema*) ஏற்படுத்துவதும், குரலையும் கானத்தையும் பதிப்பித்துக் கொள்வதும், வேறு பலவும் சாஸ்திர ஆராய்ச்சியின் பயனாக எழுந்தன. இச்சாஸ்திரங்களைத் தற்கால நிலைக்குக் கொணர்ந்தவர் எண்ணிறந்தோர். ஆயினும் யாவரும் ஒரே தன்மையான கீர்த்திக்குரியவராகார். சிலர்தாம் எக்காலத்தும் அழியாப் புகழுக்குரியவர். இவர்களுடைய வாழ்க்கைச் சரிதைகளையும், குணாதிசயங்களையும், சாஸ்திரங்களை எப்படி வளர்த்தார்கள் என்பதையும் நாம் அறியவேண்டும்.

கிருஸ்து பிறப்பதற்கு முன்னிருந்த சாஸ்திர வல்லுநர்களில் ஆர்க்கிமிடீஸ் என்பவரே தலை சிறந்து விளங்குகிறார். அவர் காலம் சுமார் கி. மு. 287 ஆகும். அவர் இத்தாலி நாட்டிற்குத் தெற்கிலுள்ள சிசிலித்தீவின் தலை நகராகிய சைரக்கியூசில் பிறந்து வளர்ந்தவர்; மிக்க செல்வம் படைத்திருந்ததுடன், தீவின் அரசனுக்கு நண்பராயு மிருந்தார். பல செல்வர்களைப் போல உலக இன்பங்களை நுகர்ந்து விளையாட்டாகக் காலத்தை வீணாக்க அவர் விரும்பவில்லை. உலகில் நடப்பனவெல்லாம் சில விதிகளுக் குட்பட்டனவென்றும், அவ்விதிகளை யறிந்தால் உலகையே வெல்லக்கூடு மென்றும் அவர் நம்பினார். அவர் இயற்கைப் பொருளாராய்ச்சியிலும் கணிதத்திலும் மிக்க விருப்பமுள்ளவர்.

வியாபார சாதனத்தின் பொருட்டு அரசன் பல பெரிய கப்பல்களைக் கட்டுவித்தான். அக்காலத்தில் ஆர்க்கிமிடீஸ் அடிக்கடித்

துறைமுகம் போவார். மாலுமிகளும் வேலையாட்களும் வன்மையையுடைய கோல்களால் பாரமான பொருள்களைத் தூக்குவதையும் புரட்டுவதையும் கவனிப்பார்; அதனால் கோல்களின் நீளத்திற்கு ஏற்ப அதிகப் பாரத்தை புரட்டக்கூடுமென்பதைக் கண்டறிந்தார். தம் நண்பனாகிய மன்னனிடம் சென்று தாம் கண்டதைக் கூறிப் பின், "தக்க நீளமும் உறுதியும் பொருந்திய ஒரு கோலும், பூமியின் ஒட்டின்றி நிற்பதற்கு ஓர் இடமும் கொடுத்தால் நான் இப்பூமியையே அசைத்து விடுவேன்" என்று கூறினார். அதிகக் கனத்தையும், உறுதியும் நீளமும் உள்ள கோலால் அசைத்துவிடலாமென்பதே அவர் பேச்சின் கருத்து.

பொன் முடி ஒன்று செய்து ஒரு கோவிலுக்குக் கொடுக்க மன்னன் விரும்பினான்; தட்டானை அழைத்து அவனிடம் வேண்டிய பொன் கொடுத்தான். சில நாள் கழித்து முடி வந்து சேர்ந்தது. நிறை சரியாயிருந்தது; அது பார்வைக்குத் தனிப் பொன் போலவே தோற்றியது. ஆயினும் தட்டான் மோசஞ்செய்து விட்டதாகவும் சிறிது வெள்ளியைக் கலந்து அதே நிறைப்பொன்னை எடுத்து விட்டதாகவும் அரசன் கேள்வியுற்றான். ருசுவின்றித் தட்டானைத் தண்டிக்க மன்னனுக்கு மனமில்லை; நண்பர் ஆர்க்கிமிடீசை அழைத்துக் கிரீடத்தைக் கொடுத்தான்; வெள்ளி கலந்துள்ளதா அல்லது தனிப்பொன்னாவென்பதை அறிந்து சொல்லுமாறு கேட்டுக் கொண்டான்.

ஒரு கேள்வி பிறந்து விட்டால், அதற்கு ஏற்ற பதிலறியும் வரையில் ஆர்க்கிமிடீஸ் பசி நோக்கார்; கண் துஞ்சார்; அவர் நாட்டம் வேறொன்றிலும் செல்லாது. அரசன் விடுத்த கேள்வி பலநாள் அவரைத் திகைக்கச் செய்தது. கிரீடத்தை உருக்கி ஒரே அகலமும் நீளமும் உயரமுமுள்ள வடிவமாக (*Cube*) அடித்து, அதே அளவுள்ள தனிப் பொன்கட்டி ஒன்றையும் அடித்து இரண்டையும் நிறுப்போமென நினைத்தார். கிரீடம் தனிப்பொன்னாயிருப்பின் இரண்டும் ஒரே நிறையோடிருக்க வேண்டுமென்பது வெளிப்படை. பொன்முடி அழகாயிருந்தது; உயர்ந்த வேலைப்பாடுடன் கூடி விளங்கியது. அதனை அழிக்க அவருக்கு மனமில்லை. உருக்காமல் அதன் பரிமாணத்தை அறிய விரும்பினார். எப்படி அறிவது என்பதே கேள்வி; பல நாட்கள் அதே நினைவாக இருந்தார்.

தொட்டியில் நீர் நிரப்பி அதில் அமிழ்ந்து குளிப்பது அக்காலத்தில் அந்நாட்டில் வழக்கம். ஆர்க்கிமிடீஸ் அவ்வாறே ஒரு நாள் நீராடத் தொடங்கினார். தொட்டி விளிம்பு வரையில் நீர்

இருந்தது. அவர் இறங்கி அமிழ்ந்தவுடன் நீர் வழிந்தோடியது. எழுந்து தொட்டியில் நீர் மட்டத்தைக் கவனித்தார்; விளிம்பிற்கு மிகவும் தாழ்ந்திருந்தது. தம்மை மிகவும் திகைக்கச் செய்த கேள்விக்கு விடை அதிலுள்ளதென்பது திடீரென அவர் புத்தியில் பட்டது. தம் பரிமாணத்தையுடைய நீரே வெளியில் வழிந்தோடிய தென்பதைக் கண்டார். திகைக்கச் செய்த கேள்விக்கு விடை யறிந்த களிப்பால் உடம்பைத் துடைத்து ஆடையணியவும் மறந்து, "கண்டு கொண்டேன்! கண்டு கொண்டேன்!" எனக் கூவிக் கொண்டே வீட்டிற்கு ஓடினர்.

ஒரு பெரிய பாத்திரத்தை எடுத்து விளிம்புவரை நீர் ஊற்றினர். முடியை நூலில் கட்டி மெதுவாக நீரில் இறக்கினர். நீர் வெளியே வழிந்தது. முடி முழுதும் அமிழ்ந்தவுடன் அதை வெளியே எடுத்தார். பாத்திரத்தில் நீர் மட்டம் விளிம்பிற்கு வெகு கீழே இருந்தது. அளந்து நீர் ஊற்றி மட்டத்தை விளிம்பிற்குக் கொணர்ந்தார். இப்பொழுது ஊற்றப்பட்ட நீரின் பரிமாணமே முடியின் பரிமாணமாகும்.

கிரீடத்தின் நிறையுள்ள ஒரு பொன் கட்டியும் ஒரு வெள்ளிக் கட்டியும் எடுத்தார். பொன் முடி, பொன் கட்டி, வெள்ளிக் கட்டி ஆகிய ஒரே நிறையுள்ள மூன்று பொருள்கள் இருந்தன. கிரீடத்தின் பரிமாணம் முன்பே அறியப்பட்டது. அதே போல் பொன் வெள்ளிக் கட்டிகளையும் நீரில் அமிழ்த்தினர். பொன் கட்டியைப் போல் சுமார் இரு மடங்கு நீரை அவ்வெள்ளிக் கட்டி வெளிப்படுத்தியது. முடியால் வெளிப்படுத்திய நீர் பொன் கட்டியால் வெளிப்படுத்தியதைவிட அதிகமாயும் வெள்ளியால் வெளிப்படுத்தியதை விடக் குறைவாயு மிருந்தது. கிரீடம் தனிப் பொன்னாயிருப்பின், பொன் கட்டிக்கும் அதற்கும் யாதொரு பேதமும் இருக்கலாகாது; ஏனெனின் இரண்டும் ஒரே நிறையுள்ளவைகள். அப்படி இல்லாமையால் கிரீடத்தில் கலப்பு இருக்கிறதென்பது வெளியாயிற்று.

அரசன் வார்த்தையைக் கொண்டு, கலக்கப்பட்டது வெள்ளி தானென்று வைத்துக் கொண்டார். தெரிந்த வெவ்வேறு அளவு பொன்னும் வெள்ளியும் கலந்து சில கட்டிகள் அடித்தார். அவைகளெல்லாம் கிரீடத்தின் நிறையுள்ளவைகள். அவைகளில் ஒன்று கிரீடத்தைப் போல அதே பரிமாணமுள்ள நீரை வெளிப்படுத்தியது. அதில் கலந்த வெள்ளியின் நிறை முன்பே அறியப்பட்டதால், முடியிலுள்ள வெள்ளியின் நிறையும் அஃதே என்று அறிந்தார்;

அரசனிடம் சென்று தம்முடைய ஆராய்ச்சிகளைத் தெரிவித்தார். ஆர்க்கிமிடீஸின் நுண்ணறிவை மெச்சின மன்னன் அவரைப் புகழ்ந்து, தட்டானைத் தண்டித்தான்.

பொன் முடி விஷயம் வேறு ஆராய்ச்சிகளுக்கு வழி காட்டியது. நாம் நீரில் மூழ்கியிருக்கும் பொழுது அமிழ்ந்து கிடக்கும் பெரிய கற்களை எளிதாகப் புரட்டி விடுகிறோம். அக் கற்களே வெளியிற் கிடந்தால் புரட்டுவது மிகவும் கடினமாயிருக்கிறது. திடப்பொருள்கள் நீரில் நிறை குறைந்து காணப்படுகின்றன. ஆர்க்கிமிடீஸ் ஒரு திடப்பொருளை நிறுத்தார். பின் அது நீரில் அமிழ்ந்திருக்கும்பொழுதும் நிறுத்தார். (இரண்டிற்கும் உள்ள வித்தியாதத்திற்கு ''நீரில் குறைந்த நிறை'' எனக் கூறுவோம்). பின் விளிம்புவரை நீருள்ள ஒரு பாத்திரத்திலிருந்து அப்பொருள் வெளியேற்றும் நீரையும் நிறுத்தார். ''நீரில் குறைந்த நிறையும்'' வெளியேற்றப்பட்ட நீரின் நிறையும் ஒன்றாயிருந்தன. அநேகம் பொருள்களால் இச்சோதனையைச் செய்தார்; ஒவ்வொன்றிலும், இதே முடிவு கிடைத்தது. நீரே யன்றி மற்ற எந்தத் திரவத்திலும் இதே முடிவு காணப்பட்டது.

இவ்வரிய உண்மையைப் பின்வருமாறு சுருக்கி உரைக்கலாம்:— ''ஒரு பொருளைத் திரவத்தில் நிறுத்தால், திரவத்தில் குறையும் நிறை, பொருளால் வெளியேற்றப்பட்ட திரவத்தின் நிறைக்குச் சமம்.'' மரம், பட்டை, முதலிய மிதக்கும் பொருள்களை எடுத்துக் கொண்டால், பொருளின் நிறை முழுதும் அது வெளியேற்றும் திரவத்தின் நிறைக்குச் சமம். இவ்வுண்மையும் மேற் சொன்ன வாக்கியத்தில் பொதிந்து கிடக்கிறது. ஆர்க்கிமிடீஸ் இவ்வரிய ஆராய்ச்சிகளைச் செய்து சாஸ்திர வளர்ச்சிக்குப் பேருதவி புரிந்தார்.

ரோமானியர்கள் சைரக்யூஸ் நகரை முற்றுகையிட்டுப் போர் செய்தனர். தம் யுக்தியால் சில யந்திரங்களை அமைத்துத் தம் அரசன் படைகளுக்குக் கொடுத்து ஆர்க்கிமிடீஸ் உதவி செய்தார். ஆயினும் முடிவில் ரோமானியர்களே வென்றனர். ரோமானிய தளகர்த்தனை மார்சல்லஸ் என்பவன், அந்த அறிஞரின் நுண்ணறிவை மெச்சி அவரை ஒருவரும் கொல்லக் கூடாதென்று தன் படை வீரர்களுக்கு உத்தர விட்டான். படை, நகரில் நுழைந்து கொள்ளையிடும்பொழுது, ஒரு வீரன் ஆர்க்கிமிடீசைக் கண்டான். அவர் மணலில் கோடுகள் கீறி ஏதோ யோசித்துக்கொண்டிருந்தார். யாரென அறியாமல் அவர் பெயரை வீரன் கேட்டான். தம் கணக்கை முடிக்கும்வரை இடையூறு செய்ய வேண்டாமென அவர் கேட்டுக்கொண்டார். கோபத்தால் வீரன் அவரைக் கொன்று

விட்டான். இதைக் கேட்ட மார்சல்லஸ் மிகவும் வருந்தி அவருடைய உறவினருக்குப் பொருளுதவி செய்து சிறிது மனம் ஆறினான்.

கணிதத்தில் அவர் ஓர் உண்மையைக் கண்டார். அடி வட்டமாயும், அவ்வட்டத்தின் விட்டத்தையே (*Diameter*) உயரமாயுமுடைய ஒரு பாத்திரத்தில் அது கொள்ளக் கூடிய மிகப் பெரிய கோளத்தை யிட்டால், பாத்திரத்தில் சரியாக மூன்றில் இரண்டு பங்கு இடத்தை அக்கோளம் அடைக்கும் என்ற உண்மையை ஆர்க்கிமிடீஸ் ரூபித்தார். இதற்காகவே, ஞாபகச் சின்னம் போல் அவர் சமாதிமேல் மேற்சொல்லியது போன்ற ஒரு பாத்திரமும் அதனுள் ஒரு கோளமும் வைத்தார்கள். இயற்கைப் பொருட் சாஸ்திரத்திற்கு அடி கோலியது ஆர்க்கிமிடீஸ். பொருளாராய்ச்சியில் இருந்த அவாவே அவருக்கு அழியாப்புகழ் கொடுத்தது. இந்தச் சாஸ்திரம் உலகில் உள்ளவரை ஆர்க்கிமிடீஸின் பெயர் நிலை நிற்குமென்பதற்கு ஐயமில்லை.

### சாஸ்திர சம்பந்தமான தமிழ்ச் சொற்கள்

*Independence*—சாராமை, சார்பின்மை, தனிமை.
*Independent*—சாராத, சார்பில்லாத, தனியான.
*Inference*—கோள், அயிர்ப்பு.
*Indefinite*—அளவு தெரியாத, அளவிடாத, வரையில், வரம்பில்.
*Inequality*—ஒவ்வாமை, ஒப்பாமை, சரியின்மை, நிகராமை, நேராமை, போலாமை.
*Infinity*—கந்தழி.
*Inversely*—மேல் கீழாக, கீழ் மேலாக.
*Lever*—நெம்பு.
*Maximum*—பென்னம் பெருமை.
*Minimum*—சின்னஞ் சிறுமை.
*Oblique*—சாய்.
*Observation*—குறிப்பு.
*Opposite*—எதிர்.
*Origin*—தோற்றுவாய், பிறப்பிடம்.
*Parallel*—ஒரு போக்கு.
*Proportion*—படிசு.
*Pyramid*—பட்டைக்கூம்பு.
*Plane*—தட்டை, தட்டு.
*Pivot*—முளை, மையம்.
*Prove*—தெரிக்க.
*Proof*—தெரிப்பு.

# பூமிக்கும் சந்திரனுக்கும் உள்ள தூரம்

பி. ஆர். சிதம்பரையர்

(133-ம் பக்கம் தொடர்ச்சி)

ஓர் ஆற்றின் அக்கரையில் நிற்கும் மரத்தின் தூரத்தை, ஆற்றைக் கடந்து செல்லாமலே இக்கரையினின்று சர்வேயர்கள் கண்டு பிடிப்பது போலவே சந்திரனுடைய தூரத்தையும் கணக்கிட்டறியலாமென்று நாம் முன்பே கூறியிருக்கிறோமல்லவா? அது எப்படி என்று ஆராய்வதற்கு முன், ஆற்றின் அக்கரையில் நிற்கும் மரத்தின் உதாரணத்தையே இன்னும் ஆராய்வோம்.

இதோ பக்கத்தில் காட்டியுள்ள படத்தைக் கவனிப்போம். $C$ என்கிற மரத்திற்குப் பின்னால் அத்திசையிலேயே இன்னும் சில மரங்கள் $C^1$, $C^2$, $C^3$, $C^4$, $C^5$ என்று ஒன்றன்பின் ஒன்றாய் நிற்பதாய் வைத்துக் கொள்வோம். அவையெல்லாம் $D$ என்ற இடத்திலிருந்து பார்ப்பின் $D\ C$ என்ற ஒரே திசையிலேயே நிற்பது தெரியவரும். ஆனால் $E$ என்ற இடத்திலிருந்து அவற்றை நோக்கினால் $E\ C^1$, $E\ C^2$, $E\ C^3$ $E\ C^4$, $E\ C^5$ என்ற வெவ்வேறு திசைகளில் தோன்றுகின்றன. அதாவது $D$ என்ற இடத்திலிருந்து எந்த மரத்தைப் பார்த்தாலும் $E\ D\ C$ என்ற கோணத்தின் $D\ C$ என்ற புஜத்திலேயே அது தோன்றும். அதனால் $C$ இலிருந்து நோக்கினால் $C\ E\ D$ என்ற கோணம் $C^1\ E\ D$, $C^2\ E\ D$, $C^3\ E\ D$, $C^4\ E\ D$, $C^5\ E\ D$ என்று விரிந்து கொண்டே போகிறது என்



பதைக் காண்கிறோம். அதிக தூரத்திலுள்ள மரத்தை $A$இலிருந்தும் $D$இலிருந்தும் நோக்கினால் அவை இரண்டும் ஒரு போக்குக் கோடுகளாகவே தோன்றும். அதாவது அவ்விரு கோடுகளும் ஒன்றையொன்று சந்திக்காமலோ அல்லது வெகு தூரத்தில் சந்தித்தோ இருக்கும். ஆகையினால் திரிகோணமிதி இவ்விடத்தில் பயன்படாது. ஆனால் மரத்தின் தூரத்திற்குத் தக்கவாறு நாம் $D\ E$ என்ற கோட்டையும் நீளமாய் எடுத்துக் கொண்டால் மேற்கூறிய இரு கோடுகளும் சமீபத்தில் சந்திக்கும். அப்புறம் திரிகோண மிதியை உபயோகித்து மரத்தின் தூரத்தை அறிந்து விடலாம். உதாரணமாக $C^5$ என்ற மரத்தை எடுத்துக் கொண்டால் $D\ E$ என்ற கோட்டை $E^5$ வரை நீட்டி நமக்குக் கிடைக்கும் $D\ C^5\ E^5$ என்ற திரிகோணத்தின் $D\ E^5$ என்ற தூரத்தையும் $C^5\ D\ E^5$, $C^5\ E^5\ D$ என்ற கோணங்களையும் அளந்து கொண்டு திரிகோண மிதியின் உதவியால் $D\ C^5$ என்ற $D$யிலிருந்து $C^5$க்கு உள்ள தூரத்தைக் கணக்கிட்டறியலாம். இதில் நமக்கு முக்கிய சாதனமாய் இருப்பது $D\ E^5$ என்ற ரேகையே. இதைத் தான் சர்வேயர்கள் ஆதார ரேகை (*Base-line*) என்று கூறுவார்கள்.

இனி, சந்திரனுடைய தூரத்தை அறிவதற்கு எவ்வளவு நீளமுள்ள ஆதார ரேகை வேண்டும் என்று கவனிப்போம். சந்திரன் ஆகாயத்திலிருந்து அதன் இன்பமான கிரணங்களை வீசும் எந்த இரவிலாவது நாம் அதைப் பார்த்துக் கொண்டே எவ்வளவு தூரம் எவ்வளவு வேகமாய்ச் சென்றாலும் அது நம்மையே பின் பற்றி வருவதைக் காண்கிறோம். அதாவது நாம் சந்திரனை மயிலாப்பூரிலிருந்து பார்த்தாலும் சென்னப் பட்டணத்திலிருந்து நோக்கினாலும் ஒரே திசையிலேயே அது காணப்படுகிறது. ஆகையினால் நாம் அறிவது என்ன? சந்திரன் நமக்கு மிகவும் தூரத்திலிருக்கிறது என்பதே. அதன் தூரத்தைக் கண்டுபிடிப்பதற்கு நாம் எடுத்துக் கொள்ளும் ஆதாரரேகை மிகவும் நீளமாய் இருக்கவேண்டும். உதாரணமாக ஜெர்மனியில் பெர்லின்மாநகரிலுள்ள நக்ஷத்திர சாலையையும் தென் ஆப்பிரிக்காவில் நன்னம்பிக்கை முனையிலுள்ள நக்ஷத்திர சாலையையும் எடுத்துக் கொள்வோமாயின் இவ்விரண்டையும் சேர்க்கும் கோடானது நமக்குப் போதுமான நீளமுள்ள ஆதார ரேகையாய் இருக்குமென்று வானசாஸ்திரிகள் நிர்ணயித்திருக்கிறார்கள்.

பூமியில் உள்ள நகரங்களையும் மற்ற இடங்களையும் அக்ஷரேகை (*Latitude*) தேசாந்தர ரேகை (*Longitude*)களின் மூலம் குறிப்பிடலாமென்பதையும் ஆகாசத்தில் உச்சம் (*Zenith*) உச்சரேகை

(*Meridian*) என்பவற்றைப் பற்றியும் நாம் கலாசாலைகளில் வாசித்திருக்கிறோம். ஒரே தேசாந்தர ரேகையில் உள்ள இடங்களுக்கெல்லாம் உச்சரேகை ஒன்றே யென்பதும் நமக்குத் தெரியும். இப்போது நாம் எடுத்துக் கொண்ட இரு நக்ஷத்திர சாலைகளும் ஒரே தேசாந்தர ரேகையில் இருக்குமாயின் அவைகளின் உச்சரேகையும் ஒன்றே தான். ஆகவே சந்திர சூரியாதிகள் அவ்வுச்சரேகையை இரண்டு நக்ஷத்திர சாலைகளிலும் ஒரே நிமிஷத்தில் தான் தாண்டும்.

இனி இங்கே காட்டியுள்ள படத்தைப் பாருங்கள். *N B C S* என்பது நாம் வசிக்கும் பூமி. *A* என்பது பூமியின் கேந்திரம் அல்லது மத்தி. *B*, *C* என்பன ஒரே தேசாந்தர ரேகையிலுள்ள இரண்டு நக்ஷத்திர சாலைகள். அவற்றில் *B* என்பது வட கோளார்த்தத்திலும் *C* என்பது தென் கோளார்த்தத்திலும் இருப்பதாக எடுத்திருக்கிறோம். *Z* என்பது *B*இன் உச்சம், *Z'* என்பது *C*இன் உச்சம். *M* என்பது சந்திரன். *A B*, *A C* இவ்விரண்டும் பூமியின் அரைவிட்டங்கள் (*Radius*) ஆதலின் அவை யிரண்டும் சமமே. *B C* என்பது நாம் முன் கூறிய ஆதார ரேகை. *B C* அவற்றின் அக்ஷங்கள் (*Latitudes*) என்பதை நாம் அறிவோமாகையால் *C A B* என்ற கோணம் அவ்விரண்டு அக்ஷங்களின் தொகை (*Sum*) என்பதும் நமக்குத் தெரியும். *A B C* சமத்விபுஜத்திரி கோணம் (*Isosceles triangle*) ஆதலின் *A C B*, *A B C* என்ற இரு கோணங்கள் சமம். *A B C* என்ற திரிகோணத்தில் *C A B* என்ற கோணத்தின் பரிமாணம் நமக்கு முன்பே தெரியுமாதலால் *A C B*, *A B C* என்ற கோணங்களின் பரிமாணமும் நாம் அறிவோம்; அதாவது $\frac{180^\circ - CAB}{2}$. *B C* என்ற ஆதார ரேகையின் நீளமும் நாம் அறிவோம்.




சந்திரன் *B*, *C* என்ற இடங்களின் உச்சரேகையைத் தாண்டும்போது அவ்விடத்திலுள்ள வான சாஸ்திரிகள் தூரதரிசினி (*Telescope*) மூலமாய் அதை நோக்குகிறார்கள். *B* என்ற இடத்தி

லுள்ள வான சாஸ்திரி சந்திரன் $Z$ (உச்சம்)இலிருந்து எவ்வளவு தூரம் தெற்கு வசமாய் இருக்கிறதென்பதை $Z\ B\ M$ (*Zenith distance*) என்ற கோணமாய் அளந்து விடுகிறார். அது போலவே $C$ இலுள்ள வான சாஸ்திரியும் $Z'$ இலிருந்து சந்திரன் $M$ எவ்வளவு வடக்கு வசமாய் இருக்கிற தென்பதை $Z'\ C\ M$ என்ற கோணமாய் அளந்து விடுகிறார். முன்பே $A\ B\ C$ என்ற கோணத்தின் பரிமாணம் தெரியும். இப்போது $Z\ B\ M$ என்ற கோணத்தின் பரிமாணமும் நாம் அறிவோம். ஆகவே $C\ B\ M$ என்ற கோணத்தின் பரிமாணம் தெரிகிறது. இது போலவே $B\ C\ M$ என்ற கோணத்தின் பரிமாணத்தையும் அளந்து கொள்கிறோம்.

இனி $B\ C\ M$ என்ற திரிகோணத்தில் நாம் அறிவன $B\ C$ என்ற ஆதார ரேகையின் நீளமும் அதை ஒட்டியுள்ள $C\ B\ M$, $B\ C\ M$ என்ற இரு கோணங்களுமே. ஒரு திரிகோணத்தில் இம் மூன்றையும் அறிந்து கொண்டு சர்வேயர் ஆற்றின் அக்கரையிலுள்ள மரத்தின் தூரத்தைக் கண்டு பிடிக்கிறார் என்று நாம் முன்னமே கூறியிருக்கிறோம். அது போலவே வான சாஸ்திரிகளும் இவ்வாதார ரேகையையும் அதனை ஒட்டியுள்ள இரண்டு கோணங்களையும் அறிந்து கொண்டு ஆகாயத்தில் வெகு தூரத்திலுள்ள சந்திரன் $B$ அல்லது $C$ இலிருந்து எவ்வளவு தூரத்திலுள்ளது என்பதைக் கணக்கிட்டறிகிறார்கள். $A\ B\ M$ என்ற திரிகோணத்திலிருந்து இம்மாதிரியாகவே பூமியின் கேந்திரமாகிய $A$ இலிருந்து சந்திரன் எவ்வளவு தூரத்தில் இருக்கிறதென்பதையும் கணக்கிட்டறிகிறார்கள். இது தான் பூமிக்கும் சந்திரனுக்கு முள்ள தூரம்.

சந்திரன் பூமியைச் சுற்றிவரும் பாதை சரியான வட்டமல்ல; நீண்ட வட்டமே (*Ellipse*). ஆகையினால் சந்திரன் சில சமயங்களில் பூமிக்குச் சமீபத்திலும் வேறு சில சமயங்களில் தூரத்திலும் இருக்கிறது. சமீபத்திலிருக்கும்போது அதன் தூரம் 2,22,000 மைல்கள்; தூரத்திலிருக்கும் போது 2,53,000 மைல்கள். அதன் சராசரி தூரம் (*Mean distance*) 2,40,000 மைல்கள். நமது பூமியிலிருந்து சந்திரன் வரைக்கும் முப்பது பூகோளங்களை வரிசையாய் ஒன்றன் பக்கத்தில் ஒன்றாய் வைக்க இடம் இருக்கிறது.

# சரித்திரம்

## பாஹியன் யாத்திரை வரலாறு

ஜி. தாத்தாச்சாரி

மூன்றுமாதம் வரையில் தேவாமிருதத்தை உட்கொண்டதன் காரணமாகப் புத்தபகவானுடைய திருமேனி மனிதர்களிடம் இராத ஒரு திவ்ய வாசனையை வீசத் தொடங்கியது. அவர் கீழே இழிந்ததும் ஸ்நாநம் செய்தார். பிற்காலத்து ஜனங்கள் அவர் மஞ்சன மாடிய இவ்விடத்தில் ஒரு ஸ்நாந மண்டபத்தைக் கட்டினர். அஃது இன்னும் இருக்கிறது. பிக்ஷுணி உத்பலா முதன்முதலில் புத்த பகவானை வழிபாடு செய்த இடத்திலும் ஒரு ஸ்தூபம் எழுப்பப் பட்டுள்ளது. புத்தபகவான் இவ்வுலகத்திலிருந்த காலத்தில் தமது கேசங்களைக் களைந்து, நகங்களைக் கிள்ளிய விடத்திலும், முந்திய புத்தர்கள் மூவரும் சாக்ய முனியான புத்தரும் அமர்ந்திருந்த விடத்திலும், வியாயாமத்துக்காக நடந்த விடத்திலும், வேறு புத்தர்களுடைய சுவடுகளும் சின்னங்களும் உள்ளவிடங்களிலும் ஸ்தூபங்கள் எழுப்பப்பட்டிருக்கின்றன. இவைகள் இன்னும் உள்ளன.

புத்தபகவான் தேவலோகத்திலிருந்து இறங்கியபோது பிரம் மாவும் சக்ரனும் தேவகணங்களும் அவரைச் சூழ்ந்திருந்த விடத்திலும் ஒரு ஸ்தூபம் எழுப்பப்பட்டுள்ளது. இங்கு ஸஹபோஜனம் செய்பவர்களான பிக்ஷுக்கள் சுமார் ஆயிரவர் இருக்கின்றனர். அவர்கள் ஹீனயான மார்க்கத்தையும் மஹாயான மார்க்கத்தையும் கலந்தவாறு அவலம்பித்து உடனுறைகின்றனர். இந்தப் பிக்ஷுக்களின் ஸங்கத்துக்கு வெண்மையான காதுகளையுடைய நாகம் ஒன்று அதிஷ்டான தேவதையாம். அந்த நாகம் இவர்களுடைய நாட்டில் உரியகாலங்களில் வளந்தரும் மழையைப் பொழியச்செய்து, பெருவாரி முதலிய கொடுமைகள் நேராதபடி காப்பாற்றி, பிக்ஷுக்கள் கவலையின்றி வாழும்படி அருள்புரிகின்றது. இந்த உபகாரத்துக்குக் கைம்மாறாக இந்தப் பிக்ஷுக்கள் ஒரு நாகாலயம் கட்டி அதனுள் அதற்கு ஒரு பீடத்தையும் அமைத்திருக்கின்றனர். இஃதன்றியும் அந்த நாகத்துக்கு உணவளிப்பதற்காக அவர்கள் விசேஷ தானங்

களையும் செய்கின்றனர். இந்தப் பிக்ஷுக்கள் பிரதி தினமும் தங்களில் மூவரைத் தெரிந்தெடுத்து அவர்களை அந்த நாகாலயத்தில் போஜனம் செய்யும்படி அனுப்புகின்றனர். ஒவ்வொரு வர்ஷா காலத்தின் முடிவிலும் இந்த நாகம், இரண்டு காது நுனிகளும் வெண்மையாகவுள்ள ஒரு சிறு ஸர்ப்பத்தின் உருவத்தைத் திடீரென எடுத்துக்கொள்கிறது. இந்த அடையாளத்தால் இதைப் பிக்ஷுக்கள் தெரிந்துகொண்டு இதன் குகையின் நடுவில் பால் ஏடு நிரம்பிய ஒரு தாமிர பாத்திரத்தை வைக்கின்றனர். பிறகு தாழ்ந்தோர் முதல் உயர்ந்தோர் இறுதியாக, அதற்கு வழிபாடு செய்வதை யொப்ப வரிசை வரிசையாக அதைத் தாண்டிச் செல்கின்றனர். பிறகு அந்த நாகம் திடீரென்று மறைந்துவிடுகின்றது. வருஷத்துக்கு ஒரு முறைதான் அது வெளிவருகின்றது. இந்த நாடு வெகு செழிப்பாக வுள்ளது. ஜனங்கள் இணையிட்டுச் சொல்லக்கூடாத செல்வத்தைப் பெற்றுச் சுகமாக வாழ்கின்றனர். இங்கு வருகிற எல்லாத் தேசத்து ஜனங்களும் நன்றாகப் போஷிக்கப்பட்டுத் தாம் விரும்புவனவற்றைப் பெறுகின்றனர். இவ்வாலயத்துக்கு ஐம்பது யோசனை வடக்கில் 'அக்னி எல்லை' என்ற பெயரையுடைய ராக்ஷதக்கோயில் ஒன்றுள்ளது. புத்தபகவானே இந்த ராக்ஷதனை நல்வழிக்குக் கொண்டுவந்தனர். அதன்மேல், பிற்காலத்து ஜனங்கள் அவ்விடத்தில் ஒரு விஹாரத்தைக் கட்டினர். அவ் விஹாரத்தைப் பிரதிஷ்டை செய்த சமயத்தில் ஓர் அர்ஹத், தம்முடைய கையில் வார்க்கப்பட்ட திவ்ய தீர்த்தத்தின் சில துளிகளைத் தரையில் விழும்படி சிந்தினர். அந்த ஜலம் சிந்தியவிடம் இன்னும் காணப்படுகின்றது. இந்த இடத்தை அடிக்கடி விளக்கித் துடைத்தன ரென்றாலும் அந்தச் சின்னம் மட்டும் இன்னும் அழியாமல் இருக்கின்றது. இஃதன்றியும் இவ்விடத்தில், மனிதச் சிற்பியால் செய்யப்படாததும் ஒரு யக்ஷனால் எப்போதும் தண்ணீர் தெளித்துச் சுத்தமாக வைக்கப்பட்டிருப்பதுமான விஹாரம் ஒன்றுள்ளது. முன்னொரு காலத்தில் தர்மவிரோதியான ஓர் அரசன் அந்த யக்ஷனை நோக்கி, "நீ இப்படி இதைச் சுத்தமாக வைத்துக்கொண்டிருக்கிறபடியால் நான் ஒரு சேனையை இங்குக் கொணர்ந்து தங்கச் செய்கிறேன். அதனால் இங்குக் குப்பை கூளங்களும் அசங்கியமும் ஏராளமாகக் குவியும். அவைகளை எல்லாம் உன்னால் சுத்தம் செய்ய முடியுமோ என ஆச்சரியப்படுகிறேன்" என்றான். உடனே அந்த யக்ஷன் அவ்விதம் தன்னால் செய்ய முடியுமென்பதைக் காட்டுவதற்காகப் பெரிய சண்டமாருதத்தை எழுப்பி அவ்விடத்தின்மீது வீசியடிக்கச் செய்தான். இந்தப் பிரதேசத்தில் நூறு சிறிய

ஸ்தூபங்கள் உள்ளன. ஒரு மனிதன் அவைகளை ஒரே நாளில் எண்ணிக் கணக்கிட நினைத்தால் அஃது அவனால் முடியாத காரி மாகும். எத்தனை ஸ்தூபங்கள் உள்ளனவென்பதைச் சரியாகத் தெரிந்துகொள்ள வேண்டுமென்று ஒருவன் அறிய விரும்பினால் அவன் ஒவ்வொரு ஸ்தூபத்தின் பக்கத்திலும் ஒரு மனிதனை நிறுத்திப் பிறகு அம்மனிதர்களை எண்ணிக்கொள்வான். இப்படிச் செய்வதிலுங்கூட, குறைவாகவோ அதிகமாகவோ எத்தனை மனிதர்கள் தாம் வேண்டுமென்பதை ஒருபோதும் தெரிந்துகொள்ள முடியாது. இங்கு அறுநூறு அல்லது எழுநூறு பிக்ஷுக்கள் அடங்கிய ஒரு ஸங்காராமமும் இருக்கின்றது. அதில் ஒரு பிரத்யேக புத்தர் பழத்தைச் சாப்பிட்ட இடம் ஒன்றுண்டு. அவர் மரித்த இடம் ஒரு தேர் உருளையைப்போன்ற வடிவுள்ளது. அதைச் சுற்றிலுமுள்ள இடம் புல்லால் மூடப்பட்டிருக்கிறது. ஆனால் அந்த இடத்தில் மட்டும் ஒன்றும் உண்டாவதில்லை. அவர் தமது வஸ்திரத்தை உலரப்போட்ட தரையிலும் புல் பூண்டுகள் முளைப்பதில்லை. அந்த வஸ்திரம் பதிந்த சுவடுகள் இன்னும் காணப்படுகின்றன.

கோடைக் காலத்தில் பா-ஹியன் இந்த நாக விஹாரத்தில் வாசம் செய்தார். அது கழிந்த பிறகு, அவர் தென் கிழக்காக ஏழு யோசனை சென்று கி-ஜோ-யி (கானோஜ்) நகரத்தை அடைந்தனர். இந் நகரம் கங்கைக்கரையை அடுத்துள்ளது. ஹீனயான மார்க்கத்தைச் சேர்ந்த இரண்டு ஸங்காராமங்கள் இங்குள்ளன. இந் நகரிலிருந்து மேற்குமுகமாக ஆறு அல்லது ஏழு லீ தூரம் சென்றால், கங்கை நதியின் வடகரையில் புத்தபகவான் தம்முடைய சிஷ்யர்களின்பொருட்டுத் தர்மோபதேசம் செய்த இடம் உள்ளது. அங்கு அவர் அநித்யம், துக்கம், சரீரம் குமிழியையும் நுரையையும் போன்றது என்பவைகளைப் பற்றி உபதேசித்ததாகக் கேள்வி. இவ்விடத்தில் கட்டப்பட்ட ஸ்தூபம் ஒன்று இன்னும் இருக்கின்றது. கங்கையைத் தாண்டித் தெற்கே மூன்று யோசனை சென்றால் ஆலு என்ற ஒரு வனத்தை அடையலாம். இதுவும் புத்தபகவான் தர்மோபதேசம் செய்த இடமே. இங்கு அவர் உட்கார்ந்திருந்த இடத்திலும் வியாயாமத்துக்காக நடந்த இடத்திலும் ஸ்தூபங்களை எழுப்பியிருக்கின்றனர்.

இங்கிருந்து தென்கிழக்காகப் பத்துயோசனை சென்றால், ஷாச்சி என்னும் பெரிய நாட்டை அடையலாம். புத்தபகவான் ஒரு சமயம் தங்கியிருந்த இடம் ஒன்று தலை நகரின் தெற்கு வாசலை விட்டுப் பாதையின் கீழ்புறத்தில் உள்ளது. அவர் இங்கிருந்த

போது ஒரு கோரைப்புல்லைப் பல்லால் கடித்து அதைத் தரையில் ஊன்றினர். உடனே அது முளைக்கத் தொடங்கி, அதிகமாயும் குறைவாயும் இல்லாமல் சரியாக ஏழடி உயரம் கிளம்பியது. தர்மத்தில் பற்றற்றவர்களும் பிராம்மணர்களும் பொறாமைகொண்டு, அதை வெட்டித் தள்ளி அதன் இலைகளை நெடுந்தூரம் வாரி எறிந்தனர். என்றாலும் அது முன்போல அதே இடத்தில் மறுபடியும் முளைத்தது. இங்கும் (முன்கூறிய) நான்கு புத்தர்கள் வியாயாமத்துக்காக நடந்த இடங்களிலும் அவர்கள் உட்கார்ந்திருந்த இடங்களிலும் ஸ்தூபங்கள் எழுப்பப்பட்டுள்ளன. அவை பாழடைந்தனவேனும் சின்னங்கள் இன்னும் உள்ளன.

இங்கிருந்து தெற்கே எட்டுயோசனை சென்றால் கியு-ஸ-லோ (கோஸலம்) என்ற நாட்டையும் அதன் ராஜதானியான ஷே-வி (ச்ரா வஸ்தி) என்ற நகரத்தையும் அடையலாம். இந்த நகரத்தில் சில ஜனங்களே வாசம் செய்கின்றனர். இருநூறு குடும்பங்கள் மட்டுந்தாம் இருக்கும். ப்ரஸேன ஜித் என்னும் அரசன் ஆண்ட நகரம் இதுவே. பிற்காலத்தில் மஹாப்ரஜாபதியின் பொருட்டுக் கட்டப்பட்ட விஹாரம் இடிந்து கிடந்த விடத்திலும், பிரபு ஸுதத்தனுடைய மாளிகையின் அஸ்திவாரத்தின் மீதும் தர்மமார்க்கத்துக்கு வந்து நிர்வாணமடைந்த அங்குலிமால்யின் தகனம் செய்யப்பட்ட இடத்தின் மீதும் ஸ்தூபங்கள் எழுப்பப்பட்டன. இவைகள் எல்லாம் இந்த நகரிலேயே உள்ளன. தர்மத்தில் பற்றற்ற பிராம்மணர்கள் பொறாமைகொண்டு இவைகளை இடித்துவிட நினைத்தனர். என்றாலும் அவர்கள் இவைகளை இடிக்கத் தொடங்கியதும், வானம் இடித்தது; மின்னல்கள் உண்டாயின. ஆகவே அவர்கள் தங்களுடைய எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ள முடியாதவராயினர்.

தெற்குக் கோபுரவாசல் வழியாக நகரினின்றும் புறப்பட்டு, ஆயிரத்து இருநூறு தப்படி தூரம் போனதும், பாதைக்கு மேற்புறத்தில் பிரபுவான ஸுதத்தன் கட்டிய விஹாரம் இருந்த இடமுள்ளது. இந்த விஹாரம் கிழக்கு நோக்கியது. பிரதான வாயிற் கதவுக்கு இருபுறத்திலும் இரண்டு அறைகள் உள்ளன. அவைகளுக்கு எதிரே இரண்டு கற்றூண்கள் நிற்கின்றன. இப் பக்கத்தில் உள்ள தூண்மீது ஒரு தர்ம சக்கரத்தின் உருவமும், வலது பக்கத்துத் தூண்மீது ஒரு காளைமாட்டின் உருவமும் உள்ளன. தடாகங்களில் உள்ள தெளிந்த ஜலமும், செழிப்பாய் வளர்ந்துள்ள சோலைகளும், பலநிறமுள்ள எண்ணிறந்த புஷ்பங்களும், ஜேதவன விஹாரம் எனப்படும் அழகிய காட்சியைத் தருகின்றன. தமது

மாதாவின் பொருட்டுத் தர்மோபதேசம் செய்வதற்காகப் புத்த பகவான் த்ரயஸ்த்ரிம்ச லோகத்துக்கு எழுந்தருளிச் சென்றபோது தொண்ணூறு நாட்கள் கழிந்ததும், ப்ரஸேன ஜித் என்னும் அரசன் அவரை மறுபடியும் காணவேண்டிக் கோசீர்ஷ சந்தன மரத்தால் அவருடைய உருவம் ஒன்றைச் செய்வித்து அதை அவருடைய ஆஸனத்தில் வைத்தான். புத்தபகவான் திரும்பிவந்து அந்த விஹாரத்தில் நுழைந்ததும், அந்த உருவம் உடனே தனது ஸ்தானத்தை விட்டெழுந்து, அவரை எதிர்கொள்ள முன் வந்தது. இதைக்கண்ட புத்தபகவான், அந்த உருவத்தை நோக்கி, "நீ உனது இருப்பிடத்துக்குப் போவாயாக; எனது நிர்வாணத்துக்குப் பிறகு என்னைப் பின்பற்றுவோர்கள் இயற்ற விரும்பும் விக்ரகங்களுக்கு நீயே மாதிரிகையாக இருப்பாய்" என்றார். இதைக் கேட்டதும் அவ்வுருவம் தனது ஸ்தானத்துக்குத் திரும்பிச் சென்றது. புத்த விக்ரகங்கள் எல்லாவற்றுக்கும் முதன் முதலாக இயற்றப்பட்ட காரணத்தால் இந்த விக்ரகமே பிற்காலத்தில் இயற்றப்பட்ட விக்ரகங்கள் எல்லாவற்றுக்கும் மாதிரிகையாக இருக்கிறது. பிறகு புத்த பகவான் அந்தப் பெரிய விஹாரத்தை விட்டகன்று அதன் தென் பக்கத்தில் அந்த விக்ரகம் இருந்த இடத்தினின்றும் முற்றிலும் தனித்ததும் அதற்கு இருபது தப்படி தூரத்திலிருந்ததுமான சிறிய விஹாரம் ஒன்றில் தங்கினர்.

இந்த ஜேதவன விஹாரம் முதலில் ஏழுநிலை மாடிகளையுடையதாகவிருந்தது. சுற்றுப் பக்கங்களிலிருந்த அரசர்களும் மஹா ஜனங்களும் இவ்விடத்தில் தங்களுடைய தான தர்மங்களைச் செய்வதில் ஒருவரோடொருவர் போட்டி போட்டுக்கொண்டனர். அவர்கள் இவ்விடத்தைக் கொடிகளாலும் பட்டு விதானங்களாலும் அலங்கரித்தனர்; புஷ்பங்களால் அர்ச்சித்து, தூபங்காட்டினர். சாயங்காலம் தொடங்கி விடியற்காலம் வரையில் தீபங்கள் இடைவிடாமல் சுடர்விட்டுப் பிரகாசித்துக்கொண்டிருந்தன. ஒரு விளக்கிலிருந்த திரியைத் தன் வாயில் கௌவிக்கொண்டு போன எலி ஒன்று நாலவிட்ட விதானங்கள் ஒன்றில் தீயைப் பற்றிக் கொள்ளச் செய்தது. அதனால் பெருந்தீ மூளவே அந்த விஹாரத்தின் ஏழு நிலைகளும் முற்றிலும் வெந்து போயின. சுற்றுப் பக்கங்களிலிருந்த அரசர்களும் மஹா ஜனங்களும், அதற்குள்ளிருந்த சந்தன மரத்தால் செய்யப்பட்ட விக்ரகமும் எரிந்துபோயிருக்குமென்று மிக்க துயரமடைந்தனர். நாலைந்து நாட்கள் கழிந்த பிறகு, கிழக்கேயிருந்த சிறிய விஹாரத்தின் கதவைத் திறக்க அந்த விக்ரகம் அங்கு இருக்கக்கண்டு அவர்கள் வியப்படைந்தனர். ஜனங்கள் சந்தோ

ஷத்தில் மூழ்கியவராகி அந்த விஹாரத்தை மறுபடியும் கட்டுவ தெனத் தீர்மானித்தனர். இரண்டு நிலைகட்டி முடித்த பிறகு அந்த விக்ரகத்தை அதன் புதிய இருப்பிடத்திலிருந்து அது முன் னமே யிருந்த இடத்துக்குக் கொண்டுபோயினர். பா-ஹியனும் தோ-சிங் என்பவரும் இந்த ஜேதவன விஹாரத்துக்கு வந்தபோது, மனிதர்க்கதிபதியான பகவான் தமது வாழ்நாளில் இருபத்தைந்து வருஷங்களைக் கழித்த இடம் இது வென்பதையும், தாங்களும் உயி ரைப் பொருட்படுத்தாமல் அப்போது அந்நிய ஜாதியாரிடையே வசித்தனரென்பதையும், அதே நோக்கத்துடன் தங்களுடன் புறப் பட்டுப் பற்பல நாடுகளைக் கடந்து வந்த துணைவர்களில் சிலர் ஜன்ம தேசம் திரும்பிச் செல்ல வேறு சிலர் இறந்தனரென்பதையும், இப் பால் நேரில் தரிசிப்பதற்கில்லாத புத்த பகவான் முற்காலத்தில் தங் கிய இடத்தை மட்டும் காண நேர்ந்ததையும் சிந்திக்கவே, இவர்களு டைய மனம் வாஸ்தவமான துக்கத்தால் பீடிக்கப்பட்டதாயிற்று. அதன் பிறகு அந்த வகுப்பைச் சேர்ந்த பிக்ஷுக்கள் முன்வந்து பா-ஹியனையும் தோ-சிங் என்பவரையும் நோக்கி, "நீங்கள் எந்த நாட்டிலிருந்து வந்திருக்கிறீர்கள்?" என்று கேட்டனர். அதற்கு இவர்கள், "நாங்கள் ஹன் நாட்டிலிருந்து வருகிறோம்" என்றனர். அப்பால் அந்தப் பிக்ஷுக்கள் அதிசயங்கொண்டு, "தர்மத்தைத் தேடு வதில் ஆசையுடன் இவ்வளவு தூரம் உலகத்தின் எல்லைப் புறத்து ஜனங்கள் வந்ததை நினைக்க எங்களுக்கு ஆச்சரியம் மேலிடுகின்றது" என்று சொல்லித் தங்களுக்குள்ளேயே சிறிது நேரம் பேசிவிட்டு, "ஆதிகாலந்தொட்டு இதுவரையில் இங்கு ஒருவர் பின் ஒருவராக வந்துள்ள ஸங்க அதிபதிகளிலேனும் ஸகோதரர்களிலேனும் ஒருவ ராவது ஹன் நாட்டு ஜனங்கள் இதைப்போன்று இவ்வளவு தூரம் வந்ததைப் பார்த்திருக்கவே மாட்டார்கள்" என்றனர்.

இந்த விஹாரத்துக்கு வடமேற்கே நான்கு லீ தூரத்தில் ஆப்த நேத்ர வனம் என்ற ஒரு கிராமம் உள்ளது. முன்பு இவ்விடத்தில் இந்த விஹாரத்தின் சமீபத்தில் ஐந்நூறு குருடர்கள் வசித்தனர். ஒரு சமயம் புத்த பகவான் அவர்களுக்காகத் தர்மோபதேசம் செய் தனர். அவருடைய உபதேசத்தைக் கேட்ட பிறகு அவர்கள் எல் லோருக்கும் குருட்டுத் தன்மை உடனே நீங்கிவிட்டது. மகிழ்ச்சி யால் பூரித்தவர்களான அந்தக் குருடர்கள் அனைவரும் தங்கள் தங்க ளுடைய தண்டங்களைத் தரையில் ஊன்றி, வழிபாடு செய்வதற்காக முகங் குப்புற விழுந்தனர். அந்தத் தண்டங்கள் உடனே வேரூன்றிப் பெரிய மரங்களாக முளைத்தெழுந்தன. ஜனங்கள் அந்த மரங்களைப் பக்தியினால், வெட்டத் துணியாமல் அவைகளை

நன்ருய் வளர்த்துச் சோலையாக்கி அதற்கு ஆப்த நேத்ர வனம் என்னும் பெயரைக் கொடுத்தனர். ஜேதவன விஹாரத்துப் பிக்ஷுக்கள் மத்யான்ன போஜனத்துக்குப் பிறகு தியானம் செய்வதற்காக இந்த நிழலுள்ள ஆராமத்துக்குத் திரள் திரளாக வருவர். ஜேதவன விஹாரத்துக்கு ஆறு அல்லது ஏழு லீ வடகிழக்கில், புத்த பகவானும் பிக்ஷுக்களும் வந்து வாசம் செய்யவேண்டுமென்று விரும்பி அழைத்த விசாகா தேவியால் கட்டப்பட்ட விஹாரம் இருந்த இடம் உள்ளது. அதன் சின்னங்கள் இன்னும் அங்குக் காணப்படுகின்றன. ஜேதவன விஹாரத்தை உள்ளடக்கிய பெரிய தோட்டத்துக்கு இரண்டு வாயில்கள் உள்ளன. அவற்றுள் ஒன்று கிழக்குப் பார்த்தது; மற்ருென்று வடக்கு நோக்கியது. இந்தத் தோட்டமானது பிரபுவான ஸுதத்தன் தங்க நாணயங்களைப் பரப்பிப் பின் விலைக்கு வாங்கிக்கொண்ட இடமாகும். விஹாரம் அதன் நடுவில் உள்ளது. இங்கே தான் புத்த பகவான் வெகு காலம் தங்கி மனிதர்கள் உஜ்ஜீவிக்க வேண்டித் தர்மோபதேசம் செய்தனர். வியாயாமத்துக்காக அவர் நடந்த பலவிடங்களிலும் உட்கார்ந்திருந்த பல்விடங்களிலும் ஸ்தூபங்கள் எழுப்பப்பட்டிருக்கின்றன. 'ஸுந்தரி என்ற விலைமாது ஒருத்தியைப் புத்த பகவான் கொன்றுவிட்டதாகப் பழி சாற்றப்பட்ட இடம்' என்பதைப்போல இவைகளுக்கெல்லாம் தனித்தனிப் பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

ஜேதவனத்தின் கிழக்கு வாயில் வழியாகப் புறப்பட்டு எழுபது தப்படி வடக்கே சென்ருல், பாதையின் மேல் பக்கத்தில் புத்த பகவான் முன்பொருகால் தொண்ணூற்ருறு வகைப் புறச்சமயிகளுடன் வாதம் புரிந்த இடமுள்ளது. அந்நாட்டு அரசனும் பிரதான மந்திரிமார்களும் வேளாளர்களும் மற்றுள்ள மஹா ஜனங்களும் அவருடைய வாதத்தைக் கேட்பதற்குக் கூட்டங் கூட்டமாக வந்தனர். அப்போது தர்ம விரோதியான சஞ்சீமனா என்னும் ஸ்திரீ ஒருத்தி, பொருமையினல் தான் கர்ப்பமாக இருப்பது போலத் தெரியும் வண்ணம் வஸ்திரத்தைச் சுருட்டித் தன் சரீரத்தைச் சுற்றிக் கட்டிக்கொண்டு, பிக்ஷுக்கள் கூடியிருந்த ஸபையில் புத்தன் தன்னிடம் அறந்தவறி நடந்தனனென்று குற்றஞ் சாட்டினுள். உடனே தேவர்களுக்கு அதிபதியான சக்ரன் ஒரு வெள்ளெலியின் உருவத்தை எடுத்துக்கொண்டு வந்து அவளுடைய அரைக்கச்சையைத் தொளைக்கத் தொடங்கவே துணிக்குவியல் எல்லாம் கீழே விழுந்தது. அப்போது பூமி பிளவுபட்டது. அந்தப் பிளவில் அவள் உயிருடனேயே ஆழ்ந்து நரகம் சென்ருள். புத்தபகவானைக் கொல்வதற்காகத் தனது நகங்களில் விஷத்தைத் தடவிக்கொண்டுவந்த

தேவதத்தன் என்பவனும் உயிருடனே நரகம் சென்ற இடமும் இங்குத்தான் இருக்கிறது. பிற்காலத்து ஜனங்கள் இந்த இடங்களை யெல்லாம் தெரிந்துகொள்வதற்காகக் குறித்து வைத்தனர்.

தர்க்கம் நிகழ்ந்த இடத்தில் ஆறு சங்கு (70 அடி)க்கு அதிக மான உயரமுள்ள ஒரு விஹாரத்தைக்கட்டி, அதனுள் வீற்றிருக்கும் திருக்கோலமுள்ள ஒரு புத்த விக்ரகத்தைப் பிரதிஷ்டை செய்தனர். பாதையின் கீழ்ப்பக்கத்தில் தர்மவிரோதிகளுக்குச் சொந்தமான தேவாலயம் ஒன்றுள்ளது. அதற்குச் சாயாவரணம் (நிழலால் மூடப்படுவது) என்பது பெயர். அது வாதம் நிகழ்ந்த ஸ்தலத் தில் கட்டப்பட்டிருக்கும் விஹாரத்துக்கு எதிரில் அதே உயரமுள்ள தாக இருக்கிறது. சூரியன் மேற்கே யிருக்கும்போது லோகபகவா னுடைய விஹாரத்தின் நிழல் இந்தத் தர்ம விரோதிகளுடைய கோயிலை மூடிக்கொள்கிறது. ஆனால் சூரியன் கிழக்கே யிருக்கும் போது அந்தத் தேவாலயத்தின் நிழல் வடக்குப்பக்கமாகச் சாய் கிறதே யொழிய, புத்த விஹாரத்தின் மீது படுவதேயில்லை. இதனால் இந்த ஆலயத்துக்குச் சாயாவரணம் என்ற பெயர் வந்தது. இந்தத் தர்ம விரோதிகள் தங்களுடைய ஆலயத்தைக் காவல் செய்வதற் காகவும், அதைச் சுத்தம் செய்து தண்ணீர் தெளிப்பதற்காகவும், பூஜா காலங்களில் தீபங்களை ஏற்றித் தூபங்களைக் காட்டுவதற்காக வும் எப்போதும் சில வேலைக்காரர்களை நியமித்திருக்கின்றனர். காலை நேரங்களில் இந்தக் கோயிலிலுள்ள தீபங்கள் காணாமற் போய், பௌத்தர்களுடைய விஹாரத்தின் மத்தியில் காணப்பட் டன. அதன்மேல், அந்தப் பிராம்மணர்கள் கோபங்கொண்டு, "இந்த ச்ரமணர்கள் நம்முடைய தீபங்களைத் தங்களுடைய வழி பாட்டுக்காக எடுத்துச் செல்கின்றனர்" என்று சொல்லிச் சிலரை இரவில் காவல் செய்யும்படி ஏவினர். அந்தக் காவலாளர்கள், தங் களுடைய தெய்வங்களே அந்தத் தீபங்களை எடுத்துக்கொண்டு புத்த விஹாரத்தைச் சுற்றி மும்முறை வலம் வந்து அவைகளைச் சமர்ப் பித்துத் திடீரென்று மறைந்ததைக் கண்டனர். இதன் மூலமாகப் புத்தருடைய தெய்வீக சக்தியைத் தெரிந்துகொண்ட பிராம்மணர் கள், தங்கள் தங்களுடைய குடும்பங்களை விட்டுவிட்டு அவருடைய சிஷ்யர்களாயினர்.

இந்தச் சம்பவங்கள் நடந்த காலத்தில் ஜேதவன விஹாரத்தைச் சுற்றித் தொண்ணூறு ஸங்காராமங்கள் இருந்தன வென்றும் அவைகளில் ஒன்றைத் தவிர மற்றவற்றில் எல்லாம் பிக்ஷுக்கள் வஸித்தனரென்றும் கேள்வியுண்டு.

# இந்தியாவும் ஆசியாக் கண்டத்தின் நாகரிகமும்

டாக்டர். கே. என். ஸீதாராம்

ஆசியாக் கண்டமானது இப்பொழுது உலகிலுள்ள பெரிய தர்மமார்க்கங்களெல்லாவற்றிற்கும் பிறப்பிடம் என்பது எல்லோரும் அறிந்த விஷயமே. இம்மதங்கள் எல்லாவற்றிலும் மூத்த புதல்வி இந்து மதமே. இவளது வம்சத்தினராகப் புத்த மதத்தையும் ஜைன மதத்தையும் ஸீக்கர்களின் மதத்தையும் கூறலாம். இந்து மதத்தின் ஸகோதரி பார்ஸிகளின் மதமாகிய ஸோராஸ்ட்ரியானிஸம் என்ற தர்ம மார்க்கமே. இவளுக்குத் தங்கையாக யூதமதத்தையும், அதன் நறுமணம் வார்ந்த புஷ்பமாகக் கிருஸ்து மதத்தையும் கூறலாம். ஆசியாக்கண்டத்தின் தர்ம மார்க்கங்களில் கடைசிப் புதல்வியாக இஸ்லாம் அல்லது முகமதிய மதத்தைக் கூறலாம்.

இந்து மதமானது குறைந்தது கி. மு. 5000 வருஷம் முதல் இது வரையில் நம் தேசத்தின் முக்கிய மெய்யொளியாக விளங்குகின்றது. இதன் எல்லாக் கிரந்தங்களிலும் முதுமையானது 10 மண்டலங்களும் 1028 ஸூக்தங்களும் கூடிய ருக்வேதமே. சில நூற்றுண்டுகளுக்குப் பிறகு யாகங்களின் குரூரத்தினாலும் ஜாதி வழக்கங்களின் கடுமையினாலும் இந்தப் பழைய மதத்தில் பிணக்குகள் ஏற்படத் தொடங்கின. பாரஸீகத்தில் இம்மாற்றத்திற்குத் தலைவராக ஸ்பிதாம் மஹரிஷியினுடைய புதல்வராக அவதரித்த ஜொருஷ்ட்ரா என்னும் மகானைக் கூறலாம். இம்மதத்தின் கிரந்தங்கள் எல்லாவற்றிலும் பழமையானது அவஸ்தா பாஷையில் எழுதப்பட்ட காதைகள் என்ற கிரந்தங்களே. இக்கிரந்தங்களினுடைய வியாக்கியானங்கள் ஸெந்த் எனப் பெயர் பெற்றுப் பெல்லவி பாஷையில் இருக்கின்றன. இப்பாஷையின் புதல்வியாகிய பழைய பாரஸீக பாஷையில் ஷாநாமா என்னும் பாரஸீக ராஜ வம்சாவளி அல்லது இதிஹாஸம், பாரஸீகத்திற்கு வால்மீகிமகரிஷி போல் விளங்கும் பர்தூஸி மகா கவியால் எழுதப்பட்டுளது. புதிய பாரஸீகத்தில் காளிதாஸன், பவபூதி, கம்பன் இவர்களுக்கு ஸமானமான கவிகளாக நைஸாமி, ஸாதி, ஹாபிஸ் என்பவர்களைக் கூறலாம். இந்து மதத்தின்

கிளைகளில் விசேஷமானவை புத்த மதம் ஜைன மதம் ஸீக்க மதம் என்பன. இவற்றில், புத்தமதமானது இப்பொழுது நம் தேசத்தில் மிகவும் குறைந்திருந்த போதிலும் சிங்களம், பர்மா, பெகு, அன்னும், சியாம், திபேத், சீனு, ஜெப்பான், கொரியா, மஞ்சூரியா, மங்கோலியா ஆகிய இந்நாடுகளின் முக்கிய மதமாகத் தழைத்து வருகிறது. ஜைன மதமானது பாரதநாட்டை விட்டு வெளியேறு மல் இந் நாட்டையே தன்னுடைய அற்புதமாய்ச் சித்திரிக்கப்பெற்ற ஆலயங்களால் நிரப்பிக்கொண்டு அகிம்ஸை என்னும் கொள்கை உருவெடுத்தது போல் விளங்குகிறது. ஸீக்கர்களுடைய மதத் திற்கு ஆதிகுரு அல்லது தலைவர், க்ஷத்திரியவம்சத்தில் ஜனித்த பாபா நாநக் என்னும் பரம பாகவத சிரோமணியே. இம்மதத்தினர் கள் தாம் முகமதியர்களுக்குச் சிக்ஷை அளித்து இந்துக்களு டைய ராஜ்யத்தைக் கழிந்த 70 வருஷம் வரையிற் கையில் வைத்திருந் தனர். இவர்களில், ப்ரஸித்தி பெற்ற சக்ரவர்த்தி ரஞ்சித்ஸிங் என்ற பஞ்சாப்ஸிம்மம் இந்து தர்மத்திற்குக் கடைசி ரக்ஷக ராக விளங்கினர். இவரது முக்கிய ஸேநாதிபதி அரிஸிங்நல்வா என்பவர் ஆப்கனிஸ்தானத்தை ஜயித்து ஜம்ரூத் கோட் டையைக் கட்டி ராஜா மான்ஸிங் என்னும் சுத்த வீரரைப் போல் முகமது கெஸினியினுடைய தேசக்காரர்களுக்கு நன்கு புத்தி வரச் செய்து சிக்ஷித்தார். இந்து மதமும் புத்த மதமும் தங்களுடைய கொள்கைகளால் ந்நாஸ்தி மதத்தையும் மானிகேய மதத்தையும் கிருஸ்து மதத்தையும் ஸூவி மதத்தையும் வளரச் செய்தன.

இப்பொழுது பாரதீயக் கலைகள் ஆசியாக் கண்டத்தின் கலைக ளுக்கு எப்படி மகா குருவாக விளங்கினவென்பதை ஆராய்வோம்: இக்கலைகளை, கலைமகள் அல்லது ஸரஸ்வதியின் ஐந்து பிராணன் அல் லது மூச்சுக் காற்றுக்களாகப் பிரிக்கலாம். இவற்றில் முதல் சுவாஸம் அல்லது பிராணவாயு வாஸ்து வித்யை அல்லது கட்டிட சாஸ்திரம். ஸ்தூபங்கள் குகைகள் விகாரங்கள் இவைகள் தவிரப் பாரத நாட்டி லுள்ள கோவில்களை நாலு வகுப்பாக பிரிக்கலாம். அதாவது (1) நாகரம் அல்லது ஆரியா வர்த்த வழியில் கட்டிய கோவில்கள், (2) சாலுக்கியம் அல்லது வேசரமுறையில் பணி செய்த ஆலயங்கள், (3) திராவிடம் அல்லது தமிழ் முறையில் அமைத்த தேவாலயங் கள், (4) கேரளம் அல்லது மலையாள வழியில் நிர்மாணிக்கப் பெற்ற அம்பலங்கள்.

முகமதியர்களுக்கு அவர்களுடைய மசூதிகளும் கூடகோபுரங் களும் மாடமாளிகைகளும் கட்டுவதில் நமது மூதாதையர்கள் மிகவும் உதவி புரிந்தனர். அவர்களுடைய கவான்களின் அழகும்

ஸ்தூபிகளில் உள்ள சிறப்பும் மசூதிகளின் தூண்களின் அடர்த்தியும் இந்தியாவிலிருந்தே கற்றுக்கொள்ளப்பட்டன. ஸ்தூபிகளின் உருவங்கள் அஜண்டாவில் 21-ம் நம்பர் குகையிலும் சாவக நாட்டில் சண்டிஸேவு என்னும் கோவிலிலும் சித்திரிக்கப் பெற்றுள்ளன. அரபிய சரித்திர நூல்களின் மூலமாய் இந்தியர்கள் ஜெருஸலத்திலிருக்கும் ஓமார் மசூதியிலும், முத்தஆவிம் என்ற அரபிய அரசர் கட்டி வைத்த ஸமாராவிலுள்ள அரண்மனையிலும், ஹரூன் அல்ராஷிட் என்னும் கியாதி பெற்ற அரசருடைய தலை நகராகிய பக்தாதில் உள்ள கட்டிடங்களிலும் தங்கள் கைத்திறனைக் காட்டி உதவி செய்தனரென்று விளங்குகின்றது. இதற்கு உதாரணமாக இராக்கில் ஸுமார் 1200 வருஷத்திற்கு முன்பு கட்டப்பட்ட ஒரு மசூதியை எடுத்துக் கொள்வோம்; இந்த மசூதியின் தலையில் அமிர்த கலசங்களும் அவைகளுக்கு மேல் கும்பகோணம் சார்ங்கபாணி கோவிலிலும் புவநேசுவரத்திலுள்ள லிங்கராஜர் கோவிலிலும் பூரியிலுள்ள ஜகந்நாத க்ஷேத்திரத்திலும் உள்ள விஷ்ணு சக்கரம் அல்லது புத்தர்களுடைய நந்தி பதம் விளங்குகிறது.

முஸல்மானியருடைய குதிரை லாடம் போல் வடிவு பெற்ற கவான்கள் இந்து-பவுத்தர்களுடைய அரசிலைக் கவானிலிருந்தே உற்பத்தி ஆயின. இவை தவிரப் பாரஸீகச் சரித்திரக்காரர் எழுதிய நூல்களால் முகமத் கஸினி, தைமூர், நாதிர்ஷா முதலிய அரசர்கள் இந்தியாவிலிருந்து தங்களுடைய நாட்டிற்கு, ராஜதானிகளும் பள்ளிகளும் தோரணங்களும் அரண்மனைகளும் நிர்மாணிக்க ஆயிரக்கணக்கான கொத்தர், தச்சர், கொல்லர், தட்டார், சித்திர வேலைக்காரர் முதலியவர்களைக் கொண்டுபோனதாக விளங்குகிறது.

சாவகம், பாலி, சம்பா, கம்போடியா, ஸுமாத்திரா, போர்னியோ என்னும் நாடுகளில் தமிழகத்திலிருந்தும் கேரளத்திலிருந்தும் நமது மூதாதையர்கள் கப்பல் மூலமாய்க் குடியேறினரென்பது நன்கு தெரிந்த விஷயம். இவ்விடங்களிலுள்ள கோவில்களில் அநேகமாய் மயமதம், மாநஸாரம், சிற்ப ரத்தினம் என்னும் நூல்களிற் சொல்லப்படும் வழிப்படியேனும் தமிழ் முறைப்படியேனும் கட்டிடங்கள் அமைக்கப் பெற்றிருக்கின்றன. இதற்கு உதாரணமாகச் சாவக நாட்டில் டியங் மாகாணத்திலுள்ள பீமன், அர்ச்சுனன், யுதிஷ்டிரர் கோவில்களையும், பிரம்ம வனத்தில் இடிந்து கிடக்கும் சிவன், பிரமா, விஷ்ணு கோவில்களையும், கம்போடியாவில் உள்ள அங்கோர் வாட் என்னும் வைஷ்ணவமகா ஆலயத்தையும், பேயன் என்னும் நாலுமுக லிங்க ஆலயத்தையும், வைமாநிகம், பாபுவன் என்ற ஆல

யங்களையும், பண்டை, ஸ்ரீ, ஈசுவரபுரம், பண்டை சமா இவைகளி லுள்ள ஆலயங்களையும், சம்பக நாட்டிலுள்ள மைஸான் நாக்த்தரங் தக்துவாங்கு என்னும் இடங்களிலுள்ள சைவ வைஷ்ணவ பகவதி (பார்வதி) ஆலயங்களையும் கூறலாம். ஜாவாவின் அரண்மனைகள், பாலியின் அரண்மனைகள், பர்மாவின் அரண்மனைகள், கோவில்கள், சீனு ஜப்பான் கொரியா முதலியவற்றிலுள்ள அரண்மனைகள், கோவில்கள் முதலியன தொன்று தொட்டு இன்று வரை மலையாள ஸம்பிரதாயத்தில் கட்டப்பெற்று விளங்குகின்றன. இம்முறைகள் வடக்கு நாடுகளுக்குப் பூமி வழியாய் நேபாளம், சிக்கிம், கோட் டான், திபேத் வழியே சென்றன; மற்ற நாடுகளுக்கு ஸமுத்திரத்தின் வழியாய்ப் போய்ச் சேர்ந்தன. இவைகளுக்கு உதாரணங்களாகச் சாவக நாட்டின் பெரிய புத்தர் கோவிலில் அமைத்திருக்கும், இந்தி யர்கள் சாவகத்தில் இறங்கும் காட்சியை எடுத்துக் கொள்வோம். இதில் உள்ள சாவக நாட்டாருடைய நடை உடை உணவு பாவனை முதலியவையும் இப்பொழுதுள்ள மலையாள வகையிலே உள்ளன. இவர்கள் உள்ளிருந்து வெளியில் வரும் வீடுபோல் இல்லங்களும், அம்பலங்களும், கோவிலகங்கள் அல்லது அரண்மனைகளும், ஆயிரக்கணக்காய், கொச்சி, திருவநந்தபுரம் முதலிய ராஜ்பங்களி லும், ஆங்கில அரசாட்சியிலுள்ள மலையாள பாகங்களிலும் பார்க்க லாம். பிரம்ம வனத்திலுள்ள சிவன் கோவிற் சித்திரங்களில் தசரத ருடைய அரண்மனையும், ஸீதாதேவியை இராவணன் எடுத்துச் செல்லும் வீடும், அனுமார் நெருப்பு வைக்கும் இலங்கைத் தீவி னுடைய வீடுகளும் அரண்மனைகளும், அசோக வனத்தில் ஸீதா தேவி வஸிக்கும் அரண்மனையும், ஸ்ரீராமன் இல்லற வாழ்க்கை நடத் தும் அயோத்தியாபுரியிலுள்ள, அரண்மனையும், இவை போலவே பராத்தரன் கோவிலில் அமைக்கப்பட்ட ராமாயண மகாபாரதக் கதை வரலாறமைந்த கட்டிடங்களும், அரண்மனைகளும், பிறவும் கேரள முறைப்படியே அமைக்கப்பட்டுள்ளன.

பாலித்தீவை இன்றைக்கும் நடை, உணவு, ஆடை, கட்டிடங் கள், சடங்குகள், பூஸ்திதி முதலியவற்றால் மலையாளத்தின் ஒருமாகாணமென்றே சொல்லலாம். நேபாளத்தில், கட்மண்டு, பாட்டுக்காவன், பசுபதி முதலிய இடங்களில் உள்ள சிவக்ஷேத்திரங் களும், பவானி அல்லது அம்பிகையின் கோவில்களும், காண்டன், ஆமாய், நான்கின், பீக்கின் முதலிய இடங்களிலுள்ள பழைய சீனர் கோவில்களும், அரண்மனைகளும், ஜப்பான் தேசத்திலுள்ள நாரு காலம் தொடங்கி உள்ள அரண்மனைகளும், கோவில்களும், கொரி யாவில் வஜ்ரமலையிலுள்ள பௌத்த ஆலயங்களும், ஆசிரமங்களும்

மலையாள முறையை அனுஸரித்தே கட்டப்பட்டுள்ளன வென்றே கருதலாம்.

கலைமகளின் இரண்டாவது பிராணவாயுவான சித்திரத்தை எடுத்துக் கொள்வோம். இந்தியாவில் எல்லாவற்றிலும் பழமையான சித்திரங்கள் பீகாரிலிருக்கும் ராம்காரென்னும் இடத்திலுள்ள குகையில் பல வர்ணத்தில் வரையப்பட்டிருக்கின்றன; இதற்கு அடுத்தபடி வோன் கோட்டாவிலுள்ள சித்திரங்களையும், அஜண்டா, சித்தன்னவாசல், பாக், ஸிகரிமுதலிய இடத்திலுள்ளவைகளையும், எல்லோராவிலிருக்கும் கைலாஸநாதர் கோவிலையும், இந்திர ஜகந்நாத முதலியவைகளிலுள்ள ஜைனச் சித்திரங்களையும், ராஜபுத்திரர், மராட்டியர், ஸிக்கர்கள் இவர்கள் காலத்திலுள்ள சித்திரங்களையும் கூறலாம். முஹமதியர்களின் புஸ்தக ஆபரணச் சித்திரங்களை நாற்பத்திரண்டு வகுப்பாகப் பிரிக்கலாம். இவற்றுள் எகிப்திலுள்ள பாத்திமகாலத்துச் சித்திரங்களையும், ஸ்பெயினில் அல்ஹம்பரா அரண்மனைச் சுவரிலுள்ள சித்திரங்களையும் தவிர மற்றவைகளெல்லாம் இந்தியாவிலிருந்தோ அல்லது இந்தியா மூலமாகச் சீனாவிலிருந்தோ முஸல்மானியர்களுடைய ராஜ்யத்திற்குப் போய்ச் சேர்ந்தன என்று கூறலாம். சீனா, ஜப்பான், கொரியா, பர்மா முதலிய இடங்களிலுள்ள சித்திரங்கள் இந்தியர் மூலமாகவே போயினவென்று சொல்லவும் வேண்டுமோ?

கலைமகளின் மூன்றாவது சுவாஸமாகிய சிற்பத்தை எடுத்துக் கொள்வோம். முஹமதியர்களின் கொள்கைப்படிக்குச் சிற்பம் அவர்களது தர்மத்திற்கு விரோதமாக விருப்பினும் எகிப்திலும் மெஸபடோமியாவிலும் சிற்பங்கள் பாக்தாத் கொள்ளையடிக்கப்பட்டு நெருப்பு வைக்கப்பட்டு மங்கோலியர்கள் படையெடுத்த காலம் வரை இருந்தன. பிறகு அந்நாள் தொட்டு இந்நாள் வரை விசேஷமாய்ச் சிற்பம் ஒன்றுமில்லை. ஆனால், சிங்களம், ஜாவா, பாலி, சம்பா, கம்போடியா, அன்னம், சீயாம் இவைகளிலும், மலேயாத் தீவுகளிலும் உள்ள சிற்பங்கள் முதலில் இந்தியாவிலிருந்தே உதித்தன என்று சொல்லலாம். இது போலவே சீனா, ஜப்பான் கொரியா, மஞ்சூரியா, திபேத் முதலிய நாடுகளிலுள்ள பௌத்த தர்ம சிற்பங்கள் எல்லாம் இந்தியாவிலிருந்தே உற்பத்தியாயின. அதற்கு உதாரணமாகச் சீனா தேசத்தில் ஹான் (*Han*) வம்சத்து ராஜாக்களுடைய காலத்துப் புத்த மூர்த்திகளை எடுத்துக் கொண்டால் அவை இப்பொழுது லாகூர் (*Lahore*) காட்சி பங்களாவில் (*Museum*) உள்ள காந்தார தேசத்திலிருந்து வந்திருக்கும் விக்கிரகங்களைப் போல் அமைந்திருப்பதை

அறியலாம். சாவகம், கம்போடியா, பாலி, சம்பா, தர்மராஜ புரம் (*Ligor*) என்னும் நாடுகளிலிருக்கும், சிவன், பிரம்மா, விஷ்ணு, லக்ஷ்மி, பார்வதி, துர்க்கை, கணபதி, முருகன், கருடன், நந்தி, முதலிய விக்கிரகங்கள் தென் இந்தியாவிலிருந்தே அவ்விடம் போயின. இது தவிர இந்நாடுகளில், ராமாயணத்திலும் மஹாபாரதத்திலும் புராணங்களிலும் உள்ள கதைகளிற் பல பிரகாரச் (*Prakara*) சுவர்களில் சிற்பக் காட்சியில் அமைக்கப்பட்டுள்ளன. கம்போடியா ராஜ்யத்தை முதல் முதல் ஸ்தாபித்தவர், தமிழ்நாட்டிலிருந்து அவ்விடம் போன கௌண்டின்யர் என்னும் அந்தண சிரோமணியே. இத்தேசத்திலுள்ள, அங்கோர்வாட்டு என்னும் தலை நகரிலுள்ள பெரிய மஹா விஷ்ணுவின் அம்பலத்தை எடுப்பிலும், பார்வையிலும் ராமேச்வரம் ராமநாதஸ்வாமி தேவாலயத்துக்கு ஒப்பாகச் சொல்லாம். மத்திய அமெரிக்காவின் மாயர்கள், இன்கர்கள் என்பவர்களுடைய நாகரிகமும் கம்போடியாவிலிருந்தே சென்றது. கம்போடியாவின் நாகரிகம் தமிழ் நாட்டிலிருந்தே சென்றது என்பதை முன்பு கூறி இருக்கிறோம். ஆகையால் இதிலிருந்து முதலாவது, அமெரிக்காவாகிய புதிய கண்டத்தைக் கண்டு பிடித்தவர் கொலம்பஸ் இல்லை; ஆனால் கம்போடியாவிலிருந்து அங்குச் சென்ற ஒரு தமிழ் மாலுமி என்றே புலனாகிறது. இது தவிர, சரித்திரங்களால் தமிழர்கள், ரோம், ஆதென்ஸ் என்னும் நகர்களுக்குப் போயினர் என்றும், ஜெர்மனியின் உத்தர மாகாணத்திலிருக்கும் பால்டிக் ஸமுத்திரத்தில் கப்பல் உடைபட்டு, ஓர் இடத்தில் இறங்கினார்கள் என்றும், ட்ரேக் துரைக்கும் முன்னமே பூமண்டலம் முழுவதையும் சமுத்திரத்தின் வழியாக வலம் வந்தனர் என்றும் (*Circum navigation of the globe*) தெளிவாக அறிகிறோம்.

(தொடரும்)



# பாமதி

சங்கு ஸு. ஸுப்ரஹ்மண்யன்

பாமதி அழகும் அடக்கமும் நிறைந்த பெண். வாசஸ்பதி மிச்ரனே அறிவும் ஆராய்ச்சியும் மிகுந்த இளைஞன். குருகுல வாசம் முடிந்தவுடன் அவனுக்குப் பாமதியைப் பாணிக் கிரகணம் செய்து தருவதாகப் பெரியோர்கள் நிச்சயித்தனர். அழகும் அறிவும் திருமணம் செய்து கொள்ளும் அக்காட்சியைக் காண்பதற்கும் ஆசி கூறுவதற்கும் பாரத நாட்டின் பல மூலைகளினின்றும் அறிஞர் பலர் வந்திருந்தனர். திருமண தினத்தின் மாலை வேளையில் பெரியோரால் சாஸ்திர வாதங்கள் நடத்துவது அக்காலத்திய வழக்கம். பாமதி வாழ்க்கைப் படுத்தப்பட்ட அன்று மாலையில் 'தர்க்க காலக்ஷேபம்' ஒன்று நடந்தது. வித்வான்களும், பண்டிதர்களும், சாஸ்திரிகளும், ஜடா வல்லபர்களும், கனபாடிகளும் அன்று மோதிக் கொண்டார்கள். மாப்பிள்ளை மிச்ரன் நுட்பமாகச் சாஸ்திர வாதங்களைக் கவனித்து வந்தான். அவன் மனத்தை ஏதோ உறுத்திற்று. சாஸ்திர நூல்களில் ஆங்காங்குப் பொதிந்துள்ள உட்கருத்துகளை உணராமல் ஏதேதோ தப்பர்த்தம் செய்துகொண்டு அறிஞர்கள் வாதிப்பதாக மிச்ரனுக்குத் தோன்றிற்று.

காலக்ஷேபம் முடிந்தவுடன் வாசஸ்பதி மிச்ரன் பாமதியின் தந்தையிடம் சென்று நின்றான். "எனக்குப் பாமதியைக் கன்னிகா தானமாகத் தாரை வார்த்துத் தந்தீர்கள். ஆயினும் தங்கட்குத் தக்ஷிணை தரவேண்டுமென என் மனம் விழைகின்றது. ஓர் அழகான நூலை இயற்றித் தங்கட்குத் தக்ஷிணை கொடுப்பதெனத் தீர்மானித்திருக்கிறேன்" என்றான் மிச்ரன். மருகனின் தீர்மானத்தைக் கேட்டு மனமுவந்து, "அவ்வாறே செய்க" என்று ஆசீர்வதித்தார் மாமனார்.

ஹிந்து தர்மத்தின் அச்சாணிகள் போன்றுள்ள ஆறு சாஸ்திரங்களுக்கும் சரியான வியாக்கியானம் இயற்றிப் பண்டித உலகிற்கு உதவ வேண்டும் என்பதே வாசஸ்பதி செய்து கொண்ட தீர்மானம். அகண்டாகாரமான ஆறு சாஸ்திரங்களுக்கும் விருத்தியுரை வரைவது எளிதான காரியமா? எவ்வளவு பாஷா ஞானம் வேண்டும்! எத்துணை வேதாந்த நுட்பம் வேண்டும்! மேலும், ஆறு கடல்

களையும் நீதி அக்கரை காண எவ்வளவு காலம் வேண்டும்! ஆனால் மிச்ரன்இதை யெல்லாம் அப்போது எண்ணவில்லை.

கலியாணமான மறுதினம் முதற்கொண்டே மிச்ரரின் எழுத்தாணி விரைவாக ஓடத்தொடங்கியது. அறிவு ஊற்றெடுத்து அருவியாகி ஆறாக மாறிக் கடலாகச் சேர்ந்து அலை வீசத்தொடங்கிற்று. நாட்கள் மாதங்களாயின; மாதங்கள் வருஷங்களாயின. வாசஸ்பதி சரியான காலத்தில் சாப்பிடுவதை மறந்தார்; நித்திய கர்மங்களையும் மறந்தார்; இரவு பகல் பேதங்களையும் மறக்கத் தொடங்கினர்; பாமதி, தாம் மணந்து கொண்ட 'மனைவி' என்பதையும் அடியோடு மறந்து விட்டார்.

பாமதி ஒரு மகா வித்வானின் பெண். அக்காலத்தில் பாரத நாட்டில் சில வம்சத்தில் தோன்றிய குழந்தைகள் நிலாப்பூச்சி ஆடும்போது கூட உபநிடத ச்லோகங்களைப் பாடிக் கொண்டிருக்குமாம். அத்தகைய அறிவுக் கூட்டத்தில் வளர்ந்தவள் பாமதி. ஆதலால் தனது கணவர் மேற்கொண்டிருந்த பெரிய சங்கல்பத்தின் எல்லையை அவள் அறிவாள். அதற்கேற்பவே அவள் நடந்து கொண்டாள். ஆயிரக் கணக்கில் பனை ஓலைகளை வாரிக் கொடுப்பது அவளது ஊழியங்களில் ஒன்றாயிற்று. கணவரின் கண்களினின்று அறிந்து, இரவு பகலென்று பாராது அவ்வப்போது ஸ்நானத்திற்கு ஏற்பாடு செய்வதும், உணவு படைப்பதும், பருகு நீர் தருவதும் அவளது கடமைகளாயின. உலகெல்லாம் ஓய்ந்து துயிலும் நேரத்தில் குத்து விளக்கின் இருபுறத்திலும் இந்த ஸதிபதிகள் உட்கார்ந்திருப்பர். ஒரு புறத்தில் மிச்ரர் எழுதிக்கொண்டிருப்பார். மற்றொரு புறத்தில் தன் நாயகன் வரைந்த அறிவுக் களஞ்சியமான சுவடிகளைப் படித்துக் கொண்டிருப்பாள் பாமதி. நாளடைவில் அவளது அறிவு விரிவடைந்தது. வேதாந்தக் கானகத்தில் எங்கேனும் சந்தேகங்கள் தோன்றி வாசஸ்பதிக்கு வழி தவறி விடுவதுண்டு. அப்போதெல்லாம் சரியான வழியைச் சுட்டிக் காட்டும் ஆற்றலும் பாமதிக்கு உண்டாகிவிடவே அவள் பேருதவியானாள். அறிவு அலைகள் மோதிய அயர்ச்சியினால் ஒரொரு சமயங்கள் எழுத்தாணியும் கையுமாகவே மிச்ரர் துயின்று போவார். அவருக்குப் பின் துயின்று முன் எழுந்து விடுவாள் பாமதி. இவ்வாறு அந்த அறிஞர்கள் சாஸ்திரமென்னும் ஹிமாலயத்தின் உச்சியை நோக்கி ஏறிவந்தனர்.

* * *

ஒரு நாள் அந்த ஹிமாலயத்தின் உச்சியை வாசஸ்பதி மிச்ரர் அடைந்து விட்டார். அப்போது நடுநிசி. ஏதோ பாவம்! அயர்ச்சி

யினால் பாமதி தூங்கிப்போயிருந்தாள். கடைசி ச்லோகத்தின் வியாக்யானம் முடிந்தவுடன் வாசஸ்பதி மிச்ரர் களி துள்ளும் முகத்தோடு பாமதியிருந்த திக்கை நோக்கித் திரும்பினார். எளிய தோற்றத்தையுடைய ஆடையோடு பாமதியின் உருவம் துயில்வதைக் கண்டார். அறிவுக் கடலின் அலைகள் ஓய்ந்து அமைதியடைந்து விட்டன போலும்! ஏனெனின் பாமதி தமது 'மனைவி' என்ற நினைவு அப்போது தான் மிச்ரருக்குத் தோன்றிற்று. அதனை எண்ண எண்ண மனம் புண்ணாடைந்தது. என்னே பரிதாபம்! என்னே பாமதியின் சிச்ருஷை! மானிட உலக எண்ணங்கள் சிறிதேனுமின்றி, இந்த நாற்பது வருடங்களையும் அந்தப் பெண் எப்படிப் போக்கினாளென்பது மிச்ரருக்கு விளங்கவில்லை. அவளது அழகு மறைந்து போய் விட்டது! அவளது அழகையும் இளமையையும் இன்பத்தையும் வீணாக்கி விட்டோமே யென்ற எண்ணத்தினால் மிச்ரரின் கண்களினின்று கர கர வென்று நீர் பெருகிற்று. முத்து முத்தாகக் கண்ணீர் அவரது தாடி மீது விழுந்தன. தமக்குத் தாடி வளர்ந்து, அது வெளுத்தும் போய் விட்டதென்பதை அப்போது தான் அவர் கவனித்தார். பாமதிக்குப் பெரிய பாவம் இழைத்து விட்டதாக எண்ணினார். அதை யெல்லாம் இனி எண்ணி என் செய்வது?

சுடச்சுட இரண்டு நீர்த்துளிகள் தம் முகத்தில் விழவே அம்மையார் விழித்துக் கொண்டார். கணவர் துயில்வதற்கு முன் கண் துயின்றது பாவ மல்லவாவென்றும், தாம் விழித்துக் கொண்டிருந்தால் அவருக்கு உதவியாயிருந்திருக்கலாமல்லவாவென்றும் எண்ணிக்கொண்டே பாமதியார் எழுந்தார். முகத்திற்கு நேர்மேலே கணவரின் முகம்!

"தெரியாது தூங்கி விட்டேன். க்ஷமிக்கவேண்டும்; ப்ரபோ?"

"பாமதி! ப்ரேமஸ்வரூபமே! பகவான் கிருபையால் கடைசி ச்லோகம் முடிந்து விட்டதை அறியாயோ!"

"அப்படியா ஓம் சாந்தி! சாந்தி!! சாந்தி!!!" என்று பாமதியார் உச்சரித்துத் தமது கண்களை மூடிச் சிறிது நேரம் தன்மயமானார். அவர் விழித்தபோது கண்கள் களி கொப்புளித்தன.

"பாமதி! என் அன்பே! இவ்வளவு வருஷம் எனக்காக உனது இளமையையும் இன்பத்தையும் தியாகம் செய்தாயே! ஒருநாள் கூட உன்னை மனைவியாக நான் எண்ணாதிருந்து விட்டேனே பாவி! இப்போது நான் கிழவன்! நீ பாட்டி! இந்தப் பித்தனுக்கா நீ வாழ்க்கைப்பட்டிருக்க வேண்டும்!" என்று கண்களில் நீர் பெருகக் கூறினார் மகான்.

“ப்ரபோ! நீங்களா இப்படிப் பேசுவது? மனித உலகினின்று கையைப் பிடித்துக் கர கர வென்று இழுத்துக் கொண்டு போய் அறிவுச் சிகரத்தைத் தரிசிக்கும்படி செய்த ஞானசார்யர் நீங்களல்லவா? தங்கள் பெரிய காரியத்துக்குச் சிச்ருஷை செய்ய ஆயிரம் ஜன்மமெடுக்க இந்த அடிமைக்கு ஆசீர்வாதம் செய்யுங்கள்” என்று தலையைக் குனிந்துகொண்டே கூறினர் அம்மையார்.

“ப்ராணேச்வரி! பாமதி! உனது அழகான திருப்பெயர் உலகில் சாவாதிருக்கவேண்டும். ஆதலால் எனது வியாக்யான நூலுக்கு, ‘பாமதி’ என்ற பெயரைத் தருகின்றேன். பாரத நாட்டில் வேதாந்தம் வாழும் வரை இந்த நூலும் வாழும்! உனது பெயரும் ஒளிருமாக!” என்றார் அறிவுக்கடலில் விளையாடிய அவர்.

தக்ஷிணையைச் சமர்ப்பிக்க மாமனர் அப்போது உயிரோடில்லை. ஆயினும் ஹிந்து மதம் வாசஸ்பதியாரின் மகத்தான தக்ஷிணையை ஏற்றுக் கொண்டது. வாசஸ்பதி மிச்ரரின் வம்சம் அவரோடு முடிவடைந்தது. அதற்கு எவரும் கவலைப்படவில்லை. ஏனெனில் பாமதியும், வாசஸ்பதியும் ஏடுகளில், எண்ணங்களில், இன்றளவும் இளமையோடு இருக்கின்றார்களன்றோ?

# போய் வருகிறேன்

நம்பி

**நா**ன் பிறந்தது திருவல்லிக்கேணியில் பெரிய தெருவில் 6-ம் நெம்பர் வீட்டில். எனது தந்தை, போர்டு ஆபீசில் ஒரு குமாஸ்தா உத்தியோகத்தில் இருந்து வந்தார். எட்டாவது வயதில் எனது அருமைத் தாயை இழந்தேன். மறுமாதத்தில் தந்தை எனது தாயின் சகோதரியை மணம் புரிந்துகொண்டார். எனது தாய் உயிருடன் இருந்த காலத்தில் எனக்கு உணவு ஊட்டிப் பாராட்டிப் போற்றி வளர்த்தது எனது சிறிய தாயே. மனேயாட்டி ஸ்தானத்தை வகித்தவளவிலே, சிற்றம்மைக்கு என்மீதிருந்த அன்பு குறையத் தலைப்பட்டது. அன்பு குன்றி வெறுப்புத் தோன்றிடலாயிற்று. இவ்வித மாறுட்டத்திற்குக் காரணம் இன்றைக்கும் எனக்குப் புலப் படவில்லை. நாட்கள் செல்லச்செல்ல வெறுப்பு அதிகரிக்கலாயிற்று.

இத்தருணத்தில் நான் படித்து வந்த பள்ளியில் ஒரு லாட்டரிச் சீட்டு ஏற்படுத்தப்பட்டு அதில் எனக்கு 5000 ரூபாய் பிரைஸ் கிடைத்தது. அதை என் மாமன் பாங்கியில் போட்டு வைக்கச் சொன்னர். அதைக் கேளாமல் எனது தந்தையிடம் கொணர்ந்து சேர்த்தேன். இவ்விதம் செய்ததால் தந்தை என்னை மெச்சிக்கொண் டாடுவார் எனக் கருதினேன். ஆனல் எதிரிடையாக முடிந்தது. என்னிடத்திலிருந்து பணத்தைப் பெற்றுக்கொண்டு விட்டபடியால் ஒருவாறு கட்டுப்பட்டவனுகி விட்டோமென்றும் நான் அகம் பாவத்தை அடைவேனென்றும் வீணுகக் கருதி என்னை வருத்த லானர். செலவுக்குப் பணம் கேட்கும் காலையில் அகம்பாவத்தால் கேட்கின்ருயோ என்றும் கேட்காத காலத்தில் கொடாமலும் சங்க டத்திற்கு உட்படுத்தினர். எனக்கு லாட்டரி விழுந்ததும் துர திர்ஷ்டமே எனலாம். தந்தையே இவ்வாறு செய்ததானது என் சிற் றம்மைக்கு எரிகின்ற விளக்கில் எண்ணெ வார்த்தது போலாயிற்று. இருதலைக் கொள்ளி எறும்பானேன். வீட்டில் இருக்கும் காலத் தில் மன அமைதியே இல்லாமலிருந்தது. பள்ளியை விட்டுத் திரும் பும் காலத்தில் எனது நண்பர்களின் முகங்களில் மலர்ச்சியும் ஆவ லும் ஜ்வலிக்கும். அவ்வுணர்ச்சி என் முகத்தில் ஒரு நாளும் உதித்த தில்லை. நத்தை போல் ஊர்ந்து செல்வதைத் தான் அறிவேன்.

வீட்டிற்கு ஓடிச் செல்லும் பாலர்களைக் கண்டு திகைப்பேன். என்னைப் பித்தனென்று நினைத்தார் போலும்!

இவ்வாறு பல வருடங்கள் கழிய, மற்றொரு விபத்தும் நேர்ந்தது. எனது தந்தைக்குச் சுரம் கண்டு நான்கு நாட்களில் மடிந்தார். அவருக்கு அருகிலேயே இருந்து இராப்பகலாக உறக்கமும் ஊணுமின்றிச் சிகித்சை செய்தேன். ஆனால் உயிர் விடுவதற்குச் சற்று முன்பு தமது மனைவியையும் எனது தம்பிமார்களையும் அழைத்து வருந்தி நல்வார்த்தை சொல்லிப் பின் பிராணனை விட்டார். என்னை முகம் கொடுத்து நோக்கவுமில்லை. யாது காரணம்? ஊழ்வினைப்பயனல்லவோ? பிறந்தநாள் தொட்டு அன்பென்னும் பதத்திற்கு அர்த்தமும் தெரியாமல், அன்பின் உணர்ச்சியும் அனுபவமும் இல்லாமலல்லவோ காலம் கடந்து செல்கின்றதென்று அக்காலத்திலேயே திகைத்திருந்தேன்.

தந்தை இறந்தபிறகு என் சிறிய தாய்க்கு என்மேல் அன்பு வளருமா? தந்தை தமது பணம் எல்லாவற்றையும் தாய்க்குச் சர்வ சுதந்திரமாயளித்து என்னை அவளது அடிமையாக்கிவிட்டார். திருவல்லிக்கேணிப் பள்ளிக்கூடத்தில் பணம் கொடுத்து வாசிக்க வேண்டியிருந்ததால் அதை நிறுத்திவிட்டுக் கிருஸ்டியன் கலாசாலையில் சேர்ந்தேன். காலையில் வீட்டுவேலைகளைச் செய்து பழைய சோற்றைத் தின்று கலாசாலைக்கு நடந்து சென்று, கல்வி பயின்று, மாலையில் இரண்டு சிறுவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்து விட்டு வீட்டிற்குத் திரும்புவேன். பாடம் சொல்லிக் கொடுத்த சம்பளத்தையும் என் சிறிய தாயிடம் கொடுத்து வந்தேன். நாம் எவ்விதம் நேராக இருந்தாலென்ன? சுழியல்லவோ நேராக இருக்கவேண்டும். எனது தாய்க்கு நான் வீட்டில் இருப்பது விருப்பமில்லை. ஆனால் மரியாதையுடன் என்னை வெளிக்கடத்தவில்லை. நான் வீட்டில் இல்லாத சமயத்தில் ஒரு நகையை என் பெட்டியில் வைத்து, நான் திருடினதாகக் குற்றம் சாட்டி, அயல் வீட்டார்களிடம் சொல்லிப் பெரும் கூக்குரலிட்டுப் போலீஸாரிடம் சொல்லி, பெட்டியைச் சோதித்து, தெருப் பஞ்சாயத்துக் கூட்டி, நான் வீட்டை விட்டு விலக வேண்டுமென்ற தீர்மானத்தைப் பெற்று என்னைத் துரத்தினாள். உலகில் என்போல்வார்க்கு இடமில்லையென்றும் நான் இவ்வுலகில் வசிக்க அருகனல்லன் என்றும் அன்றுணர்ந்தேன்.

இச்சம்பவம் நிகழ்ந்த தேதியில் எப். ஏ படித்துக் கொண்டிருந்தேன். அன்று சாயங்காலம் கலாசாலைக்குப் போய்ப் பிரின்ஸிபாலைப் பார்த்து எனது நிலைமையைத் தெரிவித்து என்னைக் கைதூக்கிவிடவேண்டுமென்று கெஞ்சிக் கூத்தாடினேன். அவர் பால்யத்தில்

தமது நாட்டையும் பதவியையும் சொத்தையும் துறந்து ஏசு நாதரின் திருவாக்கியத்தை உலகெலாம் பரவச் செய்ய வேண்டு மென்ற ஒரு பேரவாவைக் கைக்கொண்ட வீரர். முப்பது ஆண்டுகள் ஆங்காங்கு உழைத்து எண்ணிறந்த கோவில்களையும் மதச் சங்கங்க ளையும் ஸ்தாபித்துக் கடைசியாகச் சென்னைக்குப் பிரின்ஸிபாலாக வந்தவர். அவர் எனது நிலையை அறிந்து மனமுருகித் தேறுதல் சொல்லிக் கலாசாலை ஹாஸ்டலில் இருக்கும்படி ஏற்பாடு செய்தார்; போஜன சாலைக்குக் காரியதரிசியாகவும் நியமித்தார். அவ்வேலையைச் சரிவரப் பார்க்க வேண்டுமென்ற நோக்கத்துடன் நான் கடைகளுக் குச் சென்று பல சரக்கு, காய் கறி முதலிய சாமான்களை விலை குறைத்து விசாரித்து வாங்கி வந்தேன். அவ்விதம் செய்தது மாண வரின் லாபத்தைக் குறித்தே. ஆனால் பிறர் நன்மையைக் கோரிச் செய்ததன் பலன் என்ன? நான் ஏதோ மட்டச் சரக்குகளையும் கழிந்து போன காய் கறிகளையும் வாங்கினதாகப் புகார் சொல்லி என்னை அவ்விஷயத்தில் பிரவேசிக்க வேண்டாமென்ற உத்தரவை மாணவர்கள் வாங்கினார்கள்.

பிரின்ஸிபாலை நான் அடிக்கடி சந்திப்பது வழக்கம். அவருடன் 'பைபிள்' வேத புத்தகத்தை வாசித்து வந்தேன். பகவத் கீதையை அவருக்கு வாசித்துக் காட்டுவது உண்டு. இரண்டு புத்தகங்களி லுள்ள உண்மைகளையும் ஆராய்ந்து பரிசோதித்து மகிழ்வது வழக் கம். அப்பொழுது பீ. ஏ சீனியர் வாசித்துக் கொண்டிருந்தேன். எப். ஏயில் முதலில் தேறியிருந்ததால் பீ. ஏ யில் ராஜதானியில் முதலில் தேறவேண்டுமென்று உபாத்தியாயர்கள் என்னைத் தூண் டிக்கொண்டிருந்தனர். இத்தருணத்தில் நடந்த ஒரு சம்பவம் இப்பொழுது ஞாபகத்துக்கு வருகின்றது. கடலில் விழுந்து தத் தளித்த காலத்தில் என்னால் கரைக்கு இழுக்கப்பட்டு உயிர் தப்பிய ராமன் அன்று முதல் எனது ஆப்த நண்பனாக இருந்து வந்தான்.

அவன் ஒரு தனவந்தனின் மகன். நான் அவனது அறையி லேயே இருந்து வந்தேன். ஒரு நாள் அவன் மோதிரம் காணமற் போகவே என் மீது குற்றம்சாட்டி எனது பெட்டியைப் பரி சோதித்தான். மறுநாள் அவன் பெட்டியிலேயே மோதிரம் இருந் தது. மோதிரம் கிடைத்த பின்னும் நான் தான் எடுத்துப் பிறகு திருப்பிவைத்து விட்டதாக நினைத்தான். யான் என்ன பாவம் செய்தேன்! உலகில் நேசமும் அன்புமே குடிகொண்டு வாழ்க் கையை நிறுத்துகின்றனவென்று கேள்விப்பட்டிருந்தேன். ஆனால் யான் அதைக் கண்டிலேன்; அறிந்துமிலேன்.

பரீக்ஷை முடிந்தது. முதல்வனாகத் தேறினேன். ஐ. ஸி. எஸ். பரீக்ஷைக்குப் போவதற்கு எனது உபாத்தியாயர்கள் ஏற்பாடு செய்தார்கள். பிரின்ஸிபாலும் ஐ. ஸி. எஸ் பரீக்ஷைக்குப் போய்க் கலாசாலைக்குக் கீர்த்தி கொண்டு வரவேண்டுமென்று தூண்டினார். இது நடந்த ஒருவாரத்திற்குப் பிறகு பிரின்ஸிபால் என்னைத் தமது வீட்டிற்கு அழைத்தார். 'டீ' அருந்திய பிறகு தாம் என்னை ஒரு வரம் கேட்கப் போவதாகவும் அதை நான் மறுக்கக்கூடாதென்றும் கேட்டார். அது யாதென்று நான் கேட்க, தாம் இன்னும் கூடிய சீக்கிரத்தில் வேலையை விட்டு விட்டுச் சீமைக்குப் போவதாகவும், தாம் போவதற்கு முன் கடைசியாகச் செய்ய விரும்பிய கைங்கர்யம், தமது அருமைக் குழந்தையாகிய என்னைத் தம் மதத்தில் சேர்ப்பித்தலே என்றும் சொன்னார். நான் திடுக்கிட்டேன். எல்லா மதங்களின் கொள்கைகளையும் நாங்களிருவரும் வாசித்துள்ளோம். எல்லா மதங்களும் ஒரே தத்துவத்தைப் போதிக்கின்றனவென்றும், ஒரு மதத்தை விட்டு மற்றொன்றைத் தழுவ வேண்டியதில்லையென்றும் தீர்மானித்திருந்தோம். அப்படியிருக்க ஏன் இந்தக் கோரிக்கை என ஆச்சரியப்பட்டேன். வயது காலத்தில் மத ஆவேசமே மனத்தில் குடிகொண்டது போலும்! நான் அவரிடம் நயவார்த்தை சொன்னேன்; கெஞ்சினேன்; தர்க்கவாதம் செய்தேன். ஒன்றும் பயன்படவில்லை. ஒரே மூர்க்கம் கொண்டு என்னைக் கண்ணெடுத்தும் பார்ப்பதில்லையென்று சபதம் செய்தார். அநேகம் தடவைகளில் அவரைப் பார்த்துப் பேசவேண்டுமென்று சென்றபோது என்னைத் தூரத்தும்படி உத்தரவு செய்தார். இதுவும் ஈசன் செயல்.

பிறகு ஐ. ஸி. எஸ். பரீக்ஷைக்குப் போவதற்கு வேண்டிய ஏற்பாடு நடந்தது. பையன்களுக்கு வீட்டுப் பாடம் சொல்லிக் கொடுத்து அந்தப் பணத்தைக் கொண்டு காலக்ஷேபம் செய்தேன். இருக்க இடமில்லாமல் கோவிலிலும் மடத்திலும் வசித்தேன். ஐ. ஸி. எஸ் பரீக்ஷையும் முடிந்தது மார்ச்சு மாதத்தில்.

இன்றைய தினம் நான் ஐ. ஸி. எஸ் பரீக்ஷையில் தேறிவிட்டதாகவும் சீமைக்குப் புறப்படவேண்டுமென்றும் தந்தி வந்திருக்கிறது. இது சந்தோஷகரமான செய்தியல்லவா? ஆனால் எனக்கு ஏன் ஒருவித அமைதியையும் காணோம்? இனிமேல் பணத்திற்கும் பதவிக்கும் செல்வாக்குக்கும் குறைவில்லை. ஆனால் எனக்கு உற்சாகத்தைக் காணோம். சந்தோஷம் என்பதை நான் மறந்து விட்டேனல்லவா? வெகு காலமாக மனத்தில் துக்கமே குடிகொண்டிருந்ததால், சுலபமாக அதை எவ்விதம் விலக்குவது? சிரிப்பதென்றால் எனக்கு

வெட்கமாயிருக்கிறது. நான் ஓர் அநாதை; அதிபால்யத்திலிருந்து அன்பையும் சுகத்தையும் உணராதவன் யான். புகுந்த இடங்களும் என்னைத் துரத்தின. யான் அடைந்த மனிதர்களும் விரட்டினர். என்னைத் திடீரென்று கால் சட்டை மாட்டிக்கொண்டு பங்களாவில் வசித்து முன் பின் அறிந்திராத மனிதருடன் கூடிக் களித்து வாழும் படி செய்வது இந்த அல்பப் பரீக்ஷையல்லவா? இது ஒரு லாட்டரி. இதை நம்பி நான் மறுபடியும் எவ்விதம் என்னைச் சேர்ந்தோரிட மும் மற்று முள்ளோரிடமும் உறவாடுவது? ஆனல் இதில் என்ன விபத்து மறைந்து காத்துக் கொண்டிருக்கிறதோ? வேண்டாம். என் கையில் கீதையிருக்கிறது. அதை எடுத்துக் கொண்டு இன்று ரயிலேறித் திருவண்ணுமலைக்குச் சென்று அங்குக் காட்டிலுள்ள விலங்குகளுடனும் மற்றும் ஞானிகளுடனும் கலந்து கொள்கின் றேன். ஞானிகள் இருந்தால் நலம். ஆனல் உலகில் உள்ள மானி டர்க்கு விலங்குகள் மிகவும் மேலானவை எனத் தோற்றுகிறது. சன்னியாசம் சன்மார்க்கம். போய் வருகிறேன்!

# விமலாவின் விடுகதை*

சியாமா

புதிதாகப் பட்டத்திற்கு வந்த அரசன் மோஹன்ஸிங் ராஜஸ்தானத்திலுள்ள சிற்றரசர்களை யெல்லாம் மூன்று கடும்போரில் வென்று தன் ஸாம்ராஜ்யத்தை நிலைநிறுத்தி அவர்களிடம் கப்பம் வசூலித்தான்.

ஜான்ஸியின் சிற்றரசியாகிய விமலாதேவி மட்டில் அவனுக்குக் கீழ்ப்படிய மறுத்தாள். அரசன் பெரிய சேனையுடன் வந்து ஜான்ஸிக் கோட்டையை முற்றுகையிட்டான்; நகரத்திற்குள் பிரவேசிக்க முயன்றான். தீரத்தில் நிகரற்ற தன் தகப்பனார் பீம் ஸிங் ஐம்பதுவருஷ காலமாக ஒருவருக்கும் கப்பம் கட்டியதில்லை யாகையால் தானும் இவனுக்குக் கப்பம் கட்ட மாட்டேனென்றும் தனக்கு இஷ்டமும் சௌகர்யமும் ஏற்பட்ட சமயமே கோட்டைக் கதவுகள் திறக்கப்படுமென்றும் சிற்றரசி கூறினாள்.

அரசன் தன் படைகளுடன் நகர மதில்களைச் சூழ்ந்துகொண்டு ஜனங்கள் உள்ளே போகமுடியாமலும் வெளிவரமுடியாமலும் தடுத்துத் தன் தூதர்களை அனுப்பித் தனக்குக் கீழ்ப்படிய வேண்டுமென்றும் இல்லாவிடில் கொத்தளங்களை இடித்து நகரத்தை அழித்து ஜான்ஸி இருந்த இடம் தெரியாவண்ணம் தரை மட்டமாக நாசம் செய்து விடுவதாகவும் உரைத்தான்.

விமலாதேவி சபையோர் சூழத் தன் உயர்ந்த ஆஸனத்தில் அமர்ந்து தூதுவர்களை வரவேற்றனள். வர்ணம் பூசப்பட்ட சாளர வழியே பிரகாசித்த சூர்ய வெளிச்சம் அவள் கிரீடத்திலிருந்த ஆபரணங்களை ஜ்வலிக்கச் செய்தது. தூதர்களின் மொழியைச் செவிகொடுத்துக் கேட்டுப் பிறகு இங்ஙனம் மறுமொழி பகர்ந்தாள்:

"தூதுவரே, உங்கள் அரசரிடம் சென்று நாம் இவ்விதம் கூறினோம் என்று சொல்க: எம்மிடம் கீர்த்தி பெற்ற வீரர்களும் உள்ளார்கள்; தகுதியான ஆயுதங்களும் உள. மேலும் அவர் இப் பூவுலகில் எவ்வளவு காலம் அரசாள எண்ணுகிறாரோ அதற்கு மேற்பட்ட மாதங்கள்வரை தேவையான உணவுப் பொருள்களை நாம்

---

*ஆங்கிலத்திலிருந்து மொழி பெயர்க்கப்பட்டது.

சேகரித்து வைத்திருக்கிறோம். ஆகையால் எங்களைப் பசியால் வருந்தச் செய்வதன் முன் அவரைச் சலிக்கச் செய்வோம்.''

தூதர்களின் தலைவன் சிரம் வணங்கினன். ''அரசியின் சந்தேசம் இவை மாத்திரமேயாமோ?'' என்று வினவினன்.

''தீரர் பீம்ஸிங்கின் புதல்வி ஜான்ஸியை ஆளுகிறாள் என்று சொல்லும்.''

தூதன் மறுபடி தலைவணங்கினன். அரசி சற்று மௌனமாகச் சிந்தித்து இருந்தாள். பிறகு, ''கொத்தளங்களுள் புகுவதற்குமுன் கோட்டையைப் பிடிக்கவேண்டும் என்று சொல்க'' என்றாள்.

தூதன் சற்றுத் தியங்கினன்; ''மாட்சிமை பொருந்திய அரசியே, அது எங்ஙனம் சாத்தியமாகும்? ஒரு குன்றின்பேரில் கோட்டை இருக்கிறது. குன்றைச்சுற்றி நகரமிருக்கிறது. நகரைச்சுற்றிக்கொத்தளங்களிருக்கின்றன. கொத்தளங்களுள் புகுந்தல்லவா கோட்டையைப் பிடிக்கவேண்டும். அங்ஙனமிருக்க......''

அரசி சலிப்புடன் அவன் வார்த்தையை நிறுத்தினள்; ''ஓய் தூதுவரே, உங்கள் அரசரின் முற்றுகை எவ்வளவு நீடித்திருக்குமோ அவ்வளவு ஆலஸ்யமாக இருக்கிறது உமது பேச்சு. செல்லும். நாம் கூறியதை உமது அரசருக்குத் தெரிவியும்'' என்றனள்.

தூதர்கள் திரும்பிச் சென்று அரசனுக்குத் தேவியின் விடையைத் தெரிவித்தனர். ஆனல் முதல் பாகத்தைக் கேட்டுக் கோபாக்ராந்தனை அரசன் தூதர்கள் பின்பு சொல்லிய சங்கதியைக் கவனிக்கவில்லை. மூன்று நாட்கள் கடும்போர் புரிந்து கொத்தளத்தை இடிக்க முயன்றனன். எனினும் விமலாதேவியின் படை அவன் படையைச் சிதற அடித்துத் துரத்திற்று.

''எவராலும் இயலாத செயலைச் செய்யுமாறு நம் அரசி கேட்டிருக்கின்றனள். ஆகையால் நம்மை வெல்ல இவ்வரசனல் முடியாது. தீரன் பீம்ஸிங்கின் ஆதரவு பெற்று வாழ்ந்த நாம் அவனுக்கு ஊழியம் செய்தவாறு அவன் புதல்வியாகிய இவளுக்கும் பணி செய்வோம்'' என்று உற்சாகத்துடன் அரசியின் போர்வீரர்கள் யுத்தம் புரிந்தனர்.

மும்முறை எதிர்த்துத் தோல்வியுற்ற பின்பு அரசன் மோஹன்ஸிங் ஒரு மாதம் காத்திருந்தான். பிறகு தூதுவர்களை மறுமுறை அரசியிடம் அனுப்பித் தன் ஆயுளில் பாதிக்காலம் அக்கோட்டைக்கு வெளியே காத்திருந்தாலும் அதைவென்று மிகுதி நாட்களை அதற்கு உள்ளே கழிக்கத் தீர்மானித்திருப்பதாகவும் அவள் இப்பொழுதே

கீழ்ப்படிந்தால் மன்னித்துக் கருணை புரிவதாகவும் இல்லாவிடில் நகரத்தையே நாசம் செய்து அவளைத் தன் சினத்திற்காளாக்குவ தாகவும் கூறச் செய்தனன்.

இத்தூதர்கள் வார்த்தையைக் கேட்ட அரசி, "கோட்டையைப் பிடித்த பிறகே கொத்தளங்களுள் புகலாம் என்று உங்களரசரிடம் கூறும்" என்பதைத் தவிர்த்து வேறு கூற மறுத்துவிட்டாள்.

"அவள் நாசமடையட்டும். அவள் விடுகதைகள் பாழாக" என்று கோபித்தான் அரசன். "எத்தகைய உருவம் வாய்ந்தவள் அவள்? நானிதுவரை அவ்வரசியைச் சந்தித்ததில்லை" என்று தூதனை வினவினன்.

கட்டியங் கூறுவதில் தேர்ச்சிபெற்ற தூதன், "வேந்த, சந்த்ர னைப்போல் காந்தியும் சூரியனைப்போல் தேஜஸும் உடையவள் அத்தேவி" என்று வர்ணிக்கலாயினன்.

"சட்" என்று வெறுத்தான் அவ்வர்ணனையைக் கேட்க விருப்ப மற்ற அரசன்.

பிறகு, "அவள் சுவாதீன புத்தியுடையவளா?" என்றான்.

"மகா சாதுர்ய புத்தியுடையவள் என்று புலப்படுகிறாள்; மன்ன, அவள் கூறிய பதங்களின் அர்த்தம் சரிவர இல்லை என்று நமக்குத் தோன்றியபோதிலும்..."

"போதும், இனி ஏகலாம்" என்று கட்டளை யிட்டான் மோஹன் ஸிங்.

அரசன் வெகு நேரம்வரை உட்கார்ந்து சிந்தனை புரிந்தனன். ஆனால் மற்ற மானிடர்களுக்கு ஏற்படுவதுபோல் இவ்விதச் சிந்தனை யால் அவனுக்குத் தலையில் நோவு உண்டாயிற்றே யன்றி வேறு ஒன்றும் சித்திக்கவில்லை.

மறுபடி ஜான்ஸியை எதிர்த்துப் போர் புரிய உத்தரவிட்டான். முன்போலவே அவன் வீரர்கள் யுத்தத்தில் தோல்வியடைந்தனர்.

மூன்றாம் முறை தூதர்கள் அரசியிடம் சென்ற சமயம் அவள் முன் கூறியவாறே விடைபகர்ந்தனள். அவ்விடைக்கு அர்த்தம் சிறி தும் விளங்காமல் மோஹன்ஸிங் தியங்கினான்.

"பட்சிகளின் சேனை ஒன்றிருந்தாலல்லவோ அவள் சொல்லும் விதம் செய்யமுடியும்!" என்று வெறுத்தனன்.

உற்சாகத்தை இழந்தவனாகத் திரும்பித் தன் ராஜ்யமடைய இச் சித்தன னெனினும் அவன் தேசத்தைவிட்டு வரும் ஸமயம் மந்திரி, பிரதானிகள், மற்றும் அநேக பிரபுக்கள் கூடின சபைமத்தியில்

ஜான்ஸியைத் தன் ஆதீனத்திற் குள்ளாக்காமல் திரும்பி வருவதில்லை என்று சபதம் செய்துவிட்டு வந்தபடியால், தற்சமயம் இக்கோட்டையை ஜயிக்காமல் திரும்பிச்செல்ல வெட்கினன்.

மாரிக்காலம் சமீபித்தது. இப் பெரும்படைக்கு ஆகாராதிகள் சம்பாதிப்பது மிகவும் சிரமமானதாக இருந்தது. அரசனே ஏது செய்வதென்று தெரியாமல் தியங்கினன். நகரிலிருக்கும் ஜனங்கள் விருந்துண்டு களித்து ஆடுவதும் பாடுவதுமான சப்தம் அரசன் படையிலுள்ளோரின் மனத்தைப் புண்படுத்தியது. நகரவாஸிகள் தாங்கள் உண்டு மிஞ்சினவற்றை மதிற் சுவரிற்கு அப்பாலிருக்கும் சேனைகள் எதிரில் எறிந்தனர்.

அரசி உப்பரிகையில் உலாவி இருந்தாள். அடிக்கடி அவள் இதழில் புன்னகை தாண்டவமாடிற்று; சில சமயம் அவள் பெருமூச்சு விட்டாள். அரசன் மோஹன் ஸிங் என்ன செய்வான் என்று சிந்தித்தனள் போலும்! அல்லது தன் சந்தேகத்தின் உட்கருத்தை எப்பொழுது அறிவான் என்று பெருமூச்சுவிட்டனளோ!

II

அரசன் மோஹன் ஸிங்கின் படையில் ஒரு பைராகி இருந்தான். அவன் மிக்க சாமர்த்திய சாலியாகவும் சாதுர்யமாகப் பேசும் திறமை வாய்ந்தவனாகவு மிருந்தபடியால் எல்லாருடைய பிரீதியையும் எளிதில் சம்பாதித்தான். அவன் வார்த்தைகளைக் கேட்டு அரசனும் சில சமயம் சந்தோஷிப்பதுண்டு.

சிறிதளவிலேயே விமலா தேவியின் விடை சேனை முழுவதும் பரவிற்று. ஒவ்வொருவரும் அதைப்பற்றிப் பேசலாயினர். கர்வத்தினால் கூறிய மொழி என்றே அதை யாவரும் எண்ணினர். அவரவர் தத்தம் அபிப்பிராயத்தைக் கூறுவதைப் பைராகி நித்யானந்தன் செவி கொடுத்துக் கேட்டான். தன் எண்ணத்தை மட்டும் வெளியிடவில்லை.

ஓரிரவு அரசன் மிக்க வெறுப்புடன் தனிமையில் சிந்தித்திருக்கையில் அவனெதிரில் நித்யானந்த பைராகி வந்தான்.

“அரசே, நான் ஒன்று வினவ விரும்புகிறேன்” என்றான்.

‘நல்லது. நான் செவிகொடுத்துக் கேட்கிறேன்” என்று புன்சிரிப்புடன் அரசன் கூறினான். தனிமையில் இவ்வளவு நேரம் சிந்தனை புரிந்ததால் சலிப்புண்ட அரசன் பைராகி வந்ததில் சற்று ஆறுதலடைந்தான்.

“ஒரு சேனையின் கோட்டை எவ்விட மிருக்கிறது? வேந்த!” என்றான் பைராகி.

"ஒரு சேனைக்குக் கோட்டை கிடையாது. ஒரு நகரத்திற்குக் கோட்டை உண்டு. அது கருங்கல் அல்லது செங்கல்லால் கட்டப் பட்டு நகரத்திற்கு மத்தியில் ஓர் உன்னத ஸ்தானத்திலிருக்கும். ஒரு சேனையோ இடம் விட்டு இடம் சென்று மைதானங்களிலும் கூடா ரங்களிலும் வஸிக்குமாதலால் அதற்குக் கோட்டை கிடையாது" என்று அரசன் மொழிந்தான்.

"ஒரு சேனையின் கோட்டை எங்கே அமைந்திருக்கிறது?" என்று மறுபடியும் வினவினான் பைராகி.

"சேனைக்குக் கோட்டை கிடையாது. கல்லும் மண்ணும் கொண்டு கட்டப்பட்ட நகரத்திற்குக் கோட்டை உண்டு. ஆனால் மனிதர்கள் அவர்கள் தசை, நரம்பு, ஹிருதயம், மூளை இவைகளை ஆதாரமாகக் கொண்ட சேனைக்குக் கோட்டை என்பது கிடை யாது" என்று மீண்டும் உரைத்தான் அரசன்.

"ஒரு சேனையின் கோட்டை எங்கே அமைந்திருக்கிறது? அரசே!" என்றான் பின்னும் பைராகி.

அவன் அங்ஙனம் மீளவும் வினவ, அதில் ஏதோ தாத்பர்யம் உண்டென்று அறிந்து அரசன் சிந்திக்கலாயினன். பைராகி அமைதியுடன் அவன் முகத்தை நோக்கியவாறு இருந்தனன்.

கடைசியில் அரசனுக்கு அதன் அர்த்தம் விளங்கலாயிற்று.

"சேனைக்கும் கோட்டை உண்டு. சேனையை நடத்தும் அதன் அதிபதியின் அஞ்சா நெஞ்சமே அதன் கோட்டை. இதுவே உன் கேள்விக்கு உத்தரமல்லவா?" என்றான்.

"ஆமாம், அரசே; நீர் கூறியது சரியே. இனி உமது கார்யத் தில் சித்திபெறுவீர்" என்று கூறிப் பைராகி அரசனை வாழ்த்தி விட்டு வெளியிற் சென்றான்.

"ஆ! அவ்விதமே ஒரு நகரத்தின் கோட்டையும் அமைந்திருக் கிறது" என்று கூறிச் சட்டென்று எழுந்தான் அரசன். அவ னுக்கு விடுகதையின் விடை தெரிந்தது.

அரசி விமலாதேவி சபையில் வீற்றிருந்தாள். அச்சமயம் தள கர்த்தர் ஒருவர் கைதி ஒருவனைப் பிடித்திருப்பதாகவும் சமுகத்திற் குக் கொண்டுவர அனுமதி வேண்டுமென்றும் கேட்டார். அனுமதி கொடுக்கப்பட்டது.

அரசியின் முன்பு கைதியைக் கொண்டுவந்தார்கள். அக் கைதி உயர்ந்த தோற்றமும் திடகாத்திரமும் உடைய ஓர் யுவன். இரண்டு காவற்காரர்களுக்கு நடுவில் இருந்தான். எனினும் தன் தலை நிமிர்ந்து கம்பீரத்துடன் விளங்கினன். அவன் கண்கள் பிரகாசமானவை

களாய் அஞ்சா நெஞ்சமுடையவன் என்பதைக் குறிப்பிட்டன. சிரசில் அடர்த்தியான சுருண்டமயிர். விரிந்த மார்பும் இளைத்த இடையும் நெட்டையான சரீரமும் உடையவன்.

அரசி அவனை ஏற இறங்கப் பார்த்து மிக்க நேர்த்தியான சரீரக் கட்டு வாய்ந்தவனென்று உணர்ந்தாள்.

"இவனை எங்குப் பிடித்தீர்கள்?" என்று தளகர்த்தரைக் கேட்டாள்.

"நேற்று இரவு தெற்குக் கோட்டை வாயிலண்டை இவன் வந்தான். அரசன் மோஹன் ஸிங்கின் கோபத்திற்கு ஆளான தன்னைக் காப்பாற்றவேண்டும் என்று பிரார்த்தித்தான்."

"தன் எஜமானனைத் துறந்த துரோகியா?" என்று சற்றுச் சினந்து வினவினள் அரசி.

"மாட்சிமை பெற்ற அரசியின் சமுகத்திலன்றி எங்களிடம் ஏதும் கூற மறுக்கிறான்" என்றார் தளகர்த்தர்.

"அவன் கதையைச் சொல்லட்டும்" என்று அரசி ஆஞ்ஞாபித்துத் தன் தாதி கையிலிருந்த மயிலிறகினால் அமைந்த விசிறியை வாங்கித் தன் முகத்தைச் சற்று மறைத்துக் கொண்டவளாய்க் கைதியின் வரலாற்றைக் கேட்கலாயினள்.

"உன் செய்தியைச் சொல்லு, கைதி" என்றார் தளகர்த்தர்.

"என் விருப்பத்தாலன்றி நான் கைதியாகவில்லை" என்று தீரத்துடன் கூறினான் அவ்விளைஞன்; "ஓர் ஆபத்தில் சிக்கியதால் மாட்சிமை தங்கிய அரசியைத் தவிர்த்து அபயம் அடைய இடம் இல்லாதவனானேன். எனினும் என் எஜமானர் மோஹன் ஸிங் அவர்களின் க்ஷேமத்தையே எப்பொழுதும் கோருகிறேன்."

"அவர் க்ஷேமத்தைக் கோரும் பக்ஷத்தில் அவர் சீக்கிரத்தில் சுதேசம் செல்லவேண்டுமென்று பிரார்த்தியும்" என்றாளரசி. இவ்வார்த்தையைக் கேட்டுச் சபையோர்கள் புன்னகை புரிந்தனர். அரசியின் தோழிமார்கள் களுக்கென்று சிரித்தனர். ஆனால் அவ்விளைஞனோ ஒன்றையும் கவனியாமல் மேலே கூறலானான்:

"அரசர் என்னிடம் மிக்க நம்பிக்கை பாராட்டினர். மிக்க புத்திசாலி என்று கொண்டாடினர். யாதையும் அறியும் சக்தி வாய்ந்தவனென்றும் எவ்விதச் சிக்கலான கேள்விக்கும் விடையறிந்தவனென்றும் எண்ணினர். இதற்கு முன்பு நடந்த மூன்று பெரிய போரிலும் அவர் பக்கத்திலேயே நான் சென்றேன். பிறகு என்னை இந்நகரத்திற்கு அழைத்து வந்தார். என்னுடைய அறிவாலும் தீரத்தினாலும்

இதையும் வெல்லலாம் என்று நம்பி யிருந்தார். இது விஷயத்தில் நான் வீண் பெருமை பாராட்டவில்லை. அரசரே சபையோர் மத்தி யிலும் தனிமையிலும் என்னிடம் கூறிய வார்த்தைகள் இவையே.''

"அவ்வரசருக்கு உம்மிடம் நல்ல அபிப்பிராய முண்டு என்று தெரிகிறது'' என்றாள் ராணி. மறுபடி சபையோர்கள் சிரித்தனர். ஆனால் அக்கைதி அதைச் சிறிதும் பொருட்படுத்தவில்லை.

மிகவும் நயமான வார்த்தைகளை உபயோகித்துக் காதிற்கு இனிமையான குரலில் பேசினான் அவன். அவன் அழகிலும் குர லிலும் வசப்பட்ட தோழிமார்கள் அவனைக் கேலி செய்து தாங்கள் சிரித்ததற்கு மிகவும் வருந்தினர்.

"அரசியே, தாங்கள் சொன்னவற்றைத் தூதர்கள் வந்து அரச ரிடம் கூறினர். அத்தினமே எனக்குத் துர்த்தினமாயிற்று. 'கொத்த ளங்களுக்குள் புகுவதன் முன்பு கோட்டையை எப்படிப் பிடிக் கிறது?' என்று அரசர் என்னை வினவினர். அது வீண் பேச்சு என் றும் அதைக் கவனியாதேயும் என்றும் நான் மறுமொழி தந்தேன். என் வார்த்தையை நம்பி அரசர் மூன்று முறை கொத்தளங்களைப் பிடிக்க முயன்று யுத்தம் புரிந்தனர். அது வீணாயிற்று. அநேக வீரர்கள் தம்முயிர் துறந்தனர். மறுமுறை தங்களுடைய செய்தி வந்தது. நான் அது மமதையால் கூறப்பட்ட கர்வப்பேச்சு என்றேன். அரசர் என் வார்த்தையைக் கேட்டு யுத்தம் புரிந்து தோற்றார். மூன்றாம் முறை தங்கள் செய்தி வந்தது. அதன் விடையைக் கூறு மாறு அரசர் என்னைக் கேட்டார். விடையை நான் அறிந்தே னில்லை. வீணில் சேனைகள் நாசமாவதைக் கண்டு ஸஹியாத நான் விடை தெரியவில்லை என்று அரசரிடம் கூறினேன். நான் அவ் விதம் கூறியதும் அரசர் கோபித்து என்னை மதியற்றவன் என்று கூறியதன்றி இன்னும் அநேகம் கடுஞ்சொற்கள் கூறித் திட்டினர். அதற்குச் சரியான விடைபகராவிடின் நான் என் பந்துக்களையும் தேசத்தையும் மறுபடி பார்க்க ஆசைப்படக் கூடாதென்றும் இந் நகர வாயில்களுக்கு வெளியிலேயே மானமிழந்தவனாக என் வாழ் நாட்களைக் கழிக்கவேண்டும் என்றும் சொன்னார். இவ்வாறு என் அரசர் சினந்து என்னைக் கொன்றுவிடுவதாகவும் கூற நான் அவர் கோபத்திற்கு அஞ்சி இரவில் தப்பி வந்து தங்கள் நகரத்தின் தெற்குவாயிலிலிருக்கும் தளகர்த்தரிடம் அடைக்கலம் புகுந்தேன்.''

"உமக்கு என்னவேண்டும்?'' என்றாள் அரசி.

"விடுகதைக்கு விடையைக் கூறினால் அதை என் அரசரிடம் கூறி அவர் பிரீதியை மறுபடி பெறுவேன்.''

"அதைக் கூற முடியாதென்ருலோ ?" என்று புன்சிரிப்புடன் வினவினள் அரசி.

"இவ்விடம் கொஞ்சகாலம் தங்கியிருக்க அநுமதி பெற்றேனுயின் என்னறிவைக் கொண்டே அதற்கு விடை தெரிந்துகொள்ள முயலுவேன்."

அரசி தலைகுனிந்து சற்றுச் சிந்தித்திருந்தாள். தலை நிமிர்ந்ததும் ஆவலினுலும் உற்சாகத்தினுலும் ஜ்வலிக்கும் அவ்விளைஞனின் கண்கள் அவள் கண்களைச் சந்திக்க, அரசியின் வதனம் லஜ்ஜையினுல் சிவந்தது.

"ஏழு இரவும் ஏழு பகலும் நீர் இவ்விடம் தங்கலாம். அவைகள் முடிந்ததும் எமது ஆட்கள் உம்மரசரிடம் உம்மைக்கொண்டு விடுவார்கள். அக்காலத்திற்குள் விடையை நீர் தெரிந்து கொண்டீரென்ருல் உமக்கும் நலம்; உமது அரசருக்கும் நலம். இல்லையேல் உங்களிருவருக்கும் கெடுதியே உண்டாகும். இது சம்மதமா ?"

"சம்மதமே. நான் அந்நிபந்தனையின்படி இவ்விடம் தங்கியிருக்கிறேன்."

## III

ஏழு இரவும் ஏழு பகலும் அந்தக் கைதி ஜான்ஸி நகரத்தில் தங்கினுன். பிரதி தினமும் அரசியுடன் சபை மத்தியிலும் தனிமையிலும் சம்பாஷணை செய்தனன். தன் அரசனைப் பற்றியும் அவனுடைய ராஜ்யத்தைப் பற்றியும் அதிகம் கூறினன். அரசி தன் நகரிலுள்ள சேனைகளையும் திரவியங்களையும் காண்பித்தனள். அவ்விளைஞனுடைய சொந்த வரலாற்றை அரசி வினவிய சமயம், "என் அரசரன்றி எனக்கு வேறெதுவும் இல்லை" என்பது தவிர்த்து வேறு கூற மறுத்தனன். இது விஷயமாக ஆச்சர்யமடைந்த சீமாட்டி அவன் யாரென்றும் எத்தேசத்தவனென்றும் அறிய மிக்க ஆர்வமுள்ளவளானுள்.

அரசனின் சேனை நகரிற்கு வெளியே வெறுமென இருந்தது.

மூன்ரும் நாள் அரசி அவனிடம் சம்பாஷித்திருக்கையில், "உம்மரசர் தம்முடைய பெரிய ராஜ்யத்தை விட்டுச் சிற்றரசாகிய இந்நகரின்பேரில் யுத்தம் புரிவது ஏன்?" என்று கேட்டாள்.

"ராஜ்யத்தில் ஒற்றுமை உண்டானுல் மாத்திரம் க்ஷேமமுண்டாகும். அந்த க்ஷேமத்தின் பொருட்டு என் அரசர் யுத்தம் புரிகிருர். இம்மூன்று வருஷத்தில் ராஜஸ்தானம் முழுவதும் தம் ஆதீனத்திற்குள்ளாக்கி அதில் ராஜ்ய கார்யங்களை ஒத்து அமைத்து ஜனங்களுக்கு அமைதியும் சந்தோஷமும் உண்டாகும்விதம் செய்

திருக்கிறார். இச் சிற்றரசே பாக்கி யிருக்கிறது. சினேகிதர் மத்தியில் ஒரு வைரியாகவும், ஆட்சிக்கு உட்பட்டவர்கள் மத்தியில் கட்டளைக்கு அடங்காததாகவும், அரசர் பலத்திற்கு மத்தியில் ஒரு நிர்ப்பலத்தை உண்டாக்குவதுமாக இருக்கிறது. ராஜ்யத்திற்குக் கட்டுப்படாத நகரம் வீண். நகர மில்லாவிடில் ராஜ்யத்திற்குப் பலக்குறைவு.''

இவ்வார்த்தைகளைக் கவனித்துக் கேட்ட விமலா தேவி சற்றே தாமதித்துப் பதிலுரைக்கலானாள்: "இவ்வித வார்த்தைகளைக் கூறி அரசர் தூதர்களை அனுப்பியிருந்தால் நான் அவரை வரவேற்றிருப்பேன். அங்ஙனம் செய்யாமல் 'கீழ்ப்படிய வேண்டும்' என்ற கட்டளையுடன் ஏன் தூதரை அனுப்பினார்?''

மறுதினம் தனிமையிலிருக்கையில் அரசி அந்த யுவனைக் கூட்டிவரச் செய்தாள்.

"உங்கள் அரசருக்குக் கீழ்ப்படிந்து என் ராஜ்யத்தை நான் கொடுத்தேனாகில் சிற்றரசியாக இந்நாள்வரை ஆண்டு செலுத்திய என்னை எவ்விதம் நடத்துவார்?''

"தங்களை அதிக மேன்மையோடு பாவிப்பதுடன் தம் காதலுக்குப் பாத்திரமாக்குவார்'' என்றான் அவ்விளைஞன்.

"அவ்வரசருடைய காதலை நாம் வேண்டவில்லை'' என்று முகத்தைச் சுளுக்கினாள் அரசி.

"தேவியே, அது எத்தகைமையான காதல் என்று தாங்கள் அறியீர்'' என்று மிக்க மிருதுவானதும் அன்பு கூர்ந்ததுமான குரலில் மொழிந்தான் அவ்விளைஞன்.

ஐந்தாவது தினம் மீளவும் அவன் கூப்பிடப்பட்டான்.

"நகரத்தை அரசருக்குக் கொடுத்து நான் கீழ்ப்படிந்தேனாகில் அவர் இந்நகரத்திற்கு அமைதியும் க்ஷேமமும் உண்டாகச் செய்வது தவிர்த்து வேறு ஏது செய்வார்?''

"இந்நகரத்திலுள்ள திரவியங்களை அதிகரிக்கச் செய்வார். இதன் கோட்டைகளை இன்னும் பலமுள்ளவைகளாகச்செய்து எதிரிகள் அசைக்கவொண்ணாத வண்ணம் இயற்றுவார்.''

"நீர் ஏது செய்வீர்?''

"அரசருக்குத் தேவையான புத்தி கூறக்கூடுமேயாகில் நான் அவர் அருகிலேயே இருப்பேன்.''

"அவர் உமக்கு அதிக சம்மானம் அளித்துக் கௌரவிப்பாரா?''

"தங்களுடைய குறிப்பின் விடையை அறிவேனாகில் எல்லாச் சம்மானங்களும் என்னைச் சேரும்."

"நீர் இன்னும் அதை அறியவில்லையோ?"

"தங்களுடைய கண்களிலிருந்து அதைத் தெரிந்து கொள்ள முயலுகிறேன்" என்று தைர்யத்துடன் கூறி அவன் அரசியின் கண்களை உற்று நோக்கினன்.

அவன் அவ்விதமே அறிந்து விடுவானோ என்று பயந்து அரசி தன் தலையைச் சட்டென்று மறுபுறம் திருப்பிக் கொண்டாள்.

ஏழாவது தினம் சாயங்காலம் ராணி தன் தோழிமார் அறியாமல் இரகசியமாக அவனைத் தருவித்தனள். அவளிருந்த அறை மிக்க மங்கலாக இருந்தது. அவளுடைய ஆபரணமும், வெளுத்த பட்டாடையும், வசீகரமான வதனமுமே இருட்டில் பிரகாசித்தன.

இளைஞன் வந்து எதிரே நின்றான்.

"நம்முடைய ஏற்பாட்டின்படி நீர் உமது அரசரை நாளைய தினம் அடைய வேண்டும். அரசரின் கோபத்தைத் தணிக்க என்ன கொண்டு போகப் போகிறீர்?"

"கொத்தளங்களின் கதவுகளைத் திறக்கக் கூடிய சாவி என் கையில் இல்லாவிடில் மற்றேதும் வீண்" என்றான் அவன்.

இருவரும் வெகு நேரம் வேறேதும் பேசாமலிருந்தனர். அவ்வறையில் நிச்சப்தம் குடி கொண்டிருந்தது. இளைஞன் அரசியின் அருகில் சென்று அவள் ஆஸனத்தைத் தொட்டவாறு நின்றனன்.

"நான் போய் வருகிறேன், சீமாட்டி" என்றான்.

அரசி தலை நிமிர்ந்து அவனை நோக்கி மிக்க மிருதுவான குரலில் "போய் வாரும்" என்று மொழிந்தாள்.

"நாம் மறுபடி சந்திப்போம்."

"எப்பொழுது?" என்று சற்றே ஆவலுடன் கேட்டு அவன் முகத்தை உற்று நோக்கினள் தேவி.

"இன்னும் ஒரு தினத்தில் கொத்தளங்களுக்கு வெளியே சந்திப்போம்."

"கொத்தளங்களுக்கு வெளியிலா?"

"ஆம்" என்று கூறிக் குனிந்து அரசியின் கையை எடுத்து முத்தமிட்டு, "நகரத்தின் கோட்டை அதன் அரசியின் ஹிருதயமே" என்றான்.

சரேலென்று அரசி ஆஸனத்தை விட்டு எழுந்தனள். ஆனல் அவ்விளைஞன் அவளை அமர்ந்திருக்குமாறு சமிஞ்ஞை செய்து ஒரு தீர்க்கமான பார்வை பார்த்துவிட்டு வெளியே சென்றனன்.

தனியே விமலாதேவி தன் மார்பில் இருகரங்களையும் அணைத்து அவன் சென்ற வாயிலை நோக்கியவாறு இருந்தனள். சாளரத்தின் வழியே சந்திர கிரணங்கள் வந்து அவள் முகத்தில் பிரகாசித்தன.

"என் ஹிருதயம் அதன் நாயகரை நன்கு அறியும். நான் சம்பாஷித்தது அரசருடன்" என்று தனக்குள் உரைத்தாள்.

IV

அரசாங்க விஷயமாக வேறு இடம் சென்றிருந்த மோஹன் ஸிங் மறுநாள் தன் சேனையை அடைந்தான். பிற்பகலில் பட்டாளங்களைத் தயாரித்து அணிவகுத்து நகரத்தின் மதிற்சுவர்களுக்கு வெளியே நடத்திச் சென்றான்.

சூர்யாஸ்தமனத்திற்கு ஒரு ஜாமம் முன்பு அரசன் ஸர்வ லக்ஷணங்களும் பொருந்தியதும் திடமான சரீரத்தையுடையதும் கறுப்பு வர்ணமுள்ளதுமான தன் போர்க் குதிரை மீதேறிச் சேனைகளுக்கு முன்பு சென்றனன். நகரவாயில்களுக்கு இருநூறடி தூரத்தில் சேனையை நிறுத்தித் தன் தூதன் ஒருவனுடன் தனிமையில் நகரவாயிலை நோக்கிச் சென்றான். மதிற் சுவர்களின் பேரிலும் பக்கங்களிலும் சிற்றரசியின் போர்வீரர்கள் திரண்டு ஆயுதங்களுடன் தயாராக இருந்தனர். வாயிலுக்கு இருபதடி தூரத்தை அடைந்து அரசன் காவற்காரனிடம், "மாட்சிமை பொருந்திய அரசி விமலாதேவியின் பேட்டியை அரசர் மோஹன் ஸிங் விரும்புகிறார்" என்று கூற உத்தரவிட்டான்.

அச்செய்தியைக் கேட்டு அரசியின் போர்வீரர்கள் பிரமித்து இங்கும் அங்கும் கூடிப் பேசலாயினர். அரசன் அமைதியுடன் தன் குதிரைமீது கம்பீரமாக வீற்றிருந்தனன். இவ்விதம் ஒரு நாழிகைப் பொழுது கழிந்தது. பிறகு மதிலிலமைந்திருந்த வாயில்கள் மிக்க ஆர்ப்பாட்டத்துடன் திறக்கப்பட்டன. ஒரு வெண்மை நிறமான குதிரையின்பேரில் சிவந்த பட்டாடைகளும் அநேக ஆபரணங்களும் தரித்துத் தோழிமார், மந்திரி, பிரதானிகள் சூழ விமலாதேவி நகரவாயில்களினின்றும் வெளி வந்தாள்.

தேவியைக் கண்டதும் அரசன் தன் குதிரையைத் தட்டி வேகமுடன் சென்று அவளை வணங்கினன். அரசனைப் பார்த்ததும் அவள் கண்களில் பிரகாசமான ஓர் ஒளி பிறந்தது. அவள் வதனம் சற்றே சிவந்தது. எனினும் ஆச்சர்யம் ஒன்றும் ஏற்படவில்லை.

தோழிமார்கள் வியந்ததற்கு, "என் மனம் அறியும்" என்று கூறினள்.

அரசன் அணுகியதும், "ஆஞ்ஞை என்ன? எம்மரசே!" என்றாள்.

மோஹன்லிங் குனிந்து தன் கையால் அவளை அணைத்துத் தூக்கித் தன் குதிரையின் பேரில் தனக்கு முன் அமர்த்தினன். இரு கட்சி ஜனங்களும் ஆரவாரித்தனர்.

"நான் கோட்டையை ஜயித்துவிட்டேனாகையால் கொத்தளங் களுக்குள் இனிப் புகலாம்" என்றான் அரசன்.

ஜயகோஷங்களுக்கு நடுவில் இருவரும் நகர வாயிற்குள் நுழைந்தனர்.




## கூந்தல்

### வி. விசாலாக்ஷி அம்மாள்

கலியுகத்தின் அந்திய காலத்தை வர்ணித்துக் கொண்டு வரும் பொழுது, 'பெண் பிள்ளைகளுக்குக் கூந்தல் செவ்வையாக இருப்பதனாலேயே சவுந்தரிய கர்வம் உண்டாயிருக்கும். கலி முற்ற முற்றப் பொன்னும் மணியும் நல்ல ஆடைகளும் அழிந்து போகும் போது மங்கையர்கள் கூந்தலையே அலங்காரமாகப் பெற்றிருப்பார்கள்' என்று ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் கூறியுளது.

பொன்னுக்கும் மணிக்கும் அழகிய ஆடைகளுக்கும் தற்சமயத்தில் யாதொரு குறைவுமில்லை. இவைகள் அழிந்து போகக் கலி இன்னும் முற்ற வேண்டும் போலிருக்கிறது. ஆனால் கூந்தலை வளரச் செய்யும் தைலங்கள், வழுக்கைத் தலையை மறைக்க 'விக்குகள்', பொய் மயிர்கள் இவைகளின் விளம்பரங்கள் எங்குப் பார்த்தாலும் கண்களில் தென்படுவதிலிருந்து, இனிக் கலி முற்றினதும் அழகுக்கு முக்கிய அம்சமாக இருக்கப் போகும் கூந்தலுக்கு இப்பொழுதே பஞ்சம் ஏற்பட்டு விட்டது என்று ஊகிக்கும்படியாக இருக்கிறது. இதற்குக் காரணம், நாகரிகத்தின் முன்னேற்றமே; மனிதர்கள் நவ நாகரிக முறைகளில் முன்னேற்றம் அடைய அடையத் தலையில் உள்ள மயிரும் குறைந்து கொண்டே வருகிறது என்று நான் படித்திருக்கிறேன். வருங்கால மனிதர்களில் பெரும்பான்மையோர் முற்றிலும் வழுக்கைத் தலையராக இருக்கும் பக்ஷத்தில், ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் கூறியுள்ளபடி கூந்தல் செவ்வையாக இருக்கும் ஸ்திரீகள் சவுந்தரியச் செருக்குற்றிருப்பார்களோ, அல்லது வழுக்கைத் தலைக் கோஷ்டியில் கூந்தல் உள்ளவர்கள் அவலக்ஷணமானவர்களாகக் கருதப்படுவார்களோ, இப்பொழுது நிர்ணயித்துக் கூறுவதற்கில்லை.

அதுவரையில், எவ்வளவு அழகிய ஆடை ஆபரணங்களை அணிந்து அலங்காரம் செய்துகொண்டாலும், தலையை மூடும் அளவிற்காவது மயிர் இல்லாவிட்டால், அது ஒரு நாடோடிச் சொல்லுக்கேற்ப 'உரித்தகோழி' மாதிரித்தான் இருக்கிறது. தற்காலத்தில் அதிகக் கூந்தல் இல்லாவிட்டாலும் இயற்கையில் எல்லாருக்கும் ஒரு நிதானமான அளவிற்கு மயிர் என்னமோ முளைக்கிறது. சரியான கவனிப்புப் போதாததனால் முப்பது வயதாவதற்குள் கூந்தல் உதிர்ந்து மறுபடி சரியாக முளைக்காமல் ஆங்காங்கே இடுக்கிடுக்காகத் தெரியும்படி ஆகிவிடுகிறது. 'தொட்டுக் கெட்டது கண், தொடாமல் கெட்டது மயிர்' என்றும், 'தானே வளர்த்த மயிர் மேல் காது ஈர்க்குடனே' என்றும் கவனிப்பில்லாவிட்டால் கூந்தல் சரியாக வளராது என்பதற்கு நமக்குள் அநேக பழமொழிகள் இருக்கின்றன. சற்றுச் சிரத்தை எடுத்துக் கொண்டால், ஸர்ப்பம் போல் நீண்டு வளரா விட்டாலும், பார்வைக்கு வேடிக்கையாக இல்லாத அளவாவது கூந்தல் வளரும்.

கூந்தல் வளருவதற்கான தைலங்கள் அனந்தம். இவைகளின் விளம்பரங்களைப் படித்தால் எதை வாங்குவது என்று தெரியாமல் திண்டாட வேண்டியதுதான். எந்தத் தைலமானாலும் சரி, அதே தைலத்தை ஒரு வருஷ காலமாவது விடாமல் உபயோகித்துப் பார்க்க வேண்டும். தைலங்களை அடிக்கடி மாற்றவே கூடாது. மேலும், இரண்டு மூன்று தினுசுத் தைலங்களை ஏககாலத்தில் உபயோகிக்கவும் கூடாது. 'முடிச்சு முடிச்சாய் நட்டால் கோட்டை கோட்டையாக விளையுமா?' என்னும் முதுமொழியை நினைத்துக் கொள்ளவேண்டும். சில தைலங்களை ஒரு குறித்த அளவு தேங்காய் எண்ணெய், நல்ல எண்ணெய் இவைகளுடன் கலந்து உபயோகிக்கும்படி அறிவிக்கப்பட்டிருக்கும். தைலம் நல்ல கெட்டியாக இருந்தால் தான் நன்றாக மயிர் முளைக்கும் என்று அதை அப்படியேயோ, அல்லது குறைந்த அளவு எண்ணெயிலேயோ கலந்து உபயோகித்தால் கூந்தல் வளருவதற்குப் பதிலாக, 'சாஸ்தா' விடம் வரன் கேட்கப்போன கதையாக முடியும். பச்சிலைச் சாற்றின் தைலங்களை வீட்டில் தயாரித்து உபயோகிக்கலாம். கரிசிலாங்கண்ணி, மருதோன்றி இவைகளின் தைலம் கூந்தலை, வளர்ந்து கறுக்கும்படி செய்யும்.

நல்ல எண்ணெய், தேங்காய் எண்ணெய், தைலங்கள், ஏதானாலும் சரி, விரல்களில் எடுத்துக் கூந்தலுக்குள் விட்டு மயிர்க்கால்களில் ஊறும்படி நன்றாகத் தடவ வேண்டும். வாரும் சீப்பானது நெருக்கமான பற்களுடையதாக இருக்கக் கூடாது. சீப்பை அடிக்கடி

அழுக்கெடுத்துச் சுத்தமாக வைக்க வேண்டும். பிரஷினால் தலையை நன்றாக வாருவதினால் இரத்த ஓட்டம் மயிர்க்கால்களில் ஏற்பட்டுக் கூந்தல் நன்றாக வளரும். தலைமயிரை அங்கங்கே சேர்த்துப் பிடித்துத் தூக்கி இழுப்பதனால் நல்ல இரத்த ஓட்டம் உண்டாகிக் கூந்தல் செவ்வனே வளரும் என்று கூறுகிறார்கள். ஆனால், இதில் சற்று வலி ஏற்படும்; அழகாக இருப்பதன் பொருட்டு வலியைப் பொருட்படுத்தாதவர்கள் இந்த முறையைப் பரீக்ஷித்துப் பார்க்கலாம். சுபாவத்தில் கூந்தல் இருந்து, பிறகு எக் காரணத்தினாலோ உதிர்ந்து, மறுபடியும் முளையாமல் இருப்பவர்கள், 'அல்ட்ரா வயலட் ரே' சிகிச்சை செய்து கொண்டால் பழைய மயிர்க்கால்கள் வலியடைந்து கூந்தல் மறுபடியும் முளைக்கும்.

மொத்தத்தில் கூந்தலைச் சுத்தமாக வைத்துக்கொள்ளவேண்டும். தினம் பதினைந்து நிமிஷத்திற்காவது குறையாமல் நன்றாகக் கோதி வாரவேண்டும். இவ்விதம் சற்றுச் சிரத்தை யெடுத்துக் கொண்டால் மயிர் நல்ல ஸ்திதியிலிருக்கும். இது அதிகச் சிரமமும் இல்லை. பாலியத்தில் ஏற்படும் நரைக்கும் அநேக தைலங்கள் இருக்கின்றன. நன்றாக மயிர் நரைத்து விட்டால் ஒன்று சும்மாயிருக்கலாம், அல்லது சாயம் தோய்க்கலாம். ஆனால் சாயம் போட்டால் பிறகு அடிக்கடி போடவேண்டியது அவசியமாகும். இல்லாவிட்டால் அடிமயிர் வெளுத்தும், மற்றைய மயிர் கறுத்தும் காணும். அதிக நரை இல்லாதவர்கள், அவுரித் தைலம், கரிசிலாங்கண்ணித் தைலம், பிருங்காமலகத்தைலம் ஆகியவைகளை உபயோகிக்கலாம். நரைமயிருக்கு ஆத்திரேய ரிஷி கூறியுள்ள முறையில் ஒரு தைலமிருக்கிறது. இதற்குக் கரிசிலாங்கண்ணி ரசம், திரிபலைக் கஷாயம், அல்லிக் கிழங்குக் கஷாயம் வகைக்கு ஓர் ஆழாக்கு வேண்டும். இவைகளை மூன்று ஆழாக்கு நல்லெண்ணெயுடன் கலந்து அதில் கால் ஆழாக்குக் கிட்டப்பொடியைக் குழப்பி ஏழுநாள் வரையில் ஊறவைக்க வேண்டும். பிறகு காய்ச்சித் தைல பதத்தில் இறக்கி வடித்துத் தினம் ஸ்நானம் செய்ய, நரைத்த மயிர் கறுக்குமாம்.




# எள்ளுத் திருடியின் கதை

## (திலமுட்டி ஜாதகம்)

எஸ். வையாபுரிப் பிள்ளை

முற்காலத்தில் அரசர்கள் தங்கள் நகரிலே சிறந்த கல்வியாளர்கள் இருந்தபோதிலும் தங்கள் புத்திரர்களை அன்னிய நாட்டில் இருக்கும் ஆசிரியர்களிடத்திலே கல்விகற்க அனுப்புவது வழக்கமாயிருந்தது. இதனால் அரச குமாரர்களுக்குக் கல்வி நிரம்பியதோடு அவர்களுடைய செல்வச் செருக்கெல்லாம் அடங்கிப் பலவகைக் கஷ்டங்களையும் பொறுக்கக் கூடிய சக்தியும் வாய்ந்தது. அன்றியும் உலகத்தோடு ஒத்துவாழக்கூடிய பக்குவமும் அவர்களுக்கு ஏற்பட்டது. இந்த நல்வழக்கம் அநுட்டானத்திலிருந்த அக்காலத்திலே காசியில் ஆட்சிபுரிந்த அரசன் ஒருவனுக்குப் பிரமதத்தன் என்ற புத்திரனொருவன் இருந்தான். அம் மகனுக்குப் பதினறு வயது ஆயிற்று; அப்போது அரசன் அவனைக் கூப்பிட்டு, செருப்பும் குடையும் ஆயிரம் பொன் காசும் கொடுத்துத் தக்கசிலைக்குப் போய்ப் படித்துவா என்று அனுப்பினன். அரசகுமாரனும் தன் தந்தையிடம் விடை பெற்றுக்கொண்டு தக்கசிலைக்குப் போய்ச் சேர்ந்தான். அங்கே பெரும்புகழ் பெற்று விளங்கிய ஆசிரியருடைய வீடு எது வென்று விசாரித்து அவ்விடத்திற்குப் போனன். ஆசிரியர் அன்று மாணுக்கர்களுக்குக் கற்பிக்கவேண்டும் பாடங்களை முடித்துவிட்டு, வீட்டின் முன்வாசலில் அங்குமிங்கும் உலாவிக் கொண்டிருந்தார். அரசகுமாரன் அவரைப் பார்த்தவுடன் காலில் அணிந்திருந்த செருப்பைக் கழற்றிவிட்டுக் குடையை மடக்கி வைத்து மிக்க வணக்கத்தோடு ஒடுங்கி நின்றுன். ஆசிரியர் அவன் பசியால் களைத்திருக்கிருன் என்று கண்டு சிரமபரிகாரத்துக்கு வேண்டுவன கொடுக்கும்படி செய்தார்.

அவனும் உண்டு களைப்பாறினன். பிற்பாடு ஆசிரியரிடம் வந்து அவரருகில் வணங்கி நின்றுன். அவர் அவனை நோக்கி,

"நீ எங்கிருந்து வருகிருய்?" என்று கேட்டார்,

"காசியிலிருந்து."

"நீ யாருடைய புத்திரன்?"

"காசியரசனுடைய புத்திரன்."

"என்ன காரணமாக வந்தாய்?"

"கல்வி கற்க வந்தேன்."

"சரி, குருதக்ஷிணை கொண்டுவந்திருக்கிறாயா? அல்லது பணி விடை செய்து கல்வி கற்றுக்கொள்ளுகிறாயா?"

"குருதக்ஷிணை கொண்டுவந்திருக்கிறேன்" என்று சொல்லித் தான் கொண்டுவந்த ஆயிரம் பொன் காசுகளையும் குருவின் பாதத்தில் வைத்து வணங்கினான்.

அங்கே இருந்த மாணவர்கள் பகற்காலத்தில் பணிவிடை செய்வதும் இராக்காலத்தில் குருவினிடம் கல்வி கற்பதும் வழக்கம். தக்ஷிணை கொண்டுவந்தவர்களைக் குருவின் மூத்த புத்திரர்களாகவே அவர்கள் பாவித்து நடத்திவந்தார்கள். எனவே, அரச குமாரனிடம் மிக்க மரியாதை காட்டினார்கள். குருவும் அன்போடு அவனுக்குத் தினம் தினம் பாடஞ்சொல்லி வந்தார்.

ஒருநாள் அவன் அவரோடு கூட ஸ்நானம் செய்யச் சென்றான். போகும் பாதையில் ஒரு கிழவி கொஞ்சம் எள்ளு விதைகளைக் கழுவிச் சுத்தஞ்செய்து தன் வீட்டு முற்றத்தில் காய்வதற்காகப் பரப்பி வைத்துத் தான் அங்கிருந்து காவல்காத்துக் கொண்டிருந்தாள். அந்த விதைகளைப் பார்த்ததும் அரசகுமாரனுக்கு அவைகளைத் தின்பதற்கு ஆசை உண்டாயிற்று. சிறிது வாரி எடுத்துத் தின்றான். கிழவி இதைப் பார்த்ததும், "ஐயோ! பசி போலிருக்கிறது" என்று நினைத்து ஒன்றும் சொல்லாமலிருந்து விட்டாள். மறுநாளும் இப்படியே நடந்தது. கிழவியும் ஒன்றும் சொல்லவில்லை. மூன்றாம் நாள் பழையபடி அவ்வாறே செய்தான். அப்போது அந்தக் கிழவி, "இந்த உபாத்தியாயர் என் எள்ளைக் கொள்ளை யடிப்பதற்குத் தம் மாணாக்கர்களை ஏவி விடுகிறார்" என்று சொல்லிக் கூக்குரலிட்டு அழத் தொடங்கினாள்.

குரு, திரும்பிப் பார்த்து, "என்ன அம்மா அது?" என்று கேட்டார்.

"குருவே, நான் கொஞ்சம் எள்ளு விதைகளை உலர்த்திக் கொண்டிருக்கிறேன். உமது மாணாக்கன் ஒரு கைப்பிடி எடுத்துத் தின்றான்; முந்தாநாள் அப்படிச் செய்தான்; நேற்றும் அப்படிச் செய்தான்; இன்றும் அப்படியே செய்தான்; என் வீடு வெறும் வீடாகும்படி பூராவையும் நிச்சயமாய்த் தின்று முடித்துவிடுவான்,"

"அழ வேண்டாம்; அவன் தின்ற எள்ளுக்கு விலை கொடுக்கும்படி செய்கிறேன்."

"எனக்குப் பணம் வேண்டாம். இனியாவது அவன் அவ்வாறு செய்யாதபடி பார்த்துகொண்டால் போதும்"

"அப்படியானல், இதோ பார்" என்று சொல்லி அரசகுமாரனைப் பிடித்துக் கொள்ளும்படியாகஇரண்டு பையன்களுக்குக் கட்டளையிட்டு, அவன் முதுகில் மூங்கிற்கம்பு கொண்டு அடித்து, இனிமேல் களவு செய்யக்கூடாது என்று எச்சரிக்கை செய்தார்.

அரசகுமாரன் குருவினிடத்தில் மிக்க கோபங்கொண்டான். அவனுடைய கண்களில் இரத்தம் சுண்டிற்று. அவரை ஏற இறங்கப் பார்த்தான். அவரும், அவன் தம்மிடம் மிக்க கோபமாயிருக்கிறன் என்பதையும் கடுமையாய்ப் பார்க்கிறன் என்பதையும் உணர்ந்து கொண்டார்.

சில வருஷங்கள் சென்றன. அரசகுமாரன் கல்வியிலே சிரத்தையாயிருந்து கற்றுவந்தான். அவன் கல்வி முடிந்துவிட்டது. ஆனல், அவன் கோபம் மாத்திரம் ஆறவில்லை. குருவை எப்படியாவது கொன்றுவிட வேண்டுமென்று தீர்மானித்தான். காசி நகருக்குத் திரும்பிப்போகும் காலம் வந்ததும், அவன் தன் ஆசிரியரைப் பார்த்து, "குருவே, நான் அரசனனவுடன் தங்களுக்கு அழைப்பு அனுப்புவேன். தயைசெய்து என் அழைப்புக்கு இணங்கி வரும்படியாகக் கேட்டுக்கொள்கிறேன்" என்று சொல்லி அவரிடமிருந்து விடை பெற்றுத் திரும்பினன்.

அவன் காசிக்கு வந்து சேர்ந்ததும் தன் பெற்றோர்களிடத்திலே தான் கற்றுக்கொண்ட வித்தைகளை யெல்லாம் காட்டினன். அரசனும் மிக்க மகிழ்ச்சிகொண்டு, "நீ கற்றுத் திரும்பிவந்ததைக் காணக்கொடுத்து வைத்தது. இனி நான் உயிரோடு இருக்கும்போதே உன்னுடைய அரசாட்சிச் செல்வத்தின் சம்பிரமத்தை காணுவதற்கு விரும்புகிறேன்" என்று சொன்னன்; தன் கருத்துப்படியே தன்னுடைய குமாரனை முடிசூட்டி அரசனக்கினன். அரசகுமாரன் அரசாட்சி வகித்த பின்பு தன்னுடைய பழைய பகைமையை நினைத்தான். "அந்தப்பயலுக்கு யமனக வந்திருக்கிறேன்" என்று வர்மஞ்சாதித்துத் தன் குருவை அழைத்து வரும்படியாக ஆளனுப்பினன்.

அரசன் பாலியனக இருக்கும்வரை அவனைச் சமாதானப்படுத்துதல் முடியாதென்று குரு எண்ணி அழைப்புக் கிணங்காது வராமலேயிருந்தார். ஆனல், அநேக ஆண்டுகள் சென்ற பிறகு, அவனைச் சமாதானப் படுத்திவிடலாம் என்ற கருத்துடன் அவர் வந்து

அரண்மனை வாசலில் நின்று தக்கசிலையிலிருந்து அவனது குரு வந்திருப்பதை அறிவிக்கும்படி சொல்லி யனுப்பினர். அரசனுக்குச் சந்தோஷம் வந்தது. அந்தப் பிராமண உபாத்தியாயரை உள்ளே அழைத்துவரச் செய்தான். அவரைக் கண்டதும் அவனுக்குக் கோபம் பொங்கிற்று. அவனுடைய கண்ணில் அனற் பொறி சிந்திற்று. தனது பக்கத்திலிருந்தவர்களை அழைத்து, "இந்த உபாத்தியாயர் என்னை அடித்தது இன்னும் எனக்கு நோவெடுக்கிறது. இவருடைய நெற்றியிலே, 'செத்தவன்' என்று எழுதிக்கொண்டு சாவதற்காகவே இங்கே வந்திருக்கிறார். இன்று அவர் உயிர் போகவேண்டும்'' என்று சொல்லி,

"சின்னப் பருவத்தில் எள்ளுத் திருடின
தீமைக்காக முதுகில் லடித்தாய்;
என்ன காரணத்தா லிங்குவந்தாய்? எமன்
இங்கேவா வென்றுன்னைக் கூப்பிட்டானே?''

என்று பாடிக்கொண்டு அவரைக் கொல்லுவதாகப் பயமுறுத்தினான். குரு அதைக் கேட்டு,

"கீழ்மைக் குணத்தை யகற்றிட வோரடி
கேண்மை மனத்தினர் தந்திடுவார்;
பான்மையி வீதி யதுவென்பர் பாவலர்;
பாபமா துங்கோப மென்றுணரே.''

என்று ஒரு கவியைப் பாடி, "பேரரசனே, உன்னை உணர்ந்து கொள்வாயாக; உன் கோபத்திற்குச் சிறிதும் நியாயமான காரணமில்லை. நான் அவ்விதமாக அடித்து உன்னைக் கற்பியா விட்டால் நீ பண்டம் பலகாரங்களைத் திருடுவாய். அப்படித் திருடிக்கொண்டே சென்று வரவர வீடுகளிற் கொள்ளையடிக்கவும் வழிப்பறி செய்யவும் கொலை செய்யவும் துணிந்து விடுவாய். முடிவில் அதிகாரிகள் உன்னை ஜனத்துரோகி என்றும் கொள்ளைக்காரனென்றும் குற்றம் சாட்டி, அரசன்முன் கொண்டு வந்து நிறுத்துவார்கள். அரசனும், "இவனைக் கொண்டுபோய்க் குற்றத்துக்குத் தகுந்தபடி தண்டனை செய்யுங்கள்'' என்று கட்டளையிட நேரிடும். நீ இன்று அனுபவிக்கிற செல்வமெல்லாம் உனக்கு அப்பொழுது கிடைக்குமா? இந்தப் போகபாக்கிய மெல்லாம் என்னாலல்லவா உனக்குக் கிடைத்திருக்கிறது?'' என்று அரசனிடம் சொன்னர். பக்கத்திலிருந்த மந்திரி, பிரதானிகள் முதலியோர் அரசனை நோக்கி, "அரசே, அவர் கூறுவது நியாயமென்றே தோன்றுகிறது. தாங்கள் சிறிது ஆலோசித்துப் பார்க்க வேண்டும்'' என்று சொன்னார்கள். அரசனுக்குக் குருவினுடைய நற்குணங்கள்

புலப்பட்டன. அவரைப் பார்த்து, "நான் செய்த அபராதத்தைப் பொறுத்து மன்னித்தருள வேண்டுகிறேன். எனது உடைமை எல்லாம் தங்களுக்கு அர்ப்பணம் செய்துவிட்டேன். இந்த இராச்சியத்தை அங்கீகரிக்கத் திருவுளம் பற்றவேண்டும்" என்று சொன்னான். அரசனது மனம் தீமையை யொழித்து நன்மையை மேற்கொண்டதற்குக் குரு மிகவும் மகிழ்ந்தார்; ஆனால் இராச்சியத்தைப் பெற்றுக் கொள்ள மறுத்துவிட்டார்.

குருவின் குடும்பத்தாரை அரசன் தனது நகருக்கு வரவழைத்தான். அவர்களுக்குப் பெருஞ் செல்வத்தையும் போக போக்கியங்களையும் கொடுத்தான். அவரைத் தனது தந்தைபோலக் கருதி அவருடைய கட்டளையைக் கடவாமல் ஆட்சி புரிந்தான். பிறகு தானம் முதலிய நற்கருமங்களைச் செய்து நற்கதியடைந்தான்.




குழை :—காதில் அணியப்படும் அணியைக் குழை யென்பர். குழை யென்பது தளிருக்கு ஒரு பெயர். பண்டைக்காலத்தில் தளிரைக் காதிற் செருகி வந்தமையால் பிற்காலத்தில் உண்டான காதணிக்கு அத்தளிரின் பெயராகிய குழை யென்பதே வழங்கலாயிற்று. குழை மகளிருடைய மங் கலக் குறிப்பிற்குரிய அணி. இக்காலத்தில் 'தாலி' என்னும் அணி எவ்வளவு மங்கலமாகக் கருதப்படுகிறதோ அவ்வளவு மங்கலமுடையதாகக் குழை பண்டைக் காலத்துக் கருதப்பட்டு வந்தது. தமது கணவர் இறந்தால் மக ளிர் குழையை வாங்கி விடுவார்கள்.

ச. து. க.

பூர்வ ஜன்ம வாசனை :—வெகு காலத்திற்குமுன் பர்மாவில் டவுண்டு விஞ்சி டவுன் ஷிப்பைச் சேர்ந்த வட்டகைக்குள் பேர்போன கொள்ளைக் கூட் டத் தலைவன் ஒருவன் இருந்தான். அவன் பெயர் ஊப்போபியின். அவனுக்கு இரண்டு சிஷ்யர்களிருந்தார்கள். ஒருநாள் இரவில் மஜி கொவன் கிராமத்தில் அவ்வூர் ஹெட்மென் வீட்டிற்குள் புகுந்து ஊப்போபியின் கோஷ்டியார் குறையாடினார்கள். அப்பொழுது கிராம முனிசிப், கிராம வாசிகளின் சாமர்த்தியத்தால் கொள்ளைக்காரர்கள் மூவரும் அகப்பட்டுக் கொண்டார்கள். பின்னர் இம் மூவரையும் கயிற்றால் பிணைத்துக்கட்டித் தீமூட்டி உயிரைப் போக்கினார்கள். உயிரிழந்த மூவரும் கொள்ளைக்காரர்களாயிருந்த போதிலுங் கூட, வாய்மையுடைவர்களா யிருந்திருக்கிறார்கள். மரித்தபின் அம் மூவரும் முன் ஜன்மவாசனை யுடையவர்களாய்ப் புனர்ஜன்மம் தாங்கி நிற்கிறார்கள். கொள்ளைக் கூட்டத் தலைவனாய் விளங்கியவனுக்கு இப் புனர் ஜன்மத்தில் கை கால் விரல்கள் குட்டையாயிருக்கின்றன. அவன் டவுண்டு விஞ்சியில் ஒரு பர்மியனுடைய பிள்ளையாய் விளங்குகிறான். அவனுக்கு இப்பொழுது வயது எட்டு. சிஷ்யர்களா யிருந்த இருவருக்கும் அங்ஙனம் ஏற்படவில்லை. அவ்விருவரும் அதே ஊரில்தான் வசித்து வருகிறார்கள். அம் மூவரும் மாடு மேய்ப்பவர்களா யிருந்து வருகிறார்கள். ஆதலால் அவர்கள் சந்திக்க நேரும் பொழுது முன் ஜன்ம சம்பவங்களைப் பற்றிப் பேசுகிறார்கள். அப்படிப் பேசுங்காலத்து உன்னாலேதான் நான் சாக வேண்டிய தேற்பட்ட தென்றும் ஒருவனைப் பார்த்து ஒருவன் பேசிக் கொள்கிறான்.

லோகோபகாரி.




**தமிழ்ச் சொற் பிறப்பாராய்ச்சி** : [யாழ்ப்பாணத்து நல்லூர் ஸ்ரீசுவாமி ஞானப் பிரகாசர் இயற்றியது ; பக்கம், 98.]

இது, சென்ற வருடம் இலங்கையிலும் தென்னிந்தியாவிலும் தமிழ்ச் சொற்பிறப்பு ஆராய்ச்சி சம்பந்தமாய்ப் பத்திரிகையில் ஆசிரியர் வெளியிட்ட சில செய்திகளை ஒருங்கு திரட்டி அவற்றோடு பலதுறைகளை நவமாய்ச் சேர்த்து வெளியிடப்பட்டது. இது "தமிழ்ச் சொற்பிறப்பகராதி" என்னும் நாமத்தோடு தாம் இயற்றிவருகின்ற பெரிய நூலுக்கு ஒரு முகவுரை போன்றதென்று ஆசிரியர் கூறுகின்றார். மக்கள் மிகப்பழைய காலத்தில் ஒருங்கிருந்த பொழுது அவர்களிடையே பேசப்பட்ட சில சொற்களடியாகப் பிற்காலத்தில் அவர்கள் பிரிந்து பல இடங்களுக்குச் சென்ற பின்னர்த் தத்தம் இயல்புக் கேற்பப் புதுப் புதுச் சொற்களை ஆக்கிக் கொண்டார்களென்றும், தமிழ்ச் சொற்களும் இங்ஙனமே சில அடிச்சொற்களிலிருந்து விரிந்தனவென்றும், அவ்வடிச்சொற்கள் ஒரு நூற்றுக்கு மேற்பட்டனவல்லவென்றும் இவர் எழுதுகின்றார். அ, இ, உ, எ என்னும் நான்கு எழுத்துக்களை முதலிற்கொண்ட சொற்களே இவ்வளவு சொற்களுக்கும் மூலகாரணம் என்பதையும் அச்சொற்கள் எவ்வாறு அடிச்சொல்லிலிருந்து சில சிலமாற்றங்களால் விரிந்தன என்பதையும் ஆசிரியர் நன்கு விளக்கியிருக்கின்றார். மொழி வரலாற்றாராய்ச்சி இது காறும் தமிழிற்செய்யப்புகுந்தோர் மிகச்சிலரே. இந்நூலாசிரியர் அத்துறையிற்புக்கு ஆராய்ந்து தமது கொள்கையை நாட்டும் திறமைவாய்ந்தவராகக் காணப்படுகின்றார். மொழி வளர்ச்சியைப்பற்றி இவ்வாறு நுணுகி ஆய்ந்து கூறும் இவரது பேருழைப்புப் பாராட்டத்தக்கது. தமிழ்நாடு இந்நூலை மொழிவளர்ச்சியை யறிவதற்கு ஒரு நற்கருவியாகக்கொள்ளுமென்று நம்புகிறோம்.

**ஹலீஸமஞ்ஜரீ**: [கடயக்குடி பிரம்மஸ்ரீ ஸுப்ரமண்ய ஸூரி அவர்களால் இயற்றப்பட்டது ; அவருடைய புத்திரர் எஸ். சங்கரநாராயணன் பி. ஏ., (சென்னை அகௌண்டெண்ட் ஜனரல் ஆபீஸ் ஸூபெரிண்டெண்ட்) அவர்களால் பதிப்பிக்கப்பட்டது; விலை, 10 அணா.]

இந்நூல் வடமொழியில் இயற்றப்பட்ட பக்தி ரஸங்கொண்ட பாடல்களாலானது ; மூலம் நாகரலிபியிலும் தமிழெழுத்திலும் அச்சிடப்பட்டுள்ளது ; இராமாயண பாகவதக் கதைகளை ஆதாரமாகக் கொண்டு பெண்

குழந்தைகள் எளிதிலே பாடியாடத் தக்கவாறு அமைந்த கும்மி முதலிய மெட்டுக்களிலே பல பாடல்களை இயற்றியுள்ளார் இவ்வாசிரியர்; பஜனைக்குரிய பாடல்களும் இவற்றோடு சேர்க்கப்பட்டுள்ளன. எதுகை மோனை முதலிய சொல்லலங்காரங்களும் பாட்டடிகளின் இறுதிகளில் ஒரே எழுத்து வருமாறு தொடுக்கும் சொல்லணியும் பாடுவோரின் சௌகரியத்திற்காக அமைந்துள்ளன. ஆங்காங்கு, தமிழ்ச் சொற்கள்போலத் தோன்றுமாறு இவ்வாசிரியர் எழுத்துக்களைத் தொடுத்திருப்பது ஒரு விநோதமாகும். உதாரணமாக,

"சங்கர லோகேச சாவித தண்டதா வாகதி
விஜித மாதங்கமே வஸ ஹ்ருதி சிரம் சிவ"

என்ற பாடலை எடுத்துக் கொள்ளலாம்.

இதிலே, 'விஜிதமாதங்க'—யானையை வென்றவனே; 'மே'—என்; 'ஹ்ருதி'—மனத்திலே; 'சிரம்'—வெகு காலம்; 'வஸ'—வசி என்று இவ்வாறு பொருள் தரும் சொற்களை 'தங்கமே' என்று வருமாறு தொகுத்துள்ளார். இவ்வாறுள்ள 'தங்கப்பாட்டிலே' 'சின்னத் தங்கம்' என்றும் 'தங்கமடி' என்றும் 'my lady' என்றும் 'யே, குட்டி' என்றும் எழுத்துக்கள் வந்துள்ளன. இவ்வாறு எழுத்தலங்காரங்களை அமைத்துப்பாடுவது எவ்வளவு கடினம் என்பது இச்சிறு நூலினை வாசிப்போருக்கு நன்கு விளங்கும்.

இந்நூலாசிரியர் பிரசித்திபெற்ற சொக்கநாத தீக்ஷிதர் வமிசத்திலே தோன்றியவர்; வடமொழியில் மிகவும் தேர்ச்சி பெற்றவர்; சிறுமிகளுக்கு உதவுமாறு இவ்வடமொழிப் பாடல்களை இயற்றியுள்ளார்; அவருடைய கருத்து நிறைவேறுமாறு அப்பாடல்களுக்குரிய இராகம் தாளம் இவைகளைக் குறித்தும் அவசியமான இடங்களில் ஸ்வரங்களை அமைத்தும் நூலாசிரியரின் குமாரர் இதனை அச்சிட்டுள்ளார். வே. நா.

**பால்ய விவாகமும் சீர்திருத்தஞ் செய்பவரின் சங்கடங்களும்; வரதக்ஷிணையின் கொடுமையும் கல்வியின் திறமையும்: [எழுதியவர்: ஸ்ரீமான் எம். வி. ஸுப்ரஹ்மண்யம், எம். ஏ., ஸெண்ட் ஜான் காலேஜ், பாளையங் கோட்டை; ஆசிரியரிடம் கிடைக்கும்; விலை, 4 அணா.]**

இவ்விரண்டு தலைப்புக்களுடன் எழுதப்பட்ட இரண்டு நாடகங்கள் இப்புத்தகத்திலடங்கியிருக்கின்றன. இக்காலத்தில் நடக்கும் செயல்களையும் பேசும் பேச்சுக்களையும் அப்படியப்படியே எழுதவேண்டுமென்றெண்ணி இவற்றில் இடையிடையே ஆங்கிலச் சொற்களையும் வாக்கியங்களையும் அமைத்திருக்கின்றார் ஆசிரியர். ஆனால் தமிழும் ஆங்கிலமும் அறிந்தவர்களுக்கன்றி ஏனையவர்களுக்கு இந்நாடகங்கள் சுவையைத்தரா என்றெண்ணுகிறோம்.

## புத்தக வரவு.

ஸ்ரீதரன், பரமார்த்த போத வசன வினாவிடை, நளன் அல்லது கலியின் கொடுமை, ஆதித்யஹ்ருதயம், அறநூல், ஸ்ரீ ராம கிருஷ்ணாமிருதம்.




## களக்காட்டுச் சத்தியவாசகர்

# இரட்டைமணி மாலை

உ. வே. சாமிநாதையர்

களக்கா டென்னும் தலம் நாங்குநேரி (நான்கூனேரி)த் தாலூகாவிலுள்ளது. சோராரணிய மென்றும் புன்னைவனமென்றும் இது வழங்கும். இங்கே எழுந்தருளியுள்ள ஸ்வாமியின் திருநாமம் சத்தியவாசகரென்று வடமொழியிலும், பொய்யா மொழியாரென்று தமிழிலும் வழங்கும். அம்பிகையின் திருநாமம் ஆவுடை நாயகி யென்பது.

இவ்விரட்டைமணிமாலையை இயற்றியவர் இன்னாரென்று தெரியவில்லை. ஆனாலும் முற்காலத்தில் களக்காட்டுத் தெற்கு மடத்தில் புகழ்பெற்று விளங்கியிருந்த சிறந்த கவியாகிய ஸ்ரீ கைலாசநாத தேசிகரோ அன்றி அவர் மரபினரோ இதனை இயற்றியிருக்கலாமென்று நினைக்கின்றார்கள். இதிலுள்ள பாடல்கள் கற்பனை நயங்களையும், சிறந்த கருத்துக்களையும் பெற்றிருத்தலின் பக்திமான்களும், அறிஞர்களும் அறிந்து இன்புறற்பாலன. இதன்கணுள்ள செய்யுட்கள் பழைய புலவர்களால் பரம்பரையாக மனப்பாடஞ் செய்யப் பெற்று அங்கங்கே வழங்கி வந்தன. ஏறக்குறைய ஐம்பது வருடங்களுக்கு முன்பு ஸ்ரீ சந்திரசேகர கவிராஜ பண்டிதரால் அச்சிடப்பெற்ற தனிப்பாடற்றிரட்டில் இதிலுள்ள ஐந்து பாடல்கள் உள்ளன. அதனால் இந்நூலின் பெருமை விளங்கும். இஃது எழுதப்பட்டிருந்த ஏட்டுச் சுவடி கும்பகோணம் காலேஜில் முன்பு தமிழ்ப் பண்டிதராக இருந்த திரிசிபுரம் ஸ்ரீ சி. தியாகராச செட்டியாரவர்களிடமிருந்து கிடைத்தது.

## காப்பு

### வெண்பா

பூப்பார் களந்தைப் புரகரே சன்மீதில்
வாய்ப்பா மிரட்டைமணி மாலைக்குக்—காப்பாவார்
பொன்கருத்த ரென்கருத்த ரென்னவரு போரானை
என்கருத்த ரென்கருத்த ரே.

## நூல்

### வெண்பா

1. அணிகொண்ட தென்களந்தை யாயி னடியேனிப்
பிணிகொண்ட சென்மம் பெறுக—பணியா
மருமாலை யேசத்ய வாசகர்தாட் கிட்டுத்
திருமாலை யேசத் தினம்.

### கட்டளைக்கலித்துறை

2. தினம்போற்றும் போதகத் துள்ளே தியானமுஞ் செய்யுமன்பர்
மனம்போற் றமிய னுடன்பொருந் தாவஞ்ச நெஞ்சையுமென்
இனம்போற் குறித்ததன் றீதையென் மேலிட் டிடுதிகண்டாய்
கனம்போற்றும் பூங்குழல் பங்கா களந்தையிற் கண்ணுதலே.

### வெண்பா

3. கண்ணுதலைப் பொற்களந்தைக் கண்ணுதலைச் சேர்ந்திருந்தும்
கண்ணுதலைக் காணுத காட்சிபோற்—கண்ணுதலை

---

காப்பு: பூப்பு ஆர் - மங்களம் நிரம்பிய. களந்தை: களக்காடு என்பதன் மரூஉ. பொன் கருத்தர் - திருமகளுக்கு நாயகராகிய திருமால்; எழுவாய். என் கருத்தர் என்ன வரு - என்னுடைய தலைவரொன்று சொல்ல அவருக்கு முன்னமே அனுக்கிரகம் செய்ய வந்த. போரானை என் கருத்தர் - போரானை யென்னுந் தலைவர். திருமால் விநாயகரை வழிபட்ட செய்தி விநாயக புராணத்தாலும் கந்தபுராணத்தாலும் அறியப்படும். என் கருத்தர் - என் கருத்தில் உள்ளவர்.

1. ஆயின் - அடியேன் பிறக்குமிடமாயின். பணியா - பணிந்து. மருமாலை - மணம் பொருந்திய மாலையை; மாலையை இட்டு. திருமாலைத்தினம் ஏச.
களந்தையிற் பிறப்பேனுயின் எனக்குப் பிறப்பு வேண்டுமென்றபடி.

2. போற்றும்போது அன்பர் மனம் அவர்களோடு பொருந்தியது போல என் நெஞ்சு என்னேடு பொருந்தவில்லை. ஆதலால் அதனை என் இனமாகவும் அதன் தீய செயல்களை என் செயல்களாகவும் எண்ணல் பொருந்தாது என்பது கருத்து. இட்டிடுதி - இடுகின்றுய். கனம் - மேகம்.

3. கண்ணு தலை - கருதப்படுகின்ற முதன்மை வாய்ந்த. யான் சேர்ந்திருந்தும். கண் நுதலை (நெற்றியை)க்காணுதது போலவே. அண்மையி

எட்டியிருந் தேனல்லே னென்பார்கள் வீடுபெற்றால்
எட்டியிருந் தேனாகு மே.

### கட்டளைக்கலித்துறை

4. ஆகத்தி லேயொரு பாதியென் னம்மைக் களித்தவடன்
பாகத்தி லேயொன்று கொண்டா யவண்மற்றைப் பாதியுமுன்
தேகத்திற் பாதியுஞ் சேர்ந்தா லிருவருண் டேசிவனே
ஏகத் திராம லிருப்பாய் களந்தையு மென்னெஞ்சுமே.

### வெண்பா

5. என்னெஞ்சு கல்லாகு மென்றுமிந்தக் கல்லுமையாள்
பொன்னஞ் சரணம் பொருதென்றும்—அந்நாள்
இடத்தாளை யம்மிமே லேற்றுகளக் காட்டாய்
இடத்தாளை யஞ்சாதே யின்று.

### கட்டளைக்கலித்துறை

6. இன்றொக்க வேண்டினெவ் வாறொக்கு மோவெழில் சேர்களந்தைக்
குன்றொக்குங் கோபுரங் கோபுர மொக்குமக் குன்றதுபோல்
அன்றொக்க வேண்டுமென் னல்வினை தீவினை யாமிரண்டும்
என்றொக்கு மோவினித் தென்களக் காடனை யான்பெறவே.

---

லிருந்தும் அறிந்து கொள்ளேனாயினன். அத்தகைய நான் வீடு பெற்றால் என்னை நல்லவனென்பார்கள். ஆனால் அவ்வாறு பெறுதல் அரிது என்பது கருத்து. எட்டி - எட்டிமரம்.

4. ஏகம் - ஒன்று. தேவரீருக்கு இரண்டு வடிவம் இருத்தலால் அடியேனுடைய உள்ளத்திலும் களந்தையிலும் எழுந்தருளி யிருக்கலாமென்பது கருத்து.

5. அந்நாள் - திருமணம் நிகழ்ந்த பண்டைக்காலத்தில். இடத்தாளை - அம்பிகையின் இடப்பாதத்தை. அஞ்சாதே: வினைமுற்று. என் நெஞ்சு கல்லாதலின் உமாபாகத்திற்குரிய இடத்தாளை அதில் வைத்தால் நோமென்று எண்ணாதே; முன்னரே அந்தத்தாள் அம்மிமேல் ஏறிப்பழகியுள்ளதென்பது கருத்து.

6. இன்று ஒக்க வேண்டின் - இக்காலத்து நல்வினை தீவினைகள் ஒத்திருக்க விரும்பின். ஒக்குமோ: ஓகாரம் எதிர்மறை. அன்று - இறைவனுடைய திருவருளைப் பெறும் அக்காலத்தில்.

இருவினை யொப்பை எக்காலத்து யான் பெறுவேனோ என்பது கருத்து.

### வெண்பா

7. யான்பிறவி நீந்த வெழிற்களந்தைப் பொற்கோயில்
தான்புணை காண்சத்ய வாசகன்மீ—கான்காண்
அடிப்படங் காட்டு மராப்போலும் பாய்தான்
கொடிப்படங் கம்பமே கூம்பு.

### கட்டளைக்கலித்துறை

8. கூம்பாத சிந்தையிற் கொண்டாடு வார்குழம் பாதசெந்தே
னும்பாக மான தமிழைச் செழுங்கொன்றை யாவணியும்
வேம்பாக நான்சொல் கவிகளைத் தானு மிகவிரும்பிப்
பாம்பா வணிந்து கொளுமே களந்தைப் பரஞ்சுடரே.

### வெண்பா

9. பரம்படியாய் நல்லோரும் பாவிகளும் பெற்ற
பிரம்படிபோ லுன்னடியான் பெற்றேன்—நிரம்பும்
குதிரைகளைக் காட்டாய்மா கோமாயு வான
மதுரைகளக் காடாகு மற்று.

### கட்டளைக்கலித்துறை

10. மற்றொ ரொருவரைக் கண்டதுண் டோசத்ய வாசகராய்
உற்றோர் கழஞ்செடை வெண்ணெய்க்குத் தாய்க்கொரு கோடிபொய்கள்
சொற்றோருந் தாழை மலர்சாட்சி யென்றுசொன் னோருமல்லால்
கற்றோர்கள் வம்மின்கள் சென்மின்கள் போமின் களந்தையிலே.

### வெண்பா

11. களந்தை வரும்விடமுங் கண்ணுதலு மாகக்
களந்தை வருமரனைக் காணுன்—வளர்ந்தவொரு
மாலைக்கண் டானென்று சொற்றக்காற் றேசமிரு
மாலைக்கண் டானென்னும் வந்து.

---

7. புணை - தெப்பம். மீகான் - மாலுமி. கொடிப்படம் - கொடியி லுள்ள ஆடை. கொடியாடைக்குப் பாம்பின் படம் உவமை.

8. குழம்பாத செந்தேன் - தெளிந்த தேன்.

9. பாம்பு அடியாய்-உலகமெங்கும் பரவிய திருவடிகளை யுடையாய்; "தில்லை மூதூ ராடிய திருவடி, பல்லுயி ரெல்லாம் பயின்றன னாகி" (திருவாசகம்.) மா - குதிரை. கோமாயுவான - நரிகளான.

10. சொற்றோர் - திருமால். கற்றோர் - மெய் சொல்லக் கற்றோர்கள். சென்மின்கள் போமின்களென்பன விரைவு பற்றி வந்தன.

11. சொன்னால் என்பதற்குப்பின் அவன் கண்களை யென்னும் தொடர் மொழியை வருவிக்க.

### கட்டளைக்கலித்துறை

12. உம்பரை வாழ்வித்த கண்டங்கண் டேமொண் புரமெரித்த
அம்பரை யெற்றிய சூலங்கண் டேமரு ளுங்கொலையும்
நம்பரை பாகற் கிவையாக லாலவர் நாமஞ்சொல்லா
வம்பரை வையுங்க டென்களக் காடரை வாழ்த்துங்களே.

### வெண்பா

13. வாழ்நிலைசேர் பொன்னுலகம் வண்களந்தைக் கோபுரத்தின்
ஏழ்நிலைமே லேறினு லேறலாம்—பாழ்மனமே
அன்புன்னைக் காட்ட வரனறிவ தேயருமை
தென்புன்னைக் காட்டனடி சேர்.

### கட்டளைக்கலித்துறை

14. சேரார் புரஞ்செற்ற சேவக னுருக்கென் றீவினைகள்
ஓரா யிரம்புர மாய்விடு மோவுறை யுங்களக்கா
டாராயு நல்ல பதியான வர்க்கடி யேன்மனந்தான்
கூராரு முட்களக் காடாகு மோவருள் கூட்டுங்கொண்டே.

### வெண்பா

15. கொண்டாடு வேன்பணிவேன் கும்பிடுவேன் கைகொட்டிக்
கொண்டாடு வேன்களந்தைக் கொற்றவா—புண்டாவக்
கைச்சிலை யாலடியேன் கல்லா லெறியேனை
நச்சிலை யாலடியேனை.

### கட்டளைக்கலித்துறை

16. அடியேற வேண்டுமென் னெஞ்சத்தை யென்றுமெய் தாமலன்றே
குடியே றிடக்களக் காட்டுக்குள் ளேகுளிர் புன்னைவைத்துக்
கடியேறு தண்புனற் பொற்று மரைகண்டு கண்ணுதற்கும்
வடியேறு கண்ணிக்கும் பொற்கோயி லுங்கட்டி வைத்தனரே.

### வெண்பா

17. வைத்த பொருளு மனையாளு மைந்தருமே
கைத்த பொருளென்று கைவிட்டுப்—பத்திபண்ணும்

---

12. விடத்தை உண்டமையின் 'உம்பரை வாழ்வித்த' என்றார்; "எஞ்சுவா னளித்த நஞ்சுபொதி கண்டமும்" (மதுரை மும்மணிக்கோவை.) அம்பரை - அம்பாக உள்ள திருமாலை. பரை பாகற்கு - உமாபாகர்க்கு.

13. இத்தலத்து விருட்சம் புன்னையாதலால் புன்னைவனமென்றார்.

14. முள் களக்காடு - முட்களையுடைய களாச்செடிகளையுடைய காடு.

15. கை கொட்டிக்கொண்டு ஆடுவேன். நச்சிலை - விரும்பவில்லை.

ஊரா ரணியரென வுன்னுவார்க் கில்லையே
சோரா ரணியர் துணை.

### கட்டளைக்கலித்துறை

18. துணையான நாரி புவியையெல் லாம்பெறுந் தொல்லைவடிக்
கணையா னதுபுவி யெல்லா மெடுத்துண்ணுங் கைச்சிலைக்கல்
அணையாக நின்று புவியினைத் தாங்குமென் றுலினிநாம்
பணையார் களந்தைப் பதியார் செயலையென் பன்னுவதே.

### வெண்பா

19. பன்னுமறை யோனே பரமன் முடிதேட
உன்னு மதியா னுனைத்தாங்கும்—அன்னமாய்ச்
சேணங் களந்தையே தேய்ந்தாயே திக்கறியாக்
கோணங் களந்தையோ கூறு.

### கட்டளைக்கலித்துறை

20. கூற்றும் பயந்து களந்தைக் குழந்தைக்கு மேமுகமன்
சாற்றும் படிவென்ற தாளாரு மாவுடைத் தாயருமே
மாற்றும் பிறவிப் பிணிகட்கெல் லாமலை மேன்மருந்தாய்
ஆற்றும் பிடகரு மாயிருப் பார்க ளணித்துவந்தே.

---

17. கைத்த - வெறுத்த. பண்ணும் : முன்னிலைப்பன்மை ஏவல். ஊரார் அணியர். சோராரணியமென்பது இத்தலத்தின் வடமொழித் திருநாமம்.

18. துணையான நாரி - உமாதேவியார். நாரியென்பதற்கு வில் நாணென்பது வேறு பொருள். கைச்சிலைக் கல் - மேரு. பணை - வயல்.

19. இப்பாட்டுப் பிரமனை நோக்கிக் கூறியது. சேண் - ஆகாயம். அளந்தையே - அளந்தாயே. களந்தை திக்கறியாக் கோணமோ; களக்காட்டிற்கு வந்திருந்தாயானல் இறைவனை எளிதில் தரிசிக்கலாமே என்பது கருத்து.

20. பிடகர் - வைத்தியர். அணித்து வந்து - அருகில் வந்து.




# புராதன இந்தியச் சிற்பங்கள்

எம். எஸ். சுந்தர சர்மா

புராதன இந்தியச் சிற்பங்களைப்பற்றிச் சிறிது ஆராயலா மென்பது எனது உத்தேசம். அங்ஙனம் செய்வதற்கு முன்பாக, 'புராதனம்' என்ற மொழியின் வரம்பு யாது? 'சிற்பம்' என்ற சொல்லின் பொருள் யாது? என்ற இரு கேள்விகளும் பிறக் கின்றன.

மேனாட்டு நாகரிகம் கர்ப்ப வாசத்தில் இருப்பதற்கு வெகு காலத் திற்கு முன்பாகவே நமது இந்திய தேசத்தில் நாகரிகம் முதிர்ந்து பழுத்திருந்ததென்பதை நாம் அறியவேண்டும். பாலகங்காதர திலகர் "வேதங்களின் புராதனம்" அல்லது "ஓரியன்" (மிருகசீர்ஷம்) என்ற வியாசத்தில் அயித்ரேய பிராமணத்தில் ஏகாஷ்டகதின நிர்ண யத்தின் பொருட்டுக் கூறியுள்ளதிலிருந்தும், இதர பிராமணங்களில் கூறியுள்ள விருஷகாபி முதலிய கதையினின்றும், மிருகசீர்ஷத்திற்கு அமைந்துள்ள ஆக்ராயானமென்ற பெயரினின்றும் வேதங்களின் புராதனத்தை நான்கு காலங்களாகப் பிரித்து ஓரியனுக்கு முந்திய காலம் கி. மு. 6000 முதல் கி. மு. 4000 வரையென்றும், ஓரியன் காலம் கி. மு. 4000 முதல் கி. மு. 2500 வரையென்றும், வேதாங்க ஜோதிஷ காலம் கி. மு. 2500 முதல் கி. மு. 1400 வரையென்றும், நான்காவதாகிய பழைய சம்ஸ்கிருதகாலம் கி. மு. 1400 முதல் கி. மு. 500 வரையிலும் இருந்திருக்க வேண்டுமென்றும் மிக விமரிசையாக ஆராய்ந்து தீர்மானித்துளர்.*

வான சாஸ்திரத்தில் வெகு நுட்பமாகக் கவனித்துக்கணக்கிட வேண்டியது விஷுபாதங்களின் † பின்னேற்றமே யாகும். அநேக

---

* திலகரது 'ஓரியன்' என்ற நூலின் 206-208-ஆம் பக்கங்களைப் பார்க்க.

† அயனப் பின்னேற்றமெனவும் கூறலாம்.

நூற்றுண்டுகளில் அப்பயிற்சி ஓயாது இருந்திருந்தாலன்றி அப்பின் னேற்றத்தைக் கவனித்திருக்க முடியாது. விஷுபாதப் பின்னேற் றத்தை ஏதோ இக்காலத்தில்தான் மேனுட்டு வான சாஸ்திர நிபுணர் கள் அவர்களது 'மேலான' கருவிகளினுதவியால் கண்டுபிடித்து விட்டார்கள் என்று நினைப்பது தவறு. அவர்கள் கருவியினுதவி யால் கண்டு கணக்கிட்டிருப்பதைக் காட்டிலும் உண்மையான கணக்கு நமது சூரிய சித்தாந்தத்தில் ஓரே வரியில் நன்ருகக் கூறப் பட்டுளது.* நமது தேசத்திலிருந்து சென்ற வல்லோர்களினுதவி யால் அராபியர்கள் அறிந்துகொண்டு அவ்வராபியர் மூலமாய்க் கிரேக்கர்களும், அக்கிரேக்கர் மூலமாய் ஐரோப்பியர்களும் வான சாஸ்திர நுட்ப வுண்மைகளைக் கற்றுக்கொண்டு இக்காலத்தில் புதியனவாக †ஆக்கிய கருவிகளினுதவியால் முன் நம்மவர்கள் கணித் திருக்கும் முடிவுகளின் உண்மையைக்கண்டு வியப்புறுகிறுர்கள் என்பது தெரிந்த விஷயம்.

ஆனல் அவர்களில் கர்வங்கொண்ட சிலர் கிணற்றுத் தவளைகள் போலப் புராதன இந்தியரின் கால நிர்ணயங்களை ஒப்புக்கொள்ளாது முற்காலத்தில் நம்முன்னேர் மேனுட்டார்களை ஏமாற்றுவதற்காக ஏற்பாடுசெய்து கற்பித்திருப்பதாக ஏளனம் செய்துவருவது ஒரு வியப்பன்று. பசியுற்ற இக்காலத்துப் போலிப்பண்டிதர்கள் நவீன மாக வேண்டியபடி எழுதிப் புராதன ஏடுகளென்று கூறி ஏமாற்ற அவற்றையே கண்ட ஸர் வில்லியம் ஜோன்ஸ் போலொத்த மேனுட்டு நிபுணர்கள் வேறு எவ்வாறு கருத முடியும்! இந்த ஜோன்ஸ் என்ற நிபுணர் கிரேக்க தேசத்திலிருந்து புறப்பட்டு ஊரெல்லாம் கொள்ளையடித்துச்சென்ற அலெக்சாண்டரைச் சிந்து நதி தீரத்தினருகே கண்டு சந்தித்ததாகக் கிரேக்கர்களால் சொல்லப் படும் யாரோ 'சந்திர கோட்டஸ்' என்ற பெயருடையோனெருவன் மௌரிய வம்சத்துச் சந்திரகுப்தனுய்த்தான் இருக்கவேண்டுமென்று ஊகித்திருப்பதை இக்காலத்துச் சரித்திர நூலார் உண்மையில் நடந்த சம்பவமெனக்கருதி இந்துதேச சரித்திர கால நிர்ணயத் திற்கே ஒரு மூலாதாரமாய்க் கொண்டுளோர் என்பது தெரிந்த விஷயம். தற்கால இந்தியச் சரித்திர ஆராய்ச்சியும், கால நிர்ணயமும்

---

* பர்ஜஸ் என்பவரது 'சூரிய சித்தாந்த' மொழி பெயர்ப்பின் முடிவுரையைப் பார்க்க. வான சாஸ்திர ஆராய்ச்சி யுள்ளோர் சூரிய சித்தாந்தத்தில் மூன்றும் அத்தியாம் 9-10-ம் ஸ்லோகங்களைப் பார்க்க.

† காலிலியோ என்பவர் தூரதர்சினியைக் கண்டு முதலில் அமைத் தது சமீபகாலமாகிய பதினுரும் நூற்றுண்டின் பிற்பாதியிலே தான்!

மேனாட்டு மகிமையை ஊன்றுவதற்காக ஏற்படுத்தி நமது கலா சங்கங்களில் கற்றுவரும் இளைஞர்களே, ஆட்டுமந்தையின் இடையே அகப்பட்டுக்கொண்டு வளர்ந்த சிங்கக்குட்டி, தானும் ஆடுதானோ வெனக் கருதி யிருந்தபடி ஆக்கும்பொருட்டு எழுதியுள்ளனவென் பதை மறக்கக்கூடாது.

இந்திய சரித்திரப் புலியாகிய வின்சண்ட் ஸ்மித்தை உதாரண மாக எடுத்துக்கொள்வோம். அவர் "இந்திய நற்கலைச்சரித்திரம்" என்று ஒரு பெரிய புத்தகம் அரசாங்கத்தினரது உதவியுடன் வெளி யிட்டிருக்கிறார். அப்புத்தகத்தில் பின்வருமாறு அவர் கூறி யுள்ளார்:

"காருண்ய ஏகாதிபதியாகிய அசோக மன்னனின் ஆஞ்ஞை யால் இந்தியாவில் சிற்பங்களெல்லாம் கற்களில் அவனது காலம் தொடங்கிப் பொளியப்பட்டன."

ஓர் அரசனது ஆஞ்ஞையால் இப்பெரிய தேசத்திலுள்ள சிற்பி களெல்லாம் முன் பயிற்சியின்றித் திடீரெனக் கற்களில் அபூர்வமான வேலைப்பாடு செய்யக்கூடுமென்பதை வின்சண்ட் ஸ்மித் வாஸ்தவத் தில் நம்பியுள்ளாரென்று யான் எண்ணவில்லை. இந்திய இளைஞரின் மன உணவுக்காக அவர் கட்டிய உரையென்றே கருத இடமுண்டு. அங்ஙனம் கூறுவிடில் அவர் இதர நாடுகளிலிருந்துதான் இத்தேசத் திற்கு நற்கலை வந்ததெனப் பின்னால் கூற இடமிராது. அவ்வுரையை அவர் ஸ்தாபிப்பதன் பொருட்டு, "இந்தியாவில் மரவேலைக்காரர் களும் கல்வேலைக்காரர்களும் ஒரே ஆயுதங்கள்தான் உபயோகித்து வந்தார்கள்"[1] என்ற சமாதானம் கூறியுள்ளார்!

உளியும், சுத்தியும் இருவேலைக்காரர்களும் உபயோகிக்கிறார்க ளென்பதுண்மையாயினும் மரவேலைக்கு உபயோகிக்கும் உளிக்கும் கல்வேலை செய்வதற்கு உபயோகப்படுத்தும் உளிக்கும் வித்தியாசம் உள்ளதை அவர் அறியாத அவ்வளவு மூடர் என்று நாம் நினைப்பது சரியல்ல. நமது கலாசாலைகளில் படிக்கும் மாணவர்களும் அவர்க ளுக்குக் கற்பிக்கும் போதகர்களும் மூடர்களாகவே இருக்கவேண்டு மென்ற கெட்ட சிந்தனையோடு அவ்வண்ணம் சமாதான உரை கூறி யிருக்கிறார் போலும்!

இது நிற்க; இந்நிபுணர் அசோக மகாராஜாவின் சரித்திரத்தைத் தனித்தெழுதியுள்ளார். அம்மன்னரின் கற்சாசனங்களெனக் கருது

1. வின்சண்ட் ஸ்மித்தின் இந்திய நற்கலைச் சரித்திரத்தில் 379-ம் பக்கம் பார்க்க.

பவைகளில்[1] இரண்டாவதாகக் கருதும் சாசனத்தில் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது:

“இவைகளைக் கற்கள் காணுமிடமெல்லாமும், எவ்வெவ்விடத்தில் கற்கால்கள் காணப்படுகின்றனவோ அவ்வக் கற்கால்களிலும் செதுக்கி வெட்டவேண்டும்.”

‘காணப்படுகின்றனவோ’ என்று கூறியுள்ளது அசோக அரசனது காலத்திற்கு முன்பாகவே கற்கால்கள் தேசத்தில் ஆங்காங்குக் காணப்பட்டன வென்னும் உண்மையை நன்றாய்க் காட்டுகிறது. இதனை அவர் அறியாததுபோல் கூறியிருப்பது உண்மையை ஒளித்துப் பொய்யைக்கூறும் நியாயம் பற்றியுள தென்பதில் சந்தேகமில்லை. பின்னும் சமீபகாலத்தில் இந்தியர்களின் ஆராய்ச்சியின்[2] பயனாக மௌரிய வம்சத்திற்கு முன்பே ஆண்டுவந்த அஜாதசத்துருவின் பெயர் வெட்டப்பெற்ற ஒரு கற்சிலையும் அதனையொத்த மற்ற கற்சிலைகளும் கண்டுபிடிக்கப் பெற்றுள்ளன. மௌரிய வம்சத்திற்கு முன்னேயே செதுக்கப்பட்டுள்ள சிலைகளில் இரண்டை, முதல் விளக்கமும் இரண்டாம் விளக்கமும் காட்டுகின்றன. இவை இரண்டும் மிக்க அற்புதமான வேலைப்பாடுள்ள சிற்பங்களல்ல; ஆயினும் அசோக மகாராஜனது ‘ஆஞ்ஞை’ ஏற்படுவதற்கு அநேக ஆண்டுகளுக்கு முன்பாகவே கற்கள் பொளியப்பட்டன வென்பதற்குச் சான்றுகளாகும்; தவிர, வின்சண்ட் ஸ்மித்தின் மொழிகளைப் பொய்யாக்கும் சாதனங்களுமாகும்.

இவைகளில் கல்வெட்டுத் தேர்ச்சி காணப்பட்டபோதிலும், மனோபாவம், அழகு முதலிய குணங்கள் பொருந்தவில்லை.[3] அப்படி இருப்பதிலிருந்து அக்காலத்திய தொழிலே அவ்விதந்தானுளது என்று ஊகிப்பது இக்காலத்தில் காணும் ஏழைக்குடிசையிலிருந்து தற்கால நாகரிகத்தையும் தேர்ச்சியையும் நிதானிப்பதற்குச் சமானமாகும். அவைகளில் ஒன்று மதுரா காட்சிச் சாலையிலும் மற்றொன்று கல்கத்தா காட்சிச் சாலையிலும் இப்பொழுது வைக்கப்பட்டுள்ளன.

---

1. இக் கற்சாசனங்களுக்கும் அசோக மன்னருக்கும் யாதொரு சம்மந்தமுமில்லை யென்றும் இவைகளில் கூறியுள்ள தர்மங்கள் பௌத்த சமயத்துக்குத் தானுரியவை யென்பதற்கு உள்ளாதாரவு யாதுமில்லை யென்றும் தகுந்த காரணங்களுடன் சில சரித்திர வாராய்ச்சியாளர் கூறியுள்ளார்கள்.

2. ஜெயஸ்வால் போன்றவரின் ஆராய்ச்சிகள்.

3. டாக்டர் ஆனந்த குமாரசாமியின் “இந்திய சிற்கலைக்கு முன்கூற்று” என்ற சிறு நூலின் 5-ம் பக்கம் பார்க்க.



விளக்கம் 1.



விளக்கம் 2.

மௌரிய வம்சத்திற்கு முன்னேயே செதுக்கப்பட்ட சிலைகள்.



விளக்கம் 3.

லௌரியநந்த நகரில் காணப்படும் கற்கால்; எழுத்துக்கள் வெட்டப்பெற்றுளது.



விளக்கம் 5.

சங்கீசாவில் காணப்பட்ட யானைத் தலைப்பு.



விளக்கம் 6.

பகீராவில் காணப்படும் கற்கால்.

இது போக, நமது ரிக் வேதத்தில் மூன்ருவது அஷ்டகத்தின் ஆருவது அத்தியாயத்தில் ஒன்பதாவது சூக்தத்தினிடையே, "இந்திரன் திவோதவஸின் பொருட்டு நாற்றுக்கணக்காய்க் கற்களினுல் கட்டப்பட்ட நகர்களைப் புறங்கவிழ்த்தான்" என்ற செய்தி கூறப்பட்டுளது. அத்தகைய பழைய காலத்தில் அசோகனது 'ஆஞ்ஞை' பிறக்கவில்லையென நமது ஸ்மித் துரை அறியார் போலும்!

ஆகவே, யாரோ ஓர் அரசன் ஒருநாள் தூங்கி எழுந்திருந்து, 'இன்று முதல் சிற்பிகளெல்லாம் கற்களைத்தான் உபயோகிக்க வேண்டும்' என்ற தீர்மானம் செய்து ஆஞ்ஞை பரப்ப, அது முதல் கற்களையே ஒரு தேசத்தார் உபயோகித்து வந்தனர் என்று கூறுவது கேவலம் கட்டுரையே யொழிய ஆராய்ச்சியோடு கூறிய மொழி யெனக்கருத இடமில்லை. தமது தேசத்தில் கான்யூட் என்ற அரசர் சமுத்திர அலைகளை 'வராதே' என்று ஆஞ்ஞை செய்த கதையை இவர் மறந்தனர் போலும்!

அசோகரது காலத்திற்கு முன்பாகவே நீண்டு பெருத்த கற்கால்கள் இத்தேசத்தில் ஆங்காங்குக் காணப்பட்டதற்குக் காரணம் யாதென்று நாம் கருதல் வேண்டும். இவ்வாறு காணப்படும் ஒரு கற்காலினது உருவம் மூன்ருவது விளக்கத்தில் காட்டப்பட்டிருக்கின்றது. இது லௌரிய நந்த நகரில் அசோக அரசனின் சாசனமென்று சொல்லப்பட்டு வருவனவற்றில் எழுத்துக்கள் வெட்டப் பெற்றிருக்கும் கால்களில் ஒன்று. தலைப்பில் கவிழ்ந்த கலசத்தின் மீது ஒரு சிங்கத்தின் உருவம் அமைக்கப்பட்டுளது. இது போன்ற அநேக கற்கால்கள் எழுத்துக்கள் வெட்டப்பெற்றும் பெருதும் வெவ்வேறு ஸ்தலங்களில் காணப்படுகின்றன. காசியின் அருகே சாரநாத் என்ற இடத்தில் ஒரு காலின் தலைப்பு மட்டும் 1904-5-ம் வருஷத்தில் தோண்டி எடுக்கப் பெற்றுளது.[1] அத்தலைப்பை நான்காவது விளக்கத்தில் காணலாம். மிக்க அழகாக நான்கு சிங்கங்கள் ஒன்றையொன்று பின்னுெட்டிக்குந்தியவாறு செதுக்கப்பட்டிருப்பதோடு அவைகளினடியில் நான்கு சக்கரங்களும் அச்சக்கரங்களினிடையே ரிஷபம், சிங்கம், யானை, குதிரை ஆகிய நான்கும் தனித்தனி வெகு லக்ஷணத்துடன் புடைப்பாக வெட்டப்பட்டுள்ளன. அதற்கும் கீழே ஒரு வரிக்குடம் கவிழ்க்கப் பெற்றுளது.

---

1. ஒயேர்டல் என்பவர் புராதன ஆராய்ச்சிச் சங்கத்தின் 1904-5-ம் வருஷக் குறிப்புத் திரட்டில் இதைப்பற்றிக் கூறியுள்ளார்.

சங்கீசா வென்ற ஸ்தலத்தில் ஐந்தாவது விளக்கத்தில் காட்டிய தலைப்புக் காணப்பட்டது. அதில் ஒரு யானையின் உருவம் அமைந்துளது.

பகீரா வென்ற விடத்தில் காணப்படும் மற்றுமொரு கற்காலை ஆறுவது விளக்கம் காட்டுகின்றது. அதில் சிங்கத்தலைப்பு அமைக்கப்பட்டிருப்பதைத் தவிர ஒருவித எழுத்தும் வெட்டப்படவில்லை.[1]

இவ்வாறமைந்த கற்கால்கள் பற்பலவிடங்களில் காணப்படுவதோடு இன்றைக்கும் நமது ஆலயங்களில் தனித்த ஸ்தம்பங்களாகக்[2] காணப்படுவது யாவரும் நினைத்தற்குறியது.

இக்கால்கள் காணப்படும் இடங்களின் அருகே அநேகமாய் அரை உருண்டை வடிவம் பெற்ற ஸ்தூபிகளும் பெரிதும் சிறிதுமாய்க் காணப்படுகின்றன. அங்ஙனம் காணப்படும் ஸ்தூபிகளுள் விசேஷமான ஒன்று ஏழாவது விளக்கத்தில் காட்டப்பட்டுளது. இது சாஞ்சி ஸ்தூபம் என்னும் பெயர் பெற்றதாகும். இதைப் போன்ற ஸ்தூபிகள், பெரிதும் சிறிதும் பில்ஸா தோப்பிலும், மற்ற விடங்களிலும், கிருஷ்ண நதி தீரத்தில் அமராவதி யென்ற ஒரு பழைய நகரிலும், சிம்மளத்தில் அநேக விடங்களிலும் காணப்படுகின்றன. ஆனல் சாஞ்சியிலும் பர்ஹூத்திலும் அமராவதியிலுமுள்ளவைகளே பெருமையும் லக்ஷணமும் பொருந்திப் புராதன காலம் தொடங்கி ஏற்படுத்தியவைகளெனக் கருதப்படுகின்றன.

இவ்விதமாய்க் காணப்படும் ஸ்தூபிகளை சவ ஸ்தூபிகளெனச் சிலர் தீர்மானித்துள்ளார்கள். இவைகளில் சிலவற்றில் தோண்டிப் பார்க்கும்பொழுது கற்பெட்டி செய்து அதனுள்ளே ஸ்படிகத்தினல் செய்த டப்பிகளில் சாம்பலும், எலும்புத் தூள்களும், சிற்சில சிறிய பொன் தகடுகளும் காணப்படுவதோடு இன்னுரை அடக்கம் செய்யப்பட்டதென்ற விவரமும் வெட்டெழுத்துக்களினல் காட்டப்பட்டுளது. ஆனல் பிரதானமாயுள்ள பெரிய ஸ்தூபிகளிலோ அவ்வகையாக ஒன்றும் காணப்படவில்லை. புராதனச் சிற்ப

1. எழுத்துக்கள் வெட்டப்படாத கற்கால்களுமிருப்பதைக் கவனிக்க. வின்சண்ட் ஸ்மித் 'இந்திய நற்கலைச் சரித்திரத்தில்' 62-ம் பக்கத்தில் அங்ஙனமிருப்பதற்குக் காரணம் கூறியிருப்பது 'உப்புக்குச் சப்பாணி' என்னும் நியாயமுள்ளதுமன்றிப் புரட்டுதலுமமைந்துளது.

2. எவ்விதக் கட்டடங்கள் துவக்குமுன்பும் சாங்கு ஸ்தாபனம் செய்து, திசைகளை அறிந்து கட்டவேண்டுமென்பது சிற்ப சாஸ்திரத்தின் முக்கிய விதியென்பதும் அறிதற்குரியது.



விளக்கம் 4.
சாரநாத் சிங்கத் தலைப்பு.



விளக்கம் 7.
சாஞ்சி ஸ்தூடம்.

ரக்ஷக அதிகாரிகள் பெருச்சாளி போல் மேலிருந்தும் கீழிருந்தும் தோண்டித் தோண்டிப் பார்த்தாலும் அங்ஙனமுள்ள சவக்குறிகள் ஒன்றும் தென்படவில்லை. மேலும் எகிப்து முதலிய தேசங்களில் காணும் பிரமிட் போலப் பட்டை பெற்றிருக்காமல் உருண்டை வடிவம் பெற்றிருப்பதனுலேயும் இவைகள் சவ ஸ்தூபிகளல்லவென்று வேறு சிலர் ஆராய்ந்து ஊகித்திருக்கிறார்கள்.[1]

இறந்த பின் சவத்தைத் தீக்கிரையாக்கி மிகுந்ததை நீரில் கரைக்கும் உயர்குல வழக்கம் நமது நாட்டில் வெகு காலமாக வழங்கி வர, சவ ஸ்தூபிகள் பிரதானமாய் வழங்குவதற்குக் காரணம் தெரியவில்லை. ஒருகால் தாழ் குலத்தோர் சிலருள் இக்காலம் போல அக்காலத்திலும் அவ்வழக்கம் இருந்திருக்கலாம். பௌத்த சமயத்தில் எக்குலத்தாரும் சேர்க்கப்பட்டமையினுல் இவ்வித வழக்கம் அம்மரபில் தோன்றியிருப்பது ஆச்சரியமல்ல. புத்தருக்குப் பின் பல வாண்டுகள் சென்ற பிறகு அம்மரபினர் சிறியவர்களுக்குச் சிறிய ஸ்தூபிகளும் பெரியவர்களுக்குப் பெரிய ஸ்தூபிகளும் அமைத்திருக்கக் கூடும். அதிலிருந்து நாட்டில் எல்லாவற்றிலும் பெரிதாய்க் காணப்படும் ஸ்தூபிகள் எல்லோரிலும் பெரியவராய் வழங்கிய புத்தரது ஸ்தூபியாயிருக்க வேண்டுமென்றும், பல விடங்களில் கண்டபடியால் அவரது எலும்பைப் பங்கிட்டுச் சென்ற கதையேற்படுத்தியது போதாமல் அவருக்கு முந்திய புத்தர்களது ஸ்தூபிகளாயிருக்கலாமென்றும் அல்லது புத்தரது பூர்வ ஜன்ம ஸ்தூபிகளாக விருக்குமென்றும் பல கட்டுக்கதைகள் பரவியுள்ளன. இக்கதைகளையெல்லாம் கட்டியவர்கள் புராதனச் சிற்பரக்ஷக அதிகாரிகளைப் போல் தோண்டிப் பார்த்தவர்களல்லர். அங்ஙனம் செய்திருந்தால் அவ்வாறு கூறியிருக்க மாட்டார்கள்.

சவ ஸ்தூபிகள் அல்லவென்று கூறிவிட்டால் இப்பெரிய புராதன ஸ்தூபிகளெல்லாம் ஆதியில் எதற்காக ஏற்படுத்தப்பட்டவைகளென்ற கேள்வி பிறக்கின்றது.

இவ்விதம் ஸ்தூபிகளும் அதனருகே கற்கால்களும் அமைக்கப் பெற்றிருப்பதன் உண்மையைத் தெரிந்து கொள்ள நமது தேசப் புராதன நாகரிகமும் முன்னேற்றமும் எவ்வாறிருந்தன வென்று

---

1. நமது சரித்திரப் புலி வின்சண்ட் ஸ்மித் கூட இவ்விதச் சந்தேகமேனும் கொண்டிருப்பது மெச்சத் தக்கது. (இந்திய நற்கலைச் சரித்திரம் 17-ம் பக்கம் பார்க்க.)

நாம் நன்றாய் அறிந்தாலொழியத் தெரிந்து கொள்வது சாத்திய மில்லை.[1]

நாகரிகம் குன்றி வாழ்க்கையில் இடையூறுகளும் அர்த்தமற்ற வழக்கங்களும் வித்தியாசங்களும் ஏற்பட்ட காரணத்தாலேயே இன்றைக்கு 2500 வருஷத்துக்கு முன்பாகப் புத்தர் ஒருவர் தோன்றி சமூகத்தைச் சமரசப்படுத்த வேண்டி யிருந்தது. ஆகையின் அப் புத்தர் காலத்திற்கு முன்பாகவே நாகரிகம் சீர்பெற்று முதிர்ந்து பழுத்திருந்திருக்க வேண்டுமென்பது சொல்லாமலே விளங்கும். இவ்விதமிருந்த காலம் புத்தரது காலத்திற்குப் பல நூற்றாண்டு களுக்கு முன்பாக இருந்திருக்க வேண்டும். புத்தரும் இக்ஷ்வாகு குலத்தில் ஜனித்தவர் தாமே? அப்பூர்வ காலத்திலேயே இம்மாதிரி யான பெரிய ஸ்தூபிகளும் கற்கால்களும் ஆங்காங்கு ஸ்தாபனம் செய்யப்பட்டிருக்க வேண்டுமென்பது எனது எளிய அபிப் பிராயம். அவ்விதம் எண்ணுவதற்குச் சில முக்கிய காரணங்க ளுண்டு.

பிரம்ம ஆயுளில் இரண்டாம் பாதியில் ஸ்வேதவராக கல்பத்தில் வைவஸ்வதமன்வந்தரத்தில் இருபத்தெட்டாவது மகாயுகத்தில் கலியுக ஆரம்பத்தில் இத்தனையாவது வருஷத்தில் இந்த மாதத் தில் இந்தத் திதியிலென்று நாம் தொன்று தொட்டு வம்ச பரம் பரையாகச் சொல்லிச் சொல்லி அனுஷ்டித்து வருவது பொய்யென் றும், காமக்கிழத்தி மகனாய், தகப்பனைக் கொன்று, உரிய மகனைத் துரத்தி, அரசாட்சியைக் கைப்பற்றி, இதர நாடுகளையும் கொள்ளை யடிக்கக் கருதி, இனத்தாருடன் நாடுநாடாகச்சென்று சிந்து நதிக்கரையைத் தாண்டி வெகு தூரம் செல்ல முடியாது தடுக் கப்பட்டுத் திரும்பிச் சென்று வழியிலேயே மரித்த அலக்சாண்டர் அங்ஙனம் திரும்பியகாலமாகிய கி. மு. 323 வருஷம் தொடங்கி, வீட்டிற்குதவாது எங்கேயாவது போய்ப் பிழைக்கட்டு மென்று அடித்துத் துரத்தப்பட்டுக் கீழ் இந்திய வர்த்தகக் கூட்டத் தில் ஒரு சிறு குமாஸ்தாவாக வந்து இராஜ்யத்தையே நிலையாக

1. பிரத்யக்ஷமாதியாக நான்கு பிரமாணங்கள் நமது நாட்டில் தொன்று தொட்டு வழங்கி வருகின்றன. அவைகளில் முன் இரண்டையே முக்கியமாக மேனாட்டுச் சரித்திரவாராய்ச்சியாளர் கொண்டுளார். மூன்றாவதைச் சிறிது சிறிது உபயோகிக்கிலும் நான்காவதனையும் உபயோகிக்கக் கற்றுக்கொண் டால் தான் புராதன இந்திய சரித்திரம் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்குமென்பதை அவர்கள் அறியவேண்டும்.

ஊன்றிய 'பிரபுவாகிய' க்ஷேவ் காலம் இறுதியாகவுள்ள நிகழ்ச்சிகளும் காலவரையறைகளுமே உண்மையானவையென்றும் கருதுவது கண்முன் விரலின் நகத்தை நிறுத்திச் சூரியனை மறைத்து விரல் நகந்தான் சூரியனைவிடப் பெரிது என்று நினைப்பதற்குச் சமானமேயொழிய வேறன்று.

நமது பூர்வகால நிர்ணயம் எவ்வாறு கணிக்கப்பட்டுளதென நாம் அறியவேண்டியது மிகவும் அவசியம். புராதன காலத்திலிருந்த நமது முன்னோர்கள் வானசாஸ்திரப் பயிற்சியில் மேன்மைபெற்றவர்களாய்க் கால நிர்ணயத்துக்குச் சாதகமாய் இந்தவிந்த நாட்களில் இன்னவின்ன கிரியைகள் செய்யவேண்டுமென்று ஏற்பாடு செய்திருந்தார்கள்.[1] வருஷத்தொடக்கத்தில் அவர்களது யக்ஞம் துவக்கப்பட்டது. வருஷமுடிவில் அது முடிவு பெற்றது. அது தவறாது நடைபெறும் பொருட்டு அவர்கள் சூரிய சந்திராதி கிரகங்களின் போக்கை நன்கு ஆராய்ந்து அவைகளின் இருப்பிடத்திலிருந்து நாட்களையும், மாதங்களையும், வருஷங்களையும் நன்றாய் அறிந்தார்கள். சூரிய சந்திராதிகளின் போக்கைக் கவனித்த வகையில் நக்ஷத்திரங்களின் ஸ்திரமான இருப்பிடங்களுக்கும் அவைகளின் ஸ்திரமான கூட்டங்களுக்கும் பெயரிட்டு அமைத்திருந்தார்கள். கால பேதத்தினால் ஏற்படும் மாறுதல்களையும் நன்றாய் உணர்ந்து பேதங்கள் ஏற்படுவதற்குத்தக்க காரணங்களையும் உணர்ந்திருந்தார்கள். வானத்திலுள்ளவைகள்தாம் அவரது பஞ்சாங்கமும் கடிகாரமுமாய் வழங்கி வந்தன. இவைகளை யெல்லாம் நுட்பமாய்க் கணிப்பதற்கு வெகு இலேசான சாதனம் ஒன்றை அவர்கள் கண்டுகொண்டிருந்தார்கள். ஒரு சமதரையில் சாங்குஸ்தாபனம் செய்து அதன் சாயையின் உதவியாலேயே மிக்க நுட்பமாயுள்ள வானசாஸ்திர வுண்மைகளை அவர்கள் அறிந்திருந்தார்களென்பது இன்றைக்கு நமக்குக் கிடைத்திருக்கும் சூரியசித்தாந்த கிரந்தத்தினின்றே விளங்குகிறது. சாங்கு ஸ்தாபனமில்லாதவிடமே அக்காலத்தில் இருந்திருக்க முடியாதென்று நாம் உறுதியாக நினைக்கலாம். ஆகையினால் மேற்கூறியுள்ள கற்கால்களெல்லாம் ஆங்காங்கு ஸ்தாபனம் செய்யப்பட்ட சாங்குக்களாய் இருத்தல் வேண்டும் என்பது எனது அபிப்பிராயம். வெகு காலமாக வழங்கிவரும் வானசாஸ்திர உண்மைகளைத் திரட்டிச் சுருக்கமாய் நமக்கு இக்காலத்திலளிப்பது சூரிய சித்தாந்தம். அதில் சாங்கு ஸ்தாபனம் என்ற அத்தியாயத்தில், எவ்வளவு ஏற்படுத்திக்கொண்டபோதி

1. திலகரது 'ஓரியன்' என்ற நூலின் இரண்டாவது அத்தியாயம் பார்க்க.

னும் அவ்வளவில் பன்னிரண்டு[1] பாகமாகச் சாங்குவை ஏற்படுத்திக் கொள்க என்ற விதியிருப்பதற்கேற்ப, நாம் இக்காலத்தில் காணும் சில புராதனக் கற்கால்களின் தலைப்பு பன்னிரண்டி லொருபங்கோ அல்லது ஆறிலொரு பங்கோ அமைந்துள்ளமை எனது அபிப்பிராயத்தை ஸ்திரப்படுத்துகிறது. மேலும் இவைகளின் அருகே காணப்படும் ஸ்தூபிகளினுதவியாலேயே வானசாஸ்திர உண்மைகளில் சிலவற்றை அவர்கள் பிரத்தியக்ஷமாகக் கண்டறிந்தனரென்று நம்புகிறேன்.

சூரிய சித்தாந்தத்தின் முதல் அத்தியாயத்தில் பதினான்காவது ஸ்லோகத்தில் பின்வருஞ்செய்தி கூறப்பட்டுள்ளது :—

'அமரர்களுக்கும் அரக்கர்களுக்கும் இராப்பகல் பரஸ்பரம் விபரீதமாயுளது.'

பின்னும் பன்னிரண்டாவது அத்தியாயத்தில் பின்வருவன வெல்லாம் கூறப்பட்டுள்ளன:

'மேஷராசியிலிருந்து மூன்று இராசிகளில் சூரியன் சென்று அமரர்களின் பாதி தினத்தைப் பூர்த்தி செய்கிறது. அதேமாதிரி கடகாதிபான மூன்று இராசிகளில் சென்று பிற்பாதி தினத்தைப் பூர்த்தி செய்கிறது. இதேபோல மற்ற இராசிகளில் சஞ்சரிக்கும் பொழுது அரக்கரது தினத்தைப் பூர்த்தி செய்கிறது. இவ்விருவர்களுக்கு இராப்பகல் பரஸ்பரம் மாறுதலடைந்திருப்பதோடு சூரியனது வருஷச் சுற்றுப் போக்கினால் தேவ நாள் அளவிடப்படுகிறது.'

பின்னும் நிர் அக்ஷ ரேகைக்கு வடக்கே சூரியன் சஞ்சாரம் செய்யும்பொழுது பகல் நீண்டு இரவு குறைவுபட்டிருப்பதும் தெற்கே சஞ்சாரம்செய்யும்போது இரவு நீண்டு பகல் குறுகியிருப்பதும், வடக்கே ஆறுமாத காலம் சூரியன் அஸ்தமிக்காமல் சுற்றிச் சுற்றிவருவதும் ஆறுமாத காலம் இரவு நீடித்திருப்பதும் இவை போனுள்ள வானசாஸ்திர வுண்மைகள் பிறவும் ஸ்பஷ்டமாய்க் கூறப்பட்டுள்ளன.[2]

---

1. இதனுண்மை, 'சூரிய சித்தாந்தத்தின்' மூன்றாவது அத்தியாயத்தைப் படித்தறிந்து அனுஷ்டிப்பவர்களுக்கே நன்கு புலப்படும்.

'कल्पनाद्द्वादशाङ्गुलम्'

2. இவ்வுண்மைகளெல்லாம், 'மயாசுரனுக்கு' த்ரேதாயுக வாரம்பத்தில் சொல்லப்பட்டதெனக் கூறியுள்ளது. வராக மிஹிரரின் காலத்திற்கு வெகு முன்பாகவே கண்டு திட்டப்பட்டவைகளென்பதில் சந்தேகமே யில்லை.

இவ்வுண்மைகளையெல்லாம் பிரத்தியக்ஷமாய்க் காணுவதற்கு அரை உருண்டை வடிவம் கொண்ட ஸ்தூபிகள் மிக உபயோகப் படுமாகையால் இவற்றை யெல்லாம் கண்டு அறிவதற்காகவே வான சாஸ்திரத்தில் மிக்க தேர்ச்சிபெற்ற நம் முன்னோர்கள் வேதங்களின் உட்கருத்தை மறவாது ஸ்பஷ்டமாய் வழங்கி வந்த புராதன காலத்தி லேயே அவைகளைக் கட்டி அமைத்திருக்கவேண்டும் என்ற எண்ணம் திண்ணமாய்த் தோன்றுகிறது.

கற்கால்களும் ஸ்தூபிகளும் சேர்ந்து இவ்வாறு வான சாஸ்திர ஆராய்ச்சிக்காகவும், தினசரி யஞ்ஞாதி கிரியைகளுக்குத் திதி, மாதம் முதலியவைகளைக் கணக்கிட்டுப் பார்ப்பதற்காகவும் கருவிகளாக இருந்திருக்க வேண்டு மென்பதற்குச் சந்தேகமேயில்லை.

ஆனால் நம்மவர்கள் எப்படிப் புத்தருக்கு முந்திய காலத்தி லேயே வேதங்களின் உட்கருத்துக்களை யெல்லாம் மறந்து விட்டனர் களோ அதுபோல வான சாஸ்திர வுண்மைகளையும் மறந்து இவ்வித ஸ்தூபிகளும் கற்கால்களும் எதற்காகப் பயன்பட்டனவென்பதை யும் மறந்து இருப்பது ஒரு வியப்பு அன்று.

ரிக் வேதத்தில் சொல்லியிருக்கும் ஒன்றை எடுத்துக் கொள் வோம். இரண்டாவது அஷ்டகத்தின் மூன்றும் அத்தியாயத்தில் பின் வருமாறு கூறப்பட்டுள்ளது:

"பன்னிரண்டு கால்கள் பெற்று நித்தியமாகவுள்ளவன் (சூரி யன்) ஆகாயத்தில் இடைவிடாது சுற்றிக்கொண்டே இருக்கிறான். இரட்டையிரட்டையாக எழுநூற்று இருபது[1] சிசுக்கள் அதில் அமர்ந்துளர்."

பகணத்தைப்[2] பன்னிரண்டு வீடுகள் அல்லது இராசிகளாகப் பிரித்து முந்நூற்றறுபது பாகங்களாக அமைக்கும் உண்மையை இதைக்காட்டிலும் ஸ்பஷ்டமாகக் கூறவியலாது. அங்ஙனமிருப்பதை

1. இரவும் பகலும் சேர்ந்துளது ஒரு தினம். அங்ஙனம் கூடிய ஒரு தினத்தில் சூரியன் ஒரு பாகத்திற்குச் சற்று மேற்சென்று சுற்றுவதாகக் காணும் பகணத்தின் முந்நூற்றறுபது பாகங்களை, தினத்தை இரட்டித்த வகையில் எழுநூற்றிருபதென்றுளது கவிக்கூற்று.

2. பகண மென்பது இராசிகளமையப் பெற்ற வட்டம். சூரிய சித்தாந் தத்தில்,

"विकलानां कलाषष्ट्या तत्षष्ट्या भाग उच्यते ।
तत्त्रिंशता भवेद्राशिर्भगणो द्वादशैव ते ॥"

என்று கூறியுள்ளதைக் கவனிக்க.

மறந்து க்ரீக் தேசத்தினரிடமிருந்துதான் நாம் இவ்வித அமைப்புக்களைப் பெற்றுள்ளோமெனப் பால கங்காதர திலகர்கூடக் கூறுவது[1] வியப்பன்றோ ?

நம் முன்னோர் நாகரிகம் முதிர்ந்த காலத்தில் வான சாஸ்திரவுணர்ச்சி எவ்வளவு பெற்றிருந்தார்களென நாம் அறிந்தாலொழிய அவரது புராதனமும் மேன்மையும் நமக்கு இலேசாய்த் தென்படா.

(தொடரும்)

---

1. திலகாது 'ஓரியன்' என்ற நூலில் 5-ம் பக்கம் பார்க்க.

## அறிவிப்பு

—:o:—

கீழ்க்கண்ட கட்டுரைகளைக் கலைமகளில் வெளியிட இயலவில்லை யென்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

தமிழும் தமிழனும், நாமகள் பதிகம், சங்கராசாரிய சுவாமிகள் சரண பஞ்சகம், உப நயனம், விகட விநோதம், பாரதியின் பண்பு, மகாபாரத மதிப்புக் கவி, பாரதத்தாயின் பண்பு, விவசாயத்தின் மகிமை, இந்தியாவின் கான சாஸ்திரம், மலைமகள் துதி, என்ன எழுதுவது, இசைக்கும் வசை மொழியோ, தமிழின் பழமை, குற்றம் காண்டல், ஸ்ரீ மகாபாரதம், மனத்திடம், தொல்காப்பியர் காலத்துத் தமிழர் வியவகார நிலை, நாட்டுமொழி, வயது முதிர்ந்தோர் கல்வி, பெண்களின் கடமைகள், குமரியும் குயிலும், பாண்டியவமிச சரித்திரச் சுருக்கம், அமெரிக்காவின் கஷ்டநிலை.

இலக்கியம்



# 'தலைமுறைக்கும் போதும்'

டாக்டர் உ. வே. சாமிநாதையர்

தஞ்சை ஜில்லாவில் உள்ள ஒரு பெரிய கிராமத்தில், பல வருஷங்களுக்கு முன்பு ஒரு தனவந்தர் இருந்தார். அவருக்கு மிக்க பணமும் பூஸ்திதியும் உண்டு. பொருளை விருத்தி செய்வதிலும் அதனைக் காப்பாற்றுவதிலும் நல்ல திறமையுள்ளவர். அவற்றிற் குரிய வழிகளை யறிந்து அவ்வாறே மிக்க முயற்சியுடன் ஒழுகி வந்தார். தாமே நேரில் வயல்களுக்குச் சென்று வேலைக்காரர்களிட மிருந்து வேலை வாங்குவார். தாமும் செய்து காட்டுவார். பயிர்த் தொழிலில் பேரூக்கமும் பயிற்சியும் உடையவர். தொழுதூண் சுவையின் உழுதூணினிது என்பதை நன்கறிந்தவர். ஆனால், கல்வியில் அவருக்குப் பழக்கமே கிடையாது. மற்ற ஜனங்களோடு அதிகமாக நெருங்கிப் பழகுவதில்லை. யாவருக்கும் இன்பமளித்து மகிழ்விக்கும் சங்கீதத்திலோ சிறிதேனும் அவருக்கு விருப்பமில்லை. வயல்களில் நிகழும் நிகழ்ச்சிகளும் உண்டாகும் ஓசைகளுமே அவருக்கு எல்லாவித இன்பத்தையும் அளித்தன.

இப்படியிருக்கையில் அந்தக் கனவானுடைய வீட்டில் ஒரு கல்யாணம் நிகழ்ந்தது. உறவினர்களும் பிறரும் அவருக்கு ஊக்க மூட்டி அக் கல்யாணத்தை மிகவும் பிரபலமாக நடத்தவேண்டு மென்று சொன்னார்கள். அவர்களுடைய வசமாயிருந்த அவர் அக் கல்யாணத்தில் அவர்கள் விருப்பத்தின்படியே ஒரு சிறந்த சங்கீதக் கச்சேரி நடத்த உடன்பட்டார். பெரிய பணக்காரராகையினால் எவரை வேண்டுமானாலும் வரவழைக்கலாமல்லவா ? நண்பர்களுடன் கலந்து யோசித்து அக்காலத்தில் தஞ்சாவூர் ஸமஸ்தானத்தில் பிரபல சங்கீத வித்துவான்களாக இருந்த ஆனை ஐயா என்பவர்களை வருவித்து அவர்களைக் கொண்டு சங்கீதக் கச்சேரியை நடத்த நிச்சயித்தார்.

ஆனை ஐயா என்பவர்கள் சகோதரர்கள் ; இரட்டைப் பிள்ளைகளென்று வழங்கப்படுவார்கள். ஆனை என்பது ஒருவர் பெயர்;

ஐயா என்பது மற்றொருவர் பெயர். இருவரும் சங்கீதத்தில் மிக்க பயிற்சியுடையவர்கள். எக்காலத்திலும் பிரியாது உடனுறைபவர்கள். வையைச்சேரி என்னும் ஊரில் பிறந்தவர்கள். சங்கீதத்தில் இணையற்ற வித்துவானாக விளங்கிய ஸ்ரீ மகாவைத்தியநாத சிவனவர்களுடைய தாய் வழியில் முன்னோர்கள். வடமொழி தென்மொழி தெலுங்கு என்னும் மூன்று மொழிகளிலும் சிறந்த பழக்கமும் அவற்றில் கீர்த்தனம் இயற்றும் வன்மையும் உடையவர்கள். அவர்கள் எப்பொழுதும் சேர்ந்தே சுரம், பல்லவி முதலியவற்றைப் பாடுவார்கள். சிவபக்திச் செல்வம் வாய்ந்தவர்கள். விபூதி ருத்ராக்ஷதாரணத்தை மறவாது கொண்டவர்கள். திருவையாறு தர்மசம்வர்த்தனி விஷயமாகவும் பிரணதார்த்திஹரர் விஷயமாகவும் பல கீர்த்தனங்களை இயற்றியுள்ளார்கள்.

ஒரு சமயம் தஞ்சாவூர் ஸமஸ்தானத்திற்கு ஹைதராபாத்திலிருந்து பல விருதுகள் பெற்ற ஒரு முகம்மதிய சங்கீத வித்துவான் வந்திருந்தார். அவர் ஹிந்துஸ்தானி சங்கீதம் பாடி அரசரையும் பிறரையும் உவப்பித்தார். அரசர் மிக்க மகிழ்ச்சியை அடைந்து, "இந்த ஹிந்துஸ்தானி சங்கீதத்தை யாரேனும் இங்கே கற்றுக்கொண்டு பாட முடியுமா?" என்று சபையிலுள்ள சங்கீத வித்துவான்களைக் கேட்டபோது அங்கு வீற்றிருந்த ஆனை ஐயா இருவரும், "இரண்டு மாதம் அவகாசம் கொடுத்தால் நாங்கள் முயற்சி செய்து பார்ப்போம்" என்றார்கள். அவ்வாறே இரண்டு மாதம் அப்பியாசம் செய்து அந்தச் சங்கீதத்தைத் தவறின்றி அரசருக்குப் பாடிக் காட்டினார்கள். அதுவரையில் தஞ்சையிலேயே இருந்த முகம்மதிய வித்துவான் கேட்டு வியப்புற்று, "நாங்கள் எவ்வளவோ சிரமப்பட்டு, தக்க ஆசிரியரிடம் பல வருடங்கள் பயின்று கற்றுக்கொண்ட இந்த அருமையான வித்தையைக் கேள்வியினாலேயே இவ்வளவு விரைவில் இவர்கள் கற்றுக்கொண்டார்களே! இவர்களால் அறிய முடியாதது ஒன்றுமில்லைபோலிருக்கிறது!" என்று சொல்லிப் பாராட்டினரென்று சொல்வார்கள்.

இத்தகைய வித்துவான்கள் மேற்கூறிய கனவான் வீட்டுக் கல்யாணத்துக்கு வந்துசேர்ந்தார்கள். அவர்களுடைய வரவை அறிந்த ஜனங்கள் யாவரும் அவர்களுடைய பாட்டைக் கேட்க ஆவல் கொண்டு, வந்து கூடினார்கள். வெளியூர்களிலிருந்தும் பலர் வந்தனர். அவர்களுடைய பெருமை எங்கும் பரவியிருந்ததாதலின் அவர்கள் பாட்டைக் கேளாவிடினும் அவர்களைப் பார்த்துவிட்டாவது போகலாமென்று பலர் வந்திருந்தனர். இவ்வளவு கூட்டத்தையும் கண்ட தனவந்தருக்கு உள்ளுக்குள்ளே மிக்க சந்தோஷம் உண்டா

யிற்று. எல்லோரும் தம்மை உத்தேசித்து வந்திருக்கிறார்கள் என்பது அவருடைய நினைவு.

முகூர்த்த தினத்து மாலையில் பாட்டுக் கச்சேரி நடந்துகொண்டிருந்தது. ஆனை ஐயாவைச்சுற்றிலும் பிரபலர்களான வித்துவான்கள் பலர் உட்கார்ந்து இருந்தார்கள். கூட்டம் அமைதியாகவிருந்து கேட்டுக்கொண்டிருந்தது. வீட்டு எஜமான் அந்தச் சமயத்தில்தான் தமது கௌரவத்தைக் காட்டவேண்டுமென்று சுறுசுறுப்பாகப் பல காரியங்களைக் கவனித்து வந்தார். உணவுக்கு வேண்டியவற்றையும் பிற உபசாரங்களுக் குரியனவற்றையும் செவ்வனே அமைக்குமாறு அங்கங்கே உள்ளவர்களை ஏவிக்கொண்டும் அடிக்கொருதரம் சங்கீதக்கச்சேரி நடக்குமிடத்திற்கு வந்து கூட்டத்தையும் பாடுபவர்களையும் சுற்றிப்பார்த்துக் கனைத்துக்கொண்டும் காற்றாடிபோல் சுழன்றுகொண்டிருந்தார். உண்மையில் அவருக்குச் சங்கீதம் என்பது இன்னதென்று தெரியாததலின் அதில் அவருக்குப் புத்தி செல்லவில்லை.

ஆனை ஐயா ஒரு பல்லவி பாட ஆரம்பித்தனர். பலபல சங்கதிகளையும் கற்பனைச்சுரங்களையும் போட்டுப் பாடத்தொடங்கினர். அங்கிருந்தோர்கள், 'இதுவரையில் இவ்வாறு கேட்டதே இல்லை' என்று கூறி அதில் ஈடுபட்டனர். அதனால் ஊக்கம் மிக்க பாடகர்கள் இருவரும் தங்கள் மனோபாவ விரிவுக்கேற்பப் பாடிக்கொண்டிருந்தார்கள். அங்கிருந்த யாவரும் ஒரே நோக்கமாக ஆனந்தக்கடலில் மூழ்கியிருந்தனர். அப்பொழுது ஒரு தூணருகில் எஜமான் நின்றுகொண்டு கவனித்தார். அவர் மூக்கின்மேல் விரல் வைப்பதும் அடிக்கடி முகத்தைச் சுளிப்பதும் வாயினால் வெறுப்பிற்குரிய ஒலியை உண்டாக்குவதும் அவருக்கு ஏதோ மனத்தில் ஒருவித வருத்தம் இருப்பதை வெளிக்காட்டின. வரவரக் கண்கள் சிவந்தன. இரண்டுதடவை தூணில் தட்டினார். அவருக்குக் கோபம் வந்த காரணம் ஒருவருக்கும் தெரியவில்லை. திடீரென்று பலத்த குரலில், "வித்வான்களே, நிறுத்துங்கள் உங்கள் சங்கீதத்தை. இங்கே இருப்பவர்களுக்கெல்லாம் ஒன்றும் தெரியாதென்று நினைத்துவிட்டீர்களோ! நானும் ஒரு நாழிகையாக எல்லாவேலையையும் விட்டுவிட்டுக் கவனித்துக்கொண் டிருக்கிறேன். திருப்பித்திருப்பிச் சொன்னதையே சொல்லிக்கொண் டிருக்கிறீர்களே ! அதற்கென்ன அர்த்தமென்று நான் கேட்கிறேன்" என்று கர்ஜித்தார். யாவருக்கும் உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரை ஊசியினால் குத்தினதுபோல் இருந்தது. "இவர்களைப் பெரிய சங்கீத வித்வான்களென்று பொறுக்கியெடுத்தார்கள். இதற்குத்தான் முதலிலேயே கல்யாணத்

துக்குப் பாட்டுச் கச்சேரி வேண்டாமென்று சொன்னேன். இருக்கிறவர்களல்லவா பிடுங்கி எடுத்துவிட்டார்கள். இவர்களுக்குக் கொடுக்கும் பணத்தை வைத்துக்கொண்டு வேளாண்மையை விருத்தி செய்யலாமே!'' என்று மேலும் மேலும் கத்திக்கொண்டிருந்தார் பிரபு.

சங்கீதம் நின்றுவிட்டது. அப்போது ஆனை ஐயாவின் மன நிலையை யாரால் சொல்லமுடியும்? அங்கிருந்தவர்களிற் பெரிய வித்துவான்களெல்லாம் கண்ணில் நீர்ததும்ப அவ்விருவருக்கும் சமாதானம் சொன்னார்கள். அவர்கள் உடனே கல்யாண வீட்டி னின்றும் வெளியே போனார்கள். கூட்டம் அவர்களைத் தொடர்ந்து சென்றது. அவ்விருவரும் ஒருவார்த்தையும் பேசவில்லை. அளவற்ற வருத்தத்தை அடக்கிக்கொண்டவர்களென்பதை அவர்கள் முகங்கள் காட்டின. அப்பால் அவ்வூரிலுள்ள வேங்கடேசப் பெருமாள் கோயிலுக்கு நேராக வந்து பெருமாளைத் தரிசித்தவுடன் ஓவென்று கதறிவிட்டார்கள். உடன் வந்தவர்களெல்லாம் ஸ்தம்பித்து நின் றனர். ஆனை என்பவர் தம்முடைய வருத்த மிகுதியினால் அடியிற் கண்ட கீர்த்தனத்தைப் பாடத்தொடங்கினர்:

### கீர்த்தனம்

### இராகம் புன்னாகவராளி—தாளம் ஆதி

#### பல்லவி

போதும் போதும் ஐயா தலைமுறைக்கும் (போதும்)

#### அநுபல்லவி

மாதுவளர்வர காபுரி தனில் விளங்கிய
மங்கை யலர்மேலுமிக மகிழ் வேங்கடாசலனே (போதும்)

#### சரணங்கள்

1. அரியென் றெழுத்தையறி யாத மூடன்றன்னை
ஆதி சேஷ னென்றும்
ஆயுத மொன்று மறியா தவன்றனை
அரிய விஜய னென்றும்
அரிந்து மரைக்காசுக் குதவா லோபியைத்
தான கர்ண னென்றும்
அழகற்ற வெகுகோரத் தோனை யேமிக
அங்கஜனே யென்றும் புகழ்ந்தலைந்தது (போதும்)

2. காசுக் காசைகொண்டு லுத்தனைச் சபைதனில்
கற்பக தருவென்றும்
கண்தெரி யாக்குருட னென்றறிந்துஞ் சிவந்த
கமலக் கண்ண னென்றும்
பேசுத லெல்லாம் பொய்யா மொருவனைப்
புகழரிச் சந்த்ர னென்றும்
பெற்ற தாய்தனக்கு மன்னமிடான் றன்னைப்
பெரிய தர்ம னென்றும் புகழ்ந்தலைந்தது (போதும்)

3. அறிவில் லாதபெரு மடையர்த மருகினை
அல்லும் பகலும் நாடி
அன்னை *உமாதாச னுரைக்கும் பதங்களை
அவரிடத்திற் பாடி
அறிவரோ வறியா ரோவென் றேமிக
அஞ்சி மனது வாடி
ஆசை யென்னும்பேய்க் காளா யுலகினில்
அற்பரைக்கொண் டாடித் திரிந்தலைந்தது (போதும்)

இந்தப்பாட்டைப் பாடி மேலும் சில ஸ்தோத்திரங்களைச் செய்துவிட்டு அவ்வூராரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு தங்கள் இருப்பிடம் போய்ச் சேர்ந்தார்கள் அவ்வித்வான்கள் இருவரும். அதற்குப் பின் தெய்வ ஸந்நிதானத்தில் அன்றி வேறொருவரிடமும் அவர்கள் சென்று பாடியதில்லை யென்பர்.

இந்தக் கீர்த்தனத்தையும் வரலாற்றையும் எனக்குச் சொன்னவர்கள் மேற்கூறிய ஸ்ரீ மகா வைத்தியநாதையரவர்கள்.

---

* உமாதாச ரென்பது ஆனை யென்பவர் முத்திரை. அதனைத் தாம் இயற்றும் ஒவ்வொரு கீர்த்தனத்திலும் அமைத்துப் பாடுவது அவர் வழக்கம்.

# தலைப்பலியும் தமிழிலக்கியங்களும்

மு. இராகவையங்கார்

கலைமகளின் 4-ஆம் பகுதியில் தேவிக்கு இடும் தலைப்பலி பற்றி எழுதப்பட்ட கட்டுரையும், பல்லவர் சிற்பங்களில் அப்பலி யிடுசம்பந்தமாகக் காணப்படும் உருவங்களும் எல்லாருள்ளங்களை யும் கவரக்கூடியன. அக்கட்டுரையின் அருமையறிந்து படங்களு டன் ஆங்கிலத்தினின்று அதனை மொழிபெயர்த்துதவிய ஆசிரியர் ஸ்ரீமான் க. அ. நீலகண்ட சாஸ்திரியார் அவர்கட்கு நம்மவர் நன்றி கூறும் கடப்பாடுடையர். வீரர்களோ பிறரோ தாம் வேண்டும் வரம்பெறும் பொருட்டுத் துர்க்காதேவிதிருமுன்பு நின்று தங்கள் தலையைத் தாங்களே அரிந்துகொள்ளுமுறை சிலையுருவங்களினும் வடநூல்கள் சிலவற்றினும் காணப்படுதலை அவ்விஷயம் நன்கு விளக் குகின்றது. இம்முறை பண்டைத் தமிழரும் கொண்டதொன்றே என்பது தமிழ்நூல்களால் அறியக்கிடப்பதைத் தெரிவிக்கவே இஃது எழுதலாயினேன்.

காவிரிப்பூம் பட்டினத்தில் நடந்த இந்திரவிழாவின் தொடக் கத்தே, பூதம் நிற்கும் நாளங்காடிப் பலிபீடிகையில், போர்வீரரிற் பலர் தம் அரசனது வெற்றிவேண்டித் தங்கள் தலைகளைத் தாமே அரிந்து பலியூட்டிய செயலை,

"ஆர்த்துக் களங்கொண்டோ ராரம ரழுவத்துச்
சூர்த்துக் கடைசிவந்த சுடுநோக்குக் கருந்தலை
வெற்றி வேந்தன் கொற்றங் கொள்கென
நற்பலி பீடிகை நலங்கொள வைத்தாங்கு
உயிர்ப்பலி யுண்ணு முருமுக்குரன் முழக்கத்து
மயிர்க்கண் முரசொடு வான்பலி யூட்டி" (சிலப். 5, 83-88)

என இளங்கோவடிகள் தம் காவியத்தே சிறப்பித்துக் கூறுகின்றார். சோழரின் முன்னோனாகிய முசுகுந்தனுக்கு ஆபத்திலுதவிய பூத மொன்றுபுரிந்த நன்றியைப்பாராட்டிப் புகார் நகரின் நாளங்காடியில் அச்சோழனால் அப்பூதவுரு பிரதிஷ்டிக்கப்பட்டதென்றும், அதற்கு வீரர்கள் தலைப்பலியூட்டி மகிழ்விக்கும்படி அச்சோழனே ஆணையிட் டிருந்தனன் என்றும் அச்சேரவடிகளே குறிப்பிடுவர். இதனால், வீரர்கள் தம் தலையரிந்து பூதமுதலிய தெய்வங்கட்குப் பலியிடும்

வழக்குச் சங்ககாலத்தே பிரபலமாயிருந்தது என்பது தெரியலாம். இவ்வாறே கொற்றவையாகிய துர்க்காதேவிக்குத் தலைப்பலியூட்டி வந்த வீரரின் அருஞ்செயல்களைச் செயங்கொண்டார் தம் பரணியில் 'கோயில் பாடியது' என்ற பகுதியுள் மிக அழகாகக் கூறுகின்றார். அது வருமாறு :

"சலியாத தனியாண்மைத் தறுகண் வீரர்
தருகவரம் வரத்தினுக்குத் தக்க தாகப்
பலியாக உறுப்பரிந்து தருது மென்று
பரவுமொலி கடலொலிபோற் பரக்கு மாலோ.

"சொல்லரிய ஓமத்தீ வளர்ப்ப ராலோ
தொழுதிருந்து பழுவெலும்பு தொடா வாங்கி
வல்லெரியின் விறகாக இடுவ ராலோ
வழிகுருதி நெய்யாக வளர்ப்ப ராலோ"

"அடிக்கழுத்தி னுடன்சிரத்தை யரிவ ராலோ
அரிந்தசிரம் அணங்கின்கைக் கொடுப்ப ராலோ
கொடுத்தசிரங் கொற்றவையைப் பரவு மாலோ
குறையுடலங் கும்பிட்டு நிற்கு மாலோ.

"நீண்டபலி பீடத்தி லறுத்து வைத்த
நெடுங்குஞ்சிச் சிரத்தைத்தம் இனமென் றெண்ணி
ஆண்டலைப்புள் அருகணைந்து பார்க்கு மாலோ
அணைதலுமச் சிரமச்ச முறுத்து மாலோ.

"கடன மைந்தது கருந்தலை யரிந்தபொழுதே
கடவ தொன்றுமிலை யென்றுவிளை யாடுமுடலே
உடல்வி ழுந்திடின் நுகர்ந்திட வுவந்தசிலபேய்
உறுபெ ரும்பசி யுடன்றிட உடன்றிரியுமே"

(கலிங்கத்துப் பரணி, கோயில். 13-17.)

இவற்றால், வீரர்கள் தேவிதிருமுன்பு நின்று வரங்கள் வேண்டுவதும், அவ்வரங்கட்குத் தக்கபடி தம் உடலுறுப்புக்களை அரிந்து பலியிடுவதாகக் கூறுவதும், தம் எலும்பைச் சமிதையாகவும் குருதியை நெய்யாகவும் இட்டு அப்பலியில் ஓமத்தீ வளர்ப்பதும், அடிக்கழுத்தொடும் தம் சிரத்தை ஒரேபடியாக விரைந்தரிந்து தேவி திருக்கரங்களில் அதனைச் சமர்ப்பித்துப் பலி யூட்டுவதும், இவ்வருஞ்செயலுடன் தம் கடமை முடிந்ததாகக் கொண்டு அவ்வீரரது குறையுடல் மகிழ்வதும் ஆகிய செயல்கள்பற்றி அப்புலவர் பெருமான் கூறியவை எவ்வளவு அருமையும் பெருமையும் வாய்ந்துள்ளன! தாம் பெறவிரும்பிய வரத்தின் தகுதிக்கேற்பத் தம் உடலு

றப்பை வீரர் அரிந்திடுதலை இப்புலவர் கூறியவாறே, சாஸ்திரிகள் காட்டியுள்ள 4-ஆம் பல்லவர்சிற்பத்தில், வீரனொருவன் தன் தொடையுறுப்பை அரிந்து பலியிடுமுறை அமைந்திருத்தல் ஒப்பிடத்தக்கது. வீரர்கள் தம் தலையை ஒரேமுறையில் அறுத்து அதனைத் தேவி திருக்கரத்தில் வைத்துப் பலியூட்டுவதாகச் செயங்கொண்டார் கூறியது அதிசயோக்தி யென்று நாம் கருதற்குரியது அன்று. நெல்லூர் ஜில்லா, போலூர்த் தாலூக்காவைச் சார்ந்த மல்லம் என்ற ஊரின் கடைவீதியில் உள்ள சிலையொன்றில், வீரனொருவன் தன் கைவாளால் தன் கழுத்தையே அரிந்து நிற்கும் பாவனையில் உருவம் பொறிக்கப்பட்டும், அதன்கீழ் அவ்வரிய பெரிய செயலைப் பாராட்டி அவ்வீரனை வழிபடற்கோ அவன் குடும்பத்தினர்க்கு உதவியாகவோ மானிய பூமி அளிக்கப்பட்ட செய்தி வரையப்பட்டும் உள்ளன என்று தெரிகின்றது.*

"அடிக்கழுத்தி னொடுஞ்சிரத்தை யரிவ ராலோ
அரிந்தசிரம் அணங்கின்கைக் கொடுப்ப ராலோ"

என்ற செயங்கொண்டார் கூற்று, உண்மை நிகழ்ச்சியே என்பதற்கு இச்சிலை மற்றொரு சிறந்த சான்றன்றோ? மல்லங் கடைவீதியிற் கண்ட இப்பலிச்செயல் கொற்றவையை நோக்கிய தென்று தெரியவில்லையேனும், முன் கூறியவாறு, புகாரின் நாளங்காடிப் பூதம் போன்ற தெய்வமொன்றன் பொருட்டுச் செய்யப்பட்டதாகக் கொள்ளற்குரியது. இத்தகைய பலியீட்டை வேறு நூல்களும்,

"மோடி முன்றலையை வைப்ப ரேமுடி
குலைந்த குஞ்சியை முடிப்பரே
ஆடி நின்றுகுரு திப்பு துத்திலகம்
அம்மு கத்தினி லமைப்பரே" (சிலப். 5. 76-88, மேற்.)

"அடலருந்திற னினைவுடன்சிலர்
அரிபசுந்தலை பலிகொடுத்
துடல்வலஞ்செய வாமிருந்தவை
ஒன்றிரண்டென வெண்ணுமே" (இரணியவதைப்பரணி, 94)

என்று புகழுகின்றன. பண்டை வீரர்களின் அருஞ்செயல்கள் இவையாயினும், சக்தியுபாசகர்கள் அந்தச் சக்தியின் அருள்பெற்று உய்தற்காகத் தம் தலையரிந்து பலியிடுதலும் முற்காலத்தே பிரபலமாயிருந்ததாகும். இதனைக் கவிச்சக்கரவர்த்தியாகிய கூத்தர், தம் தக்கயாகப்பரணியில்,

*Ep. Rep. 523 of 1908 (I. M. P. p. 1135).

"தலையரிந்துவிடு வாருயிர் விடார்தலைவிமுன்
நிலைய ருந்தமது மெய்யெரியி னின்றெரிவரே"

"அகவனச முகவனச மவைமலா வரிவார்
நகவனச மலர்குவிய வலம்வருவர் நகரே"

என்று கூறிய தாழிசைகளாலும், அவற்றிற்கு,

"பரமேசுவரியுடைய யாமளசாத்திர மந்திரசாதகர் தம்முடைய தலையைத் தாமே அரிந்தரிந்து தலையைவிட்டு உடலைப்பற்றி நிற்பார், தம் பிராணன்களை விடார்; பரமேசுவரி முன்னே பிறருக்கு நிற்கவரிய நிலையிலே நின்று தம்முடைய சரீரங்களில் உண்டாகிய அக்கினியினாலே நின்றெரிவர்", "இருதய கமலம் அறுக்கும் பொழுது வதனகமலம் மலரவும், முககமல்மான தமது தலையை அறுக்கும்பொழுது இருதய கமலம் மலரவும் இரண்டும் இரண்டு கூறிட அறுக்கும்பொழுது இரண்டு மலரை அரிவாராய் அரிந்து கொண்டு சீருடைய கைத்தாமரைமலர் குவித்துத் தேவிகோட்டத்தைப் பிரதக்ஷிணமாக வருவர், சில மந்திரசாதகர்"

என்று உரைகாரர் எழுதிய பொழிப்பாலும் அறியலாம். பல்லவர் சிற்பங்களிற் பலியிடும் மக்களைநோக்கின், இத்தகைய சாதகர்களின் உருவங்களாக அவற்றைக் கொள்ள இடமுண்டு. தேவீயுபாசனையில் தலைசிறந்து நின்ற இச்சாதகர்களை,

*"சொல்லரிய நனவினொடு துயில்மறந் தவர்களே
தூங்குதலரி நிட்டைவிடு தொழில்சிறந் தவர்களே
நல்லதொரு ஞானமுற் றிசைதழைத் தவர்களே
ஞானநா யகிகருணை நாடுசா தகர்களே" (பாசவதைப்பரணி, 210)

"தமருகங்கள் தருகின்றசதி யின்கண்வருவார்
அமரி யின்புறு மனுதிவரு சாதகர்களே"
(கலிங்கத்துப் பரணி, கோயில்.)

என்று முன்னோர் புகழுதலுங் காண்க. இவ்வாறு வீரர்களும் சாதகர்களும் தேவிக்குத் தலைப்பலி யூட்டுதல்பற்றி இலக்கியங் கூறும்செய்திகள், அவை பாடிய புலவரின் மனப்போக்கிற்கு ஏற்ப அமைந்த கற்பனைகள் என்று கருதற்கு இடமின்றிப் பல்லவர் சிற்பங்கள் காட்டிநிற்றல் அறிந்து மகிழத்தக்கது. ஒட்டக்கூத்தர், தம் விருப்பத்தின்படி அரிந்துவைத்த செங்குந்தவீரரின் சிரச்சிங்காதனத்தில் வீற்றிருந்து அவ்வீரர்களைப் புகழ்ந்து ஈட்டியெழுபது என்ற நூலைப் பாடியவர் என்பது அவர் வரலாறுகளுள் ஒன்று.

* தக்கயாகப்பரணி, விசேடக் குறிப்பு, பக். 282.

இதனை அப்புலவரே,

"முத்தமி ழிராசரா சேந்திரன் முன்னமே
சுத்தவீ ரத்திறந் துலங்கு தற்கொரு
பொய்த்தலை கொடுத்தலிற் புகழ்பெ றுதென
மெய்த்தலை கொடுத்தன வீரக் குந்தமே" (60)

"தவந்தனிச் செய்வதென் தலைச்சிங் காதனம்
உவந்துபா வாடையிட் டோடுஞ் சோரிமேல்
நவந்தனிற் பாடிய நங்க வித்திறம்
சிவந்திடச் செய்தது திருச்செங் குந்தமே" (70)

என்று பாடுதலும் காண்க. இச்செங்குந்தர் செயலும் மேற்கூறிய வீரர்சாதகர்களின் அருஞ்செயல் போன்றதாகும். இத்தகைய செயல்கள் பண்டைத் தமிழ்மக்களது அரிய வீரத்தையும் பெரிய பக்தியையும் வெள்ளிடை மலைபோல் விளக்கக் கூடியனவன்றோ?

# காரோணம்

## வி. ஆர். இராமச்சந்திர தீக்ஷிதர்

காயாரோஹணமென்றும், காரோஹணமென்றும், காரோண மென்றும் தற்காலம் வட இந்தியாவிலும் தக்ஷிண தேசத்திலும் பல ஊர்கள் புண்ணிய க்ஷேத்திரங்களாகக் கருதப்பட்டு வருகின்றன. தென் இந்தியாவில் தமிழ் நாட்டிலே மூன்று நகரங்கள் காரோஹண மென்னும் பெயரை உடையன. இவைகள், நாகை (நாகபட்டினம்), குடந்தை (கும்பகோணம்), கச்சி (காஞ்சீபுரம்) என்பவைகளாம்[1]. யூனிவர்ஸிட்டித் தமிழகராதியில் (*Tamil Lexicon*) நாயன்மார்கள் பாடிய தேவாரத்தை ஆதாரமாகக் கொண்டு காரோணம் என்பதற்கு, "மகாசங்கார காலத்திற் சிவபெருமான் ஆன்மாக்களைத் தம்முள் ஐக்கியமாக்கிக்கொண்ட தலம்" என்ற பொருள் வரையப்பட்டிருக் கிறது. தேவாரமாகிய தமிழ் வேதத்தில்[2] சில விடங்களில் காரோண மென்பது பிரயோகிக்கப்பட்டிருக்கிறது.

இந்த ஆதாரங்களைக் கொண்டு தேவாரம் பாடியவர்கள் காலத் தில் நாகையும் குடந்தையுமே காரோஹண க்ஷேத்திரங்களாகக் கரு தப்பட்டிருந்தன என்று சொல்லக்கூடும். இந்த ஆதாரங்களையே கொண்டால் கச்சிக்குக் காரோணமென்னும் பெயர் சைவ சமயா சாரியர்கள் காலத்திற்கு அதாவது கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டிற் குப் பின்னரே வழக்கில் வந்ததென்று ஊகிக்க இடமுண்டாகிறது.

இது நிற்க, மஹாபுராணங்களி லொன்றான வாயு மஹாபுரா ணத்தில் காயாரோஹண விஷயம் பின் வருமாறு கூறப்படுகிறது: மன்வந்தரத்தில் பெரிதான வைவஸ்வத மன்வந்தரத்தில் யுகக்கிர மத்தில் 28-வது யுகத்தில் மஹாவிஷ்ணு வாஸுதேவனாக அவதார மெடுத்த காலத்தே மஹேசுவரரான பரமேசுவரர் சிறப்புற்ற மேருபருவதத்தின் ஒரு குகையில் காயாரோஹணமென்ற ஒரு ஸித்த க்ஷேத்திரத்தில் லகுலீ என்ற திருநாமத்துடன் அவதரித்து லோக ரட்சணார்த்தம் அவ்விடத்து மயானத்தில் சவமாய்க் கிடந்த

---

1. See *Tamil Lexicon*, Vol. II, p. 890.

2. திருக்குடந்தைக் காரோணம்—சம்பந்தர், p. 435. நாகைக்காரோணம்-சம்பந்தர், அப்பர், சுந்தரர், (pp. 667-668) (Svāminātha Paṇḍitar edition).

ஒரு சரீரத்தின்கண் தம் யோக பலத்தால் நுழைந்து குசிகன், கார்க்யன், மித்ரகன், ருஷ்டன் என்ற நால்வர்களுக்கு மஹேசுவர யோகத்தை உபதேசித்து அவர்களுடன் திரும்பிவாரா உருத்திர லோகத்தை அடைந்தார்.[1]

இந்த விஷயத்தைப்பற்றி ஆராய்ச்சி செய்த புரொபஸர் பந்தார்கார் இந்த லகுலி அவதாரத்தை அவலம்பித்து லகுலீச பாசுபதமென்ற ஒரு மதக்கூட்டம் ஏற்பட்டதென்றும், தற்காலத்தில் ராஜபுதன மென்ற சமஸ்தானங்களில் காரவான் என்ற ஊரே லகுலீ அவதரித்த இடமென்றும், அவ்வூர் ஸ்தலமாஹாத்ம்யத்தில் இந்த லகுலீசர் அவதார விஷயம் விவரிக்கப்பட்டிருக்கிறதென்றும், வாயுபுராணத்தில் சொல்லியிருக்கிற நால்வர்களே சிஷ்யர்களாகக் குறிக்கப்பட்டுள்ளன ரென்றும், காரோஹண க்ஷேத்திர மென்பது இந்தக் காரவானாகவே இருக்க வேண்டுமென்றும் அபிப்பிராயப்படுகிறார்.[2] நாம் இங்கே முக்கியமாய்க் கவனிக்க வேண்டியது ஒன்றுண்டு. தென் இந்தியக் கல்வெட்டுக்களில் அநேக விடங்களில் லகுலீச பாசுபத விஷயம் கூறப்படுகிறது.[3]

இரண்டு கல்வெட்டுக்களால் லகுலீசுவர பண்டிதன் என்ற திருநாமம் ஓர் ஆசாரியனுக்கு அளிக்கப்பட்டிருக்கிறதாகத் தெரிகிறது[4]. இவைகளிலிருந்து சைவர்களுக்குள் அநாதியாய் வழங்கி வருகிற பாசுபத மதத்திற்கு லகுலீச பாசுபதம் என்பது ஒரு பகுதியாக ஏற்படுத்தப்பட்டதென்பதும் இந்த மதம் வடக்கே இமயத்திலிருந்து தெற்கே கன்யாகுமரி வரையில் பரவியிருந்த தென்பதும் தெரியலாகும். சரித்திர ஆராய்ச்சிக்காரர்கள் இந்த மதம் பிரசாரத்தை அடைந்தது சுமார் கி. பி. ஆரம்பத்திலென்று சொல்லுகிறார்கள்.[5]

வட இந்தியாவில் ராஜ புதனத்திலும் மேருபர்வதத்திலும் காயாரோஹணம் சொல்லப்பட்டிருப்பது போல் தமிழ்நாட்டில் தல புராணங்கள், நாகபட்டினம், கும்பகோணம், காஞ்சீபுரம் என்ற மூன்று நகரங்களையும் காரோண க்ஷேத்திரங்களாகக் கூறுகின்றன.

---

1. ch. 23, 217—224.

2. *Ar. S. R.* 1906—7, pp. 179-192.

3. *See* V. Rangachari, *Inscriptions of the Madras Presidency*, North Arcot 681, Bellary 217, Coorg 978 and 1101.

4. *Ibid.* South Arcot, 603, North Arcot 681.

5. See author's paper on *Some Aspects of the Vāyu Purāṇa* in the *Journal of the Madras University*.

இத்தலபுராணங்களிற் காணும் வரலாறுகளைச் சுருக்கமாய்க் கூறுவோம்.

நாகபட்டினமான நாகையைக் காரோணமென்றும் அவ்வூரில் விளங்காநிற்கும் சிவபெருமானைக் காயாரோகணப் பெருமானென்றும் திருநாகைக்காரோணப்புராணம் கூறுகின்றது. இம்மகிமைபெற்ற தலத்தில் புண்டரீகர் என்று ஒரு முனிவர் சிவபிரானைக் குறித்துத் தவம் செய்ய, சிவபிரான் பலமுறை திருக்காட்சியளித்தனர். அவற்றுள் மூன்றாங் காட்சியில் புண்டரீக முனிவரை அவர் காயத்தோடு ஆரோகணஞ்செய்து கொண்டனர். இதைப் பின்வரும் பாடலும் விளக்குகின்றது:

'என்றுநைந் துருகிக் கண்ணீ ரிழிதர வெதிர்நின் ருனை
நன்றுளக் கருணை பொங்க நாமிரு கரத்தால் வாங்கி
ஒன்றுத லமைபக் காயத் தொடுமாரோ கணஞ்செய் தோமோர்
கன்றுத லின்றி யொன்ருய்க் கலந்தின்பந் துளைந்தா னன்றே.'

இனி, திருக்குடந்தைப் புராண [1]வரலாற்றைக் கவனிப்போம்.

இப்புராணத்தில் காரோணப் படலமென்று ஓர் அத்தியாயமுண்டு. இதில் ஸ்ரீமந் நாராயணன் ஸ்ரீ தசரதராமனாக அவதரித்த அவசரத்தில் சீதாபிராட்டியாரைக் கொடிய அரக்கனாகிய இராவணன் தூக்கிப்போக அவ்வரக்கர் பூண்டை வேரோடு களையக் கங்கணம்கட்டிய இராகவன் தண்டகாரண்யம் தாண்டி இலங்கை நோக்கி ஏகுங்கால் கும்பகோணத்தில் தங்கி அவ்விடத்தில் எழுந்தருளி யிருக்கும் சிவபிரானை வழிபட்டு, தான் அரக்கர்களுடன் போர்செய்யும் நிமித்தம் தனக்கு உருத்திராம்சத்தை அளிக்க வேண்டுமென்று அப்பிரானைப் பிரார்த்திக்க, சிவபிரானும் உளமகிழ்ந்து ஸ்ரீ ராகவன் காயத்தில் ஆரோகணஞ் செய்தார். இதுமுதல் இத்தலம் காரோண க்ஷேத்திர மென்று வழங்கிவருகிறது. இவ்விஷயங்களைப் பின்வரும் செய்யுட்களிற் காணலாம்:

'அடியனேன் காயத் துண்ணீ யமையவா ரோக ணஞ்செய்
தொடிவற வுறலாற் காயா ரோகண மெனும்பே ருற்று
முடிவிலித் தலமு நீயு முனிவற விளங்கல் வேண்டும்
கடியபொற் கடுக்கை மாலைக் கடவுளே யென்றுதாழ்ந்தான்.'

'இராகவன் வதன நோக்கி யெம்பிரா னருளிச் செய்வான்
பராவுநஞ் சத்தி நீகாண் பண்புசா னின்கா யத்தில்

---

1. திரிசிரபுரம் மகாவித்வான் ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை இயற்றியது.

விராவுத னமக்கு மிக்க வுரிமைகா ணெனவி ளம்பிக்
கராசலங் காத்த வண்ணன் மேனியுட் கலந்தி வர்ந்தான்.'

'காயத்து விராவி யேறக் கடுஞ்சமர் வீர ஞகி
நேயத்து மகிழி ராம னிகழ்ந்தன னன்ன காலைத்
தோயத்து நடுவி லங்கை சுடுவதற் கெண்ணங் கொண்டு
தேயத்து மன்னர் மன்னன் மகனிது செய்தா னன்றே.'

'ஓங்குபல் வளஞ்சால் காயா ரோகணத் தமுதைப் போற்றிப்
பாங்குசெய் விடையும் பெற்றுப் படையெலா முழங்கிச் சூழத்
தேங்குதெண் டிரைநீர் வேலை செறிந்ததிற் சேது கட்டி
வாங்குவிற் றடக்கை யண்ணல் மாற்றல னிலங்கை புக்கான்.'

இதே விஷயம் ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்திலும் சில இடங்களில் குறிப்பிக்கப்பட்டிருக்கிறது.[1]

இதேவிஷயம் ஸ்காந்த புராணத்திலும் கூறப்படுகிறது.

கொடிய அரக்கர்களான கரன், தூஷணன் முதலிய பதினுயிரம் அரக்கர்களுடன் கடும்போர் செய்யப் புகுந்த ஸ்ரீராமபிரான், யுத்தகளத்தில் புகுந்ததும் நந்தி வாஹனத்தோடு கூடின பிநாகி போல் விளங்கினனென்றும் கராமயுத்தமான கடும்போரில் ஸ்ரீராமன் உருத்ராம்சத்துடன் கூடிய உருத்திரன்போல விளங்கினனென்றும் கூறப்பட்டுள்ளது. மற்றும் யுத்தகாண்டத்தில் ராமராவண யுத்தம் நடக்கும் சமயம், ஸ்ரீராமன் காந்தர்வாஸ்திரப்பிரயோகம் செய்து நின்றவளவில் இராவணன் முதலியோர் திகைத்து நிற்க ஸ்ரீராமனே இவ்விஷயம் எனக்கு அல்லது உருத்திரனுன திரியம்பகனுக்குத் தெரியுமென்று கூறுவதிலிருந்து ஸ்ரீராமன் உருத்திராம்சத்தை மேற் கொண்டானென்பதைத் திண்ணமாய்க் கூறலாம்.

இது தவிர, ஸ்காந்த மஹாபுராணத்தே இச்சந்தர்ப்பத்தில் ஒரு கதை சொல்லப்பட்டுள்ளது. அஃதாவது: ஒரு சமயம் பார்வதீ பரமேசுவரர்கள் உல்லாசமாய் ஆகாய வீதியில் சஞ்சாரம் செய்ய, அதனைப் பார்த்து நின்ற யாஜ்ஞவல்கிய முனிவரின் புத்திரர்கள் மூவரும் சிடர்களான 14,000 பேர்களும் வித்தியாகர்வத்தால் இந்த ஆகாச சஞ்சாரிகளைப் பரிகசிப்பதுபோல் தங்களுக்கு வேண்டிய பத்தினிகளைக் காட்டிக்கொடுக்கும்படி அவர்களைக் கேட்க, பகவான் கோபங்கொண்டு இவர்கள் அரக்கர்களாகப் பிறக்கக்கடவர் என்று சபித்திட, இவர்கள் துயருற்று ஈசனைத் துதிக்க அப்பெருமான், "நான் தசரதராமனுகப் பூலோகத்தில் அவதரிக்குங்கால் உங்களைப்

1. See *Āraṇyakāṇḍam*, Ch. 16, 43; *Ibid*, 24, 26.

போரிற் கொன்று என் உலகமான கைலாயத்திற் சேர்த்துக்கொள்கிறேன்'' என்று கூறியதாக ஒரு வரலாறு காணப்படுகிறது. இந்த ஆதாரங்களில் நம்பிக்கை உண்டாயின் இராமன் இராவணவத காலத்தில் உருத்திராம்சத்தை எடுத்துக் கொண்டான் என்று சொல்லத்துணியலாம்.

இஃது இப்படி யிருக்க, காஞ்சிப்புராண[1] வரலாறு மற்ெருரு விதமாயுள்ளது.

முதற்காண்டம் காயாரோகணப் படலத்தில் சகல ஜீவராசிகளைப் போலவே பிரமாதி தேவர்களுக்கும் ஆயுட் பிரமாணமுண்டென்றும், ஆகையால் தேகவியோகங்களுண்டென்றும் மஹாபுராணங்களில் சொல்லியபடி இப்புராணமும் கூறத் தொடங்கி எந்த யுகத்தில் பிரமா விஷ்ணு இருவர்களும் சேர்ந்து கால வியோகத்தை அடைவார்களோ, அக்காலத்தில் மஹேசுவரரான பரமேசுவரர் அவ்விரு தேவர்களின் காயத்தில் ஆரோகணித்துக் கருணாமூர்த்தியாய் விளங்குகிருரென்று சொல்லுகின்றது. இவ்விதக் காயாரோகணம் பண்டைக்காலத்தில் கச்சியில் நடந்ததென்ற ஐதிஹ்யத்தை இப்புராணம் கூறுவதாகும்;

'இருவரு மொருங்கே யிறவருங் காலை
யெந்தையே யொடுக்கியாங் கவர்த
முருவமீ தேற்றிக் கோடலாற் காயா
ரோகணப் பெயரதற் குறுமால்
வருமுறை யிவ்வா றெண்ணிலா விரிஞ்சர்
மாயவர் காயமேற் ருங்கிக்
கருணையா லங்க ணடம்புரிந் தருளுங்
காலமாய்க் காலமுங் கடந்தோன்' (ப. 88.)

புராணங்களிற் கண்ட விஷயங்களும் கதைகளும் ஆதாரமற்றவைகளென்றும், அவைகளுக்குப் பிராமாண்யம் கொடுத்தல் கூடாதென்றும் சரித்திர ஆராய்ச்சி நிபுணர்கள் கருதுவாராயினும் அவைகளில் உண்மைக் கலப்பும் உள்ளதென்று ஒரு புறம் கருதப்பட்டு வருகின்றது. மேற்சொன்ன கதைகளில் நம்பிக்கை யுண்டானுலும் உண்டாகாவிடினும் காயாரோகணமென்ற வடநாட்டு வழக்கு, பண்டைக் காலமுதல் தென்னுட்டின்கண்ணும் பிரபலமாக இருந்ததென்று நாம் கூறத் தடையில்லை. இதையே திருக்குடந்தைப் புராணமும் கூறும்.

---

1. Ed. by Nāgalinga Mudaliar, Madras, 1910.

'காயாரோ கணமெ னும்பேர் காரோண மென்ரு யிற்று
காயாரோ கணமெ னும்பேர் கருதுமத் தலம்பூண் டன்று
காயாரோ கணமெ னும்பேர் கைக்கொண்டா ரகில நாதர்
காயாரோ கணத்து மேய கடமுனி யிலிங்கம் போற்றி'

'மருவுகா ரோணத் தாரை வழிபடுந் தகுதி யோர்கள்
பொருவுதீர் கல்வி செல்வம் பொற்புறு மடவார் போகம்
இருவுமற் றனைத்துந் துய்த்தாங் கெய்திய போக முந்துய்த்
தருவுரு வினர்கா ரோணத் தன்னவ ரடிசார் வாரே.' (ப. 207)

# தாயுமானவர்

## குரு துதி

## சிறப்புப் பாயிரம்

### ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளை

(709-ம் பக்கத்தொடர்ச்சி)

இராஜரா ஜாங்கவாக் காயெடுத்த வடிமடங்கி யிளைத்தி டாமல், தராசுமுனை யாய்நிறுவிச் சாயாம லநுபோகத் தமிழைப் பாடும், பராவுசிவ மயமாகிப் பரஞான வுபயநெறிப் பரிமே லேறி, நிராமயதே யத்தேகி நிறைதாயு மானவனை நினைந்து வாழ்வாம். 43

வேறு

மறைக்காட்டு மெய்ஞ்ஞான மாணிக்க மலையை மௌனிதிரு வருளாற்றில் வளருநவ மணியைக், கறைக்காட்டு மஞ்ஞானக் களிம் பற்ற கடலைக் காசினியை மறந்தருளைக் கலந்தகதி ரொளியை, நிறைக் காட்டும் பேரின்ப நீணிலத்து நிதியை நீடியபே ரானந்த நெடுங் கடல்வாய் நிறைவைக், குறைக்காட்டு மஞ்ஞானக் குறும்பறுக்குங் கோனைக் குணத்தாயு மானவனைக் கும்பிடுவன் குறித்தே. 44

வேதவனந் தனின்முளைத்த மெய்ஞ்ஞான வித்தை வேதமா கமஞ்சா[ர்]ந்த மேதினியின் விளைவை, ஆதவன்போ லெங்குமொளி யளிக்குமருட் கதிரை யருண்மௌனி திருவருளை யள்ளியுண்ட வறி வை, மாதவமே திருவுருவாய் வந்ததிரு வருளை மகாமுனிவ னருணு தன் வணங்கியமெய் வாழ்வைச், சாதகருக் காதரவாய்த் தழைத்த தனி முதலைத் தாயுமா னவனருளைச் சந்ததமுந் துதிப்பாம். 45

வாய்ந்தபெருங் கருணைமயன் திருமூல வரதன் மந்திரமா லிகை புனைந்தோன் மரபினெழு மௌனி, ஆய்ந்ததிரு வருணிறைவை யக்ஷயபாத் திரம தாக்கியதிற் சிவஞான வநுபோக வமுதைக், காய்ந்தபிற விக்கோடை காலமதைத் தணிக்கக் கருணைகலந் திடுமெறி வாங் கரமதனல் வாங்கித், தோய்ந்தசிவா னந்தமுறை யருந்துசிவ ஞானத் துறைதாயு மானவனைத் தொழுதெழுவோம் யாமே. 46

வேறு

பாண்டவர்தூ தனுமயனுந் தேடரிய மெய்ஞ்ஞானப் படிவந் தாங்கி, ஆண்டசிவ னருளாழி மூழ்கியெழுந் தொளிர்மௌனி

யருளை வாரி, வேண்டல்வெறுப் பானதற விழுங்கியருந் தவனான வீர னாகி, நீண்டசிவா னந்தமதி னிறைதாயு மானவனை நினைவோம் யாமே. 47

வேறு

வாரிசூழ் புவனமெலாம் வாழ்த்தமகிழ்ந் தோங்கி மகாமௌன தேசிகனை மறவாத மனத்தான், பேரின்ப வாழ்வினுறும் பெருந் தகைமா தவத்தோன் பேரின்ப நாடாளும் பேராளன் பெருமை, யாரறிவா ரவன்பெருமை யவன்றனே யறிவா னவனருளை யணைந்த வரு மறிவார்க ளதனல், சீரியசெந் தமிழ்முகமாய்த் திகழ்தாயு மானேன் சேவடியை யநுதினமும் சிந்தனைசெய் வோமே. 48

வேறு

மறைசைநா யகனே ஞானசா தகனா மௌனியே யருட்குரு வரதன், குறைவிலா மூலர் குழாங்களே குழாங்கள் கோதிலா ஞானமே குலமாம், நிறைபரம் பொருளும் பரையுமே தெய்வ நீடு பே ரின்பமே யின்பம், அறையும்வாக் கியத்திற் றாயுமா னவன்வாக் கநுபவ மநுபவ மாமால். 49

ஞானதே சிகனே மௌனியா மவனை நம்பிய தொண்டரே தொண்டர், ஈனமின் மௌனி மாபினே ரெல்லா மிறையரு ளெய் தினோ ரியம்பின், ஆனசற் குருவை யணையமா தவங்க ளாற்றினோர் தவமருந் தவமாம், தானவ னைக்குஞ் சற்குரு வாய்க்கத் தவஞ்செய் தோன் றாயுமா னவனே. 50

தென்மறைக் காட்டி னெழுந்தருண் மௌனி திருவருட் புணரி யிற் றிளைத்தே, பொன்மலை வில்லான் முப்பொருள் விலாசப் பொலி வினை விசாரணை புரிந்தே, கன்மலை யெழுத்தாய்க் கருத்தினி லழுத் திக் கருணைவான் சுவையெனக் கழறும், தன்மயத் தமிழைச் சந்ததந் துதிக்குந் தவத்தனே தாயுமா னவனே. 51

அங்கையி னெல்லிக் கனியென ஞான வநுபவ நிலையெலா மறி வோன், துங்கமா தவருக் கருணிலை தோன்றத் தொகுதமிழ் மாரி யைச் சொரிவோன், திங்கள்வே ணியனா மௌனதே சிகனைத் தினந் தொறுஞ் சிந்தனை செய்வோன், தங்குபே ரின்ப வாழ்வினை யுடை யோன் றாயுமா னவனெனத் தகுமே. 52

வாமதே வரையுஞ் சுகரையு மூலர் மரபையும் பொருளென மதிப்போன், காமமா தியவா மிருவகை யைந்துங் கடந்தவன் கடவு ளர்கோமான், பூமகள் கொழுந னயன்முதற் றேவர் புண்ணியர் பத மெலாம் பொருந்தான், சேமமா ரின்ப வாழ்வினை யுடையோன் றிரு வருட் டாயுமா னவனே. 53

வேறு

பரங்கிரிக்கோன் பாலகனே மௌன ஞான பண்டிதற்கு முரியவனைப் பரமென் றெங்கும், காங்குவிக்குங் காதலனைத் தாயு மானேன் காட்டியசன் மார்க்கநெறி கைக்கொள் வானை, வாங்கொடுக்குஞ் செவ்வேளை யாசான் றன்னை மதிப்பரிய பரசிவனை மதித்துட் கொண்டே, இரங்கி நிற்கு மருட்குருவை யெங்கோ மானை யிறைஞ்சியவன் பாடலையு மியம்பு வோமே. 54

சண்முகவேள் சந்ததியைத் தாயு மானேன் சகோதரனை மௌன குரு தயவால் ஞானக், கண்ணையரு ளுருவாகுந் தாயு மானேன் காரணகா ரியமதனைக் கைக்கொள் வானை, விண்முதலா மைம்பூத நாத மீறாய் விளங்குநவ விதந்தோயா விளைவிற் றேய்ந்தே, பண்பினுறும் பசுத்துவம்போய்ப் பதியாய் நின்ற பான்மையன்வாக் கருந்தமிழைப் படிப்போம் யாமே. 55

மறைசைநகர் வாழ்பெரிய ஞான வேந்தன் மறைக்காடற் கன்புநிலை வளர்க்குஞ் சாந்தன், நிறைவினொடு குறைவுமற நிறைந்த நீத னீண்மௌன குருவருளை நீங்கா நேயன், இறையவருந் தவமுதவி யெல்லாந் தேர்ந்தே யெச்செயலு மிறைசெயலென் றியம்பு மேகன், மறைசையிற்பூப் பணிவிடைசெய் தீசற் காக்கு நாதனரு ளாண்டவனை நாடி வாழ்வாம். 56

சரியைநெறி யொருநான்குந் தாங்கு வானைச் சாலோக முதனான்குஞ் சாரு வானைக், கிரியைநெறி நான்குமுறுங் கேண்மையானைக் கிளர்யோக நெறிநான்குங் கிடைத்தார் வானைப், பரஞான நெறிநான்கும் படர்ந்தாய் வானைப், பதினாறாய் வருநெறியும் பாய்ந் தோய் வானை, அரிதாய செயலுறுதி யாய்நிற் பானை யருளான பெருந்தகையை யணுவோம் யாமே. 57

வேறு

இலந்துறை நகரி லெழுந்தசற் குருவே யிணையிலா ஞானதேசிகனும், குலந்தனைக் கூறி லவனிடத் தமருங் குழாங்களே திருவருட் குலமாம், மலந்தலை சாய்க்கும் போதனு சத்தி வாழ்மனை யவனருள் வாயால், நிலந்தனி லவனுக் கொப்புயர் வாக நிகழ்த்துமோ வறிஞர்நெஞ் சகமே. 58

காசியே முதலாய்க் கன்னியா குமரி கடலளா வாகவே கலந்த, தேசிகர் நிறைவிற் சைவசித் தாந்தத் திறத்திலிப் போதிருப் பாரில், ஆசிலாச் சுவர்க்க புரத்தருட் குருவே யதிகமா மவன்றனக் கிணையாய், மாசிலா மறைசைத் தாயுமா னவனை மதிக்கலாம் வழுத்தமற் றிலையே. 59

கருத்திரு வருக்கு மொன்றதா மவர்கள் கழறிய வாக்கியங் காணில், பொருத்துறுந் தமிழு மநுபவப் பயனும் பூரண விலாச மாய்ப் பொலியும், ஒருத்தருக் கொருத்த ருயர்வுதாழ் விலையா லுண் மையா மநுபவ வொழுங்கால், திருத்துமா காளச் செம்மலு மறை சைச் செம்மலுஞ் சரிதெரிந் தோர்க்கே. 60

வரந்தரு மறைசைத் தாயுமா னவனு மாகாளத் தெழுந்தமா குருவும், புரந்திடுங் கருணைப் பொருளதா யெழுந்தோர் போதனு சத்தியைப் புணர்ந்தோர், சுரந்திடுங் கருணைத் தமிழ்மழை சொரிந் தோர் சூனிய வெளியிடைத் தோய்ந்தோர், நிரந்தர ஞான சைவசித் தாந்த நெறியின ருபயதா ணினைவாம். 61

தமியருக் குரித்தாய் வருமிரு திறருந் தாய்பிதா குருதெய்வந் தாமும், உமிழுளே தவிடா யுயர்மலஞ்சார வுத்தம ரோரிரு வருமே, அமிர்தென ஞான வநுபவத் திரளை யருளிய வருந்தமி ழுதனே, நிமிஷமா யினுஞ்சிந் தனைசெய்தன் னேரை நினைவனே வினைய நெஞ் சுகந்தே. 62

அழகிய திருச்சிற் றம்பல குருவு மவனருள் பெறுமிரு வோரும், மழைமுகி லென்ன வருட்கவி மாரி வழங்கிய தாயுமா னவனும், குழைவுதந் தெமையாள் குரவரா மவர்கள் கூறிய தமி ழருட் குழாமாம், விழைவுறு ஞானசந் தானருங் குருவாம் வேறொரு வரைவிரும் பேனே. 63

வேறு

ஊழிதோ றாழியெனக் குறுதுணையாய் நிரந்தரமா யொளிரு மீசன், வாழிமா மருகலுறை மாணிக்க மலையனைய வரத னென்னச், சோழியவே ளாளர்குலத் துற்பவிக்கத் தொகுத்தழைத்தே தொழும்ப னுக்கி, எழுலகுக் கொருமுதலாய்ச் சுவர்க்கபுரத் திருந் தானை யிறைஞ்சி வாழ்வாம். 64

எனைத்தடுத்தாட் கொண்டசிவன் மருகலா னெம்பெருமா னேழை பாகன், தனைத்தகுந்தா ரில்லாதா னெனக்குமொரு தெய் வந்தா னேதா னுகி, அனைத்தினுக்கு மனுகூலன் சுவர்க்கபுரத் தரசனு யமர்ந்தே நாயேன், நினைத்தபடி கூட்டிமுடித் துபதேசித் தரு ணிறைவி னிறுத்தி னனே. 65

ஆதலினு லெனைத்தடுத்தாட் கொண்டசிவன் மருகலா னவனே பின்னும், போதகனுய்ச் சுவர்க்கபுரத் தெழுந்தருளி யிருந்தறிவைப் போதித் தேயின், வேதமுத லாகமத்தின் பயனறிவித் தருஞான விளைவால் பாவத், தீதகலச் செய்தபிரான் செய்தநன்றி மறவாமற் சிந்திப் பேனே. 66

மழவிடையா னனந்த வாரியிலே படிந்தருளே வாரி வாரிப், பழமறையா கமப்பயிர்கள் படர்ந்தோங்க வருணீரைப் பாய்ச்சிப் பாய்ச்சித், தழலனைய பிறப்பிறப்பிற் றுழுமுயிர்ப் பயிர்க்கருளைத் தந்தாட் கொள்ளும், அழகியசிற் றம்பலவ னடியிணையை யநுதினமு மகத்துள் வைப்பாம். 67

வேறு.

தக்கபரி பூரணமா யெழுந்தபரா பரத்தைச் சகளநிஷ் களசகள வகளமெனுந் தனியை, விக்கிரக வடிவுகளாய் விளங்கியமெய் வடிவை வேதாந்தஞ் சித்தாந்தம் விளங்கியமெய்ப் பொருளை, நிக்கிரக மநுக்கிரக நிகழ்த்தியநின் மலத்தை நிராமயமா யொளிவெளியாய் நின்றிடுநிச் சயத்தைத், துக்கசுகந் தோயாத சுயஞ்சோதிச் சுடரைச் சுவர்க்கபுரத் தெழுஞான சூரியனைத் தொழுவாம். 68

சித்தாந்தச் சிவசைவச் சமயகுரு மரபைத் தேசொளிருஞ் சந்தானத் தேசிகர்சே வடியைக், கத்தாமெய்த் தவவேடங் கதிக்க வருங் குழாத்தைக் காரணகா ரியங்காணுக் கருணையின்மெய் வடிவைச், சத்தாருஞ் சிவபத்த சரணர்திரு மரபைத் தாணுவினல் வருமுதவி தனைமறவா தவரைச், சுத்தாங்க மாகவருஞ் சுவர்க்கபுரத் தானைத் தொண்டர்குழாத் திரளினெடுந் தொழுதுமகிழ் வோமே. 69

மாகாள மிலந்துறையைச் சுவர்க்கபுர மாக வகுத்ததனிற் சிவஞான வரோதயனுய் மருவித், தேகாதி பிரபஞ்சத் திமிரமெலா மகற்றுந் தினகரன்போன் மலமகற்றுந் திருவருட்செங் கதிரா, யோகாநுபூதிக்குந் தாரகமா யொளிரு முயர்ஞான வநுபோக வுயர்வையருள் வாக்கால், ஆகாய மனைத்தினையு மடக்கிநிற்கு மாபோ லருளியவாக் கியமறிவா னந்தசமுத் திரமே. 70

பொன்னவிருஞ் சுடர்மகுடப் புரவலன்மா தவத்தோன் போதகனுய்ச் சுவர்க்கபுரப் புவியினெழும் புநிதன், அன்னவன்வாக் கதனுலே யருண்மழையாய்ப் பொழிந்த வறிவானந் தக்கடலை யதிகார மூன்றுய்ச், சொன்னசக சானந்த வுல்லாச வாழ்வுஞ் சூழ்ந்தமல பரிபாக வாழ்வினெடுந் தொகுத்த, உன்னரிய வுபதேசக் கிரமமூ வகைக்கு முயர்கவிதை பதினெருநூ றடனைம்பத் தேழே. 71

வள்ளலெனத் தமிழ்மாரி வழங்குமருள் வாயான் மாகாள மிலந்துறையில் வருபரம குரவன், தெள்ளுதமிழ்க் கிளிவிடுதூ தாதியாய்ப் பலநூல் செய்துபல நாமநிலை செய்துதொகை செய்தே, விள்ளரிய மெய்க்குருவைச் சீடனு னவனும் வினுவிமகிழ் தலுங்கூறி யறிந்தமுங்கல் விளம்பி, அள்ளிமகிழ்ந் துணவறிவா னந்தசமுத் திரமு மரியதிரி பதார்த்ததீ பமுமருளி னனே. 72

ஆகமத்தி னெழுந்தசிவா னந்தமயப் பொருளை யழகியசிற் றம் பலவ ளுகியவற் புதத்தைச், சோகம்பா விக்கினெழுஞ் சூனியமாஞ் சுயம்பைச் சுத்தவெளி வெறுவெளியாய்ச் சூழ்ந்தபர வெளியைப், போகமதி லழுந்தாத பூரணவா ரிதியைப் புரிதர்திரு மாகாளப் பூவி னெழும் பொலிவை, ஏகநா யககுருவா யெழுந்தருளு மிறையை யேழுலகும் புகழுமகிழ்ந் திறைஞ்சி நிற்போ மியாமே. 73

நலந்தழையு மிலந்துறையா னழகியவம் பலவன் ஞானமுப தேசிக்க ஞானநிட்டா பரராய்த், திலமளவுங் களங்கமிலாச் சிவ ஞான குருவாய்த் திகழேக நாயகசின் மயர்கனிட்ட ராகி, நிலம்புகழ மகிழ்ந்தெழுந்த நிறைஞான பரராய் நேசிக்குஞ் சரியைகிரி யா யோக ஞானப், பலந்தழையச் சுவர்க்கபுரத் தெழுந்தருளி யிருந்த பரையோகி வயித்தியலிங்கப் பரகுருவைப் பணிவாம். 74

எறிதிரைநீர்க் கடல்சூழ்ந்த வேழுலகும் வாழ்க ஏகபரி பூரணமா யிருக்குமறை வாழ்க, குறிகுணமற் றொளிர்ஞானக் குழாமனைத்தும் வாழ்க குருலிங்க சங்கமமாங் கூட்டமெலாம் வாழ்க, அறிவானந் தக்கடலு மருளுமிக வாழ்க வதினூற்றுப் பதி னைந்தா மருட்டுறையும் வாழ்க, நெறிபடருஞ் சிவநேசர் நீடூழி வாழ்க நேரியனுஞ் சுவர்க்கபுர நிமலனும்வாழ்ந் திடவே. 75

ஆதிநடு வந்தமுறு வகண்டிதமும் வாழ்க வாரணமு மாகமமு மருணிறைவும் வாழ்க, மாதிறைெடுங் கலந்தகலா வானவனும் வாழ்க மாலயனிந் திரனிமையோர் மகாமுனிவர் வாழ்க, போத கராஞ் சந்தானப் புரவலரும் வாழ்க புண்ணியராஞ் சமயகுருப் புனிதரெலாம் வாழ்க, தீதகன்ற சித்தர்முதற் றிருமௌனி வாழ்க திருமறைக்காட் டெந்தைமுதற் செந்தமிழ்வாழ்ந் திடவே. 76

தேனிதழித் தார்புனைந்தோன் சிவாலயங்கள் வாழ்க திருநீறுங் கண்டிகையுந் திருவருளும் வாழ்க, ஆனினமு மந்தணரு மஞ்செழுத் தும் வாழ்க வாகமசித் தாந்தசைவத் தருந்தவரும் வாழ்க, நானிலமு மன்னவரும் நற்குடியும் வாழ்க நாமகளு நற்கமலை ஞாலமதில் வாழ்க, வானின்முகின் மும்மாரி வழங்கிவையம் வாழ்க மனுநீதி தருமநெறி மாதவம்வாழ்ந் திடவே. 77

அந்திநிறத் தாரமுது மம்பிகையும் வாழ்க வைங்கரனு மறு முகனு மருந்தவரும் வாழ்க, நந்திமுதற் கணத்தோரும் நால் வருமே வாழ்க ஞானகுரு முதற்கல்லா னன்னீழல் வாழ்க, பந்த மற்றோர் பசுத்தொகையும் பதித்துவமாய் வாழ்க பாசமற்று நேச முற்ற பத்தரெல்லாம் வாழ்க, செந்தமிழா லருநூலைச் செய்தோரும் வாழ்க தென்மறைசைப் பிள்ளைமுதற் றெளிதமிழ்வாழ்ந் திடவே. 78

நவவிதமா யைந்தொழிலு நடத்துவிப்பாய் போற்றி ஞானபரி பூரணமாய் நண்ணிநிற்பாய் போற்றி, சிவமயமாந் தேசிகராய்ச் செறிந்தொளிர்வாய் போற்றி சிவலிங்க மாயெழுந்த செழுஞ் சுயம்பே போற்றி, தவமயமாந் திருவேடத் தனுவெடுப்பாய் போற்றி சராசரமா முயிரையெல்லாந் தாங்கிநிற்பாய் போற்றி, பவமகன்ற பசுக்கருளைப் பதிவிப்பாய் போற்றி பாதகரைப் பரிந்தாளும் பர சிவமே போற்றி. 79

மதமனைத்துங் கரந்ததுவாய் வாழ்பவனே போற்றி மதாதீத மாகியெங்கும் வதிந்தவனே போற்றி, முதல்வனுமாய் மூவகைக்கு முன்னவனே போற்றி மூவிதமா முயிர்க்கறிவாய் முளைத்தவனே போற்றி, பதவிமுத னிசமுத்திப் பாருடையாய் போற்றி பாரித்த முச் சகமே பணியநிற்பாய் போற்றி, சிதம்பரமா ரூர்காசி க்ஷேத்திரனே போற்றி தேசுறுமா ருயிர்க்குயிராஞ் சிற்சிவமே போற்றி. 80




## மனித சரீரத்தின் இரசாயனம்

டாக்டர் காங்தேகர்—பி. என். அப்புஸ்வாமி ஐயர்

(722-ம் பக்கத் தொடர்ச்சி)

### வைடமின்கள்

நமது நகரத்திலே இப்பொழுது வைடமின்களைப் பற்றியும், இவற்றைப் போலவே மனத்தைக் கவரத்தக்க மற்றொரு விஷயமாகிய கர்ப்பாட்சியைப் பற்றியும் பிரசங்கமாரிகளும் புத்தக மழைகளும் மூலைக்கு மூலை எங்கே பார்த்தாலும் நிகழ்ந்து வருகின்றன. முன்னே தந்துள்ள அட்டவணையில் கடைசியாக வைடமின்களை வைத்திருப்பதிலிருந்து அவை அவ்வளவு முக்கியமானவை அல்ல என்றாவது, அதிலே கூறப்பட்ட ஆறுவகைப் பொருள்களுள் அவை கீழ்ப்பட்டவை என்றாவது எண்ணக்கூடாது. உடலில் வைடமின்கள் சேராவிட்டாலும், அது போலவே நமது அட்டவணையிலுள்ள ஆறு பொருள்களில் எதுவாகிலும் ஒன்று உடலில் சேராவிட்டாலும், உடனே உடலில் உண்டாகும் கோளாறுகளிலிருந்து அவை யாவும் ஒரே சமமான மதிப்பைப் பெறுதற்குரியன என்பது விளங்கும். ஆகாரத்தைத் தயார் செய்யும் ஒவ்வொரு படியிலும் வைடமின்களை இழப்பது எளிதாக இருந்து வருவதாலும், அவை அளவிலும் குறைந்து தான் காணப்படுவதாலும், எல்லாவற்றிலும் முக்கியமானவை என்று அவற்றை நாம் பாராட்டுகிறோம். அட்டவணையிற் கூறிய ஆறும் இருந்தாலன்றி நாம் உண்ணும் உணவானது உடலுக்குப்போதிய உணவாக இருக்க மாட்டது. புரோடீன்களைப் பற்றி எவ்வளவு சொற்பம் நமக்குத் தெரியுமோ அவ்வளவு சொற்பம் தான் வைடமின்களைப் பற்றியும் தெரியும். அவற்றைப் பற்றி நமக்குத் தெரிந்தன வெல்லாம் அவை நமது உடலின் போஷணைக்கு இன்றியமையாதவை என்பது தான். ஒரு காலத்திலே ஜப்பானியர் சிலர் ஒருவகை வியாதியினின்று வருந்தியபோது அவ்விஷயத்தை ஆராயப் புகுந்த நிபுணர் அது வைடமின் குறைவால் ஏற்படும் நோயென்றும், நன்கு தீட்டிய அரிசிச் சோற்றை அவர்கள் உண்பதே அதற்குக் காரணம் என்றும் எடுத்துக்

காட்டினர். அரிசியைத் தீட்டும் போது சாதாரணமாக அகற்றப் படும் பொருள்களையெல்லாம் அகற்றாது உணவோடு உணவாக அவர் களுக்குக் கொடுத்து வந்தபோது அவர்கள் அந்நோய் நீங்கி ஆரோக் கியமடைந்தனர். குத்தித் தீட்டிப் பளபளப்பாக்கிய அரிசியில் வைடமின்கள் இருப்பதில்லை. வைடமின்கள் துணைக்கருவிகளே யானாலும், அவை உடலின் வளர்ச்சிக்கு இன்றியமையாத சாதகங் கள். நாம் உண்ணும் உணவில் அவை இருப்பது அவசியம். வைட மின்களின் இரசாயன அமைப்பானது எத் தன்மையது என்பது நமக்குத் தெரியாது. ஆகையால், அவற்றைக் குறிக்கும் வாய்பாடு சங்கேதக் குறிப்பு முதலிய எதுவும் இதுவரை சரியாக அமைக்க முடியவில்லை. ஆனால் அவற்றினுடைய குணாதிசயங்கள் யாவும் நன்கு அறியப்பட்டிருக்கின்றன. வைடமின்களில் சிற்சில நீரில் கரைவன. வேறு சில கொழுப்பிலும் எண்ணெயிலும் கரைவன. சிற்சில இலேசுச் சூட்டைக்கூடத் தாங்கமாட்டா. வேறு சில அதிகமான சூட்டையும் எளிதில் தாங்குவன. வெகு நேரம் கொதித்து வேக வைத்தால் சிற்சில உணவுப்பொருள்களின் குணம் கெட்டுப் போகிற தென்பது வாஸ்தவமேயாயினும், வேறுசில வைடமின்கள் சமைக்கப் படுவதால் அவ்வாறு கெட்டுப்போவதில்லை. வைடமின்களைப் பற்றி நாம் அறிந்து கொண்டிருக்கிற விஷயங்களெல்லாம் இவ்வளவு தான். எலிகளைக்கொண்டும், கினிப்பன்றிகளைக் கொண்டும் வைடமினை யொட்டிய ஆராய்ச்சிகள் பல நடத்தப்பட்டு வருகின்றன. இந்த ஜந் துக்களில் அளவு, வயது, முதிர்ச்சி முதலியவற்றில் ஒன்றுபோல வுள்ள, பொறுக்கியெடுத்த, சிற்சில பிராணிகளைத் தான் சோதனைக் கருவிகளாக உபயோகிக்கின்றனர். அவற்றுக்கு நல் உணவை ஊட்டி வளர்த்துப் பரீக்ஷித்துப் பார்க்கிறார்கள். பிறகு உணவிலுள்ள சிற்சில பொருள்களை எடுத்துவிட்டு அந்தக் குறையுள்ள ஆகாரத்தை ஊட்டிப் பரீக்ஷை செய்து பார்க்கிறார்கள். உதாரணமாக, எலி களுக்கு ரொட்டியும் பாலும் கொடுத்துப் பார்க்கிறார்கள்; பிறகு ரொட்டியை மட்டிலும் கொடுத்துப் பார்க்கிறார்கள். பாலிலே புரோடீன் அளவு அதிகமாயிருப்பதால், அஃது இல்லாத உணவை உண்ணும் எலியானது நேரே வளருவதில்லை; சீக்கிரமாகச் செத்து விடுகிறது. பாலையும் கொடுத்து முன் கொடுக்காதிருந்த வேறு பொருள்களையும் கொடுத்து வந்தபோது எலியின் வளர்ச்சி ஒழுங் காக நடந்து வருகிறது; எலியும் புஷ்டியாக வளர ஆரம்பிக்கிறது.

இதிலிருந்தெல்லாம் நாம் அறிந்து கொள்ளுவது என்னவென் றால், இந்த ஆறு அமிசங்களும் சரியான அளவிலே எந்த ஆகாரத் திலே இருக்கின்றனவோ அது தான் சரியான ஆகாரம் என்பதே.

நாம் அறிந்து கொண்ட இந்த ஏற்பாட்டை மிகவும் சிக்கன மான முறையில் எப்படிக் கையாளுவது என்பதைத் தான் இனி மேல் நாம் யோசிக்கவேண்டியது. நாம் உட்கொள்ளும் உணவில் மேற்கூறிய ஆறு அமிசங்கள் இருந்தால் மட்டிலும் போதாது. அவை சரியாய்ப் பக்குவப்படுத்தப்பட்டிருக்கின்றனவா? அவை சரி யான முறையில் உட்கொள்ளப்படுகின்றனவா? என்பதையும் கவ னிக்கவேண்டும். அப்படியிருந்தால் தான் அந்த உணவுகளை உட் கொள்ளுவதின் முழுப்பயனையும் நாம் அடைவோம்.

உடலில் நடக்கும் ஒவ்வொரு மாறுபாடும் அநேகமாக இர சாயன மாறுபாடாகவே தான் இருக்கும். சிற்சில இரசாயன மாறு பாடுகள் மெதுவாகக் காலம் தாழ்த்துத்தான் நடைபெற்று வரும். சிற்சில அந்நிய வஸ்துக்களைக் கண்டதும் அம்மாறுபாடுகள் விரை வாகவும் சுறுசுறுப்பாகவும் நடந்தேறுவதுண்டு. அவ் வஸ்துக்கள் இம்மாறு பாட்டில் கலப்பதில்லை யெனினும் அவற்றின் மேல் பார்வையால் தான் மாறுபாடு முன்னைக்காட்டிலும் விரைவாக நடக் கின்றது. அத்தகைய அந்நிய வஸ்துவுக்கு காடலிடிக் ஏஜெண்டு அல்லது காடலிடிக் வஸ்து என்று பெயரிட்டிருக்கிறார்கள். உதா ரணமாக, நாம் கடற்கரையிலே யுள்ள மரீனுவிலே நடந்து தெற்கு முகமாக மயிலாப்பூருக்குப் போய்க் கொண்டிருக்கிறோமென்று வைத்துக் கொள்ளுவோம். அப்பொழுது பீச் ரோட்டிலே மோட் டார் காரிலே ஏறிப்போகும் நம் நண்பர் ஒருவர் தம் காரில் நம்மை ஏற்றிக்கொண்டு சென்தோமில் இறக்கிவிட்டால் அவரை ஒரு காடலிடிக் ஏஜெண்டு என்று சொல்லலாம். ஆனால் அவர் வக்கிர சுபாவத்தால் நம்மைக் காரில் ஏற்றிக்கொண்டு வடக்கு முகமாக அழைத்துக் கொண்டுபோய் நாம் புறப்பட்ட இடமான இரும்புப் பாலத்தினருகே திரும்பக்கொண்டு போய் விட்டு விட்டால் அவர் செய்கை பின்னிழுக்கும் செயலாகும். அப்பேர்ப்பட்ட இரசாயனச் சேர்க்கைகளும் உண்டு. அப்பொழுது நாம் கஷ்டப்பட்டுப் பிரித்து வைத்திருக்கும் இரண்டு பொருள்கள் மீண்டும் ஒன்றாகச் சேர்ந்து தமது பழைய சேர்க்கை வடிவத்தையே பெற்று விடுகின்றன.

நமது உடலிலே நிகழ்கின்ற இரசாயன மாறுபாடுகளில் அநே கம் 'என்சைம்' என்று சொல்லப்படுகிற காடலிடிக் ஏஜெண்டுகளை மிகவும் உற்ற துணையாகக் கொண்டு நிகழ்கின்றன. அம்மாறுபாடு கள் முன்னும் பின்னுமாக மாறிமாறி நிகழ்வனவல்ல. ஒரே வகை யாக ஒரேபோக்காகத்தான் நிகழ்வன. ஓர் அளவு மட்டுமே அம் மாறுபாடு நிகழும். அவ்வளவோடு நின்றுவிடும். ஒவ்வொரு வகை என்சைமும் மாறுபாட்டை ஓரளவு, ஒரு படியாக, ஒரு போக்காக

நிகழ்த்திவிட்டுத் தன் காரியம் ஆய்விட்டதென்று நின்றுவிடும். அதற்குப் பின் வேறொரு வகை என்சைம் வேலையை மேற்கொண்டு மற்றொரு படிவரை மாறுபாட்டை நடத்திவைக்கும். அதற்குப் பின் மற்றொரு வகை என்சைம் தலையிட்டுக்கொள்ளும். அ என்ற ஒரு பொருளானது இ$^1$, இ$^2$, இ$^3$ என்ற மூன்று பொருள்களாகப் பிரியுமென்று வைத்துக் கொள்ளுவோம். அவ்வாறே ஒவ்வொரு 'இ' யும் 'உ' என்று குறிப்பிடத்தகும் மூன்று பொருள்களாகப் பிரியுமென்றும், 'உ'வில் ஒவ்வொன்றும் மூன்று 'ஏ'க்களாகப் பிரியுமென்றும் வைத்துக்கொண்டால் கடைசியாகக் கிடைக்கும் 27 'ஏ'க்களில்




ஒவ்வொரு 'ஏ' பொருளின் அளவும் முதல் பொருளாகிய 'அ'வின் அளவோடு ஒப்பிடும்போது மிகவும் குறைவாகவே இருக்கும். என்சைம் ஒவ்வொன்றும் இவ்வாறு அதனதன் தனிவழிப்படி முதற் பொருளில் பிரிவினை உண்டாகும்படி தூண்டி வருகிறது. இயற்கையிலே உள்ள பொருள்களில் பல இவ்வாறு பிரிக்கப்படுகின்றன. அவற்றுள் கார்போஹைட்ரேட்டுக்கள் அநேக மாறுதல்களைப் பெறுகின்றன. வைடமின்களையும் புரோடீன்களையும் பற்றி எவ்வளவு கொஞ்சம் தான் நமக்குத் தெரியுமோ அவ்வளவு தான் என்சைம்களைப் பற்றியும் தெரியும். அவை ஜீவ சம்பந்த முள்ளவை என்றும் அவற்றுள்ளே ஜீவவஸ்து இருக்கிறதென்றும் சிலர் சொல்லுகின்

றனர். வேறு சிலர் அவை கேவலம் இரசாயனப் பொருள்கள் தாம்; அவற்றை வாய்பாடு மூலமாய்க் குறிப்பது எளிது என்று கூறுகிறார்கள். ஒவ்வோர் என்சைமும் குறிப்பிட்ட ஒரே வகையான தொழிலை யுடையது. ஒரே ஒருவகைப் பொருளின் மீது தான் அது வேலை செய்து வரும். புரோடீன்களுக்குத் துணை நின்று அவற்றை ஜீரணிக்கச் செய்யும் என்சைமானது கார்போஹைட்ரேட்டை ஒன்றும் செய்யாது. கார்போஹைட்ரேட்டைப் பிரித்துதவும் என்சைமானது கொழுப்பின் அண்டையில் செல்லாது. ஜீவப் பிராணிகளின் உடல்களிலே தான் என்சைங்கள் காணப்படுகின்றன. எந்த எந்த என்சைங்கள் எவ்வெப்பொருள்களைப் பாதிக்கின்றனவோ அவ்வப்பொருள்களின் சுபாவங்களை ஒத்தனவாகவே அந்த அந்த என்சைங்கள் காணப்படுகின்றன.

ஜீரண முறையை ஆராய்ந்தால், என்சைம் தான் ஜீரணத்துக்குத் துணை யென்பது தெளிவாய்க் காணப்படுகிறது. உடலில் நடந்தேறும் ஒவ்வொரு மாறுதலும் என்சைங்களின் உதவியால் தான் நடந்தேறுகிறது. அவற்றின் உதவி இல்லாவிடில் ஒன்றும் முற்றுப் பெறாது. நாம் சாப்பிடும்பொழுது உணவை உட்கொள்ளு முன்பாகவே ஜீரணத்தொழில் தொடங்கி விடுகிறது. உணவைச் சமைக்கும்போது ஸ்டார்ச்சு மாலிகூல் உடைந்து போகிறது. பழம் பழுப்பதும் கூட ஒரு வகையான ஜீரணம் தான். பழம் பழுக்கும் போது அதிலுள்ள ஸ்டார்ச்சும் கார்போஹைட்ரேட்டும் தித்திக்கும் கார்போஹைட்ரேட்டாக மாறுகின்றன. ஆதலால் உணவு நமது வாய்க்குள் போகுமுன்பே சற்று ஜீரணிக்கப்படுகிறது. வாயில் ஊறும் உமிழ் நீரும் ஜீரணத்துக்கு மிகவும் அவசியமானது. நாம் உண்ணும் உணவானது நமது பற்களால் நன்கு மெல்லப்படுகிறது. அப்பொழுது நமது வாயில் ஊறும் உமிழ் நீரானது அவ்வுணவோடு கலந்து அதைச் சிறு உருண்டைகளாக்குகிறது. அவ்வுருண்டைகளை நாம் அப்படியே விழுங்கி விடுகிறோம். வாயில் எவ்வளவு தூரம் உணவு ஜீரணமாகிறது என்பது உணவு எவ்வளவு நேரம் வாயில் இருக்கிறது என்பதைப் பொறுத்தது. உணவுப் பொருளை ஜீவப்பிராணிக்குப் பயன்படும்படி செய்பவல்ல என்சைங்கள் வாயில் இருக்கின்றன. எனினும் வாயில் உணவுப் பொருள் வெகு நேரம் இருக்காத காரணத்தால் ஸ்டார்ச்சு முழுவதிலும் வாயில் ஜீரணமடைந்து விடுவதில்லை. பிறகு உணவானது, பேரிக்காய் வடிவமான, பை போன்ற, வயிற்றினுள் போய்ச் சேருகின்றது. உணவைப் பெற்றுக் கொண்டு அது சிறிது சிறிதாக, மெதுவாக, உணவை நன்கு கலக்கிறது. கலந்து கலந்து, வயிற்றில் ஊறுகின்ற

காஸ்டிரிக் ஜூஸ் என்னும் நீரானது அதன் மேல் படும்படி செய்கிறது. வயிற்றிலே ஊறுகிற நீரில் காணப்படும் என்சைங்கள் புரோடீனையும் கொழுப்பையும் தாக்குவன. கார்போஹைட்ரேட்டைத் தாக்கக்கூடிய என்சைம் ஒன்றும் வயிற்றுள் ஊறும் நீரில் காணப்படுவதில்லை. ஏனென்றால் அந்த என்சைம் உமிழ் நீரில் இருக்கிற தல்லவா? வயிற்றில் ஊறும் நீரிலுள்ள காஸ்டிரிக் ஜூஸைத் தவிர ஹைட்ரோ-க்ளோரிக்-ஆசிட் என்னும் திராவகமும் வயிற்றில் இருக்கிறது. ஏராளமாயும் அதிகப் பல மற்றதாயும் இது காணப்படுகிறது. இது பெப்ஸின் என்ற என்சைம் சுறுசுறுப்பாக வேலை செய்வதற்கு அவசியமாக இருக்கிறது. இதற்கு வேறொரு வேலையும் உண்டு. நாம் உண்ணும் உணவோடு நுண்ணிய பாக்டீரியா அநேகம் உட்புகுந்து விடுகின்றன. அவற்றை இந்தத் திராவகம் கொன்று விடுகிறது; அல்லது அவற்றுக்கு இயற்கையான தீத்தொழிலைப் புரியமுடியாத அளவிலே வன்மை குறைந்து போகச் செய்கின்றது. வயிற்றிலே புரோடீன்கள் அநேகமாக ஜீரணமாகி விடுகின்றன. கொழுப்புக்களும் ஓரளவு ஜீரணமாகின்றன. ஆனால் கொழுப்புக்கள் முழுவதும் ஜீரணமாவதில்லை. கொழுப்புக்கள்—அதிலும் முக்கியமாக வெண்ணெய்க் கொழுப்பு—அப்போதைக்கப்போது சிறு குடலுக்குள் தள்ளப்படுகிறது. அரை குறையாக ஜீரணமான உணவானது அங்கே வேறொரு ரசத்தோடு கலக்கிறது. பான்கிரியாவிலிருந்து மற்றொரு ரசம் அதை அடைகிறது. கல்லீரலிருந்து இன்னுமொரு ரசம் அதனோடு கலக்கிறது. இம்மூன்று ரசங்களும் உணவுப் பொருளோடு நன்கு கலந்து அதைத் தாக்கி ஜீரணத்தை முற்றுவிக்கின்றன. இவ்வாறு நடந்தேறும் ஜீரணத் தொழில் முறையிலே புரோடீன்கள் அமீனோ அமிலங்களாகவும், கார்போஹைட்ரேட்டுக்கள் சாமானியச் சருக்கரைகளாகவும், கொழுப்புக்கள் கிளிசெரால் ஸோப்புக்களாகவும் மாறி அமைகின்றன. உடலிலே கொழுப்பானது பிரியும்பொழுது கிளிசெரால் எஸ்டரும், கொழுப்பு அமிலங்களும் கிடைக்கின்றன. என்சைங்களும் வைடமின்களும் செய்யும் வேலை யெல்லாம் இவ்வாறு உணவுப் பொருள்களைப் பிரிப்பதற்கும் அவற்றை உடலானது ஏற்றுக் கொள்ளும்படி பக்குவப்படுத்துவதற்கும் உதவி புரிவதே. அமீனோ அமிலங்களும், சாமானியச் சருக்கரைகளும், கொழுப்புக்களும் இரத்தக் குழாய்களின் வழியாகச் செல்களுக்குள் பிரவேசிக்கின்றன. அங்கே உடலுக்கு வேண்டிய புரோடீன்களாகவும், கார்போஹைட்ரேட்டுக்களாகவும், கொழுப்புக்களாகவும் மீண்டும் கூட்டப்படுகின்றன. இத்தொழில்களெல்லாம் சிறு குடலில் நடந்

தேறுகின்றன. இதுவரை ஜீரணிக்கப்படாத, ஜீரணிக்க இயலாத, மிகுதிப் பொருளானது பெருங்குடலில் தள்ளப்படுகிறது. அங்கே பலவகையான பாக்டீரியாக்கள் தமது திறத்தை யெல்லாம் அதன் மீது காட்டிய பின், இறுதியாக உடலை விட்டு வெளியே மலமாகத் தள்ளப்படுகிறது.

நாம் உண்ணும் உணவுவகை முழுதும் நமது உடலினுள்ளே இத்தகைய மாறுபாடுகளை எல்லாம் அடைகின்றன. ஆதலால் நாம் நமது உணவைத் தேர்ந்து உட்கொள்ளுவது நன்று. ஆகார விஷயத்தில் நமது புத்தியைச் செலுத்தி நல்ல ஆகாரங்கள் எவை என்று பொறுக்கியெடுக்க வேண்டும். அவ்வாகாரத்திலுள்ள நல்லுணவுப் பொருள்கள் அழிந்து போகா வண்ணம் அதைச் சரியான முறையில் பக்குவப்படுத்த வேண்டும். உணவுப் பொருள்கள் எல்லாவற்றிலும் தலை சிறந்து விளங்குவது பால் தான். அதைப்போல அவ்வளவு முக்கியமானதாயும், எல்லா அமிசங்களையும் உடையதாயும், நேர்த்தியானதாயும், எளிதில் ஜீரணிக்கத் தக்கதாயும் உள்ள மேன்மையான உணவு வேறொன்றும் இல்லை. எல்லா அமிசங்களையும் கொண்டு ஆராய்ந்து பார்த்தால் அதற்கு ஈடான ஆகாரம் வேறொன்றுமில்லை யென்றே சொல்லவேண்டும். அது தான் அனைத்தினும் சிறந்தது. சிறு குழந்தையின் வளர்ச்சிக்கு வேண்டிய எல்லா அமிசங்களும் போதிய அளவில் அதிலிருக்கின்றன. நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமாகவும் வளருகின்ற குழந்தையின் வளர்ச்சிக்கு வேண்டிய பொருள்கள் யாவும் அதில் நிறைந்து காணப்படுகின்றன. சாதாரணமாய் வளரும் பச்சைக் குழந்தைகள் ஆறு மாதத்தில் இருமடங்கு கனமுள்ளவைகளாக ஆகிவிடும். சுறு சுறுப்பாய் வளரும் இப்பிராயத்திலே அக்குழந்தைகளின் போஷணைக்குப் பாலொன்றே போதுமானது. முதிர்ச்சியடைந்தோருக்கும் கூட இது மிகவும் நல்ல ஆகாரமாகவே இருக்கிறதெனினும், அவர்கள் போஷணைக்கு இது மட்டிலும் போதாது.

நமது சென்னை நகரிலே பாலைப் பற்றிய கவலையானது தீராத கவலை யாகவே இருந்து வருகிறது. நல்ல பால் நமக்குக் கிடைப்பதில்லை. பாற்காரர்கள் பசு மாடுகளைச் சரிவரப் போஷித்து வளர்ப்பதில்லை. ஒன்று போல எல்லாக் கன்றுக்குட்டிகளையும் பட்டினி தான் போடுகிறார்கள். ஆகையால் வருங்காலத்திலும் நமக்கு நல்ல பால் கிடைப்பதற்குச் சிறிது கூட வழியைக்காணோம். இதைப்பற்றி ஏதாவது செய்வது அவசியம் தான் என்றாலும் நாம் எடுத்துக் கொண்ட விஷயம் இது அன்றாகலின் இதைப்பற்றி இங்கே விரிவாகக் கூறவில்லை. தன் குழந்தைக்குத் தானேபாலூட்டி வளர்க்

கும் தாய்க்கு நல்ல பசுவின் பால் கொடுத்து வந்தாலன்றி அவளால் குழந்தைக்குப் பால் சரியாகக் கொடுத்து வர முடியாது. நமக்கு நல்ல பால் கிடைக்குமாயின் நம்முடைய குழந்தைகளை நாம் பாதுகாப்பது எளிதாகும்; நம்முடைய நகரிலும் சிசுமரணம் குறையும்.

நவீன சாஸ்திர முறையின்படி ஆராய்வதிலும், அவ்வாராய்ச்சியினின்று அவசியமெனத் தெரியவரும் விஷயங்களை எல்லாம் ஏற்படுத்திக் கொள்ளுவதிலும் சிலருக்கு நம்பிக்கை கிடையாது. அவர்கள் பண்டைக்கால முறைகள் தாம் சரியென்று கண்ணை மூடிக் கொண்டு கூறுவார்கள். அவர்களை மறுத்து வழக்குப் பேச எனக்கு எண்ணமில்லை. ஆனால் நான் சொல்லப்போவதை யாரும் மறுக்க மாட்டார்கள். நாகரிகம் முதிர முதிர நமது ஆகாரமானது மேன் மேலும் செயற்கைப்பொருளாக ஏற்பட்டுக்கொண்டே வருகிறது. முன்போல நாம் காட்டில் வசிப்பதற்கில்லை. அங்குள்ள மரஞ்செடி கொடிகளின் ரசங்களையும் பழங்களின் ரசங்களையும், நம் முன்னோர்கள் செய்து வந்ததுபோல், அப்படியப்படியே உறிஞ்சிக் குடிப்பதற்கில்லை. நாம் நகரங்களில் வசிக்க வேண்டியவர்களாகி விட்டோம். நமது ஆகாராதிகளைக் காய்கறிக்கடைகளிலும் பல சரக்கு மளிகைகளிலும் வாங்கவேண்டியிருக்கிறது. அங்கே ஒவ்வோர் உணவுப்பொருளும் கலப்புள்ள பொருளாகவே தான் கிடைக்கிறது. ஆகையால் நாம் மிகவும் கவனித்து உணவுப் பொருள்களைப் பொறுக்கி வாங்க வேண்டியிருக்கிறது. மிகவும் நல்ல உணவு எது என்று ஆராய வேண்டியிருக்கிறது. அவற்றைப் பக்குவப்படுத்துவதிலும் நமது புத்தியை உபயோகிக்க வேண்டியிருக்கிறது. ஆதலால் நாம் சீராக நேராக வாழ்வது அவசியமாயின், உணவைப் பற்றிய ஆராய்ச்சியில் நமது அறிவைச் செலுத்துவதும் அவசியமே.

---

## சாஸ்திர சம்பந்தமான தமிழ்ச் சொற்கள்.

*Atom*—ஆடெம், அணு, இரசாயனப் பொருளில் ஒரு மாத்திரை அளவுள்ளது.

*Bacteria*—பாக்டீரியா, நுண்ணிய தாவரவகை.

*Blood vessels*—இரத்தக் குழாய்கள்.

*Catalytic agent*—காடலிடிக் ஏஜெண்டு, காடலிடிக் வஸ்து (பொருள்), இரசாயன மாறுபாட்டில் தான் கலக்காது பிறபொருள்களைத் தூண்டித் துணை நிற்பது.

*Digestion*—ஜீரணம், ஜீரணத்தொழில்.

*Enzyme*—என்சைம், உடலிற் காணப்படும் விசித்திரமான காடலிடிக் ஏஜெண்டுவகை.

*Gastric juice*—காஸ்டிரிக் ஜூஸ், வயிற்றுள் ஊறும் நீர் (ரஸம்.)

*Guinea pig*—கினி பன்றி, சீமைப் பெருச்சாளி.

*Hydrochloric Acid*—ஹைட்ரோ குளோரிக் ஆசிட் (அமிலம்); ஹைட்ரஜெனும் குளோரினும் சேர்ந்து ஆகிய திராவகம்.

*Juice*—ரஸம், சாறு, நீர்.

*Large intestine*—பெருங்குடல், குடலின் பின் பகுதி.

*Liver*—கல்லீரல்; வயிற்றுப் புறத்துள்ள ஓர் உறுப்பு. இதனின்று ஒரு நீர் சுரக்கின்றது. அதைப் பித்த நீர் என்று சொல்வதுண்டு. அது மஞ்சள் நிறமானது. ஜீரணத்திற்கு அவசியமானது.

*Pancreas*—பான்கிரியாஸ். உடலில் வயிற்றுப் பக்கத்தில் உள்ள ஓர் உறுப்பு. இது பான்கிரியாடிக் ஜூஸ் என்னும் ஒருவகை நீரை ஊற்றுவிக்கின்றது; இந்நீர் ஜீரணத்தொழிலுக்கு அவசியமானது.

*Pear*—பேரிக்காய்.

*Reversive*—பின்னிழுக்கின்ற.

*Saliva*—உமிழ்நீர், வாய்க்குள் ஊறும் நீர்.

*Small intestine*—சிறுகுடல், குடலில் வயிற்றுக்கு அடுத்தாற்போலுள்ள பாகம், குடலின் முதற்பகுதி.

*Vitamin*—வைடமின், ஒருவகை உணவுப் பொருள்.

---

*Practice*—பயிலல், பயில்வு.

*Practical*—பயிலியல்.

*Power*—தாவு, வலி, தாக்கம், ஞாட்பு, வலம், திராணி.

*Proposition*—முற்கோள்.

*Problem*—ஆக்கம்.

*Prism*—பட்டையுருளை.

*Relativity*—ஒப்புறவு.

*Ray*—கதிர்.

*Result*—ஈவு.

*Respectively*—நிரல் நிரலாக, முறையாக, வரிசையாக.

*Rays-pencil of*—கதிர்க்கற்றை.

*Rate*—வீதம்.

*Ratio*—தகவு.

*Reciprocity*—மறிமாறல்.

# குழந்தைகள் ஏன் பயப்படுகின்றன?*

எஸ். ஆர். வேங்கடராமன்

**நா**ம் குழந்தைகளை நேசிக்கலாம். அன்புடன் நடத்தலாம். ஆனால் நமது எண்ணங்களை அவர்களுக்குப் புகட்ட முடியாது. ஏனென்றால் குழந்தைகளின் மனப்பான்மை வேறு. நாம் குழந்தைகளைப்போல் நடக்கவியலும். ஆனல் குழந்தைகளை வயது வந்தவர்களைப் போல் நடக்கச்செய்வது கஷ்டம். குழந்தைகளின் நடையுடை பாவனைகளை நன்றாகக் கவனித்து அவர்களின் மனப்பான்மையை அறிவதில் ஆடவர் பெண்டிர் இவர்களின் சாமர்த்தியம் அதிகம். இம்மாதிரி இருக்கும்படியான ஒரு குடும்பத்தின் சுகமும் சந்தோஷமும் குழந்தைகளின் சந்தோஷத்தையும் சுகத்தையும் பொறுத்தனவாயிருக்கும்.

பிறக்கும்போது ஒவ்வொரு குழந்தையின் நரம்புகளும் பல்வேறு விதமாக அமைக்கப்பட்டிருக்கின்றன. ஒன்பது வயதுப் பையன் ஒருவன் பத்தாயிரக் கணக்கான ஜனங்களைப் பிடில் வாசித்துப் பரவசமாக்குவது அவன் படிப்பினலல்ல. அவனுக்குச் சங்கீத ஞானம் பிறக்கும்போதே நன்றாக அமைந்திருப்பதுதான் காரணம். பதினன்கு வயதில், அமெரிக்காவில் ஒரு சிறு பையன் சர்வ கலா சாலையில் படிக்கும் மாணவர்களுக்கு மிகவும் கடினமான கணித சாஸ்திரத்தைப்பற்றிப் பிரசங்கம் செய்தானும். அவன் ஒரு சர்வ கலாசாலையிலும் படித்ததில்லை. அவனுக்குக் கணித சாஸ்திர ஞானம் பிறக்கும்போது அதிகமாயிருந்ததுதான் காரணம். பிறக்கும்போது ஒவ்வொரு குழந்தையின் மனப்பான்மையையும் நாம் அறிந்தால் பிற்காலத்தில் நேரும் பலவிதக் கஷ்டங்களும் நேராமலிருக்கும்படியான ஏற்பாடு முன்னமேயே செய்து கொள்ளலாம்.

இரண்டு வயதில் குழந்தை அழுது உதைத்து விளையாடுவது சகஜம். ஆறுவது வயதில் அக்குழந்தை அப்படிச் செய்தால் அது

* இது Millgate Monthly என்ற ஆங்கிலப் பத்திரிகையின் 1932-ம் வருஷம் மே மாத இதழில் உள்ள 'What children fear' என்பதைத் தழுவி எழுதப்பட்டது.

பிடிவாத குணமுடையது. ஒன்பதாவது வயதில் அம்மாதிரி செய்தால் அது துஷ்டத்தனமுடையது. பதினோராவது வயதில் அம்மாதிரி செய்தால் அதற்கு நரம்புக் கோளாறுகள் ஏற்பட்டிருக்கின்றன வென்று தெரிந்து வைத்தியம் செய்ய வேண்டும்.

குழந்தைகளுக்கு இரண்டு விதமான பயமுண்டு. ஒன்று சத்தத்தினால் ஏற்படும் பயம்; இரண்டு, கீழே விழுவதனால் உண்டாகும் பயம். இந்த இரண்டைத் தவிர ஏற்படும் மற்ற விதமான பயங்களெல்லாம் பெரியவர்கள் குழந்தைக்குக் கற்றுக் கொடுப்பன என்று சொல்லலாம். குழந்தைகள் நடக்க ஆரம்பித்ததும் பள்ளிக் கூடத்திற்கு அனுப்புகிறோம். அங்கே குழந்தைக்குக் கடவுளிடத்துப் பயமிருக்கவேண்டுமென்று சொல்லுகிறோம். இது மூன்றாவது பயம். பிற்பாடு போலீஸ்காரனைக்காட்டிப் பயமுறுத்துகிறோம். இது நான்காவது. பின்னர், பள்ளிக் கூடத்தில் சரியாய்ப் படிக்காவிட்டால் திட்டுகிறோம்; இஃது ஐந்தாவது. இம்மாதிரியாக, குழந்தைக்குப் பதினைந்து வயதாவதற்குள் அதனைப் பலவிதமான பயங்களுக்கு இருப்பிடமாக்கி விடுகிறோம்.

குழந்தைகளை நாம் கொஞ்சம் அடக்கவேண்டியதுதான். இல்லாவிட்டால் பதினைந்து வயதாவதற்குள் ஒரு விதமான பயமுமில்லாமல் இறந்துவிட நேரிடும். பயமில்லாவிட்டால் மூன்றும் மாடி ஜன்னலிலிருந்து விழுந்து இறக்க நேரிடும்; அல்லது வண்டிகள் அதிகமாக ஓடும் ரஸ்தாக்களைத் தாண்டும்போது அந்தப் பக்கம் இந்தப் பக்கம் பார்க்காமல் வண்டியில் சிக்கி இறக்க நேரிடும். பயமென்பதே இல்லாமல் எல்லாருக்கும் தைரியம் மாத்திரமிருந்தால் பட்டணத்திலுள்ள ஒவ்வொரு பாங்கியும் ராத்திரியில் கொள்ளை யிடப்படும் என்பது திண்ணம்.

ஒவ்வொரு குழந்தைக்கும் மூன்று விதமான அழுகையுண்டு. அவை பயத்தினால் அழுகை, வலியினால் அழுகை, பசியினால் அழுகை என்பன. இந்த அழுகைகளில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதமாகவிருக்கும். குழந்தை அழுதால் எதற்காக அழுகிறதென்று சிறிது அனுபவமுள்ள ஒவ்வொரு தாயும் தெரிந்துகொள்ளலாம். உங்கள் குழந்தையை நீ மிகவும் புத்திசாலி யென்று சொல்லாதீர்கள். அதனால் அக்குழந்தைக்கு மற்றக் குழந்தைகளை மிகவும் ஏளனமாக நினைத்து நடத்தும் கெட்ட வழக்கம் ஏற்படுகிறது.

குழந்தைகளிடத்து அதிகமாக அன்பு பாராட்டக் கூடாது. அதனால் அவர்களுக்குச் சுயேச்சையும் தைரியமும் சமயோசித புத்தியும் இல்லாமற் போகின்றன. குழந்தைகளுக்கு ஆகாரம் ஊட்டு

வரும் சாதத்தைப் பிசைந்து வைப்பதும் கூடாது; ரஸ்தாவைத் தாண்டும்போது கையைப் பிடித்துக் கூட்டிக்கொண்டு போகக் கூடாது. அவ்வாறு செய்தால் எப்பொழுதும் அவர்கள் பிறர் உதவியையே நாடுவார்கள்.

குழந்தைகளுக்கு ரோஷம் எப்போதும் அதிகம். அதனால் நாம் அவர்களை ஏளனம் செய்யக் கூடாது. பள்ளிக் கூடத்தில் தங்கள் சகபாடிகள் தங்களுக்குப் பாடம் தெரியாதென்று எங்கே ஏளனம் செய்வார்களோ வென்று பயந்து அநேகம் மாணவர்கள் பள்ளிக் கூடத்திற்குப் போகாமலிருப்பதுண்டு.

குழந்தைகள் வசிக்கப்போகும் இவ்வுலகைப்பற்றி எல்லா விஷயங்களையும் அவர்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும். அவர்களுக்கு ஆண் பெண்களுக்குள்ள வித்தியாசம் (*Sex Knowledge*), பணமுடையினால் பலர் கஷ்டப்படுவது, பணத்தினால் உண்டாகும் அனுகூலப் பிரதிகூலங்கள், சமூகப் பொருளாதார விஷயமாய் உள்ள குறைகள் இவை யெல்லாம் நாம் எடுத்துச் சொல்லவேண்டியது அவசியம்.

குழந்தைகளை நாம் அதிகாரம் செய்யக்கூடாது. அஃது அவர்களுக்குத் தடை. குழந்தை விரும்புவது சுயேச்சையும் சுதந்தரமும். குழந்தையின் லக்ஷியம் சமூகத்திற்கு ஒரு திலகம்போன்று விளங்க வேண்டுமென்பது.

குழந்தைகள் சிணுங்குவதும் அழுவதும் மிகவும் இறுக்கமானதும் சரியாயமையாததுமான துணியை அணிவதால்தான் ஏற்படுகின்றன. குழந்தை சிறியதாயிருந்தால் அப்போதுதான் அது மிகவும் பலமாக அழும். இம்மாதிரி சிணுங்கி அழும்போது குழந்தைகளை ஒரு பெரிய கண்ணுடியில் அவர்கள் முகத்தைப் பார்க்கும்படி செய்தால் அது நின்றுவிடும். ஒன்று செய்வதாய்க் குழந்தைகளுக்குச் சொன்னல் அதை நாம் உடனே செய்ய வேண்டும்.

சில குழந்தைகள் சோம்பலாயிருக்கும்; ஆனல் அது சோம்பல் அல்ல. தனக்கு ஒரு விஷயத்தில் அக்கரை யில்லாதபோது தான் குழந்தை அம்மாதிரி யிருக்கும்.

குழந்தைகளுக்குப் பலவிதமான பருவங்களுண்டு. முதலில் குடியிருக்கும் பருவம். இக்காலத்தில் மணலில் வீடு கட்டுவதும் குகைகளைப்போய்ப் பார்ப்பதும் குழி கோலுவதும் அவர்களுடைய வழக்கம். இரண்டாவது சேர்க்கும் பருவம். இக்காலத்தில் கிளிஞ்சல் புளியங்கொட்டை ஸ்டாம்பு முதலியவைகளைச் சேர்க்கும்.

மூன்றாவது சாமர்த்தியப் பருவம். அப்போது குதிப்பது ஓடுவது நீந்துவது முதலியன செய்யும். மற்றொன்று வெளியில் திரியும் பருவம். அப்போது வீட்டைவிட்டு வெளியில் போகவும் உலகப் பிரயாணம் செய்யவும் சிநேகிதர்களைப் பார்க்கவும் அவர்களுக்கு ஆசை ஏற்படும். எல்லாப் பருவங்களைவிடக் காளைப்பருவந்தான் மிகவும் கடினமானது. அதுதான் வீரச் செயலிலும் லீலைகளிலும் மனது செல்லும் பருவம். அக்காலத்தில்தான் அதிகமான போதனையும் அறிவும் வேண்டியன. அக்காலத்தில்தான் ஏற்ற தொழிலையும் ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும். இதில் இரண்டு வகையினர் உண்டு. ஒருவகையினர் அதிகமாக மற்றவர்களோடு கலந்துகொள்ளாமல் அமைதியாயிருந்து விஷயங்களை யோசித்துக் கொண்டிருப்பார். அக்குணமுள்ளவர் என்ஜினீராகவோ, அல்லது ரசாயனப் பரிசோதகர்களாகவோ, அல்லது இவைபோன்ற தனிமையான வேலை செய்பவர்களாகவோ இருக்கத் தக்கவர்கள். இரண்டாவது வகையினர் ஜனங்களோடு அதிகமாகக் கலக்கும் குணமுடையவர்கள். அவர் வியாபாரிகளாகவோ அல்லது பள்ளிக்கூடத்து உபாத்தியாயர்களாகவோ இருக்கத் தக்கவர்கள்.

குழந்தைகளுக்கு விஷயங்களை அறிந்து கொள்வதில் ஆத்திரம் அதிகம். சிறு வயதில் பிறரைப் பார்த்துப் பின்பற்றி விஷயங்களை அறிந்து கொள்ளுகின்றன. ஆகவே வயதானவர்கள் குழந்தைகள் முன்பாக நன்றாக நடந்து கொள்ளவேண்டும். குழந்தைகளுக்கு எப்போதும் துடிதுடிப்பு அதிகம். அவர்கள் குதிக்க வேண்டும்; சத்தம் போடவேண்டும்.

நமது வீடுகளில் நாம் பெரியவர்களைப் பற்றித்தான் பிரமாதமாய்ப் பேசுவதும் கவனிப்பதும் செய்கின்றோம். தகப்பனார் வந்தால் வீட்டில் குழந்தைகள் சத்தம் போடக்கூடாது. அநேகம் குழந்தைகள் தங்களது தகப்பனார் முன் மிகவும் பயத்தோடும் கஷ்டத்தோடும் இருப்பது உண்டு. இம்மாதிரி இருப்பது கூடாது. குழந்தைகளுக்கு உத்ஸாகமும் சுயேச்சையும் சந்தோஷமும் உண்டாகும்படியாக ஒவ்வொரு வீட்டிலும் பெற்றோர்கள் நடந்து கொண்டால் பிற்காலத்தில் குழந்தைகளுக்கு அதனால் நல்ல பயனேற்படும் என்பதில் சந்தேகமில்லை.

# ஜீவ சாஸ்திரம்

## உயிருள்ளனவும் உயிரில்லனவும்

### ஆர். கோபால ஐயர்

உயிருள்ளவைகளைப்பற்றி ஆராயும் சாஸ்திரம் ஜீவ சாஸ்திரமாகும். செடி கொடிகளைப்பற்றி ஆராயும் சாஸ்திரம் தாவர சாஸ்திரமாகும். ஜந்துக்களின் ஆராய்ச்சியைப்பற்றியது பிராணி சாஸ்திரம். தாவரங்களும் ஜந்துக்களும் உயிர் பெற்றனவாகையால், தாவர சாஸ்திரமும் பிராணி சாஸ்திரமும் ஜீவ சாஸ்திரத்தில் உள்ளடங்கினவைகளென்றே சொல்லவேண்டும். ஆதியில் பிராணிகள் தாவர ராசியிலிருந்தே பிரிந்தனவென்று நம்பப்படுகிறது. உயிர் என்றால் என்ன என்பதை விளங்கச் சொல்வது கடினமான காரியம் என்றே சொல்லவேண்டும். உயிரிழந்த நாயைப்பார்த்துச் சவம் என்று கூறுகிறோம். அவ்விதம் கூறும்போது உயிர் என்பதன் உள் அர்த்தத்தைத் தெரிந்து சொல்வதாக நினைக்கவேண்டியிருக்கிறது. எந்தக் குணங்கள் இல்லாததினால் அதைச்சவம் என்கிறோம்? இடம் பெயர்தல் இல்லாததனாலா? அல்லது மூச்சு விடாததனாலா? அல்லது வேறு ஏதாவது காரணங்களினாலா? தாவரங்கள் இடம் பெயர்வதில்லை. கடலில் வசிக்கும் ஸபஞ்சு, காரல்கள் (பவளவகைகள்) முதலியன இடம் மாறுவதில்லை. பூமியுள் வசிக்கும் நைட்ரோ பாக்டீரியா வகைகள் பிராண வாயுவை உட்கொள்ளுகிறதில்லை. என்றாலும், இவைகளெல்லாம் உயிருள்ளனவே.

இக்காரணங்களை உணர்ந்து ஆராய்ச்சியாளர் உயிருள்ளவற்றினிடம் தோன்றும் குணாதிசயங்களை வெகு சிரமப்பட்டு எடுத்துக்காட்டி யிருக்கிறார்கள். உயிருள்ளது இது, உயிரற்றது இது என்று தீர்மானமாக வரையறுத்துச் சொல்லக்கூடிய தன்மைகள் மிகக்குறைந்தனவாயிருப்பதுவே இந்தச் சிரமத்திற்கு முக்கியமான காரணம். ஜீவ சாஸ்திரத்தில் நிபுணரான ஹக்ஸ்லி என்ற அறிஞர் உயிருள்ளவற்றின் குணங்களைச் சொல்லும்போது (1) ஜீவிகளின் ரஸாயன அமைப்பையும் (2) அவைகளின் தேகத்தில் எப்பொழுதும் நடந்துகொண்டிருக்கும் ரஸாயன மாறுபாடுகளையும் (3) ஜீவிகள் பிறந்து, வளர்ந்து, இனம்பெருக்கி இறப்பதற்கு முன் இயற்றும் செயல்களையுமே முக்கியமானவைகளென்று கூறினார்.

ஜீவிகளின் தேகம் ப்ரோட்டோ ப்ளாஸ்ம் என்ற ஒரு வஸ்துவி னால்ஆகியது. எனவே மேற்கண்ட குணங்களை இந்த ஜீவரசத்திற்கு உரியனவாகச் சொல்ல ஆக்ஷேபணையில்லை. இந்த ஜீவரசம் மாறு பாடு அடையாத ஆதிநிலையில் முற்றாத பனநுங்கைப்போன்ற தோற்ற முள்ளது. முழுவதும் இளகிக் கடினமாயிருப்பதுமல்ல ; முற்றி லும் ஜலம் போன்ற திராவகமாயிருப்பது மல்ல. கண்ணாடியைப் போல ஒளியை ஊடுருவவிடும் குணம் உள்ள தன்று ; கற்பலகை யைப்போல் ஒளியை முற்றிலும் தடுப்பது மன்று. நடுத்தரமான குணமுடையது. இதன் ரஸாயன குணங்கள் பலவாகும். இது தனிப்பொருளல்ல ; சேர்க்கை வஸ்துவாகும். இதில் பல பொருள் கள் சேர்ந்துள்ளன. இச்சேர்க்கை ஸ்திரமான சேர்க்கையல்ல ; அதாவது இதில் சேர்ந்திருக்கும் பொருள்கள் எளிதில் பிரிவுபடு வன. நாம் வேலை செய்யும்போது நமது தேகம் ஒரு மெழுகு வர்த்தி எரிவதுபோல் எரிந்துகொண்டிருக்கிறது என்று சொல்ல லாம். அப்போது ஜீவரசமானது, கரியமலவாயுவாகவும், ஜலமாக வும், யூரியா வாகவும், இன்னும் சில வஸ்துக்களாகவும் பிரிந்துவிடு கிறது. அப்போது தேகத்திற்கு நஷ்டம் உண்டாகிறது. இக்குறை வுக்கு ஈடு செய்யும் பொருட்டே நாம் உண்ணவேண்டி யிருக்கிறது. உட்கொண்ட பொருள் பலவகை மாறுதல்களை அடைந்து கடைசி யில் ஜீவரசமாக மாறிவிடுகிறது. இத்தகைய ஆக்கச் செயல்களுக்கும் அழிவுச் செயல்களுக்கும் காரணம் ஜீவரசமே. இது பற்றியே ஜீவ ரசத்தைத் தேகத்தின் அஸ்திவாரப் பொருள் என் கூறி யிருக்கின் றனர். இதன் செயல்களை 'உயிர்' என்று சொல்வோரும் உண்டு. தாவரங்களிடத்திலும் ஜந்துக்களிடத்திலும் காணப்படும், மூச்சுவிடு தல், உண்ணல், வளர்தல், இனம்பெருக்கல் எனப்படுபவைகளை ஜீவ ரசத்தின் செயல்களின் வெளித்தோற்றங்களாகவும் கூறலாம். உயி ருள்ளனவற்றிற்கு இனம் பெருக்கல் ஒரு முக்கிய குணமாகும். பூத்துக் காய்த்து வித்துக்களுண்டாக்கிப் பரவுவது தாவரங்களின் இயல்பு. அது போலவே முட்டைகளிட்டாவது குட்டிகள் போட் டாவது நமது இனத்தை விருத்தி செய்வது ஜந்துக்களுக்கும் சகஜம். அவ்வாறு செய்யாமலிருப்பின் இனம் நசிக்கவேண்டியதே.

தவிரவும், உயிருள்ளனவற்றிற்கெல்லாம் சூழ்வின் தூண்டுதல் களுக்கு ஏற்றபடி பிரதிபலிப்பது சகஜமான குணமாகும். காய்ச்சி இருக்கும் ஒரு இரும்புத்துண்டைத் தெரியாமல்தொட நேரிட்டால் சட்டென்று கையை இழுக்கின்றோம். சோற்றைக்கண்ட நாய் அதைக்கட்டியிருக்கும் சங்கிலியைச் சுண்டி இழுக்கிறது. செடிக ளின் முனைகள் சூரிய வெளிச்சத்தை விரும்புகின்றன; வேர்கள் அவ்

வெளிச்சத்தை வெறுக்கின்றன. சமுத்திரத்தில் சதா மிதந்து செல்லும் நுண்ணிய பிராணிகளை வலையினால் சேகரித்து ஒரு கண்ணாடிப் பாத்திரத்தில் சமுத்திர ஜலத்தில் ஜன்னலோரத்தில் வைத்தால் சில பிராணிகள் வெளிச்சத்தை விரும்பி ஜன்னலருகிலிருக்கும் பக்கத்தில் வந்து கூடுகின்றன. வேறு சில வெளிச்சத்தை வெறுத்து எதிர்ப்பக்கம்போய்க் கூடுகின்றன. இவ்வாறு ஜீவராசிகளெல்லாம் சூழ்வு அல்லது வெளித்தாக்கலுக்கு ஏற்ப இயங்கும் குணமுள்ளனவாகும்.

ஜீவராசிகளெல்லாம் ஜீவசத்தினலாகியவை என்று கூறினேம். இவ்விதமாகிய ஜீவிகள் சதாகாலமும் சுற்று நிலைமாறுதல்களுக்கு இணங்கப் பிரதிபலித்துக் கொண்டு வருகின்றன வென்று சொல்லலாம். குளிர்ந்த தேசத்தில் வசிக்கும் உயிர் இனங்கள் அக்குளிரினல் ஏற்படும் அசௌகரியங்களுக்கும் சௌகரியங்களுக்கும் தக்கவாறு தத்தம் தேகங்களை அமைத்துக்கொண்டுள்ளன. அவ்வாறே மிகவும் உஷ்ணப்பிரதேசங்களில் வசிக்கும் ஜீவராசிகளும் தமது வசதி இடங்களுக்குரிய அதிக உஷ்ணத்திற்கும் நீர்வறட்சிக்கும் ஏற்றவாறு தேக அமைப்புக்களையும், வளர்ச்சி முறைகளையும் ஏற்படுத்திக்கொண்டிருக்கின்றன. இவைமட்டு மல்ல. சமுத்திர ஜலத்தில் மிதந்து செல்லும் ஜந்துக்கள் அவ்விடத்திற்குரிய சூரிய வெளிச்சத்திற்கும், வெப்பத்திற்கும், காற்றிற்கும், நீரோட்டத்திற்கும் தகுந்தவாறு அமைந்துள்ளன. சமுத்திரத்தில் மிகவும் ஆழமாகிய இடத்தில் வசிக்கும் ஜந்துக்கள் அங்கிருக்கும் சூரிய வெளிச்ச வின்மைக்கும், நீர்ஸ்தம்பித்திருக்கும் நிலைமைக்கும், அதிகக் குளிர்ச்சிக்கும், நீர் அழுத்தத்துக்கும் தக்கபடி அமைந்துள்ளன.

இவ்விதம் சுற்று நிலைமையில் ஏற்படும் மாறுதல்களுக்கு ஏற்றவாறு சதா காலமும் தமது தேக அமைப்பை மாற்றிக்கொள்ளும் முயற்சி ஜீவிகளுக்கு ஏற்பட்டிருக்கும் மற்றொரு குணமாகும்.

(தொடரும்)

# சரித்திரம்

## பாஹியன் யாத்திரை வரலாறு

ஜி. தாத்தாச்சாரி

(740-ம் பக்கத் தொடர்ச்சி)

மத்திய இந்தியாவிலுள்ள இந்த நாட்டில் தொண்ணூற்ருறு வகைப் புறச்சமயிகள் இருக்கின்றனர். அவர்கள் அனைவரும் 'உலகம் நித்யம்' என்னும் கொள்கையை உடையவர்கள். ஒவ்வொரு வகுப்பினரும் ஆகாரத்துக்காகப் பிக்ஷை ஏற்கின்றன ரென்ருலும் ஒருவராவது பிக்ஷாபாத்திரத்தை எடுத்துக்கொண்டு போவதில்லை. தனித்திருக்கும் பாதைகளின் பக்கங்களில் பிரயாணிகள் தங்குவதற்காக அவர்கள் பக்திமேலீட்டால் சத்திரங்களைக் கட்டி வைத்திருக்கின்றனர். அந்தப் பிரயாணிகள் அங்குத் தங்களுக்கு வேண்டிய பொருள்களைப் பெற்றுத் தங்கலாம்; உறங்கலாம்; உண்ணலாம்; பானம் செய்யலாம். புத்த தர்மத்தை அவலம்பித்தவர்களும் அந்தச் சத்திரங்களின் வழியே போகும் போதும் வரும்போதும் உபசரணைகளைப் பெறுகின்றனர். என்ருலும் அவர்களுடைய சவுகரியங்களுக்காக வேறு விதமான ஏற்பாடுகள் செய்யப்படுகின்றன. இன்னும் தேவதத்தனுக்குச் சில சிஷ்யர்கள் இருக்கின்றனர். அவர்கள் முந்திய மூன்று புத்தர்களுக்கு மட்டும் வழிபாடு புரிகின்றனரே யன்றி, சாக்யமுனிக்கு வழிபாடு செய்வதில்லை.

ச்ராவஸ்திக்குத் தென் கிழக்கில் நான்கு லீ தூரத்தில் (லி-யூ-லி) விருதக ராஜன் சாக்கிய வம்சத்தினருடைய தேசத்தை அழிக்க எண்ணியபோது லோக பகவான் வழியின் பக்கத்தில் நின்ற இடம் இருக்கிறது. இவ்விடத்தில் ஒரு ஸ்தூபம் எழுப்பப்பட்டுள்ளது. நகருக்கு மேற்கே ஐம்பது லீ தூரம் சென்ருல் தோ-வாய் என்னும் நகரத்தை அடையலாம். இது காச்யப புத்தருடைய ஜனனஸ்தானமாம். அவர் தமது பிதாவுடன் பேசிக்கொண்டிருந்த விடத்திலும் நிர்வாணமடைந்த விடத்திலும் ஸ்தூபங்கள் எழுப்பப்பட்டிருக்கின்றன. காச்யப ததாகதரின் சரீரம் முழுவதும் உள்ள இடத்தின்மீதும் ஒரு பெரிய ஸ்தூபம் கட்டப்பட்டிருக்கின்றது.

ச்ராவஸ்தி நகரைவிட்டுத் தென்கிழக்காகப் பன்னிரண்டு யோசனை தூரம் சென்று ந-பி-கா என்னும் நகரையடைந்தோம். இது ச்ரகுச்சந்த புத்தரின் ஜனன ஸ்தானமாகும். பிதாவும் புத்ரரும் பேசிக்கொண்டிருந்த விடத்திலும் ச்ரகுச்சந்தர் நிர்வாணம் அடைந்த விடத்திலும் ஸ்தூபங்கள் எழுப்பப்பட்டுள்ளன. இங்கிருந்து வடக்கே ஒரு யோசனைக் குட்பட்ட தூரம் சென்றால் கனகமுனி புத்தர் அவதரித்த நகரத்தை யடையலாம். அங்கேயும் மேற் கூறியதைப் போன்ற விடங்களில் ஸ்தூபங்கள் எழுப்பப்பட்டுள்ளன.

இங்கிருந்து கிழக்கு முகமாகச் சென்றால் ஒரு யோசனைக் குட்பட்ட தூரத்தில் கபிலவஸ்து என்னும் நகரத்தை யடையலாம். இந்த நகரத்தில் அரசனும் இல்லை, குடிகளும் இல்லை. இஃது ஒரு பெரிய வனாந்தரத்தைப் போன்றிருக்கிறது. பிக்ஷுக்களில் சிலரும் உபாஸகர்களான பத்துக் குடும்பத்தினருமே இங்கிருக்கின்றனர். ஸுத்தோதனனுடைய அரண்மனை இடிந்து கிடக்குமிடத்தில் ராஜகுமாரனுடைய மாதாவின் சித்திரம் ஒன்றுள்ளது. அதில் ராஜகுமாரன் ஒரு வெள்ளை யானையின் மீதேறிக்கொண்டு தன் மாதாவின் கர்ப்பத்துக்குள் நுழையும் பாவனையாக இருக்கிறான். அரசிளங்குமரன் நகரத்தின் கிழக்கு வாசல் வழியாக வெளிப்போந்த இடத்திலும், அவன் ஒரு நோயாளியைப் பார்த்த இடத்திலும், அவன் தனது ரதத்தைத் திரும்பச் செய்து தன்னை அரண்மனைக்குத் திருப்பி யழைத்துக்கொண்டு போகச்சொன்ன இடத்திலும் ஸ்தூபங்கள் எழுப்பப்பட்டுள்ளன. அன்றியும் அரசிளங்குமரனுடைய அங்க லக்ஷணங்களை அஸிதர் உற்று நோக்கிய விடம், ஆனந்தரும் மற்றவர்களும் யானையை அடித்து அதை வழியினின்றும் விலக்கி வீசி எறிந்த விடம், அம்பு ஒன்று தென் கிழக்காக முப்பது லீ தூரம் சென்று பூமியைத் தொளைக்க அங்கிருந்து குமிழிகளுடன் நீர் ஊற்று உண்டாகிப் பிற்காலத்தில் பிரயாணிகளுக்குத் தாக சாந்தி செய்வதற்கான கிணறாகிய விடம், ஞானோதயம் பெற்ற பிறகு புத்த பகவான் தமது பிதாவைச் சந்தித்த விடம், ஐந்நூறு சாக்கியர்கள் தர்ம மார்க்கத்தைக் கைப்பற்றி உபாலிக்கு வழிபாடு செய்த விடம், பூமியானது ஆறுதரம் கம்பித்த விடம், தமது பிதா வரக்கூடாதபடி மண்டபத்தின் நான்கு வாயில்களிலும் தெய்வலோகத்தரசர் நால்வர் காவல் செய்யத் தேவர்களின் பொருட்டுப் புத்த பகவான் தர்மோபதேசம் செய்த விடம், இன்றும் காணப்படுகிற நியக்ரோத மரத்தினடியில் கிழக்கு நோக்கிய வண்ணமாகப் புத்த பகவான் வீற்றிருந்தபோது அவருக்கு மஹா ப்ரஜாபதி ஒரு ஸங்

காதியைக் கொடுத்த விடம், முன்பே ச்ரோதாபன்ன மார்க்கத்தைக் கைக்கொண்ட சாக்ய புத்ரர்களை விருதக ராஜன் கொன்ற விடம் ஆகியவைகளிலும் ஸ்தூபங்கள் கட்டப்பட்டிருக்கின்றன. இந்த ஸ்தூபங்கள் எல்லாம் இன்னும் இருக்கின்றன.

நகரத்துக்கு வடகிழக்கே சில லீ தூரத்தில் அரசிளங்குமரன் ஒரு மரத்தடியில் உட்கார்ந்து கொண்டு உழவு விளையாட்டைக் கவனித்த புலம் உள்ளது. நகரத்துக்குக் கிழக்கே ஐம்பது லீ தூரத்தில் லும்பினி என்ற அரசோத்யான வனம் இருக்கின்றது. ராஜ மஹிஷியார் ஸ்நானம் செய்வதற்காக மஞ்சன சாலைக்குச் சென்று அதன் வடபக்கத்தின் வழியே வெளிவந்து இருபது அடி நடந்து ஒரு மரக் கிளையைக் கையால் பிடித்துக்கொண்டு கிழக்கு நோக்கி யிருந்த போது, அரசிளங்குமரனைக் கருவுயிர்த்த இடம் இதுவாம். பிறந்த வுடனேயே அவன் ஏழடி தூரம் நடந்து சென்றான். இரண்டு நாக வரசர்கள் அரசிளங்குமரனுடைய சரீரத்தை மஞ்சனமாட்டினர். இது நிகழ்ந்த விடத்தில் பிற்காலத்தில் ஒரு கிணறு உண்டாக்கப்பட்டது. குழந்தையை மஞ்சனமாட்டுவதற்காகத் தேவலோகத்திலிருந்து வீழ்ந்த நீர் தேங்கிய தடாகத்தைப் போலவே இங்கிருந்தும் பிக்ஷுக்கள் தங்களுடைய பானத்துக்காக நீரை முகந்து கொள்கின்றனர். எல்லாப் புத்தர்களுக்கும் அவர்கள் ஞானோதயம் பெறவேண்டிய இடம், தர்ம சக்ரத்தைச் சுழற்றவேண்டிய விடம், தர்மத்தின் உண்மையான கொள்கைகளை விவரித்துத் தர்ம விரோதிகளை வாதத்தில் அடக்கவேண்டிய விடம், தாய்மார்க்குத் தர்மோபதேசம் செய்வதற்காக த்ரியஸ்த்ரிம்ச லோகத்துக்குச் சென்று பூமியில் இறங்க வேண்டிய விடம் என நான்கு இடங்கள் வரையறை செய்யப்பட்டுள்ளன. அவ்வப்போதுள்ள சந்தர்ப்பங்களுக்குத் தக்கபடி வேறு இடங்களும் குறிப்பிடப்படும். கபிலவஸ்து நாடு இப்போது பெரிய வனாந்தரமாக இருக்கிறது. வெள்ளை யானைகளாலும் சிங்கங்களாலும் பயம் நேரும் என்ற காரணத்தால் மார்க்கத்தில் ஜனங்களைக் காண்பது அரிது. கவனமில்லாமல் பிரயாணம் போவது முடியாத காரியம்.

புத்த பகவான் ஜனனமான இடத்திலிருந்து கிழக்கே ஐந்து யோசனை சென்றால் லான்-மோ (ராமக்ராமம்) என்ற நாட்டையடையலாம். இந்த நாட்டின் அரசன் புத்த பகவானுடைய நிர்வாணத்துக்குப் பிறகு அவரது அங்கங்களைப் பகிர்ந்துகொண்ட காலத்தில் ஒரு பகுதியைப் பெற்றுக்கொண்டான். தன்னூருக்குத் திரும்பியதும் அவன் ஒரு ஸ்தூபத்தைக் கட்டினான். ராமக்ராம ஸ்தூபம் என்பது அதுவே. அதன் அருகில் ஒரு தடாகமும் அத்தடா

கத்தில் ஒரு நாகமும் உள்ளன. அந்த நாகம் காலையிலும் மாலையிலும் அந்த ஸ்தூபத்துக்கு வழிபாடுகள் செய்து அதைச் சதா காலமும் காவல் செய்து கொண்டு வருகிறது. அசோக ராஜன் இருந்தகாலத்தில் எட்டு ஸ்தூபங்களையும் இடித்துவிட்டு, அவைகளுக்குப் பதிலாக வேறு எண்பத்து நாலாயிரம் ஸ்தூபங்களைக் கட்டவெண்ணினன். ஏழு ஸ்தூபங்களை இடித்த பிறகு, அவைகளைச் செய்தபடியே செய்ய இந்த ஸ்தூபத்தினிடமும் வந்தான். வரவே அந்த நாகம் ஓர் உருவத்தை எடுத்துக்கொண்டு வந்து தனது இருப்பிடத்துக்கு அவ்வரசனை அழைத்துச் சென்று தன்னுடைய வழிபாட்டில் தான் உபயோகிக்கும் பாத்திரங்களையும் உபகரணங்களையும் அவனுக்குக் காட்டி, பின்னர் அவனை நோக்கி, "இதைக் காட்டிலும் மேலாக நீ வழிபாடு இயற்றவல்லையானால் இந்த ஸ்தூபத்தை அழிக்கலாம். எனக்கு உன்னோடு சண்டையில்லை. உன்னை வெளியே அழைத்துப் போகிறேன், வா'' என்று சொல்லிற்று. அந்தப் பாத்திரங்கள் மனிதர்களால் செய்யப்பட்டவையல்ல வென்பதைத் தெரிந்துகொண்ட அசோக ராஜன் உடனே தன்னிடத்துக்குத் திரும்பிப் போய்விட்டான். இவ்விடம் வனாந்தரமாகப்போகவே அந்த ஸ்தூபத்தைத் தண்ணீர் தெளித்துச் சுத்தம் செய்வதற்கு ஒருவரும் இங்கு இராது போயினர். என்றாலும் எப்போதும் ஒரு யானைக் கூட்டம் துதிக்கைகளில் தண்ணீரைச் சுமந்து சென்று தரையில் பக்தியுடன் தெளித்து, பலவிதமான புஷ்பங்களாலும் வாசனைத் திரவியங்களாலும் அந்த ஸ்தூபத்தை அர்ச்சித்து வழிபாடாற்றி வந்தது. வேறு நாடுகளிலிருந்து சில யாத்திரிகர்கள் அந்த ஸ்தூபத்துக்கு வழிபாடு செய்யும் பொருட்டு இங்கே வருவதுண்டு. ஒரு சமயத்தில் இவர்களிற் சிலர் அந்த யானைகளைக் கண்டு பயந்து மரங்களிலேறி ஒளிந்து கொண்டனர். விதிப்பிரகாரம் அந்த யானைகள் வழிபாடியற்றியதைக் கண்டதும் இவர்களுக்கு வியப்புண்டாயிற்று. அர்ச்சனை செய்வதற்காக இங்கே பிக்ஷுக்களாவது விஹாரமாவது இல்லாமற் போனதையும் கேவலம் யானைகளே தண்ணீரைத் தெளித்துச் சுத்தம் செய்ததையும் நினைக்க இவர்களுக்கு வருத்தம் உண்டாயிற்று. ஆகவே இவர்கள் தங்களுடைய பெரிய கொள்கைகளைக் கைவிட்டு, ச்ரமணர்களுடைய காரியங்களையே மேற்கொள்வாராயினர். அங்கே முளைத்துக் கிடந்த செடி கொடிகளைப் பிடுங்கி எறிந்து, தரையைச் சமமாக்கி அவ்விடம் சுத்தமாயும் நேர்த்தியாயும் இருக்கக்கூடிய ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கினர். பிக்ஷுக்களுக்கு வேண்டிய விடுதிகளைக் கட்டிக் கொடுக்கும் பொருட்டு அந்நாட்டு அரசனை உதவி செய்யும்

படித் தூண்டினர். இவற்றையன்றியும், இவர்கள் அங்கு ஒரு விஹாரத்தையும் கட்டினர். அதில் இன்னும் பிக்ஷுக்கள் வசித்து வருகின்றனர். இந்த விஷயங்கள் சமீப காலத்துக்கு முன்னர்த் தான் நடந்தன. அது முதல் இடையறாதபடி பிக்ஷுக்கள் ஒருவர்பின் னொருவராக வந்து கொண்டிருக்கின்றனர். விஹாரத்தின் அத்தியக்ஷர் மட்டினுமே எப்போதும் ஒரு ச்ரமணராகவே இருக்கிறார்.

இந்த இடத்துக்கு மூன்று யோசனை கிழக்கில் அரசிளங்குமரன் தனது தேர்ப்பாகனை சந்தகனையும் குதிரைகளையும் திரும்பிப் போகும்படி சொல்லிய இடம் உள்ளது. அங்கும் ஒரு ஸ்தூபம் கட்டப்பட்டிருக்கிறது.

இங்கிருந்து கிழக்கு நோக்கி நான்கு யோசனை தூரம் சென்றால் பஸ்ம ஸ்தூபத்தை அடையலாம். அங்கும் ஒரு ஸங்காராமமுள்ளது. மறுபடியும் கிழக்கே பன்னிரண்டு யோசனை தூரம் சென்று குசிநகரம் என்னும் நகரத்தை யடைகிறோம். இந்நகரத்துக்கு வடக்கே ஹிரண்யவதி நதியின் பக்கத்தில் இரண்டு ஸால விருக்ஷங்களினிடையே வடக்கே தலையை வைத்துப் படுத்துக் கொண்டு புத்த பகவான் நிர்வாணம் அடைந்த விடத்திலும், அவருடைய கடைசிச் சிஷ்யனை ஸுபத்ரனைத் தர்ம மார்க்கத்துக்குக் கொண்டு வந்த விடத்திலும், பொன்மயமான சவப்பெட்டியில் பகவான் படுத்திருக்கையில் ஏழு நாள் வரையில் வந்தனை வழிபாடுகளால் கொண்டாடப்பட்ட விடத்திலும், வஜ்ரபாணியானவர் தமது பொன்னால் செய்த தண்டத்தைக் கீழே எறிந்த விடத்திலும், அஷ்டராஜாக்களும் பகவானுடைய களேபரத்தைப் பங்கிட்டுக்கொண்ட விடத்திலும் ஸ்தூபங்கள் எழுப்பப்பட்டு ஸங்காராமங்கள் கட்டப்பட்டுள்ளன. அவைகள் எல்லாம் இன்னும் இருக்கின்றன. இந்த நகரிலும் சில ஜனங்கள்தாம் வசிக்கின்றனர். அந்தக் குடும்பத்தினர்களும் இங்குள்ள பிக்ஷுக்களின் ஸங்கத்தோடு சம்பந்தப்பட்டவர்களே. இங்கிருந்து பன்னிரண்டு யோசனை தூரம் தென்கிழக்கில் புத்த பகவான் நிர்வாணம் அடையப்போகுமிடத்துக்குத் தாங்களும் வருவதாகச் சொன்ன லிச்சவி ஜாதியாரை அவ்விதம் வரக்கூடாதென்று தடுத்த இடமுள்ளது. புத்தரிடம் அவர்களுக்கு இருந்த அன்பினால் அவர்கள் திரும்பிப்போக மனமில்லாதிருந்தனர். அதன் மேல் பகவான் அவர்களுக்கும் தமக்கும் இடையே அவர்களால் தாண்ட முடியாததான ஆழமும் அகலமு முள்ள ஒரு நதியைத் தோன்றச் செய்தார். அப்பால் ஞாபகார்த்தமாக அவர்களுக்குத் தமது பிக்ஷா பாத்திரத்தைக் கொடுத்து, அவர்களுடைய வீடுகளுக்குத் திரும்பிப் போகும்படி நல்வார்த்தை சொன்னார்.

அவர்கள் அப்படியே திரும்பிப்போய் ஒரு கற்றூணை எழுப்பி, அதில் இந்த வரலாற்றை எழுதி வைத்தனர்.

இங்கிருந்து கிழக்கு நோக்கி ஐந்து யோசனை தூரம் சென்றால் வைசாலி என்னும் நாட்டை அடையலாம். வைசாலி நகரத்துக்கு வடக்கில் இரண்டு நிலைக் கட்டிடமான மஹாவன விஹாரம் என்பது உள்ளது. இந்த விஹாரத்தில் புத்த பகவான் முன்னொரு சமயம் சிறிதுகாலம் தங்கியிருந்தார். ஆனந்தருடைய சரீரத்தின்மீது எழுப்பப்பட்ட ஸ்தூபம் இங்கேதானுள்ளது. இந்தநகரத்தில் புத்த பகவானுக்காக ஒரு ஸ்தூபத்தைக் கட்டிய ஆம்ரபாலி என்னும் ஸ்திரீ வசித்தாள். அந்த ஸ்தூபத்தின் இடிந்த பகுதிகள் இன்னுமுள்ளன. நகருக்குத் தெற்கே மூன்று லீ தூரத்தில் வழியின் மேல் பக்கத்தில் புத்த பகவான் தங்கியிருப்பதற்காக ஆம்ரபாலியால் கொடுக்கப்பட்ட ஆராமம் உள்ளது. புத்த பகவான், தாம் நிர்வாணம் அடையவிருக்கையில் வைசாலி நகரின் மேற்கு வாசல் வழியாகச் சிஷ்யர்களுடன் புறப்பட்டு வந்து, தமது சரீரத்தை வலப்புறமாகத் திருப்பி நகரைப் பார்த்துவிட்டுப் பின்னர்த் தம் சிஷ்யர்களை நோக்கி, “இந்த இடத்தில் எனது வாழ்நாளின் அந்திய கர்மத்தைச் செய்திருக்கிறேன்” என்றார்; அந்த விடத்தில் பிற்காலத்தவர்கள் ஒரு ஸ்தூபத்தை எழுப்பினர். நகருக்கு வடமேற்கில் மூன்று லீ தூரத்தில் சாபதண்டம் எனப்படும் ஸ்தூபம் ஒன்றுள்ளது. அப்பெயரின் காரணம் வருமாறு:

கங்கா நதியின் மேல் பக்கத்தில் ஒரு நாட்டை ஆண்டு வந்த அரசன் ஒருவன் இருந்தான். அவனுடைய காமக்கிழத்தியரில் ஒருத்தி உருவில்லாத பிண்டம் ஒன்றைப் பெற்றனள். இதனால் பொறாமை கொண்ட அரசன் மனைவி அவளை நோக்கி, “உனது இந்தப் பிண்டம் ஓர் அபசூசகமாகும்” என்றனள். ஆகவே அந்தப் பிண்டத்தை ஒரு மரப்பெட்டியில் வைத்துப் பூட்டிக் கங்கையில் விட்டு விட்டனர். அந்நதியின் கீழ்பாகத்திலிருந்த அரசன் ஒருவன் நாடு சோதனைக்காகச் சென்றிருந்த சமயத்தில் நதியில் மிதந்து வந்த அம்மரப்பெட்டியைக் கண்டான். கரைக்குக் கொண்டு வந்து திறந்து பார்க்க, அதனுள் மிகுந்த அழகும் உருவமும் வாய்ந்த இணையற்ற ஆயிரம் குழந்தைகள் இருக்கக் கண்டான். பிறகு அவன் அக்குழந்தைகளை எடுத்துப்போய் வளர்த்து வந்தான். அவர்கள் யௌவனப் பிராயத்தை அடைந்த போது, மிக்க வீரமும் தீரமும் உடையவர்களாகி எதிர்த்து வந்தவர்களை யெல்லாம் வென்று மீண்டனர். காலக்கிரமத்தில் அவர்கள் தங்களுடைய பிதாவான மேலைக் கங்கை நாட்டு அரசன் மீதும்

படை யெடுத்துச் சென்றனர். அதைக் கண்ட அவ்வரசன் மிகப் பயமடைந்தான். அவனுடைய காமக்கிழத்தி அவனிடம் வந்து அந்தப் பயத்தின் காரணத்தை வினவினள். அதற்கு அவ்வரசன், "அடுத்த நாட்டரசனுக்கு வீரமும் தீரமுமான இணையற்ற ஆயிரம் குமாரர்கள் இருக்கின்றனர். அவர்கள் எனது நாட்டின் மீது படை யெடுத்து வருகின்றனர். இதுதான் என் பீதிக்குக் காரணம்" என்றான். இதைக் கேட்ட அந்தக் காமக்கிழத்தி, "நீங்கள் ஒன்றுக்கும் பயப்பட வேண்டாம். நகருக்குக் கிழக்கே உன்னதமான ஒரு கோபுரத்தைக் கட்டி அவ்வீரர்கள் வந்ததும் என்னை அக்கோபுரத்தின் மீது நிறுத்துங்கள். நான் அவர்களை ஜயித்து விடுகிறேன்" என்றாள். அரசனும் அப்படியே செய்தான். அந்த வீரர்கள் படையெடுத்து வந்த போது அந்தக் காமக்கிழத்தி கோபுரத்திலிருந்து கொண்டு அவர்களை நோக்கி, "நீங்கள் என்னுடைய புத்திரர்கள். ஏன் இப்படி அநீதியைச் செய்கிறீர்கள்?" என்று கேட்டாள். அவர்கள், "எங்களுடைய தாய் என்று சொல்லிக்கொள்ளும் நீர் யார்?" எனக் கேட்டனர். "என் வார்த்தையில் நம்பிக்கை இல்லாமற்போனால் நீங்கள் அனைவரும் அண்ணாந்து நோக்கி வாயைத் திறந்து கொள்ளுங்கள்" என்று அவள் சொன்னாள். அவர்கள் அப்படிச் செய்யவே, அவள் தன்னிருகைகளாலும் தனது ஸ்தனங்களை அமுக்கிப் பிடித்தாள். உடனே ஒவ்வொரு ஸ்தனத்திலிருந்தும் ஐந்நூறுபீர் பால் புறப்பட்டு அவளுடைய ஆயிரங் குமாரர்களுடைய வாய்களில் விழுந்தது. அதன் மேல் அவர்கள் அவள் தங்களுடைய தாய் தான் என்பதைத் தெரிந்து கொண்டு, உடனே தங்களுடைய விற்களையும் தண்டாயுதங்களையும் கீழே போட்டு விட்டனர். இரண்டு அரச பிதாக்களும் இந்த விஷயங்களைக் கருதிய மாத்திரத்தால் பிரத்யேக புத்தர்களாகி, அவர்கள் பொருட்டு ஸ்தூபத்தை எழுப்பினர். அஃது இன்னும் இருக்கிறது. பிற்காலத்தில் லோக (புத்த) பகவான் ஞானோதயம் பெற்றபோது தம்முடைய சிஷ்யர்களை நோக்கி, "முன்னொரு சமயம் நான் எனது வில்லையும் தண்டத்தையும் வைத்த இடம் இது" என்றார். பிற்காலத்திய ஜனங்கள் இதைத் தெரிந்து கொண்டு இங்கு ஒரு ஸ்தூபத்தைக் கட்டினர். அதனால் இந்தப் பெயருண்டாகியது. அந்த ஆயிரம் புத்தர்களும் உண்மையில் இந்தப் பத்ர கல்பத்தைச்சேர்ந்த ஆயிரம் புத்தர்களாவர். புத்த பகவான் இந்த ஸ்தூபத்தின் பக்கத்தில் நின்றபோது ஆனந்தரை நோக்கி, "மூன்று மாதங்களுக்குப் பிறகு நான் நிர்வாணம் அடைவேன்" என்றார். அச்சமயத்தில் ஆனந்தருடைய மனத்தை மார

ராஜன் நன்றாக மயக்கி விட்டபடியால், அவர் (ஆனந்தர்) புத்த பகவானை இன்னும் சிலகாலம் இவ்வுலகத்தில் இருக்க வேண்டுமென்று பிரார்த்திக்க வில்லை. இங்கிருந்து கிழக்கே மூன்று அல்லது நான்கு லீ தூரத்தில் ஒரு ஸ்தூபம் இருக்கிறது. புத்தருடைய நிர்வாணத் துக்கப்பால் நூறு வருஷங்கள் கழிந்ததும் பத்து விதங்களில் விநயத்தின் விதிகளை மீறிய பிக்ஷுக்கள் சிலர் வைசாலியிலிருந்தனர். தங்களுடைய சரியைகளுக்குப் புத்த பகவானுடைய வாய்மொழியே பிரமாணம் என்று அவர்கள் சாதித்தனர். அதனால் அர்ஹத்துக்களும் விதிதவறாதொழுகும் பிக்ஷுக்களுமாக எழு நூறு பேர் ஒரு பரிஷத்தில் கூடி, விநயபிடகத்தைப் பல பிரதிகளைக் கொண்டு பரிசோதித்துப் புதியதாக வெளியிட்டனர். பிற்காலத்திய மனிதர்கள் இவ்விடத்தில் ஒரு ஸ்தூபத்தைக் கட்டினர். அஃது இன்னும் இருக்கிறது.

இங்கிருந்து நான்கு யோசனை தூரம் கிழக்கே சென்றதும் ஐந்து நதிகள் ஒன்று கூடுமிடத்துக்கு வருகிறோம். நிர்வாணம் அடையவெண்ணிய ஆனந்தர், மகத நாட்டிலிருந்து வைசாலிக்குப் போய்க் கொண்டிருந்த சமயத்தில் அவ்விஷயத்தை அஜாதசத்ரு அரசனுக்குத் தேவகணங்கள் தெரிவித்தனர். உடனே அவ்வரசன் தனது சேனைகளுடன் புறப்பட்டு அவரைப் பின்பற்றி நதிக்கரைக்கு வந்தான். ஆனந்தர் வருவதைத் தெரிந்து கொண்ட வைசாலி நாட்டு லிச்சவிகளும் அவ்விதமே அவரை எதிர்கொள்ளப் புறப்பட்டு நதியினருகே வந்தனர். அத்தருணத்தில் ஆனந்தர், தாம் முன்னோக்கிச் சென்றால் அஜாத சத்ரு வருத்தப்படுவான் எனவும், திரும்பிப் போனால் லிச்சவிகளுக்குக் கோபமுண்டாகுமெனவும் சிந்தித்துச் சஞ்சலப்பட்ட மனமுடையவராகி, அங்கேயே "ஜோதிப் பிரகாசம்'' என்னும் ஸமாதியில் ஆழ்ந்து, தமது தேகத்தை எரித்து ஆற்றின் நடுவில் நிர்வாண மடைந்தனர். அவருடைய சரீரம் இரண்டு கூறுகளாக்கப்பட்டு ஆற்றின் இருகரையிலும் ஒவ்வொரு பகுதி காணப்பட்டது. ஆகவே அந்த இரண்டு அரசர்களும் அவருடைய பாதிச்சரீரத்தை எடுத்துக்கொண்டு திரும்பிப் போய் அவைகளின் மீது ஸ்தூபங்களைக் கட்டினர்.

நதியைத் தாண்டித் தெற்கே ஒரு யோசனை தூரம் சென்றதும் மகத நாட்டையும் பா-லின்-பு (பாடலி புத்ரம்) என்னும் நகரத்தையும் அடையலாம். அசோக மகாராஜன் ஆண்ட நகரம் இதுவே. இங்குள்ள அரண்மனை அவருடைய ஏவலின்படி பூத கணங்களால் கொண்டு வந்து அடுக்கப்பட்ட கற்களால் ஆன பகுதிகளையுடையது. அதன் சுவர்கள், நிலைகள், கல்லில் செதுக்கப்பட்ட உருவங்கள் எல்

லாம் மனிதர்களால் ஆக்கப்பட்டவை யல்ல. அதன் இடிந்த சின்னங்கள் இன்னு முள்ளன. அசோக மகாராஜனுடைய தம்பி அர்ஹத் நிலைமையை அடைந்து, மௌனமாகத் தியானம் செய்வதிலேயே இன்பம் பெறுபவனுகிக் கிருத்ர கூடம் என்னும் மலையில் வசிப்பது வழக்கம். அரசன் அவனைத் தனது அரண்மனைக்கு வந்து ஸத்காரம் பெறவேண்டுமென்று விநயமாகப் பிரார்த்தித்தான். மலையின் மீது தனக்குண்டாகும் மனவமைதியைக் கண்டு மகிழ்வுற்ற அந்த அரச சகோதரன் அரண்மனைக்கு வரப் பிரியப்படவில்லை. அப்பால், அவ்வரசன் தன் சகோதரனை நோக்கி, "எனது வேண்டுகோளுக்கிணங்கி நீர் வரும் பட்சத்தில், நகருக்குள்ளேயே உமக்கு ஒரு மலையை உண்டாக்கித் தருவேன்" என்றான். அதன் பிறகு அவ்வரசன் பலவகையான மதுமாமிசங்களைச் சேகரித்து, பூத கணங்களை வரவழைத்து அவைகளைப் பார்த்து, "நாளைய தினம் நீங்கள் எல்லோரும் எனது வேண்டு கோளுக்கிணங்கி விருந்தினராக வரவேண்டும். ஆனால் ஆஸனங்கள் இல்லாதபடியால், உங்களில் ஒவ்வொருவரும் தத்தமது ஆஸனத்தைக் கொண்டு வரவேண்டும்" என்றான். மறுநாட்காலையில் அந்தப் பெரிய பூதங்கள் எல்லாம் ஒவ்வொன்றும் நான்கு அல்லது ஐந்து தப்படி சதுரமான பெரிய கற்பாறையைச் சுமந்து கொண்டு வந்தன. விருந்து முடிந்த பிறகு அவ்வரசன், அப்பூதங்களை, அவைகள் கொணர்ந்த ஆஸனக் கற்களை யெல்லாம் ஒன்றன் மீதொன்றாக அடுக்கி ஒரு மலையாக்கி, அம்மலையின் அடிவாரத்தில் ஐந்து பெரிய சதுரக் கற்களால் முப்பத்தைந்து அடி நீளமும், இருபத்திரண்டு அடி அகலமும், பதினோரடி உயரமுமான அறை ஒன்றை நிர்மாணிக்கும்படி ஏவினான்.

(தொடரும்)



# களவு

என். ஆர். ஐயர்

சில வருஷங்களுக்கு முன் உத்தியோகமிழந்து சென்னை, மயிலையில் என் தம்பியருடன் ஒரு மாளிகையில் வாசம் செய்தேன். பூஞ்செடிகளும், கனி விருக்ஷங்களும் செறிந்து வளர்க்கப்பெற்ற ஒரு சிறு அழகிய தோட்டத்தின் நடுவே அமைக்கப்பட்டுள்ளது அம்மாளிகை. ராஜபாதைகளிரண்டு கூடும் மூலையிலுள்ள அத் தோட்டத்தைச் சுற்றி மதிற்சுவர் எடுக்கப்பட்டிருந்தது. ரஸ்தாக் களிலிருந்து தோட்டத்துட் பிரவேசிப்பதற்கு மதிற் சுவரில் படிப் புரை வாசல் இரண்டு இருந்தன. மாளிகை இருமுகப் பார்வை யுடையது; மூன்று கட்டுக்களும் இரண்டு மேடைகளும் உடையது. முதல் மாடியில் படிக்கட்டுள்ளும் கூடமும், இரண்டு அறைகளும், கீழ்த் தளத்தும் முதல் தளத்துமுள்ள இரண்டு முன் அறைகளுக் கும் நேராக முன் சுவரை ஒட்டிச் சிறு அறைகள் மட்டும் மேல் மாடி யிலும் ஆக அழகுடன் அமைக்கப்பெற்றிருந்தன. மாளிகை நவீன மாதிரியில் சுகவாசத்திற்குற்ற குடி நீர்க் குழாய்கள், மின்சார விளக்கு, விசிறிகளுடன் கட்டிடத்திற் கருங்கற் சம்பந்தமேயில்லை எனினும் கல்லால் அமைக்கப்பட்ட தெனவே தோற்றுமாறு நிர் மாணம் செய்யப்பட்டிருந்தது. வருமானக் குறைவினால் வேலை ஆட்களை நாங்கள் வைத்துக்கொள்ளவில்லை. தனி வீட்டில் வேலை ஆட்களின்றி வசிப்பது இராக்காலத்திற் சிறிது பயத்துக்கிடமாக விருந்தது. என் தம்பியர்கள் மாடியில் படுப்பார்கள். கனிந்து உலர்ந்த மல்கோவா மாங்கனிபோல் வயது முதிர்ந்து கனிந்த தள் ளாத என் தாயும் நானும் கீழ்த் தளத்திற் படுத்துக்கொள்வோம்.

ஒரு நாளிரவு உண்ட பின்பு, அடைக்கவேண்டும் கதவுகளை அடைத்துத் தாளிட்டு மின்சார விளக்குகளில் ஒன்று இரண்டு நீங்க லாக, மற்றவைகளை அவித்து வழக்கம்போல் வர்த்தமானப் பத் திரிகை படித்தற்காக நடுக்கூடம் அடைந்தோம். ஆயிரக்கணக்கான மைலுக்கு அப்பாலுள்ள பலநாடுகளில் அவ்வப்போது நிகழும் செய்திகளைத் தந்தி, தபால் மார்க்கமாகவும் கம்பியில்லாப் பிற வழி யாகவும், பிரத்யேக நிருபர், சொந்த நிருபர், இவர்கள் மூலமும் மற்றவர்கள் மூலமும் பெருமுயற்சியாற் சேர்த்து நாடோறும் ஏற்பா

டாய்ப் பத்திரிகைகள் நமக்குச் செய்திகளை அறிவிக்கின்றன. மத்திய ஆபிரிக்காவில் சுதேசிகள் கள்ளு இறக்கும் முறை, எஸ்கிமோ ஜாதியாரின் மணமுறை, நியூஸீலந்தில் கோழிப்போர், எகிப்தில் துதான்காமன் கல்லறைக் கோபுரம் திறத்தல் இவைபோன்ற அரிய விஷயங்களைப்பற்றிய செய்திகளைத் தெரிவிக்கின்றன மேலும் உள்நாட்டில் நிகழும் செய்திகளையும் அன்றன்று தவறாமல் வெளியிடுகின்றன. ஆகவே தான் அப்பத்திரிகையை மிகுந்த ஆவலுடன் படிப்பது எங்கள் வழக்கம்.

ஊரெங்கும் பலவிதக் களவுகள் அதிகரித்து வந்தன.

ஆங்கிலேயர், அரசியல் கைப்பற்றி, பெருத்த ராணுவப் படையை நிலையுறப் பேணி நம் தேசத்தைக் காத்தருளாவிடில் அதை வேற்றவர் பறித்திடவோ நாட்டிற் குழப்பமும் அமைதியின்மையும் களவுங் கொலையும் மிகுந்திடவோ நேருமென்ற பரிதாபத்தால், துரைத்தனத்தார் வருமானத்திற் பகுதிக்குமேல் ராணுவ இலாகாவிற் செலவிட்டு வந்தனர். ஸர்க்கார் வருமானத்தின் மிகுதியில் பெரும்பாகம் அரசிறை இலாகாவிலும் காவலிலாகாவிலும் செலவிடப்பட்டுவந்தது. இருப்பினும், நாளுக்குநாள் பற்பல புதுப்புதுமாதிரியில் களவும் கொலையும் வளர்ந்து வந்தன. மலைகளிலும் காடுகளிலும் குகைகளிலும் சிறு கிராமங்களிலும் ஒளிந்திருந்து அல்லும் பகலுமின்றித் திடீர்திடீரென்று கூட்டங் கூட்டமாய் நாடெங்கும் கிளம்பிக் கிராமங்களைச் சிதறப்பதற அடித்து அச்சமின்றிக் கொள்ளை யடித்துவந்த கூட்டத்தாரைக் கள்வ வீர சிவசங்குபோன்ற எண்ணிறந்த தலைவர்கள் உட்பட அடக்கிச் சிறைப்படுத்தி அவரது தீச்செயல்களை வேருடன் ஒருங்கே ஒழித்த சர்க்கார்க் காவற்படையாளர் தங்கள் திறனை மறந்திட்டனரோ? வல்லமை இழந்தனரோ? அவ்விஷயத்தில் காவலரின் தேர்ந்த நுட்ப புத்தியைச் செலுத்த அவகாசம் கிடைப்பதே துர்லபமாயிருந்தது.

எவ்வளவுதான் சிரமப்படினும் திருடர்கள் விளையாடல்களைக் குறைக்க இவரால் முடியவில்லை. அதிலும் ஒண்டிக் களவுகளைத் துலக்குவது சிரமஸாத்ய வேலை. இதில் பெரும் புகழ் பெறுவதும் அரிது. சர்க்காருக்கு இவ்விஷயத்தில் சிரத்தை குறைவென்று அனைவரும் முணுமுணுத்தனர். சர்க்காரைப் பழிப்பதில் பயனில்லை. அவரவர் சொத்தைக் கூடினவரையில் அவரவரே காத்திடல் அவசியமன்றோ?

பத்திரிகையைக் கையிலெடுத்தவுடன் அரிய செய்திகளனேகம் அதில் குறித்திருந்தபோதிலும் அன்று, களவு கொலை இவை

போன்ற செய்திகளே எங்கள் கண்ணைப்பற்றி யிழுத்தன. அங்கு மிங்கும் அடிக்கடி நிகழ்ந்துவந்த களவுச் செய்திகள் எங்கள் செவி யுற்ற காரணத்தாலிருக்கலாம். மதுரைமா நகரில் ஓர் உண்டியல் கடை குமாஸ்தா பாங்கியிலிருந்து ரூபாய் பதினுயிரத்துக்குச் செக் மாற்றி வருகையில் சைக்கிள் சவாரி செய்துவந்த ஒருவன், வண்டி யைத் திடீரென நிறுத்திக் கீழே குதித்துத் துப்பாக்கியாற் பய முறுத்திக் குமஸ்தா கையிலிருந்த பணத்தைப் பறித்துக்கொண்டு திரும்பவும் சைக்கிள் ஏறி ஓடிவிட்டானும். இதுபோன்ற துணி கரச் செயல்கள் பலமாகாணங்களிலுள்ள நகரங்களிலும் கிராமங் களிலும் நடையுறுவதாகப் பத்திரிகைகளில் அறிவிக்கப்பட்டிருக்கின் றன. இத்தகைய கடுஞ்செயல்கள் சென்னையில் நடையுறவில்லை யெனி னும் சிறு களவுகள் ஓரிடமில்லாவிடில் மற்றோரிடத்தில் அநுதினமும் சிறிதுகாலமாய் நிகழ்ந்துவந்தன. சில நாட்களுக்கு முன் லாயிட் ரோட்டில் ஒரு வீட்டின் ஜன்னற் கம்பிகளைச் சப்த முண்டாகாமல் தந்திரமாய் வளைத்துத் தென்னி நீக்கி வீட்டுடையோர் உறங்கும் போது திருடன் உள்ளே நுழைந்து பெட்டியைத் திறந்து விலை யுயர்ந்த ஆடைகளையும் கிடைத்த வெள்ளிச் சாமான்களையும் எடுத் தேகினனும். வேறோரிடத்து உடையவர்கள் வீட்டைப் பூட்டிக் கொண்டு விருந்துண்ணப் போயிருந்தனராம். அஃதறிந்த ஒருவன் பகல் 12 மணிக்கு நல்லுடை அணிந்து இரண்டு வேலையாட்களு டன் வந்து சட்டைப் பையிலிருந்து திறவுகோலை எடுத்து வீட்டைத் திறந்து ஒரு வண்டி நிறையச் சாமான்களை ஏற்றிக் கொண்டு அச்சமின்றிச் சகஜமாய் சென்றானும். அடுத்த மூலையில் காவல் நின்ற போலீஸ் வீரன் இதைக் கவனித்தானுயினும் தனக்குப் போதுமான சந்தேகம் தோற்றாமையாலும், பாராவில் நின்று விலகிச் செல்லக் கூடாமையாலும் சும்மாவிருந்து விட்டதாக மறு நாள் தெரியவந்ததாம். இன்னும் பற்பலமாதிரியிற் களவுகள் கழிந்த சில மாதங்களாக மிகுதியாகி யிருந்தன.

வர்ஷாகாலம். வளர்பிறை மூன்றும் நாள். எங்கும் மை யிருட்டுப் பரவி யிருந்தது. மேகங்கள் ஒன்று சேர்ந்து உறுமின. சோவென்று மழை கல்மாரி பொழியத் தொடங்கியது. இடி தொடர்ந்து முழங்கியது. மின்னொளி பளீர்! பளீர்! என்று வெட்டின. பத்திரிகை படித்து முடிக்கவும் இரவு நாழிகை பன் னிரண்டிற்கு மேலாகிவிட்டது. யாவரும் அவரவர் படுக்கைக்குச் சென்றோம். நானும் என் அறைக்கதவை யடைத்துப் படுத்துக் கொண்டேன். உறக்கம் பிடிக்காமையால் பத்திரிகையைக் கையி லேந்திப் படுத்தவாறே வியாபார விளம்பரமடங்க யாவும் படித்த

பிறகு மீதி நின்ற சென்ற ஆண்டுக் காட்டிலாகா நிர்வாக நிவே தனத்தைப் பற்றிய பத்திராதிபரது வியாசத்தைப் பார்த்துக்கொண் டிருந்தேன். சற்றுக் கண் அயர்ந்தேன்.

சமையலறைப் பக்கத்தில் டாம்!, டாம்!!, டாம்!!!, என்ற சப்தம் கேட்டதுபோல் தோன்றியது. என் தாயும் நானும் ஒரே காலத்து விழித்துக்கொண்டோம். விளக்கு அணைந்திருந்தது. விளக்கின் மின்சாரத் தொடுப்பைத் தொடுத்தேன். விளக்கு எரிய வில்லை. மனத்தில் சந்தேகம் புலப்படத் தொடங்கியது. என் தாயை அழைத்து அவள் அறையில் விடி விளக்காய் எரிந்துகொண் டிருந்த கைலாந்தரை நொந்தி எடுத்துவரச் செய்தேன். மாடியி லிருந்து என் தம்பியரில் ஒருவன் சப்தத்தைச் செவியுற்று என்போலவே மின்சாரத் தொடுப்பைத் தொடுத்து அது பலிக்காத துணர்ந்து திகைத்து நிற்கையில், கீழ்த் தளத்து வெளிச்சம் கண்ட தும் கீழே வந்து, "அண்ணு; ஏதோ சப்தம் கேட்டதே" என்ருன். "ஆம், ஆம், திருடனுயிருக்கலாம். உன் கைப்பிரம்பை எடுத்துக் கொள்" என்று சொல்லி, நானும் என் பிரம்பை எடுத்துக்கொண் டேன். பிற நாட்டினர்க்குள்ளதுபோல் தற்காப்பு ஆயுதங்கள் வைத்துக்கொள்ளப் பாரத நாட்டினர்க்கு உரிமை கிடையாது. சிறந்த காவற்படை தமது கடனைத் தவருமற் செய்துவருங்கால் தற் காப்பு ஆயுதம் ஜனங்களுக்குத் தேவையில்லையென்று கருதியும் வேறு சில காரணங்கள் பற்றியும் இந்தியர்களிடத்திலிருந்த ஆயுதங் கள் யாவும் பறிக்கப்பட்டன. ஆயுதமிழந்து மற்றவர் உதவியை எதிர் நோக்கி வாழும் பாரதமக்கள் பெரும்பாலரும் ஆண்மை யிழக்கு மாருயிற்று. நெறி நூல் முறைப்படி நெற்றியளவும் உயரமுள்ள நாட்டுப்புறத்தார் தடிக்கம்பு நவநாகரிகத்தின் நடுவே வாழும் எங்க ளிடம் கிடையா.

ஆகவே இருவரும் பிரம்பும், கைலாந்தரும், மின்சாரச் சுடர் விளக்கும் கையிலேந்தித் திருடனைப் பிடிக்கப் புறப்பட்டோம். இரண்டுமணி நேரமாய் ஓயாமற் பொழிந்த மழை சற்று ஓய்ந்திருந் தது. மேகம் கலைந்தது. வான் சுடர்கள் ஒளிதரத் தொடங்கின. எங்களாலியன்ற அளவு அடியோசையுருமல் நடந்தோம். நாங்கள் வீண் சிரமமுற்றிருக்கவேண்டாம்; ஏனெனில் சமயலறையை நெருங்கவே எங்கள் பாதங்கள் அஞ்சுதலுற்றன. மிகவும் தைரிய சாலி யென அடிக்கடி தற்புகழ்ச்சி செய்துகொள்வது என்னிடம் ஒரு கெட்ட வழக்கம். சிலர் அவ்வாறே நம்பினர்கள். இப் பொழுது அது சிறிது வினையாயிற்று. தைரியத்தைக் கைபிடித்துக் கொண்டு சமையலறைக் கதவண்டை போய்ப்பார்த்தேன். கதவு

பூட்டியது போலவே இருந்தது. புறவாசற் கதவைப் பார்த்தோம்; அதுவும் தாளிட்டபடியே இருந்தது. ஆனல் சென்னைத் திருடர் சாமர்த்தியங்களைப்பற்றிக் கேட்டு உணர்ந்துள்ள எங்களுக்குச் சந்தேகம் தீரவில்லை.

திகைத்து நின்றோம். சமயலறைப் பக்கமிருந்து மறுபடியும் சப்தம் வந்தது. பாத்திரம் உருளுவதுபோல் தோன்றியது. திரும்பிப் பார்த்தோம். விளக்கு வெளிச்சத்தால் பெரிதான ஒரு நிழல் வேகமாய்க் குறுக்கே பாய்வதை எதிர்ச்சுவரிற் கண்டோம். முழங்கால் நடுக்கமுற்றது. கையிலிருந்த பிரம்பை என்னையறியாமலே நிழல் சென்ற இடம் நோக்கி எறிந்தேன். 'ங்ங்யாவ்! ங்ங்யாவ்!' என்று கத்திக்கொண்டு ஒரு பூனை சுவரின்மேல் குதித்துப் பாய்ந்தது. வேகமாய்ச் சென்று சமையலறையைத் திறந்துபார்த்தோம். மோர் சிதறிக் கிடந்தது. பானை உருண்டுகிடந்தது. பானையில் வைத்திருந்த வெண்ணையைக் காணவில்லை.

படுக்கைக்குச் சென்றோம். உறக்கம் நன்றாய் வரவில்லை. பிரமை நீங்கவில்லை. காலையில் எழுந்ததும் அண்டைவீட்டில் போலீஸ் காரன் ஒருவன் ஏதோ வெகு கவனமாய் விசாரணை செய்து கொண்டிருப்பதையும் அவ்வீட்டின் நான்கு பக்கங்களையும் சுற்றிப் பார்த்து அடிக்கடி புஸ்தகத்தில் ஏதேதோ குறித்துக் கொண்டிருப்பதையும் கண்டோம்.

# களவுபோன வைரமணிகள்

ச. கு. கணபதி ஐயர்

சிங்காரவேலு தமது அறையில் ஒரு பீரோவிலுள்ள சில புத்தகங்களைப் புரட்டிக்கொண்டிருந்தார். அவரது பெண் அவ் வறையில் பல இடங்களிலே வைக்கப்பட்டிருந்த சாமான்களை ஒழுங்குபடுத்திக்கொண்டிருந்தாள். சுவரிலுள்ள கடிகாரம் 'டிங் டிங்' என்று ஒன்பது அடிக்கவே, சிங்காரம் தமது பெண்ணைப் பார்த்து, "சீதா, சமையலாயிற்று ? பார்" என்றார். சீதா வெளியே சென்றாள். அதற்குள் வேலையாள் உள்ளே வந்து சிங்காரத்தினிடம் ஒரு கடிதத்தை நீட்டினான். சிங்காரம் அதைப் பிரித்துப் படித்து விட்டு, "நல்லது, உள்ளே அழைத்துவா" என்று சொல்லிவிட்டுச் சற்றுத் தூரத்தில் இருந்த ஒரு நாற்காலியை மேஜைக்கருகில் தம் நாற்காலிக்கு எதிரில் போட்டுவிட்டு வாயிற்புறமாகச் செவி கொடுத்து மௌனமாக இருந்தார்.

சிறிது நேரத்திற்கெல்லாம் ஒரு பெரிய மனிதர் சிங்காரம் இருந்த அறைக்குள் பிரவேசித்தார். அவருக்குச் சுமார் 32 வய திருக்கும். தோற்றத்தில் அவரை ஒரு பிரபு என்று எளிதில் கூறி விடலாம். சிங்காரம் அவரைக் கண்டதும், "ஐயா, தாங்கள் இன்று எனக்கு அறிமுகமானதைக் குறித்து நிரம்பச் சந்தோஷப்படுகி றேன். அதிகக் களைப்பாய் இருக்கிறீர்களே ! இதில் உட்காருங்கள்" என்று கையைப்பிடித்துத் தம் எதிரில் உள்ள நாற்காலியில் உட்கார வைத்தார். வந்த பிரபு, "தங்களைப்பற்றி நான் பலமுறை கேள்விப் பட்டிருக்கின்றேன். ஏதாவது ஒரு காரணத்தை முன்னிட்டல்லவா சந்திக்கவேண்டி யிருக்கிறது. இன்றைக்கு உம்மை நேரில் சந்தித்த தற்கு மகிழ்கின்றேன்."

"அவ்வளவு அவசரமான காரியத்தை முன்னிட்டு வந்திருக் கிறீர்களா ?"

"ஆம்."

"நான் அதைவிட அவசரமான ஒரு காரியத்தைக் கவனிக்கச் செல்லவேண்டும். பத்தரை மணி வண்டிக்குப் போகப்போகிறேன். அரை மணிக்குள் நமது சம்பாஷணை முடிந்துவிடவேண்டும்."

"நான் சொல்வதைக்கேட்டு என் காரியம் முக்கியமானது முக்கியமல்லாதது என்பதை நீரே சொல்லிவிடக்கூடும். உம் முடைய உதவியினுல்தான் என் கௌரவம் காப்பாற்றப்படவேண்டி யிருக்கிறது."

"என்னுல் சாத்தியமானதை நான் செய்கிறேன். விஷயத் தைச் சுருக்கமாகக் கூறிவிடுங்கள். நான் என் அவசர வேலைகளைப் பார்த்துக்கொண்டு நாளைக்கு உங்களைச் சந்திக்கிறேன். பிறகு விஸ் தாரமாகப் பேசலாம்."

இதற்குள் சீதா வந்து சாப்பாடு தயாரானதைத் தெரிவித்தாள். பிறகு சிங்காரம் கண்ஜாடையினுல் சீதாவைத் தம் பக்கத்தில் உள்ள வேறெரு நாற்காலியில் வந்து உட்காரும்படி செய்தார்.

பிரபு, "நேற்று நான் சென்னை சென்று இரண்டு வைரங்கள் வாங்கி வந்தேன். காலையில் பார்த்தபோது அவை சுதேசக்கற்களாக —போலி வைரங்களாக—இருந்தன. நான் விலைபேசாது அவற் றைப் பெண்களுக்குக் காட்ட வாங்கிவந்தேன். கடைக்காரர் கேட்டவிலை தரவேண்டி யிருக்கும். வைரங்கள் போலிக்கற்களாக மாறினது எதனுல் என்று அறிந்துகொள்ளவேண்டும். இவ்விஷயத் தில் எனக்கு உதவி புரியத் தங்களைவிடச் சிறந்த துப்பர் வேறு யார் இருக்கின்றனர்?"

"உங்கள் கதை மிகவும் விந்தையாக இருக்கின்றது. வைரங்கள் போலிக்கற்களாக மாறிவிடுவதுண்டோ? ஏதோ பித்தலாட்டம் நடந்திருக்கவேண்டும்.'

"நான் சொல்வதைத் தாங்கள் பொறுமையோடு கேட்க வேண்டும். தங்களுக்குத் தெரியாததில்லை. இருந்தாலும் சொல்லு கிறேன். சிலநாளைக்கு முன்னே ஒருவன் சிவப்பு மைப்பொட்டலம் என்று எதையோ கொடுத்துவிட்டுப் போனுன். அதை மையாக்கி எழுதினபோது சிவப்பாக எழுதியது. சற்றுநேரங் கழித்து அது மஞ்சளாக மாறிற்று! இன்னும் சிறிது நேரத்தில் கடிதத்தில் எழு திய அடையாளமே தெரியவில்லை!! அந்தவிதமான மோசடி இந்த வைரக்கற்களிலும் இருக்கலாம் அன்றோ?"

துப்பராகிய சிங்காரம் பொன்னேரி ஜமீன்தாரின் வைரங்கள் விஷயத்தை அரை மணிக்குள் கிரகிக்கமுடியாதென அறிந்து கொண்டு, "ஐயா, உங்கள் விஷயத்தை நான் என் விஷயம்போல் கவனிக்கிறேன். இன்று இங்கேயே இருங்கள். சொந்தக் காரில் தானே வந்திருக்கிறீர்கள்? காரை நமது 'ஸ்டேண்டில்' நிறுத்தச் சொல்லுங்கள். இங்கேயே சாப்பிடலாம். நான் உங்களை இன்றிரவு

ஒன்பது மணிக்குச் சந்திக்கிறேன். தங்களுக்குவேண்டிய சௌகரியங்களை இப்பெண்குழந்தை பார்த்துக்கொள்ளுவாள்'' என்று கூறிவிட்டு எழுந்தார்.

பிரபு, துப்பரின் அவசரத்தைப் பார்த்து ஒன்றும் சொல்வதற்கில்லாதவராய்ச் சரி என்று ஒத்துக்கொண்டார்.

* * *

அன்றிரவு சரியாக ஒன்பது மணிக்குத் துப்பர், சீதா, ஜமீன்தாராகிய மூவரும் துப்பர் வீட்டு மேல்மாடியில் நிலா முற்றத்தில் உட்கார்ந்துகொண்டு வைரங்களைப் பற்றிய சம்பாஷணையைத் தொடங்கினர்கள்.

துப்பர்.—நீங்கள் வைரங்கள் வாங்கச் சென்றதுமுதல் அவை காணமற்போனது வரையில் நடந்த சகல விவரங்களையும் தெளிவாய்ச் சொல்லிவிடுங்கள்.

ஜமீன்தார்.—என் மனைவி சென்ற ஒரு மாதமாகத் தனக்கு இரண்டு வைரங்கள் வேண்டுமென்று தொந்தரவு கொடுத்துவந்தாள். நான் எவ்வளவோ சொல்லி அவள் எண்ணத்தை மாற்ற முயன்றும் முடியாமற் போயிற்று. கடைசியாக வாங்கித் தருவதென்று தீர்மானித்து நேற்றுக்காலையில் நானும் வைரப்பரீக்ஷையில் நிபுணரான எனது நண்பர் ஒருவருமாக வைரங்கள் வாங்கச் சென்னை சென்றோம். எங்களுக்குப் பிடித்த இரண்டு வைரங்களைச் சோதித்து எடுத்துக்கொண்டு அவற்றை என் மனைவிக்குக் காட்டி அவள் சம்மதிப்பாளானல் பின்பு வாங்குவதாகக் கூறிவிட்டு இரண்டு வைரங்களை நான் எடுத்து வருவதற்கு அத்தாட்சியாகக் கடைக்காரருக்கு ஒரு குறிப்பு எழுதிக் கொடுத்துவிட்டு ஊர் திரும்பினேம். ஊர் வந்ததும் என்னைச் சந்தித்து ஏதோ அவசரமான விஷயத்தைப் பற்றிப் பேசுவதற்காகப் பக்கத்து ஊர் ஜமீன்தார் ஒருவர் தம் இருசகாக்களுடன் எங்கள் பங்களாவில் காத்திருந்தனர். நான் வண்டியை விட்டு இறங்கினதும் அவர்களை உபசரித்து வீதித்திண்ணையிலேயே அவர்களுடன் உட்கார்ந்து சம்பாஷித்துக் கொண்டிருந்தேன். அச்சமயம் கைப்பெட்டியில் வைத்திருந்த அந்த இரண்டு வைரங்களையும் எடுத்து அவர்களுக்குக் காட்டினேன். அவர்களும் அவற்றை மெச்சிப் பேசினர்கள்.

துப்பர்.—அப்பொழுது அவை சரியாகத்தானே இருந்தன? போலி வைரங்கள் என்று எவராவது சந்தேகப்பட்டதுண்டா?

ஜமீன்.—இல்லை; சரியாகத் தான் இருந்தன. அதற்குள் வீட்டில் இருந்த என் மனைவி, தான் வைரங்களைப் பார்க்க வேண்டு

மென்று எங்கள் காரியஸ்தன் மூலம் சொல்லி யனுப்பினள். நான் பெட்டியை அப்படியே அவனிடம் கொடுத்தனுப்பி விட்டேன்.

சீதா.—பெட்டி பூட்டப் பட்டிருந்ததோ ?

ஜமீன்.—இல்லை. அதற்குப் பூட்டில்லை.

துப்பர்.—பிறகு ?

ஜமீன்.—பிறகு சம்பாஷணை முடிந்ததும் வந்தவர்களை அனுப்பி விட்டு இரவில் போஜனத்தை முடித்துக் கொண்டு என் மனைவியின் சந்தோஷத்தைக் காணவேண்டி வழக்கத்திற்கு விரோத மாக ஒன்பது மணிக்கே படுக்கைக்குச் சென்றேன். நாங்கள் மேல் மாடியில் தான் படுத்துக்கொள்வது. அங்கே ஓர் அறை உண்டு அதில் இருவரும் வைரங்களைப் பார்த்துப் பார்த்துப் பூரித்தோம். என் மனைவி அவ்வைரங்கள் தனக்குப் பிடித்தவை என்றும் அவற்றை வாங்கி விடவேண்டுமென்றும் கூறினள். நானும் சரி என்று ஒத்துக்கொண்டேன். அன்று நெடு நேரம் கண் விழித் திருந்தோம். பிறகு இருவரும் அயர்ந்து தூங்கி விட்டோம்.

சீதா.—தூங்கும்போது வைரப் பெட்டியை எங்கே வைத் திருந்தீர்கள் ?

ஜமீன்.—அறையில் மேஜையின் மேலேயே வைத்திருந் தோம்.

துப்பர்.—அப்படி வைத்து விட்டுத் தூங்கலாமா ?

ஜமீன்.—மாடியின் கதவை உட்புறமாகத் தாளிட்டுக் கொண் டோம். தாளிட்டிருக்கும் போது எவரும் எவ்விதத்திலும் உள்ளே வர முடியாது.

சீதா.—அதன் மேல் ?

ஜமீன்.—காலையில் முதலில் விழித்துக் கொண்டவள் என் மனைவியே. அவள் என்னை அவசரமாக எழுப்பினள். "என்னை ஏமாற்ற எண்ணியோ இந்தப் போலிக் கற்களை வாங்கி வந்தீர்கள் ? உங்களுக்கு என்றைக்கும் மனைவிக்கு ஏதாவது வாங்கித் தருவதில் நல்ல மனசே இல்லை. இரவில் ஜ்வலித்ததுபோல் இவை இப் பொழுது ஜ்வலிக்க வில்லை. எனக்கு இவை ஏதுக்கு ?" என்று முணு முணுத்தாள். நான் திடுக்கிட்டு வைரங்களை உற்று நோக்கி னேன். முன்னால் பார்த்தபடி அவை இருக்க வில்லை. உடனே எனக்கும் பகீர் என்று வியசனம் தோன்றிற்று. நான் அதை வெளிக்காட்டாமல் வைரப் பரீக்ஷை நிபுணராகிய என் நண்பரை வரவழைத்து, "இந்த வைரங்களைப் பாரும்" என்றேன். அவர் அவற்றைப் பார்த்து விட்டு, "இவை போலி வைரங்கள். மூன்று

ரூபாயும் பெறு'' என்றார். உடனே நான் இவ்விஷயத்தைப்பற்றி உம்மிடம் கலந்து யோசிக்கலாம் என்று அவசரமாக இங்கு வந்து சேர்ந்தேன்.

துப்பர்.—வைரங்களைத் தங்கள் மனைவியிடம் கொடுக்குமாறு நீங்கள் அனுப்பிய காரியஸ்தன் நம்பத் தகுந்தவனா?

ஜமீன்.—அவன் எங்கள் பங்களாவுக்கு வந்து பத்து வருஷங்களுக்கு மேலாகின்றன. அவனை விட நம்பிக்கையுள்ளவர்கள் வேறு இல்லை. வரி வசூல் பணத்தை யெல்லாம் அநேகமாய் அவனே வசூலிப்பதும் கஜானாவில் சேர்ப்பிப்பதும் வழக்கம். நான் கையெழுத்து மட்டும் இட்டு வந்தேன். வீட்டில் கண்டபடி சிதறிக் கிடக்கும் விலையுயர்ந்த சமான்களைப் பற்றி அவனே கவனித்துக் கொள்வான்.

சீதா.—நீங்கள் வைரங்கள் வாங்கும் போது வேறு எவராவது அருகில் இருந்ததுண்டா?

ஜமீன்.—எனது நண்பரும் டிரைவருமே இருந்தனர்.

சீதா.—டிரைவரைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?

ஜமீன்.—அவன் மிகவும் நல்லவனே. அவனுக்கும் வைரங்களுக்கும் சம்பந்தமே இல்லை. பாவமோரிடம் பழியோரிடமா?

துபபர்.—தங்கள் காரியஸ்தர்மீதும் சந்தேகமில்லை; டிரைவரும் இதில் சம்பந்தப் பட்டிருக்க மாட்டான்; பின் யாரென்று தான் நினைக்கின்றீர்கள்?

ஜமீன்.—கடைக்காரர் எங்களை மோசம் பண்ணி யிருக்க வேண்டும். ஒரு நாள் ஒரு பஞ்சாபி கஸ்தூரி விற்கக்கொண்டு வந்திருந்தான். பரீக்ஷை பார்த்ததில் அது நல்ல கஸ்தூரியாக இருந்தது. விலை சரசமாய் இருப்பதை உத்தேசித்து நான் மூன்று பலம் வாங்கினேன். பின்னொரு நாள் எடுத்துச் சோதிக்கையில் அது சுத்தமான கஸ்தூரி அல்லவென்றும் குப்பையில் கொட்டக்கூட உதவாததென்றும் வைத்தியர் கூறினார்கள். இவ்வித மோசடிகள் உலகில் சகஜமாக நடை பெறுகின்றன.

துப்பர்.—ஆம்; கஸ்தூரி விற்பதாகச் சிலர் மக்களை ஏமாற்றி விடுகிறார்கள். நல்ல கஸ்தூரியைச் சீசாவின் மேல் மூடியிலும் அள்ளைப் புறங்களிலும் ஒட்டிக் கலப்படமானதை அந்தச் சீசாவில் போட்டுக் கொண்டு வருகிறார்கள். பரீக்ஷை பார்க்க விரும்புகிறவர்களுக்கு மேல் மூடியில் உள்ளதைக் கொடுத்து ஏமாற்றி விடுகிறார்கள். நீங்கள் வாங்கும்போதே அந்தக் கஸ்தூரி போலிக் கஸ்தூரியாக இருந்திருக்கும். வைரக்கற்கள் விஷயமாய் நீர் கொண்டிருப்

பது தப்பான அபிப்பிராயமாகும். நீங்கள் வாங்கினவை வைரங்களே. பிறகு எவரோ ஒருவர் வைரங்களை எடுத்துக்கொண்டு அந்த இடத்தில் போலி வைரங்களை வைத்திருக்கவேண்டும். அந்தப் போலிக் கற்கள் தற்சமயம் இங்கிருக்கின்றனவா?''

ஜமீன்தார், ''ஆம், கொண்டுவந்திருக்கிறேன்'' என்று தம் சட்டைப் பைக்குள் காகிதத்தில் பொதிந்து வைத்திருந்த அவற்றை எடுத்துத் துப்பரிடம் கொடுத்தார். பிறகு மூவரும் விளக்கண்டை சென்று அவற்றைப் பரீக்ஷித்தனர். ''நேற்றிரவு விளக்கு வெளிச்சத்தில் சோபித்ததுபோல் இன்று இவை சோபிக்கின்றனவா?'' என்றார் துப்பர். ஜமீன்தார் சற்றுக் கவனமாகப் பார்த்துவிட்டு, ''இல்லையே!'' என்றார். அதன்மேல் துப்பர் பழையபடி முற்றத்திற்கு வந்தார். மற்ற இருவரும் அவரைப் பின்தொடர்ந்தனர்.

துப்பர்.—நல்லது; உங்கள் வைரங்கள் திருட்டுப் போயிருக்கின்றன. இரவில் நீங்கள் தூங்கும்போது உளவை யறிந்துள்ள எவரோ ஒருவர் அவற்றைக் களவாடி யிருக்கவேண்டும். யார் எவ்விதத்தில் களவாடினர் என்பதுதான் கண்டுபிடிக்கவேண்டிய விஷயம். நான் வைரங்கள் வைக்கப்பட்டிருந்த அறையைச் சோதிக்கவேண்டும். பிறகே எல்லாவற்றையும் யோசிக்கமுடியும்.

சீதா.—தாங்கள் வைரங்களை வாங்கியபின் நேராக ஊருக்கு வந்துவிட்டீர்களா? தங்கள் டிரைவர் தங்களைச் சிறிது நேரம் பிரிந்ததுண்டா?

ஜமீன்.—சென்னை, டிரைவருக்கு மாமனார் வீடு. வைரங்கள் வாங்கியபின் நான் வேறு கடையில் ஜவுளி வாங்கிக்கொண்டிருந்தேன். அதற்குள், தன் மாமனார் வீட்டுக்குப் போய்வருவதாகச் சொல்லிவிட்டு டிரைவர் காரை எடுத்துக்கொண்டு போய்விட்டுத் திரும்பினான். பிறகு ஊர் வந்து சேர்ந்தோம்.

துப்பர்.—டிரைவர் சென்னையில் உங்களை எவ்வளவு நேரம் பிரிந்திருந்தான் என்று சொல்லமுடியுமோ?

ஜமீன்.—எல்லாம் ஒரு மணி யிருக்கும்.

சீதா.—அவனது மாமனார் வீட்டிற்கும் உங்களிடம் அவன் விடைபெற்றுச் சென்றவிடத்திற்கும் அதிக தூரமோ?

ஜமீன்.—இல்லை; ஒரு பர்லாங்குக்குள்தான் இருக்கவேண்டும்.

துப்பர்.—அவன் மாமனார் வீட்டு விலாசம் உங்களுக்குத் தெரிந்தால் கொடுக்கின்றீர்களா?

ஜமீன்தார் அப்படியே எழுதிக் கொடுத்தபிறகு துப்பர், அவர் டிரைவரைப் பிரிந்த இடத்தையும் கேட்டுக் குறித்துக்கொண்டார்.

பிறகு வெகு நேரமாய்விட்டபடியால் பிரபுவை மாடி அறையிலே துயில் கொள்ளுமாறு செய்துவிட்டுத் துப்பரும் சீதாவும் கீழே இறங்கி வந்தார்கள். சிங்காரம் சீதாவைப் பார்த்து, "காரியஸ் தனைப்பற்றி உன் அபிப்பிராயம் என்ன?" என்றார். சீதா அவனைப் பற்றித் தனக்கு ஒன்றும் தெரியாதென்றும், டிரைவர் இத்திருட்டில் சம்பந்தப்பட்டிருப்பதாகத் தான் நினைப்பதாகவும் கூறினாள்.

"உனக்கு அவன்மேல் எதனால் சந்தேகம் ஏற்பட்டது?" என்று சிங்காரம் கேட்டபோது சீதா கீழ் வருமாறு பதில் கூறினாள்:

"டிரைவரின் முகக்குறியினால் அவன் அயோக்கியன் என்பதை உணர்ந்துகொண்டேன். உங்களுக்கும் ஜமீன்தாருக்கும் நடந்த சம்பாஷணையை அறிந்துகொள்ள ஆவலுடையவனாய்க் காணப்பட் டான். ஜமீன்தார் உங்களிடம் எதைப்பற்றிப் பேசிக்கொண்டிருந் தார்கள் என்று மத்தியானம் அவன் என்னைக் கேட்டான். நம் அப்பாய் ஒரு விஷயம் சொன்னான். அதையும் கேட்டபிறகு எனக்கு அவன்மேல் உள்ள சந்தேகம் அதிகமாயிற்று."

சிங்காரம்.—அப்பாய் சொன்னது என்ன?

சீதா.—காலையில் பிரபு உள்ளே வந்ததும் டிரைவரும் உள்ளே வர இஷ்டப்பட்டு நம் அப்பாயைக் கேட்டானாம். அவன், "எஜ மான் உத்தரவு அப்படி இல்லை" என்று சொல்லிவிட்டானாம்.

சிங்காரம்.—"நல்லது; எதற்கும் நாளைக்கு யோசனை செய் கிறேன். நீ சொன்னவற்றையும் குறித்துக்கொள்ளுகிறேன்" என்று சொல்லிவிட்டுச் சீதாவை அவள் படுக்கையறைக்கு அனுப்பிவிட்டுத் தாம் படுக்கச் சென்றார்.

* * *

மறுநாள் அதிகாலையில் சிங்காரமும் ஜமீன்தாரும் பொன்னே ரிக்குப் புறப்பட்டுச் சென்றனர். அங்கே ஜமீன்தாரின் மனைவி முதலானவர்கள் இவர்கள் வரவை அதிக ஆவலோடு எதிர்நோக்கிய வர்களாய் இருந்தனர். இவர்கள் 'கார்' விட்டிறங்கினதும் அங் கிருந்தவர்கள், "துப்புக் கிடைத்துவிட்டது" என்றனர். ஜமீன் தார் அதிசயத்துடன், "வைரங்கள் அகப்பட்டனவா?" என்றார். "உங்கள் காரியஸ்தர்தாம் எடுத்திருக்கிறாராம்; அம்மா சொல்லு கிறார்" என்று ஒருவன் கூறினான். பிறகு துப்பரும் ஜமீன்தாரும் பங்களாவிற்குள் பிரவேசித்தனர். ஜமீன்தார் தம் மனைவியை அழைத்து "என்ன சங்கதி?" என்றார். அதற்கு அவள், "நான் உங்களுக்கு முன்பு ஒரு விஷயம் சொல்ல மறந்துவிட்டேன். நீங்கள் தூங்கிவிட்ட பிறகு நெடுநேரம் எனக்குத் தூக்கமில்லை. இங்கும்

அங்குமாக நடந்துகொண்டிருக்கையில் இந்த அறையில் ஒரு தேளைக் கண்டேன். உடனே அடிக்கப் பயந்தேன். சென்னையிலிருந்து வந்த களைப்பினால் தூங்கும் உங்களை எழுப்ப விரும்பவில்லை. வெளித்திண்ணையில் படுத்திருந்த நம் காரியஸ்தனைக் கூப்பிட்டேன். அவன் மாடிக்கு வந்தான். அதற்குள் தேளைக் காணோம். இருவருமாகத் தேடினோம். கடைசியாக அவன் தேளைக் கண்டுபிடித்து அடித்துவிட்டுப் போய்விட்டான். நான் மறுபடியும் கதவைச் சாத்தித் தாளிட்டுக்கொண்டு வந்துவிட்டேன். அவன் நேற்றெல்லாம் பங்களாவுக்கு வரவில்லை. வீட்டில் போய் விசாரித்ததில் அவசரக் காரியமாக எங்கேயோ போகப்போவதாகவும் தங்களிடம் ரஜா பெற்றுக்கொண்டதாகவும் கூறிவிட்டுச் சென்றானாம். நமது ஐயர் சிலநாளுக்கு முன் அவனிடம் சில போலி வைரங்களைக் கண்டதுண்டாம்'' என்றனள்.

துப்பர், "ஆனால் அக்காரியஸ்தர் இன்னும் வரவில்லையா? பார்த்து வரும்படி ஆளை அனுப்புங்கள்'' என்றார். பிரபு காரியஸ்தனைத் தேடுமாறு ஆட்களைப் பக்கத்து ஊர்களுக்கு அனுப்பிவிட்டு வைரப்பரீக்ஷை நிபுணரை வரவழைத்து, "ஐயா எங்கள் காரியஸ்தனிடம் தாங்கள் போலி வைரங்களைக் கண்டது உண்மைதானே?'' என்றார். அவர், "ஆம், கண்டதுண்டு. நேற்று இரண்டு போலி வைரங்களைத் தாங்கள் எனக்குக் காட்டும்போது வைரங்கள் திருட்டுப்போயினவென்று சொல்லியிருந்தால் அப்பொழுதே சொல்லியிருப்பேனே'' என்றார். அவனிடம் போலி வைரங்கள் பல இருந்ததைத் தாங்களும் பார்த்ததாகப் பலர் கூறினர். பக்கத்து ஊர்களுக்குக் காரியஸ்தனைத் தேடச் சென்றவர்கள் வந்து ஆள் அகப்படவில்லையென்று கூறிவிட்டனர். துப்பருக்கு ஒன்றும் தோன்றவில்லை. ஜமீன்தார் அவரைப் பார்த்து, "தாங்கள் அந்தக் காரியஸ்தனை முதலில் கண்டுபிடிக்குமாறு வேண்டுகிறேன்'' என்றார். அவர் ஆழ்ந்த யோசனையில் இருந்ததால் அவ்வுரையைச் செவியில் ஏற்றுக் கொள்ளவில்லை. அன்று பிற்பகல் சிங்காரம், ஜமீன்தாரின் படுக்கையறையை நன்கு பரிசோதித்தார். வைரங்கள் வைக்கப்பட்டிருந்த இடத்தைக் கவனித்துப் பார்த்தார். பிரபு தூங்கி விழித்தபிறகு மாடியின் கதவு தாளிடப்பட்டிருந்ததா என்று கேட்டுத் தெரிந்து கொண்டார்.

'திருடன் வந்திருந்தால் எப்படி வந்திருக்கக்கூடும்?' என்று யோசித்தார். சிறிதுநேரங் கழித்து, "சரி, உட்புறம் பார்க்க வேண்டியவைகளைப் பார்த்துவிட்டேன்'' என்றார். இருவரும் மாடியிலிருந்து இறங்கிவந்தனர். பிறகு துப்பர் பங்களாவின்

வெளிப்புறத்தே நான்கு பக்கங்களையும் நன்றாகப் பார்வையிட்டுச் சில விஷயங்களைக் குறித்துக்கொண்டார். அவர் வெளிப்புறத்தே சோதனை செய்வதை ஒரு சிறுவன் உற்று நோக்குவதை அறியாதவர்போல் இருந்து கவனித்தார். பின்பு, அந்தச் சிறுவன் யார் என்று பிறரை விசாரித்துத் தெரிந்துகொண்டார். துப்பர் காரியஸ்தனைக் கண்டுபிடிக்கவேண்டிய விஷயமாகச் சில அடையாளங்களைக் கேட்டுத் தெரிந்துகொண்டார். பிறகு இரண்டு நாளில் வருவதாய் ஜமீன்தாரிடம் விடைபெற்றுக்கொண்டு சென்றார்.

* * *

மறுமுறை அவர் பொன்னேரி பங்களாவுக்கு வந்தபோது அவர் முகம் தெளிவடைந்திருந்தது. பிரபு அவரைக் கண்டதும், "துப்புக் கிடைத்துவிட்டாற்போல் தோன்றுகிறதே!'' என்றார். சிங்காரம் அதற்கு மறுமொழி கூறாமல், "உங்கள் டிரைவரை நாம் தனிமையாகச் சந்தித்துப் பேசவேண்டும்; இங்கே வரவழைக்க முடியுமோ? வேண்டியிருந்தால் அவனை மிரட்டிச் சில விஷயங்களை அவனிடமிருந்து கிரகிக்க முடியுமா?'' என்றார். பிரபு, "இந்த ஊர் நம் ராஜ்ஜியம்; நாம் வைத்ததே சட்டம். அவனை என்ன செய்தாலும் அவனுக்குச் சார்பாகப் பரிந்து பேசுகிறவர்கள் இருக்கமாட்டார்கள். உங்கள் இஷ்டம்போல் செய்யலாம்'' என்று சொல்லி டிரைவரை அங்கு வரவழைத்தார்.

டிரைவர் வந்ததும் சிங்காரம் அவனைப் பார்த்து, "அப்பா, வைரங்கள் போனவழி உனக்குத் தெரியுமாமே; ஒன்றையும் மறைக்காமல் கூறிவிடு. இல்லாவிட்டால் கடுமையான தண்டனைக்கு உள்ளாவாய்'' என்றார்.

அவன், வைரங்கள் களவுபோன விஷயம் தனக்கு ஒன்றும் தெரியாதென்றான். பிறகு துப்பர் அவனைச் சில கேள்விகள் கேட்கலானார்:

"காரியஸ்தர் வைரங்கள் திருட்டுப்போன அன்று, தாம் அவசர காரியமாக அரக்கோணம் போய்வருவதாகவும், மூன்று நாள் ரஜா வேண்டுமென்று பிரபுவிடம் சொல்லிவிடும்படியாகவும் உன்னிடம் கூறியதுண்டா?''

"என்னிடம் கூறவேயில்லை. காரியஸ்தர் என்னிடம் அதிகமாகப் பேசுவதே யில்லை.''

"அது போகட்டும்; வைரங்கள் வாங்கிய அன்று நீ உன் மாமனார் வீட்டில் சுமார் எத்தனை நிமிஷம் பேசிக்கொண்டிருந்தாய்?''

"அரை மணி நேரம் இருக்கும்.''

"மாமனர் வீட்டில் இல்லை என்று தெரிந்ததும் ஐந்து நிமிஷத்தில் வந்துவிடவில்லையா ?"

"அரை மணி நேரம் பேசியது உண்மை."

"அது இருக்கட்டும்; நீ அன்று இரண்டு போலிக் கற்களை வாங்கினய் அல்லவா ?"

"ஐயோ! ஒரு பாவமும் அறியேனே! தெய்வசாக்ஷியாய்ச் சொல்லுகிறேன்."

"முழுப்பூஷணிக் காயைச் சோற்றில் மறைக்காதே; உன் சங்கதி முழுவதும் வெளியாய் விட்டது!"

"தாங்கள் என்னை என்ன வேண்டுமானலும் செய்து கொள்ளுங்கள். நான் போலி வைரங்களை வாங்கவேயில்லை."

"அது சரி, நீ சர்க்கசில் சேர்ந்திருந்து மானேஜர் தள்ளிவிட ஓடிவந்து விட்டவன் தானே ?"

(டிரைவர் திடுக்கிட்டுப் போனன்) "மானேஜர் வீண் பழி போட்டு என்னைத் துரத்தி விட்டார்."

"உன் பையனைச் சில நாள் வேறொரு சர்க்கஸில் சேர்த்திருந்ததுண்டோ ?"

"உண்டு."

"பின்பு ஏன் மறுபடியும் அவனை வரவழைத்துக் கொண்டாய் ?"

"என் மனைவி அவனைப் பிரிந்திருக்கச் சம்மதிக்க வில்லை."

"அப்படியா, நல்லது; இதோ இந்தக் காகிதத்தில் நான் சொல்லுகிறபடி எழுது; இல்லா விட்டால் கையை ஒடித்து விடுவேன்."

"என்னவென்று எழுதச் சொல்லுகிறீர்கள் ?"

"அதைப் பற்றி உனக்குச் சொல்லவேண்டுவதில்லை. சொல்லச் சொல்ல எழுதி வா" என்று காகிதத்தை நீட்டினர்.

வேறு வழியில்லாமையால் துப்பர் கூறியவாறு அவன் எழுதி முடித்தான். பிறகு சிங்காரம், "சரி, இனி நீ அப்படி இரு" என்று சொல்லி விட்டு ஜமீன்தாரைப் பார்த்து, "இவனுடைய மகனை வரவழையுங்கள்" என்றார். அதற்கு டிரைவர், "நானே அழைத்து வருகிறேனே" என்று பதில் கூறினன். துப்பர், "அயோக்கியனே, பேசாமலிரு" என்று அவனைக் கடிந்து கூறி ஜமீன்தாரைப்பார்த்து, "இந்தப் பிணத்தைக் கொண்டு போய் ஓர் அறையில் அடைத்து வைத்து விட்டுப் பின்பு இவன் மகனை வரவழையுங்கள்" என்றார்.

ஜமீன்தார் அப்படியே செய்து விட்டு டிரைவரின் மகனை வரவழைத் தார்.

"பையா ! நீ தான் வைரங்களைத் திருடினாயாமே?"

"இல்லையே ! உங்களுக்கு யார் சொன்னார்கள் ?"

"இதோ பார் ; உன் தகப்பன் எழுதிக் கொடுத்திருக்கிறான்" என்று கூறி அந்தக் காகிதத்தை அவன் கையில் கொடுத்தார். அவன் அதைப் படித்துப் பார்த்தான். அதில் கீழ்க்கண்டவாறு எழுதி யிருந்தது:

"பையனே, திருட்டு வேலை என்றைக்கும் ஆபத்தானதே. நான் உண்மையை ஒத்துக் கொண்டு விட்டேன். நீயும் நடந்த வற்றை ஒளியாமல் சொல்லி விடு. எதையாவது மறைத்தால் நம்மை ஜமீன்தார் கெடுத்துவிடுவார்."

பையன் இதை வாசித்ததும் மயங்கி விட்டான். "ஆம், தெரி யாமல் செய்து விட்டேன். இம்முறை மன்னியுங்கள். வைரங்கள் எங்கள் அம்மா தவிட்டுப் பானையில் வைத்திருக்கிறாள். கொண்டு வந்து கொடுத்து விடுகிறேன்" என்று சொல்லிக் கொண்டே அழுதான். பிரபுவுக்கு வந்த சந்தோஷத்துக்கு அளவே இல்லை. "அந்த வைரங்களைக் கொண்டுவா, போ" என்றார். சிங்காரம் அதைத் தடுத்து, "பையா, நீங்கள் வைரங்களைத் திருடிய விதத்தை உங்கள் எஜமானருக்குச் சொல் பார்ப்போம்" என்றார். பிறகு பையன் கீழ்வருமாறு விஸ்தரித்தான்:

"சில நாளுக்கு முன் என் தகப்பனார் சென்னையிலிருந்து வந்த தும் சிறிது நேரங்கழித்து எஜமான் இரண்டு வைரங்கள் வாங்கி வந் திருப்பதாகவும், அவற்றை அபகரித்து விடவேண்டு மென்றும், அதனால் அவை எங்கே வைக்கப்பட்டிருக்கின்றனவென்று என்னைக் கவனித்து வருமாறும் அனுப்பினார். நான் எஜமானிக்கு வேலை செய்ய ஏற்பட்டவன் ; ஆதலால் ஏதாவது வேலையிருக்கிறதா, கூப்பிட்டீர்களோ என்று பல வந்தமாக எஜமானியைக் கேட்க மாடிக்குச் சென்றேன். அப்பொழுது எஜமானி வைரப்பெட் டியைப் பார்த்துக்கொண்டு மேஜைக் கருகில் நின்றார். அவர் என்னைக் கூப்பிடவே இல்லை என்று கூறிவிடத் திரும்பி வந்து விட்டேன். பிறகு இரவு ஒரு மணிக்கு நானும் என் தகப் பனாரும் எழுந்து பங்களாவின் ஒரு புறம் கிடந்த மூங்கிற் குவியலிலிருந்து நீளமான இரண்டு வளைகளை எடுத்து நீளமாகக் கயிற்றினால் இணைத்துக் கட்டினோம். அதன் மேல் என் தகப்ப னார் அவ்வளையை நேராகப் பிடித்து மாடியின் சமீபத்தில் நின்றார்.

நான் சர்க்கஸில் பழகினவன் ஆதலால் வளையின் மூலமாக எளிதில் மாடியை அடைந்தேன். அங்கு எஜமானும் எஜமானியும் தூங்குவதைக்கண்டு மெதுவாக உள்நுழைந்து வைரப் பெட்டியைத் தேடினேன். மேஜையின் மேலேயே அது இருக்கக் கண்டு என் தகப்பனுர் முன்பே என்னிடம் கொடுத்திருந்த இரண்டு போலி வைரங்களை அதில் வைத்து விட்டு அந்த வைரங்களை எடுத்துக்கொண்டு வளை வழியாக இறங்கி வந்து விட்டேன்'' என்ருன்.

பிறகு இருவரும் அவனை அனுப்பி வைரங்களை வாங்கிக் கொண்டனர். ஜமீன்தார் சிங்காரத்தைப் பார்த்து, "ஐயா, உமது ஆற்றலே ஆற்றல்! இவ்வளவையும் எப்படிக் கண்டு பிடித்தீர்கள்? தயை செய்து கூறவேண்டும்'' என்று வேண்டிக்கொண்டார். அதற்குச் சிங்காரம் பின் வருமாறு கூறி முடித்தார்:

"உங்கள் அறையைப் பார்வையிட்டதில் பல விஷயங்களைத் தெரிந்து கொண்டேன். பெருவிரல் பதிவுமைப் பெட்டியைத் தாங்கள் யாது காரணத்தாலோ திறந்து வைத்திருந்தீர்கள். இரவில் திருட வந்த சிறுவன் இருட்டில் வைரப் பெட்டியைத் துழாவுகையில் அறியாமல் தன் கைவிரல்களில் சிலவற்றை அதன்மேல் அழுத்தி யிருந்தான். பெட்டியைத் தேடும்பொழுது இது நேர்ந்திருக்க வேண்டும். வைரப் பெட்டியின் மீதும் அந்த விரல் அடையாளம் இருக்கின்றது. நீங்கள் இன்னும் பார்க்கலாம். பையன் வைரங்களை எடுத்துக் கொண்டு வெளியே வந்து வளையின் பேரிலே ஏறும் சமயத்தில் மாடியின் கைப்பிடி சுவரைத் தன் விரலால் அழுத்தியிருக்கின்ருன். அந்த அடையாளத்தைக் கொண்டு திருடன் இவ்விடத்தில் என்ன செய்திருக்கக்கூடும் என்று ஊகித்தேன். பிறகு பங்களாவின் வெளிப்புறத்தை உற்று நோக்குகையில் மூங்கிற்குவியலில் இரண்டு மூங்கில்கள் முறைபிறழ்ந்து வைக்கப்பட்டிருந்தன. அவற்றில் ஒன்றில் இந்த மையின் அடையாளங்கள் மங்கலாக இருக்கக் கண்டேன். அக்குவியலுக் கருகில் இரண்டு கயிற்றுத் துண்டுகளையும் பார்த்தேன். எனக்கு விஷயம் விளங்கி விட்டது. பிறகு இச்சிறுவன் எதற்காக என்னைக் கவனிக்கின்ருன் என்று எண்ணினேன். விரல் அடையாளங்களும் ஒரு சிறுவன் விரல்களின் பதிவாகவே இருந்தன. டிரைவர்மேல் எனக்கு முன்னரே சந்தேகம் இருந்து வந்தது. அப்பையன் டிரைவரின் மகன் என்பதைக் கேட்டறிந்து கொண்டேன்.

"பிறகு காரியஸ்தர் வீட்டிக்குப் போய்ப் பெண்களை நயமாய் விசாரித்ததில் காரியஸ்தரிடம் போலி வைரங்கள் பல இருப்பது

உண்மை என்றும், ஆனால் அவர் இத்திருட்டில் சம்பந்தப் படவில்லை யென்றும், அவரைக் காப்பாற்ற வேண்டுமென்றும், பாதி இரவில் தந்திவர அவர் ஓர் அவசர காரியத்தை முன்னிட்டு அரக்கோணம் போயிருக்கிறாரென்றும், வைரங்கள் அகப்படுவதற்கு முன் காரியஸ்தர் இருப்பிடம் தெரிந்தால் தாங்கள் அவரைச் சித்திரவதை செய்துவிடக்கூடு மென்றும் கூறினார்கள். பிறகு நான் நேராக அரக்கோணம் சென்று உங்கள் காரியஸ்தரைக் கண்டு விசாரித்ததில் அவர் யோக்கியரென்றும், இத்திருட்டில் அவர் சம்பந்தப்படவில்லை என்றும் தெரிந்து கொண்டேன். காரியஸ்தர் இவ்வூரை விட்டு அரக்கோணம் புறப்படுகையில் தாங்கள் நித்திரை செய்யும் சமயமாதலால் தங்களிடம் சொல்லிவிடும்படி டிரைவரிடம் சொல்லிச் சென்றாராம். எனக்கு அந்தத் தந்தியையும் காட்டினார்.

"பின்பு நேராகச் சென்னை சென்றேன். டிரைவரின் மாமனார் வீட்டில் போய் டிரைவரைப் பற்றிச் சாதுரியமாக விசாரித்து அவன் சர்க்கஸில் இருந்த பழைய வரலாற்றைக் கேட்டறிந்து கொண்டதோடு தாங்கள் வைரம்வாங்கிய நாள் அவன் அவர்கள் வீட்டில் ஐந்து நிமிஷங்களே தங்கி வந்ததையும் தெரிந்து கொண்டேன். அவன் வேலை செய்துவந்த சர்க்கஸ் மானேஜரைக் கண்டு பிடித்து விசாரித்ததில் அவன் பிழை செய்ததால் வேலையிலிருந்து தள்ளப்பட்டு இரண்டு வருஷங்கள் ஆயினவென்று தெரிந்து கொண்டேன். அவன் மகனைப் பற்றியும் அப்பொழுது தெரிய வந்தது. இதனால் டிரைவர் தங்களைப் பிரிந்திருந்த ஒரு மணியில் மிகுதி நேரத்தில் வேறுவேலை செய்திருக்க வேண்டுமென ஊகித்துப் போலி வைரங்கள் விற்கும் கடைகளுக் கெல்லாம் சென்று இந்த இரண்டு கற்களையும் காட்டி இவை போன்றவற்றை எவராவது சில தினங்களுக்கு முன் வாங்கியதுண்டோ என்று விசாரித்தேன். ஒரு கடைக்காரர் தாங்கள் வைரம் வாங்கிய தினத்தையும் காலத்தையும் குறிப்பிட்டு 'ஒருவர் மோட்டாரில் வந்து இறங்கி இரண்டு ரூபாய்க்கு இவற்றை வாங்கிச் சென்றார்' என்று கூறக்கேட்டு வாங்கினவர் அடையாளத்தைக் கேட்டேன். அவர் சொன்ன அடையாளத்தால் போலி வைரங்களை வாங்கினவன் இந்த டிரைவரே என்ற தீர்மானத்துக்கு வந்தேன். இவ்வளவு தான் நான் எடுத்துக் கொண்ட சிரமம். மற்றவற்றை நீங்களே அறிவீர்களல்லவா" என்றார்.

டிரைவரின் கதி என்னவாயிற்றென்பதை வாசகர்களே யூகித்துக்கொள்ளலாம். அவன் மகன் மட்டும் வேலூர் ஜயில் பள்ளிக்கு

அனுப்பப்பட்டான். சிங்காரத்தின் கீர்த்தி நாடெங்கும் பரவிற்று. பிரபு அளவிறந்த ஆனந்தமடைந்தார் என்பதைச் சொல்லவும் வேண்டுமா? இப்பொழுது அந்த வைரங்கள் ஜமீன்தாரின் மனைவியின் உடலில் மிளிர்கின்றன.




# பிரெட் வேலை

வி. விசாலாக்ஷி அம்மாள்

'ஒவ்வொரு மனிதனுக்கும், தனக்குச் சகஜமாக ஏற்பட்டிருக்கும் அலுவல்களைத் தவிர, மனத்திற்குக் களிப்பை அளித்துப் பொழுதுபோக்காகச் செய்யக்கூடிய வேலை ஒன்று அத்தியாவசியமாக வேண்டும்' என்று ஓர் ஆங்கில நிபுணர் கூறியுள்ளார். 'அவன் அவன் 'ஹாபி'—அதாவது மனத்திற்கு இனிய பொழுதுபோக்கு—அவனவனுக்கு' என்று கூறுவதுமுண்டு. தோட்டம் போடுதல், தபால் முத்திரைகளைச் சேகரித்தல், தைத்தல், சித்திரம் வரைதல், இவைபோன்ற பல பொழுதுபோக்கு வேலைகள் இருக்கின்றன. இவைகளுள் ப்ரெட் வேலையும் ஒன்று.

தையல், 'லேஸ்' போடுதல், பூணூல் வேலை முதலிய இவைகளைப்போல் ப்ரெட்-வேலையும் சிங்கார வித்தையைச் சார்ந்ததே. இந்த வேலையைச் செய்வதால் மனத்திற்கு இஷ்டமான காரியத்தைச் செய்வதுடன் வீட்டில் பயன்படக்கூடிய பல சாமான்களைத் தயாரிக்கலாம். ப்ரெட் வேலை செய்வதற்கு அவசியமான கருவிகள் அப்படியே பெட்டியாக விற்கப்படுகின்றன. இவை சாதாரணமாக மூன்று ரூபாய்களிலிருந்து பன்னிரண்டு ரூபாய்கள்வரையில், வாங்கும் இடத்திற்கும் பொருளின் நயத்திற்கும் தக்கபடி விலை மதிக்கப்படுகின்றன. சுத்தி, ரம்பம், துளை செய்யும் ஆயுதம், உப்புத்தாள் வைத்த ஒரு கருவி, குறிப்புப் படங்கள் எழுதிய கடிதங்கள், இவை எல்லாம் பெட்டியில் இருக்கும். ப்ரெட் வேலை செய்வதற்கு என்று தயாரிக்கப்பட்ட மரப்பலகைகளும் விற்கப்படுகின்றன. ப்ரெட் வேலையில் தபால்பெட்டி, தட்டு, கண்ணாடி படம் இவைகள் மாட்டச் சட்டம், பூஞ்ஜாடிகள் வைக்க 'ஸ்டாண்டு', சாவி

மாட்டச் சட்டம், பேனா மைக்கூடு வைக்கப் பெட்டி முதலிய பல சாமான்களைத் தயாரிக்கலாம்.

ப்ரெட் வேலை செய்வதற்குக் கைவன்மை அதிகமாக வேண்டிய தில்லை. மரம் மெல்லியதாக இருப்பதாலும், ஆயுதங்கள் கூராக இருப்பதாலும் சுலபமாக மரத்தை அறுக்கலாம். முதலில் மரத் தின் பின்பக்கத்தில் எண்ணெய்க்கடுதாசியின் உதவியைக்கொண்டு இஷ்டமான குறிப்புப் படத்தை வரைந்துவிடவேண்டும். பிறகு துளை செய்யும் கருவி, ரம்பம் இவைகளின் உதவியால் படத்தை அறுத்தெடுக்கவேண்டும். உப்புக் கடுதாசி வைத்த கருவியால் ஓரங் கள் மழமழப்பாக இருக்கும்படி தேய்க்கவேண்டும். முதலில் சிறி யனவும் அதிகச் சித்திரவேலைகள் இல்லாதனவுமாகிய சாமான்களைச் செய்து கைப்பழக்கம் ஏற்பட்டுவிட்டால், பிறகு பெரியனவும் அதிகச் சிங்காரவேலைகள் உள்ளனவுமாகிய சாமான்களைச் செய்ய லாம். ஓய்வு நேரங்களில் இந்தச் சாமான்களைத் தயாரித்து விலைக்கு விற்று லாபமும் சம்பாதிக்கலாம். லக்ஷ்மி, ஸரஸ்வதிபோன்ற படங் களை வாங்கிப் பலகையில் ஒட்டிப் பிறகு படத்தில் வளைவுகளுக்கு ஏற்ப அறுத்துக் 'காலண்டர்கள்' தயாரிக்கலாம். செல்வவந்தர்கள் 'நான் செய்த சாமான்' என்று வீட்டில் அலங்காரமாக வைத்துப் பெருமை கூறிக்கொள்ளலாம். இல்லையேல் பிரம்பு வேலை செய்து விற்பதுபோல் இதை விற்று ஏதோ சம்பாதிக்கலாம். குறிப்புப் படங்கள் விலைக்குக் கிடைப்பதால் சித்திரம் வரையத் தெரியவேண் டிய அவசியமும் இல்லை. மாதர்கள் வீட்டில் செய்யக்கூடிய சிங்கார வேலைகளில் இதுவும் ஒன்று.




# இரண்டு குயவர்கள்

## (சேரி வாணிஜ ஜாதகம்)

### எஸ். வையாபுரிப் பிள்ளை

முன்னொரு காலத்திலே சேரி ராஜ்யத்திலே இரண்டு குயவர்கள் மண்பானை வியாபாரஞ் செய்து வந்தார்கள். இவர்களில் ஒருவன் நல்ல குணமும் நல்ல ஒழுக்கமும் உடையவன்; எல்லாரும் குணசீலனென்று இவனைக் கொண்டாடினார்கள். மற்றொருவன் பேராசை பிடித்தவன். இருவரும் 'அந்தபுரம்' என்னும் நகரத்திற்குப் பாண்டபாத்திரங்கள் விற்பதற்காகச் சென்றார்கள். அங்கே போய்ச் சேர்ந்ததும் நகர வீதிகளைப் பங்கிட்டுக்கொண்டு, ஒவ்வொருவனும் தனக்கு ஏற்பட்ட வீதிகள் வழியாகச் சென்று விற்பனை செய்யத் தொடங்கினான்.

வாழ்ந்துகெட்ட குடும்பம் ஒன்று அந்நகரிலே இருந்தது. ஒரு காலத்தில் அந்தக் குடும்பத்தலைவன் பேர்பெற்ற வியாபாரியாகவும் பெருஞ்செல்வச் சீமானாகவும் இருந்தான். ஆனால் இக்கதை நடந்த காலத்தில் அவனுடைய சகோதரர்கள் மக்கள் முதலிய எல்லாரும் இறந்துபோய்விட்டார்கள்; அவன் செல்வமும் அடியோடு அழிந்துவிட்டது. இக் குடும்பத்தில் தரித்திரத்தை அனுபவிப்பதற்கென்று இப்போது மிஞ்சியவர்கள் ஒரு சிறுபெண்ணும் அவளுடைய பாட்டியும் தான். அன்றாடம் கூலிவேலை செய்து இவர்கள் சீவனஞ்செய்து வந்தார்கள். இவர்கள் வீட்டில் குடும்பத் தலைவனான சீமான் உணவுண்டு வந்த தங்கத்தாலமொன்று இருந்தது. அதனைச் சட்டிபானைக்களுக் கிடையே போட்டு வைத்திருந்தார்கள். நெடுங்காலமாக உபயோகத்தில் இல்லாததால், அதில் அழுக்குப் படிந்து கரியுருண்டு போயிருந்தது. வீட்டிலுள்ள கிழப் பாட்டிக்குக்கூட அது தங்கமென்று தெரியாமற் போயிற்று.

இவர்கள் வீட்டினருகே பேராசைக் குயவன், "சட்டிபானை வேணுமோ சட்டிபானை?" என்று கூவிக்கொண்டு போனான். வீட்டுக்குள்ளிருந்த சிறுபெண் ஆவலோடு வெளியே வந்து பார்த்துத் தன் பாட்டியிடம் போய்த் தனக்கு ஏதாவது விளையாட்டுப் பாத்திரம் வாங்கிக்கொடுக்கும்படி கேட்டாள்.

"நாம் ஏழைகள்; எதைக் கொடுத்துப் பாத்திரம் வாங்குவது?"

"ஏன், பாட்டி! இந்தத் தாலம் இருக்கிறது. இதனுல் நமக்கு ஒரு லாபமும் இல்லே. இதைக் கொடுத்து வாங்கலாமே."

கிழவி, வியாபாரியை உள்ளே வரும்படி செய்து, அவனிடம் தாலத்தைக் கொடுத்து, "இதை எடுத்துக்கொண்டு, இதற்குப் பதிலாக ஏதாவது விளேயாட்டுப் பாத்திரங்கள் இந்தக் குழந்தைக்குக் கொடு" என்று சொன்னுள்.

வியாபாரி தாலத்தைக் கையிலெடுத்து அதைத் திருப்பித் திருப்பிப் பார்த்தான். தங்கமோ என்று சந்தேகங் கொண்டான். அதைத் தன் கையிலிருந்த ஆணியால் கீச்சி நல்ல தங்கமென்று உறுதியாய்த் தெரிந்துகொண்டான். பிற்பாடு பதிலுக்கு ஒன்றுங் கொடாமலே தாலத்தை அடித்துக்கொண்டு போய்விடலாமென்று எண்ணி, "இது என்ன பெறும்? அரைக் காசுகூடப் பெருதே" என்று சொல்லித் தாலத்தைக் கீழே எறிந்துவிட்டுப் போய்விட்டான். சிறிது நேரங் கழித்துக் குணசீலனுன குயவன், "சட்டிபானே வேணுமோ சட்டி பானே?" என்று கூவிக்கொண்டு இந்த வீட்டருகே வந்தான். அப்போதும் அந்தச் சிறுபெண் வெளியே போய்ப் பார்த்துவிட்டுத் தன் பாட்டியிடம் பாத்திரம் வாங்கிக்கொடுக்கும்படி சொன்னுள். கிழவி, "என் கண்ணே! முதலில் வந்தவன் தாலத்தைக் கீழே எறிந்துவிட்டுத் திரும்பிக்கூடப் பாராமற் போய்விட்டான். கொடுப்பதற்கு வேறே என்ன நம்மிடம் இருக்கிறது?" என்று சொல்லி வருத்தப்பட்டாள்.

"பாட்டி! அவன் கடுமையாகப் பேசுகிறவன். இவன் அப்படிப் பட்டவனல்லவென்று தோன்றுகிறது. இவனிடத்தில் கடுமை யில்லே. குளிர்ந்த முகம். அநேகமாய் இவன் தாலத்தை எடுத்துக் கொள்ளுவான்."

"அப்படியானுல், கூப்பிடு."

அவன் வீட்டுக்குள் வந்ததும், தாலத்தை அவன் கையில் கொடுத்தார்கள். அது நல்ல தங்கமென்று தெரிந்து, "அம்மா இந்தத் தாலம் நூருயிரம் பொன் பெறும். இதை வாங்குவதற்கு என் கையிற் பொருளில்லே" என்ருன்.

"ஐயா! உமக்கு முன்னுல் இங்கே வந்த வியாபாரி அரைக் காசு கூட இது பெருதென்று சொல்லித் தரையில் எறிந்து விட்டு விரைவாய்ப் போய்விட்டார். நல்ல குணமுள்ள நீர் உமது கையினுல் தொட்ட புண்ணியத்தினுலேதான் இந்தத் தாலம் தங்கமாக மாறியிருக்கவேண்டும். எங்களுக்கு ஏதாவது கொடுத்துவிட்டு இதை நீரே எடுத்துக்கொண்டு போம்."

குணசிலனிடத்தில் ஐந்நூறு பொன் காசும் ஐந்நூறு பொன் காசு பெறக்கூடிய சாமான்களும் இருந்தன. இவ்வளவையும் அவர்கள் கையிற் கொடுத்து, "என் கையிருப்பெல்லாம் இந்தத் தராசும் பையும் எட்டுப் பொன் காசும்தான். இவைகள் எனக்கு இருக்கட்டும். என்னிடமிருந்த மற்றெல்லாப் பொருளும் உங்களுடையதே" என்று சொன்னான். பிற்பாடு தாலத்தை எடுத்துக்கொண்டு அங்கிருந்து விடைபெற்று மிக்க வேகமாகத் தன் ஊரை நோக்கி நடந்தான். வழியில் குறுக்காக ஓடிக்கொண்டிருந்த ஆற்றின் அருகில் வந்து சேர்ந்ததும், அங்குள்ள படகுக்காரனிடம் எட்டுப் பொன் காசுகளையும் கொடுத்துப் படகில் ஏறிக்கொண்டு விரைவாகக் கடந்து செல்லலானான்.

இதற்கு மத்தியில் பேராசைக்காரனான குயவன் பாட்டியும் பேத்தியும் இருக்கும் வீட்டிற்கு மறுபடியும் வந்து, "ஏதாவது கொடுத்துத் தொலைக்கிறேன். அந்தத் தாலத்தைக் கொண்டுவா' என்று கூறினான். கிழவிக்குக் கோபம் வந்துவிட்டது. "அது தங்கத்தாலம்; நூறாயிரம் பொன் பெறக்கூடியது; அரைக் காசு கூடப் பெறாதென்று சொல்லிவிட்டாயே! யோக்கியனான வேறொரு வியாபாரி வந்து ஆயிரம் பொன் கொடுத்து அதைப் பெற்றுக் கொண்டு போய்விட்டான்" என்று எரிந்து கூறினாள்.

பேராசைக்காரன், "பறிபோய் விட்டதே! நூறாயிரம் பொன் பெறுமான தாலம் பறிபோய்விட்டதே!" என்று கதறினான். மனம் வெடிக்கும்படியான துக்கம் அவனுக்கு உண்டாயிற்று; தன்னை மறந்து பைத்தியம் பிடித்தவன்போல ஆகிவிட்டான். தன் கையிலிருந்த பணத்தையும் சாமான்களையும் வீட்டு வாசலில் விட்டெறிந்தான். தன் வேட்டியைக் கிழித்தெறிந்தான். தராசுக் கோலை ஆயுதமாக எடுத்துக்கொண்டு குணசிலனைத் தேடி ஓடினான். ஆற்றங்கரையருகில் வந்து சேர்ந்ததும், அவன் படகிலேறிக் கடந்து செல்வதைக் கண்டான். படகுக்காரனைச் சத்தமிட்டு அழைத்துத் திரும்பிவரும்படி சொன்னான். ஆனால் குணசீலன் அவ்வாறு செய்யக்கூடாதென்று தடுத்துவிட்டான். பேராசைக்காரன் அவன் கடந்து போவதைப் பார்த்துக்கொண்டே நின்றான். துக்கம் பொறுக்க முடியவில்லை. கோபத்தால் உதட்டைக் கடித்தான். உதட்டிலிருந்து இரத்தம் பொங்கி வழிந்தது. வருத்தத்தால் இருதயம் வெடித்துப் போய்விட்டது. குணசீலனிடங்கொண்ட அடங்காச் சினத்தால் அவன் அங்கேயே மடிந்து விழுந்தான்.

குணசிலன் தானதருமங்கள் செய்து தனது நல்வினைக்குரிய நற்கதியை அடைந்தான்.

# சிறுவர் கதைகளும் பாட்டுக்களும்

## பி. என். அப்புஸ்வாமி ஐயர்

ஐரோப்பாக் கண்டத்திலும் ஆங்கிலம் பேசும் நாடுகளிலும் குழந்தைகளுக்குப் புத்தி புகட்டி அவர்களை முன்னேற்றமடையச் செய்யவேண்டிய வழிகளில் மிகவும் சிரத்தையாயும் ஊக்கத்துடனும் மும்மரமாக வேலையானது நடந்துவருகிறது. குழந்தைப் பருவம் விளையாட்டுக்கே உரிய பருவமென்று அந்நாட்டு அறிவாளர்கள் உணர்ந்திருக்கிறார்கள். ஆதலாற் குழந்தைகள் கற்றுக் கொள்ள வேண்டிய விஷயங்களை எல்லாம் அவர்களுக்கு வருத்தமின்றி, விளையாட்டாகவே, கற்றுக் கொடுக்கவேண்டியதுதான் சரியான முறை என்று கருதுகிறார்கள். அந்நோக்கத்துடன் பல வகையாய் முயன்று வருகிறார்கள். குழந்தைகளை அடித்து வளர்ப்பது முற்றிலும் தவறென்று அவர்கள் கூறுகிறார்கள். விளையாட்டாகவே பாடங்களைக் கற்றுக் கொடுக்கும் முறைகளைத் தயார் செய்கிறார்கள். குழந்தைகளுக்கென்று அழகிய படங்கள் நிறைந்த புத்தகங்களைச் சிறந்த அறிவாளர்கள் எளிய நடையில் எழுத முன் வருகிறார்கள். பழையன கழிந்து புதியன புகாத நமது நாட்டில் மட்டிலும் அம் முறைகளும் அவ்வகை இயக்கமும் போதிய அளவில் இப்போது காணப்படவில்லை.

நமது நாட்டில் பண்டைக் காலத்தில் இம்முறைகள் ஓர் அளவு இல்லாமல் இல்லை. அச்சுப் புத்தகங்கள் மலியாத நமது நாட்டிலே வெகு காலமாகக் குழந்தைகளுக்கு அறிவு ஊட்டுவதற்கென்றே சிறு கதைகளும் சிறு பாட்டுக்களும் செய்யப்பட்டுச் சொல்லப் பட்டு வந்து தான் இருந்தன. ஒவ்வொரு வீட்டிலும் உள்ள பாட்டிகள் தங்கள் பேரன் பேர்த்திகளைப் பக்கத்திலோ மடியிலோ வைத்துக்கொண்டு மிகவும் இரசமான குழந்தைக் கதைகளை மிகவும் மெல்லிய குரலில் எளிய நடையில் அவர்களுக்குச் சொல்லுவது நமது நாட்டுப் பழைய வழக்கம். சாப்பிடுகிறோமா சாப்பிட வில்லையா என்பதை மறந்து, தூக்கத்தையும் அருமை விளையாட்டுக்களையும் துஷ்டத்தனத்தையுமே மறந்து, ஒவ்வொரு வார்த்தையையும் தமது முழுக் கவனத்துடனும் கதைப் போக்கை ஒட்டிய ரசத்தைக் கண்ணாடிபோல் காட்டும் முகங்களுடனும் குழந்தைகள் கூர்ந்து கேட்பதை நாம் எல்லோரும் பார்த்திருக்கிறோம். அனுபவித்தும்

இருக்கிறோம். அவ்வாறு நமக்குச் சிறுவயதில் இன்பம் அளித்த சிறு கதைகளும் பாட்டுக்களும் இப்பொழுது நாளுக்கு நாள் மறைந் தொழிந்து வருகின்றன. அவ்வாறு அவை ஒழிந்து போகா வண்ணம் காப்பதன் பொருட்டும், நமது பத்திரிகையைப் படிப்போர் அவற்றைப் படித்தும் சொல்லியும் களிப்படையும் பொருட்டும் அவற்றை நமது பத்திரிகையில் ஒழுங்காக வெளியிடலாமென்று எண்ணியிருக்கிறோம். நமது பத்திரிகையைப் படிக்கும் நண்பர்கள் தமது தமது பிரதேசங்களிலே வழங்கும் கதைகளையும் பாட்டுக்களை யும் நமக்கு எழுதியனுப்பினல் அவற்றை யெல்லாம் ஒழுங்கு படுத்திப் பத்திரிகையில் வெளியிட்டுப் பலர்க்கும் பயன்படும்படி செய்வது எளிதாயிருக்கும்.

இந்த முறையில் நன்குகப் பழகியவரும், 'போக்கிஷபரணி' என்னும் சிறுவர்களுக்குரிய பத்திரிகை ஒன்றை நடத்தி வந்தவரும், சிறுவர் கதைகள் பாட்டுக்கள் நாடகங்கள் முதலியவற்றை எழுதும் ஆற்றல் வாய்ந்தவருமாகிய, நண்பர் ஸ்ரீமான் பி. ஆர். ராஜசூடாமணி அவர்கள் தொகுத்து வைத்துள்ள பழைய பாட்டுக்களும் கதை களும் கலைமகளில் வெளிவரும். இவற்றைத் தவிர, சிறுவர்க்குரிய புதிய நாடகங்கள் கதைகள் பாட்டுக்கள் முதலியவற்றையும் வெளி யிடுவதாக எண்ணியிருக்கிறோம்.




ஆராரோ ஆராரோ
ஆரிரா ராரிரரோ
நீயாரோ நானாரோ
உனைப்பெற்றவர் தாம் ஆராரோ ?

I

பால்வழியத் தொட்டிலிட்டுப்
பவளவடந் தானிசைத்துப்
பால்வண்ணப் பட்டுமிட்டேன்
பசுங்கிளியே கண்வளராய் !

ஆறிரண்டு காவேரி
அதனடுவே சீரங்கம்
கூறுகின்ற தாமரையே
குவிந்துடனே கண்வளராய்!

சிப்பியிலே சிரித்துறங்கும்
தென்கடலின் சிறுமுத்தே
செப்பிலுறும் பாலருந்திச்
செம்மலரே கண்வளராய்!

புதுமலரில் தேனெடுத்துப்
பூசலிடும் வண்டினமே
புதுமலர்கள் வருமளவும்
பொன்வண்டே கண்வளராய்!

வெண்ணிலவு பால்சொரிய
மின்னுமணி கண்சிமிட்ட
வெண்மலரே இதழ்குவித்து
மெல்லணையில் கண்வளராய்!

II

முத்தே பவளமே
முக்கனியே சர்க்கரையே
கொத்து மருக்கொழுந்தே
கோமளமே கண்வளராய்!

சீரார் பசுங்கிளியே
தெவிட்டாத தெள்ளமுதே
பேரார் குலக்கொழுந்தே
பெருமானே கண்வளராய்!

அத்தை அடித்தாளோ
அம்மான் அடித்தாரோ
முத்துக்கண் ணீர் நிறுத்தி
மோகனமே கண்வளராய்!

[சூடாமணி.]

# குழந்தைக் கதை

வேலை என்றால் விழுந்து கிடப்பீர்
சோறு என்றால் வாயைத் திறப்பீர்



கதை கதையாம் காரணமாம்.
காரணத்தில் ஊர்ப்புறமாம்.
ஊர்ப்புறத்தில் ஒரு குப்பைமேடாம்.
குப்பைமேட்டில் கோழிக் குஞ்சுகளாம்.



கோழிக்குஞ்சுகளுக்கு ஒரு பெட்டைக் கோழியாம்.
பெட்டைக்கோழி குப்பையைக் குப்பையைக் கிண்டிற்றும்.

அதிலிருந்து ஒரு நெல்மணி கிடைத்ததாம்.
பெட்டைக்கோழி மேலே அண்ணாந்து பார்த்து,



"குப்பைமேட்டில் கிடைத்த நெல்லைப்
புதைக்க வருவார் உண்டோ?
விதைக்க வருவார் உண்டோ?"
என்று கத்திக் கத்திக் கூவிற்றும்.

காக்காய் வந்து, "நான் மாட்டேன்" என்றது;



கொக்கு வந்து, "நான் மாட்டேன்" என்றது;

வாத்து வந்து, "நான் மாட்டேன்" என்றது.

பெட்டை உடனே நெல் எடுத்து,



"நல்லவேளை; நான் இருக்கிறேன்;
என் தன் நெல்லை நான் விதைக்கிறேன்"
என்று சொல்லி விதைத்து விட்டதாம்.

விதைத்தவுடனே நெல் முளைத்து,



கதிர் தோன்றி மணி முதிர்ந்தது.
பெட்டைக்கோழி மேலே அண்ணாந்து பார்த்து,
"விளைந்த நெல்லை அறுக்க வருவார் உண்டோ?
முதிர்ந்த நெல்லை அறுக்க வருவார் உண்டோ?"
என்று கத்திக் கத்திக் கூவிற்றும்.

காக்காய் வந்து, "நான் மாட்டேன்" என்றது;

கொக்கு வந்து, "நான் மாட்டேன்" என்றது;

வாத்து வந்து, "நான் மாட்டேன்" என்றது.

பெட்டை உடனே தானெழுந்து,



"நல்லவேளை ; நான் இருக்
கிறேன் ;
விளைந்த நெல்லை நான்
அறுக்கிறேன் ;
முதிர்ந்த நெல்லை நான்
அறுக்கிறேன்"
என்று சொல்லி அறுத்து விட்டதாம்.

அறுத்த நெல்லை அளந்து பார்க்க



ஆறு மூட்டை நெல்
இருந்தது.
பெட்டைக்கோழி மேலே அண்
ணாந்து பார்த்து,
"ஆறு மூட்டை நெல்லை
யெல்லாம்
குத்த வருவார் உண்டோ ?
புடைக்க வருவார் உண்டோ ?"
என்று கத்திக் கத்திக் கூவிற்றும்.

காக்காய் வந்து, "நான் மாட்டேன்" என்றது ;
கொக்கு வந்து, "நான் மாட்டேன்" என்றது ;
வாத்து வந்து, "நான் மாட்டேன்" என்றது.

பெட்டை உடனே தானெழுந்து,



"நல்லவேளை நான் இருக்
கிறேன் ;
ஆறு மூட்டை நெல்லும் குத்தி
வைக்கிறேன் ;



ஆறுமூட்டை நெல்லும்
புடைத்து வைக்கிறேன்''
என்று சொல்லிப் புடைத்த
தாம்.

குத்திப் புடைத்த அரிசியை
உலைப்பானையிலே போட்டுவிட்டு,
"சாதம் சமைக்க வருவாருண்டோ?
சாதம் வடிக்க வருவாருண்டோ?''
என்று கத்திக் கத்திக் கூவிற்றும்.

காக்காய் வந்து, "நான் மாட்டேன்'' என்றது;
கொக்கு வந்து, "நான் மாட்டேன்'' என்றது;
வாத்து வந்து, "நான் மாட்டேன் என்றது.

பெட்டை உடனே தானெழுந்து,
"நல்லவேளை; நான் இருக்கிறேன்;
உலை வைத்து நான் சமைக்
கிறேன்;
சமைத்த சோற்றை நான்
வடிக்கிறேன்''



என்று சொல்லி நன்ருய்ச் சமைத்து வடித்ததாம்.



வடித்த சோற்றை வட்டத் தட்
டில் பரிமாறி,
"சமைத்த சோற்றைச் சாப்பிட
வருவாருண்டோ?
சமைத்த சோற்றைச் சாப்பிட
வருவாருண்டோ?''
என்று கத்திக் கத்திக் கூவிற்றும்.

காக்காய், "நான் இருக்கிறேன்" என்று வந்தது;



கொக்கு, "நான் இருக்கிறேன்" என்று வந்தது;
வாத்து, "நான் இருக்கிறேன்" என்று வந்தது.

பெட்டை உடனே தானெழுந்து,
"வேலை என்றால் விழுந்துகிடக்கும் கள்ளிகளே!
சோறு என்றால் வாய் திறந்து வருவீரோ?
நல்லவேளை; நான் இருக்கிறேன்.

நான்பெற்ற குஞ்சுகளே!
நல்ல சோறு! வாருங்களேன்!
நாமெல்லாரும் சாப்பிடுவோம்" என்று



கோழிக்குஞ்சுகளும் பெட்டைக்கோழியும்
குடல் வெடிக்கச் சாப்பிட்டதாம்.
கதை முடிந்தது; கத்தரிக்காய் காய்த்தது.

[சூடாமணி.]



# குட்டிப் பாப்பாவுக்குக் குட்டி நாடகம்

பாத்திரங்கள்

---

சந்திரன்

நட்சத்திரம்

யானை

---

வேஷம்

சந்திரன் வேஷம் போட்டுக் கொள்ளும் குழந்தை பால் போன்ற வெள்ளை வேட்டி கட்டிக் கொள்ள வேண்டும். வெள்ளைச் சொக்காய் போட்டுக் கொள்ள வேண்டும். தலையின் பின் பக்கத்தில், காகிதத்தினல் செய்த வெண்மையான பெரிய வட்டம் ஒன்றைக் கட்டிக் கொள்ள வேண்டும்.

நட்சத்திர வேஷம் போட்டுக் கொள்ளும் குழந்தை மஞ்சள் நிறப்பாவாடை கட்டி மஞ்சள் வர்ணச் சொக்காய் போட்டுக் கொள்ள வேண்டும். தலையின் பின் பக்கத்தில் மஞ்சள்நிறக் காகிதத்தினல் ஐந்து கோண நட்சத்திரம் செய்து கட்டிக் கொள்ள வேண்டும்.

யானை வேஷம் போட்டுக்கொள்ளும் குழந்தை கறுப்பு வேஷ்டி கட்டிக் கொண்டு கறுப்புச் சொக்காய் போட்டுக் கொள்ள வேண்டும். காகிதத்தினல் யானை முகம் போலச் செய்து முகத்துக்கு முன்னே தொங்க விட்டுக் கொள்ள வேண்டும்.

நாடகம் நடக்கும் இடம்:

ஒரு சோலை.

---

நாடகம் நடக்கும் காலம்:

மாலை.

---

## முதற் காட்சி

சந்திரனும் நட்சத்திரமும் சிறிய மரம் ஒன்றில் இரண்டு கிளைகளின் மேல் ஏறி உட்கார்ந்து கொள்ள வேண்டும்.



## நாடகம்

சந்திரன்:—(பாடுகிறான்)

மாலை வேளை இங்கே
    வான மேடை மீதே
பாலைப் போன்றே பொங்கி,
    பார்மேல் பார்த்து நிற்பேன்.
நீல வான மீது
    நீந்தி நீந்திச் செல்வேன்.
பாலர் வாயில் பாலை
    ஊட்டிப் பண்பாய்ச் சிரிப்பேன்.

நட்சத்திரம்:—

மாலை வேளை இங்கே
வான மேடை மீதே
பாலை உண்ணும் மீனாய்,
பார்மேல் மின்னி நிற்பேன்.
நீல வான மீது
நிற்கும் தங்கப் பொட்டாய்,
காலை மட்டும் மின்னி,
கண்ணைச் சிமிட்டி நிற்பேன்.

சந்திரன்:—

வெள்ளை மேகம் வரவே
மெல்லச் சென்றே மறைவேன்.
கள்ளம் இல்லா முகத்தைக்
காட்டி மெல்ல வருவேன்.
வெள்ளைச் சுண்ணம் தீட்டி
வீடு, மாடம் எல்லாம்
வெள்ளைக் கல்லால் ஆகி
வெண்மை காட்டச் செய்வேன்.

[யானை தள்ளாடித் தள்ளாடி நடந்து கொண்டே வருகிறது.]

நட்சத்திரம்:—அண்ணா! சந்திர அண்ணா! அதோ பார்! அதோ பார்.

சந்திரன்:—தங்கையே! என்னைத் தொந்தரவு பண்ணாதே. என்ன அழகான மாலை! என்னை அறியாமலே பாட வருகிறது. நான் பாடும்போது ஒன்றும் பேசாதே.

பாடும் குயிலை மகிழ்விப்பேன்.
பாரில் குளங்கள் நதிஎல்லாம்
ஓடும் வெள்ளி நீர்எனவே
ஒளிரச் செய்வேன் பால்நிலவால்.



யானை தள்ளாடித் தள்ளாடி நடந்து கொண்டே வருகிறது.

காடும் மலையும் காவுகளும்
களிக்கப் பெய்வேன் பால்மழையே.
நாடும் நகரும் கழனிகளும்
நன்ருய்க் குளிக்கும் நிலவினிலே.

நட்சத்திரம்:—அண்ணு! அண்ணு! போதும் அண்ணு. நீர் பாடினது போதும். அங்கே பாரும்! என்ன உருவம்! என்ன கருமை! அது என்ன மிருகம் அண்ணு?

சந்திரன்:—(உற்றுப் பார்க்கிருன்) ஆ! ஆ! அது யார் என்று உனக்குத் தெரியாதா? அதுதான் யானை.

நட்சத்திரம்:—யானை என்ருல் என்ன?

சந்திரன்:—இது கூடத் தெரியாதா? சொல்லுகிறேன் கேள்.

தொங்கும் தும்பிக் கையுடனே
துலங்கும் கொம்பும் இரண்டுண்டு.
அங்கும் இங்கும் திரிந்தோடி
அப்பம் வடைகள் குழக்கட்டை
தெங்கின் காயும் கனிபலவும்
தேடி உண்ணும் வயிறுடனே
எங்கும் இல்லாப் பேருடலும்
ஏற்கப் பெற்ற யானைக்கே.

நட்சத்திரம்:—அண்ணு! அது நடக்க மாட்டாமல் தள்ளாடித் தள்ளாடி வருகிறதே. அதேன்?

சந்திரன்:—அது மலை விழுங்கி மகாதேவன். அதற்குக் கதவெல்லாம் அப்பளாம். எவ்வளவு கொடுத்தாலும் கொண்டு வா, கொண்டு வா என்று மேலும் மேலும் தின்னும். காலையில் இருந்து மாலை மட்டும் தோட்டந் துரவுகளிலும், நாடு நகரங்களிலும் திரிந்து கிடைக்கிறதை எல்லாம் வாங்கி வாங்கித் தின்று விட்டு, சாயங்காலம் ஆனதும் இப்படி நடக்க மாட்டாமல் நடந்து வரும்.

நட்சத்திரம்:—அண்ணு! அதன் வயிற்றைப் பார். அடே அப்பா! அது எவ்வளவு பெரிதாய் இருக்கிறது.



[யானை ஏம்! ஏம்! என்று ஏப்பம் விட்டுக் கொண்டே வருகிறது. வருகிற வழியில் இருந்த ஒரு வேரிலே இடறி விழுகிறது.]

சந்திரன்:—[உடல் குலுங்கக் கல கல என்று வெகு நேரம் சிரிக்கிருன்.]

போர்போன்ற பெருவயிறும்
 பொட்டென்று சாய்ந்ததடீ.
கார்போன்ற கருமேனி
 காலிடறி விழுந்ததடீ.
பார்மேலே கண்டதில்லை;
 பார்க்கையிலே என் வயிறும்
சீர்கெட்டுக் குலுங்குதடீ.
 சிரிப்பெனக்கு வருகுதடீ.

[மறுபடியும் உரக்கச் சிரிக்கிருன்.]

யானை:—[மெதுவாய் எழுந்து நின்றுகொண்டு, கோபத்தோடு]

சிரித்தவ னாரடா ?
சீக்கிரம் கூறடா.
சிரித்ததன் காரணம்
சீக்கிரம் கூறடா.

சந்திரன்:—

பாருக்குள் பருத்த தலையோடு
பருந்தொந்தி வயிறு விழும்போது
யாருக்கும் சிரிப்பு வாராதோ?
எவருக்கும் சிரிப்பு வாராதோ ?
காருக்கு நிகராம் கருமேனி
கால்தட்டி நிலத்தில் விழும்போது
யாருக்கும் சிரிப்பு வாராதோ ?
எவருக்கும் சிரிப்பு வாராதோ ?

யானை:—அடா ! புத்தி கெட்டவனே ! மூடா. இடறி விழுந்தால் சிரிக்க வேண்டுமா? நல்லது ; நான் உன்னை என்ன செய்கிறேன் பார். நீ என்னைப் பார்த்துச் சிரித்ததனால் உன் முகம் கறுத்துப் போகட்டும். இனிமேல் பார்க்கிறவர்கள் எல்லாரும் உன்னைக் கேலி பண்ணுவார்கள். போ.

[யானை போகிறது.]

[சந்திரனுடைய வட்டத்திலே ஒரு பொத்தல் பண்ணவேண்டும்.]

சந்திரன்:—

புத்தி கெட்டுப் போனேனே—நான்
புத்தி கெட்டுப் போனேனே.
சிறுவர் என்னைக் கண்டவுடன்
சிரித்துக் கேலி பண்ணுவராம்.
பெரியோர் என்னைக் கண்டவுடன்
பேசி ஏசிச் சிரிப்பாராம். (புத்தி)

நட்சத்திரம்:—அண்ணு! நீ அழாதே. ஓடிப் போய் யானையினிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள். அது உன்னை மன்னித்து விடும்.

சந்திரன்:—தங்காய்! நல்ல யோசனை சொன்னுய். இதோ போகிறேன்.



[சந்திரன் ஓடி வந்து யானையை வணங்குகிருன்.]

சிறியோர் செய்த பெரும்பிழை யெல்லாம்
பெரியோ ராயின் பொறுப்பது கடனே.

நான் செய்தது பெரிய தப்பிதம். நீர் என்னை மன்னிக்க வேண்டும். என் மீது இரங்கும்.

யானை:—சந்திரா! உன்னை மன்னித்தேன். என்ருலும் உன் முகத்தில் இருக்கிற கறுப்பு மட்டும் போகாது. அப்படி இருந்தாலும் சிறு குழந்தைகள் மட்டும் அதற்காக உன்னைக் கேலி பண்ண மாட்டார்கள். அவர்கள் உன்னை முன் போலவே நேசிப்பார்கள். போ.

[யானை போகிறது.]

சந்திரன்:—ஐயா ! நமஸ்காரம். (யானை போனபிறகு) என்னை வேறு யார் கேலி பண்ணினாலும் குற்றம் இல்லை. சின்னக் குழந்தைகள் மட்டும் என்னைக் கேலி பண்ணக் கூடாது; என்னை வெறுக்கக் கூடாது. யானை எனக்கு அந்த உபகாரம் பண்ணி விட்டதே! அதுவே போதும். அது மிகவும் நல்ல யானை. அது சுகமாய் இருக்கட்டும்.

[பாடுகிறான்.]

மாலை வேளை இங்கே
வான மேடை மீதே
பாலைப் பெய்து நிற்பேன்:
பாலர் வாயில் சொரிவேன்.
பாலர் என்னைக் கண்டு,
"வா,வா" என்றே அழைப்பார்.
பாலர் கையை நீட்டி,
"பார்,பார்" என்றே சொல்வார்.

[சூடாமணி.]




புனலூர்க் காகித ஆலை :—இந்த ஆலை முற்றும் நீர் விசையினால் இயக்கப்படுகிறது. இந்த ஆலையில் காகிதம் செய்ய முக்கியமாக உபயோகிக்கப்படுபவை மூங்கில்கள், நாணல்கள், பழைய சரக்குகள், துணிகள், உபயோகமற்ற காகிதங்கள் முதலியவைகளேயாம். மூங்கில்களையும், நாணல்களையும் சிறந்த முறையில் நசுக்குவதற்காக ஒருதனி யந்திரம் அங்கு நிறுவப்பட்டுளது. நாளொன்றுக்குச் சுமார் எட்டு டன் கனமுள்ள மூங்கில்களும், நாணல்களும் இதனால் நசுக்கப்படுகின்றன. இந்த இயந்திரத்தினின்றும் சரக்கு ஓர் உயர்ந்த மேடைக்கு உயர்த்தப் பட்டு அங்கிருந்து இருபத்தேழடி உயரமுள்ள ஒரு ஜீரணிக்குள் சிறிது சிறிதாக அனுப்பப்படுகிறது. அங்குச் சென்ற சரக்கு நீராவி, பிற இராசயனங்கள், இவைகளின் உதவியால் பக்குவப் படுத்தப்பட்டு வெளுக்கும் பகுதிக்கு மாற்றப்படுகிறது. இவ்வாறு வெளுக்கப்பட்ட சரக்கு உரலில் தள்ளப்பட்டுக் காகித இயந்திரத்துக்கு வேண்டிய அளவு பதனாக மசிக்கப்படுகிறது. இந்தப்பொருள் காகிதம் செய்யும் பக்குவத்தையடையும் தருணத்தில் இஃது உரலிலேயே கஞ்சி யூட்டப் படுகிறது. இப்படித் தயாரிக்கப்பட்ட பசைப்பொருள் காகித இயந்திரப் பெட்டிகளுக்குள் அனுப்பப்பட்டு அதிலிருந்து அந்த இயந்திரத்திலுள்ள கம்பிச்சல்லடைமேல் ஒரே ஒழுங்காகப் பரப்பப்படுகிறது. இங்கு அந்தப்பசைப் பொருள் சுத்த நீரோடு கலந்து ஐந்து சதாம்சக்குழம்பாக மாறிவிடுவது ஆச்சரியத்தை விளைவிக்கும். இத்தகைய குழம்பு சல்லடைமேல் ஒழுங்காகப்பரப்பப்படும்போதே சல்லடைக்கண்களின் வழியே கலந்த நீர் பிரிபட்டுவிடுகிறது. இப்படிப் பரப்பப்பட்ட அந்தக் குழம்புப் படலம் இரண்டு ஜதை உருளைகளுக் கிடையில் புகுத்தப்பட்டு நசுங்கி மிகுந்த நீரையும் கக்கி விடுகிறது. இப்படி நசுக்கப்பட்ட அந்தத் தாள் நீராவியால் சூடுபடுத்தப் பட்ட 14 ஜதை உலர்த்தும் உருளைகளின் ஊடே செலுத்தப்பட்டுக் கடைசியில் வழவழப்பாக்கும் உருளைகளால் சுற்றப்பட்டு வெட்டும் இயந்திரத்தையடைந்து வேண்டிய அளவுக்கு நறுக்கப்படுகிறது. பலவகை வேலைகளுக்கும் உதவும் பாதாமி, நீலம், வர்ணம் முதலிய காகிதவகைகள் யாவும் இங்கு இயற்றப்படுகின்றன. இந்த இயந்திரத்தின் உயர்ந்த வேகம், நிமிடத்துக்குச் சுமார் 300 அடி என்றும் இது நாளொன்றுக்கு 8 டன்கள் காகிதம் தயார் செய்யும் என்றும் கூறப்படுகின்றது. ஸ்ரீ. சே.

மாம்பழம் :—மாம்பழம் நம் தேசத்துச் சாதாரணப் பழவகைகளிலொன்று. அது மதுரத்தினால் மற்றெதனிலும் விசேஷமுற்றது. நம்மனோர் கொண்டாடும் பலா, மா, கதலி என்னும் முக்கனியுள் இதுவே முதன்மை பெற்றது எனலுமாகும். இப்படிப்பட்ட சிறப்பினால் இது எங்கள் நாட்டில்

விசேஷ மதிப்புப்பெறுகின்றது. ஆயின் தற்காலம் சாஸ்திர ஆராய்ச்சியில் வல்லுனராய்விளங்கும் வைத்திய நிபுணர்கள் கண்டுபிடித்திருக்கும் உண்மை, மாங்கனியின் பெருமை இத்துணைத்தோ என எவரும் அதிசயித்தற்குரியாம். மாம்பழத்திலே தேகத்துக்கு அதிகப் பலனைத் தரக்கூடிய ஒருவகைக்சத்து இருக்கிறதென்றும் அது மாதுரியப் பெருமையிலும் மேம்பாடு உடையதாய் மதிக்கத்தக்கதென்றும் ஆராய்ச்சிக்காரர் ஓர் பொது அறிக்கையை வெளியிட்டிருக்கிறார்கள். லண்டன் நகரத்திலுள்ள டக்ரர் சலமன் சில்வா, மிஸ். எடித்பரி முதலான பெரிய வைத்தியர்கள் இதிலும் நூதனமான சில கருத்துக்களைக் கூறுகின்றனர். அவற்றின் சாரத்தைக்கீழே குறிக்கின்றோம் :

பொதுப்பட மாம்பழச்சாற்றிலே சொறிகரப்பான் முதலிய நோய்களைத் தடுக்கக்கூடிய "வைட்டமின்" என்னுஞ் சிவசக்திகள் உள்ளன. "அல்வன் சோ" என்னுஞ் சாதி மாம்பழத்திலேயே இந்தச் சக்திகள் அதிகமாம். பால் வெண்ணெய் முட்டை மீன் முதலியவைகளிற் செறிந்திருக்குந் தொற்று நோய்களைத்தடுக்குந் தன்மையும் மாம்பழத்தில் மிக உண்டு. அப்பில் பழத்திலுள்ள "வட்டமின் சி" என்னுஞ் சிவ அணு "அல்வன்சோ" மாம்பழ வர்க்கத்திலோ பத்துமடங்காய்ப் பெருகியிருக்குமாம்.

இந்தியாவிலேயே மாமரங்கள் பூர்வகாலந் தொட்டுப் பயிரிடப்பட்டு வருகின்றன. மாம்பழ இரசம் சிறந்த ஔஷதமென்று இந்திய வைத்திய பண்டிதர்கள் மாத்திரமன்றி முஸ்லீம் வைத்திய பண்டிதர்களும் பண்டு தொட்டு அதனைக் கையாட்சிசெய்து வருகிறார்கள். மற்று, கீழைத் தேசங்களில் வழங்கும் வைத்திய வாகடங்களிலும், மாம்பழத்தின் பெருமை அதிகமாய் விஸ்தரிக்கப்பட்டிருக்கின்றதாம். கீழைத்தேச வைத்தியர்கள் மாம்பழச் சத்திலிருந்து, தந்தரோகங்களுக்குச் சிறந்த ஔஷதங்களு முண்டாக்குகின்றார்கள். சுகந்த வாசனைச் சரக்குகள் பலவற்றை மாம்பழ இரசத்தோடு சேர்த்துப் "பவப்பிரகாசம்"என்னும் பல்விருத்திப் பஸ்பம் அமைப்பார்கள். தேகபலத்தையும், உற்சாகத்தையுமுண்டாக்குவதில் மாம்பழத்துக்கு நிகரான உணவு மற்றொன்றில்லையெனலாம். மலசலத்தை இலகுவாய்க் கழிக்கும் பொருள் மாம்பழ உணவில் தாராளமாயுண்டு. மாங்காயிலுள்ளபுளிப்பான திராவகம் சொறிகரப்பன், சிரங்கு முதலான துர்நீர் ரோகங்களைச்சாந்திசெய்வதிற் சிறந்ததென்பது, வைத்திய அறிக்கை மாத்திமன்றி, அனுபவ தீர்மானமுமாம். இந்தக் குணம் சில மாம்பழவர்க்கங்களில் அதிகமாயுண்டாம்.

உதயதாரகை.

குழந்தையின் கனம்.—சாதாரணமாக ஒரு குழந்தையின் கனமானது பிறக்கும் பொழுது 7 முதல் 8 பவுண்டுக்குள் இருக்க வேண்டும். முதல் மாதத்தில் 9 பவுண்டு 2-வது மாதத்தில் 10 ப. அவுன்சு. மூன்று மாதங்களில் 12. ப. ம் இருக்கவேண்டும். 4 மாதங்கள் 13 ப. 8 அ. 5 மாதங்கள். 15 ப. 0. 6 மாதங்கள் 16 ப. 0. அ. 7 மாதங்கள். 17 ப. 0. அ. 8 மாதங்கள் 18 ப. 0. 9 மாதங்கள் 19 ப. 0. அ. 10 மாதங்கள் 20 ப. 0. அ. 11 மாதம் 20 ப. 8. அ. 12 மாதங்கள் 21 ப. 0. அ.




பரமார்த்த போத வசன வினு விடை : [ஸ்ரீமான் கோ. வடிவேலு செட்டியார் இயற்றியது ; கிடைக்கு மிடம்: ஸ்ரீசாது இரத்தின சற்குரு புத்தகசாலை, நயினிப்ப நாயகன் வீதி, பார்க்டவுன், சென்னை ; விலை 1 அணா.]

இச்சிறு நூலில் யோகாநந்தன், ஆத்மா நந்தன் என்னும் இருவர்க்குள்ளே நிகழ்ந்த சம்பாஷணை உருவில் உபாசனை, ஆத்மாநந்தம் முதலிய பல வற்றைப் பற்றிய கருத்துக்கள் எளிய நடையில் எழுதப்பட்டுள்ளன.

நளன் அல்லது கலியின் கொடுமை : [இயற்றியவர் : ஸ்ரீமான். எஸ். கே. பார்த்தஸாரதி ஐயங்கார், பி. ஏ., பி. எல்., டிஸ்டிரிக்ட் முன்ஸிப், மன்னார்குடி ; ஆசிரியரிடம் கிடைக்கும் ; விலை, 12 அணா.]

இது நளனுடைய சரித்திரத்தின் பிற்பகுதியை நாடக உருவில் அமைத்து இயற்றப்பெற்ற நூல். இதன் ஆசிரியர் இதற்கு முன்னர்ப் பல தமிழ் நாடகங்களை இயற்றியவர். இந்நாடகம் நல்ல நடையில் அமைக்கப்பட்டிருக்கிறது. இடையிடையே நளவெண்பாவிலுள்ள செய்யுட்களை அந்த அந்த இடத்திற்குப் பொருந்துமாறு சேர்த்திருத்தல் நாடகத்தின் சிறப்பை அதிகரிக்கச் செய்கின்றது.

ஸ்ரீதரன்: [ஸ்ரீமான் என். ஸ்வாமிநாதையர் மனைவியார் எழுதியது ; சென்னை கேஸரி அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பெற்றது.]

இது நவீன முறையிலெழுதப்பட்ட ஒரு நாவல். குடும்ப வாழ்க்கையில் நிகழும் பல செய்திகளை இது விளக்குகின்றது.

ஆதித்ய ஹ்ருதயம் : [சாது இரத்தினசற்குரு புத்தகசாலை, சென்னை, விலை 2 அணா.]

இப்புத்தகத்தில் வடமொழியிலுள்ள ஆதித்ய ஹ்ருதய ஸ்தோத்ரத்தைத் தமிழெழுத்திலமைத்த மூலமும், தமிழில் பதவுரை முதலியனவும் அடங்கியுள்ளன. மூலத்திற் சில சில பிழைகள் காணப்படுகின்றன. அவற்றைத் திருத்தி வெளியிடல் நலமென்றெண்ணுகிறோம்.

அறநூல் : [ஸ்ரீ சுவாமி சுத்தானந்த பாரதி ஆக்கியது ; பக்கம், 180 ; கிடைக்குமிடம்: இயற்கை இல்லம், புதுக்கோட்டை ; விலை, 12 அணா.]

இது பதினைந்து இயல்களில் வகுத்துக்கொண்ட எழுபத்தைந்து தலைப்பில் ஒவ்வொரு தலைப்பிற்கு ஐவைந்து குறள் வெண்பாவாக அமைக்கப்பட்ட நீதி நூல். "உலகத்தில் இதுவரை தோன்றியுள்ள மஹான்களின் கருத்துக்களையும் ஆசிரியரோ நேராகக்கண்ட உண்மைகளையும் தன்னுளடக்கி, இது தமிழ் மக்களுக்கு அறிவு கொளுத்தும் சிறந்த கிரந்தமாக விளங்குகின்றது" என்று வ. வெ. ஸு. ஐயரவர்கள் தாமளித்த நூன்முகத்தில் எழுதியுள்ளார். இக்காலத்துக் கேற்ற சீர்திருத்தங்களைப் பற்றியும் இந்நூல் கூறுவது இதன் சிறப்பியல்பாகும். சில சொற்களில் பல அரிய கருத்துக்களை அவ்வக் கருத்துக்கேற்ற உணர்ச்சி ததும்பும்படி அமைக்கப்பெற்ற இந்நூல் தமிழ் நூலார்வம் உடையவருக்கு ஒரு புது விருந்தாக இருக்கும்.

ஸ்ரீ இராம கிருஷ்ணமிர்தம் : [ஆசிரியர்: ஸ்ரீ சுவாமி சுத்தானந்த பாரதி; மேற்கூறிய இடத்திற் கிடைக்கும் ; விலை 6 அணா.]

இது ஸ்ரீ இராம கிருஷ்ண பரமஹம்ஸரின் வரலாற்றையும் அவரது உபதேசங்கள் சிலவற்றையும் செய்யுள் நடையிற் கூறுவது. எளிய இனிய நடையில் அமைந்துள்ளது.

ஸ்ரீ ஆண்டாள் வைபவம்: [ஸ்ரீ கானவித்யா பிரஸ், ஸ்ரீ வைகுண்டம் ; விலை 3 அணா.]

'தெய்விகப் பெருமை வாய்ந்த ஆண்டாளின் திவ்ய சரித்திரத்தையும் குணநிசயத்தையும் பக்தி அனுபவத்தையும் கவிதையழகையும் சுருக்கமாக எளிய நடையில் வெளியிடும் இந்நூல் உருவிற் சிறியதேனும் பொருளிற் பெரியதாக உள்ளது. ஆண்டாளின் சரிதையையும் பிறவற்றையும் கூறும் ஆசிரியர் தமது சொற்களில் நாய்ச்சியார் திருமொழியையும் இடையிடையே பதித்து வைத்திருக்கின்றார். நல்ல இனிய நடை ; தமிழ்க் கதைகள் இந்த முறையில் வெளி வந்தால் தமிழுலகம் பெரிதும் போற்றும் என்பதில் ஐயமில்லை. இந்த முறையில் இதன் பிரசுர கர்த்தர்கள் இன்னும் பல நூல்களை வெளியிட்டால் தமிழர்களுடைய நூல் வரிசையில் அவை சிறப்பெய்தி விளங்குமென்று நம்புகிறோம்.

ச. கு. க.

ஞானோதய ஸ்தோத்திரத் திரட்டு: [ஸ்ரீசாது இரத்தின சற்குரு புத்தக சாலை, பார்க் டவுன், சென்னை ; விலை ரூபா, 1 அணா, 8.]

இது, பலவகை ஸ்தோத்திரங்களும், வேதாந்த விஷயங்களும் அடங்கிய சிறு நூல்கள் பலவற்றைத் தொகுத்துள்ள புத்தகம். ஸ்ரீ ராம கிருஷ்ண மகாத்மியம், ஸீதா மகாத்மியம், கைவல்ய நவநீத மூலம் முதலிய புத்தகங்கள் இத்தொகுதியிற் காணப்படுகின்றன.

பவானி க்ஷேத்திரப் பாடல்களும் இதர சுலோகங்களும்: [ஸ்ரீமதி வேதாம்பாள் அம்மாள் இயற்றியது ; கிடைக்கு மிடம்: The central Emporium, No. 156, Bignandet Street, Rangoon ; விலை 4 அணா.]

இது பக்திப் பெருக்காற் பாடப் பெற்ற சிறு புத்தகம்.




# சியாமளா தண்டகம்

## எஸ். அனவரதவிநாயகம் பிள்ளை

1. **மா**ணிக்கமணி யழுத்திய வீணையைக் கொஞ்சுபவளும், (யௌவன) மதத்தால் மெய்ம்மறந்திருப்பவளும், இனிமையான சொற்களின் சாதுரியமுடையவளும், இந்திரநீல மணியின் காந்தியைக்கொண்ட கோமள சரீரமுடையவளுமான மதங்க குலப் பெண்ணை எப்பொழுதும் சிந்திக்கின்றேன்.

2. தாயும், மரகதமணிபோற் கறுத்தவளும், மதத்தால் விளங்குகிறவளும், மங்களஸ்வரூபியும், கடம்ப வனத்தில் வசிக்கிறவளுமாகிய மாதங்கிதேவி கடைக்கண் பாலிக்கட்டும்.

3. மதங்ககுலப் பெண்ணே ! வெல்க. கருநெய்தற் பூவின் காந்தியைக்கொண்டவளே ! வெல்க. இசையின் சுவையறிந்தவளே ! வெல்க. விளையாட்டுக் கிளியை விரும்புபவளே ! வெல்க.

### தண்டகம்

வெல்க ! தாயே ! அமிர்த சமுத்திரத்தினடுவில் தோன்றும் மணித்தீவில் முளைத்த வில்வக்காட்டினடுவே கற்பக விருட்சங்களை அலங்காரமாகக் கொண்ட கடம்ப வனத்தில் வசிப்பதை விரும்புபவளே ! தோலாடையினணுகிய சிவனுடைய காதலியே ! எல்லாப் பிராணிகட்கும் பிரியமானவளே !

ஆசையுடன் தொடங்கப்பட்ட பாட்டை மெச்சுவதில் உண்டான பரபரப்பினாலே அசைகிற கடம்பமாலையைச் சூடிய கூந்தல் முடிச்சுப் பொருந்திய பிடரியை யுடையவளே ! இமயமலையின் மகளே !

தலைக்கு அணியான சந்திரகலையின் காந்தி வரிசையோடுகூடிய மிக மனோஹரமான கறுத்த நெற்றி மயிர்த்திரளால் அலங்கரிக்கப்

பட்டவளே! (சகல) லோகங்களாலும் வெகுமானிக்கப்படு பவளே!

மன்மதனுடைய விளையாட்டு வில்லுக்கொப்பான புருவமென் னுங் கொடியினது பூக்களோ என்று சந்தேகிக்கச் செய்யும் கண்கள் வாய்ந்தவளே! வாக்காகிய அமிர்தத்தைப் பொழிபவளே!

அழகான கோரோசனைக் குழம்பாற் செய்யப்பட்ட சிங்காரப் பொட்டால் மனோஹரமானவளே! ஸ்திரீரத்நமே! லக்ஷ்மி ஸ்வரூபியே!

பளபளப்பான வாளியென்னுங் காதணியிற் பதித்திருக்கும் முத்து வரிசைகளின் காந்திக்கூட்டத்தால் பிரகாசிக்கும் அழகு நிறைந்த கன்னப்பிரதேசத்திலே கஸ்தூரியால் எழுதப்பட்ட சித்திர ரேகையிலிருந்து உண்டாகும் வாசனைக்காக அலைகிற பெண்வண்டு களின் பாட்டுக்களோடு சேர்ந்து கம்பீரமாகிய வீணா நாதத்தை யுடையவளே! நல்ல சாரீரத்தையுடையவளே! பிரகாசிக்கின்றவளே!

வீணை வாசிக்கும் விதத்தால் அலைகின்றதான பனையோலையாற் செய்த தாடங்கமென்னும் ஆபரணவிசேஷத்தை அணிந்தவளே! சித்தர்களால் கொண்டாடப்படுபவளே!

உயர்ந்த மதுவாலுண்டான மதத்தினது கரைகடந்த விலாசத் தால் விளங்கும் கண்ணின் அசைவழகால் காதிலிருக்கும் நீலோற் பலத்தின் ஒளியைத் தோற்கச் செய்பவளே! எல்லா ஜனங்களி னுடைய அபீஷ்டங்களையும் பூர்த்திசெய்கிறவளே! சம்பத்தாகின்ற பலனையுடையவளே!

வியர்வைத்துளிகளால் விளங்குகிற நெற்றியின் அழகானது ஒழுகி ஒன்றாகச்சேர்ந்து நிற்கின்றதோ என்று சந்தேகம் விளை விக்கும் மூக்குத்தி முத்தையுடையவளே! ஸர்வ ஜகத் ஸ்வரூபியே! காளியே!

மனோஹரமான புன்னகையால் தாக்ஷிண்யந் தோன்றும் முகத் தில் [வாயில்] விளங்குகிற பாக்கு வெற்றிலை பச்சைக்கர்ப்பூரத்துண்டு என்றிவற்றின் கூட்டம் விளங்கப்பெற்றவளே! ஞானமுத்திரை யோடு கூடிய கையினளே! ஸர்வ ஸம்பத்துக்களையும் உண்டாக்கு பவளே! தாமரைப்பூ விளங்கும் கையினளே!

முல்லைப்பூவின் காந்திக்கு ஒப்பான காந்தியால் அழகான பல் வரிசையினது நிர்மலமான மிகவும் அசைகின்ற பேரலை (போன்ற ஒளி) யின் சேர்க்கையால் பிரகாசிக்கிற சிவந்த உதட்டையுடை யவளே! அழகான வீணையைத் தரித்தவளே! பழுத்த கோவைப்பழத் துக்கொப்பான அதரத்தையுடையவளே!

அதி மனோஞ்ஞமாகிய புது யௌவனத்தின் ஆரம்பமென்னும் சந்திரோதயத்தால் பொங்கிய அழகென்னும் பாற்கடலினின்று வெளிப்படுகின்ற சங்கின் வடிவைக்கொண்ட கழுத்தையுடையவளே! சிறந்த வித்தைகளுக்கு இருப்பிடமானவளே! (மதத்தால்) மந்த குணத்தையுடையவளே!

சிறந்த ரத்நங்களின் ஒளியால் அழகானதும் வியாபித்திருக்கின்றதுமான முத்துமாலை முதலிய நகைகளால் பிரகாசிக்கின்ற பழிப்பற்ற தேககாந்தி யுடையவளே! மங்கள ஸ்வரூபியே!

ரத்நங்கள் அழுத்திய கேயூரங்களினுடைய ஒளியின் சமூகமென்னும் தளிர்களால் மிகவும் பிரகாசிக்கின்ற கொடிபோன்ற தோள்களால் விளங்குபவளே! யோகிகளால் பூஜிக்கப்படுபவளே!

எத்திசையும் பரவிய மாணிக்கமணியின் ஒளியால் ஜ்வலிக்கும் கைவளைகளால் அலங்கரிக்கப்பட்டவளே! சிருங்கார சேஷ்டைகளால் சோபிப்பவளே! உபாஸகர்களால் உபசரிக்கப்படுபவளே!

உதய வேளையில் அலரத் தொடங்கும் செந்தாமரைப் பூக்களுக்கு எதிரிடையான இரண்டு கைகளையுடையவளே! எப்பொழுதும் பொங்கியெழும் தயையை யுடையவளே! தனக்கு இரண்டாவதாக ஒரு வஸ்து இல்லாதவளே!

சிறந்த ரத்நங்கள் இழைத்த மோதிரங்களின் ஒளிக்கூட்டங்களால் ஸந்தியாகாலம்போலாகிற [சிவந்த] விரல்களென்னும் தளிர்களிலிருந்து உதயமாகிற நகங்களென்னுஞ் சந்திரர்களுடைய காந்திக்கூட்டங்களையுடையவளே! தேவேந்திரனல் வணங்கப்படுபவளே! ஞான ஒளி நிறைந்தவளே! பிரகாசமான குண்டலங்களைத் தரித்தவளே!

நக்ஷத்திர வரிசைக்குச் சமானமான முத்துமாலைகளினது வரிசையால் பிரகாசிக்கும் மனோஹரமான ஸ்தன விஸ்தாரத்தினுடைய பாரத்தால் வளைந்த கொடிபோன்ற இடையிலுள்ள மடிப்புப்பிரிவுகளாகும் அலைகளின் ஒளியால் காண்பிக்கப்பட்ட வடிவழகுக்குக் கடல் போன்றவளே! வீணையைக் கையில் தரித்தவளே! அடியார்களுக்குச் சம்பத்தைத் தருபவளே!

பொற்குடங்கள் போன்ற உன்னத ஸ்தனங்களின் பாரத்தால் வளைந்தவளே! மூன்று லோகத்தாலும் வணங்கப்பட்டவளே!

அழகாகவும், வட்டமாகவும், ஆழமாகவும் இருக்கும் நாபியென்னுங் குளக்கரையிலுள்ள பாசிக்கொடியோ என்ற சந்தேகத்தை விளைவிக்கும் கறுத்த ரோமாவளியை அலங்காரமாக உடையவளே! அழகான பேச்சை யுடையவளே!

ரம்யமாகச் சப்திக்கும் அரைநூலால் மன்மதனுடைய விளையாட்டு வில்நாணின் கர்வத்தை ஒடுக்குபவளே! திவ்வியமான ரத்நங்கள் அழுத்திய வஸ்திரங்களுடையவளே!

பதுமராகக் கற்களால் பிரகாசிக்கிற மேகலாபரணத்தினுல் அழகு வாய்ந்த பின்னரைத் தலத்தின் சோபையால் மேருமலையினது மேலிடத்தின் சோபையை வென்றவளே! நிலாப்போலக் குளிர்ந்தவளே!

மலர்ந்த புதிதான முருக்கம்பூப்போல மிகவும் சிவந்த உயர்ந்த ஆடையால் மறைக்கப்பட்ட அழகிய துடைகளினுடைய காந்தியால் சிந்தூரப் பூச்சாற் சிவந்த இந்திரன் யானையாகிய ஐராவதத்தின் கோட்டைத்தாழ் போன்ற துதிக்கையின் அழகை வென்றவளே! குறைவில்லாத மகத்துவத்தை யுடையவளே! சியாமளேயே!

மிருதுவாயும் அழகாயுமுள்ள கருநெய்தற் புஷ்பங்களாற் செய்யப்பட்டதான மன்மதனுடைய அம்பறாத்தூணியோ என்ற சந்தேகத்தைத் தருகின்ற கொடிபோன்ற சிறந்த முழங்கால்களையுடையவளே! அழகான ஒய்யார நடையுடையவளே!

நமஸ்கரிக்கின்ற திக்பாலர் பத்தினிகளுடைய முன்னெற்றி மயிர்களின் பளபளப்பான கறுப்புக் காந்தி ஸமூகத்தை அறுகங் கொழுந்தோ என்று சந்தேகிக்கும் மானுடைய சேர்க்கையால் அசைகிற நகமாகிய சந்திரனேடு விளங்குபவளே! மிகவும் பிரகாசிக்கின்றவளே ! தோஷ மில்லாதவளே !

வணங்கிய தேவேந்திரன், விஷ்ணு, சிவன், வருணன், பிரமன், யமன், நிர்ருதி, குபேரன், வாயு, அக்கினி என்றிவர்களுடைய கிரீடங்களிலுள்ள மாணிக்கங்களால் உராயப்பட்டதும் இளவெயில் போல விளங்குகின்றதான செம்பஞ்சுக் குழம்பின் சிவப்புக் காந்தியின் மிகுதியால் கவரப்பட்டதுமான திருவடித்தாமரையோடு கூடியவளே! அழகான தாமரையைத் தரித்தவளே! பார்வதியே!

அழகான நவரத்நங்க ளிழைத்த பீடத்தில் வீற்றிருப்பவளே! நல்ல ஸ்திதியில் இருப்பவளே!

ரத்ந மழுத்திய தாமரையை ஆசனமாகவுடையவளே! ரத்ந சிம்மாசனத்தில் இருப்பவளே! சங்கம் பத்மம் என்னும் இரண்டு நிதிகளாலும் சேவிக்கப்பட்டவளே!

அங்கே கணபதி துர்க்கை வடுகபைரவன் க்ஷேத்ரபாலன் என்றிவர்களால் சூழப்பட்டிருப்பவளே !

மதங்கொண்ட மதங்ககுல கன்னிகைகளின் கூட்டத்தோடு கூடியவளே ! மஞ்சுளே, மேனகை முதலான அப்ஸரஸ்திரீ

களால் கவுரவிக்கப்பட்டவளே ! அஷ்ட பைரவராற் சூழப்பட்ட வளே!

தேவியே ! வாமை முதலிய சக்திகளால் ஸேவிக்கப்பட்டவளே!

பூமிதேவி லக்ஷ்மி முதலிய அஷ்ட சக்திகளோடு கூடியவளே !

ஸப்த மாதர் கூட்டங்களால் அலங்கரிக்கப்பட்டவளே !

யக்ஷர் கந்தர்வர் ஸித்தர் இவர்களது ஸ்திரீ சமூகங்களாலே பூஜிக்கப்பட்டவளே !

மன்மத ஸ்வரூபியே !
மன்மதனும் ரதியாலும் கவுரவிக்கப்பட்டவளே !
பிரியங்கொண்ட வசந்த ருதுவாலே களிப்பிக்கப்பட்டவளே !
பக்தர்களுக்கு மிக்க நன்மையை உண்டாக்குகிறாய் !
யோகிகளுடைய மனத்தில் விளங்குகிறாய் !
வேதங்களின் ஒளியால் பிரகாசிக்கிறாய் !

கான வித்தையில் ஆனந்திப்பதில் மிக்க ஆவல் கொண்ட ஸ்ரீ கிருஷ்ண பகவானால் பூஜிக்கப்படுகிறாய் !

பக்தி நிறைந்த மனமுள்ள பிரமனால் ஸ்துதிக்கப்படுகிறாய் !

எல்லாருக்கும் மனோஹரமாயிருக்கின்ற வாத்தியங் கொண்டு வித்தியாதரரால் பாடப்படுகிறாய் !

காதிற்கு இனிமை தரவல்ல நாதத்தை யுடைய வீணை கொண்டு கிந்நரரால் பாடப்படுகிறாய் !

யக்ஷர் கந்தர்வர் ஸித்தர் என்றிவர்களின் ஸ்திரீ சமூகங்களால் பூஜிக்கப்படுகிறாய் !

எல்லா ஐசுவர்யங்களையும் விரும்புகின்ற தேவ மாதர்களால் ஆராதிக்கப்படுகிறாய் !

எல்லா விதமான வித்தைகளின் ஸ்வரூபமாயிருப்பதும், சுவை யுள்ள சுலோகங்களை உச்சரிப்பதும், கழுத்தினடியில் பிரகாசிக்கின்ற மூன்று வர்ண ரேகைகளோடு கூடியதும், மிருதுவும் கருமையும் கம் பீரமும் பொருந்திய இரண்டு சிறகுகளுடையதும், மூக்கின் காந்தி யால் முருக்கம் பூவை நெடுந்தூரம் போகச் செய்வது [வெல்வது] மாகிய அப்பேர்ப்பட்ட கிளியோடு கொஞ்சி விளையாடுகிறாய் !

உனது இரண்டு ஜதைக் கைத்தாமரைகளாலே ஸ்படிகத்தினாற் செய்த ஜபமாலை, சிறந்த ஞான ரூபமாகிய புஸ்தகம், அங்குசம், பாசம் என்றிவைகளைத் தரித்திருக்கிறவளாக நீ எவனால் நன்றாகத் தியானிக்கப்படுகிறாயோ அவனுடைய வாயிலிருந்து வசனம் செய் யுள்களின் வடிவமான வாக்கானது வெளிவரும்.

எவனால் செம்பஞ்சுக்கொப்பான வடிவமுள்ளவளாகத் தியானிக்கப்படுகிறாயோ அவனுக்கு எல்லா ஸ்திரீகளும் புருஷர்களும் வசியமாகிறார்கள்.

எவனால் நீ ஸ்வர்ண காந்தியுள்ளவளாகத் தியானிக்கப்படுகிறாயோ அவனும் சமஸ்த ஐசுவரியங்களோடும் ஆனந்திக்கிறான்.

கறுத்ததும் மிருதுவானதும் சிவனோடு கூடியதுமான உன் உருவத்தைத் தியானிக்கிறவனுக்கு எதுதான் சித்திக்காது?

அவனுக்குச் சமுத்திரம் விளையாடுங் குளமாகும். அவனுக்கு இந்திரனுடைய உத்தியானம் விளையாடுஞ் சோலை. அவனுக்குப் பூலோகம் சிங்காதனம். அவனுக்குச் சரசுவதி தேவி வேலைக்காரி. அவனுக்கு லக்ஷ்மீ தானாகவே ஆஞ்ஞையைச் செய்பவளாவாள் [ஏவலியற்றுபவளாவாள்].

எல்லாத் தீர்த்தங்களின் வடிவமாயுமிருப்பவளே! எல்லா மந்திரங்களின் ஸ்வரூபமாயுமிருப்பவளே! எல்லாத் தந்திரங்களின் வடிவமாயுமிருப்பவளே! எல்லா யந்திரங்களின் வடிவமாயுமிருப்பவளே! எல்லாச் சக்திகளின் ஸ்வரூபமாயுமிருப்பவளே! எல்லாப் பீடங்களின் வடிவமாயுமிருப்பவளே! எல்லாத் தத்துவங்களின் ஸ்வரூபமாயுமிருப்பவளே! எல்லா வித்தைகளின் ஸ்வரூபமாயுமிருப்பவளே! எல்லா யோகங்களின் ஸ்வரூபமாயுமிருப்பவளே! எல்லா ஒலிகளின் ஸ்வரூபமாயுமிருப்பவளே! எல்லாச் சொற்களின் வடிவமாயு மிருப்பவளே! எல்லா உலகங்களின் வடிவமாயு மிருப்பவளே! எல்லாத் திசைகளின் ஸ்வரூபமாயு மிருப்பவளே! ஒன்றையும் விடாமல் எல்லாவற்றின் ஸ்வரூபமாயு மிருப்பவளே! எல்லாவற்றிலும் இருப்பவளே! என்னைக் காவாய், என்னைக் காவாய், என்னைக் காவாய்! தேவியே, உனக்கு நமஸ்காரம்! தேவியே, உனக்கு நமஸ்காரம்! தேவியே, உனக்கு நமஸ்காரம்!




# கமலை ஞானப்பிரகாசர்

ச. சோமசுந்தர தேசிகர்

"விதம்பர லோகன் கமலா லயத்துள் விமலனின்பச்
சிதம்பர நாதன் கமலபொற் பாதனென் சிந்தையுள்ளே
இதம்பர மாகிய ஞானப்ர காசனெல் லாமும்வல்லோன்
பதம்பர மானந்த வீடே கொடுக்கும் பணிந்தவர்க்கே"

என்று பரவப் பெற்ற பெரியாரை ஞானப்பிரகாசரென்று கூறுவர். நந்தந் தமிழ் நாட்டிலே ஒரே பெயரைப் பூண்டு வாழ்ந்தவர் பலரென்பது எல்லோரும் அறிந்ததொரு செய்தியேயாம். ஒருவர் ஒரு பெயரைத் தாங்கிச் சிறப்புற வாழ்ந்திருப்பாராயின் அன்னார் பெயரை மக்கள் பலரும் தம்மக்களுக்கிட்டு மகிழ்வது மக்களியற்கையிலொன்ருகும். இதற்கு ஞானப்பிரகாசர் என்ற பெயரே ஓர் இலக்காக நிற்கின்றது. இப்பெயரைப் பூண்டோர் பல்லோராவர். அவர்களுள்ளே சிறப்புற வாழ்ந்த ஒரு சிலரை யறிந்தவரை ஈண்டுக் குறிக்கின்றேன்:

1. பழுதைகட்டி ஞானப்பிரகாசர்
2. நாவினுன் மழுவெடுத்த ஞானப்பிரகாசர்
3. செட்டித்தெரு ஞானப்பிரகாசர்
4. கமலை ஞானப்பிரகாசர்
5. கச்சி ஞானப்பிரகாசர்
6. களந்தை ஞானப்பிரகாசர்
7. மதுரை ஞானப்பிரகாசர்
8. திருநெல்வேலி (நெல்லை) ஞானப்பிரகாசர்
9. திரு ஒற்றியூர் ஞானப்பிரகாசர்
10. சண்பை ஞானப்பிரகாசர்
11. சாலிவாடிபுர சிவாசி ஞானப்பிரகாசர்
12. வேதாந்த ஞானப்பிரகாசர்.

மேற்குறித்த அடைவினருள்ளே பழுதைகட்டி ஞானப்பிரகாசரென்பார் திருக்கைலாய பரம்பரையிலே வந்த காழிக் கங்கை மெய்

கண்டார் சீடர் பலருள்ளே பெரும் பழுதைகட்டி சிற்றம்பலவரது சீடராவர். இவரது ஊர் காளத்தி யென்பர். தம் காலிலே பழுதையைக் கட்டியிழுக்கச் செய்ததாலே இவ்வடைமொழி பெற்றனரென்பர். இவரது காலம் சற்றேக்குறையப் பதினைந்தாம் நூற்றாண்டின் கடைப்பகுதி யென்று கொள்வது இழுக்காகாது.

நாவினுன் மழுவேடுத்த ஞானப்பிரகாச தேசிகர் என்பார் மேற்கூறிய கங்கை மெய்கண்டாரது சீடருள் ஒருவரும், துகளறு போத நூலாசிரியருமான சிற்றம்பல நாடிகளது மாணவர். தொண்டை நாட்டின் தலைநகரான கச்சியம்பதியிலே வாழ்ந்தவர். தொண்டைமண்டல முதலிமார்களின் தீட்சா குருவாவர். ஒருகால் தொண்டைமண்டல முதலியார்களுக்கும் செங்குந்த முதலிமாருக்கும் தங்கள் பிறப்புயர்வைப் பற்றியும் பட்டத்தைப் பற்றியும் விவாதம் நேர்ந்ததாகவும், அதுபொழுது தொண்டைமண்டல முதலிமார் திட்சா குருவாயிருந்த ஞானப்பிரகாசரை அரசன் வருவித்துக் கேட்டபொழுது, 'விவகார முகப்பில் நிற்கும் முதலியாரென்னும் சிறப்புநாமம் அரிப்பிரமேந்திராதி தேவர்கட்கெல்லாம் தலைவரான சிவபிரானுக்குரிய சிறப்புநாம மாதலால் அச்சிவபிரான் குமாரர்களாகிய செங்குந்த மரபினர்க்கே எத்தேச கால வர்த்தமானங்களினுஞ் சிறப்புநாமமாய் விளங்கும்' என்றும், 'இதனை எனது நாவினல் மழுவெடுத்துக் கூறவல்லேன்' என்றும் சொன்னதாகவும், அவ்வாறே காய்ச்சப்பட்ட மழுவை வாங்க முற்பட அவையிலுள்ளார் விலக்கியதாகவும், அன்று முதல் அவர்க்கு நாவினுன் மழுவேடுத்த ஞானப்பிரகாசர் எனத் திருநாமமுண்டாயிற்றென்றும் வீர நாராயண விஜய முகவுரை கூறும். இவரும் பழுதைகட்டியின் சமகாலத்தவரே யாவர்.

சேட்டித்தேரு ஞானப்பிரகாசர் என்பார் திருக்கைலாய பரம்பரையிலே வந்த சிவபுரம் தத்துவப்பிரகாசரது சீடர். திருவாரூரிலே இருந்தவர். தேரோடும் வீதி நான்கனுள் தெற்கு வீதிக்குப் புறம்பேயுள்ள தெருவுக்குச் செட்டித்தெரு வென்னும் பெயர் இன்றும் வழங்கும். அதனைப் பொன் பரப்பிய திருவீதி யென்றும் கூறுவர். அத்தெருவில் வாழ்ந்த காரணத்தால் செட்டித்தெரு ஞானப்பிரகாசர் எனப்படுவர்.

கச்சி ஞானப்பிரகாசர் என்பார் தொண்டைமண்டலத்திலேயுள்ள இருபத்து நான்கு கோட்டங்களுக்கும் அதிகாரிகளாயும், அரசனவையில் முதன்மையுடையராயும் கரிகாற் பெருவளத்தானல் குடியேற்றப்பட்டவர்களுமான வேளாளர்கட்குக் குருவாகவும் இருப்பவர். நாவினுன் மழுவெடுத்த ஞானப்பிரகாசரே இம்மடத்ததி

பதியாக இருந்தனரென்று வீர நாராயண விஜயம் கூறும். செங்குந்தரே முதலியென்னும் பட்டத்துக் குரியவரென்று கூறிய காரணத்தால் தொண்டைமண்டல முதலிமார் என்னும் வேளாளப் பிரபுக்களால் அவர் இச்சம்பவத்திற்குப் பிறகு காப்பாற்றப்படவில்லையென்றும், அது காரணம் பற்றிச் செங்குந்தரால் காப்பாற்றப் பட்டனரென்றும் அந்நூலே கூறுவதால், நாவினன் மழுவெடுத்த ஞானப்பிரகாசர் தொண்டைமண்டலத்தார் மடத்தினின்றும் விலகிய பிறகு, வேளாளப் பிரபுக்கள் தங்கள் மடத்துக்கு ஒரு தலைவரைத் தெரிந்தெடுத்திருத்தல் கூடும். அவரோ, அன்றி அம்மடாதிபதிகளிலொருவரோ ஈண்டுக் குறிக்கப்பட்டவராதல் வேண்டும்.*

களந்தை ஞானப்பிரகாசரைப் பற்றி யாதொன்றும் அறிதற்கில்லையாயினும், 'கண்ணிற் சிறக்கு மாகமமுணர்ந் தினிய தசகாரியந் தமிழினிற் செய்த களந்தைவரு ஞானப்பிரகாசன்' என்று சத்திய ஞான தரிசனிகள் பிள்ளைத் தமிழ்ப் பாமாலையிற் காணப்படுவதால் இவர் சித்தாந்த சாத்திர நல்லுணர்ச்சி பெற்றவரென்பதும், சந்தான பரம்பரை யாசிரியர்கட்குப்பின் தோன்றியவரென்பதும் அறியக் கிடைக்கின்றன.

மதுரை ஞானப்பிரகாசர் என்பவர் ஒரு துறவி; கொற்றவன்குடி உமாபதி சிவம் இயற்றியருளிய சிவப்பிரகாசத்துக்குப் பொழிப்புரை வகுத்தவர். இதனை, 'உலகத்தவர்கள் கருதரு சிவப் பிரகாசம்—பண்ணிற் சிறக்கு முரையெழுது மன்பர் பரவு ஞான ப்ரகாசன்' எனவும்,

> "தேனிலவுந் தெய்வச் சிவப்பிரகா சக்கடலின்
> பானிலவும் பல்சமயப் பன்மதமுங்—கோனுயிர்மா
> னித்தியமுந் தோன்ற வுரைவிரித் தான்மதுரைச்
> சத்தியஞா னப்ரகா சன்."

எனவும் காணப்படுஞ் செய்யுட்களால் அறியலாகும். ஈண்டுச் சத்திய என்றது உண்மையுள்ள என்ற பொருளில் வந்தது. இவரது காலம் இன்னதென நிச்சயமாகக் கூறுவதற்கில்லை. சிவப்பிரகாசத்துக்குக் காவை அம்பலவாணத் தம்பிரானர் இயற்றிய சிவப்பிரகாசக் கருத்துரையோடு விரிவான பதவுரை இயற்றிய சிவப்பிரகாசர் இந்த ஞானப்பிரகாசரது சீடராவார்.

---

* இம்மடம் இன்றும் கச்சியிலுண்டு. தென்னாட்டிலுள்ள தொண்டை மண்டல முதலிமார் அனைவரும் இம்மடத்தாரிடம் அபிமான முடையவர்கள். இந்த மடம் கி. பி. 1511-ல் நிலைநாட்டப் பட்டதாக இலக்கிய வரலாறு கூறும். (பக். 441.)

நெல்லை ஞானப்பிரகாசர் என்பார் திருநெல்வேலியிலே வாழ்ந்த ஒரு பெரியார். மக்கள் அறிந்தும் அறியாதும் செய்த நல்வினை தீவினைகட்குக் கழுவாயாக நூல்களிலே விதிக்கப்பட்டவற்றைத் திரட்டி பிராயச்சித்த சமுச்சயம் எனப்பெயரிட்ட நூலினுசிரி யர்க்குக் கல்வி புகட்டிய ஆசிரியரும் குரவருமாவர். இதனை அந் நூலாசிரியர் தமது நூலான பிராயச்சித்த சமுச்சயத்திலே,

"அன்னவர்தந் திருவாக்கென் றலைமேற் கொண்டான்
டானகொல்ல மெண்ணூற்றெட் டாமாங் கீர
வென்னுமுறு வருடமுத்த ராய ணத்தி
லெழிலுறுகும் பத்தில்வளர் பக்கந் தன்னிற்
பின்னுபுத வாரமகம் பருவந் தன்னிற்
பதிஞான ப்ரகாசன் பாதந் தன்னை
யுன்னியுளத் தறிந்தபடி யுரைத்தேன் கல்வி
யுடையோர்கள் பொறுப்பரெனு முறுதி யாலே."

"ஞால முய்யப் பரசமய நந்தச் சைவ நெறிதழைப்ப
சீல மறையா கமம்விளங்க வடியா ரென்னுஞ் சிறுபயிர்கள்
சால வோங்க நெல்லைவரை தன்னிற் பொழியுங் கருணைமுகில்
போலு ஞானப் பிரகாசன் புண்ட ரீகப் பதநினைவாம்."

என்றும் அவர் கூறும் துதிகளால் அறியலாகும். முதற் பாட்டிற் குறித்த காலம் கொல்லமாண்டு 808; அதனுடன் 825 கூட்ட ஆங் கிலவாண்டு கிடைக்கும். ஆகவே இவர் கி.பி. 1633-க்கு முன்னிருந் தவராவர். இஃதன்றி ஆசிரிய நிகண்டு செய்த ஆண்டிப் புலவரது ஆசிரியரான ஞானப்பிரகாசர் இவர் தாமோ வென்பதும் ஆராயற் பாலதாம்.

திருஒற்றியூர் ஞானப்பிரகாசர் சென்னைக்கு வடக்கில் ஏழு கட்டைக்கப்பாலுள்ள திருஒற்றியூரிலே வாழ்ந்து வந்தவர்.

'பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியச் சித்தியிலே யோர்விருத்தப் பாதி போதும்' என்றும்,

'பாதிவிருத் தத்தாலிப் பார்விருத்த மாகவுண்மை
சாதித்தார் பொன்னடியைத் தான்பணிவ தெந்நாளோ.'

என்றும், புகழப்பட்ட சிவஞான சித்தியார் என்னும் நூல் சுபக்கம் என்றும் பரபக்கம் என்றும் இருபிரிவினையுடையது. அதனுள் பரபக்கத்திற்கு உரை கண்டவர் இந்த ஞானப்பிரகாசர்.

"நத்துவய லொற்றியூர் ஞானப்ர காசனருட்
சித்தி படருரையைச் செப்பியபின்—வித்தகமாந்
தத்வப்ர காசன் பதவிருத்தி தான்செய்தா
னுத்தமர்சித் தத்தொருமை யாய்."

என்ற வெண்பா இதனை நன்கு வலியுறுத்தும். இனி, சண்பை ஞானப்பிரகாசர் என ஒருவர் உண்டென்றும், அவரே சிவஞான சித்தி பரபக்க உரையியற்றினரென்றும், அதற்கு மேற்கோளாக,

"பொன்னிறக் கடவுளும் புத்தேள் கோனும்
பன்னக முனியும் பரவிப் போற்று
மொற்றி மாநகர் நற்றவர் தலைவனைப்
பாடி யாடும் படம்பக்க நாயகனைத்
தொழுது போற்றிப் பழுதக லும்படி
வல்லிரு ணீக்கிய மாதவ னென்ன
நல்லருள் புரியு நந்தி கேசன்
ஓதிய போதத் துண்மை தன்னைச்
செந்தமிழ்ப் படுத்தித் திருநா மத்தாற்
றந்துரைத் தருளினன் றபோதனர் தமக்கு
வெண்ணெய் மாநகர் மெய்கண்ட தேவன்;
அவனடி பரவித் தொழுதருள் பெற்றவன்,
சிவஞான சித்தி யென்றுபெய ரிட்டுப்
பரமதந் தன்மத மென்றிரண் டாக்கித்
தரமுட னுரைத்தனன் சண்பையர் தலைவன்;
கற்றவர் பரவுஞ் சேந்தையர் காவலன்
நற்றவ ரடிபணி ஞானப்ர காசன்
நன்னூ லுணர்ந்த ஞானிகண் முன்னே
இந்நூல் தன்னிற் பரமதந் தனக்கு
உரைதனை யெழுத வுன்னிய வதுதான்
குரைகட லேழு நீந்தி யேற
விரைபவ னொக்க விளங்குவ னின்றே."

"கெட்டமதி கொண்டு கிளைக்கின்ற கௌசிகங்கள்
கிட்டவர வொட்டக் கொடுப்பனோ—முட்டவே
யீனச்சமய விருளிரிய வோட்டுகின்ற
ஞானப்ர காசனன்றோ நான்."

என்ற செய்யுட்களைக் காட்டி இவர் சண்பை நகருடையாரென்றும், திருஒற்றியூர் ஞானப்பிரகாசரினின்றும் வேறுவரென்றும் சிலர் கருதுவர். அக்கருத்து பொருத்த மற்றதாகக் காண்கின்றது. மேலே குறித்த பாயிரச் செய்யுளில் ஆசிரியர் ஒற்றியூருறையும் எந்தையாம் படம்பக்க நாதரைத் துதித்துள்ளார். தம்மை ஞானப்பிரகாச னென்றே கூறிக்கொள்ளுகின்றனர். இவர் தம்மைச் சேந்தையர் காவலன் என்று கூறுவது இது போது இன்னதெனக் கூறுவதற்கில்லை

யெனினும் சண்பையர் தலைவன் என்பது சித்தியாரியற்றிய அருணந்தி சிவத்தைக் குறிக்குமே யன்றி இவரைக் குறிக்காது. சந்தான குரவராகிய அருணந்திசிவம் காழியம்பதியினர் என்பது பல சான்றுகளால் நிலைபெற்ற தொரு செய்தி; சண்பை, காழி யென்பன சீகாழியின் மறு பெயர்கள். இதுவரை, சண்பை ஞானப் பிரகாசரென ஒருவர் இருந்ததாகவும் கேள்விப்படவில்லை. ஆகவே, சண்பை ஞானப்பிரகாசர் என ஒருவரில்லையென ஒருவாறு துணியலாம். மேலும் பரபக்கம் உரை யெழுதியதே சங்கற்ப நிராகரணத்துக்கு உரை யெழுத இடந்தந்திருக்கு மென்பதோடு எளிதாகவும் இருந்திருக்கு மென்பதும் ஊகிக்கத்தக்கது. ஞானப்பிரகாசரே இந்தச் சங்கற்ப நிராகரண உரையையியற்றினு ரென்பது, உரையேடுகளின் ஈற்றில் காணப்படும்,

"பொற்பம ராப்பல சொற்றுறை யோரைப் பொதிந்தனசங்
கற்ப நிராகர ணத்துரை நாட்டினன் காற்றியங்கி
லற்ப மிராவிடை மங்கைபங் கின்றி யணைந்தவெங்கோன்
சிற்ப னிராமயன் ஞானப்ர காசனந் தேசிகனே."

என்ற கலித்துறைச் செய்யுள் இனிது விளக்கும். அச்சிட்ட சங்கற்ப நிராகரணத்தில் 'உரையாசிரியர் பெயர் குறிக்கப்படவில்லை' என்று எழுதப்பட்டிருப்பது பதிப்பாசிரியருக்கு இப்பாட்டு கிடைக்காமையாற் போலும்.

சாலிவாடிபுர நிவாசி ஞானப்பிரகாசர் சிவஞான சித்திக்கு உரை வகுத்த ஆசிரியன்மாருள் ஒருவர். யாழ்ப்பாணத்தைச் சார்ந்த திருநெல்வேலியினர். அவர் இந்நாடு போந்து சாத்திரங் கற்று, வட யாத்திரை சென்று கௌட தேசத்தில் வடமொழியும் தர்க்க முதலிய சாத்திரங்களும் கற்றுத் தேர்ந்தவர். திருவண்ணமலை யாதீனத்திற் சைவ சன்னியாசம் பெற்றவர். மறைஞான தேசிகர் சிவக்கொழுந் தாசாரியார் இவர்கட்குப் பின்னிருந்தவர்.

வேதாந்த ஞானப்பிரகாசர் என்பவர் பரிபூரண சித்தி என்ற வேதாந்த நூலை இயற்றிய பரிபூரணாது குரவர். திருவலஞ்சுழிச் சிவப்பிரகாசரது ஆசாரியர். 'நன்பெருங் கருணை வாரி ஞானப்ர காச நாதன், பொன்பெருங் கமல பாதம் புன்றலை மீது வைப்பாம்' என்று புகழ்ந்து பாடியுள்ளதைத் தவிர வேறொன்றும் அறிவதற்கில்லை.

இதுவரை கூறிய ஞானப்பிரகாசப் பெயருடையார் பலருள்ளும் எஞ்சி நிற்பவர் கமலை ஞானப்பிரகாசர். அப்பெரியாரைப் பற்றியே ஈண்டுச் சிறிது விரிவாக வரைவாம். 'தென்கமலை திருவாரூர்' என்பது நிகண்டு. கமலை திருவாரூராகவே, முன்னர்க் குறித்த

செட்டித்தெரு ஞானப்பிரகாசரையே இப்பெயரும் குறிக்கும் என்று கூறுவாருமுளர். முதலாவதாக அப்பரம்பரையினர் அவ்வாறு கூறவில்லையென்பதொன்று; வரன்முறை கூறுஞ் செய்யுளொன்று இருவரும் வேறென்று கூறுவதொன்று; புகழ் மிக வாழ்ந்தவரும் அருமை மாணவருமான தருமை ஞானசம்பந்தர் பலவிடங்களிலும் 'சிதம்பரநாத ஞானப்பிரகாச' என்றும், 'சிதம்பர நாதன் கமலபொற் பாதன்...ஞானப்ரகாசன்' என்றும், 'கமலையுண் ஞானப்பிரகாச' என்றும் கூறுவது பிறிதொன்று. இவைபோல இன்னும் பல சான்றுள. ஆயினும் சம்பிரதாய தீபம் என்னும் நூலுடையார்,

"கழுமலத்தில் வந்தருள்சேர் கங்கைமெய் கண்டான்
பழுதைகட்டிச் சிற்றம் பலவன்—பழுதைகட்டி
ஞானப்ர காசனரு ணற்கமலை மாநகர்வாழ்
ஞானப்ர காசனரு ளூடு."

என்று குருமரபு கூறுவதாலே, பழுதைகட்டி ஞானப்பிரகாசரது சீடர் கமலை ஞானப்பிரகாசரென்று கூறுவர். அது மரபுக்கு விரோதமான கொள்கை. மேற்காட்டிய வெண்பாவிலே ஒரு அடைவைக் காட்டியதேயன்றி முற்றும் கூறினதன்று. இனி,

காழிக் கங்கை மெய்கண்டான்
|
பெரும்பழுதை கட்டி சிற்றம்பலவர்
|
சிவபுரம் தத்துவப்பிரகாசர்
|
திருவாரூர்ச் செட்டித்தெரு ஞானப்பிரகாசர்
|
சிதம்பரநாதர்
|
கமலை ஞானப்பிரகாசர்

என்ற அடைவே முறையாகக் காட்டப்பட்டு வருகின்றது. சிவபுரம் சிரபுரமாக இருப்பினு மிருக்கலாம். அஃதெவ்வாறாயினும் கமலை ஞானப்பிரகாசர் வேறு, திருவாரூர்ச் செட்டித்தெரு ஞானப் பிரகாசர் வேறு என்பது மேலே கூறிய காரணங்களால் தெளிவாம். பின்னவருக்கு முன்னவர் பேரராவர் என்பது அந்த வமிசத்தினர் கூறுஞ் செய்தியாம்.

(தொடரும்)

# தொழிற் சிறப்பு

ரா. இராகவையங்கார்

(283-ம் பக்கத் தொடர்ச்சி)

50. எத்தொழிலு முடலாலே யியல்வனவா மவ்வுடலந்
துய்த்தலினு னியங்குதலாற் றப்புரவு படைக்கின்ற
செய்த்தொழிலே முற்றொழிலாத் தெரிந்தறிஞர் வேண்டினரால்
அத்தொழிலி னீழலிலே யரசுகுடி யிருக்குமரோ.

செய்த்தொழில்-வயல்வினை. முற்றொழில்-தலையாய தொழில்; "உழவேதலை" என்றார் திருவள்ளுவனார்.

51. பூண்டஞ்ச மன்றுடற்குப் புனையுடையுந் தஞ்சமன்றால்
ஊண்டஞ்ச மென்றுணர்ந்தா ருருசியர்தா மூரெல்லாம்
ஆண்டஞ்சு பெரிதுழந்தா ருந்துணவிற் குறைவறச்செய்
தீண்டஞ்ச லிலாதிருப்ப தென்னுரோ மண்ணோரே.

தஞ்சம்-பற்றுக்கோடு. உருசியர்-ருஷிய நாட்டார்.

52. பாராள வுரியநமைப் பசியாளு கின்றபடி
ஊராளு மறிஞரெலா மொருங்கெண்ணி முயலாரோ
ஏராள மாட்டாம லியல்வினைக ளெவ்வெவையுந்
தாராள விலாமரம்போற் றுடுமென்று வீழ்வனவே.

53. கொலைக்கருவி படைக்கின்ற கொடுந்தொழிற்குப் பலர்தொகுத்து
மலைப்பொருளைச் செலவழித்து மறப்போரை விளைத்தபிறர்
தலைப்புறநல் லுணவுபுகத் தடைப்பட்டுத் தந்தேயம்
அலைப்புணலாற் றடுமாற லறியாரோ நெறியோரே.

54. பொல்லாத நினைவெல்லாம் புகுமடிகொ ளுளத்திடையே
அல்லாமற் றொழின்முயலு மகத்தினிடை வளர்தலிலை
இல்லாமை யியல்பெனினு மேவருக்குந் தீதுசெயற்
கொல்லாத நன்னெறியா யுயர்தொழில்சென் னெறியாலோ.

55. எழுத்தின்றிக் கடன்கொண்டங் கிறக்குமுயர் வாய்மையினோர்
வழுத்துண்டி வந்தவர்க்கு வழங்குபெருங் கொடையாளர்

கழுத்தொன்றி யிளவேறு கைதழுவும் விறல்வீரர்
கொழுத்தொண்டி னிலைநின்று குவலயங்காத் தருள்பவரே.

கொழுத்தொண்டு-உழுகொழுவாற் செய்யுந் தொண்டு. நியாயம், தியாகம், வீரம் என்னும் மூன்றும் காவலுழவர்க்கும் உண்டு என்றவாறு.

56. கிடைத்தளவின் மகிழ்ந்துள்ளங் கெழுமுதலுன் றொழிலாளர்
இடைத்திகழ்த லல்லாம லிறைவர்களுங் கண்டிலமால்
உடைத்தகுள நீர்போற்கண் டுழியெல்லா முளம்போக்கிப்
படைத்தபொருள் வீணுக்கிப் பரிதபிப்ப ரவரிலேயே.

57. சேய்க்குதவத் தாய்படைத்த திருத்தெய்வம் பல்லுயிரின்
வாய்க்குதவக் கைபடைத்து மற்றும்மா லெய்தலுறும்
நோய்க்குதவ மருந்துவகை நுதலியிவண் படைத்தாசைப்
பேய்க்குதவ வோதுமது பிறவிபடைத் திட்டதுவே.

58. ஏராலே யுலகூட்டி யியலுழவர் சிற்றூரை
நீராலும் விளக்காலு நெறியாலுந் திருத்திமதிச்
சீராலுங் கல்லூரிச் சிறப்பாலு மறிவூட்டி
ஓரால மரக்கிளைகட் கொப்பாக வொன்றுவிரே.

59. தனக்கிடனு முடலினுக்குந் தன்னுண்டு பண்ணியவம்
மனக்கினிய கடவுளுக்கும் வளர்குடிக்கும் முனிவருக்குஞ்
செனித்தவுல கினுக்குமெனச் செய்கடனைத் தீராமல்
அனைத்துயிரும் பவநீங்க லரியதரோ தெரிவுறினே.

(அயோத்தியாகாண்டம் ஸர்க்கம் 4, ச்லோகம் 14) வால்மீகி பகவான் ஐந்து இருணம் கூறியருளினர். அவர் லோகருணத்தை உயர்ந்தார்க்கு இறுப்பதெனக் கொண்டு ப்ராஹ்மண குணம் என்பர்.

60. வானோம்பு வயலோம்பி வயிறருத்த மாட்டாதார்
கானோம்பு மரமோம்பிக் கனிசுவைக்க மெய்வருந்தார்
ஆனோம்பித் தயிர்பானெய் யமுதென்ன வயிலாதார்
ஊனோம்பி யறச்சாலை யுண்ணுணு துண்பவரே.

61. பிறர்க்குதவ மெய்யசையாப் பிணம்போன்ற வெறும்பிறவி
உறப்பயிலா துயிர்நீப்பி னுலகினுக்குப் பொறைகழியும்
வறப்பினிலு மதுகிடந்து மாந்துபல துப்புரவும்
அறத்தொழிலே முயல்வாருக் காகுமவ மாதலின்றே.

அது-அப்பிறவி.

62. சிதலெடுத்த துளைப்புற்றிற் சென்றரவு குடிபுக்குள்
ளதையெடுத்து விழுங்கிவளர் வதுபோலப் பிறர்மனைபோய

முதலெடுத்து விழுங்கிவளர் முழுமூட ரிலராகும்
அதுதொடுத்தன் றேவளரு மகனுடி திருவினிலே.
சிதல்-கறையான்.

63. பாராலே பயன்கொள்ளும் படிமுயலா மடியாளர்
ஏராலே யுழமாட்டா ரிருந்தவமுஞ் செயமாட்டார்
தூராத குழிதூர்க்கத் தொடங்குவா ரிவர்க்கருத்த
ஆராலே யியல்வதுகொல் லந்தோநற் றெய்வதமே.
தூராத குழி-ஈண்டு வயிறு.

64. வேர்க்கவினை புரிந்தக்கால் மெய்வலிதாம் மற்றதுதான்
ஊர்க்குதவ வுழந்தக்கா லுளந்தூய்தாய் வளம்பெருகும்
பார்க்குளயன் மனையகழும் பதகருக்கு முடல்வேர்க்குஞ்
சீர்க்கவுளந் தூய்தின்றிச் செய்வனநல் வினையலவே.

65. எதிர்ந்தார்தம் பெருந்தோல்வி யினையெண்ணித் தம்வென்றி
முதிர்ந்தார்ந்த வுள்ளத்தான் முயல்கின்ற விளையாட்டால்
உதிர்ந்தூரும் வேர்வையெலா முதவியிலே யுதிர்ந்தூர
அதிர்ந்தாய்ந்து மொழியாரோ வறவோர்தம் மிளையோர்க்கே.

66. ஊர்க்கருந்தக் குளந்தொட்டு முறையுளெளி யார்க்கெடுத்தும்
பார்க்குளியல் வழிசீத்தும் பாதவங்கள் பலநட்டும்
ஆர்க்குமன்பு செய்துழக்கு மவ்வுள்ளத் தனிமெய்யின்
வேர்க்குமற லன்றேவுண் மிகுமாசு கழுவுவதே.
பாதவங்கள்-மரங்கள். அறல்-நீர்.

67. நோயெதிர்க்கும் வலியுடம்பு நமக்கில்லை நள்ளிருளிற்
பேயெதிர்க்கு மெனப்பெயரீர் பெருந்திருடர் பெயர்சொலினும்
வாய்விதிர்ப்பீர் மற்றவரை மாறெதிர்க்க வல்லீரோ
தாயெதிர்ப்பி ரில்லெதிர்ப்பீர் தநுவருத்த மாட்டீரே.

68. தரையிருந்து துயரினைத்தான் றப்பவழி தேடுவதோ
உரலிருந்தங் குலக்கையிடி யொதுக்கினை வதுபோலாம்
கரையிருந்து வேர்கிளருங் கான்யாற்றுப் பெருமரம்போல்
விரைவுடம்பு விழுமுனிசை மெய்வளர்க்கப் புரிவீரே.

69. வருத்தாமல் வைப்பதனுன் மற்றுடல மன்னுவதோ
அருத்தாம லதைநிறுவ வரியநெறி தெரிந்ததுவோ
கருத்தாலே நினைந்தாய்ந்து காசினியி லுளவரைக்கும்
உருத்தாவ மதியாம லுழந்திசைமெய் யுறுவீரே.
உருத்தாவம்-உருவுக்கு உண்டாம் தாபம்.

70. வருத்தமெனு மொன்றேதான் மன்னுயிரைப் பயில்வித்துத்
திருத்தகுதாய் தாக்குதற்குத் தெய்வதமே தந்ததுவாம்
பருத்தவுடல் வருத்தமுணர் பண்பிலையே லெலிநரிநாய்
அருத்தியினி லருந்தாவோ வதுதுயிலும் பொழுதினிலே.
அருத்தி-ஆசை. அது-அவ்வுடல்.

71. இடர்ப்பாடு வரும்போழ்தத் தினிதேற்றுத் தொழிலுதவல்
கடப்பாடென் றுளத்தமைத்துக் காசினிக்கு முயன்றவர்தம்
உடற்பாடு முழுவதுமே வுயர்ந்தவிதி காசமெனத்
திடப்பாடல் பெற்றதிறந் தெரிகிலரு முளரேயோ.
உடற்பாடு-உடல் வருத்தம்.

72. தவழ்வளஞ்செய் நம்பெரிய தனிநாடு மெய்யிதன்கண்
எவையுயிரு மவயவமா யின்றியமை யாதனவாம்
அவயவங்க ளொவ்வொன்று மஃததனுக் குரியதொழில்
நவையிகந்து புரியாதே னம்முடலென் னுவதுவே.
நவையிகந்து-குற்றத்தைத் தள்ளி.

73. கவையாலு மிலையாலுங் கனியாலு மொருங்கொத்துச்
சுவையாலும் பயனுலுந் தொடர்வேறு படுமரம்போல்
எவையாலும் புறனெப்பா யிருங்குணனு லியல்செயலாற்
றவவேறு படுபவரே தரைமுழுது நிறைந்துளரே.

74. உடலுக்குக் கண்செவிபோ லுள்ளனவு மலசலங்கள்
விடலுக்கென் றமைந்தனவும் மெய்ம்மையினின் வேண்டுதல்போல்
கடலுக்குட் டிடலாகுங் காசினிக்கு நீளநிலத்
திடலுக்குப் பல்வினைசெய் தியல்பலரும் வேண்டுமரோ.

75. ஒருறுப்பி னிடையூற்றை யொழிக்கவுடற் பிறவுறுப்பு
நேருறப்புக் குதவுதல்போ னிலைதளர்ந்தார்க் கியல்வதனைச்
சீருறப்புக் குதவாத சிதடரையத் திருநாட்டின்
ஆருறுப்பென் றெண்ணுவரோ வவர்வயிற்றுக் கழலையரே.
கழலை-வேண்டாத ஊன்பிண்டம்.

76. பஞ்சமரோ டைந்தாய பலகுலமும் விரலாக
வஞ்சமறு நந்தேயம் வளர்கரமா யொன்றுகும்
செஞ்செயலில் விரலைந்துஞ் சேர்வனபோற் குலமைந்தும்
நெஞ்சமர வொருங்கியைந்து நெறிகொடொழில் விளைப்பதுவே.
செஞ்செயல்-செவ்விய தொழில்.

77. வெயில்கால்கள் பெரிதியங்க வெளியிட்டு வேண்டளவில்
அயில்தூய நீரமுதா மவ்வுழிநன் மனையெடுத்துப்

பயிர்சோலை தருபயனைப் பருவத்தே தொகுத்தாவின்
தயிரோடு பாலோடு தமராருத்தி வாழ்குவிரே.
பயிரும் சோலையும் தருபலன்களை என்க.

78. விலங்கினத்தின் மக்களெலாம் வேறுபட்ட துரைவழங்கும்
புலங்கொளலா லெனமொழிந்த புலவர்திறம் புறநிற்க
நலங்கிளரு மாடையினு ணகரிக மெனநயந்தே
இலங்குவிலங் கிடைவேறு யிருப்பதலாற் பிறிதிலமே.
உரை வழக்கும் புலம்-அபிப்பிராயத்தைச் சொல்லால் உதவும் அறிவு; இது விலங்கினத்தில் விளக்கம் பெற்றதில்லை. விலங்கினம் உடுத்தமாட்டா; நாம் உடுப்பேம். இஃது இப்போதுள்ள வேற்றுமை என்றவாறு.

79. உடைக்கென்று பெருந்தனத்தை யுறவழித்தன் முறையன்றால்
இடைக்கொன்றுந் தோட்கொன்று மிருசின்னத் துணியமையும்
மடைக்கொன்று வயலாக்கி வயிறுார வுயிருண்ணப்
படைக்கின்ற வுதவியிலே பன்னாளும் மன்னுவிரே.

80. இயற்கையினுண் டாமவற்றுக் கிவ்வுடலைப் பயிற்றாது
மயற்கையினு லேதடுக்க வழிதேடிப் பொருளினையுஞ்
செயற்படுநன் முயற்சியையுஞ் செய்பொழுதோ டவமாக்கித்
துயர்க்கடலில் வீழ்கிற்பார் சிறுநோய்க்குந் தொலைகுவரே.
அவற்றுக்கு-அக்குளிர் வெயிற்கு.

81. முகத்தினையே குளிர்வெயிற்கு மூடாது விட்டவற்றிற்
புகுத்தலினுற் கேடொன்றும் புகுவதிலை கண்டீரே
சகத்தினுள வியல்பினுக்குத் தனுமுழுதும் பயில்வித்தால்
அகத்துவகை பெரிதாகு மரும்பொருளுங் கெடலின்றே.

82. குளிர்வெயில்கண் மிதமேய கொழுநிலநா வலந்தீவிற்
கெளியவுடை யல்லாது வலியவுடை யிடர்செய்வதாம்
அளிதருதெய் வதந்தந்த வவ்விரண்டு மனுபவித்துத்
தெளிவதுவே நலந்தீது தடைசெய்யத் தெளிவதுவே.

83. அந்நியநூ லேபரதந் திரமெனவு மதுதள்ளி
மன்னுசுவ தந்திரந்தான் வளர்தமது நூலெனவும்
இன்னபடி யுய்த்துணர்ந்தா ரிருஞாலத் துயர்ந்தவராய்
என்னவிட ரெய்தியுமீண் டினிதிழைத்தல் காணீரோ.
தந்திரம்-நூல்.

84. மலைகல்வி யெலிபிடித்த வகையாகப் பேராசை
அலைகொள்ள வியலாதீ ரரும்பெரிய தொழிற்கெல்லாந்
துலைகொள்ளு நடுநிலையிற் றொகுதியினிற் பலர்கூடி
நிலைகொள்ள முயன்றீட்டி நெடுநாட்டிற் குதவுதிரே.

85. என்பேறு பெறவெண்ணி யிருங்காற்றிங் கியங்குவதோ
இன்பாக வெழில்வான மிந்நிலத்திற் பொழிவதுவோ
நன்பாலி னிருசுடரு நானிலமும் விளக்குவவோ
தன்பேறு கருதாமற் றரைக்குழைப்ப தேமகிழ்வே.

86. கொள்ளளவும் பால்கொடுத்துக் குறித்தளித்த தாயருக்கும்
உள்ளளவு முடம்பாலே யுமக்குளுற்று மனைவியர்க்கும்
எள்ளளவு மெய்யாலே யினிதியற்றீ ரவர்கடனைத்
தள்ளளவு நீர்துயரிற் றடுமாறிச் சுழல்வீரே.

87. கைதொட்ட நாண்முதலாக் கருத்தளித்து நுமைப்போற்றி
மெய்தொட்டுப் பயின்றிடரும் விழுமமுமொத் துயிரொன்றாய்ச்
செய்தொட்டு மனைமடமான் றினநுமக்குப் புரிதொழிற்குப்
பொய்தொட்டுப் புறம்போகும் புலைமனமோ வெகுமதியே.
ஒன்றாய்ச் செய்து ஒட்டும் என்க.

88. தன்மனைக்குத் தன்னூர்க்குத் தன்னாட்டிற் குலகினுக்கு
நன்மனத்திற் செயத்தக்க நலத்தசெயல் பலப்பலவாம்
இன்மதிப்பின் மிகுமூரு ரினிநாடு நாட்டினுல
கென்மதிப்பு மெண்ணும லிவைக்கியற்றல் கடப்பாடே.

89. பெரியவர்போற் சிறியவரும் பெருஞ்செயல்கண் முடிப்பதனுக்
குரியவரென் றிலரேனு முளவரைக்கு மியல்வதனைத்
தெரியளவி லியற்றுவதே செகத்தினுட ளெழுகுவதாம்
பரிதிபொரா மதியுடுக்கள் படிக்கொளிர்தல் பாரீரோ.
பரிதிபொரா-சூரியனுக்கு ஒப்பாகாத. மதியுடுக்கள்-சந்திர நக்ஷத்திரங்கள்.

90. மெய்க்காவன் மருத்துவமு மெய்க்கெல்லா மினிதூட்டுஞ்
செய்க்காவன் மருத்துவமுஞ் செறுக்காலி மருத்துவமும்
பொய்க்காவல் லாளர்தொழில் புவியினுக்கு வேண்டுமிவை
எய்க்காவன் பாற்புரியி னிந்நாடு பொன்னுடே.
மெய்க் காவல்-உடற் காப்பு. செய்க் காவல்-வயற் பயிர்களைத் காத்தல். செறுக்காலி-வயலுக்கு முயலும் ஆனிரைகள். எய்க்கா அன்பு-இளைக்கா அன்பு.

91. மகவழுக்கன் பாற்றுடைக்கு மதித்தாய்போற் றம்மூரின்
மிகவழுக்குப் புகுமாயின் வெறுததுடைத் தினிதாக்கி
நகவழுக்கு மிலையாக நாடொழுக முயல்பவருக்
ககவழுக்குக் கிடையாதா லவருயிர்தான் றாயதரோ.

92. பாம்படிக்க வாண்மகனைப் பார்க்கவெனுங் கணவனெதிர்
காம்படித்தோண் மனையாட்டி கண்டருளீர் யாவிரென
வேம்படிக்குச் சினந்தான்போன் மெய்வலியும் மனவலியும்
போம்படிக்குத் தொழில்விடுத்தார் பொய்களவிற் புகுபவரே.

காம்படித் தோள்-மூங்கிலடிபோன்ற தோள்; மூங்கிலடி-அடி மூங்கில்; நுனி மூங்கில் அல்லாதது.

93. வாய்மையிலேம் வறியார்க்கு வழங்குதிறந் தினையுமிலேந்
தாய்மையிலேம் பெருந்தொழிற்குத் தளராத மனமுமிலேம்
பேய்மையிரு டிரிந்தாங்குப் பெருங்கடலு நெடுவிசும்புஞ்
சேய்மையிலே மெனவிரைந்து செலுநாக ரிகமுளமே.

பேய் மையிருள் திரிந்தாங்கு-பேய்கள் கரிய இருளிற்றிரிந்தாற் போல. சேய்மையிலேமென-தூரம் இல்லேமென்னும்படி.

94. தள்ளாத வறுமையொடு சமர்புரிந்து தம்முடம்பிற்
கொள்ளாத புண்ணெல்லாங் கொண்டுமனம் பெருங்கவலைக்
குள்ளாத லின்றிவினை யொருவாளின் வென்றவர்தம்
எள்ளாத நறும்புகழ்தா னிப்புவியின் மணப்பதுவே.

95. பல்வகைய தொழில்விளைக்கும் பயனென்று நறுமலரை
நல்வகையன் பெனுநாரி னனிதொடுத்து வறுமையினை
வெல்வகையால் வாகையினை மிலைச்சுதற்கு மேதினியோர்
ஒல்வகையான் முயலாரே லுடலெடுத்த பேறிலரே.

96. மெய்யோநங் கடவுளுக்கு விழைதக்க விழுக்கோயில்
பொய்யோவுட் புகாதபடி புறந்தந்து தீதடர்தா
றையோவுள் வளராம லகங்காத்து வினையோகஞ்
செய்யேமேல் விலங்கினிலைத் திறம்வேறு பட்டுளமோ.

97. தான்வாழ்தன் முதலெண்ணுன் றன்னுடு வாழ்வதற்கே
ஊன்வாழ்ந்து தொழின்முயலு மொருவன்றன் னுள்ளன்பு
மீன்வாழும் புனல்போல மேதினிக்கின் றமையாதன்
னுன்வாழ்வு புகழாமல் லார்வாழ்வு வசையாமால்.

அன்னுன் வாழ்வு என்க.

98. உழிற்சிறப்பென் றெண்ணுப்பே ரூராருக் கவர்வதியும்
பொழிற்சிறப்பார் புரச்சிறப்பும் புனைதருமா வணச்சிறப்பும்
எழிற்சிறப்புங் கடவுளர்கோ யிற்சிறப்பு மெல்லாமத்
தொழிற்சிறப்பா னிலவவெனச் சொல்லாரோ வல்லோரே.

உழின்-உழுதால். பேரூரார்-மஹா நகரத்தார். ஆவணம்-கடை வீதி.

99. பழிச்சிறப்பி லிசைபெற்ற பருணிதர்நற் கடவுளையே
தொழிற்சிறப்பு வருமென்று துணிந்தாலுந் தமக்கோரோர்
தொழிற்சிறப்பு மீக்கொண்டு தொல்லுயிருக் குதவியது
பொழிற்சிறப்பார் நாவலந்தண் பொழிற்குரைக்க வேண்டுவதோ.

பழிச்சு இறப்பு இல் இசை என்க.

தொழின் சிறப்பு வரும்-தொழுதால் வீடு வருவதென்று. பருணிதர்-அறிவு சிறந்தோர்.

100. ஒள்ளியவோர் குழையொருவ னுயர்மேழி யேந்தியதும்
வள்ளுவர்நூ னூற்றதுவும் வசிட்டர்பசு வோம்பியதும்
தெள்ளுசன கன்வினையுந் திருந்தறவே டன்செயலும்
விள்ளுசப ரிப்பெரியாள் விழுத்தொண்டுந் தொழில்விளக்கே.

ஒள்ளியவோர் குழையொருவன்-பலராமன். அறவேடன்-தர்ம வியாதன்.

ஆக்கியோன் பேயர்

நிலச்சேவை யிதுவென்று நினைந்துதொழிற் சிறப்புரைத்தான்
குலச்சேம நயித்துருவ காசிபனுர் கோத்திரத்தோன்
நலச்சேது காவலவர் நாவலவன் நன்முகவைப்
புலச்சேட னடிமலரைப் புனையுமிரா கவகவியே.

குலச்சேமம்-குடிக்காப்பு. புலச்சேடன்-அறிவு நிறைந்த சேஷாவதானியார்; இவர் இந்நூலாசிரியர் அருமை மாதுலரும் ஆசிரியரும் ஆவர்.




# அணுவின் அமைப்பும் புதிய இரஸவாதமும்

(507-ம் பக்கத்தொடர்ச்சி)

கே. ஸி. வீரராகவையர்

**1. பீடிகை.**

மூந்திய வியாசத்தில் இரஸவாதம் என்பது எது என்றும், பழைய இரஸவாதம் இறப்பைத் தவிர்த்தலேயும், எஞ்ஞான்றும் இளமையுடன் இருத்தலேயும், பொருள் நனிகுவித்தலேயுமே அடைவதில் இன்ன பாடுபட்டது என்றும், நமது இருபதாம் நூற்றாண்டில் எல்லாப் பொருள்களும் 92 தனிப் பொருள்களாலாகியனவென்று ஆராய்ச்சியால் அறியப் பட்டதென்றும், அவைகளை ஒன்றுக்கொன்று மாற்ற முடியுமா என்ற கேள்வி ஆராயப்பட்டு வருகிறதென்றும் ஒருவாறு விளக்கி னேன். இப்பொழுது தனிப்பொருள்களின் அமைப்பு என்ன? அந்த அமைப்புகளை எவ்வாற்ருலும் மாற்ற முடியுமா, அதாவது ஒரு தனிப்பொருளை மற்ருென்ருக மாற்ற முடியுமா? என்ற கேள்வி களைப்பற்றிச் சிறிது ஆராய்வேன்.

**2. தனிப் பொருள் கள்.**

உலகத்திலே காணப்படும் பொருள்களை எல்லாம் சோதனை செய்த இரஸாயனிகள், "அவைகளெல்லாம் மொத்தம் 92 தனிப்பொருள்களால் ஆக்கப்பட் டவை" என்று நிர்ணயித்து வெளியிட்டிருக்கி ருர்கள். இந்தத் தொண்ணூற்றிரண்டு தனிப்பொருள்களில் இரண்டு, இரஸாயனிகள் வலையில் அகப்படாமல் ஒளிமறைவா யிருக் கின்றன; மற்றத் தொண்ணூறும் நன்கு ஆராயப்பட்டுள்ளன. இவை களிற் பதினென்று வாயுநிலையில் உள; இரண்டு திரவ நிலையிலுள; ஏனைய எழுபத்தேழும் கட்டி நிலையிலுள்ளவாகும். இவைகள் ஒன் றுக்கொன்று சம்சர்க்கம் செய்யப்பெற்றுச் சேர்க்கைப் பொருள் களைத் தருகின்றன. இத் தனிப்பொருள்களும் சேர்க்கைப் பொருள் களும் கலந்து எண்ணிறந்த மிசிரப் பொருள்களைத் தருகின்றன. உதாரணமாக, இரும்பு பிராணவாயு இரண்டும் தனிப்பொருள்கள்;

இவை இரண்டும் சேர்ந்தால் தரு என்ற சேர்க்கைப் பொருள் ஏற்படுகிறது. இந்தத் தருவை உப்புடனாவது சர்க்கரையுடனாவது கலந்துவிட்டால், மிசிரப் பொருள் கிடைக்கும். நம்மைச் சுற்றிலுமுள்ள காற்று, பல வாயுக்கள் கலந்த ஒரு மிசிரப் பொருள்; மழை ஜலம், உப்பு, சர்க்கரை என்பன சுத்தச் சேர்க்கைப் பொருள்கள்; இவை தம்முள் கலந்தால் மிசிரப் பொருள் கிடைக்கும். பால் ஒரு மிசிரப் பொருள்.

**3. தனிப் பொருள்களின் சேர்க்கை விதி.**

தனிப்பொருள்கள் தம்முள் எப்படிச் சேர்கின்றன என்ற விஷயம் பதினெட்டாம் நூற்றாண்டில் பெரிதும் ஆராயப்பட்டது. ஆங்கிலநாட்டு பிரீஸ்ட்லி பாதிரியும் (1733-1804), காவேண்டிஷ் பிரபுவும் (1731-1810), ஸ்வீடன் தேசத்து மருந்துக் கடை வியாபாரியும் வைத்தியருமாகிய ஷீலேயும் (1742-1786), பிரான்ஸ் தேசத்து இரஸாயன ஞானியாகிய லவாய்சியரும் (1743-1794) இந்த விஷயத்தை விரிவாக ஆராய்ந்தனர். இவர்களில், லவாய்சியர், 'நவீன இரஸாயன சாஸ்திரத்துக்குத் தந்தை அல்லது மூல புருஷர்' என்று இன்றும் கருதப்படுகிறார். இவர்தாம் பொருள்கள் விகாரமடைகின்றபொழுது என்ன எடை மாறுபாடு ஏற்படுகிறதென்று கவனித்தலின் அவசியத்தைக் காட்டி, தராசைப் பெரிதும் உபயோகித்தலை வற்புறுத்தினர். தராசு மிகுதியாக உபயோகத்தில் வர வர, பொருள்களின் சேர்க்கை மாறுபாடுகளும் ஓர் எடை வரம்பில் அகப்பட்டன. அதாவது, ரஸம் பிராண வாயுவுடன் சேர்ந்து ஒரு சிவந்த ரஸ ஆக்ஸைட் என்ற சேர்க்கைப் பொருளைத் தருகிறது. இந்த மாறுபாட்டைச் சோதித்து அறிவதில் லவாய்சியர் பல மாதங்களைச் செலவிட்டனர். இன்னும் அந்த ரஸ ஆக்ஸைடைக் காய்ச்சினால் அது பிராண வாயுவை விலக்கி ரஸமாகப் பிரிந்துவிடுகிறது. இப்படித் தனிப்பொருள்கள் சேரும் போது, குறிப்பிடப்பட்ட எடை அளவிலேதான் சேருகின்றன என்று கண்டுபிடிக்கப்பட்டது. அதாவது 100 பங்கு (எடை) ரஸம் எப்பொழுதும் எட்டுப் பங்கு (எடை) பிராணவாயுவுடன் சேருகிறதென்று தெளியப்பட்டது. அப்படியே ஒரு பங்கு எடை ஜலவாயு (ஹைட்ரஜன்) எட்டுப் பங்கு எடை பிராணவாயு (ஆக்ஸிஜன்) வுடன் சேர்ந்து ஒன்பது பங்கு எடை ஜலத்தைத் தருகிறது. இவை தாறுமாறாகத் தோன்றியவண்ணம் எடை அளவில் சேராமல் எப்பொழுதும் குறிப்பிட்ட எடை அளவில் தான் சேருகின்றன என்பது விசதமாயிற்று. இன்னும், இரண்டு தனிப் பொருள்கள் ஒன்றுக்கு மேற்பட்ட சேர்க்கைப் பொருள்களைத் தந்

தால், அத் தனிப்பொருள்களுள் ஒன்றின் எடையை இரண்டு சேர்க்கைப் பொருள்களிலும் சமமாகப் பாவித்து, மற்றொன்றின் எடையை நிதானித்துப் பார்த்தால், அது ஒன்றில்விட மற்றொன்றில் முழு எண் அளவாக அதிகமா யிருப்பதேயல்லாமல், பின்னமாக அமைவதில்லை என்று காணப்பட்டது. உதாரணமாக, ஜல வாயுவும் பிராண வாயுவும், ஜலம், ஹைட்ரஜன் பேர் ஆக்ஸைட் என்ற இரண்டு சேர்க்கைப் பொருள்களைத் தருகின்றன. அவைகளில் ஜல வாயுவின் எடையை ஒன்று என்று வைத்துக்கொண்டால், பிராண வாயுவின் எடை முறையே 8, 16 என்று அவைகளில் ஏற்படுகிறது. அதாவது ஜலத்தில் காண்பதைக் காட்டிலும் ஹைட்ரஜன் பேர் ஆக்ஸைட்டில் பிராண வாயு இரண்டு மடங்கு காணப்படுகிறது; கால், அரை முதலிய பின்னங்களாகக் காணப்படவில்லை. இவ்வாறு எல்லாத் தனிப்பொருள்களும் தம்முள் குறிப்பிட்ட எடை அளவுகளில்தான் சேர்ந்து சேர்க்கைப் பொருள்களைத் தருகின்றன.

ஏன் தனிப்பொருள்கள் இவ்வாறு முழு எண் அளவுகளில் சேர்கின்றன என்ற ஆராய்ச்சி பிறந்தது. இதை விளக்குவதற்கு இங்கிலாந்து தேசத்தில் டால்டன் (1766-1844) என்ற ஒரு பிரபல இரஸாயனி 1803-ம் வருஷத்தில் பழைய அணுவாதத்தை உயிர்ப்பித்தார். 2000 வருஷங்களுக்கு முன்பு இந்தியாவிலும், கிரீஸ் தேசத்திலும், இதாலியாவிலும் உள்ள சில அறிஞர்கள் வஸ்துக்களின் அமைப்பை ஆராய்ந்தறிந்துபிரத்தியக்ஷத்தினாலும் அனுமானத்தினாலும் வஸ்துக்கள் அணுக்களா லாக்கப்பட்டுள்ளன என்ற ஒரு கொள்கையை வெளியிட்டிருந்தனர். நமது நாட்டில் இக்கொள்கையை அனுசரிப்

### 4. அணுவாதம்—பழைய காலம்.



ஜான் டால்டன்.

பவர்களுக்கு 'நையாயிகர், வைசேஷிகர்' என்று பெயர். இவர்களுடைய ஆசாரியர்களின் பெயர்கள் முறையே அக்கபாதர் (காலில் கண்ணுண்டானவர்), கணாதர் (அணுவை உண்பவர்) என்பன. இவர்களது கொள்கை, "அணுவென்பது எல்லாவித ஜடப்பொருள்களிலும் சிறிது; அணுக்கள் கூடியே பொருள்கள் உண்டாகின்றன'' என்பதாகும். இதுவே மணிமேகலையில் பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது:

"வைசே டிகநின் வழக்குரை யென்னப்
பொய்தீர் பொருளுங் குணமுங் கருமமும்
சாமா னியமும் விசேடமுங் கூட்டமும்
ஆமாறு கூறு மதிற்பொரு ளென்பது
.....................................
பொருளுங் குணமுங் கரும மியற்றற்
குரிய வுண்மை தருமுதற் பொதுத்தான்
போதலு நிற்றலும் பொதுக்குண மாதலிற்
சாதலு நிகழ்தலு மப்பொருட் டன்மை
ஒன்றணுக் கூட்டங் குணமுங் குணியுமென்
றொன்றிய வாதியு முரைத்தனன்'' (27-ம் காதை, 241-262)

(ஒன்று அணு—விசேஷம் அணுவிலுள்ளது; இவ்வணுக்களின் கூட்டமே குணமுங் குணியுமாகிய பொருள்களாகின்றன என்பது கருத்து) இம்மாதிரியான கருத்துக்களையே கிரீஸ் தேசத்தில் டிமாகிரிட்டஸ் (கி. மு. 460—361), எபிக்யூரஸ் (கி. மு. 342—270), இதாலிய தேசத்தில் லுகிரீஷியஸ் (கி. மு. 95-52), என்னுமிவர்கள் தம் தம் மொழிகளில் பத்திய ரூபமாக வெளியிட்டுள்ளார்கள். இந்தியா, கிரீஸ், இதாலியா முதலிய தேசங்களில் உலாவிய இக்கொள்கை கருத்தளவாகவே பல நூற்றாண்டுகளாகப் பல நாடுகளில் பரவி வந்தது. அதற்கு எண் அளவை கொடுத்துப் பல விதிகளை ஏற்படுத்திப் புத்துயிர் அளித்து ஓர் ஒழுங்குக்குக் கொண்டுவந்தவர் ஆங்கில தேசத்துச் சிறந்த இரஸாயனியாகிய டால்டன் பிரபுவாவர்.

**5. டால்டனின் அணுவாதம்.**

மகா கணிதசாஸ்திர மேதாவியாகிய நியூடனுக்கும் அணுவாதத்தில் நம்பிக்கை இருந்தது. அவர் எழுதிய நூல்களையும் டால்டன் வாசித்திருந்தார். ஆகவே தாம் சோதித்து அறிந்த விஷயங்களை விளக்குவதற்குப் பழைய அணுவாதத்தை உருப்படுத்தினர். அவர் கொள்கையின் சாரமாவது:

1. ஒவ்வொரு தனிப்பொருளும் நுண்ணிய அணுக்களாலாயது. இரஸாயன மாறுபாடுகளில் அவைகளின் தனிக்குணங்கள் மாறுபடாமல் இருக்கின்றன.

2. ஒரே தனிப்பொருளின் அணுக்கள் ஒரே தன்மையனவாயிருக்கின்றன; நிறை, ஆகிருதி, கட்டி, நிறம் ஆகிய குணங்களில் ஏற்றத் தாழ்வு கிடையாது; ஒவ்வொரு தனிப்பொருளும் தன் அணுவின் நிறையால் அறியப்படும்.

3. தனிப்பொருள்களின் இரஸாயன மாறுபாடுகள் அவைகளின் அணுக்கள் சமீபத்தில் அணுகிச் சேருவதால் ஏற்படுகின்றன. அப்படிச் சேருகிற அணுக்களும் சிறு எண்களாகவே நேருகின்றன; அதாவது, ஹைட்ரஜனின் இரண்டு அணுவும் பிராணவாயுவின் ஓர் அணுவும் சேர்ந்து ஒரு மாலிக்கியூல் ஜலம் ஏற்படுகிறது; இப்படியே அணுக்கள் 1: 1, 2: 1, 2: 2, 3: 2 அல்லது 1: 3 என்ற விகிதத்தில் சேர்கின்றன.

இந்த மூன்று ஊகத்தினுலும், இரஸாயன மாறுபாடுகளின் நிபந்தனைகளையெல்லாம் விளக்க முடியும். ஆனல் அணு வெகு நுண்ணியது; கண்ணுல் பார்க்க முடியாதது; கையில் ஆளமுடியாதது. ஆயினும் எடையில் வெகு தாழ்வாயுள்ள தனிப்பொருளாகிய ஹைட்ரஜனின் எடையை ஒன்முக மதித்து மற்றத் தனிப்பொருள்கள் சேரும் விகித எடையை, அணுவின் தாரதம்மிய எடையாகப் பாவிக்கலாமென்று டால்டன் ஊகித்து விளக்கினுர். இம்மாதிரியாக ஒரு தனிப்பொருளின் அணுவின் தாரதம்மிய எடை உண்டாகியது. அது ஒரு எண்; அந்த எண் அந்தத் தனிப்பொருளின் அணு ஒரு ஹைட்ரஜன் அணுவை விட எவ்வளவு மடங்கு கனமுள்ளது என்பதையே குறிக்கும். அம்மாதிரியாக, அந்தக் காலத்தில் தெரிந்திருந்த தனிப்பொருள்களின் அணுக்களின் தாரதம்மிய எடைகளைக் கண்டு பிடிக்கப் பல இரஸாயனிகள் பாடுபட்டுப் பல வழிகளை கண்டு பிடித்தனர். டால்டன் இரஸாயனியால் ஊகித்தறியப்பட்ட அணுக்களின் தாரதம்மிய எடையே பிற்காலத்து இரஸாயனக் கலையின் முற்போக்கான அபிவிருத்திக்கு அடிப்படையாக நேர்ந்தது. கிருஸ்துவர்கள் பைபிளை நம்புவது போலும் ஹிந்துக்கள் வேதங்களை நம்புவது போலும் இரஸாயனிகள் தனிப் பொருள்களின் தாரதம்மிய எடையை நம்பி வருகிறுர்கள்.

**6. தனிப் பொருள்களின் தோற்றக் காலவரையறை.**

டால்டன் அணுவாதத்தை உயிர்ப்பித்த (1803) காலத்தில் ஏறக்குறைய 28 தனிப்பொருள்களே தெரிந்திருந்தன. அது வரை பொருள்களின் குணங்களையும் மாறுபாடுகளையும் அறிவதற்குத் தீயே பெரிய சக்தியாக உபயோகத்திலிருந்தது. அப்பொழுது தான் இதாலிய தேசத்து வால்டா என்ற அறிஞர் மின்சார சக்தியைச் சோதனைச் சாலைகளில் உபயோகிப்பதற்கு ஆரம்பித்தார். பிறகு அந்தச் சக்தியின் உதவியைக் கொண்டு இரஸாயனிகள் பொருள்களின் குணங்களை ஆராய்ந்தனர். அப்படி ஆராய்ந்ததில் 1830-ம் வருஷம் வரை தனிப்பொருள்கள் தெரிந்தன. இவைகளின் தாரதம்மிய அணு எடைகளும் நிர்ணயிக்கப்பட்டு வந்தன.

பின்னர் ஸ்பெக்ட்ராஸ்கோப் என்ற கருவி உபயோகத்துக்கு வந்தது. அதன் மூலமாக இன்னும் பொருள்கள் தனிப் பொருள்களாகத் திகழ்கின்றன எனத் தெரிந்தது. பின்னர் 1900-ம் வருஷம் வரை மேலும் 17 பொருள்கள் தனிப் பொருள்கள் என அறியப்பட்டன. 1900-ம் வருஷம் முதல் நாளது தேதி வரை மேலும் 17 பொருள்கள் தனிப்பொருள்கள் என அறியப்பட்டன. இப்படியாகப் பல்லாயிரங்களாக நம்மைச் சுற்றிலும் காணப்படுகிற பொருள்கள் மொத்தம் 90 தனிப் பொருள்களாலேயே ஆக்கப்பட்டிருக்கின்றன என்று தெரிய வருகிறது. இன்னும் இரண்டு தனிப்பொருள்களே அறியக் கிடக்கின்றன என்றும் ஊகிக்கப்படுகிறது.

**7. தனிப் பொருள்களின் குடும்பப் பாகுபாடு.**

'இப்படி 90 தனிப்பொருள்கள் இருக்கின்றனவே ; இவைகள் சேர்ந்து ஏற்படும் பொருள்களோ ஆயிரக் கணக்காக ஏற்பட்டிருக்கின்றனவே ; இவைகளை எப்படிப் பகுத்தறிவது ?' என்ற விசாரணை பிறந்தது. தனிப்பொருள்களின் அணுக்களின் தாரதம்மிய எடை நன்கு நிர்ணயிக்கப்படவே, ருஷியாதேசத்து இரஸாயனி மேண்டலீப் என்றவர் 1869-ம் வருஷ வாக்கில் அத் தாரதம்மிய அணு எடைப்படி தனிப்பொருள்களை வரிசையாக அடுக்கிப் பார்த்தார். அப்படிச் செய்ததில் ஓர் ஒழுங்கு அமைவதைக் கண்டார். அந்த ஒழுங்குக்குச் சங்கீதத்தில் சப்தஸ்வரத்தின் பாங்கைப் பின்பற்றுவதை ஒப்பிட்டார். மேண்டலீப் காலத்தில் ஏறக்குறைய அறுபது தனிப்பொருள்கள் தெரிந்திருந்தன. அவைகளைப் பின் தாரதம்மிய அணு எடைக் கிரமத்தில் அடுக்கினதில் எட்டாவது தனிப் பொருளின் குணங்கள், முதல் தனிப்பொருளின் குணங்களைப் பலவிதத்திலும் ஒத்திருந்தன ; அதே மாதிரி இரண்டாவதும் ஒன்பதாவதும், மூன்றுவதும் பத்தாவதும் ஒத்திருந்தன. பிறகு 15-வது தனிப்பொருள் ஒன்று, எட்டு ஆகிய தனிப்பொருள்களை ஒத்திருந்தது ; இப்படியே 16-வது தனிப் பொருள் இரண்டையும் ஒன்பதையும் ஒத்திருந்தது. இப்படிக் கணக்குப் போட்டு வந்ததில் சில தனிப்பொருள்கள் சரியான ஸ்தானத்தில் அமையவில்லை. ஆகையால் மேண்டலீப் அந்த ஸ்தானங்களைக் காலியாக விட்டு விட்டு மேல் ஸ்தானத்துக்குச் சென்றார். இக் காலி ஸ்தானத்துக்கு உரிய தனிப் பொருள்கள் அப்பொழுது தெரியவில்லையென்றும், பின்னர்க் கண்டு பிடிக்கப்படலாம் என்றும் ஜோஸியம் சொன்னர். அப்படிச் சொல்லிப் பத்து வருஷங்களுக்குள் அவர் குறிப்பிட்ட குணங்களோடு காலி ஸ்தானங்களில் அமைய வேண்டிய மூன்று தனிப் பொருள்கள் பிரான்ஸிலும் ஜெர்மனியிலும் ஸ்வீடனிலும் கண்டு பிடிக்கப்பட்டன. இவை அவர் ஜோஸியத்துக்குப் பெரிய ஜயத்தைக் கொடுத்தன. பின்னர் மற்றக் காலியிடங்களும் நிரப்பப்பட்டன. பின்வருங் கட்டத்தில் காணுகிறபடி இப்பொழுது இரண்டே காலியிடங்கள் (85, 87) இருக்கின்றன.

## தனிப்பொருள்களின் அணுக்களின் எடைக் கிரமக் கட்டம்

| அடுக்கு | தடும்பங்கள் | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 0 | I | II | III | IV | V | VI | VII | VIII |
| 1 | | 1 ஹைட்ராஜன் (1.008) | | | | | | | |
| 2 | 2 ஹீலியம் (4) | 3 லிதியம் (6·94) | 4 பெரில்லியம் (9·1) | 5 போரான் (10·9) | 6 கார்பன் (கரி) (12.00) | 7 நைட்ரஜன் (14·00) | 8 ஆக்ஸிஜன் (16) | 9 புலோரின் (19) | |
| 3 | 10 நியான் (20·2) | 11 சோடியம் (23) | 12 மக்னீஷியம் (24·32) | 13 அலுமினம் (27·1) | 14 சிலிக்கன் (28·3) | 15 பாஸ்பரஸ் (31·04) | 16 கந்தகம் (32·06) | 17 குலோரின் (35·46) | |
| 4 | 18 ஆர்கான் (39·9) | 19 பொட்டா ஸியம் (39·1) | 20 கால்ஸியம் (40·07) | 21 ஸ்காண்டியம் (45·1) | 22 டிடேனியம் (48·1) | 23 வனேடியம் (51) | 24 குரோமியம் (52) | 25 மாங்கனிஸ் (54·93) | 26 இரும்பு (55·89) 27 கோபால்ட் (58·97) 28 நிக்கல் (58·68) |
| | | 29 செம்பு (63·57) | 30 துத்தநாகம் (65·37) | 31 காலியம் (70·1) | 32 ஜெர்மனியம் (72·5) | 33 ஆர்சனிக் (74·96) | 34 செலினியம் (79·2) | 35 புரோமின் (79·92) | |

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 5 | 36 கிரிப்டன் (82·92) | 37 ருபிடியம் (85·45) | 38 ஸ்டாண்ஷியம் (87·63) | 39 இட்டிரியம் (89·33) | 40 சாக்கோனியம் (90.6) | 41 நியோபியம் (93·1) | 42 மாலிப்டனம் (96) | 43 மசூரியம் ? | 44 ருதேனியம் (101·9) 45 ரோடியம் (102·9) 46 பல்லேடியம் (106·7) |
| | | 47 வெள்ளி (107·88) | 48 காட்மியம் (112·4) | 49 இண்டியம் (114·8) | 50 தகரம் (118·7) | 51 அண்டிமனி (120·2) | 52 டெல்லூரியம் (127·5) | 53 ஐயோடின் (126·92) | |
| 6 | 54 வீனன் (130·2) | 55 வியியம் (132·81) | 56 பேரியம் (137·37) | 57—71 15 அபூர்வ மூலப்பொருள்கள் | 72 ஹப்னியம் (179) | 73 டாண்டலம் (181·5) | 74 டங்ஸ்டன் (184) | 75 ரீனியம் | 76 ஆஸ்மியம் (190·9) 77 இரிடியம் (193·1) 78 பிளாட்டினம் (195·2) |
| | | 79 தங்கம் (197·2) | 80 ரஸம் (200·6) | 81 தாலியம் (204) | 82 ஈயம் (207·2) | 83 பிஸ்மத் (208) | 84 பொலோனியம் (210) | 85 தெரியவில்லை | |
| 7 | 86 ரேடான் (222) | 87 தெரியவில்லை | 88 ரேடியம் (225·96) | 89 அக்டினியம் ? | 90 தோரியம் (232·15) | 91 யுரேனியம் எக்ஸ் II ? | 92 யுரேனியம் (238·17) | | |

[பெரிய எண்கள் தனிப்பொருள்களின் கிரம எண். நகவளைவுக்குள் உள்ள எண்கள் பொருள்களின் அணு எடை இலக்கங்கள். 85, 87 எண் தனிப்பொருள்கள் கண்டுபிடிக்கப்படவில்லை.]

இந்தக் கட்டத்தில் பூஜ்யம் முதல் எட்டுக் குடும்பங்களிருக்கின் றன. பூஜ்யக் குடும்பத்தில் ஹிலியம், நியான், ஆர்கான், கிரிப்டன், ஸீனன், ரேடான் என்ற ஆறு தனிப் பொருள்கள் உள. இவை ஆறும் வாயுக்கள். முதல் ஐந்தும் நம்மைச் சுற்றியுள்ள காற்றில் ஆயிரக்கணக்கான வருஷங்களாக இருந்த போதிலும் முப்பத் தைந்து வருஷங்களுக்கு முன்பு தான் கண்டு பிடிக்கப்பட்டன. நாளதுவரை அவைகள் தம்முடனாவது அல்லது வேறு தனிப் பொருளுடனாவது சேர்ந்து யாதொரு சேர்க்கைப் பொருளையும் தரவில்லை. ஆயினும் அவைகள் நமக்கு வெகுவாய் உபயோகப் படுகின்றன. இப்படிப் பல குணங்களிலும் ஒத்திருப்பதால் அவைகள் ஒரே குடும்பத்தன எனக் கருதப்படுவன. இதேமாதிரி ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழு, எட்டு ஆகிய குடும்பங்களிலுள்ள மற்றத் தனிப்பொருள்களும் தத்தம் குடும்பங் களைச் சேர்ந்தனவாகும். முதல் குடும்பத்தில் லிதியம், சோடியம், பொட்டாசியம், ருபிடியம், ஸிஸியம் என்பன ஒரு கொடியின்வழி யின. செம்பு, வெள்ளி, தங்கம் முதலியன சில வேறுபாடுகளுட னாகிய மற்றொரு கொடி வழியின. இரு கொடியும் ஒரு மூலத்தின் வழியே. இதே மற்றக் குடும்பத் தனிப்பொருள்களிலும் குடும்பச் சாயைகள் தெரிகின்றன.

பிறிது பிறிதாகத் தோன்றின தொண்ணூற்றிரண்டு தனிப் பொருள்களையும் ஒன்பது குடும்பங்களாகப் பிரித்ததினாலே, இந்த ஒன்பது குடும்பங்களின் நடவடிக்கைகளை நன்கு தெரிந்துகொண்டு விட்டால், அந்தக் குடும்பங்களில் உள்ள தனிப்பொருள்களின் குணவிசேஷங்களை இலகுவில் நிர்ணயித்து விடலாம். இதுவே இரஸாயன சாஸ்திரம் படிப்பவர்களுக்குச் சுலப வழிகாட்டியாக உளது.

**8. பிரௌட்டின் கோள்கை.**

1815-ம் வருஷத்தில் பிரௌட் (1785-1850) என்ற அறிஞர் தனிப்பொருள்களின் அணுக்களின் தாரதம்மிய எடைகளில் பல முழு எண்களாகத் தோன்றுவதனால் அவைகள் எல்லாவற்றுக்கும் ஒரு பொதுவான பிரதமத் தனிப்பொருள் ஒன்றே அடிப்படையாக இருக்க வேண்டுமென்று ஊகித்து வெளியிட்டார். அது ஹைட்ரஜனாக இருக்கலாமென்றார். இதை மறுத்தார் பலர். சில அணுவின் எடைகள் பின்னங்களாகவே தோன்றின. இது விஷயத்தில் வெகு சிரம மெடுத்துக்கொண்டு பெல்ஜியன் இரஸாயனி ஸ்டாஸ் என்பவர் (1860) அணுவின் தாரதம்மிய எடைகளை ஏற்றக் குறைவின்றித் திருத்தமாய் நிர்ணயித்தார். குலோரின் 35. 45, பொட்டாசியம் 39. 14 எனத் திரும்பத் திரும்ப ஏற்பட்டன. ஆதலின் பிரௌட்

கொள்கை ஏற்றுக்கொள்ளப்படவில்லை. ஆனல் இந்நூற்ருண்டில் அது திரும்பவும் உயிர்ப்பிக்கப்பட்டுள்ளது.

9. நமது சங்கல்பம்.

இதுவரையும் சொல்லியதிலிருந்து, பொருள்கள் தனிப் பொருள்களாலால் ஆக்கப்பட்டுள்ளன வென்றும், தனிப்பொருள்கள் அணுக்களாலாகியன வென்றும், இத்தனிப்பொருள்களில் சிலவற்றின் அணுக்களின் குணங்கள் பலவிதத்தில் ஒத்திருப்பதினுல் அப்படிப்பட்டவைகளைக் குடும்பங்களாக வகுக்கலாமென்றும், தனிப்பொருள்களை அவைகளின் அணுக்களின் தாரதம்மிய எடைக் கிரமப்படி அடுக்கி வருங் காலத்தில் குணவகையால் அவை ஓரே வரியில் செல்லாமல் மடக்கி மடக்கிப் பன்முறை முதல் வரியின் கீழ் (மேற்காட்டிய கட்டத்தைப் பார்க்க) அமைவதால் முன்சொன்ன குடும்பங்கள் ஏற்படுகின்றன வென்றும் ஒருவாறு தெரிந்துகொண்டோம். இனி இவ்வணுக்களைப் பற்றிச் சென்ற நாற்பது வருஷங்களில் கிடைத்திருக்கும் விஷயங்களை அறிந்தால் புதிய இரஸவாதம் எவ்வளவு தூரம் அனுபவத்தில் வரக் கூடும் என்பதைத் தெரிந்து கொள்ளலாம்; அதாவது இரும்பு அணுவைத் தங்க அணுவாக மாற்றமுடியுமா, அல்லால் இரஸ அணுவைத் தங்க அணுவாக மாற்ற முடியுமா என்ற விஷயத்தை அறிய முடியும்.

(தொடரும்)

# சுத்த ஜலம்

சுசி

## 1. அதன் மாட்சியும் அதற்குப் படும் பாடும்

ஆரோக்கியமான வாழ்வுக்கு நல்ல காற்றும் உணவும் சுத்த ஜலமும் அவசியமென்பது தொன்று தொட்டு யாவரும் அறிந்த விஷயம். இதைக் கருதியே ஒருவனுக்குத் தேக அசௌக்கியம் ஏற்பட்டால் நம்மவர்கள், "அவனுக்கு அந்த ஊர் ஜலம் ஒத்துக் கொள்ள வில்லை" என்று சொல்லுகிறார்கள். அதுபோலவே ஹிந்தி பாஷையில் அயலூரிலிருந்து வந்த நண்பர்கள் ஒருவரை யொருவர் சந்திக்கும் போது, "ஹவா பானி எப்படி யிருக்கிறது?" என்று கேட்கிறார்கள்; அதாவது காற்றும் ஜலமும் எப்படி யென்று கேட்கிறார்கள். வைத்திய சாஸ்திரம் விரிவுற விரிவுறச் சுத்த ஜலம் ஜன சமூகத்தின் ஆரோக்கியத்துக்கு இன்றியமையாதது என்பது தெரிய வருகிறது. காலரா (*Cholera*), டைபாய்டு (*Typhoid*) முதலிய கொடிய கொள்ளை நோய்களும் பல சர்ம நோய்களும் குடிக்கும் நீரின் மூலமாகவும் குளிக்கும் நீரின் மூலமாகவும் பரவுகின்றன என்பதை நிபுணர்கள் கண்டு பிடித்திருக்கிறார்கள்.

ஆயினும், நமது தேசத்தில் சாதாரணமாய் நாக்குவறண்டவுடன் அருகிலுள்ள ஓடையிலோ கிணற்றிலோ தண்ணீர் குடிக்கும் பெரும்பான்மையோர் அது சுத்தமானதா, குடிக்கத் தகுந்ததா என்று ஒரு கணமேனும் சிந்திப்பதில்லை. இப்பெரும்பான்மையோர் தாம் ஆறுகளிலும் கால்வாய்களிலும் கிணறு தடாகங்களினருகிலும் தமது உடல் ஆடைகளிலுள்ள அழுக்குகளையும் மலத்தையும் சிதறிச் சகல ஜனங்களுக்கும் பொதுவான நீர் நிலைகளை அசுத்தப்படுத்தி அபாயகரமான வியாதிகளைப் பெருக்கி விடுகிறார்கள். ஜீவ தயையும் தர்மமும் முக்கியக் கொள்கைகளாகக் கொண்ட அநேகர் இவ்விதம், அறியாமையால், ஜீவஹத்தி விளைக்கிறார்கள்.

அநேக கிராமங்களில் அரசாங்கத்தார் கிருஷித் தொழிலுக்காகக் கால்வாய்களில் தண்ணீர் திறந்து விட்டவுடன் காலரா நோய் ஆரம்பிக்கிறது. ஏனென்றால் நமது ஜனங்கள் பொது ஸ்தலங்களை விடத் தம் வீடுகளைச் சுத்தமாய் வைத்துக் கொள்வதில் அதிக ஊக்கமுடையவர்கள். வீடுகளில் கக்கூசுகள் கட்டுவது அரிது. கிராமக்

கால்வாய், குளம் முதலியவை வறண்டிருக்கும்போது அவற்றை ஊரார் மலக்களஞ்சியங்களாக்குகிறார்கள். அவர்களுக்குக் குடி தண்ணீர் வசதி மிகக்குறைவு. கிருஷித் தொழிலுக்காகக் கால்வாயிலும் குளத்திலும் ஜலம் வந்தவுடன் ஜனங்கள் தாம் செய்த அசுத்தியை மறந்து பட்ட கஷ்டந்தீரக் குளிக்கவும் குடிக்கவும் உபயோகிக்கிறார்கள். காலரா பரவி விடுகிறது. இவ்விதம் அநேக கிராமங்களில் பருவகாலந் தவறினாலும் காலராக் காலம் தவறுவதில்லை. எண்ணெழுத்தறியாத நமது ஏழை ஜனங்கள் பேதி நோயில் பந்துக்களைப் பறி கொடுத்தாலும் விதியின் பேரில் பழியைப் போட்டுவிட்டு அசுசியான வழக்கங்களிலிருந்து அணுவளவும் தவறாது காலந்தள்ளுகிறார்கள்.

இத்தகைய மனிதர்கள் கிராமப்பஞ்சாயத்து, தாலூகா போர்டு, ஜில்லா போர்டு, முனிஸிபாலிடி இவற்றில் அங்கத்தினரானாலும் பொது ஜனங்களுக்கு சுத்த ஜல வசதி ஏற்படுத்த வேண்டுமென்பதைத் தமது முதற் கடமையாகப் பாவிப்பதில்லை. வேறு யாராவது ஏற்பாடு செய்தால் அதற்கு ஆக்ஷேபிக்காமலிருக்கலாம். தங்கள் வீட்டருகில் பெரிய குழாயோ, பம்போ போடும்படி கேட்டுக்கொள்ளலாம். எலெக்டிரிக் லைட் போடுவதானால் கொஞ்சம் சிரத்தையெடுத்துக் கொள்வார்கள். ஆஸ்பத்திரி, பாலம், காரியாலயம் இவை கட்டித் தங்கள் பேர் செதுக்கிய கல் பதிப்பதானால் ஊக்கத்துடன் முயற்சி செய்வார்கள். கல்விக்கும் ஆரோக்கியத்திற்கும் முயற்சி செய்வதில் இவர்கள் அதிக ஊக்கம் காட்டுவதில்லை. "கல்வி அனுபவ முதிர்ச்சியால் ஒவ்வொருவனும் கற்றுக் கொள்ள வேண்டியது; ஆரோக்கியம் விதி வசம்" என்பது இவர்கள் கொள்கை போலும்! "பூமி சிருஷ்டியானது முதல் ஜலத்துக்கு விலை கிடையாதே. அப்படியிருக்கப் பணம் செலவழித்து ஜல வசதி செய்வதும், பின் ஜலத்தை மீட்டர் வைத்து அளந்து கொடுத்து வரி வாங்குவதும் மடமை மட்டுமல்ல, அதர்மம்; இதைவிட ஊக்கமுள்ளவர்கள் ஒரு தண்ணீர்ப் பந்தல் வைக்கட்டும், நீர்மோர் தானம் செய்யட்டும்" என்று நினைக்கும் அங்கத்தினரும் இருக்கிறார்கள்.

அரசாங்கத்தாருக்கும் கல்வி, தண்ணீர் வசதி, சாக்கடைக் குழாய்கள் போட்டு மலத்தை அப்புறப்படுத்துதல் இவ்விஷயங்களில் பணத்தைத் தாராளமாய்ச் செலவிடக் கை கூசுகிறது. அதிலும் பண நெருக்கடியான தற்காலத்தில் வட்டி கட்டாத வேலைகளில் பணச் செலவு செய்ய அரசாங்கத்தார் ஒப்பார். ஆகவே நமது நாட்டில் பெரிய நகரங்களிற்கூடக் குடிதண்ணீர் வசதி மிகக் குறைவாயிருக்கிறது. சென்னையில் கோடை காலத்தில் ஜலத்துக்குப்

படும் கஷ்டமும் குழாய்த் தண்ணீரில் சில வேளைகளில் காணப்படும் அசுத்தமும் துர் நாற்றமும் சென்னை வாசிகளறிவார்கள். திருநெல்வேலி, பாளையங் கோட்டையில் நதியைத் தவிர வேறு வசதி கிடையாது; நதியில் சாக்கடைச் சிற்றாறு ஒன்று நகர் நடுவில் வந்து கலக்கிறது; காலரா வருஷந்தோறும் ஆசீர்வதித்து விட்டுப் போகிறது. சேலத்தில் குடி தண்ணீர் கிடையாது. இன்னும் பல ஊர்களில் பகலில் சிறிது நேரம் தெருவுக்கு ஒரு குழாய் வீதம் ஒழுகும். அப்போது ஊரார், "நான் முந்தி, நீ முந்தி" என்று குடங்களை முட்டிக் கொண்டு சண்டையிட வேண்டும். தண்ணீர் வசதியிருக்கும் ஊர்களிலும் ஜலத்தைச் சுத்தி செய்ய ஏற்பாடுகள் போதியவாறு செய்ய வில்லை.

மற்ற நாகரிக தேசங்களில் சுத்த ஜலத்தைப் பற்றி இவ்வளவு அசட்டையாயிருப்பதில்லை. இலங்கையில் தோட்டங்களில் பெரும் பாலும் ஊற்றுத் தண்ணீரைக் குழாய்கள் மூலம் கூடிய வரை சுத்தமாய் வேலையாட்களுக்குக் கொடுத்து உதவுகிறார்கள். தண்ணீர்க் குழாய்களில்லாத ஊர்களில் ஜனங்கள் ஆற்று நீரைவிட ஊற்று நீரையும் கிணற்று நீரையும் அதிகச் சுத்தமென மதித்து உபயோகிக்கிறார்கள். குளிப்பதற்கு நீர் நிலை வேறு, துணிகள் துவைப்பதற்கு நீர் நிலை வேறு, குடிப்பதற்கு வேறு என்று அநேக ஊர்களில் அதிகாரிகள் வகுத்திருக்கிறார்கள். ஜனங்களும் போலீஸ் உதவியின்றியே வகுத்த இடங்களை மாற்றாமல் குடி தண்ணீரை எடுத்துக் கொள்கிறார்கள். ஐரோப்பா அமெரிக்கா தேசங்களில் கிராமங்களிலும் பட்டணங்களிலும் ஜலம் செவ்வையாய்ச் சுத்தி செய்யப்பட்டுக் குழாய்கள் மூலம் வீடுகளை அடைகிறது. சமூகத்திலுள்ள மலம், குப்பை இவை நீர் நிலைகளை அடையா வண்ணம் இவற்றைச் சேகரித்துச் சுத்தி செய்யவும் நீர் நிலைகளைப் பாதுகாக்கவும் தகுந்த திட்டங்களும் சட்டங்களும் ஏற்படுத்தி இருக்கிறார்கள். ஜலசுத்தி, மலநிவர்த்தி இவ்விரண்டையும் பற்றிய ஆராய்ச்சி பெரிய கலைகளாக வளர்ந்து விட்டன. இவை மேனாடுகளில் கிராமாதிகாரிகளின் முதற் கடமையாகக் கருதப்படுகின்றன.

அநேக நகரங்களுக்குச் சுத்த ஜலம் கொண்டு வருவதற்குச் செலவிட்டிருக்கும் பணத்தையும், செய்திருக்கும் சாகச வேலைகளையும், நியமித்துள்ள கலைவாணர்களையும், மற்றப் பிரயத்தனங்களையும் பார்த்தால் கங்கையைப் பூமிக்குக் கொண்டுவரத் தவமியற்றிய பகீரதன் பிரயத்தனம் எளிதில் முடிந்ததென நினைக்கலாம்!

(தொடரும்)

# கூட்டுறவு முறை

ஊ. சா. வேங்கடராம ஐயர்

## 1. முன்னுரை

நமது நாட்டினர் சில ஆண்டுகளாகக் கூட்டுறவு முறையின் சிறப்பியல்புகளை இனிது உணர்ந்து வருகின்றனர். காரணம், 'மக்களது வாழ்க்கைக்குப் பயன் படுத்திக்கொள்ள முயலும் ஒவ்வொரு துறையும் கூட்டுறவுமுறையின் துணையைப் பெறக்கூடிய தாகவே இருக்கின்றது' என்று பொருளாதார நூல்வல்லோர் கூறுவதாகும். இக் கூற்று முற்றும் பொருந்துவதாகும் என்பது, 'மேல் நாட்டின் பல பகுதியினரும் இச் சிறந்த கூட்டுறவு முறையைப் பின்பற்றிப் பயன்படுத்திக்கொண்டு பல துறைகளிலும் முன்னேறி வருகின்றனர்' என அறியப்படுவதாலும், சிற்சில இடங்களிலே நமது நாட்டிலும் காணப்படும் நற்பயனாலும் உறுதியாகின்றது. இவற்றையன்றி, "ஒத்ததறிவான் உயிர் வாழ்வான்" "ஒன்று பட்டால் உண்டு வாழ்வு" என்ற தண்டமிழ்த் தொண்டர் மொழிகளின் உண்மையும் கூட்டுறவின் மேன்மையை வலியுறுத்துகின்றது. இவற்றால் நமது தமிழ் நாட்டினர் அடிக்கடி கூட்டுறவு முறையைப் பற்றிய முழுச் செய்திகளையும் அறிந்துகொள்வது பெரும்பயன் தருவதொன்றும். அவையும் சுருங்கிய முறையில் இருப்பினும் ஒரே இடத்தில் அறிந்துகொள்ளுமாறு அமைவது எளிதிலே கைவரத் துணைசெய்வதாகும். ஆதலின் அம் முறைபற்றிச் சில இங்கே கூறப்படுகின்றன.

## 2. தோற்றமும் வளர்ச்சியும்

உலகிலே மக்கட் படைப்புத் தோன்றிய காலத்தில் முதலிலே ஓர் ஆண் மகனும், ஒரு பெண்மணியும் படைக்கப் பெற்றனர் எனக் கருதுவோம். அக்கால், இவ்வுலகம் முழுவதும் அவர்களுக்கே உரிமைப் பொருளாக இருந்திருக்க வேண்டும். அந்நிலையில் ஆங்குள்ள பொருள்களை அனுபவிப்பதில் அவர்களுக்கு ஏதும் தடையிருக்கவும் இடமில்லை. அதனால், அவர்கள் தமக்கென எதனையும் சிறப்பாக ஒதுக்கிவைத்துக்கொள்ளவேண்டியதும் இல்லை. எல்லாம் அவர்களுடையனவே.

இனி, காளடைவில் ஒரு கூட்டத்தினர் ஆகின்றனர் என எண்ணுவோம். அக்கால், அன்னர் ஒவ்வொருவரும் தமக்கெனச் சிற்சில நிலங்களை வரம்பு கட்டிக்கொள்கின்றனர். மேலும், அவற்றைத் தங்களது சொந்தப் பொருளாகவும் கருதுகின்றனர். எனினும் அவர்கள் அவற்றை விலைமுதலிய கொடுத்தோ வேறு வகையிலோ பிறரிடமிருந்து தம்முடையனவாக்கிக் கொள்ளவில்லை; இயற்கையிற் கிடைத்தவையே. ஆனல், அவர்களைத் தமதாக்கிக் கொள்ளாமல் தடுப்பவர் யாருமில்லை. இங்ஙனம் முதலிலே நிலைத்து நிலங்களைப் பகிர்ந்து கொண்டவர்கள் இயற்கையிலே செழிப்பானவற்றையே சேர்த்துக் கொண்டிருப்பார்கள் என்பதைக் கூறுவது மிகையாகும்.

இம்முறை வளர வளரப் பின்னே தோன்றியவர்களும் எங்கேனும் ஓரிடத்தில் நின்று, இருந்து, உண்டு, உயிர் வாழவேண்டுமாதலின், அவர்களும் தங்களுக்கெனச் சில நிலங்களை ஒதுக்கிக்கொள்ளப்பார்த்தார்கள். தங்களுக்குக் கிடைத்த நிலங்களைக் காட்டிலும் செழிப்பான நிலப்பரப்புக்களை முன்னே தோன்றிய கூட்டத்தினர் சொந்தமாக்கிக் கொண்டு கஷ்டமின்றிப் பெரும்பயன் பெறுவதைக் கண்டார்கள். தாங்களும் அந்தச் செழிப்பான நிலங்களை அனுபவிக்க விரும்பி அந்த நிலங்களைக் குத்தகைக்கு வாங்கித் தங்களுடைய நிலங்களோடு சேர்த்து அனுபவித்து வந்தார்கள். இதுதான் நிலச்சுவான்தார் என்ற கூட்டத்தினர் தோன்றிய இடம். இந்நெறியிலே பின்னர்த் தோன்றிய கூட்டத்தினர் முன்னர் நிலைத்த கூட்டத்தினரிடத்திலுள்ள சட்டமான நிலங்களைக் குத்தகைக்கு வாங்கிக் கொண்டு தங்களுக்குக் கிடைத்த மட்டமான நிலங்களையும் பண்படுத்தி அனுபவித்து வரலாயினர். இவற்றல் நிலக்கிழவர் தொகை பெருகி வளரலாயிற்று. நிலங்களுக்குக் குத்தகைப் பொருளாகக் கிடைக்கும் பகுதியும் பலதிறப்படுவதாயிற்று. கடைசித்தரமான நிலத்திற்கும், குத்தகைக்குப் பெற்றிருக்கும் நிலத்திற்கும் உள்ள வரும்படியிற் காணப்படும் வித்தியாசமே பகுதி எனப்படும்.

இம்மாதிரியே முன்னே வந்து நிலைபெற்ற ஒவ்வொரு கூட்டத்தினரும் தாம் தாம் சேர்த்துக் கொண்ட நிலங்களைத் தம்முடையனவாக்கிக் கொண்டதுடன் அவற்றுள் செழிப்பானவற்றைத் தமக்குப் பின்னே வந்தவர்களிடம் குத்தகைக்குக் கொடுத்து மிகுந்த இலாபத்தையும் அடைந்து வந்தனர். பின்னே வந்தவர்கள் முன்னே நிலைத்தவர்களுக்குப் பொருள் தேடிக் கொடுக்கும் வேலையாட்களாக மாறினர்கள்.

இங்ஙனமாக, முன்னே தோன்றிய காரணத்தால் நிலச்சுவான்தார் என்ற சிறப்பைப் பெற்றதுடன், பகுதிப் பொருளாகவும்

பெரும் தொகையைப் பெறும் அக்கூட்டத்தினரால் சும்மா இருக்க முடியுமா? முடியாதல்லவா? அவர்கள் தனித்தனியாகவும் ஒன்று சேர்ந்தும் வியாபாரம் முதலிய தொழில்களைச் செய்யத் தொடங்கினார்கள். அக்கால், அவர்கள் தங்களிடத்திலுள்ள முதல் தொகையைக்கொண்டு—முதலாகப் போட்டு—தொழிலை நடத்தவேண்டியிருந்தது. அதனால் அவர்கள், "எங்களுடைய நிலங்களை உங்களது உபயோகத்துக்கு விட்டுக் கொடுத்தோம் ; அதன்பொருட்டுப் பகுதித் தொகையைப் பெற்றுக் கொள்கிறோம். இப்பொழுது எங்களுடைய முதல் தொகைகளை உங்களது உபயோகத்திற்குக் கொடுக்கிறோம்; அதற்கு எங்களுக்கு வட்டி கிடைக்க வேண்டும். நீங்கள் வேலை செய்கின்றீர்கள் ; உங்களுக்குக் கூலி தருகின்றோம். பாருங்கள்! நாங்கள் முதலிலேயே நிலத்த சிறப்புரிமையைப் பெற்றிருந்தும் நியாயமாகவே நடந்து கொள்ள விரும்புகின்றோம்" என்று ஏனையோர்க்கு நியாயம் கற்பிக்கலானார்கள். இஃது எல்லோராலும் மிக்க உயர்வாக மதிக்கப்பட்டது. பாவம்! ஏழைப் பொது மக்களும் உண்மையை உணர்ந்துகொள்ள இயலாதவர்களாகவே இருந்தார்கள். இப்படியே பல காலம் நடை பெறலாயிற்று. ஏன்? இன்றும் பல இடங்களிலும் நடைபெற்று வருகின்றது. நிலச்சுவான்தார் சங்கமாகச் சேர்ந்து தங்களது உரிமையை வற்புறுத்தி வருகின்றனர். முதலாளிகளும் அங்ஙனமே ஒன்று கூடித் தங்களது ஆட்சியை உறுதிப்படுத்துகின்றனர். சிற்சில இடங்களிலே தொழிலாளரும் சின்னாட்களாகச் சங்கமாகச் சேர்ந்து தங்களது இன்றியமையாமையையும் வற்புறுத்தித் தங்களை உயர்த்திக்கொள்ள முயலுகின்றனர். எவ்வளவு முயன்றும் இம் முத்திறத்தினருள் ஒவ்வொருவரும் தங்களது மேன்மைக்குத் துணை செய்கின்றவர் யாவர் என்பதை ஆராய்ந்தறிய மறந்து விட்டனர். அவர்கள் என்ன செய்வார்கள்! 'தட்டிப் பேச ஆள் இல்லாவிட்டால் தம்பி சண்டப்பிரசண்டன்' அல்லவா ?

இந்நிலையில் பொது ஜனங்களிலே சில அறிவாளர்கள் தோன்றலானார்கள். அவர்கள், "நாமும் ஆண்டவனால் படைக்கப்பட்டோம். நமக்கும் இந்த நிலத்தில் நிற்றற்கும், இருத்தற்கும், கிடத்தற்கும் உரிமை இருந்தே தீரவேண்டும். பின்னே தோன்றிய காரணத்தால் முன்னே தோன்றியவருக்கு அடிமையாயிருக்கவேண்டும் என்பது எங்ஙனம் நியாயமாகும்? வேண்டாமென்றால் நாம் எப்படி அவர்களிடமிருந்து நிலம் முதலியவற்றைப் பெறுவது ? அவர்கள் பொருள் வலியராயிருக்கிறார்கள். அவர்களால் நிலையிட்டுக் கொள்ளப்பட்ட அரசாங்கம் அவர்கள் பக்கமாகத்தான் பரிந்து பேசும். அன்றியும்,

அவர்கள் அரசாங்கத்திற்கு வரி செலுத்துகிறார்கள். ஆதலின், அவர்களிடமிருந்து எதனையும் வலிந்து பறித்துக் கொள்வதும், கொள்ள முயல்வதும் முடியாத காரியம். அன்றியும், நாமோ நித்தம் வருந்திப் பாடுபட்டுப் பொருளைத் தேடுகிறோம். எவரும் பொருளை அப்படியே உண்பதில்லை. உணவுப் பண்டங்களை வாங்கித்தான் உயிர் வாழவேண்டும். இங்ஙனமே தான் உடைக்கும். அவர்களோ நம்மிடத்தில் முதலில் வேலையை வாங்கிக்கொள்கிறார்கள் ; கூலியைக் கொடுக்கிறார்கள். பின்னர் உணவுப் பண்டங்களையும், பிறவற்றையும் கொடுத்து அப்பொருளைத் திரும்பப் பெற்றுக்கொள்கிறார்கள். அதிகமாக வேண்டுமானால் கடனைக் கொடுத்து அதற்காக வட்டி முதலியவற்றையும் வாங்கிக் கொள்கிறார்கள். அவர்கள், தாங்கள் விற்கும் பண்டங்களை நமக்கு வாங்கின விலைக்கே இலாபமின்றிக் கொடுப்பார்களா? கொடுக்கமாட்டார்கள் என்பது அனுபவத்திற் கண்டது. இந்நிலையில், நிலம் முதலியவற்றைப் பெற இயலாவிடினும், நாம் வாங்கும் உணவுப் பண்டங்களின் விலைப் பொருளாகக் கொடுக்கும் தொகையிலுள்ள மிகுதியையேனும் நாம் ஏன் அடையலாகாது? நிலத்துக்குப் பகுதியும், வேலைக்குக் கூலியும், முதலுக்கு வட்டியும் போக மிகுந்திருப்பது நம்முடையதல்லவா? ஏன் அந்த மிகுதித் தொகையை நாம் நம்முடையதாக்கிக் கொள்ளலாகாது? இங்ஙனம் முயலுவது நியாயத்திற்கும், தருமத்திற்கும் விரோதமல்லவே? அன்றியும், அஃது எவர்க்கும் எவ்வழியிலும் ஏதும் தீங்கினைச் செய்யாததாகவும் இருக்கின்றது. மேலும், பொருளாதார விடுதலையை விரும்புவோர் கூறும்,

'முதலா ளிகள்தரு முதலும் அன்றே
தொழிலா ளிகள்செய் தொழிலும் அன்றே
மற்றென் னேவெனின் மனைக்கு வேண்டும்
சரக்குக் கென்றே தங்கம் தன்னைக்
கொடுத்து விலைக்குக் கொள்ளும் நிலையினில்
உள்ளநம் போன்றார் உறுதியே யாகும்'

என்ற வரிகள் நமது முயற்சிக்குத் தடையில்லாமையையும், துணை இருப்பதையும் தெரிவிக்கின்றன'' என்ற கருத்தை வெளியிடலானார்கள். அது பலராலும் ஒத்துக்கொள்ளப்பட்டது. அது காரியத்தில் வந்ததுதான் கூட்டுறவு முறையின் தோற்றம்.

இவ்வாறு தோன்றிய கூட்டுறவு முறை, இங்கிலாந்திலே பிரித்துக் கொள்ளும் துறையிலும், ஜர்மனியில் மிகுத்துவைக்கும் துறையிலும், டென்மார்க்கில் உழவுத் துறையிலும், சில ஆண்டுகளாக

ருஷியாவில் எல்லாத் துறைகளிலும், தமிழ் நாட்டில் கூட்டுச் சீட்டுத் துறையிலும் வளர்ந்து வருவதாயிற்று. எனினும் நமது நாட்டில் மாத்திரம் பெரும்பயன் காணப்படவில்லை.

### 3. நமது நிலைமை

இங்ஙனம் கூட்டுறவு முறை உலகிலே வளர்ந்து பயன் பெற்று வர, அதனைக் கண்ட இந்தியத் துரைத்தனத்தார் ஸர். நெக்கில்ஸன் என்பவரை மேல் நாடுகளுக்கு அனுப்பிக் கூட்டுறவு முறையைப் பற்றி ஆராய்ந்துவரச் செய்தனர். அதன் பயனாக இற்றைக்கு இருபத்தாறு வருஷங்களுக்கு முன் ஒரு சட்டத்தை இயற்றி நமது நாட்டிலும் கூட்டுறவு முறையைப் பரப்ப முயன்றனர். அதன்படி கடன் கொடுக்கும் சங்கங்கள் பல தோன்றலாயின. சுருக்கமாகவும் விளக்கமாகவும் கூறவேண்டுமானால் இக் கடன்கொடுக்கும் சங்கங்களால் எதிர்பார்த்த பயன் ஏற்பட்டுவிடவில்லை என்பதே போதுமானது. அன்றியும், இம்முறையில் நேரில் பயன் பெறவேண்டிய பொதுஜனங்கள் மாறான பயனையே பெற்று வருகிறார்கள். நாட்டினர்க்குப் பொதுவாக நன்மையினைச் செய்யக்கூடிய இன்றியமையாத்துறைகளிலும் பயன்படுத்திக் கொள்ளப்படவில்லை. இவற்றால் இம்முறை நமது நாட்டினர்க்கு இருந்தும் பயனற்றதாகவேயுள்ளது.

### 4. வளர்க்க வேண்டிய வழிகள்

கூட்டுறவு முறை மிகுத்துவைக்கவும் கடன் கொடுக்கவும் முயலும் சங்கம், பிரித்து எடுத்துக் கொள்ளும் சங்கம், உற்பத்தி பண்ணும் சங்கம், கட்டடச் சங்கம், சங்கங்களின் சங்கம், மேற் பார்வைச் சங்கம் எனப் பலவகையாகும். நாம் மேலே கூறியவற்றைக் கூர்ந்து நோக்குவார்க்கு எவற்றின் பொருட்டு இந்தக் கூட்டுறவு முறை தோன்றியது என்பது இனிது விளங்கும்.

ஏழை ஜனங்களுக்குச் சிக்கனத்தின் உயர்வையும், சிக்கனமாயிருக்கும் வழியையும் கற்பித்து அவர்களைப் பொருளை மிகுத்து வைக்கப் பழக்குவது, கடின வட்டியால் மூழ்கிய கடன் தொல்லையினின்றும் அவர்களை விடுவிப்பது, தங்களுக்கு வேண்டிய உணவு உடை முதலியவற்றிற்கான பண்டங்களையும் பிறவற்றையும் தாங்களே ஒன்று சேர்ந்து மொத்தமாக வாங்கிச் சில்லறையாகப்பிரித்து எடுத்துக்கொள்ள அவர்களுக்குத் துணைபுரிவது, தங்களுக்கு வேண்டியவற்றைத் தாங்களே உண்டுபண்ணிக்கொள்ளத் தக்க வசதிகளை அவர்களுக்கு அளிப்பது, வீடுகளைக் கட்டிக்கொள்ள உதவுவது, சிறு சங்கங்களைக் காக்கும் பொதுச்சங்கமாகி வளர்ப்பது,

எல்லாச் சங்கங்களையும் மேற்பார்த்துச் சீர்திருத்துவது என அவற்றை விரித்துரைக்கலாம். இவ்வாறுதான் இந்த முறை மேல் நாடுகளிலே பரவிப் பொதுஜனங்களுக்கு நன்மையைச் செய்து வருகின்றது.

இங்கே கூறிய முறையின்படி கவனித்தால் முதலில் கிராமங்களிலேயே சங்கங்கள் தோன்ற வேண்டும். அதுவும் இக்காலத்தில் நடைபெறுவதைப் போலக் கடன் கொடுக்கும் சங்கங்களாகவே தோன்றுதல் கூடாது. கடன் கொடுக்கும் சங்கங்கள் கடும் வட்டி பெறுவதில் ஆசை கொண்ட சில பொருளாளர்களின் வலையிற் சிக்கிய ஏழைகளை அத்தொல்லையினின்றும் நீக்கிப் பின்னர் மிகுத்துக்கொடுக்கும் சங்கங்களாக மாறவேண்டும். இங்ஙனம் தோன்றிய சங்கங்களின் பிரதிநிதிகளாலேயே, சங்கங்களின் சங்கங்கள் நிர்வகிக்கப்படவேண்டும். சங்கங்களின் சங்கங்களிலே உள்ள தொகை, கிராமச் சங்கங்களாலேயே கொடுக்கல் வாங்கல் செய்யப்படல் வேண்டும். இவற்றால் முதலில் கிராமச் சங்கங்கள் தோன்றிப் பிறகே சங்கங்களின் சங்கங்கள் தோன்ற வேண்டும் என்பது உறுதியுறும்.

இம்முறையில் சங்கங்கள் இனிது வளர்ந்து நிலைபெற்றால், பின்னர் அவற்றிலே சேமித்து வைக்கப்பட்ட பொருளைக் கொண்டு பிரித்துக் கொள்ளும் சங்கம், உற்பத்தி பண்ணும் சங்கம், கட்டடச் சங்கம் முதலியவற்றைத் தோற்றுவித்துக் கொள்ள வேண்டும். இந்நெறியில் சங்கங்களின் சங்கங்களே மேற்பார்வைச் சங்கமாகவும் மாற இடமுண்டாகும். இங்கே காட்டிய வழிகளை ஆராய்வோர்க்கு நமது நாட்டிலே கூட்டுறவு முறையை வளர்க்கவேண்டிய வழிகள் இவை என்பதில் ஐயமுண்டாக இடமிராது. மேலும், இவை அனைத்திற்கும் ஆதாரமான கூட்டுறவுப் பிரசாரத்தையும் மறந்து விடலாகாது. "ஒன்றைச் செய்வதற்கு முன் நூறுவகையாகக் கேட்டிருக்க வேண்டும்" என்பது போலப் பொது ஜனங்களிடம் கூட்டுறவு முறையின் உயர்வு முதலியவற்றைப்பற்றிப் பல வகைகளாலும் பிரசாரம் செய்து அவர்களை அறிவும் பற்றும் உள்ளவர்களாக்க வேண்டும். இவ்வேலையை முற்றும் மேற்போட்டுக்கொண்டு திறம்பட நடத்த வேண்டிய பொறுப்பு, சங்கங்களின் சங்கமாகிய மத்திய சங்கங்களைச் சேர்ந்ததாகவே இருக்கவேண்டும். ஜனங்களை அறிவுள்ளவர்களாக்காமல் அவர்களைக் குற்றத்திற்குள்ளாக்குவது விஷயமறிந்தவர்களுக்கு, "கருநரைமேற் சூடேபோல் தோன்றி" இழிவினையே உண்டாக்கும். எக்காரணங் கொண்டும் இம்முறை

பற்றித் துரைத்தனத்தாரைக் குறைகூருமல் முற்றும் தங்களுடைய கைகளையே நம்பியிருக்கும் பேராற்றல் நமது நாட்டினர்க்கு உண்டாகவேண்டும். இவை அனைத்தும் காரியத்திலே கைவர வேண்டுமாயின் அதற்கு இன்றியமையாத முதல் துணையாவார் மனிதர்களே. இங்கே,

“உலகம் வேண்டுவ தொன்றே யாகும்
என்னெனிற் கேளீர் இயம்புவன் அதுதான்
அறிவும் ஒழுங்கும் அன்றே யார்க்கும்
அன்னம் முதலாத் துன்னிய பலவும்
கொடுத்துத வுவதாங் கொள்கையு மன்றே
அதிகா ரிகள்புன் முறுவலு மன்றே
எதனையும் அழியா தெழுதும் சீரிய
கைவன் மையு மன்றே மெய்யோ
டுறுதியாய் உழைத்தலி லுள்ளம்
தளரா தமைஆண் தன்மைசேர் மக்களே”

என்ற பாடலின் பொருள் கவனிக்கத்தக்கதாம். அம்மனிதர்களும் ஓரளவிலேனும்,

“வேண்டுவ துலகின் வேலை செயப்பலர்
ஆண்டவ னடியே அவர்க்குச் சம்பளம்
பட்டம் வயதிவை பார்ப்பதோ இல்லை
அவரோ திருத்தக் கார ராவர்
எனினும் பிறரைத் திருத்தற்கெண்ணுர்
தம்மைத் திருத்தித் தாம்பிறர்க் குறுவழி
காட்டிக் கடனுக் காசினி யோரிடத்
தன்புபூண் டைம்புல னடக்கி
அருளுரு வாகுத லாமவர் தொழிலே”

என்ற பாவிலே காணும் இலக்கணங்களுக்குப் பொருந்தியவரா யிருப்பது விரும்பத்தக்கது.

“வளம்பட வேண்டாதார் யார் யாருமில்லை” என்றபடி அனைவரும் இன்புறவே விரும்புவர். இன்பமோ துன்ப நீக்கத்தால் நிலைப்பது. உலக விடுதலையை விரும்புவோர், “பொருளிலார்க்கிவ் வுலகமில்லை” என்ற மேல்வரிச்சட்டத்தின் பொருளை மதித்து நடத்தல் வேண்டும். பொருளாதார விடுதலையோ கூட்டுறவு முறையினுலேதான் சித்தியாகக் கூடும். இஃது உலக அனுபவமுமாகும். ஆதலின், நம்மவர் ஒவ்வொருவரும் கூட்டுறவு முறையின் தத்துவங்களை உணர்ந்து, “எல்லார்க்கும் ஒருவர் ; ஒருவர்க் கெல்லாரும்”

என்ற உண்மையை நிலை நாட்ட வேண்டியது தவரு்க் கடமையாகும்.

எழுமின் மாந்தர்காள் எழுமின் எழுமின்
கூட்டுற வுணர்ந்து கூடுமின் அதனல்
விழிப்புண் டாகும் விடுதலை
பெற்றுத் திகழ்வீர் பெரும்பே ருமே.

---

## சாஸ்திர சம்பந்தமான தமிழ்ச் சொற்கள்

*Section*—வெட்டுவடிவு, வெட்டு, வெட்டுமுகம்.
*Sense*—புலம்.
*Simultaneous*—ஒரேதடவை, ஒரேவிசை.
*Space*—இடம்.
*Spinneret*—நூலரும்பு.
*Sporangium*—கொண்டை.
*Stamen*—மகரந்தத் தாள்.
*Stigma*—அண்டாசயத்தின் முனை.
*Surface*—முகம், மேல்முகம்.
,, *External*—புறமுகம்.
,, *Plane*—தட்டைமுகம்.
,, *Rough*—காட்டுமுகம்.
,, *Even*—மழுக்கமுகம்.
,, *Flat*—மட்டமுகம்.
*Survey*—அளத்தல், அளவெடுத்தல்.
*Summary*—தொகுப்பு.
*System*—முறை.
*Symbiosis*—ஸகஜீவத்வம்.
*Tabulate*—நிரலாக்க, நிரலி.
*Termination*—இறுதி.
*Tape worm*—நாடாப்புழு.
*Tapioca*—டப்பாய் அரிசி.
*Tentacle*—ஸ்பர்சக் கொம்பு.
*Thread worm*—நாக்குப்பூச்சி.
*Tomatoes*—தக்காளிப்பழம்.
*Trignometry*—திரிகோணமிதி.
*Under-ground drainage*—காந்துறை.
*Volume*—பருமன், பருமை.

# சரித்திரம்

## பாஹியன் யாத்திரை வரலாறு

ஜி. தாத்தாச்சாரி

(844-ம் பக்கத்தொடர்ச்சி)

இந்த (பாடலிபுத்ர) நகரத்தில் முன்னொருகாலத்தில் மஹாயான மார்க்கத்தில் விசேஷப் பற்றுள்ளவரும் கல்வி கேள்விகளில் பெரியவருமான ராதாஸ்வாமி (லோ-தாய்-ஸ்-பி-மி) என்ற பிராம்மணர் ஒருவர் இருந்தார். அவருக்குத் தெரியாத விஷயமே கிடையாது. அவர், தன்னந்தனியராய் மவுனத்தோடு தியானம் செய்து கொண்டு வாழ்ந்தார். அந்த நாட்டு அரசன் அவரைத் தனது குருவாகக் கவுரவித்துக் கொண்டாடினன். அவன் அவரைத் தரிசிக்கச் சென்ருல் அவருடைய முன்னிலையில் அவன் உட்காரத் துணிவதில்லை. அவரைக் கண்ணியம் செய்யும்பொருட்டு அரசன் அவருக்குக் கைலாகு கொடுக்கும்படி நேர்ந்தால், அவர் மறுபடியும் ஸ்நாநம் செய்வது வழக்கம். சுமார் ஐம்பது வருஷ காலத்துக்கு அதிகமாகவே இந்த நாடு முழுவதும் அவரே கதியென நோக்கி நின்று, அவரிடம் முழு நம்பிக்கை வைத்திருந்தது. அவர் புத்த தர்மத்தை அதிகமாகப் பிரசாரம் செய்தபடியால் பிக்ஷுக்களின் ஸங்கத்துக்கு யாதொருவிதமான ஊனத்தையும் தர்ம விரோதிகள் செய்வதற்கில்லாதிருந்தனர்.

அசோக ராஜன் எழுப்பிய ஸ்தூபத்தின் பக்கத்தில் மஹாயான மார்க்கத்தைச் சேர்ந்த பெரிய ஸங்காராமம் ஒன்று கட்டப்பட்டிருக்கிறது. ஹீனயான மார்க்கத்தைச் சேர்ந்த விஹாரம் ஒன்றும் அங்குள்ளது. இரண்டிலுமாக அறுநூறு அல்லது எழுநூறு பிக்ஷுக்கள் இருக்கின்றனர். அவர்களுடைய வாழ்க்கை வெகு ஒழுங்காகவும் மரியாதையாகவும் இருக்கிறது. உலகத்தின் ஒவ்வொரு பாகத்திலிருந்தும் வந்துள்ள பிரபல பிக்ஷுக்களை அங்குக் காணலாம். ஞானத்தைத் தேடிக்கொண்டு ச்ரமணர்களும் வித்வான்களும் கூட்டங் கூட்டமாக அந்த விஹாரத்துக்கு வருகின்றனர். அங்குள்ள பிராம்மண குருவுக்கு மஞ்சுஸ்ரீ என்பது பெயர்.

நாட்டிலுள்ள பெரிய ச்ரமணர்களும், மஹாயான மார்க்கத்தைச் சேர்ந்த பிக்ஷுக்கள் அனைவரும் அவரைக் கௌரவித்துக் கொண்டாடுகின்றனர். அன்றியும் அவர் அந்த ஸங்காராமத்திலேயே வசிக்கின்றனர். மத்ய இந்தியாவில் உள்ள நாடுகள் எல்லாவற்றிலும், இந்த நாட்டின் நகர்களே மிகப் பெரியனவாகவுள்ளன. ஜனங்கள் செல்வம் படைத்துச் சுகமாக வாழ்கின்றனர். அவர்கள் தர்மத்தின் படியும் நீதியின்படியும் நடக்கின்றனர். பிரதி வருஷமும் இரண்டாவது மாதத்தின் எட்டாவது தினத்தில் திருவிழா ஒன்று நடக்கிறது. அப்போது நான்கு சக்கரங்களையுடைய தேர் ஒன்றைச் செய்து, அதன்மீது மூங்கில்களால் இணைத்துக் கட்டிய ஐந்து நிலைக் கோபுரத்தை அமைப்பர். பெரிய முத்தலைச் சூல வடிவமான மத்ய ஸ்தம்பம் ஒன்று இருபத்திரண்டு அடிக்கு மேற்பட்ட உயரத்துடன் எல்லாவற்றுக்கும் ஆதாரமாக நிறுத்தப்பட்டிருக்கும். ஆகவே அஃது ஒரு கோயிலைப்போலத் தோன்றும். அப்பால் அதை வெண்மையான திரைச் சீலைகளால் மூடி, பிறகு அச்சீலைகளுக்குப் பலவித வர்ணம் கொடுப்பர். தேவதைகளுடைய உருவங்களைச் செய்து அவைகளைப் பொன்னாலும், வெள்ளியாலும், ஸ்படிகத்தாலும் அலங்கரித்து, வேலைப்பாடமைந்த பட்டு விதானங்களின் கீழே வைப்பர். பிறகு தேரின் நான்கு மூலைகளிலும் புரைகளை உண்டாக்கி, அவைகளுக்குள், புடைநிற்கும் போதிஸத்வன் ஒருவனுடன் புத்தபகவானுடைய வீற்றிருக்கும் திருக்கோலத்தை அமைப்பர். இப்படிச் செய்யப்பட்டு வேறுவேறு விதமாக அலங்கரிக்கப்பட்ட தேர்கள் சுமார் இருபது இருக்கலாம்.

உத்ஸவ தினத்தில் பிக்ஷுக்களும் உபாஸகர்களும் திரள் திரளாகக்கூடுவர். புஷ்பங்களாலும் தூபங்களாலும் வழிபாடுகள் நடைபெறுகையில், விளையாட்டும் பாட்டும் ஒருபால் நிகழும். எல்லோரும் வரவேண்டுமென்று அழைப்பதற்காகப் பிரம்மசாரிகள் முன்வருவர். பிறகு பௌத்தர்கள் ஒருவர்பின் ஒருவராக நகரில் நுழைவர். நகரத்துக்குள் வந்ததும் அவர் மறுபடியும் சிறிது நேரம் நிற்பர். பிறகு இரவு முழுவதும் தீபங்களை ஏற்றிவைத்து, விளையாட்டிலும் பாட்டிலும் ஈடுபட்டுத் தானதர்மங்களைச் செய்வர். சுற்றிலுமுள்ள பற்பல நாடுகளிலிருந்தும் இந்த உத்ஸவத்துக்காக இங்கே வந்து கூடும் ஜனங்கள் எல்லோரும் செய்யும் வழக்கம் இதுதான். நாட்டிலுள்ள பிரபுக்களும் கிருஹஸ்தர்களும் இந்நகரில் வைத்திய சாலைகளை ஏற்படுத்தியிருக்கின்றனர். அங்கு எல்லாத்தேசத்து ஏழை ஜனங்களும் அநாதர்களும் அங்கஹீனர்களும் வியாதியஸ்தர்களும் சிகித்ஸைக்காகச் செல்கின்றனர். வேண்டிய உதவிகளையெல்லாம்

அவர்கள் அங்கு இலவசமாகப் பெறுகின்றனர். வைத்தியர்கள் அவர்களுடைய வியாதிகளைக் கவனித்து, அததற்குத் தகுந்தபடி ஆகாரம், பானம், மருந்து, கஷாயம் முதலிய சிகித்ஸாப் பொருளைக் கொடுக்கச் செய்கின்றனர். குணமடைந்ததும் அவர்கள் தங்கள் தங்களுடைய சௌகரியப்படி திரும்பிப்போகின்றனர்.

அசோகராஜன் முதலிலிருந்த ஏழு விஹாரங்களையும் இடித்து விட்டு, வேறு எண்பத்து நாலாயிரம் விஹாரங்களைக் கட்டினன். முதன் முதலில் அவன் கட்டியது இந்நகரத்துக்குத் தெற்கே மூன்று லீ தூரத்திலிருக்கும் பெரிய ஸ்தூபமேயாகும். அதற்கு முன்னல் புத்த பகவானுடைய அடிச்சுவடு இருக்கின்றது. அதன் மீது வடக்குப் பார்த்த வாசலையுடைய விஹாரம் ஒன்று கட்டப்பட்டிருக்கிறது. அந்த ஸ்தூபத்துக்குத் தெற்கில் ஒன்றரை சங் (18 அடி) கனமும் மூன்று சங் (35 அடி) உயரமுமுள்ள ஒரு கற்றூண் இருக்கிறது. "அசோக ராஜன், ஜம்புத்வீபம் முழுவதையும் நான்கு திக்குக்களிலிருந்தும் வந்த பிக்ஷுக்களுக்குத் தானமாகக் கொடுத்துவிட்டு, பிறகு அதை அவர்களிடம் பணங்கொடுத்து விலைக்கு வாங்கிக்கொண்டான். இப்படி அவன் மூன்று முறை செய்தான்'' என்ற வாசகம் அந்தத் தூணில் எழுதப்பட்டிருக்கின்றது. விஹாரத்துக்கு 300 அல்லது 400 அடி வடக்கே அசோகன் பிறந்த (அல்லது வசித்த) இடமிருக்கிறது. அவ்விடத்தில் அவன் நி-லி என்ற நகரம் ஒன்றை நிர்மாணித்து அதன் மத்தியில் 35 அடி உயரமுள்ள ஒரு கற்றூணை நாட்டி அதன்மீது ஒரு சிங்கத்தின் உருவத்தை நிறுத்தியதன்றி, நி-லி நகர சம்பந்தமாக நடந்த சரித்திர விஷயங்களை அதனதன் வருஷம், மாதம், தேதிகளுடன் அதில் எழுதியும் வைத்தான்.

இந்த நகரத்திலிருந்து தென்கிழக்கு முகமாக ஒன்பது யோசனை தூரத்தில் தனித்து நிற்கும் ஒரு சிறிய கன்மலை இருக்கிறது. அம்மலை உச்சியில் தெற்கு நோக்கியதும் கல்லால் இயற்றப்பட்டதுமான அறை ஒன்றுள்ளது. புத்தபகவான் ஒரு சமயம் இந்த அறையில் உட்கார்ந்து தியானம் செய்திருந்தபோது, சக்ர தேவன், பஞ்சசிகா என்னும் கந்தர்வியை அழைத்து வந்து புத்தர் இருந்தவிடத்தில் ஒரு ராகத்தைப் பாடச் செய்தான். அப்போது அவன் கற்றரையில் தனது விரல்களால் சில கோடுகளை வரைந்து, புத்த தேவரிடம் நாற்பத்திரண்டு கேள்விகளைக் கேட்டான். அந்தக் கட்டிடத்தின் பாழ்களும் அந்தக் கோடுகளின் அடையாளங்களும் இன்னும் உள்ளன. இங்கு ஒரு ஸங்காராமம் கட்டப்பட்டிருக்கின்றது. இங்கிருந்து தென்மேற்காக ஒரு

யோசனை தூரத்தில் ந-லோ என்னும் கிராமம் இருக்கிறது. இது சாரிபுத்தருடைய ஜன்மஸ்தானம். அவர் நிர்வாணம் அடைவதற்காக இங்குத் திரும்பி வந்தார். ஆதலால் இங்கு ஒரு ஸ்தூபம் எழுப்பப்பட்டிருக்கின்றது. அஃது இன்னும் உள்ளது. இங்கிருந்து ஒரு யோசனை மேற்கில் புதிய ராஜக்ருக நகரம் இருக்கிறது. இந்நகர் அஜாதசத்ரு அரசனால் நிர்மிக்கப்பட்டது. இதனுள் இரண்டு ஸங்காராமங்கள் உள்ளன. இந்த நகரின் மேற்கு வாசல் வழியாக அதைவிட்டுப் புறப்பட்டு முந்நூறு தப்படி சென்றதும், அஜாதசத்ரு அரசன், தான் பெற்றுவந்த புத்த சரீரத்தின் பகுதியின்மீது கட்டியுள்ள ஸ்தூபம் தென்படும். அது வெகு உயரமானது. நகரின் தென்பாரிசத்தைவிட்டுத் தெற்கு நோக்கி நான்கு லீ சென்றால் ஐந்து குன்றுகளுக்கிடையேயுள்ள ஒரு பள்ளத்தாக்கில் நுழைவோம். ஒரு நகரின் மதில்களைப்போல, இந்தக் குன்றுகள் அந்தப் பள்ளத்தாக்கை முற்றிலும் சூழ்ந்திருக்கின்றன. இது பிம்பசார அரசனுடைய பழைய ராஜதானி இருந்த இடமாகும். இது கிழக்கு மேற்கில் ஐந்தாறு லீ தூரமும், தெற்கு வடக்கில் ஏழெட்டு லீ தூரமும் உள்ளது. சாரீபுத்தரும் முத்கல்யாணரும் அச்வஜித் (என்னும் அர்ஹத்)தை இங்குத் தான் முதன் முதலாகக் கண்டனர். நிர்கிரந்தன், அக்னி நிரம்பிய குழியை உண்டாக்கிப் புத்த பகவானைப் புசிப்பிக்கவேண்டி அன்னத்துக்கு விஷமிட்ட இடம் இதுவே. அஜாதசத்ரு அரசன் புத்தபகவானைக் கொல்ல வேண்டி ஒரு கரிய யானையை மதப்படுத்திவிட்ட இடமும் இதுதான். நகரத்தின் வடகிழக்கில் உள்ளதோர் முடுக்கில் அம்பாலியின் உத்யான வனத்தில் ஜீவகன் என்னும் வைத்தியன் ஒரு விஹாரத்தைக் கட்டிப் புத்த பகவானையும் அவருடைய ஆயிரத்து இருநூற்றைம்பது சிஷ்யர்களையும் அங்கு வந்து அவனுடைய பிக்ஷையை ஏற்கும்படி கேட்டனன். அதன் பாழ்கள் இன்னுமுள்ளன. நகரில் ஜனங்களே இல்லாமல் எங்கும் பாழாய்க் கிடக்கின்றன.

பள்ளத்தாக்கில் நுழைந்து தென்கிழக்கு முகமாகச் சென்று மலைகளைக் கடந்து பதினைந்து லீ தூரம் ஏறிப்போனால் க்ருத்ர கூடம் என்னும் மலையை அடையலாம். அதன் உச்சியிலிருந்து மூன்று லீ தூரத்தில் தெற்குப்பார்த்த கற்குகை ஒன்றுள்ளது. புத்தபகவான் இதனுள் உட்கார்ந்து தியானம் செய்வது வழக்கம். முப்பது தப்படி வடமேற்கில் ஆனந்தர் தியானம் செய்து வந்த மற்றொரு கற்குகை இருக்கிறது. பிசுனனான மாரதேவன் ஒரு கழுகின் உருவத்தை எடுத்துக்கொண்டு வந்து அந்தக் குகையின்

முன்னர் உட்கார்ந்து ஆனந்தரைப் பயமுறுத்தினான். புத்த பகவான் தம்முடைய சித்தியினால், கற்பாறையைத் துளைத்து, அந்தத் துளைவழியாகத் தமது கைகளை நீட்டி ஆனந்தருடைய தோள்களைத் தட்டிக் கொடுத்தார். அதனால் ஆனந்தருடைய பயம் நீங்கியது. அந்தக் கழுகின் சின்னங்களும் கை நுழைந்த துளையின் அடையாளங்களும் இன்னும் நன்றாய்க் காணப்படுகின்றன. இது காரணமாகத்தான் இந்தக் குன்றுக்கு 'கிருத்ரகூடமலை' என்ற பெயர் வந்தது. அந்தக் குகையின் முன்னால் நான்கு புத்தர்களும் உட்கார்ந்திருந்த இடம் உள்ளது. ஒவ்வொரு அர்ஹத்தும் தியானம் செய்த போது உட்கார்ந்திருந்த குகைகள் உள்ளன. எல்லாமாக அங்கே நூறு குகைகள் உள்ளன. தமது குகைக்கு முன்னால் புத்த பகவான் கிழக்கு மேற்காக நடந்து சென்றிருந்தபோது, மலையின் வடக்கின் கண்ணுள்ள சிகரங்களின் இடையிலிருந்து தேவதத்தன் உருட்டித் தள்ளிய கற்பாறை ஒன்று அவருடைய பாதையின் குறுக்கே விழுந்து அவரது கால் கட்டைவிரலைக் காயமாக்கிய இடம் இதுவே. அந்தக் கற்பாறை இன்னும் அங்கே கிடக்கிறது. புத்த பகவான் தர்மோபதேசம் செய்த மண்டபம் இடிக்கப்பட்டுளது; என்றாலும் அதன் செங்கற் சுவர்களின் அஸ்திவாரங்கள் இன்னும் காணப்படுகின்றன.

இந்த மலையின் சிகரங்கள் உயரமாகவும் அழகாகவும் உள்ளன. இஃது அந்த ஐந்து மலைகள் எல்லாவற்றிலும் உன்னதமானவை. பா-ஹியன், புதிய நகரில் புஷ்பம், தூபம், எண்ணெய், தீபம் ஆகியவைகளை விலைக்கு வாங்கிக்கொண்டு, இரண்டு புதிய பிக்ஷுக்களை வழிகாட்டுவதற்காக அழைத்து வந்து, கிருத்ரகூட மலையின் மீதேறி, தாம் கொணர்ந்திருந்த புஷ்பங்களையும் தூபங்களையும் ஸமர்ப்பித்து, இராப்பொழுதுக்காகத் தீபங்களை ஏற்றி வைத்தார். மிக்க உணர்ச்சி மேலீட்டால் அவரது கண்களிலிருந்து ஜலம் ததும்பியது. அதை அடக்கிக் கொள்ளமாட்டாதவராகி, "இங்கு வெகு காலத்துக்கு முன்னால் புத்தபகவான் வசித்துச் சுரங்கம ஸூத்ரத்தை உபதேசித்தருளினார். புத்த பகவான் ஜீவந்தராகவிருந்த காலத்துப் பிறந்திருக்கும் பாக்கியத்தைப் பெற்றிராத நான் அவருடைய ஸாந்நித்தியத்தின் சின்னங்களையும் அவர் தங்கிய இடங்களையுமே தரிசிப்பதுமட்டும் செய்ய இயலும்" என்று சொல்லிக்கொண்டார். அப்பால் அவர் அந்தக் குகைக்கு முன்னால் சுரங்கம ஸூத்ரத்தைப் படனம் பண்ணிக்கொண்டு இரவு முழுவதும் இருந்து காலையில் புதிய நகரத்துக்குத் திரும்பினார்.

(தொடரும்)



# மதாலஸா

## சங்கு ஸுப்ரஹ்மணியன்

தொட்டில். அதில் ஒரு அழகான குழந்தை. வாயினில் விரலைப்போட்டுக்கொண்டும், நிர்மலமான கண்களால் வெட்டவெளியை நோக்கிக்கொண்டும் இருந்த அக்குழந்தை எதை எண்ணிக் கொண்டிருந்ததென யாரால் சொல்ல முடியும்? அனுபாசமாக அதன் கால்கள் அசைந்து கொண்டிருந்தன. 'ஜல் ஜல்' என்று சிலம்புகள் ஒலித்துக்கொண்டிருந்த தாளத்தில் குழந்தையின் சிந்தை லயித்திருக்குமா? அல்லது நாதாங்கிகளில் வெள்ளிச் சங்கிலிகள் உராய்வதால் ஏற்பட்ட சுருதியோசை குழந்தையின் மனத்தைக் கவ்வி விட்டதா? இல்லையேல் தனது அன்னை இசைத்துக்கொண்டிருந்த தாலாட்டுப் பாட்டில் தன் மனத்தைப் பறி கொடுத்துவிட்டதா? குழந்தையின் எண்ணங்கள் எங்குச் சென்றுளவென யாரால் சொல்லமுடியும்?

நீலாம்புரி ராகத்தில் மதாலஸா பாடிக்கொண்டிருந்தாள்:

யார்யாரோ? யார்இவரோ?
　　நீயாரோ? நான்யாரோ?
நாரணனின் இச்சையினல்
　　நான் பெற்றேன்; நீ பிறந்தாய்.
முத்தமிட்டால் சிவந்துவிடும்;
　　மோந்தால் வியர்த்துவிடும்;
அத்தனையும் மென்மையடா;
　　அழகாஉன் பாதமலர்!
சித்தமெலாம் தூய்மையுற்றுப்!
　　சீராளா வயதானல்,
இத்தனையும் போய்விடுமே
　　என்னரசே! ஏது செய்வாய்?
கொத்து மருக்கொழுந்தே!
　　குவலயத்தின் குலஒளியே!
இந்தரையை ஆளுவதும்,
　　இளவயதின் நாடகமும்
அந்தனையும் மாயமடா!
　　அழிகின்ற லீலையடா!
நித்தியனை மட்டுமெண்ணி
　　நித்திரைசெய் என்அரசே!

பாட்டும் முடிந்தது; குழந்தையும் தூங்கிப்போய் விட்டது; ஆனல் தூங்குகின்ற அந்தக்குழந்தையின் முகத்தில் அடிக்கடி புன்முறுவல் பூத்தது. எவ்வளவு அழகு! எவ்வளவு சுவை! தாமரைப் பூவைக் காட்டிப் பரந்தாமன் குழந்தையோடு விளையாடுவதாகச் சொல்கின் ருர்களே, அது வாஸ்தவம்தானு !

மதாலஸாவுக்கு மூன்று குழந்தைகள். மூத்த பையன் விக்கி ராந்தனுக்குப் பதினறு வயது நிரம்பிவிட்டது. இரண்டாம் பையனுன சுபாகுவுக்கு அடுத்த கார்த்திகையில் ஆரும் வயது பூர்த்தியடையும். தொட்டிலிலிருக்கும் குழந்தை சத்துருமர்த்தன னுக்கு ஆண்டு நிறைவு ஆகி ஆறுமாதந்தானுயிற்று. ஸம்ராட் குவ லயனின் உருவத்தை உரித்து வைத்தாற்போலவே அக்குழந்தைக ளின் உருவங்கள் இருந்தன. அத்தனே அழகாயிருந்த குழந்தை களுக்கு அறிவும் பெருகி வந்ததற்குக் காரணம் தேவி மதாலஸா வின் போதனையே ஆகும். தாய்ப்பாலோடு குழந்தைகளுக்கு ஞானப்பாலும் புகட்டி வந்தாள் மதாலஸா. தொட்டிற்பருவ முதற் கொண்டே குழந்தைகளுக்கு வேதாந்த ஞானத்தை ஊட்டிவந்தாள் அந்த அருமை அன்னே.

விக்கிராந்தனுக்கு வயது பதினறுதான். ஆயினும் பதஞ்சலி யோக சூத்திரத்தின் உட்கருத்தை அவன் தாயாரிடம் கற்றுக் கொண்டிருந்தான். சுபாகுவுக்கு வயது ஆறுகூட ஆகவில்லே. அப்போதே எவ்வளவோ வேதாந்தப் பாடல்களே அக்குழந்தை பாடிக்கொண்டிருந்தது. இவ்வளவுக்கும் யார் ஆசார்யை ? தேவி மதாலஸா !

குவலய மகா சக்கிரவர்த்திக்கு ஏது செய்வதென்று புரியவில்லே. வருங்காலத்தில் அரியணேயில் அமர இருக்கும் இளவரசன் விக்கிராந் தன், எப்போதும் காவியுடை தரித்த ஆண்டிகளோடேயே காலந் தள்ளி வருகிருனே, என் செய்வது? ஒருவேளே அவனுக்குத் திரு மணம் செய்து வைத்தால் மனது திரும்பிவிடலாமென வேந்தன் நினேத்தான். கன்னிகை ஒருத்தியை நிச்சயம் செய்தான். முகூர்த்த தினமும் குறிக்கப்பட்டது. இளவரசனுக்கு விவாகமென்று கேள் விப்பட்ட குடிகள் அனேவரும் விழாக் கொண்டாடிக் கொண்டிருந் தனர். ஆனல்......

* * * * *

"அம்மா ! போய் வருகிறேன். என்னேக் கானகம் அழைக்கின் றது. நித்திய வஸ்துவைத் தேடி அலேயும் என் மனத்தை உலக மாயைக்கு இரையாக்கிக்கொள்ள மாட்டேன். இவ்வளவு நாள்

உன்னிடம் கற்றவைகளைப் பயன்படுத்திக் கொள்ள யான் செல்கின்றேன். தாயே விடை தா!''

* * * * *

பத்து வருடங்களாகியும் குவலய மகா சக்கிரவர்த்தியின் கவலை நீங்கியபாடில்லை. தனக்குப் பின் பாரத பூமியை எவன் ஆளப் போகிறானென்ற கவலையே அவன் மனத்தைப் பிய்த்துக்கொண்டிருந்தது. பத்து வருடங்களுக்கு முன்னே ஸீமந்த புத்திரன் விக்கிராந்தன் திடீரென ஒரு நாள் காணாமற் போய்விட்டான். இப்போது இரண்டாங் குமாரன் சுபாகுவுக்குப் பதினாறும் வயது நிரம்பப் போகிறது. ஆனால் இந்தப் பிள்ளையும் ஒரு வேதாந்தப் பித்தனாய் அலைகின்றானே, என் செய்வது? அரசாங்கமென்னும் பெருஞ் செல்வத்தை இச் சிறுவனிடம் தந்துவிட்டால் ஒரு வேளை மனம் திரும்பலாகுமன்றோ? ஆகவே இளவரசனுக்கு மகுடாபிஷேகம் செய்வதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டன. ஜோஸ்யர், நாளும் குறிப்பிட்டுவிட்டார். ஆனால் திடீரென்று...

* * * *

"கண்ணே சுபாகு! சென்று வா. இவ்வளவு தீவிரமான நோக்கமுடைய உன்னை நிறுத்திவைக்க யான் விரும்பவில்லை. ஆர்யாவர்த்தத்தில் ஆன்ம சக்திதான் பெருஞ்செல்வம். அச்செல்வத்தைச் செல்வா! நீ அடையச் செல்வாயாக! என்றும் பதினாறாக நீ இருப்பாயாக!'' என்றாள் மதாலஸா.

ஸம்ராட் குவலயன் இரண்டு குமாரர்களை உயிருடன் பறிகொடுத்து விட்டான். அந்தத் துயரினும் பெரிய துயரமாக இப்போது வேறொன்று ஏற்பட்டு விட்டது. மூன்றாம் பையன் சத்துரு மர்த்தனன் கோயில் தோறும் சுற்றிக்கொண்டும் குளங்கள் தோறும் முழுகிக்கொண்டும் காலங்கழிக்க ஆரம்பித்தான். அச் சிறுவன் ராஜ்யாதிகாரத்திற்குத் தகுந்தவனல்ல வென்பது முளையிலேயே தெரிந்து விட்டது. இப்படி மூன்று குழந்தைகளும் வேதாந்திகளானதற்குக் காரணம் என்னவென அரசன் சிந்தித்துப் பார்த்தான். அவன் கண்முன்னே ஒரு மின்னல் மின்னிற்று. அம் மின்னலில் தேவி மதாலஸாவின் திருவுருவம் நின்றது. உடனே அரசன் அந்தப்புரத்தை நோக்கி ஓட்டமும் நடையுமாய்ச் சென்றான்.

தொட்டிலை ஆட்டிக்கொண்டு மதாலஸா பாடிக்கொண்டிருந்தாள். கடைக்குட்டி 'அலர்க்கன்' என்ற குழந்தை தொட்டிலிற் படுத்துக்கொண்டிருந்தது. சக்கிரவர்த்தி வருவதைத் தேவி

கவனிக்கவில்லை. "மதாலஸா!" சட்டென்று மதாலஸா திரும்பித் தன் நாயகனை நோக்கினாள். எழுந்து நின்றாள்.

கற்பரசியின் எதிரே நின்ற கணவன் திடீரென முழந்தாளிட்டுப் பேச ஆரம்பித்தான். திக்பிரமையடைந்த தேவி நின்றாள்.

"மதாலஸா! உன்னை ஒரு பிச்சை கேட்கின்றேன். ஓரே ஒரு பிச்சை. குழந்தை அலர்க்கனையாவது எனக்குத் தா-இல்லை யில்லை-பாரதநாட்டிற்கு இரங்கியாவது இக் குழந்தையை எனக்குக் கொடு. முதல் மூன்று குழந்தைகளையும் உனக்கு அர்ப்பணம் செய்து விட்டேன். இந்தக் குழந்தையை எனக்கு நீ தந்தே ஆகவேண்டும். இவனுக்கு வேதாந்தம் வேண்டாம்; இராஜ நீதியைக் கற்பித்துக் கொடு. யோக சூத்திரம் வேண்டாம்; அர்த்த சாஸ்திரத்தைப் புகட்டு. ஹட யோகம் வேண்டாம்; யானை ஏற்றத்தைச் சொல்லிக் கொடு. பிரிய ஸதி! எனக்கு இந்த வரம் நல்குவையோ?"

மதாலஸா தலை வணங்கினாள். "ஆகட்டும் அரசே!" என்று கை கூப்பி வணக்கமான குரலில் கூறினாள்.

தொட்டிற் பருவத்தினின்று குழந்தைகளுக்கு எல்லாவித அறிவையும் புகட்டக் கூடியவர்களாகப் பாரத நாட்டின் தாய்மார்கள் அன்று இருந்தனர். ஸதி மதாலஸாவோடு அந்தத் தாய்மார்களின் வம்சம் முடிவடைந்தது என்று இன்று எண்ண வேண்டியிருக்கிறது. ஏனெனில் அந்தக் கற்பரசி, "நீ யாரோ? நான் யாரோ?" என்று பாடி வேதாந்தம் கற்பித்தாள். ஆனால் தற்காலத்தில் தாய்மார்களோ தங்கள் குழந்தைகளிடம், "நீ யாரோ நான் யாரோ" என்று உதாஸீனமாக இருக்கிறார்கள். இல்லாவிடின் அந்த வரிகளுக்குத் தற்காலத்திய பொருள்தான் என்னவோ?

# நீர்க்குமிழி

## பி. ஆர். ராஜ சூடாமணி

"அது யார்? என் ராஜமா?"

ராஜம் தன் வீட்டிற்குள் நுழைந்த பொழுது அவனுடைய கால்கள் ஓசையின்றி மெதுவாய் நடந்தன. அவன் தன் மனைவி படுக்கை யறையில் திறந்திருந்த ஜன்னலின் அருகிலுள்ள மஞ்சத்தில் அயர்ந்து தூங்குவதாக நினைத்திருந்தான். ஜன்னலில் தொங்கிய திரைச்சீலை இளந்தென்றலில் அசைந்தாடியது. கமலாவின் நுட்பமான செவிகள் மிகவும் மெல்லிய ஓசைகளையும் உணர்ந்தன.

"ஆமாம்; உன்னுடைய சொந்த ராஜந்தான்!"

அவன், அவள் சயனித்திருந்த மஞ்சத்தை அணுகுமுன் இளைத்து விளர்த்த அவளுடைய கரங்கள் அவனைத் தொட்டு உணரும் பொருட்டு ஓசை எழுந்த திசையை நோக்கி நீண்டன. அவனும் அந்தக்கரங்களுக்கு எதிராகச் சென்றான். அவளுடைய கரங்கள் அவனுடைய வேஷ்டியைப் பற்றின. அவன் குனிந்து தன் முகத்தை அவளுடைய முகத்தினருகிற் கொண்டு போவதற்குள் அந்தக் கரங்கள் அவனுடைய முகத்தைத் தடவிப் பார்த்தன.

"ஆமாம்; என்ன சந்தேகம்? என் சொந்த ராஜா; என் கண்ணுக்குக் கண்ணான ராஜாதான்." அவளுடைய கரங்கள் அவனுடைய கரங்களைப் பிடித்துத் தடவிப் பார்த்தன. "ராஜா, கண்ணிழந்த எனக்குக் கண்போல உதவுகிற உன் இருகைகளையும் நான் தடவிப் பார்க்கிற பொழுது எனக்கு உண்டாகிற சந்தோஷத்திற்கு அளவே யில்லை. என் கிட்டவா என் துரையே. நீ இன்றைக்கு நம்முடைய தோட்டத்தில் உள்ள மலர்களைப் போல வாசனை வீசுகிறாயே."

"என் கண்ணே! என் செல்வமே! என் அன்பே!" என்று சொல்லிக் கொண்டே அவன் அவளுடைய விளரிய முகத்தில் மறைந்து நின்ற காரிமைகளை முத்தமிட்டான். அவள் அவனை நிமிரவிடாமல் தன் இருகைகளாலும் அவனுடைய தலையைத் தன் கன்னத்தோடு அணைத்துக்கொண்டாள். தன் பார்வையற்ற

கண்களை முத்தாடிய உதடுகளை விலகவிடாது பதியச் செய்து கொண்டாள்.

"ராஜா! எப்பொழுதும் இப்படியே இருக்கவேண்டும். இப்படியே; இப்படியே. உன்னுடைய உதடுகளின் குளிர்ச்சியான ஸ்பரிசம் என் கண்களைத் திறப்பது போலிருக்கிறது. என் துரையே! நான் என் கண்களை இழந்த நாள் முதலாக உன் அழகைப் பார்த்து அடையும் மகிழ்ச்சியை இழந்தேன். எனினும், நீ என்னை முத்தமிடுகிற பொழுதெல்லாம் நான் உன்னைப் பிரத்தியக்ஷமாய்ப் பார்க்கிறேன். எனக்கு உன் முகம் நன்றாய்த் தெரிகிறது."

அவள் குனிந்தபடியே தன் முகத்தைச் சற்றுமே அசைக்காமல் அவள் அணைத்திருந்தபடியே சில நிமிஷங்கள் மட்டுமிருந்தான். முடிவில், "என் ஆருயிர்க் கமலா!" என்று நெகிழ்ந்த குரலில் கூப்பிட்டான்.

"ராஜா, உண்மை, உண்மை; நான் உன்னை ஓயாமல் தொந்தரவு செய்கிறேன். நீ என்னைக் கடிந்து கொள். நான் அதைப் பொருட்படுத்த மாட்டேன். நான் இப்படியே உன் முகத்தை என் முகத்தோடு அணைத்துக் கொண்டு எத்தனை மணி நேரமாயினும் இருப்பேன். நீ என் அண்டையில் என்னை ஒட்டிக் கொண்டிருக்கிறாய். எனக்குக் கொஞ்சமேனும் பயமில்லை. எவ்விதக் கவலையுமில்லை. ராஜா, மறவாதே; நான் ஒரு பொழுதும் எதையும் பார்க்க முடியாது. கண்ணே, உன் மூலமாக அல்லாமல் ஒரு பொழுதும் ஒன்றையும் நான் பார்க்க முடியாது. என் ஆருயிரே; என் கிட்ட உட்கார். நீ பகலெல்லாம் என்னைப் பிரிந்து வெளியே போயிருந்தாயே. இப்போது நீ எனக்குச் சொல்ல வேண்டிய விஷயங்கள் அநேகம் இருக்குமே; எல்லாம் சொல்."

அவன் அவளருகில் அந்த மஞ்சத்திலேயே உட்கார்ந்து கொண்டான். அவளுடைய ஒரு கை அவனுடைய இடுப்பைச் சுற்றித் தழுவின. மற்றொருகை அவனுடைய வலது கை விரல்களைப் பற்றியிருந்தன.

"கமலா, நம்முடைய தோட்டத்தில் உள்ள மல்லிகைச் செடியில் எத்தனை மலர்கள் பூத்திருக்கின்றன தெரியுமா? நீ கண் வைத்திய சாலைக்குப் போகிறதற்கு முன் ஒரு நாள் பூத்திருந்ததே; உனக்கு ஞாபகம் இருக்கிறதா? இன்றைக்கும் அப்படியே பூத்திருக்கிறது. இன்னமொரு விஷயம்: நான் இன்றைக்கு உன் தோழி மோகனவையும் ரஞ்சிதத்தையும் பார்த்தேன். கமலா, அவர்கள் உன்னைப் போலவே அழகாய் இருக்கிறார்கள். அவர்களுடைய மேனி கொஞ்சமும் வாடவில்லை."

கபோதியாகிய கமலத்தின் இருண்ட முகத்தில் புன்னகையின் ஒளி வீசியது.

"என் கண்ணே, ராஜம், அதையெல்லாம் இன்னம் ஒரு முறை சொல்லு. என்னோடு கலாசாலையில் படித்த என் தோழிகள் எல்லாரும் மாறுதல் அடையாமல் இருக்கிறார்கள் என்பதைக் கேட்கக்கேட்க எனக்கு உண்டாகிற சந்தோஷத்திற்கு அளவே இல்லை. என்னைச் சூழ இவ்வுலகத்திலுள்ள எல்லாப் பொருள்களும் எல்லா மனிதர்களும் நான் என்னுடைய அந்தகாரமான உலகத்திற்குள் பிரவேசித்ததற்குமுன் ஜீவித்திருந்த ஒளிமிக்க உலகத்தில் இருந்த விதமாகவே எவ்வித மாறுதலும் அடையாமல் இருக்கிறார்கள் என்பதைக் கேட்கும்பொழுது என் மனம் பூரிக்கிறது. ராஜம், நீ அந்தப் பெண்ணைப் பார்த்தாயோ? அவள் எப்பொழுதும் என்னிடம் அளவில்லாத அன்பு பாராட்டுகிறாள். என்றாலும் ஏனோ என் மனது அடிக்கடி அவளைக்குறித்துச் சந்தேகம் கொள்ளுகிறது? நான் அவளைப் பற்றித் தப்பபிப்பிராயப்படுகிறேனோ என்று எனக்குத் தெரியவில்லை."

"யாரைக் குறித்துக் கேட்கிறாய்? குமுதவல்லியையா?"

"ஆமாம், ராஜா, நீ அவளைப் பார்க்க வில்லையா?"

"நீ சொன்னது சரிதான். குமுதத்திற்கு உன்னிடத்தில் அளவில்லாத அன்புண்டு. அவள் என்னைப் பார்க்கிற பொழுதெல்லாம் உன்னுடைய நிலைமையை நினைத்து மிகவும் துக்கத்தோடு பேசுவாள்."

"ராஜா, அவளும் மாறுதல் அடையாமல் இருக்கிறாளோ?"

"அவள் உன்னைப் போல அவ்வளவு அழகாய் இல்லை. என்றாலும் எல்லோரிடத்திலும் அநுதாபம் உடையவள்."

"என் துரையே, அவள் இங்கே வந்து என்னிடம் பேசிக்கொண்டிருக்கிற பொழுதெல்லாம், எனக்கு அவளுடைய குரல் அவ்வளவு இன்பமாய் இல்லை. அவளுடைய குரல் உயிரில்லாதது போல என் செவிகளில் தொனிக்கிறது. என்றாலும், அவளுடைய குரல் யாழிசையிலும் இனிமையாகவே இருக்கிறது என்று பலர் சொல்லத் தகுந்ததேயாம். அவள் இங்கே பலமுறையும் வருகிறாள். அவள் எதையோ ஒன்றை நாடி வருகிறாள். ஆனால், அவள் எதை நாடி வருகிறாள் என்று என்னால் சொல்ல முடியவில்லை. ராஜா, நான் உனக்குச் சலிப்புண்டாகும்படி அதிகமாகப் பேசுகிறேனா? அப்படியானால் என்னை மன்னித்துவிடு. நான் உன்னிடம் ஒரு உண்மை கூறட்டுமா? நான் என்

கண்களை இழந்த நாள் முதலாக என்னுடைய மற்ற நான்கு புலன்களும் கண்களாக மாறி விட்டன. அவை தத்தம் வேலைகளைச்செய்வதைப் பார்க்கிலும் கண்களின் வேலையையே அதிகமாகச் செய்து வருகின்றன. அதனாலே, எனக்கு அவள் மிகவும் பயங்கரமான அருவருக்கத் தக்க அழகுடையவளாகவே காணப்படுகிருள். மேலும், எனக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை. நீயும் சில நாட்களாக என்னை ஏமாற்றி வருகிருய் என்று மனம் சிற்சில வேளைகளில் சந்தேகப்படுகிறது. என் மனம் ஏன் இப்படி சந்தேகப்படுகிறதோ? எனக்கே புலப்படவில்லை.''

''கமலா, ஏன் இப்படி கண்ட கண்டபடி பேசுகிருய். மதியீனமாய் நீயும் பேசலாமா? நீ படித்திருந்த கலாசாலையில் மற்றெல்லோரிலும் நீயே பேரழகு வாய்ந்தவள் என்பதை அறிந்தல்லவோ நான் சீமையிலிருந்து வந்ததும் உன் தகப்பனாரை அணுகி உன்னை எனக்குத் தரும்படி கேட்டேன். அவர் அதற்கு இசைந்த பிறகு, நாம் இருவரும் ஒருவரை யொருவர் நன்கறிய வெகுநாள் பழகிய பிறகு தானே நான் உன்னை மணந்து கொண்டேன். இப்பொழுது உன்னுடைய அழகு முன் இருந்தபடியே இருக்கிறதென்பதை எப்படி வேண்டுமானாலும் நான் உனக்கு ருஜுப்படுத்துவேன். புறக்கண் ஒளியிலும் அகக்கண்ணின் ஒளி முகத்தில் அதிகமாக வீசும் என்பதை நீ நன்கு அறிவாயே.''

''ஏனோ, என் உள்ளம் அச்சத்தால் நடுங்குகிறது. ராஜா, இங்கே பார்; என்முகத்தில் முன் இல்லாத சுருக்கங்கள் காணப்படவில்லையா? நீ இதற்கு முன் கவனியாத நரை மயிர்கள் என் தலையில் தோன்ற வில்லையா? நான் என்ன செய்வேன்? நீ ஒரு காலத்தில் காதற்கவி பாடிப் புகழ்ந்த அதே கமலாவாக, பழைய அழகு குன்ருதவளாக இருக்க நான் வேண்டாத தெய்வங்கள் இல்லை.''

அவள் திரும்பவும் மெலிந்து விளர்த்த கரங்களைத் தூக்கிஞள். அவளுடைய விரல்கள் கண்ணுக்குப் புலப்படாத பட்டிழைகளைச் சிக்கெடுத்து நூற்பது போலக் காற்றில் திரிந்தது. அவள் ராஜத்தின் முகத்தைப் பற்றி யிழுத்துத் தன் முகத்திற் கெதிராக ஜன்னல் வெளிச்சத்திற் கொண்டு வந்து, தன் பார்வையற்ற கண்களால் அவனுடைய கருத்திலெழும் சிந்தனைகளை முகத்தில் வாசிக்க முயலுபவள் போல உற்றுப் பார்த்தாள்.

''கமலா, இல்லை; இல்லை; உன் முகத்தில் சுருக்கங்களே யில்லை. தலையில் ஒரு மயிர்கூட நரைக்க வில்லை. உன் கன்னங்கள் எப்பொழுதும் செந்தாமரை போலவே இருக்கின்றன. சுருக்கங்கள்

இல்லாத உன்னுடைய நெற்றி பொற்றகடு போலப் பிரகாசமாய் இருக்கிறது" என்றான் ராஜம்.

"என் ஆருயிர் ராஜா, நீயும் மிகவும் அழகாய் இருக்கிறாய். என் உயிரற்ற கண்களுக்கு நீ எப்பொழுதும் இளமை நீங்காத கட்டழகனாகவே காணப்படுகிறாய். நான் உன்னை முதன் முதலில் காதலிக்கத் தலைப்பட்டபொழுது என் உள்ளத்தில் பூத்த காதல் இன்றும் வாடாமல் மலர்ந்து விகசிக்கிறது. என்றாலும், சில சமயங்களில் உன்னுடைய இருதயத்தில் ஏதோ ஒரு வகையான மாறுதல் ஏற்பட்டிருப்பதுபோல என் மனத்திற் படுகிறது. நான் முன்போலவே அழகாய் இருக்கிறேன் என்று நீ என்னிடம் சொல்லும் பொழுதெல்லாம், உன் குரல் பழைய ராஜத்தின் குரலாக, கலாசாலையில் வந்து என்னைக்காதலித்த ராஜத்தின் குரலாக, எனக்குத் தோன்றவில்லை."

கமலம் கண்களை இழந்து பத்து வருஷங்களாய் விட்டன. ஒளி வரவரக் குன்றி முடிவில் அந்தகாரமே நிறைந்து விட்டது. அவளுடைய கண்களில் ஒளி ஊடுருவ முடியாதவாறு விழி நரம்புகள் யாவும் உணர்வற்று விட்டன. அவள் அந்தகாரமென்னும் சுவர்கள் சூழ்ந்த ஓரிருண்ட மாளிகையில் வாழ்ந்து வந்தாள். அவ்விருள் செறிந்த மாளிகையில் வாழ்ந்த கமலத்தை வெளியுலகத்தோடு -ஒளியும் அழகும் நிறைந்த உலகத்தோடு-சம்பந்தப்படுத்தியவன் ராஜம் ஒருவனேயாம். இந்நிலையில் குமுதவல்லி என்பவள் அவ்வந்தகார மாளிகையில் வாழ்பவள் கைக்கும் புலனுமாறு விளங்குகின்ற ஓர் ஒளியாய்த் தோன்றினாள். பனி துளிக்கும் வைகறைப் பொழுதில் மலரும் ரோஜா மலர், வரவரப் பொலிவிழந்து, ஒவ்வோர் இதழாய் உதிர்ந்து போக, முடிவிற் சூம்பி உருவற்றிருப்பதுபோலவே கமலாவினுடைய முகமும் வரவர வாடிவிட்டது. கண் விழிகள் இருக்க வேண்டிய இடத்தில் இருபெருங்குழிகள் தோன்றின. அவற்றைச் சூழ வளையம் வளையமாகத் திரைகள் தோன்றின. கொடிய கண்ணோயினால் அவளுடைய உடலும் மெலிந்து விட்டது; தலையும் முற்றிலும் நரைத்துப் பஞ்சினும் வெண்மையாய் விட்டது. இப்பொழுது அவள் கண்டார் அஞ்சும் உருக்கொண்டிருந்தாள்.

அன்பென்பது மிக்க வல்லமை உடையது. அது இவ்வுலகத்தையும் அண்டரண்ட கோடிகளையும் அசைக்க வல்லது. இவ்வுலகத்தில் நிகழும் எண்ணரிய அற்புதங்களுக்கு அன்பே காரணமாகும். மனிதர்கள் இவ்வுலகில் செய்கின்ற பேராச்சரியமான காரியங்களுக்கும் அதுவே முகாந்தரமாகும். அவ்வன்பு போலியாய்

இருப்பினும் தன்னளவில் வல்லமை உடையது. இவ்வாறான அன்பின் செயலால், கமலம், தான் இன்னமும் முன்னிருந்தவாறே இளமையும் அழகும் தாங்குவதாக நம்பி விட்டாள். சென்ற பத்து வருஷகாலங்களில், குமுதவல்லி, அவளிடம் வருகிற பொழு தெல்லாம், அவளுடைய இளமையும் அழகும் மாறாதிருப்பதைக் குறித்துப் பலவாறு பேசி அவளை நம்பும்படி செய்து விட்டாள். இவ்வாறு பேசுவதற்குத் துணிச்சலைக் கொடுத்தது, கமலத்தின் அந்தகாரமேயாம். இங்ஙனம் கமலா ஒரு நீர்க்குமிழியினுள் வாழ்ந்து வந்தாள். அக்குமிழி எப்பொழுது உடையுமோ, யார் அறிவார்? சூரியனுடைய கிரணங்கள் நீர்க்குமிழியில் ஏற்றவாறு விழும்பொழுதெல்லாம், அது ஸப்த வர்ணங்களைக் காட்டி அழ குறத் துலங்குவது போல, ராஜம் குமுதமாகிய இருவரது மொழித்திறமையினால், கமலாவின் நீர்க்குமிழியும் பிரகாசித்துக் கொண்டிருந்தது. கமலா தன் கற்பனாவன்மையினால், தான் வாழ்ந்த நீர்க்குமிழியை மிகவும் அழகு செய்தாள். தன் ஞாபக சக்தியைப் பரிபூரணமாய் உபயோகித்துத் தான் கண்ணிழப்பதற்கு முன்னிருந்த உலகக்காட்சிகளை யெல்லாம் வெகு விமரிசையாக அந்நீர்க்குமிழியினுள் அமைத்துக் கொண்டாள். தான் கடைசி முறையாகத் தன்னுருவைக் கண்ணாடியில் பார்த்தபொழுது, எந்த நிறப்புடவை, இரவிக்கை முதலியவற்றைத் தரித்தாளோ, அதே நிறப்புடவை இரவிக்கைகளை இன்றும் தரித்து வந்தாள். இவை யாவும் நீர்க்குமிழி அல்லவோ?

கமலம் ஒருநாள் மாலையில் விளக்குவைத்த பிறகு, ஜன்ன லுக்கு அருகில் உட்கார்ந்து தெருவில் போகிற டிராம் வண்டி கள், மோட்டார் வண்டிகள், மாட்டு வண்டிகள் முதலியவற்றின் ஓசைகளையும், தெருவில் சாமான்கள் விற்பவர்கள் கூவிச்செல்லும் முழக்கத்தையும் கவனித்துக் கொண்டே இருந்து அயர்ந்து உறங்கி விட்டாள். உறங்கினவள் திடீரென்று விழித்தாள். பக்கத்து அறை யில் யாரோ இருவர் தாழ்ந்த குரலில் சம்பாஷிப்பதுபோலத் தோன் றியது. உடனே உற்றுக் கேட்டாள். அதில் ஒரு குரல், தான் பெரிதும் சந்தேகித்து வந்த குமுதவல்லியின் குரல் போலிருந்தது. தான் சாய்ந்து படுத்திருந்த நாற்காலியில் இருந்து மெதுவாய் எழுந்து கைகளை முன்னே நீட்டித் தடவிக்கொண்டு குரல் வந்த அறையின் வாசற் பக்கமாகச் சென்றாள்; மெதுவாய்ச் செவி சாய்த்துக் கேட்டாள்:

“குமுதவல்லி, உன் அழகைப் போல் நான் கண்டதில்லை. உன் அழகு என்னை முற்றிலும் அடிமைப் படுத்தி விட்டது. என்னைப்

பாரேன்! உன் காலடியிலேயே விழுந்து கிடக்கிறேனே. உன்னை என் காதலியாகப் பெற்ற நாள் முதலாகத்தான் நான் என்வாழ்க்கையில் இன்பம் கண்டேன்.''

குமுதவல்லி கலகல வென்று சிரித்து, "ராஜம், நீ இப்பொழுது என்னிடம் சொல்லுகிற விதமாகத்தானே உன் மனைவியிடத்திலும் சொல்லுகிறாய். நரைத்த மயிரும், குழிந்த கண்ணும், ஒட்டிய கன்னமும் உடைய மகாகோரரூபியாகிய கமலாவும் நீ சொல்லுகிறதை யெல்லாம் நம்பிக்கொண்டிருக்கிறாள். என்ன விபரீதம்!'' என்றாள்.

அவ்விருவரும் தீபமில்லாத அவ்வறையினுள் ஓர் உருவம் தங்களை நோக்கி அணுகுவதைக் கண்டார்கள்.

"ராஜம்! என் ராஜம்!'' என்று கமலா ஒரு முறை கூப்பிட்டு அவனண்டை போக ஓரடி எடுத்து வைத்தாள். மறு அடியில் அங்கே அவன் காலடியிலேயே சுருண்டு விழுந்து விட்டாள்.

நீர்க்குமிழி உடைந்து போயிற்று! கமலத்தின் இருதயமும் உடைந்து போயிற்று.

---

# அற்புத வைரம்

சூடாமணி

1. பனிப்பெய்யும் உதயத்தில்
 பசும்புல்லின் நுனிமேலே
பனித்துள்ளி ஒளிகண்டு
 பலபெண்கள் கரம்நீட்டி
எனக்கென்று வைரத்தை
 எடுப்பதன்முன் செங்கிரணம்
தனக்கென்றே அதைக்கொண்டு
 தங்காமற் சென்றதுவே.
2. மாலையிலே வைரமெல்லாம்
 வானகத்தில் தோன்றிடவே
மூலையிலே மல்லிகையாள்
 முகங்காட்டி மிகச்சிரித்துக்
காலையிலே வந்தென்னைக்
 கட்டியணை என்றாளே.
சோலையிலே மணரோஜா,
 சோதிமணி! தழுவென்றாள்.

# போன மச்சான்

எஸ். இராமசுப்பிரமணியன்

கோபாலன் மிகவும் கெட்டிக்காரனுனபடியால் ஒவ்வொரு வருஷமும் தவருமல் பரீக்ஷையில் தேறிவந்தான். பொதுவாக எங்கள் ஊர்ப்பையன்களெல்லாம் கஜினி முகம்மதைப் போன்று மெட்ரிக்குலேஷன் பரீக்ஷைக் கோட்டத்தை முற்றுகையிட்டு அரை டஜன் தடவைக்குக் குறையாமல் முட்டியடித்துப் பிறகு, "சீ சீ, இந்தப் பழங்கள் புளிக்கும்'' என்ற ரீதியாய், "ஆ, படித்தவர்களெல்லாம் என்ன சாதித்து விட்டார்கள்? பி. ஏ. யும் எம். ஏ. யும் பாஸ் செய்து விட்டு ஒவ்வொன்றும் வேலை யகப்படாமல் போடும் லாட்டரியைப் பார்த்தால் மகா கண்ணராவியாயிருக்கிறது'' என்று திண்ணை வேதாந்தம் பேச ஆரம்பித்துவிடுவார்கள். கோபாலன் மட்டும் அப்படிக் கில்லாமல் பி. ஏ. பரிக்ஷையில் முதல் தடவையிலேயே தேறிவிட்டான். அவ்வளவு தான்; ஊரெல்லாம் அல்லோல கல்லோலப்பட்டதென்று நான் கூறும்பொழுது நீங்கள் என்னை அரசியல் வாதி யென்ருவது கவிஞனென்ருவது தவருக எண்ணி விடக்கூடாது. நீங்கள் ஏன் விரலின் மீது மூக்கை வைக்கின்றீர்கள்? உங்கள் ஊரில் வேண்டுமானுல் பி. ஏக்கள் இருநூறு அரசப்பிரதக்ஷணங்களுக்குக் காணும்படியாக இருக்கலாம். ஆனுல் எங்கள் ஊருக்குக் கோபாலன் தான் முதல் பி. ஏ. அதனுற்ருன் அவன் படம் பத்திரிகைகளில் வெளிவருவது சாத்தியமாயிற்று. அவன் பரீக்ஷையில் தேறிய செய்தி சென்னையிலிருந்து தந்தி மூலம் காமாட்டிபுரத்திற்குக் கிடைத்தது. 'கஜினி முகம்மதுகளின்' பெற்ருேர்கள் அவனைச் சபித்தார்களென்பது உண்மையாயினும் பொதுவாக ஊர் முழுவதும் மட்டற்ற மகிழ்ச்சி யடைந்த தென்றே கூறவேண்டும். கோபாலன் பெற்ருேர்கள் ஆலமுண்ட அரன்போன்று ஆனந்தத் தாண்டவம் புரிந்தனர். அவனது தாயாரான கோமதி அம்மாள் பையனைப் பல்லக்கேற்றி ஊர்வலம் செய்ய வேண்டுமென்று விரும்பினுள். ஆனுல் சங்கர ஐயர், "ஊர் விதவைகளின் கண் திருஷ்டி குழந்தை (?)யின் மீது விழுந்து விடும்!'' என்று சொல்லி மனைவியின் யோசனையை நிராகரித்து விட்டார். அதிசயத்தின் மேல் அதிசயம் பாருங்கள்!

ஆனால் அவ்வளவு மஹத்தான சம்பவம் அப்படியே போய் விடுமோ? பி. ஏ. பரீக்ஷையிலேற்பட்ட வெற்றி கோபாலன் வாழ்க்கையில் பெரிய மாறுதலை உண்டு பண்ணியது. ஆசார பூர்வமான சிகை மேனாட்டுக் கிராப்பிற் கிடங்கொடுத்தது. சந்தியாவந்தனம் 'விரதோத்யாபனம்' ஆகிவிட்டது. இவ்வளவு மாறுதல்களையும் பரிபூரண பக்குவநிலையில் தரிசிக்கும் பாக்கியம் சங்கராஜயருக்குக் கிட்டவில்லை. பையன் பரீக்ஷயில் தேறி இரண்டு மாதங்கள் கூடச் செல்லவில்லை. அதற்குள் ஒரு நாள் திடீரென்று மார்படைப்பால் தகப்பனார் மாண்டார். பையன் தாசில் உத்தியோகம் செய்து பார்க்க வேண்டுமென்பது அவரது வெகு நாளைய அபிலாஷை. தாசில்தார் உத்தியோகம் அவ்வளவு உயர்ந்ததாவென்று நீங்கள் வியப்புற வேண்டாம். எங்கள் ஊர் கிராம முன்சீப்பிற்கும் சங்கர ஐயருக்கும் சிறிது மனஸ்தாபம் உண்டு! சங்கர ஐயரின் மனோபீஷ்டம் நிறைவேறாதது வருந்தத் தக்க விஷயம்தான்.

கோபாலனுக்குப் பால்யத்திலேயே விவாகமாகி விட்டது. பாகலாபுரம் கோவிந்த ஐயரின் புதல்வி சௌபாக்கியவதி சுந்தரியை அவனுக்கு மணம் செய்திருந்தனர். சாந்தி முகூர்த்தத்திற்குப்பின்னர் இரு வருஷகாலம்வரை தம்பதிகள் ரதியும் மதனும் போன்று மன மொத்து வாழ்ந்து வந்தனர். சுந்தரி நற்குலத் துதித்தவள். சௌந்தர்யவதி, குணசாலி, குடும்ப பாரத்தை நிர்வகிப்பதில் அளவற்ற ஆற்றலுள்ளவள். ஆயினும் உலகில் மாமி மெச்சிய மருமகளுண்டா? கோமதி அம்மாளுக்கு அவளைக் கண்டால் சிறிதும் பிடிப்பதில்லை. காரணம் வேறொன்று மில்லை. கல்யாணமான மூன்றாவது வருஷத்திலிருந்து திருக்கார்த்திகைச் சீரும் தீபாவளி வரும்படியும் அவள் எதிர்பார்த்த அளவு கிடைக்க வில்லை. ஆகவே எடுத்ததற் கெல்லாம் மருமகளைக் குறைகூறிக் கடிந்து வந்தாள். அத்துடன் பிரதி தினமும் காலை மாலை தவறாது தன் மகனிடம் 'புகார்' ஜபம் செய்து வந்தாள். கரைப்பார் கரைத்தால் கல்லுங்கரையு மல்லவா? ஆகவே சிறிது காலத்திற்குள் கோபாலனும் தன் மனைவியை வெறுக்கத் தொடங்கினான். தாயிற் சிறந்தொரு கோயிலுமில்லை யென்றபடி அன்னையின் ஆஞ்ஞையைச் சிரமேற்றாங்கிச் சுந்தரியைத் தகப்பன் வீட்டிற்கு அனுப்பி விட்டான். சங்கர ஐயருக்கு இதில் சிறிதும் இஷ்டமில்லை. ஆனால் ரவிக்கை ராஜாங்கத்தின் அட்டூழியங்களை எதிர்க்கப் போதிய ஆற்றலும் அவருக்கில்லை.

சுந்தரி, பாவம்! முற்பிறப்பில் யாது பாவம் புரிந்தனளோ, அழுத கண்ணும் சிந்திய மூக்குமாய்த் தகப்பன் வீடு வந்து சேர்ந்தாள். அவளது தாயார் இக்கஷ்டத்தைச் சகிக்க மாட்டாதவளாய்

வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு 'கொடுங்காலி' கோமதியைக் கடுமையாகச் சபித்தாள். ஆனல் சுந்தரியோ, "ஏனம்மா, பெரியவர்களைத் தூஷிக்கிருய்? நான் பூர்வ ஜன்மத்தில் செய்த பாப பலன் இது. இதற்கு அவர்கள் என்ன செய்வார்கள்?'' என்று அன்னைக்குச் சமாதானம் கூறுவாள். கோவிந்தையர் ஆற்ருெணுத் துயரடைந்தாரெனினும் அதை வெளிக்காட்டாமல், "கொடிது, கொடிது வறுமை கொடிது'' என்று தமது தரித்திர நிலைமை நொந்து கொண்டார். அனுதைக்குத் தெய்வம் துணை என்பார்களல்லவா? ஆகவே அனுதினமும் மாலையில் ஆலயம் சென்று அம்பிகையைத் தொழுது ஆறுதல் வேண்டுவதைத் தவிரச் சுந்தரி வேறு என் செய்வாள்? இவையெல்லாம் மூன்று வருஷங்களுக்கு முன்னல் நடந்தவை. சுந்தரியை விலக்கி வைத்தது நியாயமென்று கோபாலன் திட்டமாக அபிப்பிராயப்பட்டான். "எழுத்து வாசனையே அறியாத ஒரு பெண்ணைக் கட்டிக்கொண்டு யார் அவதிப்படுவது? எனக்கு ஒன்றும் தெரியாத வயதில் பெற்ருேர்கள் கல்யாணம் செய்து வைத்தார்களென்ருல் அதற்காக நான் என் ஜீவியம் முழுவதும் கஷ்டப்படுவதா?'' என்றெல்லாம் "பெண் பாவம் பொல்லாதென்று'' புத்திமதி கூறவந்த பெரியோர்களிடம் வாதாடினன்.

பி. ஏ. பாஸ் செய்ததும் கோபாலனின் கர்வம் உச்ச நிலையடைந்தது. அத்துடன் நாகரிக மோகமும் தலைக்கேறி விட்டது. இப்பொழுது அவனிருந்த நிலையைச் சரிவர வர்ணிப்பது சற்றும் சாத்திய மன்று. தகப்பனரும் காலமாகி விட்டார். சமூகத்தைச் சீர்திருத்த வேண்டுமென்ற ஆவல் அவனுக்கு உண்டாயிற்று. இத்துடன் தனது மதாசாரத்தில் வெறுப்பு ஏற்பட்டது. இந்நிலையில் உத்தியோகம் தேடச் சென்னைக்குச் சென்ருன். மிகுந்த சிரமத்தின் பேரில் அவனுக்கு ஒரு வியாபார ஸ்தலத்தில் மாதம் 35 ரூபாய் சம்பளத்தில் வேலை கிடைத்தது. இனி எவரும் தனக்கு நிகரில்லையென்று அவன் எண்ணினன். தனது மனேபீஷ்டங்களை நிறைவேற்றிக் கொள்ள இது தான் தகுந்த சமயமென்று கருதினன். அவன் வேலை பார்த்து வந்த ஆபீஸில் ஒரு கிருஸ்துவப் பெண்டைப் அடிக்கும் உத்தியோகத்திலமர்ந்திருந்தாள். அவள் பெயர் லூஸி மார்கரெட். அப்பெண்ணின் மீது காதல் கொண்டு கோபாலன் அவளது பூர்வோத்தரங்களை விசாரித்தான். அப்பெண்ணின் தாயார் பால்யத்திலேயே அனுதையாகி ரயிலிலும் மற்றப்பொது விடங்களிலும் பிச்சை யெடுத்து வயிறு வளர்த்து வந்த காலையில் சில துஷ்டர்களிடம் சிக்குண்டு அதன் பயனுகச் சென்னையில் மானங்கெட்ட வாழ்வு நடத்தி வந்தாளென்றும் அவள் சமீப காலத்தில்

மரண மடைந்ததாகவு மறிந்தான். ஆகவே லூஸியைத் தனது வாழ்க்கைத் துணைவியாகக் கொள்வதின் மூலம் அவளை வழுக்கி விழாமற் செய்து காப்பாற்ற வேண்டுமென்று தீர்மானித்துத் தனது விருப்பத்தை லூஸிக்கு அறிவிக்க, அவளும் அவனுடன் வாழ இசைந்தாள். கோபாலன் கிருஸ்துவ மதத்தைத் தழுவி எஸ். ஜி. பாலாக மாறிவிட்டான். அவனும் லூஸியும் கணவனும் மனைவி யும் போல் வாழ்ந்து வந்தனர். அவர்களுக்கு எவ்வித விவாகச் சடங்கும் நடைபெறவில்லை. அவை யெல்லாம் அனாவசியம் என்று கோபாலன் அபிப்பிராயப் பட்டான்.

இவைகளை யெல்லாம் பராபரியாகக் கேள்விப்பட்டுக் கோமதி அம்மாள் ஆற்றொணாத் துயரடைந்தாள். எங்கள் ஊர் விதவைகள் மஹா சபையிலும் வம்பர் சமாஜத்திலும் கோபாலன் மதமாறு தலைக்குறித்துப் பலத்த விவாதம் நடந்தது. கோமதி அம்மாளை ஜாதியை விட்டு விலக்கி விடலாமாவென்ற விஷயம் ஜாதிப்பஞ்சாயத் தார் முன் ஆலோசனைக்கு வந்து பலத்த விவாதத்திற்குப் பின்னர் பிள்ளையின் தவறுதலுக்காகத் தாயைத் துன்புறுத்துவது நியாய மில்லை என்று முடிவு செய்யப்பட்டது. ஆனாலும் கோமதி அம் மாளின் மனம் உடைந்து விட்டது. தனக்கு வயோதிகத்தில் இவ் வளவு அலங்கோலமும் அவமானமுமேற்பட்டதை அவளால் சகிக்க முடியவில்லை. மனோவேதனை முற்றிக் கடைசியில் மரணாவஸ்தை யாக முடிந்தது. அவள் இறக்கும்பொழுது மருமகளின் ரூபத்தை அகக்கண்ணிற் கற்பித்துக் கொண்டே, "குழந்தாய், பெண்ணென்று சொல்லிடிலோ ஒரு பேயுமிரங்கு மென்பார்கள். ஆனல் கொடிய வளாகிய நான் உன் விஷயத்தில் பேயினும் கேவலமாக நடந்து கொண்டேன். உன் வாழ்க்கையை வீணாக்கிய பாபத்திற்காக நான் ஏக புத்திரன் கையாலும் கொள்ளியில்லாமல் மரிப்பதே தண்டனை; குற்றத்திற்குப் போதுமான தண்டனை யில்லை; எனினும், குழந் தாய், நீ என்னை அவசியம் மன்னிப்பாய் என்று நம்புகிறேன்" எனப்பொருள்படும்படி புலம்பினாள்.

கோமதி அம்மாள் விண்ணுலகேகிய செய்தி கோபாலனுக்குத் தந்தி மூலம் அறிவிக்கப்பட்டது. புத்திரன் மதமாறி விட்டதால் உத்தரக்கிரியைகளை யெல்லாம் எங்கள் ஊரார்களே ஒரு நெருங்கிய பந்துவைக் கொண்டு நடத்தினர். தான் ஆடாவிட்டாலும் தன் சதை ஆடுமல்லவா? மாதாவின் மரணம் எஸ். ஜி. பாலுக்குச் சிறிது வருத்தத்தை உண்டு பண்ணத்தான் செய்தது.

எனினும் அவன் அக்கிருஸ்துவ மாதுடன் ஆனந்தமாகவே காலங்கழித்து வந்தான். வீட்டில் சமையல் வேலைக்கு ஒரு பட்லரை

அமர்த்தி யிருந்தான். காலை 10 மணிக்குப் பாலும் லூஸியும் ஆபீஸிற்கு ஒன்ருக ரிக்ஷாவில் செல்வார்கள். மாலையில் வேலை முடிந்ததும் லூஸி கடற்கரைக்குக் காற்று வாங்கச் சென்று விடுவாள். பால் துரை சீட்டாடவாவது சினிமா பார்ப்பதற்காவது செல்வான். இரவில் இருவரும் வெகுநேரங் கழித்தே வீடு திரும்புவது வழக்கம். போஜனத்திற்குப் பிற்பாடு லூஸி நடனக்கிளப்பிற்கு சென்று விடுவாள். பால் ஏதாவது கதைப் புஸ்தகங்களைப் படித்துக் கொண்டிருந்து விட்டுப் பிறகு படுக்கச் செல்வான்.

ஆனல் "சுகதுக்கம் மனுஷ்யாணும் சக்கரவத் பரிவர்த்ததே" என்று ஆன்ருேர் கூறியுள்ளாரன்ருே. அங்ஙனமே பாலின் இன்ப வாழ்க்கைக்கும் இடையூறுகள் தோன்றின. ஒரு நாள் அவனுக்குத் தன் மனைவியின் நடத்தையில் சந்தேகங் கொள்ளும்படியான கடிதம் ஒன்று கிடைத்தது. அதில் லூஸிக்கும் அவர்கள் வேலை பார்த்து வரும் ஆபீஸிலேயே உத்யோகம் பார்க்கும் மோஸஸ் என்பவனுக்கும் தகாத நட்பு ஏற்பட்டிருந்ததாகக் குறிப்பிடப்பட்டிருந்தது. ஆரம்பத்தில் பாலின் மனம் லூஸியின்மீது சந்தேகங் கொள்ள மறுத்தது. எனினும் மனத்தை மர்க்கடத்திற்கு உவமையாக தெரியாமலா கூறினர். மோஸஸ் வெறுக்கத் தகுந்த ஸ்திரீலோலனென்றும் மிகவும் கெட்ட நடத்தை உள்ளவனென்றும் பால் முன்பே கேள்விப் பட்டிருக்கிருன். ஆகவே அவனைச் சந்தேகப் பேய் நன்கு பிடித்தாட்டத் தொடங்கியது. அவன் மனம் வியாகூலத்தால் தத்தளித்தது. இருந்தாலும் ஆய்ந்தோய்ந்து பாராமல் ஒன்றும் செய்வதில்லையெனத் தீர்மானித்தான்.

அன்றுமாலை வேலை முடிந்ததும் காற்று வாங்கக் கடற்கரை செல்ல லூஸி ஆபீஸினின்றும் புறப்பட்டாள். அப்பொழுது பால், "கண்ணே, சிறிது தாமதிப்பாயானல் நானும் வருகிறேன்" என்று கூறினன். "மிகவும் நேரமாகி விட்டது. நான் போகிறேன். நீங்கள் வேலையை முடித்துக் கொண்டு சௌகரியப் பட்டால் புறப்பட்டு வரலாம்" என்று பதில் கூறிக்கொண்டே லூஸி புறப்பட்டுச் சென்றது பாலிற்கு வருத்தத்தையும் கோபத்தையும் உண்டு பண்ணியது.

எஸ். ஜி. பாலும் வேலையைத் துரிதமாக முடித்து விட்டுக் கடற்கரைக்குப் புறப்பட்டான். அங்கே அங்கு மிங்கும் சுற்றிப் பார்த்தான்; லூஸியைக் காணவில்லை. அரைமணி நேரம் சென்ற பிறகு லூஸியும் மோஸஸூம் ஒரு மோட்டாரில் வந்திறங்கிக் காதலர் பாட்டையின் வழியே நெடுகச் சென்று மரங்களிடை மறைவான ஓரிடத்தில் அமர்ந்ததைக் கண்டான். பாலின் கண்களில் தீப்பொறி

பறந்தது. அவனுக்கு என்ன செய்வதென்று தோன்றவில்லை. உல கமே இருண்டு 'விர்'ரென்று சுழல்வது போல் தோன்றியது.

பாலினது மனோநிலையை வர்ணிக்க எம்மால் இயலாது. கேவலம் ஒரு தாசியின் பெண்மீது மையல் கொண்டு மதமாறியதும் அதனால் தன் தாயார் துக்கத்துடன் மரணமடைந்ததும் அவளது ஈமக்கடன்களைச் செய்யும் பாக்கியங்கூடத் தனக்குக் கிட்டாமற் போனதும் கடைசியில் அப்பெண் தனது இழிபிறப்பிற் கிணங்கப் புருஷனுக்குத் துரோகம் செய்து விட்டதையும் நினைக்க நினைக்க அவனது ரத்தம் கொதித்தது. அப்பொழுதுதான் அவன் தான் சுந்தரிக்குச் செய்துள்ள கொடுமைகளையெல்லாம் நினைந்து நினைந்து உருகினான். அவைகளுக்கெல்லாம் தண்டனையாகத் தான் பரபுருஷ கமனத்திலீடுபட்ட ஒரு பெண்ணுடன் வாழ நேரிட்டதாக எண்ணினான். எலியூருக்குப் பயந்து புலியூரில் குடியேறிய கதையாய், "எழுத்து வாசனை யற்றவளுடன் எங்ஙனம் வாழ்வது?" என்று கூறிய தனக்கு நெறி தவறிய நாயுடன் வாழ்க்கை நடத்த நேரிட்ட துர்ப்பாக்கியத்தை எண்ணி நொந்து மனம் புண்ணுயினன்.

இரவு ஒன்பது மணிக்குமேல் லூஸி வந்து சேர்ந்தாள். "என்ன ஒரு மாதிரி இருக்கிறீர்கள்?" என்று அவள் வினவியதற்கு, "ஒன்றுமில்லை, சிறிது தலை வலி" என்று பால் விடை பகர்ந்தனன். "சரிதான்" என்று கூறிக்கொண்ட லூஸி போஜனத்திற்குச்சென்று விட்டாள். பாலிற்குக் கோபம் பொங்கிற்று. "ஒரு ஹிந்து மனைவியாயிருந்தால் இவ்வளவு அலட்சியமாகச் செல்வாளா? புருஷனுக்கு வேண்டிய சிச்ருஷைகளைச் செய்வதில் தன் பசியையும் மறந்து விடுவாளன்றோ!" என்று அவன் எண்ணினன்.

போஜனமானதும் லூஸி வெளியே புறப்பட்டாள். "எங்குச் செல்கிறாய்?" என்று பால் கேட்டதற்கு "நடனக்களப்பிற்கு" என்ற பதில் வந்தது. அவள் சென்றதும் பால் வெளியே வந்து பார்த்தான். வீதியின் அந்தத்தில் நின்று கொண்டிருந்த மோஸலின் காரில் அவள் ஏறிச்சென்றதைக் கண்டான். இப்பொழுது அவன் மனோ நிலையை வர்ணிக்க எவரால் இயலும்? மிகுந்த சிரமத்துடன் வீட்டிற்குட் சென்று லூஸிக்கு ஒரு கடிதமும் தன் உத்தியோகத்தை ராஜீனமாச்செய்து மற்றொரு கடிதமும் எழுதி வைத்துவிட்டு, பட்லரிடம் சிறிது உலவி விட்டு வருகிறதாகக் கூறிவிட்டு வெளிச் சென்றான். லூஸிக்கு எழுதின நிருபத்தில் அவளது களங்கத்தையும் தனது மடமையையும் குறிப்பிட்டுவிட்டுத் தனக்கும் அவளுக்கும் எவ்விதத் தொடர்பும் இனித்தேவையில்லையென்றும் வரைந்திருந்தனன்.

இங்கு நாம் நேயர்களுக்குச் சில விஷயங்கள் அறிவிக்க வேண்டியது அவசியமாயிருக்கின்றது. பால் சந்தேகித்ததுபோல் லூஸி வழுக்கி விழுந்து விட்டாளாவென்ற விஷயத்தைக் குறித்து நாம் ஒன்றும் நிச்சயமாகக் கூறுவதற்கில்லை. பாலுக்குத் துரோகம் செய்ய அவள் எண்ணியாவது இருந்தாளா என்பதைப் பற்றிக் கூட நாம் ஒன்றும் கூற முடியவில்லை. ஆனல் டாம்பீக வாழ்க்கையிலும் நடனம் முதலிய காமகேளிகளிலும் மட்டற்ற பற்றுக் கொண்ட அவள் தன்னையுமறியாமலே அத்தூர்த்தன் வலையிற் சிறிது சிறிதாகச் சிக்கி வந்தாளென்பது உண்மை. இந்நிலையில் பாலின் கடிதம் மோஸலிற்கு மிகவும் அனுகூலமாக முடிந்தது!

இந்தக் காதல் நாடகம் முடிந்த ஒரு வாரத்திற்கெல்லாம் மிஸ்டர் எஸ். ஜி. பால் பழையபடி ச. கோபாலனுக மாறினன். போன மச்சான் திரும்பி வந்தான் பூமணத்தோடு. அவன் சங்கரிபுரம் ஆரிய சமாஜத்தாரால் மீண்டும் ஹிந்து மதத்தில் சேர்த்துக் கொள்ளப் பட்டான். பிறகு எங்கள் ஊருக்கு வந்து சேர்ந்தான். ஊரிலுள்ள பெரியவர்களை நமஸ்கரித்துத் தான் செய்துள்ள ஸமஸ்தாபராதங்களையும் க்ஷமித்தருளவேண்டுமென்றும் தான் மீண்டும் ஹிந்துவாகி விட்டதாகவும் கூறினன்.

ஆரம்பத்தில் வைதீகர்கள் சிறிது கடுமையாக இருந்தாரெனினும் கோபாலனின் பரிதாபகரமான கதையை முழுதும் கேட்ட பின்னர் அவர்கள் மனம் வெந்தழல் மெழுகுபோல் இளகிவிட்டது. கோபாலன் பிராயச்சித்தம் செய்துகொண்டதன்பேரில் காமாட்டிபுரம் வைதிகப் பிராமணர் சமூகத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டான். உடனே சுந்தரியுடன் புறப்பட்டு வருமாறு பாகலாபுரம் கோவிந்தையருக்குச் செய்தி அனுப்பப்பட்டது. அவரும் அங்ஙனமே வந்து சேர்ந்தார். விரகதுக்கத்தினல் 'கிருசதா' அவஸ்தையை அடைந்துவிட்ட சுந்தரியின் சுந்தர வதனத்தில் பதிவ்ரதாதேஜஸ் ஒளி வீசியது. கோபாலன் மாமனரை நமஸ்கரித்து வரவேற்றுத் தனது பூர்வோத்திரங்களை மறந்து விடுமாறு மன்ருடியதும், கோவிந்தையர் ஆனந்த பாஷ்பம் சொரிந்ததும் வர்ணனைக்கு இடம் தரவில்லை. கோபாலன் அன்னையின் உத்தரக் கிரியைகளைச் செய்து விட்டுப் பெரியோர்களின் ஆசீர்வாதத்தால் இன்பமாக இல்லற தர்மத்தை அனுஷ்டித்து வருகிருன். பிரிந்தவர் கூடினல் பேசவும் வேண்டுமோ?

நேயர்களே, சமூகத்தைச் சீர்திருத்தப் புறப்பட்ட கோபாலன் சமூகத்திற்குத் தன்னைச் சீர்திருத்திக் கொண்டு வந்ததைப் பற்றி உங்கள் அபிப்பிராயமென்ன?

# கம்பீர க்காதல்

ச. முனிஸ்வாமி பிள்ளை

இந்த வருணனை வரலாற்றில் காணும் கதாநாயகன் தேசத் துக்காக உயிர்துறந்தவன். ஆனால் இவனிடம் இவனுடைய தரும பத்தினிக்கிருந்த காதலைப் பற்றி நினைக்குங்கால், மனித உள்ளங் கொண்ட எவரும், திடுக்கிட்டு நடுங்கினாலும், பூரிப்பு அடையாமல் இருக்க முடியாது. மனித சமாஜத்தில் இப்பொழுதும், எப் பொழுதும் அற்பத்தனம் இருந்தது—இருக்கும் என்று நெஞ்சு வறள வாதாடும் நா நயம் கொண்டவர்களுடைய இதயமும் இந்த உத்தமியின் காதலின் பயங்கரத்தைக் கண்டு கலங்கும் என்பது உறுதி. இத்தகைய உத்தமிகள் தாய்மார்களானால், அவர்களுடைய செல்வக் குழந்தைகள் வீரர்கள் ஆவார்கள் என்று சொல்லத் தடையுமுண்டோ? உலகம் புண்ணிய பூமி என்று சங்கு கொண்டு ஊத நமக்கு உரிமை உண்டு.

* * *

மொட்டு, வெடித்து மலரும் பருவத்திலிருந்தது. மலரின் இதழ்களின் வனப்பையும் மென்மையையும் கண்டு மயங்கி, குயில் கீதம் பாடிற்று. தோட்டக்காரன் வந்தான். குயிலும் பறந்து ஓடிப்போயிற்று. தனது காதலியான மலரைச் சுற்றிச் சுற்றிக் 'கொண்டான்' அடித்தது. தோட்டக்காரனோ இரக்கமின்றி மல ரைப் பறித்துப் பிய்த்து இதழ்களைத் தனியா யெடுத்துக் கூடையில் போட்டுக் கொண்டான். குயில் அலறிற்று, அழுதது. பயன் பட வில்லை. உடனே குயில் மூர்ச்சைபோட்டுத் தரையில் விழுந்தது; மலர்க்காதலி இருந்த இடத்திலேயே உயிர் நீத்தது.

* * *

கோடை. அவர் சிறையிலிருந்தார். நான் வீட்டிலேயே ஆறு மாத காலமாய், என் நல்ல காலத்தை எதிர்நோக்கிக் காத்துக் கொண்டிருந்தேன். முட்டாளாயிராதே என்று அவர்கள் சொல் லுவதுண்டு. அவன் விடுதலையடைந்து மீண்டும் உன்னிடம் வந்து சேருவான் என்றும் அவர்கள் சொல்லுவார்கள். அதற்கு நான், "அந்த நாள் எப்பொழுது விடியப் போகின்றது? அந்தச் சூரியன் என்று உதயமாகப் போகிறான்? நடுவே நிற்கும் பாழான இரவு

எப்போது மடியும்? அந்த நல்ல மணியின் ஓசை எப்பொழுது கேட்கும்?'' என்பேன்.

இராசதானி நகரைப் பார்ப்பதற்கு எனக்குச் சமயம் வாய்த்தது. அவரை அங்கே சிறைவைத்திருந்தார்கள். அங்கே தான் விசாரணையும் நடந்து வந்தது. ஆகையால் நான் அங்கே போய்ச் சேர்ந்தேன். சிறையிலே அறைகள் பயங்கரமாயிருந்தன. கருங் கோடை மாதங்களில், இரவு பகலாய், அந்தப் பயங்கரமான குறுகிய அறைகளிலேதான் அவர் வைக்கப் பட்டிருந்தார். எனது காதலரைக் கண்டேன்.

"அவர்கள் உங்களுக்குக் கட்டில் கொடுத்திருக்கிறார்களா?'' என்று என் கணவரைக் கேட்டேன்.

"என்ன! நீ பேதையாய் இருக்கின்றாயே! இங்கே கட்டில் எதற்காக?'' என்றார்.

"பின்னர் நீங்கள் எவ்வாறு படுத்து உறங்குகின்றீர்கள்?'' என்று நான் மிகப்பயந்து கேட்டேன்.

"தரையிலே ஒரு கம்பளியைப் போட்டு அதன் மேல் படுத்து உறங்குகின்றேன்'' என்றார்.

பின்னர் நான் வீட்டுக்குத் திரும்பி வந்தேன். மொட்டை மாடியில் மற்றவர்கள் கட்டில்களில் படுத்துத் தூங்குகிறார்கள். வீட்டின் அடித் தாழ்வாரத்தினருகே இருக்கும் அறைக்குச் சென்று, ஒரு கம்பளியைத் தரையில் விரித்துப் படுத்துக் கொண்டேன். கொசுக்கள் கீதம்பாட ஆரம்பித்தன. எனது காதுகளைச் சுற்றி அவைகள் வட்டமிட்டுக் கொண்டிருந்தன. அவைகள் எனக்கு உபதேசம் செய்வதாகத் தோன்றிற்று; "முட்டாளே! இந்தக்கோடையில் இத்தகைய அறையில் மயிர்க்கம்பளியில் எவருக்கேனும் தூக்கம் வருமா?'' என்று என்னை அவைகள் கேட்பதுபோலத் தோன்றிற்று. நான் எழுந்து உட்கார்ந்தேன். ஜன்னல் துவாரங்களின் வழியே சந்திர கிரணங்கள் நுழைந்து கொண்டிருந்தன. நான் சந்திரனைப் பார்த்து, "ஏ! ஒளி வீசும் பொருளே! என்னறையை நீ ஒளி திகழச் செய்கின்றனையோ? அவரும் தம் அறையில் இராத் தூக்கம் இன்றி விழித்துக் கிடக்கின்றனரோ? அது உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டேன்.

திரும்பத் திரும்ப நான் சந்திரனைப் பார்த்தேன். ஆனால் மறுமொழி யொன்றும் எனக்குக் கிடைக்க வில்லை. மீண்டும் நான் படுத்துக் கொண்டேன். கொசுக்கள் என்னைக் கடுமையாய்க் கடித்தன. மறுநாள் இரவிலும் அதே அறையில் அதே படுக்கையில்.

படுத்துக் கொண்டேன். மூன்றும் இரவிலும் கொசுக்களின் தொல்லை ஒழிந்தபாடில்லை. அச்சமயம் எனது நாத்தி—கணவனுடைய சகோதரி—திடீரென்று என் முன்னே வந்து நின்றாள்.

"உன்னை நீயே கொன்று கொள்ளுவது நலம் என்று நீ தீர்மானம் கொண்டிருக்கிறாயா ?" என்று என்னைக் கேட்டாள்.

"ஏன் ? நான் செத்துக் கொண்டிருக்கிறேனா ?" என்று கேட்டேன்.

"இவைகள்தாம் சாவு வருவதற்கு நிலையான சாதனங்கள்."

"இவ்வாறு தூங்குபவர்கள்........................."

"ஆம், ஆம், அவர்கள் சாவார்கள்."

என் கண்கள் திறந்தன. நீர் கண்களில் சுரந்தது. "அவரே சிறையில் இவ்வாறு படுத்துறங்கும்பொழுது நானும் அவரைப் போலப் படுத்துத் தூங்கக் கூடாதா ?" என்றேன்.

மறுபடியும் எனக்கு அனுமதி கிடைத்தது. இராசதானி நகருக்குச் சென்று அவரைப் பார்த்தேன். என் கணவனை யொத்த கைதிகளின் தற்கால நிலைமையைப் பற்றி வினவினேன். "நாங்கள் நாளுக்கு ஒரு தடவைதான் சாப்பிடுகிறோம்" என்றார். "அவர்கள் சாப்பிடும் ரொட்டி எப்படி யிருக்கும்?" என்று கேட்டேன். அவர் ரொட்டியின் ஒரு துளியை எடுத்து என் கையில் கொடுத்தார். அதை என்னுடன் கூடக் கொண்டு வந்தேன். அதிலே கடலை இருந்தது ; கோதுமை இருந்தது ; இன்னும் பலவித தானியங்களும் சரக்குகளும் இருந்தன. நான் வீட்டுக்குத் திரும்பி வந்தேன். மேற்சொன்ன சரக்குகள் யாவையும் சேர்த்து ஒரு ரொட்டி செய்து கொண்டேன். ஒரு வேளை மட்டும் சாப்பிட்டேன். வேறு உணவு தண்ணீர் தான். இவ்வாறு பல மாதங்கள் கழிந்தன. இடைவிடாமல் விசாரணை நடந்து கொண்டு வந்தது. எனது அறையில் உட்கார்ந்து கொண்டு அவரைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தேன். வெளியிலிருந்து அழுகைச் சத்தம் என் காதிலே விழுந்தது. எனது உள்ளம் குதிக்கத் தலைப்பட்டது. எனது நெற்றி முத்து முத்தாய் வியர்த்துக் கொண்டிருந்தது. என் உணர்ச்சியை அடக்கிக் கொண்டு நான் வெளியே வந்தேன். எனது கணவருடைய பெயரை எனது நாத்தி திரும்பவும் சொல்லி, "மரண தண்டனை! மரண தண்டனை!" என்று உரத்துச் சொன்னாள்.

மீண்டும் நான் இராசதானிக்குச் சென்றேன். கடைசியாக அவரை அதே சிறையில் கண்டேன். அந்தச் சிறையிலேதான் இளைஞர்கள் தங்கள் உயிர்களை இழக்கின்றனர் ; அங்கே தான், மெல்லிய,

மிருதுவான மலர்களை யொத்த உயிர்கள் வாட்டமடைந்து அழிகின்றன. எனது நாயகனைச் சந்தித்தேன். "சில சொற்கள் கலந்து கொள்ளுவோம்" என எனது உள்ளம் கூவிற்று. ஆனால் அதற்கு ஏற்ற சக்தி எங்கள் இருவருக்கும் இல்லை என எனது உதடுகள் கூறிக் கொண்டிருந்தன. ஆமாம்; அவருடைய உதடுகள் அசைந்தன. அவருடைய மெல்லிய குரல் வெளிவந்தது. "கண் மணியே! உலகம் சாசுவதம் அல்ல. இங்கு வந்தவன் திரும்பவும் போய்த் தீர வேண்டும். எவரும் மற்றவர் துணையை நாட முடியாது. எனது தேசத்துக்காக எனது உயிரை விடுகிறேன் என்பதைத் தெரிந்து கொண்டு, உன்னைப் பாக்கியவதி என்று எண்ணிக் கொள்" என்றார் அவர்.

எனது காதுகள் இம்மொழிகளைக் கேட்டன; ஆனால் கண்களிலிருந்து நீர் வெள்ளமாய்ப் பெருகிக் கன்னங்களில் வழிந்தது. திரும்பத் திரும்ப நீரின் ஓட்டத்தைத் தடுத்து எனது நாயகருடைய முகத்தின் முழு தரிசனத்தைக் கடைசியாகக் காண முயன்றேன். ஆனால் அந்த முயற்சி பலிக்காமல் போய் விட்டது.

மறுநாள் அவருடைய உடலைக் கொளுத்துவதற்கு வேண்டிய சாமான்கள் தயாராய் இருந்தன. "இது தான் அவருடைய ஆத்மாவுக்குக் கடைசிக் கிரியை" என்று அவர்கள் சொல்லிக் கொண்டிருந்தார்கள். "அப்படியானால் அவருடன் கலந்து கொள்ள இது தான் எனக்கு ஏற்ற தருணம்" என்று எனக்குள்ளாகவே சொல்லிக் கொண்டேன். ஆனால் அவர் உடல் கிடைக்க வில்லை என்று சொல்லிக் கொண்டு அவர்கள் திரும்பி வந்து விட்டார்கள்.

மறுநாள் என்ன நடந்தது என்று என்னால் சொல்ல முடியாது. சென்ற பதினைந்து நாட்களாக நான் பட்டினி கிடந்து பிரார்த்தனை செய்து கொண்டிருக்கிறேன். என்னுடைய மனோரதம் பூர்த்தியாகும் நாள் நெருங்கி விட்டது.

* * *

இதைச் சொல்லி விட்டு, அந்த உத்தமி மௌனமாய் இருந்து விட்டாள். இந்தத் துன்பமயமான வரலாற்றை அவள் சொல்லி வரும்பொழுது எனக்கு மயிர்க்குச்செறிந்தது. எனது கண்களினின்றும் நீர் பெருகிற்று. எனது இதயத்தில் வலி தோன்றிற்று. பின்னர் அந்த உத்தமி ஒரு பருக்கையாவது சாப்பிடவில்லை. நீர் ஒரு துளியாவது குடிக்கவில்லை. இவ்வாறு பதினெட்டாம் நாள் முடிந்தது. அதே இடத்தில், அதே நிலையில் உட்கார்ந்து கொண்டு, தனது தியானத்துக்கு மூர்த்தியான தன் கணவனைப் பற்றித் தியானம் செய்து கொண்டிருந்தாள். கடைசியாக அவளுடைய

நாள் வந்தது. வானம் களங்கமற்று விளங்கிற்று. சூரியன் திகழும் ஒளியுடன் வெளி வந்து கொண்டிருந்தான். ஜனங்கள் தங்கள் தொழில்களில் அமர்ந்து நின்றனர். அவள் தன் இடத்தை விட்டுப் பெயர்ந்து நின்றாள். தானே சுத்த ஜலம் கொண்டு வந்தாள். நீராடினாள். சுத்தமான உடை தரித்துக் கொண்டாள். பழைய இடத்தில் போய்ப் படுத்துக் கொண்டாள். "எனது அருமையான நாயகரே! என்னை வெகு நாட்களாகச் சோதித்து விட்டீர்கள். இன்றைக்கு நான் உங்களை விடப் போவதில்லை. உங்களைப் பிரிந்து இனிக் கணமும் என்னால் இருக்க முடியாது" என்றாள். இதைச் சொன்னதும், அவளுடைய கடைசி மூச்சு—அந்தக் கம்பீரக்காதலின் முடிவான காற்று—உடலிலிருந்து வெளியேறி விட்டது.

---

# அன்பு

சூடாமணி

1. சிறிய நீரின் துளியாலும்
செறிந்த உவர்நீர்க் கடலாகும்.
சிறிய மணலின் பொறியாலும்
செழித்த நல்ல உலகாகும்.
சிறிய கணந்தான் ஒருநாளிற்
சிறிதே எனினும், அதுவன்றோ
அறிய முடியாத் தன்மையதாய்
அளவில் காலம் ஆக்கிடுமே!

2. அன்பின் சிறிய செயலாலும்
அன்பின் சிறிய மொழியாலும்
துன்பக் கடலில் மிதந்தோடும்
துயரம் நிறைந்த இப்புவியும்
இன்பம் நிறைந்த விண்போல
இனிதாய் அமைந்து விளங்கிடுமே.
அன்பே உலகை அளித்திடுமோர்
அரிய சக்தி என்றுணர்வீர்.

# ராமபத்திரனின் மனக்கோட்டை

கே. சாவித்திரி அம்மாள்

அருங்கோடையில் ஒருநாள் அந்திப்பொழுதில் சங்கர புரம் என்ற சிறிய கிராமத்திற்குச் செல்லும் மார்க்கத்தில் தளர்ந்த நடையுடைய இளைஞனொருவன் சென்று கொண்டிருந்தான். வெகு தூரம் பிரயாணம் செய்தவன்போல் அவன் தாடைகள் தூசி படிந்தும் அழுக்கடைந்தும் காணப்பட்டன. அவன் காலிலணிந்திருந்த புது மாதிரியான செருப்பும் தலைக்குல்லாயும் தோளிற்றொங்கிய விசித்திரமான பட்டுச் சால்வையும் அவன் அநேக நாடுகளைச் சுற்றிப் பார்த்து வந்தவனென்பதை நன்கு விளக்கின. பிறந்த ஊரை விட்டு அன்னிய தேசங்களுக்குச் சென்று வந்ததன் அடையாளமாக இயல் பாயுள்ள அவன் நடைஉடை பாவனைகள் சிறிது சிறிதாக மாறியது மட்டுமின்றி அவைகளுக்குப் பதிலாக அன்னிய தேசத்துப் பழக்க வழக்கங்களும் அவனறியாமலே அவனைக் கைப்பற்றி யிருக்கலாமல்லவா ? ஆகவே, இப்பொழுது அவன் மீண்டும் தான் பிறந்த ஊரை நாடி வரும்பொழுது ஊர் ஜனங்கள் அவனை யாரோவென்று திகைப்புக் குறிப்புடன் நின்று நோக்கிச் சென்றார்களேயல்லது ஒருவரும் அவனை இன்னாரென்று அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை. அன்று ஏதோ உற்சவ தினமாயிருந்தபடியால் பல ஜனங்கள் கோவிலுக்குப் போவதும் வருவதுமாயிருந்தார்கள். அச்சன நெருக்கத்தில் இளம்பெண்ணொருத்தி கூட்டத்தை விலக்கிச் செல்லுகையில் அவன் மீது சிறிது பட நேர்ந்தது. உடனே அவள் ஒதுங்கி அவனைச் சற்றே நிமிர்ந்து நோக்கியதும் திடுக்கிட்ட குரலில், "என்ன ராமபத்திரனா?'' என்று வாய்விட்டுத் தானே கூறிக் கொண்டாள்.

"யார் ? என் அத்தை மகள் மரகதமாயிருக்குமோ ?'' என்று திரும்பி அவளைப் பார்த்து யோசித்துக்கொண்டே ராமபத்திரனும் நிற்காமல் மேலே நடக்கலானான்.

ராமபத்திரனுக்குப் பகுத்தறியும் சக்தி ஏற்பட்டு விஷயங்கள் புலப்படத் தொடங்கிய நாள்முதல் தான் சாதாரணமாய் யாவரையும்போல் பிறக்கவில்லையென்றும், ஏதோ ஓர் உன்னதமான வாழ்வின் பொருட்டே இப்புவியில் உதித்தவனென்றும் அவனுள்ளத்தில் விடாது தோன்றிக்கொண்டேயிருந்தது. அவ்வாறான எண்ணம்

அவனுக்கு எவ்விதச் சூசகங்களினால் ஏற்பட்டனவெனின், பின் வருபவற்றைக் குறிக்கும் அரியதோர் கனவின் மூலமாகவோ, அல்லது அவனுக்கு இயற்கையாயுள்ள மனோபாவத்திற்கிணங்க ஏற்பட்ட மனோராஜ்யத்தினாலோ நாமறியோம். ஆனால் அவன் மட்டும் தன் வாழ்நாளில் மூன்று அரிய சம்பவங்கள் தனக்கு நேரப் போகின்றன வென்றும், அம் மூன்றும் முறையே மூன்று வித அடையாளங்களினால் தனக்கு விளங்கப்போகின்றன வென்றும் உறுதியாய் நம்பினான். அம் மூன்று அரிய சம்பவங்களிலும் ஒன்றைப் பற்றித்தான் அவன் அதிக ஆவலுடன் சிந்தித்தான்; அதாவது தன் மனத்திற்கிசைந்த மங்கையைக் கண்டு காதலிப்பதே.

அவளுக்காக அவன் இவ்வுலகம் முழுவதும் தேடி அலைந்து வரும்பொழுது பேரழகு வாய்ந்த ஓரிள நங்கை அர்த்த சந்திர வடிவானதோர் திவ்யப் பதக்கம் தன் மார்பில் விளங்க அவன் கண்ணெதிர்ப்படுவாள். அப்பதக்கம் அத்தகைய வடிவுடனிருப்பது தான் முக்கியமே யன்றி அதிற் பதித்திருக்கும் கற்கள் முத்தோ, மரகதமோ, மாணிக்கமோ, அல்லது வைடூர்யமோ, எதுவாயிருப்பினும் அவன் ஒரு பொருட்டாக நினைக்கவில்லை. அவளை அணுகி அவன், "பெண்ணே! இந்த எனதுள்ளம் துன்பமிகுதியால் வருந்தி வாடுகின்றது. அதன் சோர்வை உன்பால் நான் தீர்த்துக்கொள்ள இயலுமோ?" என்று கேட்பான். அதற்கு, அவனுக்கு மனைவியாக விதிக்கப்பட்ட பெண்மணி அவளாயிருந்தால், தன் மார்பைத் தொட்டுக் காட்டி, "இவ்வளவு காலமாக நான் அணிந்திருக்கும் இவ்வாபரணமொன்றே தாம் அவ்வாறு செய்யலாமென்பதற்கு ஒரு தக்க அறிகுறியாகும்" என்று அம்மாதரசி பதிலுரைப்பாள்.

அவனது இரண்டாவது மனோராஜ்ய மென்னவெனில்: பெருஞ் செல்வக் குவியலொன்று இப்பூமியின்கண் மறைந்துளது; அது புதைந்து கிடக்குமிடம் அவனன்றி மற்றெவர் கண்களிலும் தென்படக் கூடியதல்ல வென்பதே. அப் பிரதேசத்தின் மீது அவன் பாதம் பட்டவுடன் மனிதக்கை போன்றதொன்று—அது வெட்டவெளியில் ஜோதிர் மயமாய்த் துலங்குமோ, அல்லது சிலா வடிவமாய்க் காணுமோ, ராமபத்திரனுக்கு நிச்சயமாய்த் தெரியவில்லை—அவன் முன் தோன்றி, தன் முன் விரலால் கீழே சுட்டிக்காட்டும்; அதன் கீழ் மண்ணில் 'வெட்டு' என்ற மூன்றெழுத்துக்கள் காணப்படும். அங்குத் தோண்டிப் பார்த்துத் தான் கனவு கண்டு கொண்டிருக்கும் பெரும் நிதியை அவன் கண்டெடுப்பான்.

அவனது வாழ்வில் நேரப்போகும் மூன்றாவது சம்பவ மென்னவெனில்: பல்லாயிரம் ஜனங்களைத் தன்கீழ் அடக்கியாளக்கூடிய

ஓர் அரிய பதவியைப் பெறுவதேயாம். அது பொற்சிங்காதனத்தின் மீதமர்ந்து செங்கோல் செலுத்தும் ஒரு மன்னன் பதவியோ, அல்லது ஸ்வாதந்தரியத்தைப் பெறப் பாடுபட்டுக்கொண்டிருக்கும் ஒரு தேசத்துக் குடிகளுக்குத் தலைவனுவதோ, அல்லது மானிட ஜன்மம் உய்யும் பொருட்டுத் தோன்றிய ஒரு புதிய மதத்தை ஸ்தாபிக்கும் மதாசாரியரொருவருடைய சிரேஷ்ட நிலையோ நமக்குத் தெரியாது. அவன் அவ்வுயர்ந்த பதவியைப் பெறுவதற்குமுன் வயது முதிர்ந்த மூவர் அவனைக் காணவருவார்கள். அம்மூவரிலும் தனது கம்பீரத் தோற்றத்தால் மிகவும் பெரியவராக விளங்குபவர் அனைத்தும் துறந்த ஓர் யதிபோல் வேடமணிந்து கையில் தண்டமோ, கோலோ இவை போன்றதொன்றைத் தாங்கியவராய் அவனை அணுகிச் சில உபதேச மொழிகளை அளித்துச் செல்வார். அவனும் அதன்படி நடந்து முடிவில் உலகில் அழியாப் புகழ் பெறுவான்.

இத்தகைய உன்னத ஸ்திதியை லக்ஷ்யமாகக் கொண்டு ராமபத்திரன் தனது பதினருவது வயதிலேயே தன் காதலுக்குரிய கட்டழகியையும் மண்ணிற் புதைந்து கிடைக்கும் அருஞ் செல்வத்தையும், பல்லாயிரம் ஜனங்களுக்குத் தலைமை வகிக்கக்கூடிய பெரும்பதவியையளிப்பவரான மகானையும் தேடிப் புறப்பட்டான். ஆனல் இவை யாவையும் அவன் அடைந்தானேவெனில், அந்தோ ! இப்பொழுது அவனை நோக்கும்பொழுது பல இன்னல்களில் அடிபட்டு மடிந்த உள்ளத்தினனுய்க் காணப்பட்டானே யல்லது, உலகில் பிறர் பெறற்கரிய பெரும்பேறுகளைப் பெற்றவனுகத் தோன்றவில்லை. எவ்விடத்தில் தன் மனோராஜ்யங்கள் முதலிற்றேன்றினவோ அவ்விடத்திற்கே சென்று தளர்ச்சியுற்ற சரீரத்தைத் தேற்றிக்கொண்டு மீண்டும் தன் பிரயாணத்தைத் தொடங்கும் உத்தேசத்துடன் இப்பொழுது அவன் தான் பிறந்த இடம் வந்து சேர்ந்தான்.

அவன் சென்று ஏறக்குறையப் பத்து வருஷங்களாயினும் அச்சிறு கிராமத்தில் ஒரு மாறுதலும் தென்படவில்லை. சீரும் சிறப்பும் மிகுந்து நிற்கும் கிராமங்களிலொன்றல்லவாகையால், அன்று கண்ட மேனிக்கு அழிவில்லாமலிருந்தது. சாலை யோரத்திலிருந்த சில செடிகள் மட்டும் இப்பொழுது ஓங்கியுயர்ந்து மரங்களாகிக் கிளைகளடர்ந்து காணப்பட்டன. ஊரிலுள்ள வீடுகள் முன்னிலுமிடிந்து பாசி படர்ந்து பழமையாய் விளங்கியதைத் தவிர்த்து அங்கு யாவும் முன்பிருந்தபடியே இருந்தன. பத்து வருஷங்கள் கழித்துத் திரும்பி வந்தவனென்பதற்குப் பதிலாக அன்று காலை வெளிக்கிளம்பியவன் பகற்கனவு கண்டு விழித்து அந்திப் பொழுதில் மீண்டும் ஊரை அடைந்திருப்பது போலவே ராமபத்திரனுக்குத் தோன்றிற்று.

ஆயினும் ஒருவரும் தன்னை அடையாளம் கண்டுகொள்ளாமற் போனதைப் பார்க்க அவன் மனம் சற்று விசனத்திலாழ்ந்தது.

"எல்லா மாறுதலும் இவ்விடத்திலன்றி வேறெங்குமில்லை" என்று அவன் ஒரு பெருமூச்சுடன் தன் ஹிருதயத்தைத் தொட்டுக் கூறிக்கொண்டான்; "பத்து வருஷங்களுக்குமுன் எல்லையற்ற உற்சாகத்துடன் வீட்டைவிட்டு வெளிச் சென்ற பதினாறு வயதுக் காளையோ இப்பொழுது தன் மனோராஜ்யங்களெல்லாம் பாழாகக் கவலையும் அலுப்பும் ஏக்கமும் மேலிட்டுத் தொங்கிய முகத்துடன் வீடு திரும்புபவன்!"

இவ்வாறு விசனத்துடன் எண்ண மிட்டுக்கொண்டே ராமபத்திரன் தன் வீட்டை அணுகினான். அங்கே வயது சென்ற அவன் தாய் மகன் ஊரிலில்லாத இப் பத்து வருஷகாலமாக ஏதோ சொற்ப வரும்படியைக்கொண்டு செளக்கியமாய்க் காலம் கழித்து வந்தாள். உடனே உட்செல்லாமல் ராமபத்திரன் வாயிலில் கிளைகள் தழைத்து நிழல் கொடுத்துக் கொண்டிருந்த ஒரு பழைய மரத்தின் மீது சாய்ந்த வண்ணம் நின்றவனாய் இருபுறமும் தாழ்வான திண்ணைகளும் புதிய கோலமிடப்பெற்ற படிக்கட்டுகளும் கூடிய தன் வீட்டை ஒரு நிமிஷம் நோக்கினான். தான் சிறுவனாயிருந்தபொழுது அம் மரத்தினடியில் சதா விளையாடிக்கொண்டிருந்தது அவனுக்கு இப்பொழுது ஞாபகத்திற்கு வந்தது. தான் சாய்ந்திருந்த அடிமரத்தைத் தற்செயலாய் நோக்கவும் அவன் முகத்தில் விசனகரமான ஒரு புன்னகை அரும்பிற்று. ஏனெனில், அவன் தன் மேம்பட்ட நிலைமையைப்பற்றி மனக்கோட்டை கட்டத் தொடங்கிய புதிதில், அவ்வடிமரத்தின் பட்டையில் ஒரு நாள் முழுவதும் சிரமப்பட்டு எழுதிய 'வெட்டு' என்ற மூன்று எழுத்துக்கள் இப்பொழுது வெகுவாய் அழிந்துபோய் அவன் கண்களில் தென்பட்டதே அதற்குக் காரணம். அவ்வெழுத்துக்களுக்குமேல் மரப்பட்டையானது உரிந்து பார்வைக்குச் சற்றேறக்குறைய ஒரு கைபோல் நீண்டதாய்க் கீழிருக்கும் எழுத்துக்களை விரலாற் சுட்டிக் காட்டுவதுபோல் சாய்ந்து தொங்கிக் கொண்டிருந்தது. அவ்வாறு இயற்கையில் தற்செயலாய் ஏற்பட்டிருப்பினும், ஏதோ அர்த்தத்தோடு கூடியிருப்பதாகவே அவனுக்கு அம் மங்கிய வெளிச்சத்தில் தோன்றிற்று.

"எளிதில் நம்பக்கூடிய இயல்புள்ளவனாயிருப்பின், இதைப் பார்த்ததும், உலகமெங்கும் தான் தேடியலையும் செல்வம் கடைசியில் தன் வீட்டு வாயிலிலேயே புதைந்து கிடப்பதாக ஒருவன் எண்ணிக் கொள்ளலாம். அவ்வாறிருப்பின் அது ஒரு பெரும் விந்தையே" என்று ராமபத்திரன் தான் காண்பதை நம்பாதவனாகவே கூறிக்

கொண்டான். இதற்குள் வீட்டுக் கதவு திறக்கப்பட்டுச் சற்று வயது சென்ற ஒரு பெண்பிள்ளை வாயிற்படியில் நின்று அவனை யாரென்றறியும் பாவனையாய் உற்று நோக்கினாள். அவள் ராமபத்திரனின் தாய் என்று நாம் கூறவேண்டியதில்லை. பத்து ஆண்டுகள் கழித்து மகனை மீண்டும் கண்ணுற் கண்டால் பெற்ற ஒரு தாய்க்குண்டாகும் ஆனந்தம் இவ்வளவென்று நாம் கூற இயலுமோ?

மறுநாள் பொழுது விடிந்தது. நிச்சிந்தையான நித்திரை ராமபத்திரனுக்கேற்படவில்லை. இரவுமுழுவதும் பலவிதக் கனவுகள் அவனைப் பீடித்தன. தனக்கு விதிக்கப்பட்டிருக்கும் பெரிய வைபவங்களை எப்படியாவது பெற்று விடவேண்டு மென்ற பேரவா அவனுள்ளத்தில் மீண்டும் பலமாயெழுந்தது. தான் பிறந்த வீட்டில் அடி வைத்ததும் அவன் இருதயத்தில் வேரூன்றி வளர்ந்த இன்பக் கனவுகளெல்லாம் ஒன்று கூடி அவனை மீண்டும் நல்வரவேற்பது போலிருந்தன. தான் வழக்கமாகப் படுத்துத் தூங்குமிடத்தில் தலை வைத்துப் படுக்கவும் அவன் நித்திரையிலெழுந்த காட்சிகளை என்னென்று சொல்வோம்! கண்டோர் அதிசயிக்கத் தக்க வனப்பு வாய்ந்த ஒரு வனிதை அவனை அணுகித் தன் மார்பிலணிந்திருக்கும் அர்த்த சந்திர வடிவமான பதக்கத்தைத் தொட்டுக் காட்டினாள். மையிருளின் நடுவே ஜோதிர்மயமான கையொன்று தோன்றி மண்ணுள் மறைந்து கிடக்கும் அற்புத இரகசியத்தை அவனுக்குச் சுட்டிக் காட்டிக்கொண்டு நின்றது. பிறகு வயது முதிர்ந்த பெரியவரொருவர் தண்ட மேந்திய கரத்துடன் அவனைக்கிட்டி மானிடர்க்கரிதான பெரும்பதவி யொன்றை யளித்துச் சென்றார். இத்தோற்றங்கள் பகற்பொழுதிலும்கூட இடைவிடாது அவன் மனக்கண்முன் தோன்றி மறைந்து கொண்டிருந்தன.

அவன் திரும்பிவந்த செய்தி கேட்டு ஆவலாய்க் காணவந்த அக்கிராம வாசிகள் தாம் முன் பார்த்த சிறுவனுயிராமல் இப்பொழுது அவன், அலைச்சலினால் நிறம் குன்றிய மேனியும் உயர்ந்த உருவமுமுடைய ஒரு கம்பீர புருஷனாய் விளங்குவதைக் கண்டனர். இனிய மொழிகளுடன் அவன் அவர்களை உபசரித்துப் பேசினானெனினும், அவன் மனமும் கண்ணும் மானிடர் திருஷ்டிக்குப் புலப்படாத எதையோ ஒன்றை நாடி நிற்பதை அவன் பார்வை நன்கு விளக்கிற்று.

இதன் நடுவில் அவன் தாய் எப்படியாவது மகன் திரும்பி வந்து சேர்ந்தானே யென்று பரமானந்த மெய்தியவளாய் அவனுக்கு வேண்டிய சௌக்கியங்களைச் செய்வதிலும் கவனிப்பதிலும் ஊக்கமாயிருந்தாள். பகற் பொழுது நெருங்கிற்று. வாயிற்படியண்டை

சென்ற ராமபத்திரனின் தாய் கண்ணியமான தோற்றத்தையுடைய மூவர் வெயிலைப் பாராது வீதியில் நடந்து வருவதைக் கண்டாள். அம்மூவரும் அவர்கள் வீட்டை அணுகிப் படியேறவும் அவள் பெருமையுடன் மகனைக் கூப்பிட்டு, "இதோ பார்! கந்தசாமிக் கவுண்டர் வேறிருவருடன் உன்னைப் பார்ப்பதற்கென்று வந்திருக்கிறார். நீ பார்த்த ஊர்களையும் அங்குள்ள அதிசயங்களையும் அவர்களுக்குச் சொல்லு'' என்றாள்.

அம் மூவரில் பிரதானமாக விளங்கிய கந்தசாமிக் கவுண்டர் அக்கிராமத்தில் பெரிய மிராசுதாரர். கொஞ்சம் ஜம்பமுள்ளவரென்றாலும் நல்ல மனிதரென்றே அவரைச் சொல்ல வேண்டும். ஊரில் செல்வாக்குமிருந்தவர். சகல விஷயமும் தெரிந்தவரென்று அனைவராலும் ஒப்புக்கொள்ளப்பட்டுமிருந்தார். அவர் தலையில் பட்டுக்குட்டை தரித்தவராய் வெள்ளிப்பிடி போட்ட தடியொன்றைக் கையிற் பிடித்துச் சுழற்றிக்கொண்டே வந்தார். அவரைப் பின்பற்றி வந்த நடு வயதினர்களாயும் கௌரவ முடையவர்களாயும் தோன்றிய மற்றிருவரும் கவுண்டரின் செல்வத்திற்கும் அந்தஸ்திற்கும் செய்யவேண்டிய மரியாதையுடன் இரண்டடி பின் தங்கிய வண்ணமாகவே உள் நுழைந்தனர். அவர்களை நோக்கியவாறு கூடத்திலுட்கார்ந்திருந்த ராமபத்திரனது உள்ளம் அவனறியாமலே யோசனையில் ஆழ்ந்தது.

"நான் எதிர்பார்த்த பெரியவர்கள் மூவரும் இவர்கள்தாம் போலும்! இவர்களுள் முதல்வராய்க் கையில் தடியேந்தியுள்ளவர் மிக்க மேதாவி யென்று பெயரும் வாங்கியவர். எனக்கு விதிக்கப்பட்டிருக்கும் உன்னத பதவியை அளிப்பவர்களாக இவர்கள் ஏனிருக்கலாகாது?'' என்று அவன் சிறிது புன்னகையுடன் தனக்குள்ளேயே கூறிக் கொண்டான்.

இதற்குள் கவுண்டரும் அவரைச் சேர்ந்த இருவரும் படியேறி உள் நுழைய அவர்களை எதிர்கொள்ள ராமபத்திரனும் தானிருந்த இடத்தை விட்டெழுந்து இரண்டடி முன்சென்றான். கிராமவாசிகளின் சாமான்யத் தோற்றத்தையுடைய அவர்களை எதிர்கொண்டழைத்து அவன் உபசரித்து நின்றது அவன் உயர்ந்த கம்பீரமான உருவத்தை அதிகமாக எடுத்துக்காட்டியது போலிருந்தது. கந்தசாமிக் கவுண்டர் தம் தலைப் பட்டுக்குட்டையைக் கழற்றிக் கீழே வைத்துவிட்டுச் சாவதானமாய்த் தாம் வந்த காரியத்தைக் கூறத் தொடங்கினார்:

"நானும் இந்த என் நண்பர்களும் ஒரு முக்கிய காரியத்தை ஏற்றுக்கொண்டு இங்கு வந்திருக்கிறோம். ஒரு சிறந்த உத்தி

யோகத்தை அதற்குத் தகுதியாயுள்ளவர் ஒருவரிடம் ஒப்புவிப்பதற்காகச் சென்ற மூன்று நாட்களாகச் சிரமப்பட்டுக் கொண்டிருக்கிறோம். அது ஒரு அதிகாரஸ்தானமாகும். புத்தியோடு யோசித்தால் ஒரு முடி அணிந்த மன்னன், தேசத் தலைவன் இவர்களுடைய உன்னத பதவிக்குச் சற்றும் தாழ்ந்ததல்ல வென்றே கூறலாம். நீ இக்கிராமத்தில் பிறந்து வளர்ந்தவன் ; நன்றாய்ப் படித்தவன்; பல தேசங்களுக்குச் சென்று வந்துமிருக்கிறாய். இவை யாவையும் எண்ணும்பொழுது தெய்வமே உன்னை எங்கள் பொருட்டு இச்சமயத்தில் அனுப்பிவைத்ததென்று தோன்றுகிறது'' என்று இவ்வாறு பெரிதாய் அவர் பிரசங்கம் செய்துகொண்டிருக்கும் பொழுது, ராமபத்திரன் அவரையே வைத்தகண் வாங்காது உற்று நோக்கிக் கொண்டிருந்தான். பட்டு உருமாலையும் தலைக்குட்டையும் அணிந்து படாடோபத்தோடு கூடிய அற்ப மிராசுதாராயிராமல் அவர், கால் வரையும் தொங்கும் அங்கியணிந்த ஒரு யதிபோன்றவராக அவனுக்குத் தோன்றினர்.

"ஒரு முடி அணிந்த மன்னன், தேசத் தலைவன் இவர்களுக்குச் சமமாகக் கருதக்கூடிய இப்பெரும்பதவி யாதோ?'' என்று அவன் சற்றுப் பதைபதைப்புடன் கேட்டான்.

"நமது கிராமப் பள்ளியை நடத்தும் உபாத்தியாயர் பதவியேயன்றி வேறல்ல'' என்றார் கவுண்டர் ; "இருபத்தைந்து வருஷமாயிருந்த விநாயகம் பிள்ளை காலமானதால் இப்பொழுது காலியாயிருக்கிறது.''

"நான் யோசித்து என் சம்மதத்தை இன்னும் மூன்று நாட்களில் தெரிவிக்கின்றேன்'' என்று ராமபத்திரன் வேகமாய்க் கூறவும் அவர்கள் இரண்டொரு வார்த்தைக்குப் பிறகு அவனிடம் விடை பெற்றுக் கொண்டு சென்றனர். அவர்கள் போனபிறகும் ராமபத்திரனுக்கு அவர்கள் உருவங்கள் எதிரில் நிற்பதுபோலவே தோன்றிற்று. ஊன்றிப் பார்க்கும்பொழுது நீண்ட காலமாய்த் தன் இருதயத்தில் உருக்கொண்டு விளங்கும் மகானுடைய முகத்திற்கும் கந்தசாமிக் கவுண்டருடைய முகத்திற்கும் எள்ளளவும் பேதமிருப்பதாய் அவனுக்குப் புலப்படவில்லை. இருவரும் ஒரே மனிதராக விளங்கினர். அவன் யோசிக்க யோசிக்கத் தற்புகழ்ச்சி கொண்ட அச்சிறு மிராசுதாரரின் நடையுடை பாவனை ஒவ்வொன்றிலும் தன்னுள்ளத்தில் தான் போற்றிப் பாராட்டிவரும் சிறந்த உருவத்தின் சாயை வெளியாவது போலவே அவனுக்குத் தோன்றலாயிற்று. அவ்வாறான யோசனைகளில் மூழ்கியவனாய்த் தன் பிரயாணத்திலுள்ள அதிசயங்களைப்பற்றிக் கேட்கும் தன் தாயின்

கேள்விகளுக்குக் கவனமின்றியே பதிலுரைத்துக்கொண்டு அவன் பகல் முழுவதும் கழித்தான்.

மாலைப்பொழுது அணுகியதும் யோசனைகளை ஒருவாறு தள்ளிவிட்டு அவன் வெளிக்கிளம்பி வாயிலிலிருந்த மரத்தைத் தாண்டிச் செல்லும் பொழுது மீண்டும் அந்த அழிந்த எழுத்துக்களும் அவைகளைச் சுட்டிக்காட்டும் கைபோன்ற மரப்பட்டையும் அவன் கண்களில் தென்பட்டன.

மாலை நேரத்தின் மஞ்சள் வெயிலில் தன் நிழல் நீண்டு முன் செல்ல ராமபத்திரன் தெரு வழியே நடக்கலானான். அவ்வாறு அந்நிழல் தனக்குமுன் யாவற்றையும் கடந்து செல்வதுபோலத் தன் வாழ்விலும் முன்னறிவிப்பதாகச் சில சூசகங்கள் ஏற்பட்டிருந்தனவோவென்று அவனுக்கு இப்பொழுது தோன்றிற்று. தன் சாயை படிந்த ஒவ்வொரு வஸ்துவையும் அருகில் பார்க்கும்பொழுது தன திளம் வயது முதற்கொண்டு அறிமுகமான வஸ்துவாகவே அது இருப்பதை அவன் அறிந்தான். அவ்வீதியின் மூலை முடுக்குக்களில் ஒன்றையும் அவன் மறக்கவில்லை. யாவும் முன்பு கண்டதற்கு அணுவளவும் மாறுபாடின்றி விளங்கின. சாலையோரத்திலிருந்த புற்றரையில் சில பசுக்கள் மேய்ந்து கொண்டிருந்தன. அவைகள் கடிக்கும் புற்களின் மணம் அவனுக்கடிக்கவும், "பெர்ஷியா தேசத்து உயர்ந்த அத்தர்களைக் காட்டிலும் இவ்விளம் புற்களின் மணம் இன்னும் இனிமையாகவன்றோ இருக்கின்றது!" என்று கருதினான்.

அச்சமயம் வாயிற்படியினின்றும் தவழ்ந்த வண்ணமாய் நடக்கும் பாதையில் ஒரு சிறு குழந்தை சிரித்துக்கொண்டே ஓடிவர அவன்குனிந்து அதை எடுத்துப் படியில் நின்ற அதன் தாயினிடமளித்தான்.

"இச்சிறுவர்களன்றோ இனி என் வசமிருப்பவர்!" என்று அவன் ஒரு பெருமூச்சுடன் கூறிக் கொள்ளும்பொழுது அவன் உதடுகளில் ஒரு புன்னகை அரும்பிற்று. மழலைச் சொல் மக்களைப்பற்றி எண்ணும்பொழுது இயல்பாகவே அவனுள்ளம் அன்புடன் கசிவுற்றது. பிறகு அவ்விடத்தை விட்டு நகர்ந்து அவன் தெருவிலுள்ள வீடுகளிலொன்றைக் கிட்டியதும் அதைத் தாண்டி மேலே செல்ல மனம் வராமல் நின்றான். அச்சமயம் அச்சிறு வீட்டினிலிருந்து உருக்கமாய்ப் பாடும் ஓர் இனிய குரல் அவன் செவியில் விழ, தலை குனிந்த வண்ணம் அதைச் சற்றுக் கேட்டிருந்துவிட்டுப் பிறகு மெதுவாய்ப் படியேறி உட்சென்றான். அவன் காலடிச் சத்தம் கேட்டு முதலில் வேகமாய் எழுந்து வந்த ஒரு பெண்மணி அவனை நேரில் கண்டதும் திடுக்கிட்டுத் தயங்கி நின்றாள்.

அவன் கம்பீரமான உயர்ந்த உருவத்தின் முன், தன்னுள்ளத்திலெழுந்த பதைபதைப்பை வெளிக்காட்டாது அமைதியாய் நின்ற அவ்விளம் பெண்ணின் மெல்லிய கொடிபோன்ற உருவம் அழகாக விளங்கிற்று; அணையும் நெருப்பு, கொழுந்து விட்டெரிவது போல் வெவ்வேறான அழகு படைத்த அவ்விருவர் முகத்திலும் ஒரே விதமான உள்ளுணர்வு தோன்றிப் பிரகாசிக்கலாயிற்று.

“நீங்கள் க்ஷேமமாய்த் திரும்பிவந்து சேர்ந்தீர்களா?” என்று அவன் அத்தை மகளாகிய மரகதம் நல்வரவு கூற அதற்கு உடனே ராமபத்திரன் பதிலுரைக்கவில்லை. அவன் கண்கள் அவள் கழுத்திலணிந்திருந்த ஓர் ஆபரணத்தின் மீது சென்றன. தான் ஊரை விட்டுச் செல்வதற்கு முன் ஒரு நாள், தன் விளையாட்டுத் தோழியாயிருந்த அவளை மனைவி யென்று வேடிக்கையாய் ஒரு பொற்காசை வளைத்துக் கயிற்றில் கோத்து அவள் கழுத்தில் தான் கட்டியது அவனுக்கு ஞாபகம் வந்தது. தன் கனவிலும் நினைவிலும் இடைவிடாது தோன்றிய மங்கை அணிந்திருக்கும் பதக்கத்தின் வடிவாகவே அது இப்பொழுது அவன் கண்களுக்குப் புலப்பட்டது.

“மரகதம்! அப்பொற்காசை நீ இன்னும் அணிந்து கொண்டிருக்கிறாயா?” என்றான் ராமபத்திரன் வெகு நேரம் பொறுத்து. மரகதம் சிறிது வெட்கத்துடன் தலை குனிந்துகொண்டாள். பிறகு முகமலர்ச்சியுடன் வேடிக்கையாய்ப் பேசுபவளாய், “அவ்விடங்களிலிருந்து எனக்கேதாவது நூதன சாமான்கள் கொண்டு வரவில்லையா?” என்று கேட்டாள்.

“மரகதம்! துன்பமிகுதியால் நொந்த இவ்வுள்ளத்தைத் தவிர வேறொன்றும் உனக்காக நான் கொண்டுவரவில்லை. அதன் சோர்வை உன்பால் நான் தீர்த்துக்கொள்ள இயலுமோ?” என்னும் சொற்கள் ராமபத்திரனை மீறிக்கொண்டு அவன் வாயினின்றும் புறப்பட்டன.

“இவ்வளவு காலமாய் நான் அணிந்திருக்கும் இவ்வாபரணமொன்றே நீங்கள் அவ்வாறு செய்யலாமென்பதற்கு ஒரு தக்க அறிகுறியாகும்” என்று மரகதம் தன் கழுத்திலிருந்த பொற்காசின் மீது கைவைத்தபடி தலை குனிந்து கொண்டு சொன்னாள்.

“மரகதம்! மரகதம்! நான் கண்டுகொண்டிருந்த பயனற்ற பெருங்கனவின் உண்மையை நீயே எனக்கு விளக்கிக் காட்டினாய்” என்று கூறி ராமபத்திரன் அவளைத் தன் இரு கைகளாலும் சேர்த்துத் தழுவிக்கொண்டான்.

அவன் கண்டுகொண்டிருந்த கனவு நீங்கிக் கண்கள் தம் நித்திரை மயக்கத்தினின்றும் விழித்தெழுந்தன. தான் உலகமெங்கும் தேடிவந்த செல்வக் குவியலானது தன் வீட்டு நிலத்தைக் கொத்திப் பயிரிட்டு அதில் விளையும் பொருள்களைப் பெற்றுக் களிப்பதே யென்றும், தான் விரும்பிய பெரும்பதவி கிராமப் பள்ளிக் கூடத்தின் தலைமை உபாத்தியாயரின் ஸ்தானமே யன்றி வேறல்ல வென்றும், தான் மனத்திற் போற்றி வந்த பேரழகுவாய்ந்த மங்கை சிறு வயது முதல் தனக்கு உற்ற தோழியாயிருந்த தன் அத்தை மகள் மாகதமே யென்றும் ராமபத்திரன் இப்பொழுது அறிந்து கொண்டான்.

இவ்விதமே பெரிய ஆசைகளை மனத்திற் போற்றி வளர்ப்போர் சிறிது யோசிப்பாராயின், தம்முடைய சம்பத்தும் சௌக்யமும் யாவும் தம்மிருப்பிடத்திலேயே தமக்கு வாய்க்குமென்பதை அறிந்து எவ்வளவு நிம்மதியாய்க் காலம் கழிப்பவர்களாவார்கள்?

---

## மலரழகு

சூடாமணி

காலையிலே மல்லிகைப்பூ
முகம்பார்த்துச் சிரித்திடுவாள்;
காலையிலே ரோஜாப்பூ
கண்திறந்து பார்த்திடுவாள்;
மாலையிலே மந்தாரை
மனமகிழ மலர்ந்திடுவாள்;
மாலைகட்ட மனமில்லை,
மலரழகைப் பார்த்திருப்பேன்.

# குழந்தைக்கதைகளும் கதை சொல்லுவோரும்

அ. மாதவையர்

[காலஞ்சென்ற ஸ்ரீமான் அ. மாதவவையரவர்களை அறியாதார் தமிழ் நாட்டில் இரார் என்றே எண்ணுகிறேன். அவர் தமிழில் எழுதிய பத்மாவதி சரித்திரம் என்னும் நாவலும், பிற கதைகளும், நாடகங்களும், ஆங்கிலத்தில் எழுதிய தில்லைக் கோவிந்தனும், குசிகர் குட்டிக் கதைகளும், பிறவும், சிறப்பாகச் சிறிது காலம் அவர் நடத்திவந்த பஞ்சாமிர்தம் என்னும் தமிழ்ப் பத்திரிகையும் அவரது கீர்த்தியைத் தமிழ் உலகத்திலே நன்கு பரவச் செய்திருக்கின்றன. அவர் தமிழின் அபிவிருத்திக்காகப் பல வழிகளிலும் பாடுபட்டுத் தமிழ் மொழியை மிக்க உன்னதமான நிலையை அடையச் செய்யவேண்டுமென்று ஊக்கத்துடன் உழைத்து வந்தார்கள். பிற மொழிகளிலுள்ள அரிய பெரிய இலக்கிய விஷயங்களையும், பிற நாட்டினர் அறிந்து பாராட்டும் சாஸ்திர விஷயங்களையும் தமிழ் மக்கள் அனைவரும் அறிந்து கொள்ளுவது அவசிய மென்று அவர் கருதினர். அதன்பொருட்டுத் தம் நண்பர் சிலரோடு கூடிக் கலந்து முயன்று தமிழர் கல்விச் சங்கமென்ற ஒரு சங்கத்தை நிலை நிறுத்தினர்; அச் சங்கத்தின் வெளியீடாக, 'தமிழர் நேசன்' என்ற பத்திரிகையைத் தொடங்கிச் சிறிது காலம் நடத்தினர். அப்பொழுது அதில் 'பால விநோதக் கதைகள்' என்ற தலைப்பின் கீழ், குழந்தைகள் படித்து இன்புறக்கூடிய எளிய நடையில் அழகிய சிறிய கதைகளை வெளியிட்டு வந்தார். அக் கதைகளை வெளியிடு முன் இட்டாலியன் நோட் புத்தகம் என்று அக்காலத்தில் சொல்லப்பட்டுவந்த ஒருவகை நோட்டுப் புத்தகத்தில் மணி மணியான எழுத்துக்களில் ஒரு முகவுரையுடன் அக் கதைகள் எல்லாவற்றையும் எழுதி வைத்திருந்தார். முதலில் இருந்தது முகவுரை, பின்பு கதைகள். அடித்தல் கிறுக்கல் என்பது ஒன்று இரண்டு இருந்தால் அதிகம். அவர்கள் எழுதுவதெல்லாம் பெரும்பாலும் இப்படியே இருக்கும். எழுதுமுன் செய்யும் யோசனை அதிகம். இன்ன இன்ன சொல்ல வேண்டும், இப்படி இப்படிச் சொல்லவேண்டும் என்பதை எல்லாம் நன்றாய் ஆராய்ந்து மனத்தில் தீர்மானப்படுத்திக் கொள்வார். பிறகு எழுத உட்கார்ந்தால் வெகு வேகமாகவும் அடித்தல் திருத்தல் இல்லாமலும் அழகாக மணி மணியான எழுத்துக்களால் எழுதி முடிப்பார். அப்படி எழுதி வைத்திருந்த இட்டாலியன் நோட்டுப் புத்தகத்திலிருந்து அவ்வப்போது வெளிவர வேண்டிய கதையானது எழுதப்பட்டுள்ள பக்கங்களைக் கிழித்து அச்சாபீசுக்கு அனுப்பி வந்தார். அவர்கள் உத்தியோக முறையில் சென்னையைவிட்டு வெளியூருக்கு மாற்றப்பட்டுச் சென்றபோது தமிழர்நேசன் பத்திரிகையை நடத்திவர

வேண்டிய பொறுப்பு என்மேல் சுமத்தப்பட்டது. அதனோடு அவர் எழுதி வைத்திருந்த நோட்டுப் புத்தகமும் என்னிடம் ஒப்புவிக்கப்பட்டது. தமிழர் நேசன் பத்திரிகையில் அக் கதைகள் யாவும் முறையாக வெளிவந்தன. முகவுரை எழுதப்பட்டிருந்த இரண்டு பக்கங்கள் மட்டிலும் மிகுந்திருந்தன. பாக்கிப் பக்கங்களெல்லாம் கிழிக்கப்பட்டு அச்சாபீசுக்கு அனுப்பப்பட்டன. சில வருஷங்களுக்குப் பின்பு பால விநோதக் கதைகளை ஒரு புத்தகமாக வெளியிட்டபோது, அவர் எழுதிய முகவுரையைப் பற்றி அவருக்கு நினைவே இல்லை. புத்தகம் வெளிவந்த பின்புதான் எனக்குத் தெரிந்தது. அதைப் புத்தகத்தில் சேர்க்காததற்கு நாங்கள் வருந்தினோம். அம் முகவுரை மிகவும் நன்றாக இருப்பதாலும், அதில் சொல்லப்பட்ட விஷயம் மிகவும் தெளிவாகவும் அழகாகவும் திறமையுடனும் எளிய நடையில் சொல்லப்பட்டிருப்பதாலும், அதைப் படித்துப் பார்த்த என் நண்பர்களில் சிலர் அதை வெளியிடுவது அவசியம் என்று என்னைத் தூண்டியதாலும், அவர்கள் விருப்பத்திற்கு இணங்கி, தமிழர் நேசனே புத்துருக்கொண்டு, பெரிய வடிவம் பெற்று, அழகிய அணி அணிந்து விளங்குகின்றதோ என்று நான் எண்ணும் இக் கலைமகள் பத்திரிகையிலே அதை, 'குழந்தைக் கதைகளும் கதை சொல்லுவோரும்' என்ற தலைப்பின் கீழ் வெளியிடலானேன்.

பி. என். அப்புஸ்வாமி.]

அதிசய அற்புத விஷயங்களையும், மனிதரைப்போலவே பக்ஷி மிருகங்கள் பேசி ஒழுகுவதையும் கூறும் கதைகளைக் கேட்பதில் குழந்தைகளுக்கு அளவற்ற ஆசை உண்டு. கண்களில் நீர்ததும்ப, உதடுகள் துடிதுடிக்க, நெஞ்சம் பறையடிக்க, சந்தோஷமோ துக்கமோ மனத்தில் நிகழ்வதை முகம் கண்ணாடிபோல் காட்ட, தம்மை மறந்து, சுற்றுள்ள யாவையும் மறந்து, இவ்விதக் கதைகளை அவர்கள் கேட்டு அநுபவிக்கும் காட்சியே நமக்கு ஆச்சரியத்தை விளைக்கும். நினைவு ஒன்று, சொல் ஒன்று, செயல் ஒன்று ஆக வாழும் நமக்கே இவ்வுலகம் ஒரு நாடகசாலைபோலும்; மாசு மறு அற்ற மனத்தினராகிய குழந்தைகட்குக் காண்பன கேட்பன யாவும் கேவலம் உண்மையே. இளம்பிராயத்தில் கேட்கும் கதைகளிலே, இயற்கை விரோதமான சம்பவங்களின் பொய்ம்மை எளிதில் விரைவில் வெளியாகி, மனப்புலத்தினின்றும் களைந்தெறியப்படும்; அவற்றில் ஆழ்ந்து கிடக்கும் நியாய அநியாய அம்சங்கள் மட்டும் உட்பதிந்து வேரூன்றி, காலக்கிரமத்தில் பயிராகிப் பலன் கொடுக்கும். அவரை விதைத்தால் துவரை முளையாது என்பதும் திண்ணம். ஆயின் மெய்யில்லாத அற்புத நிகழ்ச்சிகளை அளவளாவிக் கதை கூறுதல் ஏனெனின், அவற்றின் பொய்ம்மை மலை இலக்காதலின் தீங்கு விளைக்காது என்பதும், அத்தகைய கற்பனைகளால் சிறுவர்களின் மனோபாவ சக்தி செழித்தோங்கி வளரும் என்பதுவமே.

சிறுவர் சிறுமிகளின் மனப்போக்கு இவ்வாறாக, அவருக்குக் கதை கூறுவார் எத்துணை விழிப்பினராயும் யுக்தாயுக்த விவேகிகளாயும் இருத்தல் வேண்டும் என்பது சொல்லாமலே விளங்கும். நமக்குள் கற்றுத் தேர்ந்து பட்டம் பெற்றோராயும், அத்துவிதம் பேசுபவராயும், பேய் பிசாசுகளில் நம்பிக்கையிலராயும் உள்ளாரில் சிலருமே, இருட்டில் தனியே செல்ல அஞ்சுவது, தம் பிஞ்சு வயதிலே, பூச்சாண்டிகளையும் பூதங்களையும் சடாமுனி மோகினிகளையும் பற்றித் தம் தாய்மார் பாட்டிமார் அத்தைமார் வாயிலாக அவர்கள் கேட்டுள்ள பயங்கரமான கதைகளின் பலன் என்பதை, யாரேனும் மறுக்க ஒண்ணுமோ?

இப்புத்தகத்தில் கூறப்படும் கதைகளில் ஒன்றேனும் புதிதன்று. அத்தனையும் கர்ண பரம்பரையாக நமக்குள் தொன்று தொட்டு இன்று காறும் வழங்குவனவே. அவசியமாகத் தோன்றியவாறு, அவற்றை, சில இடங்களில் சுருக்கியதும் மாற்றியதும் மட்டுமே என் செயல். சின்னஞ் சிறுவரில் சிலரேனும் இதைப் படித்து மகிழின், அதுவே எனக்குப் போதுமான கைம்மாறாகும்.




## தஞ்சாவூர்

ஸ்ரீ.

தஞ்சாவூரைப்பற்றி நான் முதலில் கேள்விப்பட்டது ஒரு வசனத்தில். அந்த வசனம், "தஞ்சாவூர்த் தச்சப்பயல் கொச்சிக் கம்பைச் சீவிச்செதுக்கிச் சித்திரமெழுதித் திரும்பிப் பார்த்துச் செத்துப்போனுன்'' என்பது. இதன் விசேஷம் தச்சனைப் பற்றியது மில்லை; அவன் எழுதிய சித்திரத்தைப் பற்றியதுமில்லை. இது சட்டென்று குழந்தைகள் வாயில் நுழையாது. இதைத் தெரியாதவர்களிடம் சொல்லிக்காட்டி, அவர்களை வேகமாய்ச் சொல்லச் சொன்னுல், அவர்களுக்கு நாக்குத் தடுமாறும்; "தீவிச் செதுக்கிச் சிரும்பிப் பார்த்து'' என்று உளறுவார்கள்.

தஞ்சாவூருக்கு நான் சிறுவயதில் ஒரு தடவை போயிருக்கிறேன். அப்பொழுது அங்கே மிகப் பெரிய அழகிய ரோஜாப் பூக்களைக் கூடைக்காரிகள் தெருவில் கொண்டுவந்து ஏராளமாய் விற்ருர்கள். அது ஒன்றைத் தவிர நான் கண்ட மற்றவை எல்லாம் மறந்து போய்விட்டன. சில மாதங்களுக்கு முன் மறுபடியும் தஞ்சாவூருக்குப் போயிருந்தேன். அங்குள்ள விசேஷங்களைச் சுருக்கி எழுதுகிறேன். பட்டணத்திலிருந்து இராத்திரி புறப்பட்டால் விடியத் தஞ்சாவூர் போய்ச் சேரலாம். வழியில் பார்க்கத்தக்க ஸ்டேஷன்கள், செங்கல்பட்டு, விழுப்புரம், சிதம்பரம். தஞ்சாவூர் ஜங்ஷன் பெரியது. ஆனுல் ஸ்டேஷனில் வாடகை மோட்டார் கிடையாது; ஜட்காவும் இரட்டை மாட்டு வண்டியும்கூட இல்லை. தஞ்சாவூரில் போக்கு வரவெல்லாம் அநேகமாய் ஒற்றை மாட்டு வண்டிகளில்தான். பஸ்களும், பணக்காரருடைய சொந்த மோட்டார்களும் சில உண்டு. ஆனுல் இவைகளால் தெருக்களில் அபாயமில்லை. குழந்தைகள் தாராளமாய்த் தெரு நடுவில் விளையாடலாம். மாட்டு வண்டியிலேறி வண்டிக்காரன் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு தாங்களே வண்டி ஓட்டலாம்.

தஞ்சாவூர்க் கோவில் வெகு பேர் போனது. ஊரை நெருங்கினவுடனேயே அதன் உன்னத சிகரம் மலைவிளக்குப் போலத்

தென்படும். கோவிலும், அதன் எதிரில் உள்ள இரண்டு கோபுர வாசல்களும் உள்ளும் புறமும் பேர்போன சிற்ப வேலைகள் நிறைந்தன. அந்தக் கோவிலின் அழகையும் புகழையும் இங்கே சுருக்கிச் சொல்ல முடியாது. சுவாமி சந்நிதியில், நிஜமாட்டைவிட ஐந்தாறு மடங்கு பெரிதான நந்தி விக்கிரகம் இருக்கிறது. பெரிய கோவிலின் பின், 108 லிங்கங்கள் ஒரே இடத்தில் அமைக்கப்பட்ட பிராகாரம் ஒன்றிருக்கிறது. கோவிலுக்குள் புகுந்துவிட்டால், பார்க்கப் பார்க்க அதிசயமான சிற்பங்கள் எத்தனையோ இருக்கின்றன. கோவிலின் உள்புறம் விஸ்தாரமானது; பிள்ளையார், சுப்பிரமணியக் கடவுள், தக்ஷிணாமூர்த்தி, இன்னும் பல தெய்வங்களுக்குரிய சிறு கோவில்கள் அதற்குள் இருக்கின்றன. சுவாமி பெயர் பிருகதீசுவரர்; அம்மன் பெயர் பிருகந்நாயகி. கோவில் யானை சில வருஷங்களுக்கு முன் செத்துப்போய் விட்டதாம். கொழுத்த கோவில் மாடுகளையும், இரண்டு மயில்களையும் மாத்திரம் இப்பொழுது அங்கே காணலாம்.

தஞ்சாவூர் அரண்மனை மகாராஷ்டிர வம்சத்து ராஜாக்கள் தஞ்சாவூரை ஆண்ட காலத்தில் வெகு பிரபலமாய் விளங்கிற்று. இப்பொழுது அங்கே பார்க்கத்தக்கது புஸ்தகசாலை ஒன்றைத் தவிர வேறொன்றுமில்லை. அந்தப் புஸ்தகசாலை ஸரபோஜி மகாராஜா காலத்தில் அதிகப் புகழ்பெற்றிருந்தது. அது கையெழுத்துப் புஸ்தகசாலை. அச்சேறி 'பைண்டு' செய்த புஸ்தகங்கள் மிகக் கொஞ்சம். ஆனால் லக்ஷக் கணக்கான ஏட்டுச் சுவடிகள் அங்கே சேர்த்து வைக்கப்பட்டிருக்கின்றன. தமிழிலும், ஸம்ஸ்கிருதத்திலும், புராணங்களும், கதைகளும், பாடல்களும், வைத்திய சாஸ்திர சம்பந்தமான புஸ்தகங்களும் ஏட்டுச் சுவடிகளில் எழுத்தாணியால் எழுதப் பட்டு அலமாரிகளில் வைக்கப்பட்டிருக்கின்றன. முன்னாளில் செய்த சில காகிதப் புஸ்தகங்களும் இருக்கின்றன. அவைகளில் சில படங்களோடு கூடியவை; அவைதாம் நாமெல்லாரும் வெகு சாரமாய்ப் பார்க்கத்தக்கவை. அசுவ சாஸ்திரம், கஜ சாஸ்திரம் என்ற புஸ்தகங்களில் வர்ணம் தீட்டி எழுதிய குதிரைப் படங்களும் யானைப் படங்களும் எத்தனையோ இருக்கின்றன. அவை வைத்திருக்கும் அலமாரியில் இன்னும் சில பழையகாலப் படப்புஸ்தகங்களும் இருக்கின்றன. ஒன்றில் ஸரபோஜி ராஜா காலத்தில், பல ஜனங்களும் போட்டுக்கொண்டிருந்த உடைகளைப்பற்றிய படங்கள் உள்ளன; வேறொன்றில் ராமாயணப் படங்கள் சில இருக்கின்றன.

தஞ்சாவூருக்குப் புதியவர்களாகப் போகிறவர்கள் ஊருக்கு நாலைந்து மைலுக்கப்பாலுள்ள காவேரிக் கரைக்கு ஒரு நாள் போய்

வருவார்களாம்; ஆப்ரகாம் பண்டிதர் தோட்டம் என்ற பூச்செடிகளும் பழ மரங்களும் நிறைந்த ஒரு சிறு தோட்டத்தைப் போய்ப் பார்ப்பார்களாம். நாளைக்கென்று சுவரில் எழுதி வைத்தாற்போலச் சும்மாவிருந்துவிட்டு, நான் அவ்விடங்களுக்குப் போகவில்லை.

தஞ்சாவூரைப்பற்றி இன்னும் என்ன இருக்கிறது? ரோஜாப் பூக்களைத் தவிர, குடைமிளகாயும் முந்திரிப் பருப்பும் அந்த ஊரில் பெரியனவாயும் நன்றாயுமிருக்கின்றன; ஏராளமாய் விலையாகின்றன. இன்னும் ஒரு முக்கியமான விஷயத்தை இதுவரை மறந்து விட்டேன். தஞ்சாவூரில் தக்கா தக்காப் பொம்மை உண்டு. இது மண்ணால்செய்த செட்டியார் பொம்மை; அடி உருண்டிருப்பதால், படுக்க வைத்தால் பொம்மை எழுந்து நின்று தலையாட்டும். பெரியவர்களும் குழந்தைகளும் வாங்கி விளையாடத்தக்கது. ஊர்க் கடையில் விலை ஒன்றேகால் அணு; ஸ்டேஷனில் வாங்கினால் ஒன்றரை அணு. ஊரில் இறங்காமல், அந்த மார்க்கமாய் ரயிலில் வேறெங்குப் பிரயாணம் செய்தாற்கூட, கோவிலைத் தூரதரிசனம் செய்து, ஸ்டேஷனில் தலையாட்டும் பொம்மை ஒன்றேனும் வாங்கி விளையாடி, தஞ்சாவூரை நினைவு வைத்துக்கொள்ளுங்கள்.

# குழந்தைக் கதை



## காக்காய் காக்காய் எங்கே போனாய்?*

காக்காய் காக்காய் எங்கே போனாய் ?
கடலோரத்தில் இரைமேயப் போனேன்.

கடலோரத்தில் இரை என்ன எடுத்தாய் ?
கடலோரத்தில் கம்பம்புல் இரை எடுத்தேன்.

கம்பம்புல்லை என்ன செய்தாய் ?



கம்பம்புல்லைப் பசுமாட்டுக்குப் போட்டேன்.

---

* இவ்வகையான குழந்தைப் பாட்டுக்கள் நமது நாட்டில் எங்கும் வழங்கி வந்திருக்கின்றன. ஜில்லாக்கள்தோறும் இவை சிற்சில வேறுபாடுகளோடு உள்ளனவாகத் தெரியவருகிறது. இவைகளில் ஒன்றை நாம் இங்கே தந்திருக்கிறோம். இதர பாடபேதங்களையும் நமக்கு அனுப்பும்படி நேயர்களை வேண்டுகிறோம்.

அப்புஸ்வாமி.

பசுமாடு என்ன தந்தது ?
பசுமாடு சாணி தந்தது.

சாணியை என்ன செய்தாய் ?
சாணியை எருமுட்டை தட்டினேன்.

எருமுட்டையை என்ன செய்தாய் ?



எருமுட்டையைக் குசவனிடம் கொடுத்தேன்.
குசவன் என்ன தந்தான் ?



குசவன் குடம் தந்தான்.

குடத்தை என்ன செய்தாய்?

குடத்தைக் கிணற்றிலே போட்டேன்.

கிணறு என்ன தந்தது?



கிணறு தண்ணீர் தந்தது.

தண்ணீரை என்ன செய்தாய்?



தண்ணீரைப் பூஞ்செடிக்கும் மாஞ்செடிக்கும் வார்த்தேன்.

பூஞ்செடி என்ன தந்தது?

பூஞ்செடி பூ தந்தது.

மாஞ்செடி என்ன தந்தது?

மாஞ்செடி மாம்பழம் தந்தது.

மாம்பழத்தை என்ன செய்தாய்?



மாம்பழத்தைக் கொத்திக் கொத்தித் தின்றேன்.

பூவை என்ன செய்தாய்?



பூவைப் பாப்பாவுக்குச் சூட்டினேன்.

பாப்பா என்ன தந்தாள்?

பாப்பா சிரிப்புத் தந்தாள்.

[சூடாமணி.]

# குழந்தைப் பாட்டுக்கள்





[மழை பெய்யும்பொழுது சிறுவர்கள் சேர்ந்து பாடுதல்]

மழையே! மழையே! பெய்! பெய்!
மண்ணுங் கட்டி இடி! இடி!
சுக்கும் சர்க்கரையும்
தட்டித் தாரேன்.

கொட்டைப் பாக்கு
நறுக்கித் தாரேன்.

கோயில் மண்ணைத்
தெள்ளித் தாரேன்.

பாலும் சோறும்
பதக்கு நெல்லும்
கொட்டித்தாரேன்.

மண்ணாங்கட்டி இடிஇடித்து
ஆலாங்கட்டி விழவிழ
மழையே! மழையே! பெய்! பெய்!

---

[சிறு குழந்தையின் இரு கையிலும் குத்தி விளையாடும்பொழுது பாடுவது]

அம்மா அம்மா கொழுக்கட்டை
ஆத்தா ஆத்தா கொழுக்கட்டை
பிள்ளையார் கொழுக்கட்டை
பிடித்துக்கொள் கொழுக்கட்டை.

---

[நிற்க முயலுகிற குழந்தையை நிறுத்தி அதன் இரு கைகளையும் மெதுவாய்ப் பிடித்துக் கீழே விழாதபடி கையை விட்டு விட்டுப் பிடித்துக்கொண்டே பாடுவது]

கொட்டு மத்தளம்.
கொவ்வைக்காய் சிற்றாடை
பட்டு உடுத்துவளாம் குழந்தை.
பாடகக் காலியாம் குழந்தை.
சிற்று உடுத்துவளாம் குழந்தை.
சிறுசதங்கை அசைப்பளாம் குழந்தை.
கொட்டுவந்து குணுகுணு என்கிறது
கோபுரவாசலிலே.
கொட்டப்பெட்டியும் சேலையும் தாடியம்மா
கூத்துப் பார்த்தவளே.

[சூடாமணி.]

# குழந்தை விளையாட்டு



## தட்டாமாலை சுற்றல்



தட்டா மாலை தாமரைப்பூ.
சுற்றச் சுற்றச் சுண்ணாம்பு.
சுற்றிச் சுற்றி வருகிறது.
சுழன்று சுழன்று வருகிறது.
கிட்டிக் கிட்டி வருகிறது.
எட்டி எட்டிப் போகிறது.
சுற்றச் சுற்ற வட்டமிது.
முற்ற முற்ற முழுமயக்கம்.

மயங்கி மயங்கித் தலைசுற்றி
மடங்கிச் சுருண்டு குனிந்திருக்க
மண்ணும் விண்ணும் ஒன்றாக
மாய வட்டம் போடுதுபார்.

சுற்றிச் சுற்றி வரும்பூமி.
சுற்றி வரும் பூமியிலே
சுழன்று சுழன்று வருகிறேன்.

சுழன்று வரும் என்னுடனே
சூரிய சந்திரர் எல்லாரும்
சுற்றிச் சுழன்றே என்னுடனே
வட்ட வளையம் போடுகிறார்.
வட்ட வளையம் போடுகிறார்.

[சூடாமணி.]




# சோப்பு

**வி. விசாலாக்ஷி அம்மாள்**

நவீன வாழ்க்கையில் சோப்பை அநேகமாக எல்லாரும் உபயோகிக்கிறார்கள். சுத்தமாக இருக்க வேண்டியது என்னமோ அவசியம்தான். 'கூழானாலும் குளித்துக் குடி, கந்தையானாலும் கசக்கிக் கட்டு'. என்றும், 'தெய்வத் தன்மைக்கு அடுத்தது சுத்தமே' என்றும் சுத்தத்தைச் சிலாகித்து நம்மவருள்ளும் மேல் நாடுகளிலும் பல முதுமொழிகள் இருக்கின்றன. ஆனால் அழுக்குப் போகத் தேய்த்துக் குளித்துச் சுத்தமாக இருப்பதற்கும், முகம் பார்வைக்கு வெள்ளையாக இருக்க வேண்டும் என்று சோப்பைப் போட்டு முகத்தைத் தேய்த்துத் தேய்த்துக் கழுவுவதற்கும் எத்தனையோ வித்தியாசங்கள் உண்டு. அடிக்கடி சோப்பைப் போட்டு முகம் கழுவுவதால் முகத்தின் தோல் சீக்கிரத்திலேயே சுருக்கங்கள் விழுந்து, கிழத்தன்மையை அடைந்து விடுகிறது. முகத்தில், இயற்கையில் ஒருவித எண்ணெக் கசிவு உண்டு. இது தோலைப் பதனிடுகிறது என்று கூறலாம். இந்த எண்ணெயைச் சோப்புப் போட்டு முற்றிலும் கழுவி எடுத்துவிடுவதால் முகத்தின் தோல், வலிவு குன்றிச் சுருங்கி விடுகிறது. முகத்தில் எப்பொழுதும் எண்ணெ வடிந்து கொண்டு இருந்தாலும் நல்லதில்லை. முகத்தைக் கழுவிச் சுத்தமாக வைக்க வேண்டியது முக்கியம். ஆனால் ஒரு நாளைக்கு இரண்டு அல்லது மூன்று தடவைகளுக்குமேல் சோப்பை உபயோகிக்கக் கூடாது. இதுவே கூடாது, ஒரு தடவைக்கு மேல் உபயோகிப்பதே கெடுதல் என்றும் கூறுகிறார்கள்.

நாம் தேய்த்துக் குளிப்பதற்கு என்று வாங்கும் சோப்பு 'கிளிஸரின்', கொழுப்பு இவைகள் அதிகம் உள்ளதாக இருக்கவேண்டும். சோப்புப் போட்டு முகத்தை அலம்பும்பொழுது குளிர்ந்த

நீரிலேயே கழுவ வேண்டும். சூடான வெந்நீரில் முகத்தை அலம்பக் கூடாது. முகத்தைக் கழுவினதும் சற்றுக் கடினமான துவாலையால் நன்ருகத் துடைக்க வேண்டும். இவ்விதம் சற்றுச் சுகாதார விதிகளைக் கவனித்தால், சிறு வயதிலேயே கிழவிபோல் முகத்தில் சுருக்கங்கள் விழாமல் இருக்கும்.

முகம் சுருக்கம் விழுந்து கிழத்தன்மையைக் காட்டாமல் இருப்பதன்பொருட்டு மேல் நாட்டு ஸ்திரீகள் எத்தனையோ பாடுபடுகிருர்கள். அறுபதுவயதுக் கிழவி முப்பது வயதான மங்கை போல் தோன்ற வேண்டும் என்று அவர்களைப்போல் பிரயத்தனப்படாவிட்டாலும், முப்பது வயதாவதற்குள் முகம் சுருக்கம் விழுந்து கிழத்தன்மையை அடையாமல் இருக்கும்படிச் சற்றுச் சிரமம் எடுத்துக் கொள்ளுவதினுல் அனுகூலம் ஏற்படும். இரவில் படுக்கச் செல்லுவதற்கு முன் 'கிரீம்' முதலிய மெழுகுகளை முகத்தில் தடவிக் கொள்ளும் வழக்கமும் இப்பொழுது நம்மவருள் பரவிக் கொண்டு வருகிறது. 'கிரீம்' தடவுவதால் முகத்தின் தோல் வலிவுறுகிறது என்னமோ வாஸ்தவம் தான். ஆனுல் உபயோகிக்கப்படும் 'கிரீம்' இவ்விதம் செய்யக் கூடியதா என்பதை அறிந்து வாங்க வேண்டும். மேலும், முகம் வெளுப்பாக இருக்க வேண்டும் என்று முகத்தில் 'பவுடரை' ஒத்திக் கொள்ளும் ஸ்திரீகள், இரவில் 'பவுடர்' முற்றிலும் போகும்படி முகத்தை நன்ருகச் சுத்தம் செய்ய வேண்டும். இல்லாவிட்டால் 'பவுடர்' முகத்தில் உள்ள சிறிய துவாரங்களை அடைத்து விடுவதால், பருக்கள் முதலியவை வெடிப்பதற்கு ஏதுவாகும்.

'புலியைப் பார்த்து நரி சூடு போட்டுக் கொண்டதாம்' என்று நம்மவருள் ஒரு கதை சொல்லுவதுண்டு. மேல் நாட்டு ஸ்திரீகள் முகம் இளமையாக இருப்பதன்பொருட்டு எத்தனையோ மெழுகுகள், கிரீம்கள், திராவகங்கள் முதலியவற்றை உபயோகிக்கிருர்கள். நவநாகரிகத்தின் பலனுக நம்மவர்களும் இவைகளை வாங்கி உபயோகிக்கிருர்கள். ஆனுல் இவைகளைச் சரிவரவும் நாசூக்காகவும் உபயோகிக்கத் தெரியாவிட்டால் இயற்கையாக உள்ள வனப்பையும் கெடுத்துவிடுகின்றன. கோவில் சுவரில் சுண்ணும்புப் பட்டை அடித்திருப்பது போல் சிலர், பட்ட இடமும் படாத இடமுமாகப் பவுடரைப் பூசிக் கொண்டு விடுகிருர்கள். பிறகு இதைச் சரிவரச் சுத்தம் செய்வதுமில்லை. சோப்பு, பவுடர், இவைகளை அதிகமாக உபயோகிக்காமல், தோலுக்கு வன்மையை அளிக்கக் கூடிய 'கிரீம்' முதலியவைகளை இரவில் நிதமும் உபயோகித்தால் முகம் இயற்கைக் காந்தியும் அழகும் குன்ருமல் சோபிக்கும்.

'கிரீம்' முதலியவைகளைத் தவிர, வீட்டிலேயே தயாரித்து முகத்தில் தடவக் கூடிய பல 'துஸ்து'—இதை ஆங்கிலத்தில் "டாய்லெட்" என்று கூறுகிறார்கள்—பதார்த்தங்கள் இருக்கின்றன. சிறிது அளவு பாலை ஒரு நாள் எல்லாம் ஒரு சீசாவில் விட்டு மூடி வைத்திருந்தால் அது மறுநாள் முறிந்துவிடும். இவ்விதம் முறிந்த பாற்கட்டியைத் தினம் இரவில் முகத்தில் தடவிக் கொண்டு வருவதால் தோல் வழவழப்பாகச் சோபிப்பதுடன் முகமும் வெளுக்குமாம். வாதுமைப் பருப்பைத் தோலை நீக்கி அரைத்துச் சிறிது பாலேடுடன் கலந்து, தினமும் பூசிக்கொள்ளலாம். இதனால் பரு முதலியவைகளினால் ஏற்பட்ட தழும்புகள் மறையும். எலுமிச்சம் பழத் தோலை தினமும் முகத்தில் நன்றாகத் தேய்ப்பதினால் பருக்கள் வெடிக்காமல் இருப்பதுடன் முகமும் வெளுக்கும். சிலருக்குச் சிறிய கறுப்பான வடுக்கள் முகத்தில் புறப்படுவதுண்டு. இது ஒரு குண்டூசியின் தலைப் பிரமாணத்தில் ஆரம்பித்துச் சற்றுப் பருக்கும். முகம் எங்கும் பார்வைக்கு அவலக்ஷணமாகப் புறப்படும். இது எளிதில் போகாது. 'ரிஸார்வின்' பசை என்ற ஒன்று மேல் நாட்டு ஔஷதசாலைகளில் விற்கும். இது முகத்திற்கு உபயோகிப்பதற்கு என்று கேட்டால், அதற்குச் சரியானபடி கலந்து கொடுப்பார்கள். இதை இரவில் சிறிதளவு இலேசாக முகத்தில் தடவ வேண்டும். இவ்விதம் நாலைந்து நாட்களுக்குத் தடவினால் முகத்தின் தோல் உரியத் தொடங்கும். உடனே பசை தடவுவதை நிறுத்திவிட்டுக் 'காலமீன் லோஷனை'த் தினமும் உபயோகிக்க வேண்டும். தோல் உரிவது நின்றதும் மறுபடியும் பசையை உபயோகிக்க வேண்டும். தோல் உரிய ஆரம்பித்ததும் 'லோஷனை' உபயோகிக்க வேண்டும். இவ்விதம் மூன்று நான்கு தடவைகள் செய்வதால் இந்தக் கறுப்புப் புள்ளிகள் மறையும். ஆனால் இந்தப் பசையை வெகு ஜாக்கிரதையாகவே உபயோகிக்க வேண்டும். இல்லாவிட்டால் தோல் பட்டையாகக் கழன்று விடும். மேலும் தோல் உரிய ஆரம்பித்தால் வெளியில் போக முடியாது. சிலர் இதற்கு 'எக்ஸ்-ரே' வைத்தியம் செய்து கொள்ளுகிறார்கள். இந்தக் கரும் புள்ளிகள் வர ஆரம்பித்து விட்டால் போக்குவது வெகு சிரமம். முகத்தில் அதிகமாகப் பவுடர் முதலியவைகளை உபயோகிக்காமல் சுத்தமாக வைப்பதே இவைகள் வராமல் இருப்பதற்குத் தகுந்த வழி. மேல் நாடுகளில் தயாரிக்கப்படும் 'துஸ்து' சாமான்களில் அதிகப் பணத்தைச் செலவு செய்யாமல், சோப்பையும் அதிகம் உபயோகிக்காமல், வாதுமைப் பருப்புக் குழம்பு, அல்லது பாலாடை இவைகளைத் தினம் முகத்தில் தடவுவதால் முகம் இளமையாகவும், தோல் வனப்புடனும் தோன்றும்.

# வெட்டும் தையலும்

வி. விசாலாக்ஷி அம்மாள்

'எனக்குச் சரியாக வெட்டத் தெரியாது, தைப்பேன்' என்று சிலர் சொல்லுகிறார்கள். ஆனால் சரியாக வெட்டத் தெரிவதைப் போல் சரியாகத் தைக்கவும் தெரியவேண்டும். இல்லாவிட்டால் எவ்வளவு நேர்த்தியாக வெட்டப்பட்ட வளைவும் கெட்டுவிடும். அதுவும், தோளில் தையல் இல்லாத 'மாட்கியார்' வெட்டுச் சட்டைகளைச் சரியானபடி தைக்காவிட்டால், அவை நன்றாகவே இரா. இரண்டு ஓரங்களையும் சேர்த்து வளைவை ஒட்டி முதலில் ஓட்டிவிடுவதே நலம். அதிலும் பட்டு, மெஷினில் அடிக்கும்பொழுது நகர்ந்து வழுக்கிக் கோணிவிடும். ஆனதனால் ஓட்டும்பொழுது தூரத்தூர ஓட்டாமல், சோம்பல்படாமல் நெருக்கமாகவே ஓட்டவேண்டும். 'காணி சோம்பல் கோடி வருத்தம்' என்பது முதுமொழி. முதலில் அவசரப்பட்டால் பிறகு முழுத் தையலையும் பிரிக்கும்படி நேரிடும். வெட்டு, சற்றுச் சரியாக இல்லாவிட்டால் கூடத் தையலைச் செவ்வனே வளைத்துத் தைத்துச் சட்டையைச் சரிப்படுத்திவிடலாம். சட்டை நேராவதற்கு வெட்டத் தெரிவது எவ்வளவு அவசியமோ, அதேபோல் தைக்கத் தெரிவதும் முக்கியம். பட்டு உயர்ந்த துணி. இவைகளைத் தைக்கும்பொழுது 'பிரஞ்-பெல்லிங்' தையல் தைக்கவேண்டும். சாதாரணமாக எல்லாச் சட்டைகளையுமே இவ்விதம் தைக்கலாம். இதற்கு முதலில் தையலைச் சரியான பக்கத்தில் தைக்கவேண்டும். பிறகு ஓரத்தில் உள்ள பிசாளம், நூல் முதலியவற்றை ஒரு கூரான கத்தரியால் கத்தரித்துவிட்டு உள்புறம் திருப்பித் தைக்கவேண்டும். இது இரட்டைத் தையலைப்போலிருப்பதில், அவ்வளவு தடிப்பாக இராது முதல் தையலை ஓரமாகவும் கெட்டியாகவும் போடவேண்டும். இல்லாவிட்டால், ஒன்று வெளிப்புறம் பிசாளம் தெரியும்; அல்லது தையல் பிரிந்துவிடும். இரண்டாம்தரம் மடித்துத் தைக்கும்பொழுது அதிகம் மடித்துவிட்டால் தையல் தடித்து அழகாக இராது. 'லேஸ்' வேலை, 'எம்பிராய்டரி' வேலை இல்லையே, சாதாரணத் தையல்தானே என்று நினைத்துவிடக்கூடாது. தையல் வேலையும் சரியாகவும் நாசூக்காகவும் செய்தால்தான் தைத்த சாமான் பார்வைக்கு நன்றாக இருக்கும்.

# மகிழ்வுரை

கே. ஜி. சேஷையர்

பொன்னி வளந்தரு புனனு டதனுள்
உன்னும் உத்தம தான புரத்தினன் ;
மக்கட் குரிய மாண்குண மனைத்தும்
மிக்கநல் வேதியன் ; விரிதமிழ்க் கலையில்
தக்க தேர்ச்சியில் தன்னிக ரிலனென
மிக்க சீர்த்தி மேவுறு மேன்மையன் ;
கனிதமிழ்க் கல்வி கற்போர்க் களித்து
நனிவளர் புகழாம் நறுந்தொடை சூடினோன் ;
மன்னு தீந்தமிழ் வளர்ப்பா ரின்றித்
தன்னெழில் குன்றித் தளர்வுறு காலை,
இலக்கிய இலக்கணச் சுவடிகள் தேடியித்
தலத்துறு தடைகட்குத் தான்சலி யாது,
மடுத்தவா யெல்லாம் வலமுறு பகடென
இடுக்கண் எவையும் இடர்பட வென்று,
நுணுகியா ராய்ந்து நூல்களச் சியற்றிப்
புணரிசூழ் புவிக்குப் புரிந்த உதவியன் ;
பேணுதா க்ஷிணாத்ய கலாநிதிப் பெற்றி,
மாணுறு மகாமகோ பாத்யாயப் பட்டமாம்
இருபெரு வரிசைமுன் எய்திடப் பெற்றோன் ;
பொருவறு மின்சொற் பொழிவு நிகழ்த்துவோன்,
இயற்கை யறிவின் இடையறு உழப்பின்
செயற்கரிய செய்து சிறந்து விளங்குவோன் ;
தம்பணி யறியுந் தமிழபி மானிகள்
நன்பொற் கிழிமுன் நல்கிடப் பெற்றோன் ;
கல்வித் துறையிற் கைதேர்ந் தவர்க்கு
நல்கு வரிசையின் முன்னதாம் நலத்ததென்
றியம்புறு கௌரவ இலக்கிய டாக்டராம்
நயம்பெறு மகுடம் நாலா றாண்டுமுன்
எய்துதற் குரியன் இந்நாட்பெற் றானெனும்
செய்தி செவிபுகத் தென்மொழி நாடெலாம்
பெருமகிழ் வெய்தப் பிறங்கும் பெருமையன் ;
திரு வே. சாமிநா தையனுஞ் சீரியன்,
இன்னும் இம்மா நிலமிசை இசையொடு
தன்னவா நிறைவுறத் தழைத்துவா ழியவே !

# சுதேசமித்திரன்—பொன் திருவிழா

எஸ். வையாபுரிப் பிள்ளை

சுதேசமித்திரன் தோன்றி ஐம்பது வருஷங்கள் அடுத்த மாசத்தோடு பூர்த்தியாகின்றன. தமிழ்ப் பத்திரிகையுலகில் இது மிகவும் கொண்டாடத் தக்கதொரு நிகழ்ச்சியாம். எத்தனையோ பத்திரிகைகள் புற்றீசல் போலத் தோன்றி மறைவதை நாம் கண்கூடாகப் பார்க்கிறோம். அவைகள் போலாது, தனக்கே இயல்பாக அமைந்த வலிமையினாலே, இடையூறுகளையெல்லாம் பொருட்படுத்தாது, இது மேன்மேலும் செழித்தோங்கி வளர்ந்து வந்திருக்கிறது. இயல்பாக அமைந்த வலிமை யென்று இங்கே கூறியது பத்திரிகைக்குரிய பொருள் நிலையைக் குறித்தன்று. இதுவும் இன்றியமையாததேயாயினும், இதைக் காட்டினும் சிறப்புடையதாகவும் எப்பொழுதும் நிலைபெற்று நிற்பதாகவும் உள்ள அழியாச் செல்வம் ஒன்றிருக்கிறது. நேர்மையான கொள்கைகளையும் உயர்ந்த லட்சியங்களையும் மேற்கொண்டு அவற்றை ஒரு பொழுதும் நெகிழவிடாத திண்மைதான் இச்செல்வம். இச்செல்வத்தைப் பெறக்கூடிய நல்விதி இப்பத்திரிகையின் ஆரம்ப காலந்தொட்டே இதற்கு வாய்த்திருந்தது. காலஞ்சென்ற ஸ்ரீமான். ஜி. சுப்பிரமணிய ஐயரவர்களை அறியாதார் யார்? அவர்கள் போன்றவர்களால் மிக்க அன்போடும் கவலையோடும் பாதுகாக்கப்பெற்று வளர்ந்த இப்பத்திரிகைக்கு மேற்குறித்த திண்மைச் செல்வம் குறைவின்றி நிரம்பியுள்ளதென்பது எடுத்துச் சொல்லவும் வேண்டுமோ?

இவ்வாறு இயல்பாக அமைந்த வலிமையினாலே, இப்பத்திரிகை தமிழ் மக்களது உள்ளத்தில் எளிதிலே புகுந்து இடங்கொண்டு விட்டது. அவர்களுடைய நன்மையையும் தேசத்தினது நன்மையையும் தலைநோக்கமாகக் கொண்டு எப்பொழுதும் உழைத்து வந்தமையாலே, அவர்களது ஆதரவு மேன்மேலும் பெருகி வளர்வதாயிற்று. பத்திரிகையின் செல்வாக்கும் விரிந்து பரவுவதாயிற்று. அரசியல் விஷயங்களிலும், பிற பொதுவிஷயங்களிலும், நம்மவர்க்கு அறிவும் ஆசையும் உண்டாகச் செய்த பெருமை இப்பத்திரிகைக்கு உரியதாயிற்று. ஆகவே இப்பொழுது தமிழ் நாட்டினரது அன்பிலே வேரூன்றி நின்று இப்பத்திரிகை தழைத்தோங்கி நிற்கின்றது.

தமிழ் மக்களது அன்பிற்குப் பிறிதொரு வகையாலும் இப்பத்திரிகை உரியதாயுள்ளது. தென்னிந்திய மொழிகளிலே தோன்றிய பத்திரிகைகளுள் இது தான் முதன்முதலாகப் பிறந்தது. அன்றியும் நமது தாய் மொழியாகிய தமிழ் புதியதோர் உயிர்த்தத்துவம் பெற்று, புதிய நலங்கள் பல அடைந்து, பற்பல காரணச்செறிவால் மிக்க வேகத்துடன் நம் மனத்திற் பொங்கிக் கொண்டிருக்கும் புதிய உணர்ச்சிகளுக்கும் புதிய கருத்துக்களுக்கும் புதிய அறிவு விஷயங்களுக்கும் ஏற்ற—வன்மை மிக்க—கருவியாய் அமையவேண்டும் என்ற நோக்கத்தைக் கொண்டு அதற்குரிய முயற்சியை முதன்முதலிற் கையாளத் தொடங்கிய பத்திரிகையும் இதுவேயாம். இவ்விஷயத்தில் தமிழ்த் தேசிய கவியாகிய ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியார், குருமலை சுந்தரம் பிள்ளை முதலானவர்கள் தாமே உழைக்க முன்வந்து இதன் பத்திராசிரியர் கழகத்திற் கூட்டுறவு கொண்டு சில காலம் விளங்கினார்கள் என்றால் தமிழ் மக்கள் எத்துணையளவாக இப்பத்திரிகையைப் போற்றுங் கடப்பாடுடையவர்கள் என்பதை எளிதில் உணரலாம்.

இங்ஙனம் பலவகையாலுஞ் சிறந்த சுதேசமித்திரனது ஐம்பதாவது ஆண்டு நிறைவு விழாவானது சமீபத்தில் நிகழும் என்பதை யறிந்து மிகவும் மகிழ்ச்சி யடைகின்றோம். எல்லாம் வல்ல இறைவன் இப்பத்திரிகை நீடூழி காலம் வாழ்ந்து, மேன்மேலுஞ் சிறப்புற்று விளங்குமாறு அருள் புரிக.




இடங்களைக் கண்டு பிடித்தவர்கள்:—கேப்டன் அமண்ட்சன்: இவர் 1911-ம் வருஷம் டிசம்பர் மாதம் 14-ம் தேதி தென்துருவத்தை முதல் முதல் அடைந்தார். இவர் நார்வே தேசத்தில் பிறந்தவர்.

ஜான் காபட்டும், ஜெபேஸ்டியன் காபட்டும்:—இவர்கள் வெனிஸ் நகரத்தில் பிறந்தவர்கள்; நியூபவுண்டலாந்தை 1497-ல் கண்டு பிடித்தவர்கள்.

கேப்டன் குக்:—இவர் ஆஸ்திரேலியாவையும் நியூஜீலண்டையும் கண்டு பிடித்தவர். 1728 முதல் 1779 வரை வாழ்ந்தவர்.

ராபர்ட்பியரி:—இவர் பென்சில்வேனியாவில் பிறந்தவர். 1909-ம் வருஷம் எப்ரல்மீ 6உ முதன் முதலாக வட துருவத்தை அடைந்தார்.

புது விஷயங்களைக் கண்டு பிடித்தோர்கள்:—ரிச்சார்ட் ஆர்க்ரைட்: (1732—1792) ஒரு வகை நூற்கும் இயந்திரத்தைக் கண்டு பிடித்தவர்.

ரோஜர் பேகன்:—(1214—1294) இவர் வெடி மருந்தைக் கண்டு பிடித்தவராகக் கருதப்படுகிறார். ஆனால் சீன தேசத்தில் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே வெடிமருந்து வழங்கி வந்ததாகத் தெரிய வருகிறது.

அலெக்ஸாண்டர் பேல்:—(1847) உபயோகப்படக் கூடிய டெலிபோனைக் கண்டு பிடித்தவர். ஸ்காட்லண்டில் பிறந்தவர்.

ஸர் ஹென்றி பெஸ்ஸமர்:—(1813—98) இவர் இரும்பை எஃகாக மாற்றும் ஓர் உபயோகமான முறையைக் கண்டு பிடித்தார்.

எட்மண்ட் கார்ட்ரைட்:—(1743—1823) இவர் ஒருவகைக் கைத்தறி இயந்திரத்தைக் கண்டு பிடித்தவர்.

வில்லியம் காக்ஸ்டன்:—(1422—1492) இவர் இங்கிலாந்தில் அச்சுவித்தையைப் புகுத்தியவர்.

சர் ஹம்ப்ரி டேவி :—(1778—1829) இவர் சுரங்கங்களில் உபயோகப்படுத்த அபாயமற்ற ஒரு விளக்கைக் கண்டு பிடித்தார்.

தாமஸ் ஆல்வா எடிசன்:—இவர் 1847-ல் பிறந்தவர். சமீபத்தில் இறந்தார். கிராமபோன் முதலிய 400 உபயோகப்படும் கருவிகளைக் கண்டு பிடித்தார்.

ஜேம்ஸ் ஹார் கிரீவ்ஸ்:—ஒருவகைக் கைத்தறியைக் கண்டு பிடித்தவர்.

குக்லிமோ மார்கோனி:—இவர் 1874-ல் பிறந்தவர் ; கம்பியில்லாத் தந்தியைக் கண்டு பிடித்தவர்.

வில்லியம் மர்டாக்:—(1754—1839) 1794-ல் நிலக்கரி ஆவியில் இருந்து விளக்கேற்றும் முறையைக் கண்டு பிடித்தார்.

ஆல்பிரட் நோபிள்:—(1833—96) இவர் சுவீடன் தேசத்தில் எஞ்சினியராக இருந்தார் ; பாறைகளைப் பிளக்கும் சக்தி வாய்ந்த ஒரு வெடியைக் கண்டு பிடித்தவர்.

ஸர் ஜேம்ஸ் ஸிம்ஸன்:—(1862—70) வலியின்றி இரண சிகித்ஸை செய்ய, 'குளோரோபாரம்' என்னும் மயக்க மருந்தை உபயோகிக்கலாமென்று முதலில் அறிந்து கொண்டவர்.

ஸ்ரீ. சே.




கந்தகானமுதம்—முதல் பாகம் : [ஸ்ரீமான், என். கோடீச்வரையர் B. A., இயற்றியது, 5, வடகூர் செல்வவிநாயகர் கோயில் தெரு, மயிலாப்பூர் ; விலை ரூ. 2-0-0.]

தமிழ்ப் பாஷையில் இதுகாறும் ஏற்பட்டுள்ள இசைத் தமிழ் நூல்கள் பெரும்பான்மையும் சொற்பெருக்கமுடையவைகளேயாம். தெலுங்கில் ஸ்ரீ தியாகராஜர் இயற்றியுள்ள, சுருங்கிய சொற்களில் விரிந்த ராகச்சாயைகளால் ஆழ்ந்த கருத்துணர்த்தும் கிருதிகளைப்போலத் தமிழிலில்லாத குறைவை நீக்கக் கருதி ஸ்ரீமான் கோடீச்வரையர் அவர்கள் ஜனக ராகங்களாகிய 72 மேளகர்த்தாக்களில் சுத்த மத்யம ராகங்கள் 36-இலும் க்ருதிகளியற்றி அவற்றில் தம் இஷ்ட தெய்வமாகிய முருகக்கடவுளது பெயரும், ராகத்தின் பெயரும் கவிகுஞ்சரதாஸனென்னும் தம்முடைய முத்திரையும் அமைத்துள்ளார். இந்நூலைப்பற்றி முத்தமிழ் வல்லாராகிய மகாமகோபாத்தியாய பிரம்மஸ்ரீ உ. வே. சாமிநாதையரும், சங்கீதத்தில் பிரபல வித்வான்களாகிய ஸ்ரீமான் வி. ஆர். ஸ்ரீநிவாசையங்கார், ஸ்ரீமான், டி. எஸ். சபேசையர், ஸ்ரீமான் முத்தையா பாகவதர், ஸ்ரீமான் டைகர் வரதாச்சாரியார், ஸ்ரீமான் பாபநாசம் சிவம், ஸ்ரீமான் வெங்கடசாமி நாயுடு முதலியோரும் சிறப்புரைகள் அளித்திருக்கின்றனர். அவர்களனைவரும் இக்கிருதிகளின் அருமை பெருமைகளை மிகவும் பாராட்டுகின்றனர். சங்கீதத்தில் சிறிது ஞானமுள்ளவர்களும் தாமே கிருதிகளைப் பாடுதற் குதவியாக ஸாகித்யத்திற்குரிய ஸ்வரங்களும் சிட்டாஸ்வரங்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

தமிழபிமானிகளும் சங்கீதாபிமானிகளும் இந்நூலை ஆதரிப்பார்களென நம்புகிறோம்.

கந்தாநுபூதி—கூடார்த்த தீபிகை உரை : [ஸ்ரீ சிவத்தியானனந்த மஹர்ஷி இயற்றிய உரை; பக்கம், 232 ; முருகவேள் புத்தகசாலை, இராயப் பேட்டை, சென்னை; விலை 1 ரூபா.]

அருணகிரிநாதர் இயற்றியருளிய கந்தாநுபூதிக்கு எழுதப்பட்ட விருத்தியுரை இது; மறைபொருள் விளக்கமெனவும் கூறப்படும். உரையாசிரியர் பல நூல்களை ஆராய்ந்த நுண்ணறிவினாலும் அநுபவத்தினாலும் கண்ட பல உண்மைகளை இந்நூலுரையில் அமைத்துக் காட்டுகின்றார். அருணகிரிநாதர் அவ்வப்பொழுது பாடிய தனிப்பாடல்களின் தொகுதியே இந்நூலென்றும் ஒவ்வொரு செய்யுளும் ஒவ்வொரு விழைவின் நிறைவை அளிக்கும் மறையென்றும் இவ்வாசிரியர் குறிக்கின்றார். அருணகிரிநாதர் எல்லாக் கலைகளையும் நன்குணர்ந்த பெரியாரென்பதும், அவருக்கு வடமொழி தென்மொழிப் பயிற்சி உண்டென்பதும், அவர் தந்திர மார்க்கானுஸாரியாய் அத்வைத உண்

மைகளைச் சிறு வயதிலேயே அநுபூதி வாயிலாகப் பெற்றவரென்பதும் பிறவும் இவ்வாசிரியாது கொள்கைகள். அவற்றைத் தம் உரையில் ஆங்காங்கே நிறுவுகின்றனர்.

கந்தாநுபூதிச் செய்யுள் ஒவ்வொன்றற்கும் உள்ள தலைப்பின் கருத்தோடு செய்யுட் கருத்தைப் பொருத்தி நவீன ஆராய்ச்சி முறையில் விளங்க நிறுவியுள்ளார். இம் முறை அறிந்து இன்புறற்கு உரிய தொன்றாம். இடையிடையே வடமொழி நூற்கருத்துக்களையும் தமிழ் நூற்பகுதிகளையும் பிற நாட்டினர் கொள்கைகளையும் எடுத்துக் காட்டிப் பொருள்களை விளக்கியிருத்தல் ஆசிரியரின் விரிந்த அறிவைக் காட்டுகின்றன. இதனை ஓர் உரை நூலென்னாது ஆராய்ச்சி நூலெனல் பிழையாகாது. சமய ஆராய்ச்சியாளரும் தமிழார்வமுடையாரும் இந்நூலைப் படித்து இன்புறுவார்களென்று நம்புகிறோம்.

ஹிந்துமத வினுவிடை: [ஸ்ரீ சிவத்தியானனந்த மஹர்ஷி இயற்றியது; கிடைக்குமிடம்: வேதப்ராவசன மந்திரம், 27, முத்து முதலி வீதி, இராயப் பேட்டை, சென்னை; விலை 3 அணா.]

இந்து மதத்தின் அடிப்படையான கொள்கைகளைச் சிறுவர் சிறுமியர்களும் அறிந்துகொள்ளவேண்டும் என்னும் நன்னோக்கத்துடன் எழுதப்பட்ட இந்நூல், எளிய நடையில், ஸநாதன தர்மமே இந்துமத மென்பதையும், இந்து மதத்தினர்க்குரிய கர்மங்களையும், பிறவற்றையும் விளக்குகின்றது. பிராணயாமம், காயத்திரி, உண்பதும் ஓர் யக்ஞமென்பது, உண்ணும் முறை, அவஸ்தைகளின் இயல்பு, பூஜை செய்யும் முறை முதலிய பல அரிய பொருள்களைப் பற்றிய செய்திகள் சுருக்கமாக இதிற் காணப்படுகின்றன.

சைவசமய முதனூல்கள்: [ஸ்ரீமான் நாராயண ஐயர், B.A., B.L., L.T., அவர்கள் எழுதியது; யாழ்ப்பாணம் சைவ பரிபாலன சபைப் பிரசுரம்; விலை 15 சதம்.]

'ஆரியர்களுக்கும் தமிழர்களுக்கும் இனம், மொழி, நாகரிகம், சமயம் என்பவைகளில் வேற்றுமை இல்லையென்பதும், சைவசமய முதனூல்கள் வடமொழியிலேயே இருக்கின்றன வென்பதும் தென்மொழிப் பயிற்சியோடு வடமொழிப் பயிற்சியும் இருந்தால் சைவத்தின் உண்மைகளை மிகச் சிறப்பாய் அறியக் கூடுமென்பதும்' பிறவுமாகிய விஷயங்கள் இதில் அடங்கி உள்ளன. தமிழர் ஆரியர் என்னும் வேற்றுமை காரணமாக எழுந்த பல வகைப் பிணக்குகளை ஒழிக்கவேண்டுமென்னும் நோக்கத்தோடு இதனை ஆசிரியர் எழுதியுள்ளார். நமது மொழிகளிலுள்ள நூற் பொருள்களை மேனாட்டார் எங்ஙனம் மாறுபாடாகக் கொண்டு அக் கொள்கைகளின்மேற் பல கருத்துக்களை நிறுவுகின்றன ரென்பதையும், வேதங்களின் காலவரையறையைப் பற்றி மேனாட்டார் கொண்டுள்ள கொள்கைகள் ஒன்றற்கொன்று எங்ஙனம் மாறுபாடுள்ளனவாக இருக்கின்றனவென்பதையும் பல மேற்கோள்களோடு விளக்கியிருக்கின்றார். தனித் தமிழன்பர்கள், உலகத்தில் தமிழ்மொழி யொன்றே போற்றத் தக்கதென்றும், வடமொழியை எதிரி மொழியெனக் கருதி, அதற்குந் தமிழுக்கும் ஏதாவது தொடர்பு இருக்கிறதென்று ஒப்புக்கொண்டுவிட்டால் தமிழ்மொழியின் பெருமை குன்றி விடுமென்றும் நினைப்பது தவறென்றும், திராவிடவர்க்கமென்று சொல்லப்படும் மொழிகளுள் தமிழைத் தவிர மற்ற மொழிகளைப் பேசுகின்ற மக்கள் அங்ஙனம் செய்வதில்லையென்றும் எடுத்துக் காட்டுகிறார்.



# மருத பாண்டியர்

## டாக்டர் உ. வே. சாமிநாதையர்

சிவகங்கை ஸமஸ்தானத்திற்குத் தலைவராக ஏறக்குறைய 150 வருடங்களுக்கு முன்பு மருத சேர்வைகாரர் என்பவர் இருந்தார். அவருடைய பெருமையையும் நல்லியல்பையும் அறிந்த குடிகளும் வித்துவான்களும் அவரை மருத பாண்டியர் என்று வழங்கிவந்தனர்; மகாராஜாவென்றும் தமக்குட் பேசிக்கொள்வார்கள். அவர் பல வித்துவான்களை ஆதரித்துப் பலவகைப் பரிசுகள் வழங்கினர். தமிழறிவுடையவராதலால், வந்த வித்துவான்களோடு ஸல்லாபம் செய்து சாதுர்யமாக அவர்களுக்கு ஏற்பப் பேசுதலும் அவர்கள் கூறுவனவற்றைக் கேட்டு மகிழ்ந்து உடனுடன் பரிசளிப்பதும் அவருக்கு இயல்பு. அவர்மீது வித்துவான்கள் பாடிய பிரபந்தங்களும், சமயத்திற்கேற்பப் பாடப்பெற்ற பல தனிப்பாடல்களும் அங்கங்கே வழங்கிவருகின்றன. சிறந்த வீரர். அவர் ஆட்சியின் எல்லையில் திருட்டுப்பயம் முதலியன கிடையா. அவருடைய ஆணைக்கு அஞ்சி யாவரும் நடந்து வந்தனர்.

அவர் தெய்வபக்தி உடையவர். தம் ஆட்சிக்குட்பட்ட ஆலயங்களில் நித்திய நைமித்திகங்கள் விதிப்படி காலத்தில் நடந்துவரும் வண்ணம் வேண்டியவற்றைச் செய்துவந்தார். பல தலங்களில் அவர் திருப்பணிகள் செய்துள்ளார். ஆலயங்களுக்குத் தேவதானமாக நிலங்களை அளித்திருக்கின்றார். முருகக்கடவுள் கோயில்கொண்டெழுந்தருளியுள்ள முக்கிய ஸ்தலமாகிய குன்றக்குடியில் திருவீதிக்குத் தென்பாலுள்ள ஒரு தீர்த்தத்தைச் செப்பஞ்செய்து படித்துறைகள் கட்டுவித்தனர். அக்குளம் மருதாபுரி என்று அவர் பெயராலேயே வழங்கும். அதனைச்சூழ அவர் வைத்த தென்ன

மரங்களிற் சில இன்றும் உள்ளன. குன்றக்குடிமலைமேற் சில மண்டபங்களைக் கட்டி யிருக்கின்றனர். அவை கட்டப்பட்ட பொழுது மிக உயர்ந்த சாரங்கள் அமைக்கப்பட்டன. அவற்றில், மேலே உள்ளது மருதபாண்டியரால் அமைக்கப்பட்ட சாரம். கீழ்ச் சாரம் வெங்களப்ப நாயக்கர் என்னும் ஒரு ஜமீன்தாரால் அதற்கு முன் கட்டப்பட்டது. அவற்றைக் குறித்து, "மேலைச்சாரம் எங்களப்பன், கீழைச்சாரம் வெங்களப்பன்" என்னும் பழமொழி ஒன்று அந்தப் பக்கத்தில் வழங்கிவருகிறது.

அக்காலத்தில் ஜனங்கள் மருதபாண்டியரை 'எங்களப்பன்' எனச்சொல்லிவந்தனரென்பதனாலேயே அவருடைய உத்தமகுணங் களும் அவர்பால் இருந்த அன்பும் புலப்படும். காளையார் கோவிலி லுள்ள மிகப்பெரிதான யானைமடு என்னும் தீர்த்தத்தைச் செப்பஞ் செய்து நாற்புறமும் படித்துறை கட்டுவித்தார். அந்த ஸ்தலத்தில் கோபுரமும் கட்டுவித்தார். அப்பொழுது மிக்க தூரத்திலிருந்து செங்கற்கள் வரவேண்டி யிருந்தன. அதற்காக வழி முழுவதும் சில அடிகளுக்கு ஒவ்வொரு மனிதராக நிற்கவைத்து ஒருவர் கை மாற்றி ஒருவர் கையிற் கொடுக்கும்வண்ணம் செய்து செங்கற்களை வரவழைத்தனர். அவ்வாறு மாற்றுபவர்களுக்கு அவல் கடலை முதலிய உணவுகளையும் தண்ணீரையும் அடிக்கடி கொடுத்து அவர்களுக்குக் களைப்புத் தோன்றாமல் செய்வித்தார்.

* * * *

காளையார் கோவிலுக்குத் தேர் ஒன்று மிகப் பெரியதாக அமைக்கவேண்டுமென்று அவர் கருதித் தக்க சிற்பிகளை வருவித்து வேண்டியவற்றை யெல்லாம் சேகரித்து முடித்தார். அத்தேரின் அச்சுக்கு ஏற்றதாக ஒரு பெரிய மரம் கிடைக்கவில்லை. பல இடங் களுக்குச் செய்தி அனுப்பி விசாரித்து வந்தார். அப்பொழுது அவருடைய ஆட்சிக்குட்பட்ட திருப்பூவணத்தில் வையை ஆற்றிற் குத் தென்கரையில் ஆலயத்துக்கு எதிரில் மிகப் பழையதும் பெரியதுமாக மருதமரம் ஒன்று இருப்பதாக அறிந்தார். அதனை அச்சுக்கு உபயோகப்படுத்தலாமென்றெண்ணி, உடனே அதனை வெட்டி அனுப்பும்படி அங்கே உள்ள அதிகாரிகளுக்கு உத்தரவு அனுப்பினர்.

அதனைப் பெற்ற அதிகாரிகள், அவ்வாறே செய்ய நினைந்து வேண்டிய வேலையாட்களை ஆயுதங்களுடன் வருவித்து மரத்தை வெட்டத் தொடங்கினர்கள். அப்பொழுது, அதனைக் கேள்வியுற்று அத்தலத்தில் திருப்பூவணநாதருக்குப் பூசை செய்து வருபவர்களுள்

ஒருவராகிய புஷ்பவனக் குருக்களென்னும் பெரியோர், "அந்த மரத்தை வெட்டக் கூடாது" என்று ஓடிவந்து தடுத்தார். "ராஜாக்கினைக்கு மேலேயோ உம்முடைய ஆக்கினை?" என்று சொல்லிவிட்டு அதிகாரிகள் அதனை வெட்டும்படி வேலைக்காரர்களை ஏவினார்கள். அதைக் கண்ட குருக்கள் ஆத்திரம் மிக்கவராகி, "மகாராஜா மேல் ஆணை! நீங்கள் இந்த மரத்தை வெட்டக் கூடாது" என்று மீட்டும் தடுத்தார். அவ்வாறு ஆணையிட்டு மறித்ததனால் அவர்கள் அஞ்சி வெட்டுதலை நிறுத்திவிட்டு உடனே அச் செய்தியை மருத பாண்டியருக்குத் தெரிவித்தார்கள்.

அதனை அறிந்த மருத பாண்டியர், "ஸ்ரீ காளீசுவரருடைய திருத்தேருக்காக நாம் வெட்டச் சொல்லி யிருக்கும்பொழுது அதைத் தடுக்கலாமோ? அவ்வளவு தைரியத்தோடு தடுத்ததற்கு என்ன காரணம் இருக்கக் கூடும்? நாமே நேரிற் போய் இதை விசாரித்து வர வேண்டும்" என்றெண்ணித் தமது பரிவாரங்களுடன் சென்று திருக்கோயில் வாயிலில் உள்ள ஒரு மண்டபத்தில் தங்கினார். கோவில் அதிகாரிகள் மரியாதைகளோடு வந்து அவரைக் கண்டனர். பாண்டியர் விபூதி குங்குமப் பிரஸாதங்களைப்பெற்று அணிந்து கொண்டார்.

அப்பால், "கோயிற் காரியங்கள் குறைவின்றி நடந்து வருகின்றனவா?" என்று விசாரித்தார். பின்பு, அவர்களை நோக்கி, "இங்கே உள்ள குருக்களில் ஒருவர், வையைக் கரையிலுள்ள மரத்தை வெட்டக் கூடாதென்று தடுத்ததாகக் கேள்விப்பட்டோம். நம்முடைய கட்டளையைத் தடுத்த அவர் யார்? இப்பொழுது அவர் எங்கே உள்ளார்?" என்று கேட்டார். அவர்கள், "இதோ, இப்பொழுதுதான் மகாராஜா அவர்களுக்குப் பிரஸாதங்கள் கொடுத்துவிட்டு அவ்விடத்துக்கு அஞ்சி மதுரைக்குப் போய்விட்டார். இவ்வளவு நேரத்திற்குள் வெகு தூரம் போயிருப்பார்" என்று நடுநடுங்கிச் சொன்னார்கள்.

புஷ்பவனக் குருக்கள், தாம் செய்த செயலால் தமக்கு என்ன துன்பம் வருமோ வென்றஞ்சி, மருத பாண்டியருடைய அதிகாரத்துக்குட்படாத இடத்திற்குப் போகவேண்டுமென்று கருதி, முன்னரே ஸித்தம் செய்து வைத்திருந்த வண்டியில் ஏறி மதுரை போய்ச் சேர்ந்து விட்டார்.

மருத பாண்டியர், உடனே மதுரைக்குச் சென்ற குருக்களுக்கு ஓரபய நிருபம் எழுதுவித்து அதைக் காட்டி அவரை அழைத்து வரும்படி ஒருவரை அனுப்பினார். அபயநிருபம் என்பது, பழைய

காலத்தில் குற்றவாளிகளுக்கேனும், அஞ்சி ஓடி ஒளித்த பகைவர்களுக்கேனும், "நீங்கள் அஞ்ச வேண்டாம்; இங்கே வந்தால் உங்களுக்கு ஒரு துன்பமும் நேராது" என்று அரசர்களால் அவர்களுக்குள்ள பயத்தைப் போக்குவதற்காக எழுதப்படுவது.

அந்நிருபத்தைப் பெற்ற புஷ்பவனக் குருக்கள் திருப்பூவணம் வந்து மருதபாண்டியர் முன்னே நடுக்கத்தோடு நின்றார். பாண்டியர் கோபத்தை வெளிக் காட்டாமல் அடக்கிக் கொண்டு அவரை இருக்கச் சொல்லி, "நீர்தாம் அந்த மரத்தை வெட்டக் கூடாது என்று சொன்னவரோ?" என்று கேட்டார்.

**குருக்கள்:**—ஆமாம், மகாராஜா!

**பாண்டியர்:**—காளையார் கோயில் தேருக்கு உபயோகித்தற்காக நாம் அதை வெட்டச் சொல்லியிருக்கும்போது நீர் தடுக்கலாமா?

**குருக்கள்:**—அதற்குத் தக்க காரணங்கள் இருந்தமையால்தான் அப்படிச் செய்தேன்.

உடனிருந்த அதிகாரிகளும் ஊராரும் பிறரும் மருத பாண்டியர் குருக்களை என்ன செய்து விடுவாரோ வென்றும் குருக்கள் தாம் செய்த குற்றத்திற்கு என்ன சமாதானம் சொல்லப் போகிறாரோ வென்றும் அஞ்சி அவ்விருவர்களுக்கும் இடையே நடந்த சம்பாஷணையை ஆவலோடு கவனித்து வந்தார்கள்.

**பாண்டியர்:**—என்ன காரணங்கள் இருக்கின்றன? அஞ்சாமற் சொல்லும்.

**குருக்கள்:**—இந்த ஸ்தலம் மிகவும் சிறந்தது; பழமையானது; மதுரைச் சுந்தரேசுவரர் பொன்னனையாளுக்காக இரசவாதம் செய்த இடம். இறந்து போன ஒருவனுடைய எலும்பு இத்தலத்தில் வையையாற்றிற் போட்ட பொழுது புஷ்பமாக ஆயிற்று. அதனால் இது புஷ்பவன காசி என்று பெயர் பெறும். இந்த ஸ்தலத்தை மிதிக்க அஞ்சி நாயன்மார் மூவரும் வையைக்கு வடகரையிலேயே இருந்து தரிசனம் செய்துகொண்டு சென்றார்கள். அதற்கு அறிகுறியாக வடகரையில் அம்மூவர்களுக்கும் ஆலயம் உண்டு. இவைபோன்ற பெருமைகளால் ஒரு யாத்திரை ஸ்தலமாகவே இவ்வூர் இருந்து வருகிறது. அயலூரிலிருந்து எவ்வளவோ ஜனங்கள் நாள்தோறும் வந்து வந்து வையையில் ஸ்நானம் செய்து ஸ்வாமி தரிசனம் செய்து விட்டுச் செல்லுகிறார்கள். வையையில் எப்பொழுதும் நிறைய ஜலம் ஓடுவதில்லை. கோடைக் காலத்தில்

வடகரை ஓரமாகத்தான் கொஞ்சம் ஜலம் ஓடும். அப்பொழுது அங்கே சென்று ஸ்நானம் செய்து வருபவர்கள் மணலில் நடந்து துன்பமுற்று வெயிலின் கொடுமையை ஆற்றிக் கொள்வதற்கு இந்த மருத மரத்தின் கீழிருந்து இளைப்பாறிவிட்டுச் செல்வது வழக்கம். இந்த மரம் எவ்வளவோ நூற்றுண்டுகளாக இருந்து வருகிறது. நூற்றுக்கணக்கான ஜனங்கள் நிழலுக்காக இதன் கீழ் இருக்கலாம்.

மருத பாண்டியர், இங்ஙனம் குருக்கள் கூறும் காரணங்களைக் கேட்டுக் கொண்டே வந்தார்; அவை பொதுஜனங்களின் நன்மையைக் கருதியவை என்பதை அறிய அறிய அவருடைய கோபம் சிறிது சிறிதாகத் தணிந்து கொண்டே வந்தது. பின்னும் கூர்ந்து கேட்கலாயினர்.

"மகாராஜாவுக்கு, இந்த மரத்தினுல் ஜனங்களடையும் பெரும் பயன் தெரிந்திருந்தால் இப்படிக் கட்டளை பிறந்திராது என்று எண்ணினேன். இந்த மரத்தை வெட்டி விட்டால் அயலூர்களிலிருந்து, பிரார்த்தனைகளைச் செலுத்தும்பொருட்டு ஸ்நானம் செய்து விட்டுவரும் கர்ப்ப ஸ்திரீகளும், குழந்தைகளோடும் பிராயம் முதிர்ந்தவர்களோடும் வரும் பக்தர்களும், பிறரும் வெயிற்காலத்தில் மிக்க துன்பத்தை அடைவார்கள். அக்கரையிலிருந்து வருபவர்களும் வெயிலில் வந்த இளைப்பை ஆற்றிக்கொள்ள இடமில்லாமல் தவிப்பார்கள். மகாராஜா நினைத்தால் இந்த ஸமஸ்தானத்தில் எவ்வளவோ மரங்கள் கிடைக்கக் கூடும். இந்த ஒரு மரந்தான் இருக்கிற தென்பதில்லை. இந்த மரத்தைப் பார்க்கும் பொழுதெல்லாம் எனக்கு மகாராஜாவின் ஞாபகம் வரும். இது பல ஜனங்களுடைய தாபத்தைப் போக்கி அவர்களுள்ளங் குளிரச் செய்து நிழலளித்து மகாராஜாவைப்போல் விளங்கிவருகின்றது. அன்றியும் மற்றொரு முக்கியமான விஷயந்தான் என்னுடைய மனத்தில் அதிகமாகப் பதிந்திருக்கின்றது. இந்த அருமையான மரம் மகாராஜாவுடைய பெயரைத் தாங்கிக்கொண்டு நிற்கின்றது. இந்த மரம் நெடுங்காலம் இருக்கவேண்டுமென்பதே, மகாராஜாவின் க்ஷேமத்தையே குறித்து ஸந்நிதியில் அர்ச்சனை செய்துவரும் எனது பிராத்தனை. இதை வெட்டலாமா?" என்று கூறிக் குருக்கள் நிறுத்தினர்.

பக்கத்தில் நின்ற யாவரும் தம்மையே மறந்து, "ஹா! ஹா!" என்று தங்கள் உணர்ச்சியை வெளிப்படுத்தினர்கள். "மகாராஜாவினுடைய பெயரைத் தாங்கிக் கொண்டு இது நிற்கின்றது" என்று சமயோசிதமாக அவர் சொல்லிய வாக்கியமானது எல்லோருக்கும் ஆச்சரியத்தையும் உருக்கத்தையும் உண்டாக்கி விட்டது.

பராமுகமாகக் கேட்டுக்கொண்டு வந்த மருத பாண்டியர் முக மலர்ந்து நிமிர்ந்து குருக்களைப் பார்த்தார். அவருடைய உள்ளம் குருக்களுடைய நல்லெண்ணத்தை அறிந்து கொண்டது. உண்மையான அன்பே அவரை அவ்வாறு தடுக்கச் செய்ததென்பதை அவர் உணர்ந்து, "சரி; நீர் செய்தது சரியே! உமக்கு நம் மேல் உள்ள விசுவாசத்தையும் பொது ஜனங்களின்மேல் உள்ள அன்பையும் கண்டு சந்தோஷிக்கிறோம்" என்று கூறினர்.

* * * *

மருத மரம் வெட்டப்படாமல் நின்றது. குருக்கள் அச்சம் நீங்கினர். காளையார்கோயில் தேருக்கு வேறொரு மரம் அச்சு ஆயிற்று.

* * * *

சிறு வயல் ஜமீன்தாராக இருந்த முத்துராமலிங்கத் தேவரவர்களும், குன்றக்குடி மடத்தில் தலைமைக் குமாஸ்தாவாக இருந்த அப்பாப்பிள்ளையவர்களும் இந்த வரலாற்றை னக்குச் சொன்னார்கள்.



# தமிழ்க் கணிதம்

ஆர். கோபாலையர்

தமிழ்மொழிக்கு உரிய பலகலைகளுள்ளும், கணிதமும் இலக்கணமும் மிகச்சிறந்தனவாம் இவ்விரண்டையும் அகக்கண் என்று சொல்லுவர் ஆன்ரோர். புறத்திலுள்ள பொருள்களைக் காண்பதற்கு முகக்கண்கள் பயன்படுதல் போல, அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நால்வகைப் பொருள்களையும் காண்பதற்கு இவ்வகக்கண்கள் பயன்படுகின்றன. அதனாலே தான், "எண்ணெழுத்திகழேல்", "எண்ணு மெழுத்துங் கண்ணெனத் தகும்" என ஔவைப் பிராட்டியாரும், "எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும், கண்ணென்ப வாழும் உயிர்க்கு" எனத் திருவள்ளுவ நாயனரும் அருளிச் செய்தனர். ஆதலால், தமிழர் பிறகலைகளைக் கல்லாவிடினும் இவ்விரண்டையுங் கற்றல் வேண்டுமென்பது புலப்படுகின்றது.

மேற்சொன்ன இரண்டு கலைகளுள்ளும் முதலாவதாக (அஃதாவது: இரண்டு கண்களில் வலக்கண்ணாக)க் கருதக் கிடக்கின்ற கணிதம், தமிழ் நாட்டிலே கிராமப் பள்ளிக்கூடங்கள் ஒழுங்காக நடைபெற்ற காலம் வரையில் (பத்தொன்பதாம் நூற்றாண்டின் முடிவு வரை) மாணவர்களுக்குக் கிரமமாகக் கற்பிக்கப்பட்டு வந்தது. அப்பள்ளிக்கூடங்களில் மாணவர் கற்றது, ஆரம்பக் கணிதம் மட்டுமே. அது, சில ஓலைச் சுவடிகளில் அடங்கி யிருந்தது. அச்சுவடிகளின் பெயர் இலக்கம், நெல்லிலக்கம், எண்சுவடி, கீழ்வாயிலக்கம், குழிமாற்று என்பனவாம். அவை ஒவ்வொன்றின் தொடக்கத்திலும், குழந்தைகள் எளிதிற் பயிலத்தக்க காப்புச் செய்யுள் ஒவ்வொன்றுண்டு; அவையாவும் விநாயகபரமானவை. அவற்றுட் சில கீழே காட்டப்படுகின்றன:

"கண்ணன் மருகன் கணபதியைக் கைதொழுதால்
எண்ணிலக்க மெல்லாம் வரும்"

என்பது, இலக்கத்தின் காப்புச் செய்யுள்.

"சீரான நெல்லிலக்கஞ் செப்பமுடன் யான்படிக்கக்
காரானை மாமுகத்தோன் காப்பு"

என்பது, நெல்லிலக்கத்தின் காப்புச் செய்யுள்.

"நெடுமோல் திருமருகா நித்தன் மதலாய்
கொடுமால் வினையறுக்குங் குன்றே—தடமோரு
தெண்முப் பதுவாயும் என்சித்தத் தேநிற்கப்
பண்ணுத் தமனே பரிந்து"

என்பது, எண் சுவடியின் காப்புச் செய்யுள். இவ்வாறே ஏனைச் சுவடிகளுக்கும் உண்டு. இவற்றை யெல்லாம் இளமாணவர்கள் சிரத்தையுடனும், உற்சாகத்துடனும் மனப்பாடம் பண்ணிக் கொள்ளுவார்கள். 'சிறுமையிற் கல்வி சிலையிலெழுத்து' என்னும் மொழிக் கேற்ப, அக்காலத்து ஆசிரியர்களும் மாணவர்களின் தன்மை அறிந்து தனித்தனியே அவனவனுக்குத் தக்கபடி அழுத்த மாகப் போதித்து விடுவார்கள்.

மேலே சொன்ன சுவடிகளெல்லாம் கணிதத்திற்குக் கருவி யாகும். கணிதம் கருவி, செய்கை என இருவகைப்படும். மேற் கூறிய கருவி நூல்களேயன்றி, 'கணக்கதிகாரம்' என்பது போன்ற செய்கை நூல் சிலவும் அக்காலத்தில் வழங்கி வந்தன. அவை செய்யுளாலாக்கப்பட்டவை. அவற்றில், பேர்க்கணக்கு, சேவித்தான் கணக்கு, வட்டிக் கணக்கு, களநடைக் கணக்கு, அளவு கணக்கு முதலிய பலவும் காணப்படும். அவற்றை யெல்லாம் ஆசிரியர்கள் நன்கு கற்று மாணவர்களுக்குக் கணக்குகளைப் போட்டு வழிகளைக் காட்டிக்கொடுத்துப் பழக்குவார்கள். அக்கணக்குகளில், இலகுவான வற்றை மாணவர்கள் மனத்தினாலே பார்த்து உடனே விடை கூறும் படி பழக்குவதும் உண்டு. ஆங்கிலத்திலே (*Fractions*) என்று சொல்லப்படும் ஒன்றுக்குக் கீழ்ப்பட்ட பின்ன எண்கள், தமிழி லமைந்திருப்பது போல வேறு மொழிகளில் அவ்வளவு அழகாக அமையவில்லை. ஒன்று என்னும் எண்ணிலே முந்நூற்றிருபதில் ஒரு பங்கு கொண்டதொரு சிறு எண்ணுக்கு, '**முந்திரி**' என்று பெயர். இது நாலு கொண்டது '**காணி**'. காணி நாலு கொண்டது ஒரு '**மா**'. மா ஐந்து கொண்டது '**கால்**'. கால் நாலு கொண்டது ஒன்று. இன்னும், முன் சொன்ன முந்திரியிலே முந்நூற்றிருபதில் ஒரு பங்கு கொண்டதொரு சிற்றெண் '**கீழ்முந்திரி**' என்னப்படும். அக்கீழ் முந்திரியிலே, பத்தரையில் ஒரு பங்கு கொண்டது '**இம்மி**' ஆம். தமிழில் இவ்வளவு நுட்பமான எண்கள் அமைந்திருத்தலால், இவற்றைக் கொண்டு எவ்வளவு பெரிய கணக்குகளையும் செய்யு

தல் சுலபமாகின்றது. மேற்கூறிய கணக்கதிகாரம் என்னும் நூலும் அதுபோன்ற வேறு சிறுநூல் சிலவும் அரசாங்கக் கையெழுத்துப் புத்தகசாலை முதலிய இடங்களிலே ஓலைச் சுவடிகளாக இப்பொழுதும் இருக்கின்றன. அவற்றைப் பயிலுவாரின்மையால், தேடியெடுத்து வழுக் களைந்து அச்சிடுவாரும் இல்லை.

ஆசிரியர் பரிமேலழகர், முற்கூறிய "எண்ணென்ப" என்னுங் குறளின் உரையிலே, "எண்ணென்பது கணிதம்; அது கருவியும் செய்கையும் என இருவகைப்படும்; அவை 'ஏரம்பம்' முதலிய நூல்களுட் காண்க" என்று கூறியிருத்தலால், அக்காலத்தில் ஏரம்பம் முதலிய பல தமிழ்க்கணித நூல்கள் இருந்தனவென்று தெரிய வருகிறது. பிற்காலத்தில் அவை யாவும் இறந்தொழிந்தன. இப்பொழுதுள்ள நிலையை யோசித்தால், இன்னும் சில வருடங்களுக்குள்ளே, எஞ்சி நிற்கும் கணக்கதிகாரம் முதலியனவும் இறந்துபடுமென்று தோன்றுகிறது. அப்பால், "தமிழிலே கணிதம் என்பது ஒன்றுண்டோ?" என்று கேட்கக் கூடிய நாள் வந்து விடும். இவற்றை யெல்லாம் அறிந்த உண்மைத் தமிழபிமானிகள் வருந்தாதிரார்.

இவ்வளவு துரதிருஷ்டம் நமது தமிழ்மொழிக்கு எப்படி வந்தது என்பதை இனி ஆராய்வோம். தமிழ் மூவேந்தர் காலத்திற்குப் பிறகு, முகம்மதியர் முதலிய அன்னியர் பலர், ஒருவர் பின் ஒருவராக ஆளத்தொடங்கினதினாலே, அவரவர் காலத்தில் அவரவர் பாஷைக்குப் பிரதானமும் நமது தமிழுக்கு அப்பிரதானமும் ஏற்பட்டு, நாளுக்கு நாள் தமிழ்நூற்பயிற்சி குறைந்து வந்தது. அங்ஙனம் குறையினும், தமிழ் நாட்டிலே அங்கங்கிருந்த சிற்றரசர்களும், பிரபுக்களும், மடாதிபதிகளும் இயன்ற அளவு தமிழ் வித்துவான்களையும், தமிழையும் ஆதரித்து வந்தனர். கிராமங்கள் தோறும் ஆரம்பக் கல்வியை நாலைந்து வருஷம் புகட்டத் தக்க தமிழ்ப் பள்ளிக் கூடங்கள் இருந்தன. அவற்றில் தமிழ்க் கணிதம் பயிற்றுவித்த முறை முன்னமே கூறப் பெற்றது. அங்ஙனம் பயின்ற பின்னர், மேலே தமிழ் கற்க விரும்புவோர் அங்கங்கிருந்த சிற்றரசர் முதலியவர்களை அடுத்து, அவர்களுதவியால் நிகண்டு, இலக்கியம், இலக்கணம், கணிதம், தருக்கம் முதலிய பலவற்றிலும் பயின்று முன்னுக்கு வந்தார்கள். சென்ற நூற்றாண்டின் இறுதி வரையிலும் இம்முறை ஒருவாறு அனுஷ்டானத்தில் இருந்தது.

இப்பால், ஆங்கிலப் பயிற்சி நாளுக்கு நாள் அதிகமாயிற்று. அது பயின்று உத்தியோகம் பெறவேண்டுமென்னும் ஆசை கிராமாந்தரங்களிலுள்ளவர்களுக்கும் ஏற்பட்டது. ஏற்படவே,

கிராமங்களிலுள்ளவர்களிற் பெரும்பாலோர் தம் மக்களைப் படிப்பிப்பதற்காக நகரங்களை நோக்கிச் சென்றனர். செல்லவே, கிராமங்கள் பாழ்த்தன; தமிழ்ப் பள்ளிக் கூடங்கள் ஒழிந்தன. பிரைமெரி பரீக்ஷை யென்ற பெயருடனிருந்த கவர்ன்மெண்டு பரீக்ஷையும் தொலைந்தது. அப்பரீக்ஷை இருந்த வரையிலும், பிரைமெரி ஸ்கூல்களிலே (தமிழ்க் கணக்கில்லாவிடினும்) ஆங்கிலக் கணக்கிற் கொஞ்சம் பயிற்சியும், தமிழிற் பிழையின்றி யெழுதவும் படிக்கவும் அமைந்த பயிற்சியும் மாணவர் பெற்று வந்ததனால் ஆங்கிலத்தில் மேற்படிப்புப் படிப்பதற்கு அவை அநுகூலமாயிருந்தன. அப்பரீக்ஷை தொலையவே, மாணவர்க்கு அடிப்படைப்படிப்பும் தொலைந்தது; தமிழில் உள்ள க, உ முதலிய எண்களும் மறைந்தன. தமிழ் உயிரெழுத்து மெய்யெழுத்துக்களைக்கூட வரிசையாகப் போதிக்காமலே விட்டுச் சொற்களையும் வாக்கியங்களையும் போதிக்கும்படியான புதிய புதிய முறைகள் ஏற்பட்டதனால், மாணவர்கள் தமிழெழுத்துக்கள் தெரியாமலே ஹைஸ்கூல்களிலும் காலேஜ்களிலும் போய்ப் பயில ஆரம்பித்தனர். அதனால், பிழையின்றி ஒரு வாக்கியமேனும் எழுதுவதற்கு அவர்களால் ஆகாமற் போயிற்று. தாய்மொழி இக்கதியடைவே, 'ஆங்கிலத்திற்கும் இதுவே கதி' என்று எண்ணும்படியான நிலைமை வந்துகொண்டிருக்கிறது.

இனி, தமிழையே பயின்று மதுரைத் தமிழ்ச்சங்கத்து மூன்று பரீக்ஷைகளுக்கும், யுனிவர்ஸிடிகளைச் சேர்ந்த வித்துவான் பரீக்ஷைக்கும் போய்த் தேறும் பட்டதாரிகளின் நிலைமையை யோசித்தால், அவர்களுக்கும் தமிழ்க்கணித ஞானம் ஏற்பட வழியில்லாமலிருக்கின்றது. ஏனெனில், அவர்களுக்குக் கணிதம் ஒரு பாடமாக வைக்கப் பெறவில்லை. இங்ஙனம் தமிழ்ப் பட்டதாரிகளுக்கும் தங்கள் வலக்கண்ணாகிய கணிதம் தெரியாதென்றால், அப்புறம் அது தெரிபவர் யார்? ஏதோ கொஞ்சம் நல்ல காலத்தின் பயனாக, முப்பது வருஷங்களுக்கு முன்னே மதுரைத் தமிழ்ச்சங்கம் ஏற்பட்டது. அது நல்ல நிலைமைக்கு வருவதன் முன்னே, அதன் ஸ்தாபகராயும் வள்ளலாயும் விளங்கின ஸ்ரீமான் பாண்டித்துரைத் தேவரவர்கள் கைலை நோக்கிச் சென்று விட்டனர். அப்பால், அவரிடமிருந்து அதனையேற்றுக் கொண்டு, அன்று முதல் காரியதரிசியாகவேயிருந்து, படாத பாடுபட்டுச் சிலருதவி பெற்று நிருவகித்து வரும் ஸ்ரீமான் டி. வி. ஸ்ரீநிவாஸ ஐயங்காரவர்களாலே அஃது ஒருவாறு நடைபெறுகின்றது. அதற்குப் பொருளுதவி அதிகம் உண்டானால், அதில் இப்பொழுதுள்ள எழுத்துடனே எண்ணும் கற்பிக்கப் பெறலாம். புதுக்கோட்டையிலாகாவைச் சேர்ந்த கோனூர்பட்டு

என்னும் ஊரிலே, தனவைசியர்களால் நடத்தப் பெறுகிற கற்பக விநாயககலாசாலையிலும், வேறிரண்டோரிடங்களிலுமட்டுமே இப் பொழுதும் தமிழ்க் கணிதம் போதிக்கப் பெறுகின்றது. நாட்டுக் கோட்டை நகரத்தார்களின் ரொக்கப் பற்றுவரவுக் கடைகளிலெல் லாம் அவர்கள் வைத்திருப்பது தமிழ்க் கணக்கேயாம். அவர்கள் எவ்வளவு பெரிய வட்டிக் கணக்கையும், எழுதாமலே மனத்தாற் பார்த்துச் சொல்லிவிடுவார்கள். அத்தகைய நகரத்தார்களுக்குள்ளே சிகாமணியாய் விளங்கும் ராஜா. ஸர். அண்ணாமலை செட்டியாரவர் களின் யுனிவர்ஸிடியைச் சேர்ந்த தமிழ்க் கலாசாலையிலே தமிழ்க் கணிதம் பயில்விக்கப் பெறாமை, தமிழ் பயில்வோரின் அதிருஷ்டக் குறைவேயாம்.

இனித் தமிழ்க்கணிதம் முன்னுக்கு வரவேண்டுமானால், கிராமங் களிலிருந்து நகரத்திற்குப் போனவர்களெல்லாரும் திரும்பித் தத்தம் கிராமங்களுக்குச் சென்று அங்கே முன்னிருந்தது போலத் தமிழ்ப் பள்ளிக்கூடங்களை ஏற்படுத்த வேண்டும். இதுகாறும் இறந்து படாமல் ஓலைச் சுவடிகளிலிருக்கிற கணித நூல்களை அச்சிடுவிக்க வேண்டும். மதுரைத் தமிழ்ச்சங்கத்துப் பிரவேச பரீக்ஷை யிலும், யுனிவர்ஸிடிகளைச் சேர்ந்த வித்வான் பிரிலிமனரி பரீக்ஷை யிலும் தமிழ்க்கணிதம் ஒரு பாடமாக இடம் பெறவேண்டும். தமிழர்களுக்கு ஆங்கில மொழிப்பட்டங்களில் உண்டாகியிருக்கிற வீண் மோகம் ஒழிந்து, தாய் மொழியினிடத்தும் பற்றுண்டாக வேண்டும்.

இன்னும், இவ்விஷயமாகத் தமிழ் நாட்டிலுள்ள 'ஆன்றவிந் தடங்கிய கொள்கைச் சான்றோர்'களைக் கேட்டால், அவர்கள் வேண்டிய யோசனைகளை யெல்லாம் சொல்லி உதவுவார்கள். ஈச னருள் உளதாகுக ; தமிழ்க்கலை சிறந்து வாழ்க.

# கமலை ஞானப்பிரகாசர்

ச. சோமசுந்தர தேசிகர்

(903-ம் பக்கத்தொடர்ச்சி)

கமலை ஞானப்பிரகாசர் பிறக்க முத்தி தருவதான திருவாரூரிலே பொன் பரப்பிய திருவீதியில் பரம்பரையாக வரும் சைவ ஆசாரியார் மரபிலே சிதம்பரநாத தேசிகருக்குப் புத்திரராய் அவதரித்தார். அவ்வூரிலே இது பொழுது தேரோடும் வீதியை அடி முடி தேடிய திருவீதி[1] யென்றும், அதற்குத் தென்பாலுள்ள திருவீதியைப் பொன்பரப்பிய திருவீதி யென்றும், அதற்கடுத்த திருவீதியைப் புகழாபரணத் திருவீதி யென்றும் பண்டையோர் வழங்கி வந்தனர். கமலை ஞானப்பிரகாசரது பாட்டனார் சிவபுரம் தத்துவப்பிரகாசரது சீடரான செட்டித்தெரு ஞானப்பிரகாசராவார். இவரும் இல்லறத்திலிருந்த சிவஞானியாவார். இவரது புத்திரர் சிதம்பரநாதர். இவர் தகனமானவிடம் இன்றும் சிதம்பரநாதன் கொல்லை யென்று பேர்பெறும். ஆன்மலிங்கமாலை யென்ற நூலாசிரியர் இவரது சீடர். இச்சிதம்பரநாதரது புத்திரரே ஈண்டுக் குறித்த ஞானப்பிரகாசர். இவரைக் கமலை ஞானப்பிரகாசர் என்றும் சிதம்பரநாத ஞானப்பிரகாசரென்றும் கூறுவர். இவரது பெற்றோர் இவருக்கிட்ட பெயர் மாசிலாமணி யென்பர் ; தொண்டைமண்டல சதகப் பாட்டொன்றினுக்கு மேற்கோளாகக் காட்டப்படும்,

“பொருமா கடலிடைத் தோன்றலல் லாது புணரிவெள்ளந்
தருமா மணியொன்று கண்டதுண் டோவையந் தந்தவனுந்
திருமா லும் போற்றுந்தென் னாரூரிற் சம்பந்த தேசிகனை
மொருமாசி லாமணி பேரின்ப வாரி யுதவியதே”

என்ற செய்யுள் இவர்மேற் பாடிய பாடல்களில் ஒன்றென்பர். “திருமாது வளர்கமலை வரு மாசிலாமணி திருப்பவள முத்தமருளே”, “தேசுலா வியகருணை மாசிலாமணி முனிவ செங்கீரை யாடியருளே”

---

1. இப்பொழுது அடி முடி தேடிய திருவீதியைத் தெற்கு வீதி யென்றும், அதற்கு அடுத்த திருவீதியைக் குமரகோயிற்றெரு என்றும், குமரகோட்டத்துக்குப் பின்னிருப்பதும் குமரகோயிற்றெருவின் மேற்குச் செல்லுவதுமான தெருவைச் செட்டித்தெருவென்றும், புகழாபரணத் திருவீதியைக் காரைக்காட்டுத் தெரு—கார்காத்த வேளாளர் தெரு—என்றும் கூறுவர்.

என்பன போன்ற அடிகள் இவரது இயற்பெயர் மாசிலாமணி யென்பதனை நன்கு வலியுறுத்தும். இவர் உரிய காலத்தே கல்வி பயிற்றுவிக்கப்பட்டு, மரபுக்கேற்ற சமயக் கல்வியும் ஆகம சாத்திரங்களும் பயின்றார். மணம் செய்யவேண்டிய பருவம் வந்தபோது ஒத்த குலத்திலுதித்த ஒரு பெண்ணை மணந்துகொண்டார். இவர்களுடைய கால்வழியினர் திருவாரூரில் அதே தெருவில் இன்றும் வாழ்ந்து வருகின்றனர்.[1] இவர்கள் சந்ததியில் வருபவர்களுள் மூத்தவர்கள் ஞானப்பிரகாசம், மாசிலாமணி என்ற பெயரே இட்டழைக்கப்படுகின்றனர்.

இவர் தம் கற்புடை மனையாளோடு இல்லறம் நடாத்திவருநாளில் தங்கள் குலத்துக் கேற்ப, 'ஆசார்ய வபிடேகம்' செய்விக்கப்பெற்று, நித்திய கருமானுஷ்டானங்களை வழுவறச் செய்துவந்தனர். பிறருக்கும் செய்யவேண்டிய தீட்சை முதலாயவைகளை நடத்தியும் வந்தனர். அக்காலத்தில் இவருக்குச் சிவபக்தி மிகுந்திருந்த தெனினும் 'சிற்றறிவைத் தெளிவிக்கும் குருவைக் காணோம், சிவஞான சாத்திரத் திற் றிறமை யில்லோம், பற்றறவும் யோகவழி நிலைமை காணோம், பரஞானம் பெறுவதற்குப் பாதை செல்லோம்' என்று நினைந்துருகித் தியாகேசனது திருவடித் தாமரைகளைத் தொழுது நின்றார். அவ்வாறு திருவருளை இறைஞ்சி நின்ற காலம் இவருக்கு வயது முப்பது

1. சென்ற ஒரு நூற்றைம்பது ஆண்டுகளாகத் தெரிந்தவர்கள் வரிசை வருமாறு :—



என்று இவரைப்பற்றிய மான்மியம் கூறும். அந்த மான்மியத்தில் இவர் அவ்வாறு வருந்தி நின்ற காலத்து நடந்ததாகக் காணப்படும் பகுதி வருமாறு :

1 "அப்பொழுது தேசிகனுந் துயிலுங் காலை
அனந்தசென் மப்பயனு மன்று சார
ஒப்பில்பரி பக்குவமு மொன்று சேர
ஒருவனைப் நின்றசிவ பெருமா னேகி
எப்புவியு மதிசயிக்கத் தேசி கன்பா
லெய்திச்சொற் பனமதனிற் றென்பா றன்னில்
செப்புமொரு நாமுறையுங் கோயி னண்ணித்
திகழ்சித்திச் சரமடைவா யென்று சொன்னர்.

"தேசிகனுஞ் சாக்கிரத்தை நண்ணி யோர்ந்து
சிவபெருமா னன்றிவே றிலையென் றெண்ணி
மாசுடையே னென்றிருகை தலைமேற் கொண்டு
வாயாரத் தோத்தரித்து மகிழ்ந்து போற்றிப்
பூசமுரு மகாகுரு வாரந் தன்னிற்
புகல்நித்ய கன்மவிதி பொருத்தி மேன்மே
லாசையெனுஞ் சாகரத்திற் றீர்த்த மாடி
யாலயத்துட் சென்றுசித்திச் சுரம டைந்தார்.

"அடைந்துவலம் வந்துசன் னிதியிற் சென்றே
யடிபணிந்து கைகூப்பி யன்பி னேடு
மடந்தவிர்த்துக் கிருபைகூர்ந் தடியேன் றன்னை
வாழ்விப்ப துணையன்றி மற்றோர் காணேன்
விடவரவைத் தரித்திடுமோர் பொருளே யென்று
மெய்ஞ்ஞானந் தமியேற்கு விளங்கு மாறு
கடமறியா வறியன்மிக வெளியேன் யானு
மின்புறவுங் கருணைசெய்வா யென்று போற்றி"

நின்றனரென்று அந்நூல் கூறும்.

தியாகப் பெருமானும் குருவாகி மூர்த்திகரித்து அருளும் விதி தவறுமல் அனுக்கிரகிப்ப, 'இன்று முதல் நீ ஞானப்பிரகாச னெனப் பேர்பெறுவாய்' என ஒருவாக்கு உண்டாயிற்றென்றும் அந் நூல் பின்னுங் கூறும். அதுமுதல் அவருக்கு ஞானப்பிரகாச ரென்னும் பெயரே வழங்க வாரம்பித்தது.

---

1. இச்செய்யுள்கள் ஞானப்பிரகாச மான்மியம் என்ற நூலிற் கண்ட படியே கொடுக்கப்பட்டுள்ளன. அதன் ஆசிரியர் பெயர் முதலியன காணப் படவில்லை. வாக்கும் விசேடமானதன்று.

அன்று முதல் சிவஞானம் கைவரப்பெற்று, 'இல்லற மல்லது நல்றல மன்'றென விருந்து, இல்லறத்திலேயே முழுகிவிடாது பரபோகத்தி லாசைமேவி ஆகமத்திற் கூறியவழி தவறாது சிவ பூசையாதிகளைச் செய்துகொண்டும், அடியார்களுக்கு உபதேசஞ் செய்துகொண்டும் வந்தார். இவர் பல அற்புதங்களைச் செய்த தாகக் கூறுவர். அவற்றுட் சிலவற்றைக் குறிக்கின்றேன்.

ஒரு நாள் ஞானப்பிரகாசர் சிவனடியார் சூழக் 'கனக மோரடிக் காயிர நல்குமெங் கடவுள்' திருக்கோயில் சென்றார். அன்று 'பக்தக் காட்சி' யென்னுந் திருவிழா நடந்தது. அது காலை 'ஆடாது மாடிப் பாகற்காயறுக்கும் பாகர்' திருவுலாப் போந்து, திருநடனஞ் செய்து, தம் பக்தர்கட்குக் காட்சியளிப்பது மரபு. எம்பெருமான் நடனத் தின் போது, 'படிதண்டு, முறியப் பாரிலுள்ளோர் பார்த்தே யிது அதிசயமென்று ஆர்த்திட', ஆண்டிருந்த ஞானப்பிரகாசர் படிதண்டு முறிந்தது கூடும்படியாக வெண்பா ஒன்று கூறியதாகவும் அஃது உடனே கூடிற்றென்றும் மான்மியம்கூறும். அவ்வெண்பா வருமாறு:

"அண்ட முழுதுமாழ்ந்து போகாம லென்றும்போற்
பண்டை நிலைநிறுத்தும் பாதனே—துண்டுபட்ட
வசபா நிருத்த மசையும் படிதண்
டிசையும் வகையருள்வா யின்று."1

வேதாரணியமெனும் திருமறைக்காட்டிலே செல்வச் சீமானாய் ஓரந்தணன் வாழ்ந்து வந்தனன். அவன் பழவினையின் வாய்ப்பாகக் குட்டநோயுற்று அதனாலே மிக வருந்தினன். இந்தத் தீராத நோய் தீரும்படியாக நூல்களிற் கூறியாங்குப் பலவகைக் கழுவாய் களை அவன் செய்தும், அவனுக்கு அந்நோய் நீங்கவில்லை. குறை நோய் மேன்மேலுமோங்கி அவனைத் துன்புறுத்திற்று. இவ்வாறு அவன் துன்புறுவதைக்கண்ட பெரியாரொருவர் தென்கமலை சென்று, ஞானப்பிரகாசரைக் கண்டு, அவர் அருள் பெற்றால் உய்வுண்டு என்று கூறினர். நீரில் மூழ்குவோன் ஒரு வெதிர்ங்கோல் கண்டது போல இச்செய்தியைக் கேட்ட அந்தணன் நிறைசெல்வத் திருவாரூ ரெய்தி, அங்கு ஞானப்பிரகாசரது இல்லமடைந்து இரந்துநிற்க, அவர், வேதியன் படுந்துன்பத்தைக் கண்டு அடியார்க் கெளியனான எம்பெருமானைத் துதித்து,

"வேத வனமறையோன் மெய்யுறு குட்டமதின்
வாதனையை நீக்கி மகிழுறவே—ஏதமிலாச்

---

1. ஞானப்பிரகாசர் வாக்காகக் கருதப்படும் நூல்களுக்கும் இதற்கு முள்ள வேறுபாடு அதிகம்.

செய்யசடை யானே பெருமானே யேவர்க்கு
மையமிலா திப்போ தருள்''

என்ற வெண்பா ஒன்று பாடினர். அந்தணனும் அங்கமெலாங் குறைந்தொழுகு தொழு நோயன்ன துன்பம் ஒருவாறு நீங்கப் பெற்றான். ஞானவேதியரும் எம்பெருமானது அருளை நினைந்து புகழ்ந்து பாடி, பின் வேதியனை நோக்கி, ''நீ, 'சங்கங்களும் இலங்கிப்பியும் வலம்புரிகளு மிடறி வங்கங்களு முயர்கூம்பொடு வணங்கும் மறைக்காடு' அடைந்து, மணிமுத்தா நதியிற் படிந்து யாழைப் பழித்தன்ன மொழி மங்கை யொருபங்கனை வணங்கி நலம்பெறுவாயாக'' என்று கூறிவிடுத்தார். வேதியனும் அவ்வாறே வேத வனம் சென்று தீர்த்தமாடி மறைக்காட்டீசரையும் யாழைப்பழித்தாளையும் வணங்கி அருள்பெற்று வாழ்ந்திருந்தனன்.

இச்சோழ நாட்டிலே வல்லகி[1] என்றொரு பட்டணமுண்டு. அப்பட்டணத்திலே ஒரு வணிகன் அழகனென்பான், தன் பெயருக்கேற்பச் சிறந்த செல்வவானுயிருந்ததோடு கல்வி கேள்விகளிலும் மேம்பட்டு விளங்கினன். அவ்வாறு கல்வி கேள்வி வல்லவனுயிருந்தமையால் புறப்பற்றெல்லாம் நீங்கியும் உண்மை ஞானம் கைவரப் பெறாது பெரிதும் வருந்திநின்றான். அவன் 'அன்னம் வைகும் வயற்பழனத் தாரூர்' தனில் ஞானப்பிரகாசர் என ஒரு பெரியார் இருக்கின்றனரெனக்கேட்டு அவரிடம் சென்றால் தனக்குள்ள ஐயப் பாடுகள் நீங்கலாமென எண்ணினன். இன்ன தன்மையனென்று அறியவொண்ணாத எம்பெருமானது அருள்பெற்ற ஞானப்பிரகாசர் அடியாரான சிவஞானச் செல்வராம் அழகர் திருவாரூரை அடைவதற்குமுன், அவரது ஐயந்திரிபு முதலியன நீங்கும்படியான அத்துவிதசாரம்[2] என்றதொரு அரிய நூலை இயற்றித் தமது சீடர்களிடம் கொடுத்து, அழகர் வந்தால் அவரிடம் கொடுக்கும்படிப் பணித்தனர். அழகர் வந்த காலை, ஞானப்பிரகாசரது சீடர் அத்துவித சாரத்தை அவரிடம் கொடுக்க, அந்த ஞானநூலைப் பெற்று அவர் அதனைப் படித்துப்பார்க்க, அவரது ஐயந்திரிபுணர்ச்சியெல்லாம் அறவே நீங்கப்பெற்றார். ஐயந்திரிபு நீங்கப்பெற்றாலும் உபதேசமின்மையால் உண்மை ஞானம் கைவரப் பெற்றாரில்லை. ஆதலினாலே அவருக்கு ஞானபானுவான ஞானப்பிரகாசரை நேரிற்கண்டு தரிசிக்க

1. இது தஞ்சையை யடுத்த வல்லம் போலும். இன்னும் வல்லத்திலுள்ள வணிகர்களான செட்டிமார்கள் தாங்கள் ஞானப்பிரகாசரது சீடவர்க்கத்தினரென்று கூறியும் குருகாணிக்கை செலுத்தியும் வருகின்றனர்.

2. இந்நூல் கிடைத்திலது.

வேண்டுமென்ற அவா உண்டாயிற்று. அவர் ஞான சிகாமணியின் இல்லமடைந்து, அகத்தையிழந் தருளாய்த் தோன்றும் ஒருமணியைக் கண்டு அடி வணங்கி, வெறும்பாழிற் பேரின்ப வெட்டவெளி தன்னிற் குறும்பாளர் காணுக் குடிலினுறும் பாசமொழிய, எந்தாய்! அருள் என்று வேண்டி யிரந்துநிற்றலும், இருளுதய நீக்கும் இரவியைப்போல அவனுளத்தில் அருளுதயமுண்டாக நோக்கி மருளுதயம் அகலும்படிச் செய்தார். குருவுபதேசம் பெற்ற சீடரும் ஐயமது தெளிந்து, ஆனந்தக் கண்ணீர் அருவியாயோட, 'சிற்றறிவுடைய வடியேற்குங் கருணைசெய்த சின்மயமே, என் குருவே, தேவதேவே, வறியவற்கு நற்றனமே, வாழ்வே' என்று வாயாரத் தோத்தரித்து வணங்கி விடைபெற்று மகிழ்ச்சி மீதூரத் தமதூரான வல்லைசென்று வாழ்வாராயினர்.

தென்பாண்டி நாட்டிலே யுள்ள சீவிலிப்புத்தூரிலே குருபாலனென்றொரு வணிகர் இருந்தார். அவர் அடியார்கட்கு உணவளித்தல் முதலாய அடித்தொண்டு புரிந்து வந்ததோடு, அருவுருவாய் முளைத்தெழுந்த அரன்கோயிற் பணியெல்லாம் அழகிதாகப் பார்த்து வந்தார். தமது செல்வத்தை யெல்லாம் சிவனடியார்க்கும் நின்மலனது திருப்பணிக்கும் நியமித்துக்கொண்டு தருமந்தலை நின்றார். அன்னவர்க்கு அரனருளாலே ஓர் ஆண்மகவு உண்டாயிற்று. அப்பிள்ளைக்குத் தனபதி[1] யென்று பெயரிட்டு அதற்கேற்பப் பொருட்செல்வம் வைத்ததோடு கல்விச்செல்வமும் நிறையும்படி செய்தார். மகனும், தந்தைக் கேற்றவனுய்ச் சீலம், ஒழுக்கமுடையவனுய் வளர்ந்துவந்தான். இவனுக்குப் பதினறு வயதாகுமளவில் தந்தையார் ஆண்டவனருளால் அவன் பதமடைந்தார். மகனும் தந்தைக்குச் செய்யவேண்டிய ஈமச்சடங்குகளை நிறைவேற்றியபின் இல்லறத்திலே தலைநின்றால் அரன்பதம் கிட்டாதென்றெண்ணி, மோன குருவை நாடி அலைபவரானர். அவ்வாறு செல்லுங்கால் மதுரையம்பதியை யடைந்து சொக்கலிங்கப் பெருமானையும் மீனட்சியம்மையையும் தரிசித்துத் தமக்குற்ற குருவைத் தெரிவிக்க வேண்டியிரந்து நின்று பின் இல்லஞ் சென்றார்.[1] இவர் துயிலும் போது கனவில் சொக்கேசர் தோன்றி, "நம்முடைய உபதேச பரம்

1. ஸ்ரீமத் குரு ஞானசம்பந்த தேசிகர் சரித்திர சாரசங்கிரகம் என்னும் நூல் இவரது இயற்பெயரே ஞானசம்பந்தரென்றும், இவரது பெற்றோர் பெயர் சுப்பிரமணிய பிள்ளை மீனட்சியம்மையாரென்றும், கார்காத்த வேளாளர் குலமென்றும், பதினறு வயதிலே தாய் தந்தையரோடு மதுரை சென்றாரென்றும், சொக்கலிங்கப் பெருமானைத் தரிசித்த பின்னர்ப் பெற்றோரோடு ஊர் செல்ல மறுத்தனரென்றும் கூறும்.

பரையில் வந்தவன், திருவாரூரில் ஞானப்பிரகாசனென்றிருக்கின்ருன்; அவனிடம் சென்று ஞானேபதேசம் பெறுவாயாக'' என்று சொல்லி மறைந்தனர். திரு ஆரூரிலும் ஞானப்பிரகாசரிடம் தோன்றி, "மதுரையினின்றும் நாளை திங்கட்கிழமை ஒரு பக்குவி வருகின்ருன்; அவனுக்குப் பேதமறத் தீக்கைசெய்து ஞானேபதேசம் செய்வாயாக'' என்று கட்டளையிட்டு மறைந்தருளினர். ஞானியும் சிவபெருஞ்சுடரது அருளை நினைந்து வழுத்தி அறிதுயிலிலமர்ந்தார்.

தனபதியோ கனவினின்றும் சாக்கிரத்தை யடைந்து, சொக்கலிங்கப் பெருமானது திருவருட்டிறத்தை வியந்து, எப்பொழுது விடியுமென்று எதிர்பார்த்திருந்தார். புலர்காலை யெழுந்து பொற்ருமரைத் தடத்தில் மூழ்கி, அப்பனையும் அம்மையையும் வணங்கி, விடைபெற்றுக்கொண்டு வழியிலுள்ள சிவதலங்களையெல்லாந் தரிசித்துத் திருவாரூரை அடைந்தார். கமலாலயமென்னுங் பெருந் தடாகத்தில் மூழ்கி, ஞானப்பிரகாசரது இல்லஞ் சேர்ந்து, ஞானசிரியரைக் கண்டு வணங்கி நின்று,

"கண்டேனிப் பாசங் கழிந்தே னமுதமுகந்
துண்டே சிவானந்தத் துள்ளிருந்தேன்—வண்டிமிர்காத்
தேனைப் பொழிகமலை செங்கமலப் பொற்பாதன்
ஞானப்ர காசனையே நான்''

என்று விண்ணப்பஞ் செய்தாரென்று மான்மியம் கூறும். ஞானப்பிரகாசர் வந்த சீடரையேற்று, அவரது பக்குவநிலையைச் சோதிக்க வெண்ணி இருக்கப்பணித்துப் பின் தம் காரியங்களைப் பார்த்து வந்தார். மாலையில் கர்மானுட்டானங்களை முடித்துக்கொண்டு வழக்கம்போலச் சீடர்களோடும் திருக்கோயில்சென்று புற்றிடங்கொண்ட பெம்மானையும், தியாகேசப் பெருமான் முதலாய கடவுளர்களையும் அடிபணிந்து மீண்டு இல்லமடைந்தார். இல்லினுட்புகுமுன் அடியவர்களை 'நிற்க' எனப்பணித்துத் தாம் தமது இல்லினுட் சென்ருர். அடியவர்களெல்லோரும் விடைபெற்ரேமென்று அவரவர் இல்லமேக, புதியவரான சிவிலிப்புத்தூர் அடியவர் மாத்திரம் குருவாணை கடக்க அஞ்சி நின்றவிடத்திலேயே நின்ருர். அன்றிரவில் கனத்த மழை பெய்ததேனும், அவர் மீது மழைத்துளி விழவே யில்லை; அவரை விட்டுச் சுற்றிலும் பெய்துசென்றது. மறுநாட் காலை இதனைக் கண்ட மற்றைச்சீடர்கள் இவ்வதிசயத்தைக் குருவினிடம் அறிவித்ததாகவும், சீடரது பக்குவ நிலையைக் கண்ட ஞானதேசிகர் அவருக்குத் திருநோக்கால் ஞானதீட்சை செய்து, ஞானசம்பந்தர் என்ற தீட்சாநாமஞ் சூட்டி, சொக்கலிங்கப்பெருமானை ஞானபூசையாக எழுந்தருள்வித்துக்கொடுத்தாரென்றும், அப்பொழுது,

"மதுரா புரிச்சொக்கன் ஞானப்ர காசன் கமலைமன்னன்
சதுரான காரியஞ் செய்தன னேயிந்தத் தாரணியில்
முதிரா விளம்பிஞ்சை நற்கனி யாக்கு முறைமையென்னே
எதிராம லேமறுத் தென்னையு மாட்கொண் டிருந்தனனே"

என்று துதித்ததாகவும் கூறுவர். இதனை யன்றி, **பண்டாரக் கலித்துறை, சிவபோகசாரம், கலிவெண்பா** முதலான நூல்களைப் பாடித் துதித்தனரென்றும் கூறுவர்.

இதற்கு மாறாக, தனபதி மதுரையில் வசித்தபோது, பலர் பொற்றாமரையில் நீராடி, குளக்கரையில் சிவபூஜை செய்வதைக் கண்டு, தாமும் அவ்விதமே செய்யவிரும்பினர்; சோமசுந்தரர் இவர் கனவிற்றோன்றித் தாம் இலிங்கவடிவாய்ப் பொற்றாமரையின் ஈசான மூலையில் காணப்படுவதாகவும், அதனையெடுத்து வழிபடச்சொன்னதாகவும் கூறுவர். அவ்வாறு இவர் பெற்றவுடனே **சோக்கநாதக் கலித்துறையைப்** பாடினரென்பர். பின்னர்த் தாம்பெற்ற சிவலிங்கத்தைப் பூசித்துய்தற் கேதுவாகிய சிவஞானோபதேசமும், அது செய்தருளுஞ் சிவாசாரியரையும் அனுக்கிரகித்தருளவேண்டுமென்று வேண்ட, ஆலவாயெம்பெருமான் கனவிற்றோன்றி, 'ஞானசம்பந்தா! திருவாரூரின்கண் சென்று, நமது உபதேச பரம்பரையில் வந்த ஞானப்பிரகாச தேசிகனிடத்தில் ஞானோபதேசம் பெற்று நம்மைப் பூசித்து வாழ்வாயாக' என்று கட்டளையிட்டதாகவும், அங்ஙனமே இவர் திருவாரூரடைந்து ஞானப்பிரகாசரிடம் ஞானோபதேசம் பெற்றதாகவும் ஞானசம்பந்த தேசிகர் சரித்திரசார சங்கிரகம் கூறும். தீட்சை பெற்ற பின்னரே தீட்சாநாமமும் சிவபூசையும் பெறுவது விதியாகலின், தீட்சைக்கு முன்னரே இவற்றைப் பெற்றனரென்பது பொருந்ாததொரு செய்தியாகும். மேலும்,

"திருந்திய சீவிலி புத்தூரில் ஞானத் திருவுருவாய்ப்
பொருந்துசொக் கேச ரதிகார மாய்வைத்துப் பூசைசெய்து
அருந்தவ ராகித் தரும புரத்தி லருள்புரிய
வருந்திரு ஞானசம் பந்தரும் பாண்டியன் மண்டலமே"

என்ற **பாண்டிமண்டல சதகச்** செய்யுளும் இவர் சொக்கலிங்கத்தை அதிகார உடையாராகப் பெற்றதை ஒருவாறு விளக்கும்.

இவ்வாறு அருள்பெற்ற ஞானசம்பந்தர் ஞானதேசிகரிடம் விடைபெற்றுத் தலயாத்திரை செய்து திரும்பிவந்து ஞானதேசிகரது விருப்பப்படி தருமபுரத்திற் றங்கிச் சிஷ்யகோடிகளுக்கு அருள் புரிந்து வந்தார். இன்றும் இந்தத் தருமபுர மடாதிபதிகட்கு அதிகார உடையாராகவிருப்பது சொக்கலிங்கமேயாம்.

(தொடரும்)




## சுத்த ஜலம்

### 2. நீரின் சகவாச தோஷம்

சுசி

(924-ம் பக்கத்தொடர்ச்சி)

உலகில் மேகங்கள் சுத்த ஜலத்தை மழையாகப் பொழிகின்றன. ஆனல் மழைநீர் பூமி மட்டத்தை யடையுமுன் ஆகாயத்திலுள்ள பல வாயுக்களோடும் ஆவிகளோடும் நகரங்களில் தொழிலாலைகளிலிருந்து வரும் புகைகளோடும் கலந்து அசுத்தப் படுகிறது. கடற் கரையில் மழைநீரில் உப்பும் குளோரின் வாயுவும் (*Chlorine*) கலந்திருக்கும். அம்மோனியா வாயுவும் (*Ammonia*) நைட்ரேட்டுக்களும் கலந்திருக்கலாம். ஓஸோன் (*Ozone*) என்ற அதிப் பிராணவாயு கலந்திருக்கும். தொழிலாலைகள் மிகுந்த நகரத்தில் மழைநீரில் ஸல்ப்யூரிக் ஆஸிட், ஹைட்ரோகுளோரிக் ஆஸிட், நைட்ரிக் ஆஸிட் (*Sulphuric acid, Hydrochloric acid, Nitric acid*) முதலிய அமிலங்களும் நைட்ரஸ் ஆக்ஸைட், கார்பன் மோனக்ஸைட் (*Nitrous oxide, Carbon monoxide*) முதலிய விஷ வாயுக்களும் துத்தம், ஈயம், தாமிரம் முதலிய உலோகங்களின் பஸ்மங்களும் கலந்திருப்பதைக் கவனித்திருக்கிறார்கள்.

பூமியில் விழும் மழையில் சிறிதளவு தரைமேலோடிச் சிற்ருறுகளாய்த் திரண்டு, பின் பெரிய நதிகளாய்க் கடலையோ ஏரிகளையோ அடைகிறது. அப்போது பூமி மேலுள்ள பல மண்களையும் அசுத்திகளையும் கரைத்துக் கொள்கிறது. அதில் நுண்ணுயிர் (*Microscopic life*) பெருகுகிறது. நதியின் மூலத்திலிருந்து முகத்துவாரம் வரை கவனித்தால் நிர்மானுஷ்யமான மலைப்பிரதேசங்களில் அதன் ஜலம் தெளிவாயும், ருசி, நிறம், மணம் அதிகமில்லாமலும் நுண்ணுயிர்கள் அதிகமில்லாமலும் இருக்கிறது. முகத்துவாரத்தை நோக்கி வரவர அசுத்தி பெருகுகிறது. பெரிய நகரங்களினருகில் அசுத்தி கணக்கில்லாமல் வந்தடைகிறது.

நுண்ணுயிர்கள் (*Microorganisms*) குளிர்ந்த ஜலத்தைவிட மிதமான சூடுள்ள ஜலத்திலும், சூரிய வெளிச்சம் எட்ட முடியாத ஆழங்களைவிட நீர் மட்டத்திலும், நிச்சலமான ஏரிகளைவிடச் சலனமுள்ள நதிகளிலும் ஓடைகளிலும் பெருகும் தன்மையுடையவை.

பூமிக்குள் உறிஞ்சப்படும் மழைநீர் அநேக உப்புக்களைக் கரைத்துக்கொண்டு ஊர்ந்தூர்ந்து தன் போக்கைத் தடுக்கும் பாறைகளையோ களிமண்ணையோ அடைந்து அங்கே தங்கி நிற்கிறது; அல்லது பள்ளத்துக்குப்போக வழியிருந்தால் அதைத் தேடிக்கொண்டு போகிறது. மனிதர்கள் கிணறு முதலிய வெட்டும்போது ஊற்றாகத் தோன்றுகிறது.

ஊற்றுநீர் மணற்பாங்கான பூமியினூடே வருமாயின் தெளிவாயிருக்கும். களிமண்ணிலூறிப் பின் பாறைகளிடை வெடிப்பு மூலம் வெளிப்படுமாயின் களிமண் துளிகள் சேர்ந்து கலங்கலாயிருக்கும். சில இடங்களில் ஊற்று நீர் வெளிப்படும்போது தெளிவாயிருந்தாலும் சற்று நேரம் கழித்துக் கலங்கிச் சிவப்பு, வெள்ளை, கருப்பு நிறங்களுள்ள பதார்த்தங்கள் பிரிந்து படியும். இவை இரும்பு (*Iron*), மாங்கனிஸ் (*Manganese*), மாக்நிஷியம் (*Magnesium*), இவற்றின் பஸ்மங்கள் (*Oxides*) அல்லது கார்பனேட்டுகளா யிருக்கலாம் (*Carbonates*). ஊற்றுநீர் பொதுவாய் நிறமற்றதாயினும் பீட் பூமியிலிருந்து (*Peaty soil*) கசியுமாயின் இரும்பு, மாங்கனிஸுடன் சம்பந்தப்பட்டுப் பழுப்பு நிறம் பொருந்தி யிருக்கும். 'பீட் பூமி' யென்றால் வன விருக்ஷங்களழிந்து பூமியிற் புதைந்து சாக பதார்த்தங்கள் ஜலத்திலமுகிக் கரியாக மாறியும் மாறாமலுமிருக்கும் தருணத்திலிருக்கும் நிலப்பரப்பைக் குறிக்கும்.

சாதாரணமாய் ஊற்று நீருக்கு மணமிராது. ஆனால் சில விடங்களில் மெதேன், ஹைட்ரஜன் ஸல்பைட், ஸல்பர் டையாக்ஸைட் (*Methane, Hydrogen sulphide, Sulphur dioxide*) என்ற வாயுக்கள் கரைந்திருப்பதாலும் பீட் சம்பந்தமிருப்பதாலும் மணத்தைப் பெறும். ஊற்று நீரின் ருசி அதிற் கரைந்திருக்கும் வாயுக்களையும் உப்புக்களையும் பொறுத்தது. இரும்பு, மாங்கனிஸ் என்ற உலோகங்களின் உப்புக்கள் கெட்ட ருசியை (எழுதும் மைபோன்ற ருசியை)க் கொடுக்கும். கரியமில வாயு நல்ல ருசியையும், ஹைட்ரஜன் ஸல்பைட் (*Hydrogen Sulphide*) என்ற வாயு துர்க்கந்தத்துடன் கெட்ட ருசியையும் கொடுக்கும்.

ஊற்று நீர், ஆற்று நீர் குளத்து நீரைவிடக் குளிர்ச்சியாயும், பொதுவாய்த் தெளிவாயும், ஆழத்திலிருந்து வருமாயின் நுண்ணுயிர் குறைவாயுமிருக்கும். ஏனெனில் பூமிக்குள் ஆழத்தில் நுண்ணுயிர்கள் வாழ வசதி குறைவாயிருக்கிறது.

மேற் கூறியதிலிருந்து வானிற் பிறந்த சுத்த ஜலம் மண்ணில் சகவாசத்தால் கெடாமலிருப்பது அரிது என்று விளங்கும்.

(தொடரும்)

# அணுவின் அமைப்பும் புதிய இரஸவாதமும்

கே. ஸி. வீரராகவையர்

(921-ம் பக்கத்தொடர்ச்சி)

**10. பொருட் சோதனை—ஸ்பெக்ட்ரம்.**

முதலாவது, தனிப்பொருள்கள் தம்முள் மாற்றமடைகின்றன என்பது அகண்டமான ஆகாசத்தில் சளையாது ஓடா நிற்கும் கிரகங்களை உற்று நோக்கிச் சோதித்துப் பெற்ற அறிவினின்றும் கிடைக்கின்றது. வஸ்துக்களின் குணங்களில் ஒன்றை ஸ்பெக்ட்ராஸ்கோப் என்ற கருவியால் அறிந்து அளக்கமுடியும். சூரிய கிரணங்களில் ஒன்றை ஒரு நுண்ணிய துவார வழியாக அடைந்து அதை ஒரு முக்கோண வடிவுள்ள பிரிஸ்ம் என்ற கண்ணாடி வழியாக ஊடுருவிச் செல்லச் செய்தால், படத்தில் காட்டிய படி அச்சூரிய கிரணம் பல வர்ணங்கள் (சிவப்பு, ஆரஞ்சு, நல்ல




1. சூரியகிரணச் சோதனை (ஸ்பெக்ட்ரம்)




படம்—2 வது. சூரியன் ஸ்பெக்ட்ரம்.

சி—ஊ—வர்ணப்பட்டையில் காணும் நிறங்கள்.

1. முப்பட்டைக் கண்ணாடி (பிரிசம்)
2. சூரிய கிரணங்கள் சன்ன துவாரத்தின் வழி வருவது.
3. அட்டையின்மேல் படும் வர்ணப்பட்டை அல்லது ஸ்பெக்ட்ரம்.

மஞ்சள், பச்சை, நீலம், மங்கின நீலம், ஊதா) கொண்ட ஸ்பெக்ட்ரம் என்ற படத்தைக் கொடுக்கிறது. சூரிய கிரணத்துக்குப் பதிலாக ஒரு ஜ்வாலையிலிருந்து வரும் கிரணத்தை மேற்காட்டிய மாதிரி சோதித்தால் அப்பொழுது ஸ்பெக்ட்ரம் படத்தில் பல கோடுகள் தெரிகின்றன; அந்த ஜ்வாலையில் கொஞ்சம் உப்பைச்சேர்த்து அப்பொழுது வருங் கிரணத்தைச் சோதித்தால், உப்பிலுள்ள சோடியம் (கட்டத்தில், அணு எண் 11) என்ற உலோகத்துக்கே உரிய சில கோடுகள் ஸ்பெக்ட்ரத்தின் மஞ்சள் பகுதியில் தெரிகின்றன. இவற்றைப் போன்ற கோடுகள் பின்பு வேறு ஒரு ஜ்வாலையைச் சோதித்ததனுல் கிடைக்குமாயின், நாம் அந்த ஜ்வாலையில் சோடியம் என்ற உலோகம் இருக்கவேண்டும் என்று ஊகிக்கலாம். இதே மாதிரி ஒவ்வொரு தனிப்பொருளுக்கும் உரிய கோடுகள் ஸ்பெக்ட்ரத்தில் கண்டுபிடிக்கப்பட்டு ஓர் அளவையில் வகுக்கப்பட்டிருக்கின்றன.



3. ஜ்வாலையில் உப்பைக் கலந்தால் கிடைக்தும் ஸ்பெக்ட்ரம்.

வெகு தூரத்திலுள்ள கிரகங்களினின்றும் நக்ஷத்திரங்களினின்றும் நமக்கு வரும் ஒளிக்கிரணங்களை ஸபெக்ட்ராஸ்கோப் என்ற கருவியால் சோதித்து அறிய முடியும். இந்தச் சோதனையில் தம் ஆயுள் நாளைச் செலவிட்ட கனம் நார்மன் லாக்கியர் (*Norman Lokhyer*) என்பவர் ஒரு சித்தாந்தத்தை வெளியிட்டிருக்கிறார். அதன் சாரம் பின் வருமாறு:—

**11. நக்ஷத்திரக் கிரணங்களின் ஸ்பெக்ட்ரம்-பொருள்மாறுபாடு.**

வலதுகைச் சுட்டுவிரலை இடது உள்ளங்கையில் பலமாகத் தேய்த்தால் சூடு ஏறுவதை நாம் எல்லாரும் உணரமுடியும்; இன்னும் கல்லொடு கல் உராய்ந்தால், தீப்பொறி கிடைப்பதைப் பார்க்கமுடியும்; சக்கிமுக்கிக் கல்லையும் எஃகையும் பலமாய் இடித்தால் தீப்பொறி கிடைக்கிறது. இதே மாதிரி, பெரும் பாறைகளாவது அல்லது மலைகளாவது ஒன்றுக்கொன்று மோதினால் அவைகளிற் சிறிதுபாகம் அங்கு உண்டாகிய சூட்டினால் இளகி ஆவியாக மாறும். இந்த மாதிரி ஆகாயவெளியில் பூமியைப்போன்ற பெரிய கோளங்கள் மோதி, வெகு வெகு தூரத்திலுள்ள மங்கிய நக்ஷத்திரக் கூட்டங்கள் போன்றவை உதிக்கின்றன; இவை கொடிய உஷ்ண நிலையிலுள்ளன; பின்னர்க் கொஞ்சம் கொஞ்சமாகச் சூட்டை இழந்து, குளிர்ந்து கடைசியில் கட்டிக் கோளங்களாகத் திகழ்கின்றன. முதலில் மோதிய கோளங்களில் இரும்பும் செம்பும் இருந்ததாக நினைத்துக் கொண்டோமானால், அவை மோதினதின் பலனாக ஏற்படும் மிக்க உஷ்ண நிலையில் ஆவியாக நிற்கும் கோளங்களிலும் முந்திய செம்பும் இரும்புமே இருக்கவேண்டும். ஆனால், புதுக் கோளங்களில் செம்புக்கும் இரும்புக்கும் பதிலாக வேறு தனிப் பொருள்களே தெரிகின்றன. உண்மையில், அநுபவத்தில் இந்த மாதிரிசம்பவங்கள் ஆகாயவெளியில் உண்டாவதைப் பொறுமைக்கே அணிகலமாக விளங்கும் பல வானசாஸ்திரிகள் பார்த்துச் சோதித்திருக்கிறார்கள். சரத்காலத்தில் இரவில் ஆகாயத்தில் தெளிவாகத் தோன்றும் நக்ஷத்திரங்களையெல்லாம், அவைகளினின்று வரும் ஒளிக்கிரணங்களை ஸ்பெக்ட்ராஸ்கோப்பைக் கொண்டு சோதித்ததன் பலனாக, வானசாஸ்திரிகள் அவைகளிலுள்ள தனிப்பொருள்களின் விசேஷத்துக் கேற்ப அவைகளை ஐந்து பிரிவுகளாக வகுத்திருக்கிறார்கள். அவை, தத்தம் சூட்டின் வித்தியாசத்துக்கு ஏற்றபடி இந்த ஸ்பெக்ட்ரம் கோடுகளைக் கொடுக்கின்றன. முதலாவது மிக்க ஜோதியுடன் விளங்கும் ஹீலியம் நக்ஷத்திரங்கள் ஒருவகை. அவைகளின் கிரணம் ஹைட்ரஜன், ஹீலியம், ஆக்ஸிஜன், நைட்ரஜன்,

மக்னீஷியம் முதலிய தனிப்பொருள்களின் ஸ்பெக்ட்ரம் கோடுகளைக் காட்டுகின்றன. இரண்டாவதுவகை நக்ஷத்திரங்கள் (ஸிரியஸ் போன்றவை) மிக்க பிரகாசத்தைக் கொடுப்பவை; அவைகளின் கிரணங்கள் இரும்புக்கனுகுணமான ஸ்பெக்ட்ரம் கோடுகளைத் தரு கின்றன. மூன்ருவது வகை சூரியனைப் போன்ற கோளங்கள்; அவை களின் கிரணம் பல உலோகங்களின் ஸ்பெக்ட்ரம் கோடுகளைக் காட்டு கின்றன. நான்காவதுவகை விருச்சிக இராசியிலிருக்கும் கேட்டை நக்ஷத்திரத்தைப்போன்றவை; அவைகளின் ஸ்பெக்ட்ரம் படத்தில் முன் சொல்லிய உலோகங்களும் டிபானியம் என்ற உலோகமும் மிகுதியாகக் காணப்படுகின்றன. ஐந்தாவதாக, மிகக் குளிர்ந்த பழமையான நக்ஷத்திரங்கள் உள; இவைகளில் கரி, கால்ஸியம் முதலிய பல உலோகங்கள் தெரிகின்றன. இந்த ஐந்துவகை நக்ஷத் திரங்களல்லாமல், நேபுல என்ற நுண்ணிய, மங்கின ஒளியுடன் கூடிய நக்ஷத்திரக் கூட்டங்கள் பல உள. இவைகளின் ஒளிக்கிர ணத்தை ஸ்பெக்ட்ராஸ்கோப் மூலமாகச் சோதித்தால், ஹைட்ரஜ னுக்கு உரித்தான ஒரு கோடும், இப்புவியில் கிடைக்கும் பொருள் களுக்கு உரியனவாகத் தோன்ருத இரண்டுகோடுகளும் ஸ்பெக்ட் ரம் படத்தில் தெரிகின்றன. ஆகவே, இந்த நேபுல நக்ஷத்திரக் கூட்டங்களே காலக்கிரமத்தில் குளிர்ந்து முன்சொல்லிய ஐந்து வகை நக்ஷத்திரங்களாக முறையே மாறுமானல், எப்படி நேபுலப் பொருள்கள் மற்ற நக்ஷத்திரங்களில் காணப்படும் ஹிலியம், ஆக்ஸி ஜன், மக்னீஷியம், இரும்பு, முதலிய பொருள்களாக மாறுகின்றன என்ற கேள்வி ஆராயத்தக்கதாக உளது. இன்னும் குளிர்ந்த நக்ஷத்திரங்கள் மோதி, சூடுண்டு, மிக்க ஜோதியாய் நேபுல நக்ஷத்தி ரங்களாய்ப் பிறக்கும்போது, முன்சொல்லிய உலோகப்பொருள்கள் எப்படி ஹைட்ரஜன் முதலிய நுண்ணிய பொருள்களாய் மாறுகின் றன என்ற கேள்வியும் எழுகிறது. இவைகளைச் செவ்வனே விளக்கு வதற்காக, தனிப்பொருள்கள் ஒன்றுக்கொன்று மாறுபடுகின்றன என்று ஊகிக்கவேண்டியிருக்கிறது. அதாவது, லக்ஷக்கணக்கான மைல்களுக்கப்பாலுள்ள கோளங்களின் ஒளிக்கிரணங்களின் குணங் களை ஸ்பெக்ட்ராஸ்கோப் மூலமாகச் சோதித்ததிலிருந்து, அவ் வகண்ட வானவெளியில்கோளங்கள் மோதிப் புதுஆவிப்பொருள்கள் பிறக்கின்றன என்றும், பின்னர் நீராவி நமது உலகில் காலக்கிரமத் தில் மழைத்துளியாய் விழுவதுபோல், அப் புது ஆவிப்பொருள்கள் குளிர்ந்து மிகுந்த எடையுள்ள புதுக்கட்டிப் பொருள்களாய் பல கற் பங்களில் ஏற்படுகின்றன என்றும் ஊகிக்கக் கிடக்கின்றன. மனிதனது

முயற்சி சிறிதும் இல்லாத வானவெளியில் இரஸவாதம் நடப்பது போலத் தோன்றுகிறது. நிற்க.

நமது உலகில் நமது சமீபத்தில் இம்மாதிரியான மாறுபாடு ஏதாவது நிகழ்கிறதா என்பதை ஆராய்வோம்.

12. கிரணச் சுறுசுறுப்பு-யுரேனியம், ரேடியம்.

1896-ம் வருஷத்தில் பிரான்ஸ் தேசத்து அறிஞர் பேகிகரல் என்பவர் யுரேனியம் உட்கொண்ட சேர்க்கைப் பொருள் ஒன்று கருங்காகித உறைக்குள்ளிருந்த போட்டோ எடுக்கும் கண்ணாடியை விகாரப் படுத்தியதைக் கண்டார். இம்மாதிரி விகாரப்படுத்தும் வினையை அவர் ரேடியோ ஆக்டிவிட்டி (*Radio activity*) என்றார். அதாவது சூரிய கிரணங்களுக்கு ஒப்ப, இந்தச் சேர்க்கைப் பொருள் போட்டோக் கண்ணாடியைப் பாதித்ததனாலே, அந்த வினை கிரணச் சுறுசுறுப்பு எனப்பட்டது. 1898-ம் வருஷத்தில் ஸ்ரீமதி குயுரே (1867) என்ற அறிவாளியும் ஷிமிட் என்ற அறிஞரும் தனித்தனியே தோரியம் சேர்க்கைப்பொருள்களும் மேற்சொல்லிய கிரணச் சுறுசுறுப்புக் குணத்தைக் காட்டுகின்றன என்று தெரிவித்தார்கள். பின்னர், ஸ்ரீமதி குயுரே என்பவள் யுரேனியம் அடங்கிய சிலகனிப் பொருள்கள் யுரேனியம் சேர்க்கைப் பொருள்களைவிட நான்கு மடங்கு அதிகமான கிரணச் சுறுசுறுப்பைக் காட்டுவதாக அறிந்தாள். ஆதலின் யுரேனியம் கனிப்பொருளில் கிரணச் சுறுசுறுப்பு அதிகம் வாய்ந்தபொருள் வேறு இருக்கவேண்டுமென்று ஊகித்து, இரவும் பகலுமாகச் சோதனை சாலையில் பொறுமையுடன் வேலைசெய்து, பிச்பிலேண்ட் என்ற கனிப்பொருளிலிருந்து போலோனியம், ரேடியம் என்ற இரண்டு சிறந்த தனிப்பொருள்கள் முறையே கொண்ட சேர்க்கைப் பொருள்களைப் பிரித்து எடுத்தாள். இம் முயற்சியில் பெரிதும் உதவிய தன் ஆசிரியரைக் (1859-1905) கல்யாணம் செய்துகொண்டாள். இவளது கணவர் இறந்தபொழுது அவரது போதனைப் பதவியை இவளது திறத்தை மெச்சி இப்பெண் மணிக்கே அக்கலாசாலை நிர்வாகிகள் 1906-ல் அளித்தார்கள். இவளது அபூர்வ அறிவு விசேஷத்தைப் புகழ்ந்து நோபல் வெகுமதி ஒரு



ஸ்ரீமதி குயுரே.

தரம் 1903-ல் பௌதிக சாஸ்திரச் சார்பாகவும், இரண்டாம் முறை 1911-ல் ரசாயன சாஸ்திரச் சார்பாகவும் அளிக்கப்பட்டுள்ளது. ஒரு கோடி தோலா பிச்பிலேண்ட் கனிப்பொருளில் ஒரு தோலா எடை ரேடியம்தான் இருக்கிறது. வைக்கோல் போரில் ஊசியைப் பொறுக்குவது போல, இந்த நுண்ணிய பொருளைப் பிரித்தெடுத்தது அப்பெண்மணியின் பொறுமையையும் விடாமுயற்சியையும் என்றும் குறித்து நிற்கும். இதுவரையும் உலகத்திலேயே சுமார் ஐந்துதோலா எடை ரேடியம்தான் பிரித்தெடுக்கப்பட்டிருக்கின்றது. இதை இக்காலத்து நாகரத்னம் என்று சொல்லலாம். இதன் விலை மிகுதியையும் வேறுபாட்டையும் பின் உள்ள அட்டவணையால் அறியலாம் :—

| | | | |
|---|---|---|---|
| 1904-ல் | ஒரு தோலா எடை | ரேடியம் விலை .... | 45,000 பவுன். |
| 1912-ல் | ஷை | ஷை | ... 5,50,000 பவுன். |
| 1923-ல் | ஷை | ஷை | ... 1,65,000 பவுன். |
| 1928-ல் | ஷை | ஷை | ... 1,32,000 பவுன். |

இப்பேர்ப்பட்ட ரேடியத்தின் குணங்கள் அதிசயிக்கத்தக்கனவாகவே இருக்கின்றன. ரேடியம் எப்பொழுதும் (இரவிலும்) ஒளி வீசுகின்றது; சுற்றுப் பக்கத்திலுள்ள சூட்டைப் பார்க்கிலும் சிறிது மேலான சூட்டு நிலையிலே உள்ளது; போட்டோக் கண்ணாடியைப் பாதிக்கவல்லது; அதனின்றும் மூன்று விதமான கிரணங்கள் (படத்தில் காட்டியபடி) நமது முயற்சி யில்லாமலும், நம்முடைய முயற்சியால் எவ்விதத்திலும் பாதிக்கப்படாமலும், வெளியே வந்துகொண்டே இருக்கின்றன. இந்தக் கிரணங்களை ருதர்போர்ட் என்ற அறிஞர் ஆராய்ந்ததில், அவைகளில் ஒன்று ஹிலியம் அணுக்களைப் போன்றதென்றும், இரண்டாவது வெகு வேகத்துடன் வெளிவருவதென்றும் எலக்ட்ரான்களைப் போன்றதென்றும், மூன்றுவது ராண்ட்ஜன் கிரணங்களைப் போன்றதென்றும் தெரிய வந்தன. இவைகள் முறையே ஆல்பா, பீட்டா, காமா கிரணங்களென்று அழைக்கப்படுகின்றன. ஆல்பா கிரணங்கள் காந்த சக்தியால் இடது பக்கம் தள்ளப்படுகின்றன; பீட்டா கிரணங்கள் வலது பக்கமாகத் தாழ்ந்து சாய்க்கப்படுகின்றன; காமா




4. ரேடியத்தின் ஆல்பா பீட்டா காமாக் கிரணங்கள் காந்த சக்தியால் பிரிதல்.

கிரணங்கள் காந்த சக்தியினுல் பாதிக்கப்படாமல் நேரே செல்கின்றன. (படத்தைப் பார்க்க.) இதேமாதிரி தோரியம், யூரேனியம் தனிப் பொருள்களும் மாறுபாடடைகின்றன. இவைகள் ஹிலியம், எலக்ட்ரான் என்பவைகளை இழந்து புதுப்புதுப் பொருள்களாய் மாறிக் கடைசியில் காரீயம் என்ற தனிப்பொருளைத் தருகின்றன; இவைகளினின்று கிடைக்கும் காரீயத் தனிப்பொருளின் அணுவின் எடை, நாம் சாதாரணமாக அர்த்தங்கொள்ளும் காரீயத்தின் அணுவின் எடையிலிருந்து வேருகத் தோன்றுகிறது. இதிலிருந்து காரீய அணுக்கள் சிறிது சிறிது பேதித்த எடைகளுள்ளவைகளாய்த் தோன்றக்கூடும் என்று தெரிகின்றது. 1803-ம் வருஷத்தில் டால்டன் ஒரு தனிப்பொருளின் அணுக்கள் எல்லாம் ஒரே எடையுள்ளன என்று வெளியிட்டார்; நூறு வருஷங்களுக்குப் பின்னர் அது சரியில்லையென்று ரூபிக்கப்பட்டுள்ளது. நிற்க.

1903-ம் வருஷத்தில் ரேடியத்தின் அதிசயமான குணங்களை விளக்குவதற்கு அறிஞர்கள் ருதர்போர்டும், சாடியும் ஒரு ஊகத்தை வெளியிட்டார்கள்: அணுக்களின் தாரதம்மிய எடைக் கட்டத்தை நோக்கினுல், இந்தக் கிரணச் சுறுசுறுப்பு வாய்ந்த தனிப்பொருள்கள் உயரிய அணு எடைகளை உடையனவாய்த் தெரியும். அவைகளின் அணுக்கள் கொஞ்சம் கொஞ்சமாக உள் அமைப்பு மாறி, கிரணங்களை இழந்து, புதுப்பொருள்களைப் பெருக்கிக் கடைசியில் காரீய அணுவாய் அமைகின்றன என்று விளக்கினுர்கள். உதாரணமாக, யுரேனியம் (92, 238) மூன்று ஹிலியம் அணுக்களை இழந்து, வரிசை எண் 88-ம் எடை எண் 226-ம் கொண்ட ரேடியம் அணுவாய் மாறி, பிறகு ஒரு ஹிலியம் அணுவை இழந்து வரிசை எண் 86-ம் எடை எண் 222-ம் கொண்ட ரேடானைத் தருகின்றது; பின்னர் இன்னும் மூன்று ஹிலியம் அணுக்களை இழந்து வரிசை எண் 74-ம் எடை எண் 210-ம் கொண்ட போலோனியமாக மாறுகிறது; கடைசியாக மற்றும் ஒரு ஹிலியம் அணுவை இழந்து

வரிசை எண் 82-ம் எடை எண் 206-ம் கொண்ட காரீய அணுவாக முடிவடைகின்றது. இதேமாதிரி தோரியமும் செய்கின்றது. அவைகளின் இந்தச் செய்கையைக் கூட்டவோ குறைக்கவோ அறிஞர்களால் இதுவரையில் சாத்தியமாகவில்லை. ஆனால், அவைகளும் இடைவிடாது இம்மாதிரி சலித்துக்கொண்டு இருக்கின்றன.

13. இரஸவாதம் பலிக்குமா ?

(1) அகண்ட வானவெளியில் ஒளிரும் கோளங்கள் மோதிக் கிடைக்கும் நேபுல நக்ஷத்திரங்களில் சிறு அணு எடைகளுள்ள தனிப்பொருள்கள் இருப்பதனாலேயும், அவை குளிரக் குளிர அச்சிறு அணு எடைத் தனிப்பொருள்கள் பெரிய அணு எடை உள்ள தனிப் பொருள்களாக மாறுவதாலேயும், (2) யுரேனியம், ரேடியம் போன்ற தனிப்பொருள்களின் கிரணச் சுறுசுறுப்பினாலே அவை சிறு அணு எடை உள்ள தனிப்பொருள்களாய் மாறுவதனாலேயும் தனிப் பொருள்கள் ஒன்றினின்று மற்றொன்று கிடைப்பது, அதாவது, இரஸவாதம் பலிப்பது, முடியுமெனத் தோன்றுகிறது. ஆனால், இந்த வித்தை அறிஞர்கள் ஆளுகையில் இன்னும் சிக்கவில்லை. இவ்வித இரஸவாதத்தைப் சோதனசாலைகளில் அறிஞர்களால் இயற்ற முடியுமா என்ற கேள்வி சென்ற இருபத்தைந்து வருஷகாலமாய் ஆராயப்பட்டு வருகிறது. இந்த ஆராய்ச்சியைச் சிறிது விளக்குவேன்.

14. சக்திப்பிரயோகங்கள். உஷ்ணம் (1).

சோதன சாலைகளில் முக்கியமாய் உபயோகப்படும் சக்திகள் (1) உஷ்ணமும், (2) மின்சாரமும்; சமீபத்தில் சில தனிப்பொருள்களிலிருந்து கிடைக்கக்கூடிய (3) கிரணச் சுறுசுறுப்பையும் உபயோகித்திருக்கிறார்கள். தனிப்பொருள்களில் அநேகம் உறுதியாகவே யுள; அவைகளைத் தகர்த்தெறிவதென்றால் சிரமமான காரியம். இந்தக் காரியத்துக்கு உஷ்ணம் அவ்வளவு அனுகுணமானதல்ல; ஏனென்றால் நமது சோதனசாலைகளில் மின்சார சக்தியைக்கூட உபயோகித்து உலைகளில் அடையக்கூடிய உன்னத உஷ்ண நிலை 4,000 டிகிரி வரைதான்; ஆனால் வானவெளியிலுள்ள நக்ஷத்திரங்களிலிருந்து வரும் கிரணங்களை ஸ்பெக்ட்ராஸ் கோப் உதவிகொண்டு சோதித்தறிந்ததிலிருந்து, அவைகளில் சில 30,000 டிகிரி உஷ்ணநிலையில் இருப்பனவாகத் தெரிகிறது. அந்த உஷ்ண நிலையை நாம் நமது சோதனைச் சாலைகளில் அடைதல் அரிது; ஆகவே அந்தரத்தில் நடக்கும் இரஸவாதச் செயல்களை நாம் உஷ்ண சக்தியின் மூலமாய் நமது சோதன சாலைகளில் செய்தல் முடியாத காரியமாகும்.

(தொடரும்)

# பிராணிகள் தாமே உண்டாகுமா?

வி. ஆர். துரைஸ்வாமி சாஸ்திரி

(608-ம் பக்கத்தொடர்ச்சி)

ஆதியில் பிராணிகள் எப்படி உண்டாயின? பல மதங்கள் சொல்வதென்ன? கிருஸ்துவ வேதமாகிய பைபில் என்பது, தெய்வம் உருவமில்லாத பூமியையும், பிறகு ஆகாயத்தையும், பிறகு நிலம் நீர் புல் செடிகளையும், பிறகு சூரிய சந்திரர்களையும், பிறகு நீர் வாழ்வனவற்றையும், பறவைகளையும், கடைசியில் ஊர்வன ஆடுமாடு மிருகங்கள் ஆண் பெண் மனிதரையும் சிருஷ்டித்ததாகக் கூறுகின்றதாம். ஹிந்து வேதமாகிய உபநிஷத் என்பது, தெய்வம் (ஆதிபூதம்) முதலில் ஆகாயத்தைச் சிருஷ்டித்ததாகவும், ஆகாயத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து அக்னியும், அக்னியிலிருந்து ஜலமும், ஜலத்திலிருந்து பூமியும், பூமியிலிருந்து ஒஷதிகளும், ஒஷதிகளிலிருந்து அன்னமும், அன்னத்திலிருந்து புருஷனும் (ஆத்துமாவும்) உண்டாயினவென்றும் கூறுகிறது. இந்த இரண்டு மதங்களும், பிராணன் என்பது தெய்வத்திலிருந்தே வந்ததென்று கூறுதலைத் தவிர, பிராணனில்லாத மண், மட்டை போன்ற பொருள்கள் பிராணிகளாயினவென்று சொல்லவில்லை.

இதனைக் குறித்து நாம் ஐரோப்பா, அமெரிக்கா தேசத்து சாஸ்திரிகள் (*Scientists*) சொல்வதைக் கவனிப்போம். அவர்கள் சொல்வதும் சில விஷயங்களில் சில மதங்கள் கூறுவதை ஒத்திருக்கின்றது. அவர்கள் சொல்வதென்னவென்றால், முழுப் பிரபஞ்சத்திற்கு ஆதியும் அந்தமும் இல்லை. காலம் இடம், இவைகளுக்கும் ஆதியுமில்லை, அந்தமுமில்லை. உலகத்தில் எவ்வளவோ சூரியனும் சந்திரனும் இருக்கின்றன. இன்னும் நமக்குத் தெரியாத அநேகம் உலகங்கள் இருக்கக் கூடும். இந்த உலகங்களுக்கெல்லாம் ஒரு குணம் உண்டு. ஒவ்வொன்றும், தன்னைத் தானேயோ, அல்லது மற்ற உலகங்களையோ சதா சுற்றிக் கொண்டே இருக்கும். ஆனால் அவை எப்படி உண்டாயின வென்றாவது, யார் அவற்றைச் சிருஷ்டித்தார் என்றாவது நமக்குத் தெரியாது. மற்றவை எப்படி உண்டான போதிலும் பூமி உண்டான விஷயத்தில் சந்தேகமே இல்லை. முன் ஒரு காலத்தில், கோடானு கோடி வருஷங்களுக்கு

முன் நமது சூர்யனிடமிருந்து ஏதோ ஒரு சிறு அணுப்பாகம் எப்படியோ சிதறிப்போய் வேறாகக் கோடானு கோடிமைல் தூரத்திற்கப்பால் வந்து சுற்றிக் கொண்டிருந்ததாம். பூமியிலிருந்து சூர்யனுக்குள்ள தூரம் அநேககோடி மைலாகும். பூமி அவ்வளவு தூரத்திலிருந்தும் சூர்ய உஷ்ணம் நம்மால் பொறுக்க முடியவில்லை. ஆகையால் சூர்யன் என்பது அதி உஷ்ணத்தால் சதா எரிந்து கொண்டேயிருக்கும் ஓர் உலகமாகும். பூமி எந்தத் தனிப்பொருள்களால் செய்யப் பட்டது? பொன், வெள்ளி, ஈயம், இரும்பு, ரஸம், நாகம், கரி, மணல் (*Silica*), சுண்ணும்புச் சாரம் (*Calcium*), கந்தகம், கரியமிலவாயு, பிராணவாயு இப்படி அநேக தனிப்பொருள்கள் (*Elements*) ஒன்றேடொன்று சேர்ந்து இருப்பதேயாம். சூர்யனிடத்திலும் இதே பொருள்கள் இருப்பதாகச் சூர்ய வெளிச்சப் பரிசோதனையால் (*Spectrum analysis*) தெரிய வருகிறது.

பூமியானது ஆதியில் சூர்யனிடத்திலிருந்து வந்ததால் அக்காலத்தில் பூமியானது 10,000 டிக்ரிக்கதிகம் உஷ்ணமாயிருந்ததாம். அதில் அப்பொழுது உயிருள்ள பிரயாணிகள் இருந்திருக்க முடியாது. பூமியானது இப்படி ஆகாயத்தில் நெடுங்காலம் சுற்றிக் கொண்டிருக்கும்பொழுது, நீராவி குளிர்ச்சியால் நீராக மாறுவதைப்போல் வாயுவாய் எரிந்து கொண்டிருந்த பொருள்கள், குளிர்ச்சியடைந்து திரவமாக மாறின. இன்னும் இவ்வாறே அநேக காலம் குளிர்ச்சியடைந்தபிறகு, நீரானது சீதத்தால் பனிக்கட்டியாக மாறுவது போலத் திரவமாயிருந்த பூமி சில பாகம் கெட்டி நிலமாக மாறிற்று; சில பாகம் நீராகவே நின்றது. இப்படி அநேக கோடி வருஷங்களுக்கப்பால்தான், பிராணிகள் உண்டாயின. ஆனல் எல்லாப் பிராணிகளும் ஒரே காலத்தில் உண்டாயினவா? அல்லது பல காலங்களிலா? எந்தப் பிராணி முன் வந்தது? சாஸ்திரிகள் சொல்வது என்ன வென்றால்:—முதல் முதல் பூமியில் உண்டான ஜீவராசிகள் தமது கண்ணுக்குப் புலப்படாத வெகு சிறு ஜீவாணுக்களாம் (*Unicellular plants and animals*). இவை உண்டாய் அநேக லக்ஷம் வருஷங்கள் வரையில், பூமியில் ஜீவாணுக்களின் பிரஜைகளைத் தவிர வேறு பிராணிகள் இருக்கவில்லை. சில ஜீவாணுக்கள் ஜீவாணுக்களாகவே இருந்தன. மற்றும் சில சிறு புழுக்களாக மாறின. இப்படி அநேக வருஷம் ஜீவாணுக்களும் புழுக்களும் தவிர வேறு பிராணிகள் உலகத்திலிருக்கவில்லையாம். அநேக ஆயிரம் வருஷங்களுக்கப்பால் சில புழுக்கள் நத்தை நண்டு பூச்சிக்களாகவும் சில மீன்களாகவும் மாறினவாம். இன்னும் அநேக ஆயிரம் வருஷங்களுக்கப்பால் சில மீன்கள் தவளை

களாகவும், சில ஓணான்களாகவும் ஆயினவாம். பிறகு சில ஓணான்கள் பறவைகளாகவும் மாறினவாம். இது வரையில் பூமியில் ஆடு மாடுகளோ குரங்குகளோ மனிதர்களோ உண்டாக வில்லை. அநேக ஆயிரம் வருஷங்களுக்கப்பால் ஓணான் போன்றவைகளில் சில ஆடு, மாடு, பூனை, புலி, குரங்குகளாக ஆயினவாம். இன்னும் அநேக ஆயிரம் வருஷங்களுக்கப்பால்தான், சில காட்டுக் குரங்குகள் மனிதக்குரங்குகளாகவும், அவற்றில் சில ஆதிக் காட்டு மனிதனாகவும் மாறினவாம். பிராணிகளின் ஜனனக் கிரமம் (*Evolution*) இப்படியாம். இது நம்பக்கூடியதல்ல; மனிதன் குரங்கிலிருந்து உண்டானான் என்றால், எல்லோருக்கும் நகைப்பு உண்டாகும்; கோபமும் வரும். ஆனால் இது முற்றிலும் நிஜமாகும். இதை மூன்று காரணங்களால் நிரூபிக்கலாம். அவையாவன:—

1. புதை பட்ட பிராணிகளின் சேஷங்கள் (*Fossils*): மழை ஜலம் ஆற்றில் போய்ச் சேருகிறது. ஆற்று வெள்ளமானது சேற்றையும் அதில் புதைந்திருக்கும் பிராணிகளின் கெட்டியான மேல் ஓடு, பல், எலும்பு ஆகிய இவைகளையும், சமுத்திரம் அல்லது பள்ளமான இடங்களில் அடித்துக் கொண்டு போய்ச் சேர்க்கிறது. அடுத்த வருஷத்தில் போகும் சேறும் பிராணிகளின் அங்கங்களும் முன் வருஷத்துச் சேற்றின்மேல் படிகின்றன. இப்படி வருஷந்தோறும் அடித்துப் போகும் சேறும் அதிலுள்ள பிராணிகளின் அங்கங்களும் அடுக்கடுக்காகக் கிடக்கின்றன. பூகம்பம் போன்ற காரணங்களால் பூமியில் சமுத்திரமாயிருந்த சில பாகம் நிலமாகவும், நிலபாகம் சமுத்திரமாகவும் மாறுவதைப் பார்க்கிறோம். ஆகையால் சமுத்திர பாகமாவது, பள்ளங்களாவது வற்றிக் கெட்டி நிலமாகும். காய்ந்த அந்தப் பூமியை வெட்டிப் பார்த்தால் புதைபட்டுள்ள பிராணிகளின் அங்கங்களைக் காணலாம். நாள் பட்ட பிராணிகளின் அங்கங்கள் அடிப்பாகத்திலும், பிற்பட்டு இறந்த பிராணிகளின் அங்கங்கள் அதன் மேலும் புதைந்திருப்பது தெரிய வரும்.

அநேக தேசங்களில் பூமியை நூறு அல்லது இருநூறு அடி ஆழம் பல இடங்களில் வெட்டிப் பார்த்திருக்கிறார்கள். அப்பொழுது எல்லாவற்றிற்கும் அடியிலிருக்கும் தரையில் பிராணிகளின் அடையாளமே காணப்படுவதில்லை. அதற்குச் சற்று மேலிருக்கும் தரையில் பூச்சிகள் மீன்கள் இவற்றின் உறுப்புக்கள் மட்டுமே அகப்படுகின்றன. அடுத்த மேல்மட்டத்தில் மேற்கூறிய பிராணிகளோடு தவளை, ஓணான் இவைகளின் உறுப்புக்கள் மட்டுமே காணப்படுகின்றன. இதன் மேல், பறவைகளும் ஆடு

மாடுகளின் எலும்புகளும் தெரிகின்றன. இதற்கு மேல், யானை குரங்குகளின் அடையாளங்கள் நின்றன. எல்லாவற்றிற்கும் மேலுள்ள தரையில் மட்டுமே ஆதியிலுண்டான காட்டு மனிதனது மண்டை ஒடு காணப்படுகின்றது. இவற்றிலிருந்து, பூமி ஆரம்பத்தில் பிராணிகள் இல்லையென்றும், பிராணிகள் உற்பத்தியான பொழுது ஆதியில் ஜீவாணு, கிருமி, புழு, இம்மாதிரியே யிருந்தனவென்றும், இவைகளில் சில, பல காரணங்களால் வேறு வேறு உயர்ந்த பிராணிகளாயினவென்றும், மனிதன் எல்லாப் பிராணிகளுக்கும் பின்புதான் உண்டாயினன் என்றும் அறிகிறோம். பூமியை வெட்டும்பொழுது காணப்படும் பல தரை மட்டங்களையும், அவை உண்டான காலங்களையும், அவற்றில் புதைந்துள்ள பிராணிகளின் சேஷங்களையும் அடியில் காட்டியுள்ள அட்டவணையிலிருந்து சுலபமாய்த் தெரிந்து கொள்ளலாம்.

| தரை மட்டம். | காணப்படும் பிராணிகள். |
|---|---|
| 10000 வருஷங்களுக்கு முன் உண்டான தரை மட்டம் | மனிதன் மனிதக் குரங்கு குரங்கு ஆடு மாடு பூனை புலி பறவை ஆமை பல்லி ஓணான் தவளை மீன் புழு. |
| 20,000 | குரங்கு ஆடு மாடு பூனை புலி பறவை ஆமை பல்லி ஓணான் தவளை மீன் பூச்சி புழு. |
| 30,000 | ஆடு மாடு பூனை புலி பறவை ஆமை பல்லி ஓணான் தவளை மீன் பூச்சி புழு. |
| 50,000 | பறவை ஆமை பல்லி ஓணான் தவளை மீன் பூச்சி புழு. |
| 75,000 | ஓணான் தவளை மீன் பூச்சி புழு. |
| 100,000 | தவளை மீன் பூச்சி புழு. |
| 200,000 | மீன்கள் பூச்சிகள் புழுக்கள். |
| 300,000 | புழுக்களும் ஜீவாணுக்களும். |
| 500,000 | ஜீவாணுக்கள். |
| 1000,000 | பிராணிகள் இல்லை. |

2. பிராணிகளின் வரலாறு (*Life history of animals*):

இக்காலத்தில் பூமியில் அநேகம் பிராணிகள் காணப்படுகின்றன. இவற்றின் வரலாறுகள் யாவை? எல்லாம் கடுகிலும் சிறிய ஒரு

கரு முட்டையிலிருந்தே (*Feritilised egg*) உண்டாகின்றன. கருவானது உண்டு வளருவதற்கு அதைச் சுற்றி மஞ்சள் பிசினும் (*Yolk*) வெள்ளைப் பிசினும் (*Albumen*) இருப்பதால் முட்டையானது பார்வைக்குப் பெரியதாகத் தோன்றுகிறது. பூச்சி, மீன், தவளை, பல்லி, பாம்பு, பறவை போன்ற பிராணிகள் தத்தம் கரு அடங்கிய முட்டைகளை வெளியில் இடுகின்றன. கரு வளருவது தாயினுள்ளல்ல; வெளியே முட்டைகள் பொரிந்து குஞ்சுகள் வெளி வருகின்றன. ஆனால் ஆடு, மாடு, நாய், குரங்கு, மனிதன் இவைகள் கருவை வெளியில் இடுவதில்லை. தாயின் கர்ப்பப்பையினுள் இருந்து கொண்டே தாயின் இரத்தத்தின் வழியாய் ஆகாரத்தை உட்கொண்டு வளர்ந்து சில காலங்களுக்கப்பால் குஞ்சாக வெளி வருகின்றன.

ஒணான், ஆடு, மாடு, குரங்கு, மனிதன் போன்ற பிராணிகளின் கருக்களையும், அவை வளரும்பொழுது காணப்படும் பல ரூபங்களையும் பார்த்தால் அநேக ஒற்றுமைகள் தெரிகின்றன.



பிராணிகளின் வளர்ச்சிக் கிரமம்.

கர்ப்பம் தரித்தவுடனே எல்லாப் பிராணிகளின் கருவும் கடுகு போன்ற ஜீவாணுக்களாக இருக்கின்றன. பத்து நாட்களுக்கப் பால் அவை யாவும் வளர்ந்து புழு மாதிரி ஆகவும், பின்னும் சில நாட்களுக்கப்பால் மீன் மாதிரி ஆகவும், அப்பால் ஓணன் மாதிரியும், அப்பால் குரங்கு மாதிரியும், கடைசியில் மனித ரூபமாயும் காணப் படுகின்றன. மேல்சொன்ன எல்லா ரூபமான மாறுதல்களும் எல்லாப் பிராணிகளின் கருக்களுக்கும் கிடையாது; மனிதனுக்கு மட்டுமே உண்டு. மீன்கரு மீன் உருவம் வரையில் வளர்ந்து பிறகு மீனாய்ப் பிறந்து விடும்; குரங்கின்கரு குரங்கு ரூபத்தோடு நின்று விடும். கரு வானது குஞ்சாய் மாறப் பிராணிகளுக்குத் தக்கபடி ஒரு மாதமோ பத்து மாதமோ செல்லும். புதுப் பிராணிகள் முதலில் கருவாயிருப் பானேன்? அவற்றின் தாய் தந்தைகளைப் போலவே ஏன் தாயி லிருந்து உண்டாக்கப்பட்டன? பத்து மாதம் வரையில் ஏன் ஜீவா ணுவை போலும் பிறகு புழுப்போலும், பிறகு மீன் போலும் பிறகு ஓணன் போலுமிருந்து, பிறகு தாய் தந்தை ரூபமெடுத்துக்கொள்ள வேண்டும்? இவ்வாறு ஆவது இயற்கையான ஒரு பொது ஜீவ சட் டத்தாலேயே. ஒவ்வொரு பிராணியும் முற்காலத்தில் அதன் பூர்வ பிதுருக்கள் சென்ற மார்க்கத்தைச் சுருக்கமாகக் காண்பிக்கும் என் பது சட்டம்; அதாவது ஒவ்வொரு பிராணியும் கருவிலிருந்து குஞ்சாகும் சொல்ப நாட்களுக்குள் அதனதன் இனத்தார் பூர்வ காலத்தில் வேறு வேறு பிராணிகளின் ரூபங்களாக அநேக ஆயிரம் வருஷங்கள் இருந்து பிறகு தம் ரூபமாய் மாறின விருத்தாந்தத்தைச் சுருக்கிக் காண்பிப்பது ஆகும்.

3. தேக அமைப்பு (*Parts of body*): நாம் எல்லோரும் மனிதர்கள் அல்லவா? நாமே நம்மையும் மற்றப் பிராணிகளையும் சோதித்தால், அநேக ஒற்றுமைகள் இருப்பது தெரியவரும். ஆனல் நாமும் புழுக்களும், அல்லது நாமும் குரங்களும் ஒரே வர்க்கத் தைச் சேர்ந்தவர்கள் என்று சொல்வதற்கு நாம் வெட்கப்படு கிறோம். இப்பொழுது செவ்வாய் (*Mars*) போன்ற வேறு கிர கத்திலிருந்து யாராவது இந்தப் பூமிக்கு வந்து, மனிதனையும் மற்றப் பிராணிகளையும் உற்றுப் பரிசோதனை செய்தால் அவனுக்குப் புலப்படுவது என்ன? அற்பமான சில வித்தியாசங்கள் நீங்கலாகப் பெரும்பாலும் ஒத்திருக்கின்றன என்பதாம். மனிதன் உட் பட எல்லாப் பிராணிகளும் நடமாடுகின்றன. எல்லாம் ஆகாரம் உட்கொள்ளுகின்றன. எல்லாம் மல ஜல விஸர்ஜனம் செய்கின் றன. எல்லாம் மூச்சு விடுகின்றன. எல்லாம் குஞ்சு குட்டிகளிட்டு வம்சவிருத்தி செய்கின்றன. கடைசியில் எல்லாம் மரணமடை கின்றன. மனிதனையும் மற்றப் பிராணிகளையும் உட்பாகம் சோதனை

செய்தால், எல்லாவற்றிற்கும் தோல் மாம்சம் ஆகாரக் குழாய் மூத்திராசயம் சுவாசகோசம் புலன்கள் இருதயம் பீஜம் மூளை இவைகள் இருக்கின்றன. ஆனால் சில வித்தியாசங்களும் காணப்படுகின்றன. புழுவிற்கு இருதயத்தில் ஒரே அறையும், மீனுக்கு இரண்டும், ஓணானுக்கு மூன்றும், ஆடு மாடு குரங்கு மனிதர்களுக்கு நான்கு அறைகளும் உண்டு. தவிர, மனிதன் மூளையில் பாகங்கள் சற்று அதிகமாய் வளர்ந்துள்ளன. அவனுக்கு அறிவு சற்று அதிகம். இதனால் மனிதனின் சரீரமும், மற்றப் பிராணிகளின் சரீரமும் ஒரே ரீதியாகச் (*Plan*) செய்யப்பட்டிருக்கின்றன என்பதும், மனிதனும் மற்றப் பிராணிகளும் ஒரே ஜீவ வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் என்பதும் தெரிகின்றன. மனிதன் ஆதியில் மனிதனாகவே உண்டாகவில்லை.

இதுவரையில் நாம் தெரிந்துகொண்டவை பூமியில் ஆதியில் உண்டானது ஜீவாணுரூபமென்பதும், அவற்றிற் சில, பலபல வேறு பிராணிகளின் ரூபங்களாய் வர வர மாறி வந்தன வென்பதுமே. ஆனால் ஆதியில் வந்த அந்த ஜீவாணு எதிலிருந்து உண்டாயிற்று? அதற்கு ஜீவன் என்பது எப்படி வந்தது? இவற்றின் காரணத்தை ஐரோப்பிய சாஸ்திரிகளும் சொல்ல முடியவில்லை. பூமியிலுள்ள அநேக மூலப்பொருள்கள் (*Elements*) சேர்ந்துதான் ஜீவன்கள் உண்டாயிருக்கவேண்டுமென்று சொல்லுகிறார்கள். இது எப்படி யென்றால், ரசாயன சாஸ்திரிகள் (*Chemists*) என்பவர்களிடம் நாம் எந்த வஸ்துவைக் கொடுத்தாலும் அதைப் பரிசோதனைச் சாலையில் பரிசோதித்து அந்த வஸ்துவில் உள்ள மூலப்பொருள் (*Elements*) இன்ன இன்னவை என்று சொல்லிவிடுவார்கள். உதாரணமாக ஜலமானது ஜலவாயு (*Hydrogen*), பிராணவாயு (*Oxygen*) என்ற இரண்டு வாயுக்கள் கூடி ஆனதென்றும், உப்பில் சோடியம் (*Sodium*), க்லோரின் (*Chlorine*) என்ற ஆதிப்பொருள்கள் இருக்கின்றனவென்றும் சொல்லி விடுவார்கள். ஒரு பிராணியைக் கொடுத்தால் அதன் தேகத்தில் இன்ன மூலப்பொருள்கள் (*Elements*) அடங்கியிருக்கினவென்றும் சொல்லி விடுவார்கள். அவ்வாறு பரிசோதனை செய்யும்பொழுது அப்பிராணி இறந்துவிடும். இறந்த தேகத்தில் உள்ள பொருள்களைத்தான் சொல்ல முடியும். அப்படி எல்லாப் பிராணிகளின் தேகத்திலுள்ள பொருள்களையும் பரிசோதித்திருக்கிறார்கள். சில வித்தியாசங்கள் தவிர எல்லாப் பிராணிகளின் தேகப்பொருளும் (*Protoplasm*) ஒரே தன்மையனவாம். நூறு பாகத் தேகப்பொருளில் அடங்கிய (*Elements*) மூலப்பொருள்கள் பின் காட்டப்படுகின்றன:

| | |
|---|---|
| கரி (*Carbon*) | 52 |
| ஜலவாயு (*Hydrogen*) | 7 |

| | |
|---|---|
| பிராண வாயு (*Oxygen*) | 21 |
| உப்பு வாயு (*Nitrogen*) | 15 |
| கந்தகம் (*Sulphur*) | $\frac{1}{25}$ |
| பொடாசியம் (*Potassium*) | $\frac{1}{4}$ |
| கால்சியம் (*Calcium*) | $\frac{1}{4}$ |
| மக்னீசியம் (*Magnesium*) | $\frac{1}{4}$ |
| அக்னி பாஷாணம் (*Phosphorus*) | $\frac{1}{4}$ |
| ஜலம் (*Water*) | $\frac{24}{25}$ |
| மற்றவை (*Others*) | 3 |
| | 100 |

தேகத்தில் காணும் இப்பொருள்கள் எல்லாம் பூமியில் உள்ளவையாகும். ஆகையால் பூமியே பிராணியாயிற்று. முன் ஒரு காலத்தில் பூமியிலுள்ள இப்பொருள்கள் ஜீவன்களின் தேகத்தில் காணப்படும் அளவில் பல இடங்களில் சேர்ந்தனவென்றும், அப்பொழுது, மின்சாரம் போன்ற ஏதோ ஒரு சக்தி அதன் மேல் பட்டதென்றும், அப்பொழுது அந்த மூலப்பொருள்கள் சேர்க்கைக்கு உயிர் என்பது உண்டாயிற்றென்றும் சொல்லுகிறார்கள். ஆனால் நீங்கள் பின் வருமாறு கேட்கக் கூடும்: "நாம் இந்த மூலப்பொருள்களைச் சரியான அளவில் சேர்த்து ஏன் ஜீவன்களைச் செய்ய முடியாது?" அப்படிச் செய்ய அநேக ரசாயன சாஸ்திரிகள் வெகு தடவை பார்த்திருக்கிறார்கள். தேகத்திலுள்ள மூலப்பொருள்களை அதே அளவில் சீசாவில் போட்டு மின்சாரம் போன்ற பல சக்திகளைக் கொடுத்துப் பார்த்திருக்கிறார்கள். ஆனால் அவைகளை ஜீவனுள்ள பிராணியாக மாற்ற முடியவில்லை.

இவைகளிலிருந்து நாம் தெரிந்துகொள்வன: ஜீவன்களின் தேகத்திலுள்ள பொருளுக்கும், பூமியிலுள்ள ஜீவனில்லாத பொருள்களுக்கும் வித்தியாசமில்லை யென்பதும், ஜீவனில்லாத பொருள்களே முன் ஒரு காலத்தில் சேர்ந்து ஜீவப்பிராணிகளாயின என்பதுமே. ஆகையால் நீங்கள் ஜீவனில்லாத ஆதிப்பொருள்கள் முன் காலத்தில் பிராணியானதுபோல் இக் காலத்தில் ஏன் ஆகக்கூடாது என்று கேட்கலாம். அவ்விதம் ஆகலாம்; ஆனால், புழு, ஒணான், ஆடு, மாடு போன்ற அதிக அங்க அபிவிருத்தியுள்ள பிராணிகள் தாமே உண்டாவதில்லை ; அவற்றின் தாய் தந்தைகளிலிருந்தே உண்டாகின்றன. ஆனால் ஆதிகாலத்தில் உண்டான ஜீவாணுக்கள் மாத்திரம் இப்பொழுதும் பல இடங்களில் உண்டாகலாம்.

# புராதன மனிதனது வாழ்க்கையும் வழக்கங்களும்

எம். டி. ராகவன்—பி. என். அப்புஸ்வாமி



பூமியின்கண் உள்ள சகல ஜீவராசிகளின் சரிதத்தையும் ' பரிணமம் ' என்ற ஒரே மொழியில் அடக்கிவிடலாம். அதை ஆங்கிலத்தில் ' இவலூஷன் ' என்று கூறுகிறார்கள். அம்மொழிக்கு 'விரித்தல்' என்பது பொருளாம். ஆகவே 'இவலூஷன்' என்னும் மொழிக்குப் பல யுகங்களாக நிகழ்ந்துவரும் உயிரின் சரிதத்தைக் கூறுகின்ற சுவடியின் சுருளை விரிப்பதென்பதுதான் பொருள். இன்று இப்பூமியிலே நாம் அனைவரும் இருக்க நேர்ந்தது எப்படி என்பதைச் சொல்லும் கதைதான் அது. பரிணம சரிதத்தை நாம் அறிந்துகொண்டா லன்றி நம்மையே அறிந்துகொண்டவர்கள் ஆகமாட்டோம். ஒன்றுமில்லா வெறும் பாழினின்று உயிர்தோன்றி மனிதனை எப்படி வளர்ந்துவிட்டது என்பதை அறிந்துகொண்டால், இயற்கை நமக்கு இடும் புதிர்கள் அனைத்தையும் விண்டுவிடலாம். புராதன மனிதனைப்பற்றி ஆராயத் தொடங்குமுன், மனிதன் இவ்வுலகத்தில் தோன்றுவதற்கு முன்பே இவ்வுலகத்தில் இருந்த உயிரின் சரிதத்தைச் சற்றுச் சுருக்கமாகக் கவனிப்போம்.

உயிரின் பிறப்பும் மாறுபாடுகளும்.

இடம் காலம் என்னும் இவற்றின் வயிற்றில் பிறந்தது உயிர். மிகவும் கீழ்த்தரமான, மிகவும் சாமானியமான, தாவர உயிர்கள்தாம் இவ்வுலகில் தோன்றிய உயிரின் முதன்முதற் சுடர்கள். இவை காலாந்தரத்தில் எண்ணிறந்த வகைகளாய்ப் பரிணமித்து விரிந்தன. அவ்வாறு தோன்றிய ஒவ்வொரு தாவரமும் அண்டையிலுள்ள தாவரத்தைவிடத் தான் மேம்பாடடைய வேண்டுமென்று முயன்றது. ஆகவே தாவரவர்க்க உயிர்கள் அனைத்தும் பிராணதாரப்போராட்டம் என்று சொல்லப்படுகிற வாழ்க்கைப்போரில் தலையிட்டுக்கொண்டன. ஒவ்வொன்றும் தான் தங்கி உயிர்வாழ்வதன் பொருட்டு மும்முரமாய்ச் சண்டை செய்தது. தாவரவுயிர் தோன்றிய பின்னர்ப் பூமியில் தோன்றிய பிராணிகள் யாவும் நீந்துவன

வாயும், நகர்வனவாயும், ஊர்வனவாயுமே இருந்தன. நமது பூமியிலே லக்ஷக்கணக்கான வருஷங்களாய் கோடைக்காலம் நீடித்திருந்தது. இக் கோடை வெப்பத்திலே செழித்து வளர்ந்த ஊர்வனவெல்லாம் வலிமிகுந்து அரசுபுரிந்தன. அதன்பின் குளிர்காலம் அலைபோல மீண்டும் மீண்டும் வந்து கொண்டே இருந்தது. அதன் அலை ஒவ்வொன்றும் நூறாயிரக்கணக்கான வருஷகாலம் நீடித்திருந்தது. அலைதோறும் அலைதோறும் குளிரானது மேன் மேலும் மிகுந்துகொண்டே வந்தது. குளிர் தாங்கத் திறமையில்லாத எண்ணிறந்த உயிர்ப்பிராணிகள் ஒரே அடியாக ஒருமிக்க அடித்துக்கொண்டு போகப்பட்டன. குளிர்காலம் அலை யலையாக வரவே, உணவுப் பொருளும் குறைந்து கொண்டே வந்தது. உயிர்வாழ்வது மிகவும் அரிய காரியமாக ஆகிவிட்டது. சிற்சில இடங்களில் உரம் மிகுந்த சிற்சில பிராணிகளுக்குக் குளிர் பழகிப் போய் அவை குளிரைத் தாங்கி நின்றன. வேறு சில பிராணிகள் மிகமிக நீண்ட யாத்திரையைச் செய்து ஊர்ந்து ஊர்ந்து, அபாயமில்லாத பிற கண்டங்களை நாடி அடைந்து, இன்றளவும் சந்ததி முறையில் பத்திரமாய் உயிர் வாழ்ந்திருக்கின்றன. அதனால் தான் முதலைகள் ஆமைகள் போன்ற பெரிய பல்லியினப் பிராணிகளை நாம் இன்றளவும் பார்க்கமுடிகிறது. பல நிறமான கட்டங்களையுடைய சூதாடு பலகையைப் போல, பல திறப்பட்ட இவ்வுலக வாழ்க்கையிலேயே அகப்பட்ட பிரமாண்டமான அளவினவாயிருந்த நிலப்பிராணிகளும் கடற்பிராணிகளும் போனவிடம் தெரியாது ஒரே அடியாய் அடித்துக்கொண்டு போய்விடப்பட்டன. அவற்றுள் சிற்சிலவற்றின் எலும்புகள் காட்சிச்சாலைகளை நிறைத்துக்கொண்டு கிடப்பதைமட்டிலும் நாம் இக்காலத்தில் பார்க்க முடிகிறது. அப்பிராணிகளை உயிரோடு நாம் பார்ப்பதற்கே இல்லை.

நீண்ட காலமாக நிலைத்திருந்த இப்பனிகாலம் ஒருவாறாக நீங்கியதும் கடலின் கரைகளிலும் பூமியின் சமவெளிகளிலும் கோடைக் காலமானது தோன்றலாயிற்று. அப்பொழுது ஊரும் பிராணி ஒன்றின் ஒரு முட்டையினின்று சூடுள்ள இரத்தத்தையுடைய ஸ்தன்னியபான ஜந்து ஒன்றானது எவ்வாறோ விபரீதமாகத் திடீரென்று முதன் முதலில் தோன்றிற்று. இப்பிராணிக்கு ஆங்கிலத்தில் 'மாம்மல்' என்று பெயர். இப்பெயரானது ஸ்தனத்தைக் குறிக்கும் ஒரு லத்தீன் மொழியினின்று வந்தது. உடலைப்பற்றி அறிந்துகொள்ளுவதற்கு, உயிரினத்துள் முதன் முதலில் தோன்றிய முதுகெலும்பை ஆராய்வது எப்படி அவசியமோ, அதுபோலவே சூடுள்ள இரத்தத்தைப்பற்றித் தெரிந்துகொள்ளுவதற்கு முதன் முதலாக அமைந்த

உண்மை யிருதயத்தை நாம் ஆராய்வதும் அவசியம். அரைகுறை யான பழைய இருதயத்தை மாற்றிக்கொள்ளாதிருந்த ஊர்வன வெல்லாம், வெளியேறும் வழியற்ற முடிவில்லா முடுக்கை ஒத்த இயல்பினவாய், குளிர்ந்த இரத்தத்தையும் மந்தமான இரத்த ஓட்டத்தையும் உடையனவாகவே இருந்து வருகின்றன. அவற்றை விட்டுவிட்டுச் சீரான இருதயத்தை அமைத்துக்கொண்ட ஸ்தன்னிய பான ஜந்துக்கள் மேன்மேலும் உயர்வடையத் தொடங்கின. ஊர்வன வமிசத்தில் பிறந்த சின்னஞ்சிறிய ஸ்தன்னியபான ஜந்துக்கள் வளர்ந்து, முதிர்ச்சியடைந்து, இனம்பெருகி, அளவிலும் நிறத்திலும் ஆயிரக்கணக்கான வகைகளில் மாறி உலகிலுள்ள திக்குக்கள் எங்கும் பரவின. ஆப்பிரிக்காவில் பரவிற்று ஒரு தொகுதி. ஆஸ்திரேலியாவில் பரவிற்று மற்றொரு தொகுதி. அக்காலத்திலே ஆப்பிரிக்காவும் ஆஸ்திரேலியாவும் இந்தியாவும் ஆகிய இவை எல்லாம் நீரினுல் பிரிக்கப்படாத ஒரே நிலப்பரப்புக் கண்டமாகவே இருந்தன. பிறகு, பூமியின் மேற்பொருக்கானது தூக்கியெறியப்பட்டபோது ஏற்பட்ட குழப்பங்களால், ஆஸ்திரேலியா ஒரு புறமாகவும் ஆப்பிரிக்கா மற்றொரு பக்கமாகவும் பிரிந்துபோயின. ஆஸ்திரேலியாவில் வாழ்ந்துவந்த விசித்திரமான சிற்சில ஸ்தன்னியபான ஜந்துக்கள் உலகத்திலுள்ள பிற உயிரினங்களினின்று பிரிவுபட்டுவிட்டன. நாற்புறமும் கடல் சூழ்ந்த தம் தனி உலகிலே, வெளியேறும் வழியற்ற இடத்தில் புகுந்தவரைப்போல, தாம் சென்ற நெறியைவிட்டுச் சிறிதும் மாருது அப்படியே வாழ்ந்து வந்தன. இவற்றினின்று பிரிவுபட்ட ஸ்தன்னியபான ஜந்துவமிசங்கள் பிறவெல்லாம் கடலைத்தாண்டி இவை வாழ்ந்துவந்த தீவை அடையமுடியவில்லை. விநோதமான வடிவமுள்ள ஆஸ்திரேலியா ஜந்துக்கள் இன்றும் உருவமாறுபாடின்றிப் பழைய வடிவத்துடன் காணப்படினும், ஆப்பிரிக்கா ஆசியாக் கண்டங்களிலுள்ள பிராணிகள் தம் பண்டைவடிவங்களைமாற்றி, தமது வமிசத்திலே பரிணும ஏணியிலே அடுத்துள்ள உயர்படியை முயன்று முயன்று பெற்றன; நூற்றுக்கணக்கான போக்குக்களி லெல்லாம் விருத்தியடையத் தலைப்பட்டன; தம்முள் வேறுபடுகின்ற அனேக இனங்களாகப் பிரியத் தொடங்கின.

முதலில் தோன்றிய அப் பிராணிகளெல்லாம் சிறிய உருவமுள்ளவைகளாகவே இருந்தன. அவற்றுள் பெரும்பான்மையன மரங்களின் மீது வாழ்ந்துவந்தன. காலம் செல்லச் செல்ல, அவைகளின் உருவங்கள் பெரியவாகி வந்தன. அப்பொழுது அப் பிராணிகளிலே பெரிய வடிவங்களைப் பெற்ற சிற்சில பிராணிகள் தைரியமாய் மரங்களை விட்டுக் கீழிறங்கி மண்ணின் மீது வாழத்

தொடங்கின. ஸ்தன்னியபான ஜந்துக்களெல்லாம் முதன்முதலில் தாவரபக்ஷணிகளாகவேதான் இருந்தன. வெகு காலத்துக்குப் பின்பு, ஏதோ ஒரு சமயம், பெரியபிராணி ஒன்று சிறியபிராணி ஒன்றைத் தன் வாயில் கௌவியபோது அதன்பிடி சற்று இறுகவே, வாயிலகப்பட்ட சிறு பிராணியானது சற்று நசுக்கப்பட்டிருக்க வேண்டும். அப்பொழுது அதன் உடலின் சாறு பெரும்பிராணியின் நாவில் பட்டிருக்கவேண்டும்; அப் பெரும்பிராணியும் அந்தச்சுவையை நற்சுவை என்று எண்ணியிருக்கவேண்டும்; பின்பு அச் சுவையையே நாடி யிருக்கவேண்டும். அது முதலாகத்தான் மாமிசபக்ஷணம் ஏற்பட்டிருக்கவேண்டும். இப்படித் தற்செயலான நிகழ்ச்சியால்தான் மாமிசபக்ஷணமுறை முதன்முதலில் தோன்றியிருக்க வேண்டும். வரவரச் சிற்சில பிராணி வமிசங்கள் புது இறைச்சி உணவை மட்டிலுமே விரும்பத் தொடங்கின. மாமிசபக்ஷணிகள் தாவர பக்ஷணிகளைத்தேடி வேட்டையாடிப் பிடிப்பதிலே தமது நேரத்தைக் கழிக்கலாயின. ஆதலால் அவ்வாறு இரையாகக் கருதப்படும் தாவர பக்ஷணிகளின் கால்கள் அதிவேகமாய் ஓடுதற்கு ஏற்றபடி நன்றாக மேன்மேலும் வளர்ந்து வந்தன. கூரிய பற்களையும் கிழிக்கின்ற நகங்களையும் உடையனவாய்த் தம்மைத்துரத்திப் பற்றிக்கொல்லும் பிராணிகளினின்று தப்பி ஓடிப்போக விரும்பிய தாவர பக்ஷணிகள் தமது கால்களிலிருந்து தடுக்கும் ஐந்து விரல்களையும் அதிவேகமாய் ஓடுவதற்கேற்ற, கட்டியான, உருண்டை வடிவமுள்ள, குளம்பாக மாற்றி அமைத்துக்கொண்டன. இதனிடையில் மாமிச பக்ஷணிகளும் தாம் ஊர்வனவாயிருந்த காலத்திலே பெற்றிருந்த நகங்களை வளர்த்துத் தீட்டிப் பற்றிக்கிழிப்பதற்கேற்றபடி செவ்வைப்படுத்திக் கொண்டன. பெரியவையான நாயினமும் பூனையினமும் தனியான வெவ்வேறு இனங்களாக நன்கு பிரிந்துவிட்டன.

குதிரைகள் ஒட்டகங்கள் முதலிய மிருகங்களைப் பொம்மை போன்ற சின்னஞ்சிறிய அளவிலே இயற்கைத் தாயானவள் உண்டாக்கிப் பார்த்து விநோதமடைந்துகொண்டிருக்கும் காலங்களிலேயே, ஆசியா ஆப்பிரிக்கா கண்டங்களிலுள்ள பெரிய காடுகளிலே மரத்துக்கு மரம் தாவிக்குதித்துப் பலவகைப் பழங்களை உண்டு வாழ்ந்து, ஐந்து கைவிரல்களையும் நீண்ட வாலையும் உடைய சின்னஞ்சிறிய குரங்குக் குடும்பங்களை இயற்றிப் பரீக்ஷை பார்க்கும் தொழிலையும் அவள் சுறுசுறுப்பாய் நடத்தி வந்தாள். வாலில்லாக் குரங்குக்கு அடுத்தபடியாயுள்ள லீமர் என்னும் பிராணியையே அவள் தேர்ந்தெடுத்துப் பரீக்ஷை செய்தாள். லீமர் என்னும் மொழிக்கு அருவம் (பேய்) என்பது பொருள். இந்தச் சாதிப்

பிராணிகள் இரவில் உலவுவதாலும், இவை நடக்கும்போது சந்தடியே கேட்காததாலும், இவற்றுக்கு அப்பெயர் இடப்பட்டது. அருவங்கள் மானுடவடிவத்தை விளக்கியும் விளக்காமலும் காட்டி அருவருக்கத் தக்க வடிவங்களையுடையனவாய் இருப்பதுபோலவே, இவைகளும் நமது பண்டைக்கால வடிவத்தை விளக்கியும் விளக்காமலும் காட்டுகிற குருபிகள். ஆதலால் பரிணமம் ஏற்படாதிருந்தால் நாமும் இத்தகையனவாய்த்தான் இருந்திருப்போம் என்பதைக் காட்டவல்ல அருவத் தோற்றமுடையவை இவை என்பாரும் உண்டு.

இக்காலம்வரை உயிர் எப்படி வளர்ந்து பரிணமித்து வந்தது என்பதை ஆராய்வது எளிதாகவே இருந்தது. இங்கு வந்ததும் மனிதனை எப்படி அது பரிணமம் அடைந்தது என்னும் இரகசியத்தை இயற்கைத் தாய் நமக்குச் சொல்ல மறுக்கிறாள். பூமியிலே வெகுகாலமாகப் புதைபட்டுக் கிடந்து தற்காலத்திலே கண்டுபிடிக்கப்பட்டு வரும் சிற்சில புராதனப் பொருள்களிலிருந்து பொறுக்கி எடுத்துத் துண்டு துண்டாக அறிவாளர் ஒட்டவைத்திருக்கிறதைத்தான் நாம் மனிதருடைய பரிணம சரித்திரமென்று சொல்லுகிறோம். மனிதன் எப்படித் தோன்றினான் என்னும் விஷயத்தை விளக்குவதில் இப் புதைபொருள்கள் மிகவும் பயன்படுகின்றன. எனினும், மனிதனைப்போன்ற குரங்குக்கும் குரங்கைப்போன்ற மனிதனுக்கும் இடையே உள்ள விளக்கமற்ற வெற்றிடமொன்று இதுவரையும் மறைபொருளாகவே இருக்கிறது. மனிதன் வேறு, விலங்கு வேறு என்று வகுக்கும் கடைவாயிலைத் தாண்டுகின்ற, இவ்விரண்டு இனங்களுக்கும் பொதுவான மூதாதையாகின்ற, உயிர்ப்பிராணியானது இன்னதுதானென்று நாம் இன்றுவரை கண்டு பிடிக்கக் கூடவில்லை.

**புராதன மானுட சேஷங்கள்.**

புதை பொருள்களாய் இன்றளவும் காணக்கிடக்கின்ற புராதன மனிதருடைய சேஷங்கள் இன்ன இன்ன என்பதைப்பற்றிச் சுருக்கமாய்க் கவனிப்போம். மனிதனது மூதாதையர்களான வாலில்லாக் குரங்குகளுக்கும் மனிதனுக்கும் இடையேயுள்ள இடைவெளியைச் சிறிதளவு நிரப்புவது என்று கருதத்தகும் புது விஷயமானது முதன் முதலாக உஷ்ணப் பிரதேசத்தில்தான் கண்டு பிடிக்கப்பட்டது. 1891-ம் வருஷத்திலே ஜாவாத்தீவிலுள்ள ட்ரினில் என்னும் இடத்திலே, முந்திய பிளீயேஸ்டோசீன் யுகத்திலே, படிந்த நதி வண்டலிலே, பிரொபஸர் தூபாய் என்பவரால்தான் அது முதலிலே கண்டு பிடிக்கப்பட்டது. மண்டையோட்டின் மேற்பாகம் (கூரை) ஒன்றும், கடைவாய்ப்பற்கள் இரண்டும், தொடை எலும்பு ஒன்றும்

படம் 1.

மண்டை ஓட்டின் சிகரம்மேலிருந்து தோற்றுவது. | ஜாவா தொடை எலும்பு. | தற்காலத் தொடை எலும்பு.




மண்டை ஓட்டின் சிகரம்-பக்கத் தோற்றம்.

கடைவாய் பற்கள்.

(1037-ம் பக்கத்தைப் பார்க்க).

படம் 2.



பிதிகாந்துரோபஸ்.

(1037-ம் பக்கத்தைப் பார்க்க).

படம் 3.




மனிதரும் குரங்குகளும் நிமிர்ந்து நிற்பது எப்படி ?

(1037-ம் பக்கத்தைப் பார்க்க).

படம் 4.



பில்ட்டௌன்.

(1039-ம் பக்கத்தைப் பார்க்க).

ஆகிய இவற்றைத்தான் அவர் கண்டெடுத்தார். (படம். 1) இவை யாவும் ஒரே யொருவனுடைய சேஷங்கள்தாம் என்று நாம் எண்ண வேண்டியிருக்கிறது. கிப்பன் குரங்குகளையும் மனிதனையும் ஒன்ருகப் பிணைக்கும் சங்கிலியின் பல வளையங்களுள் இதுவும் ஒன்று என்று தூபாய் கருதுகிருர். இவ்வெலும்புகளை யுடைய மனிதனுக்கு அவர் 'பிதிகாந்துரோபஸ் எரேக்டஸ்' அல்லது (நிமிர்ந்து) 'நடக்கும் குரங்கு மனிதன்' என்று பெயரிட்டார். (படம். 2) அந்த மண்டை யோட்டின் கூரையானது தணிந்த உச்சியையும் முன்புறமாகப் புடைத்த புருவவரம்புகளையும் உடையதாய் இருக்கிறது. இக்காலத்திலும் ஜாவாத்தீவில் வாழ்ந்து வரும் கிப்பன் குரங்குகளின் மண்டை யோட்டை அது மிகவும் ஒத்திருக்கிறது. ஆயினும், அது குரங்குகளின் மண்டையோட்டைக்காட்டிலும் பெரியதாயிருக்கிறது. மனிதரது மூளையளவு என்று கருதத்தகும் வரம்புக்குள்ளே கிடக்கத் தக்கதாயிருக்கிறது அந்த ஓட்டுக்குள் இருக்கக்கூடிய மூளையின் அளவு. இதைத்தவிர, மானுட ஓடுதான் இது என்று உறுதியாகச் சொல்லப் போதுமான வேறுசில சின்னங்களையும் இது உடையதாய்க் காண்கிறது. ஆனல் மேற்கூறிய கடைவாய்ப் பற்களோவெனில், கிப்பன் குரங்கின் பற்களையே மிகவும் ஒத்தனவாயும் மனிதப்பற்களை அவ்வளவு ஒவ்வாதனவாயும் இருக்கின்றன. தொடையெலும்பானது நிமிர்ந்த நடையையே குறிக்கின்றதெனினும், அது மனித அமிசத்தை முற்றிலும் உடைய எலும்பாக இல்லை. வாலில்லாக் குரங்குக்கும் மனிதனுக்கும் இடையேயுள்ள சங்கிலியில் அது ஒரு முக்கியமான தொடராயிருந்தபோதிலும், அப்பிராணியானது மனிதனுடைய மூதாதைதான் என்று சொல்லுதற்கில்லை. மண்டை ஓட்டைப்பார்த்தால் குரங்கின் அமிசந்தான் மிகுந்திருக்கிறது; மூளையும் மிகக்குறைவாக வளர்ச்சியற்றுத்தான் இருந்திருக்க வேண்டும்; ஆனல் நடைமட்டிலும் நிமிர்ந்து விட்டது.

மனிதனும் வாலில்லாக் குரங்குகளும் எப்படி நிமிர்ந்து நடக்கின்றன என்பதை இந்தச் சந்தர்ப்பத்திலே தெரிந்துகொள்வது நலம். (படம். 3) மனிதனது உடலிலும் வாலில்லாக்குரங்குகளின் உடலிலும் தோள் எலும்புகள் முதுகெலும்போடு பொருத்தப்பட்டிருக்கின்றன. நாய்போன்ற நாற்கால் பிராணியிலோவெனில், அவை அவ்வாறு முதுகெலும்போடு சம்பந்தம் உடையனவாக இருப்பதில்லை. ஆதலால்தான் நாற்கால் ஜந்துவுக்கு நிமிர்ந்து நடக்க முடியவில்லை. மனிதனுடைய முன்னங்கால்கள் நடக்கும் தொழிலினின்று விடுபட்டுப்போனது மிகவும் ஆச்சரியமான விஷயம். அநேக வகைகளாக அவன் மேம்பட்டிருப்பதற்கு அதுதான் முக்கியகாரணம்.

வாலில்லாக் குரங்கின் உடலானது மனிதன் உடலைப்போல் அவ்வளவு நேராக நிமிர்ந்து நிற்கவல்லதல்ல. ஆதலால் தன் உடல் சாய்ந்துவிழாதபடி தன் கைகளைக்கொண்டு அது அடிக்கடி தன்னைத் தாங்கிக்கொள்ளவேண்டியிருக்கிறது. நமது குழந்தைகள் தத்திப் பொத்தி நடக்கும்போது தமது கைகளை உபயோகிப்பதுபோலவும், வயது மிகுந்து வலியற்றுப்போன கிழவன் தன் கைத்தடியை உபயோகிப்பது போலவும், இக்குரங்குகளும் தாம் தள்ளாடிக் கீழே விழுந்துவிடாதபடி தம் கைகளைத் தாங்குகருவிகளாக உபயோகித்து வருகின்றன. முதுகெலும்பின்மேல் நடுவாக நேராக மனிதனுடைய தலையானது பொருத்தப்பட்டிருக்கிறது. ஆதலால், நேராகப் பொருத்தப்படாத கனத்த தலையையும் முன் புடைத்துக்கொண்டிருக்கிற பெரிய தாடைகளையும் உடைய குரங்கின் உடலிலே அதை நிமிர்த்திப் பிடித்துக்கொள்ளுவதற்காகப் பெரிய தசையானது ஏற்பட்டிருக்கிறது. மனித உடல் எளிதில் நேராக நிற்கவல்லதாகையால் இத்தசையானது அவனுக்கு அவசியமில்லை. ஆதலால் மனித உடலில் இத்தகைய தசை காணப்படுவதில்லை.

ஐரோப்பாவில் நடந்தேறிய மனித வாழ்க்கைச் சரித்திரத்தை ஆராய்வோருக்கு பில்ட்டௌன் மண்டையோடு இதைவிட முக்கியமானது. பிராணியின் சேஷங்களையும் கல் ஆயுதங்களையும் ஆராய்ந்துவந்த சார்ல்ஸ் டாஸன் என்பவர் 1912-ம் வருஷத்திலே இதைக் கண்டெடுத்தார். இந்த மனுஷசேஷமானது நான்கு துண்டுகளாக உள்ளன; அவை மண்டையோட்டின் சிறுபாகமும், ஒரு கீழ்த் தாடையும், அதிலே பதிந்து காணும் முதலாவது இரண்டாவதாகிய கடைவாய்ப் பற்களும், தாடையிற் பொருந்தியிராமல் அங்கே தனியாக அகப்பட்ட அதைச்சேர்ந்த 'நாய்ப்பல்' லும் ஆகிய இவைதாம். மண்டையோடானது மிகவும் கனமுள்ளதாய், தலையில்படும் அடிகளை நன்றாகத் தாங்கவல்லதாய்க் காணப்படுகிறது. அதன் நீளத்துக்கு ஏற்க ஒப்பிட்டு நோக்கும்போது அது மிகவும் அகலமாகவே இருக்கிறது. சாதாரண மனிதத்தலையுடன் ஒப்பிட்டால் அதன் உச்சி தாழ்ந்தது போலவும் தட்டையானது போலவும் தோன்றும். மண்டையோட்டின் பின்பக்கமானது மிகவும் தாழ்ந்தும் பரந்தும் காணுவதினின்று அந்தத் தலையை யுடையவனுக்கு மிகவும் பருத்த கழுத்து இருந்திருக்கவேண்டும் என்பது நிச்சயம். எல்லாவற்றையும் கவனித்துப் பார்த்தால், அம்மண்டையோடு நிச்சயமாய் மனித மண்டையோடுதான் என்பதற்கு ஐயமில்லை. ஆனால் மண்டையோடு மனிதனுக்குரியதாகவே இருந்தாலும், கீழ்த்தாடையிருக்கிற பாதியைப்பார்த்தால் குரங்கினதுபோலவே தோன்றுகிறது.

படம் 5.



ஹோமோ ஹெய்டல்பர்கென்ஸிஸ் மனிதனுடைய கீழ்த்தாடையும் பற்களும்.

(1039-ம் பக்கத்தைப் பார்க்க).

படம் 6.



நியாண்டெர்த்தால் மனித மண்டைஓடுகள்-
முன்பார்வையும் பக்கப்பார்வையும்.
(1040-ம் பக்கத்தைப் பார்க்க).

படம் 7.



நியாண்டெர்த்தால்.

(1040-ம் பக்கத்தைப் பார்க்க).

இப்பொழுது உள்ள வாலில்லாக் குரங்குகளின் மோவாய்க்கட்டை யைப்போலவே அந்த மோவாய்க்கட்டை காணப்படுகிறது. இரண்டு மோவாய்க்கட்டைகளுக்கும் முக்கியமான அமிசங்கள் ஒன்றிலும் பேதமில்லை. ஆனால் கீழ்த்தாடையில் காணும் இரண்டு பற்கள் மனிதப்பற்கள்தாம். பில்ட்டௌன் மண்டையோட்டைப்போன்ற தலையைப் பெற்றுள்ள மனித வருக்கத்துக்கு ஈயாந்துரோபஸ் டாஸனே என்று பெயர் கொடுத்திருக்கிறார்கள். (படம். 4)

மனித முன்னேற்ற வளர்ச்சியிலே, இதற்கு அடுத்துள்ள உயர் படியாயுள்ளது ஹைடெல்பர்க்குக்கு அருகிலே காணப்பட்ட ஒரு கீழ்த்தாடைதான். அது 1907-ம் வருஷத்திலே ஜெர்மனி தேசத்து நகரங்களில் ஒன்றாகிய ஹைடெல்பர்க் நகரத்துக்கு அருகிலே கண்டெடுக்கப்பட்டது. தாடை எலும்பானது மிகவும் தடியாயும், பெரியதாயும், தற்கால மனிதத்தாடையில் காணும் சின்னங்களில் கிட்டத்தட்ட எல்லாச் சின்னங்களையும் உடையதாயும் காணப்படுகிறது. மோவாய்க்கட்டை எனப்படும் எலும்புப் புடைப்பு மட்டிலும் இதில் காணப்படுவதில்லை. இந்தப் புடைப்பு இல்லாததால் மோவாய் உள்ளடங்கிப் பின்வாங்குவதுபோல் தோற்றுகிறது. ஆதலால், வாலில்லாக்குரங்கின் மோவாயைப்போல் கொஞ்சம் தோற்றுகிறது. ஆனால் மற்ற அடையாளங்களெல்லாம் மானுஷிக அடையாளங்கள் தாம். எலும்பின் அளவையும் பருமனையும் உத்தேசிக்கும்போது பற்கள் சிறியனவென்றுதான் சொல்ல வேண்டும். கீழ்த்தர மனித வகுப்பினர்களுடைய பற்களின் வடிவத்தையும் அளவையும் ஒத்தனவாய் அப்பற்களின் வடிவமும் அளவும் அமைந்திருக்கின்றன. ஹைடெல்பர்க் மனிதன் நமது மனித வருக்கத்தைச் சேர்ந்தவனென்றே கருதப்படுகிறான். ஆயினும் அவன் நமது வகுப்பைச் சேர்ந்தவனல்ல; ஹோமோ ஹேய்டல்பர்கேன்ஸிஸ் என்று பெயரிடப்பட்ட தனியான வகுப்பைச் சேர்ந்தவன். (படம். 5)

இதற்குப் பின்னர், சற்றேறக்குறைய அதே காலத்திலேயே, ஐரோப்பாவில் இன்னுமொரு பிரத்தியேகமான மனித வகுப்பானது தோன்றிற்று. இந்த வகுப்பைச் சேர்ந்தவர்களின் எலும்புத் துண்டுகள் சிற்சில அகப்பட்டிருக்கின்றன. அவற்றைக் கொண்டு இந்த வகுப்பைச் சேர்ந்தவன் ஒருவனுடைய எலும்புக்கூடு இப்படித்தான் இருந்திருக்க வேண்டுமென்று அறிவாளர் அறிந்துகொண்டனர். ஜெர்மனியிலே நியான்டெர்த்தால் என்னும் இடத்திலே ஒரு குகையிலே 1857-ம் வருஷத்தில் இந்த வகுப்பின் முதல் சின்னமானது கண்டெடுக்கப்பட்டது. ஆகையால் இந்த வகுப்பு மனிதனுக்கு நியான்டேர்த்தால் மனிதன் என்று பெயர் கொடுக்கப்பட்டது.

லா மூஸ்டியர் என்னும் பிரான்சு தேசத்திலுள்ள குகையிலும் இம் மனிதனது சின்னங்கள் அகப்பட்டதனால் மூஸ்டீரியன் மனிதன் என்பதும் இம்மனிதனுக்கு மற்றொரு பெயராக அடிக்கடி வழங்கப் படுகிறது. இம்மண்டையோட்டின் கூரையானது தற்காலத்து மனித மண்டையோட்டைப்போல் இல்லை. இதன் புருவ எலும்புகள் மிகவும் அதிகமாகப் புடைத்திருக்கின்றன. அவை முன்னே மிக வும் துருத்திக்கொண்டிருப்பதால் அந்த நெற்றியும் குரங்குகளின் நெற்றியைப்போல் பின்புறமாகச் சாய்ந்து காணப்படுகிறது. மூளை யின் அளவையும் அதன் தோற்றத்தையும் பார்த்தால் இம்மண்டை யோடு மனித உறுப்புத்தான் என்று நிச்சயமாகக் கூறலாம். (படம். 6)

தற்காலத்து மனிதனது முகத்தைக்காட்டிலும் அம் முகம் அள வில் பெரியது. தாடை எலும்புகள் குரங்குமுகத்தில் போல் புடைத்திருக்கின்றன. மனித முகத்தில் காணுவதுபோலக் கண் களின் புறமாக அவை சிறிதுகூடக் குழிந்திருக்கவில்லை. இதுவரை நாம் பார்த்துள்ள பலவித மனித வகுப்புக்களுக்கு அமைந் திருக்கும் தலையைக் காட்டிலும் அந்தத் தலை அளவில் மிகப் பெரியதாயிருக்கிறது. புஜம் மிக நீண்டதாயும், தொடையெலும்பு விசித்திரமாய் வளைந்ததாயும் காண்கின்றன. உடலைப் பார்த் தால் அந்த மனிதனது நடை எப்பொழுதும் சாதாரணமாக நிமிர்ந்த நடையாகத்தான் இருந்திருக்கவேண்டும் என்று தோன்று கிறது. ஆனால் அந்த நடை செவ்வையான நடையாய் இராது; இழுத்து இழுத்து நடக்கும் நடையாய்த்தான் இருந்திருக்கும். மொத்தமாய்க் கூறுமிடத்து, நியான்டெர்த்தால் மனிதனது தன்மை களையெல்லாம் ஒவ்வொன்றாக எடுத்துக்கொண்டால் அவற்றுள் ஒவ்வொன்றையும் இக்காலத்திலே அங்கங்கே மனிதர்களிடத்திலே சிற்சில வேளைகளில் காணக்கூடும். ஆயினும் தாழ்ந்த இத் தன்மை களெல்லாம் ஓரிடத்திலே ஒருமிக்கப் பொருந்தியிருப்பதினால் அவன் குரங்கினும் மேம்பட்டவனாயினும் நிச்சயமாக மிகத்தாழ்ந்த மானு டன்தான் என்பதற்கு ஐயமில்லை. (படம். 7, 8)

தோன்றிய அதிசயத்தைப்போலவே திடீரென்று அழிந்து போன, கேவலம் மிருகம் தானோவென்று ஐயுறத்தக்க, இப்பிராணிக் கும் இதற்கு அடுத்தபடியாக ஐரோப்பாவில் தோன்றிய உருவத் திற்கும் இருக்கின்ற வித்தியாசம் ஆச்சரியகரமானது. இந்த விந்தைக்குக்காரணம் இதுவரையிலும் ஒருவருக்கும் விளங்கவில்லை. டோர் டோன் என்னும் பிரெஞ்சுப் பிரதேசத்தில் தோன்றிய க்ரோ மானியன் என்னும் வகுப்பானது மனிதவருக்கப் பரிணாமம் என் னும் ஏணியிலே உயர்ந்த படியைச் சார்ந்தது. இக்காலத்திலே

படம் 8.




நியாண்டெர்த்தால் மனிதன்.

(1040-ம் பக்கத்தைப் பார்க்க).

படம் 9.



க்ரோமானியன்.

(1041-ம் பக்கத்தைப் பார்க்க).

படம் 10.



ரொடீஷியன் மனித மண்டைஓடு-முன்பார்வை.

(1041-ம் பக்கத்தைப் பார்க்க).

படம் 11.



ரொடீஷியன் மனித மண்டைஓடு-பக்கப்பார்வை.

(1041-ம் பக்கத்தைப் பார்க்க).

நாகரிகமுள்ளவராகக் கருதப்படும் ஜாதிகளோடு அதை ஒப்பிட்டுப் பார்த்தாலும் அதிகம் அது பின்னடையாது. அந்த வகுப்புத் தான் நிஜ மனித வகுப்பென்று அறிவாளர் முதன்முதலில் ஒப்புக் கொண்ட வகுப்பு. நியான்டெர்த்தால் தலையைப்போலவே அதன் தலையும் நீளமுள்ளதாகவே காணப்படுகிறது. அகலமும் சுமாராக இருக்கிறது. இத்தன்மைகள் நாளடைவில் விருத்தியடைந்து வந்தன. தற்காலத்திலே மத்திய ஐரோப்பாவிலே உள்ள ஆல்ப்ஸ் பிரதேசத்து ஜனங்களின் தலையமைப்பானது இத்தகைய போக்குள்ளதாகவே காண்கிறது. நெற்றி நன்றாக அகன்றிருக்கிறது. மூளைத் திறமை மிகுந்திருக்கிறதென்பதற்கு இது ஓர் அறிகுறியாகும். மண்டை யோட்டின் உச்சி உயர்ந்திருப்பதாலும் அது நல்ல உருண்டை வடிவத்தைப் பெற்றிருப்பதாலும் அதற்குள்ளே மூளைக்கு இடம் அதிகமாக இருக்கிறது. (படம். 9)

அதற்குப் பின்னதாக முக்கியமானதெனக் கூறத்தக்கவை ஆப்பிரிக்காக் கண்டத்திலே காணப்பட்ட ரோடீஷியன் மனிதனுடைய சின்னங்கள். ரொடீஷியா என்னும் மாகாணத்திலே கண்டு பிடிக்கப்பட்ட சேஷங்கள் கிட்டத்தட்ட முழுதாயுள்ள ஒரு மண்டையோடும், அதைவிடச் சற்றுச்சிறிதான ஒரு மண்டையோட்டின் மேல்தாடை யெலும்பும் தான். இந்தத் தலையின் முகப்பக்கத்து எலும்பு மிகப்பெரியதாயிருக்கிறது. இதிலுள்ள புருவப் புடைப்புக்களைப்போல் அவ்வளவு தடியானவைகளையும் பக்கவாட்டத்தில் அவ்வளவு பரந்தவைகளையும் வேறெந்த மனித முகத்திலும் இதுவரையிலும் கண்டதில்லை. க்ரேனியம் எனப்படும் தலையின் உச்சிப்புறமானது மிகப்பெரிதாயிருக்கிறது. அது வெகுதூரம்வரை பின்பக்கத்திலே செல்கிறதாலும், தட்டையா யிருப்பதாலும் நியான்டெர்த்தால் தலையை ஒருவாறு ஒத்துக்காண்கிறது. இதன் முகத்திலுள்ள புருவமேடுகள் மிகப் பெரியனவா யிருக்கின்றன ; நடுவில் ஒன்றோடு ஒன்று பிணைந்து காண்கின்றன. புருவமேடுகள் திரண்டு உருண்டும், கட்குழிகள் அளவில் பெரியனவாயும் காணப்படுகின்றன. முகமும் மூக்கும் ஒட்டிக்காணப்படுகிறது. மூக்கின் துவாரம் பெருத்துப் பேரிக்காய் வடிவமாக அகன்றிருக்கிறது. ஆதலால் இதை ஹோமோ ரோடீஷியென்ஸிஸ் மனித இனத்திலே புராதன வகுப்பொன்றைச் சார்ந்ததாகவே கருதவேண்டும். அவ் வகுப்பில் அவ்வளவு வளர்ச்சியடையவில்லை. அதோடு முகமும் சிறுத்துக் களை பொருந்தியதாயிராமல் பருத்ததாகவே காண்கிறது. (படம். 10, 11)

புதைபொருள்களில் காணப்படும் மனித வகைகளிலே கடைசியானது சைனாவிலே 1929-ம் வருஷம் டிசம்பர் மாதத்திலே முதல்

முதல் கண்டெடுக்கப்பட்டது. புராதன மனித சம்பந்தமான சின்னங்களில் இதுவரை கண்டெடுக்கப்பட்ட சேஷங்கள் எல்லாவற்றைக் காட்டிலும் இது மிகவும் கவனிக்கத் தக்கதாயும், நுட்பமான விஷயங்களை எடுத்துக்காட்டுவதாயும் இருக்கிறது. காலத்தால் ஒன்றுபட்ட ஜாவா நாட்டுப் பிதிகாந்துரோபஸ் மனிதனுக்கும் பில்ட்டௌன் ஈயாந்துரோபஸ் மனிதனுக்கும் உள்ள ஒரு தொடர்பானது, இம்மனிதனிடத்தில் காணப்படும் சிற்சில தன்மைகளால் தெரியவருகிறது. இவனிடம் காணப்படும் குறிகளெல்லாம் பொதுப்படையானவை. அவற்றுட் சில, மனிதன் குரங்கினத்தினின்று தோன்றியவன் என்பதை நமக்கு ஞாபகமூட்டுகின்றன. வேறுசில குறிகள் ஹோமோ ஸேபியன்ஸ் என்னும் உயர்தர மனித வகுப்புக்கு அறிகுறியாக உள்ள தனிக்குணங்கள் என்று நாம் இதுகாறும் கருதி வந்தவை. ஆகவே ஸிமாந்துரோபஸ் மனிதன் மனித வமிசத்தின் புராதன ஜனங்கள் எப்படி இருந்தார்கள் என்பதை விளக்குகிறான். இவன் மனித இனத்தைச் சார்ந்தவனேயாயினும், அநேக வகைகளில் குரங்கைப்போலவே காணும் இனத்தைச் சேர்ந்தவன்; மனித வமிசாவளியில் நமக்கு மிகவும் நெருங்கிய பந்து என்பது வெளிப்படை.

**பண்டைக்கால வசதிகளும் நிலைமைகளும்.**

மனித இனம் பரிணமித்து வரும்போது தோன்றியுள்ள பல வகையான உருவ வேறுபாடுகளை உடைய மனித இனங்களை நாம் ஓரளவு கவனித்தாய்விட்டது. இனிமேல், பண்டைக்காலத்திலே, சரித்திரத்துக்கு முற்பட்ட நாட்களிலே, அம்மனிதர்கள் பெற்றிருந்த வசதிகளையும் அவர்களைச் சூழ இருந்த நிலைமைகளையும் சிறிது கவனிப்போம்.

சரித்திர ஆதாரங்களைக் கொண்டு நிர்ணயிக்கின்ற காலங்களுக்கு முற்பட்ட காலங்களை எல்லாம், அவ்வக்காலங்களில் மனிதர் வழங்கிவந்த கருவிகளும் ஆயுதங்களும் தட்டுமுட்டு சாமான்களும் முக்கியமாய் எந்த எந்தப்பொருளால் செய்யப்பட்டு வந்தனவோ அந்த அந்தப் பொருளின் பெயரைக்கொண்டு குறிப்பிடுவதுதான் மரபு. உதாரணமாக, சிலாயுகம் என்று சொல்லப்படும் ஒரு பெரிய அளவுள்ள காலத்திலே, மனிதர் உபயோகித்து வந்த கருவிகளும் ஆயுதங்களும் கல்லினாலேயே செய்யப்பட்டனவாய் இருந்தன. சிலாயுகமானது லோகயுகத்துக்கு முற்பட்டது. அந்தக் கல்யுகமும் அநேகம் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. இப்பகுதிகளுக்கும் தனித்தனியான பெயர்களை இட்டிருக்கிறார்கள். குறிப்பிட்ட ஒரு காலத்தில் முக்கியமாக எந்தப் பிரதேசத்தில் கல்

ஆயுதங்கள் முதலியன செய்யப்பட்டனவாய்த் தெரிகின்றனவோ அப்பிரதேசத்தின் பெயரைத்தான் அக்காலத்துக்கு இட்டனர். இப்படிப் பார்க்கும்போது, கல்யுகத்திலே மூன்று முக்கியமான காலப்பிரிவுகள் இருந்தனவாகத் தெரிகிறது. உலகெங்கும் இப் பிரிவுகளின்படியே பரிணமம் ஏற்பட்டது என்ருவது, இம்முறையி லேதான் காலப்பகுதிகள் ஒன்றின்பின் மற்றொன்ருகத் தொடர்ந்து வந்தனவென்ருவது உறுதியாகவும் பொதுவாகவும் கூறமுடியாது.

ஈயோலிதிக் அல்லது உதயசிலாயுகம், [ஈயோஸ்—உதயம், லிதோஸ்—கல்] பாலியோ லிதிக் அல்லது விருத்த சிலாயுகம் [பாலியோ—பழைய], நீயோலிதிக் அல்லது நவீன சிலாயுகம் [நீயோ-புதிய, நவீன] என்பவைகளே இம்மூன்றுபகுதிகள். ஸர் ஜான் லப்பக் என்பவர் 1865-ம் வருஷத்தில் இக்காலவரையறை களுக்கு இப்பெயர்களை இடலாமென்று முதன்முதல் கூறினர். அவரிட்ட இப்பெயர்களே இக்காலத்திலும் பொதுவாக வழக் கத்தில் இருந்து வருகின்றன. மனித இனத்தின் நாகரிகமானது படிப்படியாகக் காலக்கிரமத்தில் இம்மூன்று தசைகளையும் ஒன்றன் பின் ஒன்ருகப் பற்றிவந்ததாகத்தான் தோன்றுகிறது. ஆயினும், உலகம் முழுவதிலும் ஏககாலத்தில் ஓரேயுகம் எங்கும் பாவிநின்றது, அதன் பின் உலகெங்கும் மற்ருேர் யுகம் தோன்றிற்று, அதன்பின் மூன்ருவது யுகம் வந்தது என்று சொல்வதற்கில்லை. உலகத்தில் ஒரேகாலத்தில் வெவ்வேறிடங்களில் வெவ்வேறு யுகத்தைச் சார்ந்த தாகக் கருதப்படும் நாகரிகமும் காணப்பட்டு வந்திருக்கிறது.

பண்டைக்கால நாகரிகம் இத்தன்மையது என்பதை ஆராய்வ தற்கு, என்றும் அழியாத குணமுள்ள கற்பொருள்கள் நமக்குக் காட்டும் அத்தாட்சிகளைத் தவிர வேறு ஆதாரங்கள் இல்லை. சரித் திரக்கதைகளைக் குறிக்கத் தொடங்கிய காலத்துக்குப் பல்லாயிரம் வருஷங்களுக்கு முன்பு, மனிதன் கல் ஒன்றையே பெரும் துணை யாகக்கொண்டு, தனக்கு வேண்டிய எல்லாக் கருவிகளையும் ஆயுதங் களையும் இயற்றிக்கொண்டான் என்பது நன்கறியப்பட்ட விஷயம். உலகத்திலே மனித வாழ்க்கையைக் குறிக்கும் அடையாளங்கள் அனைத்தினும் இவைதாம் மிகவும் முற்பட்டவை. இப்பொருளி ஞல் செய்யப்பட்ட கருவிகள் உலகில் எங்காயினும் காணப்பட்டால் அவ்விடத்திலே மனிதன் ஏதோ ஒரு பழங்காலத்திலே வாழ்ந்து வந்தானென்பது உறுதி. மிகப்பழைய காலங்களிலே ஒரே மாதிரியுள்ள கருவியானது பலவகையான தொழில்களுக்கு உப யோகமாகி யிருக்கவேண்டும். வெவ்வேறு காரியத்துக்கு ஏற்றபடி வெவ்வேருன கருவிகளை அமைத்துக்கொள்ளும் திறமை பிற்காலத்

திலேதான் தோன்றியிருக்க வேண்டும். மிகப்பழமையான ஒரு காலத்திலே உபயோகிக்கப்பட்டு வந்த ஓர் ஆயுதத்தைப் பார்த்த மாத்திரத்திலே, அது இயற்கையிலேயே அப்படியே அவ்வடிவமாய்த் தோன்றிய பொருளா, அல்லது செயற்கையால் வருந்திச் செய்து கொள்ளப்பட்ட கருவியா என்பதைக் கூட நாம் இக்காலத்தில் நிச்சயமாய்க் கூறுவதற்கு முடியாமல் இருக்கிறது. எந்தப் பூதத்துவ யுகத்திலே மனிதன் இயற்கையிலேயுள்ளதைக் கருவியாக உபயோகிக்கும் திறமையை மட்டிலும் உடையவனாக இருந்தான்? எந்த யுகத்திலே அவன் தானாகவே கருவியைச் செய்துகொள்ளும் திறமையைப் பெற்றவனாக ஆனான்? இவற்றைப் பற்றியும் நாம் நிச்சயமாக ஒருமுடிவும் கொள்ளுவதற்கில்லை. பரிணாம முறையில் காலக்கிரமமாகத் தோன்றிய வளர்ச்சிகளை ஆராயும்போது, நாளடைவிலே மனிதன் கலைகளிலும் தொழில்களிலும் பயிற்சியை ஒன்றன்பின் ஒன்றாகப் பெற்றுக் கொஞ்சம் கொஞ்சமாக நாகரிக முதிர்ச்சியடைந்துகொண்டே வந்தானென்பது தெரியவருகிறது. இவ்வாறு உண்டாகி ஒன்றன்பின் ஒன்றாய்த் தோன்றிய மாறுபாடுகளைக் காலவரையறையில் ஆராய்வது மிக்க அவசியமாக இருக்கிறது. சிலாயுகமென்பது பூமியில் எல்லாவிடத்திலும் முன்காலத்தில் தோன்றியிருந்ததாகத் தெரியவருகிறது.

(தொடரும்)

# சரித்திரம்

## பாஹியன் யாத்திரை வரலாறு

ஜி. தாத்தாச்சாரி

பழைய நகருக்கு வடக்கே முந்நூறு தப்படி தூரத்தில் வழியின் மேல்புறத்தில் கலண்டவேணுவன விஹாரம் உள்ளது. அஃது இன்னும் அழியாமலிருக்கிறது. சில பிக்ஷுக்கள் அதைத் தண்ணீர் தெளித்துச் சுத்தமாக வைத்துக் கொண்டிருக்கின்றனர். அந்த விஹாரத்துக்கு இரண்டு மூன்று லீ தூரம் வடக்கில் இறந்தோரைப் படுக்கும் ஸமாதிகள் உள்ள இடம் எனப்பொருள்படும் ஷிமோஷே-ந ஸ்மசானம் இருக்கிறது. தெற்கேயுள்ள குன்றைக்கடந்து மேற்கு முகமாக முந்நூறு தப்படி சென்றால், புத்தபகவான் மத்தியான்ன போஜனத்துக்குப் பிறகு வழக்கமாக உட்கார்ந்து தியானம் செய்த இடமான பிப்பல குகை என்ற கற்குகை இருக்கின்றது. இன்னும் மேற்கே ஐந்தாறு லீ தூரத்தில், மலையின் வடபாரிசத்தில் சே-தி என்று பெயர் பெற்ற கற்குகை ஒன்றுண்டு. புத்த பகவானுடைய நிர்வாணத்துக்குப் பிறகு பிடகங்களைச் சேகரிப்பதற்காக ஐந்நூறு அர்ஹத்துக்கள் ஒரு பரிஷத்தில் கூடிய இடம் இதுவாம். பிடக கிரந்தங்களைப் படனம் பண்ணிக்கொண்டிருந்தபோது மூன்று ஆஸனங்களை அலங்கரித்து, பிரத்யேகப்படுத்தி வைத்திருந்தனர். இடது பக்கத்திலிருந்த ஆஸனம் சாரீபுத்தனுக்காகவும் வலது பக்கத்து ஆஸனம் முத்கல்யாயனனுக்காகவும் உத்தேசிக்கப்பட்டிருந்தன. பரிஷத்தில் கூடிய அர்ஹத்துக்களின் சங்கியை ஐந்நூறு ஆவதற்கு இன்னும் ஒருவர் வேண்டியிருந்தது. அத்தருணத்தில் உள்ளே வருவதற்கு அனுமதி பெறாமல் ஆனந்தன் வாசற்படிக்கு வெளியே நின்று கொண்டிருக்கையில் மஹாகாச்யபர் தமது ஆஸனத்தின் மீது ஏறிக்கொண்டிருந்தனர். இந்த இடத்தில் ஒரு ஸ்தூபத்தைக் கட்டினர். அஃது இன்னும் இருக்கிறது.

மலைகளைப் பின்னும் தாண்டிச் செல்லும்போது, தியான சமயங்களில் அர்ஹத்துக்களால் உபயோகிக்கப்பட்ட வேறு பற்பல கற்குகைகள் காணப்படுகின்றன. பழைய நகரைவிட்டு, வடகிழக்கு முகமாக மூன்று லீ தூரம் சென்றதும் தேவதத்தனுடைய கற்குகையை

அடையலாம். அதற்கு ஐம்பது தப்படி தூரத்தில் கருமையான பெரிய சதுரக்கல் ஒன்றிருக்கிறது. கொஞ்சகாலத்துக்கு முன்னல் ஒரு பிக்ஷு அநித்யம், துக்கம், சரீராபிமானம் இவைகளைப்பற்றிச் சிந்தனை செய்து கொண்டு, அந்தக்கல் மீது முன்னும் பின்னுமாக நடந்து கொண்டிருந்தனர். அபவித்ரத்தின் குணத்தை இவ்வாறு தெரிந்து கொண்ட அந்தப் பிக்ஷு, தமது சரீரத்தை வெறுத்து, கத்தியை உருவிக்கொண்டு தம்மைக் கொன்றுகொள்ள எண்ணினர். ஆனல் புத்த பகவான் தற்கொலையைத் தடுத்திருப்பதை அவர் ஞாபகப்படுத்திக் கொண்டனர். என்றாலும் அவர், பின்னரும், "அப்படியே அது இருந்தாலும், நான் காமம் மாத்ஸர்யம், அஜ்ஞானம் என்னும் மூவகையான விஷத்தன்மை பெற்ற திருடர்களை நாசம் செய்யவே விரும்புகிறேன்" என்று சிந்தித்து மறுபடியும் கத்தியை உருவித் தமது கழுத்தை அரிந்து கொண்டார். முதல் வெட்டில் அவர் ச்ரோதாபன்னர் ஆனர்; பாதிக்கொலை செய்துகொண்டதும் அனுகாமியானர்; அச்செய்கை முற்றுப்பெற்றதும் அர்ஹத்தின் நிலையை யடைந்து நிர்வாண மெய்தினர்.

இங்கிருந்து மேற்கே நான்கு யோசனை தூரத்தில் கயா நகரம் இருக்கிறது. இந்த நகருக்குள் எல்லாம் பாழாகி வனாந்தரமாக இருக்கிறது. தெற்கே இருபது லீ தூரத்தில், போதிஸத்வர் ஜீவந்தராக இருந்தகாலத்தில் காயக்கிலேசம் செய்துகொண்டு ஆறு வருஷங்களைக்கழித்த இடமுள்ளது. இவ்விடம் நன்றாக மரமடர்ந்திருக்கிறது. இங்கிருந்து மேற்கே மூன்று லீ தூரத்தில் புத்தபகவான் ஸ்நானம் செய்வதற்காகத் தண்ணீரில் இறங்கியபோது, அவரைத் தண்ணீரினின்றும் கரையேற்றுவதற்காகத் தேவன் ஒருவன் ஒரு மரக்கிளையைத் தழையச் செய்த இடமுள்ளது. இன்னும் வடக்கே இரண்டு லீ தூரத்தில், கிராமத்துப் பெண்கள் புத்த பகவானுக்குப் பாலையும் அன்னத்தையும் கொடுத்த இடம் காணப்படுகிறது. இங்கிருந்து வடக்கே இரண்டு லீ தூரத்தில், புத்தபகவான் ஒரு மரத்தினடியில் கற்பாறை ஒன்றின்மீது கிழக்கு நோக்கி உட்கார்ந்து கொண்டு அவர்கள் கொடுத்த பாலையும் அன்னத்தையும் உட்கொண்ட இடம் இருக்கிறது. அந்த மரமும் கற்பாறையும் இன்னும் காணப்படுகின்றன. கற்பாறை ஆறடிச் சதுரமும் இரண்டடி உயரமுமுள்ளது.

மத்ய இந்தியாவில் உஷ்ணமும் சீதளமும் சரிசமமாக இருப்பதனல் அங்கு மரங்கள் ஆயிரக்கணக்கான வருஷங்கள் வரையில் உயிரோடிருக்கும்; பத்தாயிரம் வருஷங்களும் இருப்பதுண்டு. இங்கிருந்து வடகிழக்கில் அரையோசனை தூரத்தில் ஒரு

கற்குகை இருக்கிறது. போதிஸத்வர் அதனுள் நுழைந்து கால்களை மடக்கிக்கொண்டு அமர்ந்து மேற்கு முகமாக நோக்கியபோது, "எனக்கு ஞானோதயம் உண்டாவது நிச்சயமானால் அதற்குச் சூசக மாக ஏதேனும் ஒரு தெய்வீகத்தோற்றம் உண்டாகட்டும்" என்று நினைத்தார். உடனே, கற்சுவரின்மீது புத்த பகவானுடை சாயை சுமார் மூன்றடி நீளமுள்ளதாகத் தோன்றியது. இந்தச் சாயை இன்னும் ஸ்பஷ்டமாகக் காணப்படுகின்றது. அப்பால் ஆகாயமும் பூமியும் நடுங்கின. அந்தரத்திலிருந்து தேவர்கள் எல்லோரும், "புத்தர்கள் ஞானோதயம் அடைவதற்கான இடம் இதுவன்று; இங்கிருந்து தென்மேற்கில் அரையோசனைக்குட்பட்ட தூரத்திலுள்ள போதி விருக்ஷத்தின் அடிதான் புத்தர்கள் எல்லாரும் ஞானோதயம் அடைய வேண்டிய இடம்" என்று கூவினர். தேவர்கள் இப்படிச் சொல்லிவிட்டு, அவர் தங்களைப் பின் தொடர்ந்துவரச் செய்ய வேண்டுமென்ற கருத்துடன் அவருக்கு முன்னால் பாடிக்கொண்டு வழிகாட்டிச் சென்றனர். பிறகு போதிஸத்வர் எழுந்திருந்து, அவர்களைப் பின்றொடர்ந்தார். அந்த விருக்ஷத்துக்கு இன்னும் முப்பது தப்படி தூரம் இருந்தபோது, ஒரு தேவன் வந்து அவரிடம் சில தர்ப்பைப் புற்களைக்கொடுத்தான். போதிஸத்வர் அவைகளைப் பெற்றுக்கொண்டு பதினைந்து தப்படி முன்னோக்கி நடந்தார். அப்போது, ஐந்நூறு நீலக்குருவிகள் அவரை நோக்கிப் பறந்து வந்து மும்முறை அவரை வலம்வந்து திரும்பிப்போயின. போதிஸத்வர் பிறகு முன்னோக்கிச் சென்று, போதி விருக்ஷத்தினடிக்கு வந்து தர்ப்பைகளைப் பரப்பி, அவைகளின்மீது கிழக்கு நோக்கிய முகத்துடன் உட்கார்ந்தனர். அந்தச்சமயத்தில்தான் மாராராஜன், அவரை மயக்குவதற்காக வடதிசையினின்றும் மூன்று விலைமாதர்களை அனுப்பியதன்றி, தானும் தென்றிசையினின்றும் வந்து அவரை அவ்வாறே பீடித்தான். அப்போது போதிஸத்வர் தமது காற்கட்டைவிரலைத் தரையில் ஊன்றிய மாத்திரத்தில் மாரனுடைய சேனை முழுவதும் சின்ன பின்னமாகியது. அந்த மூன்று விலைமாதர்களும் குரூபிகளான கிழவிகளாயினர்.

காயக்கிலேசம் செய்துகொண்டு புத்த பகவான் ஆறுவருஷங்களைக் கழித்ததாக மேலே கூறியவிடத்திலும், அப்பால் சொல்லிய ஒவ்வோர் இடத்திலும் பிற்காலத்து ஜனங்கள் ஸ்தூபங்களைக் கட்டி, அவருடைய விக்ரகங்களைப் பிரதிஷ்டித்திருக்கின்றனர். அவைகள் இன்னும் இருக்கின்றன. புத்த பகவான் ஞானோதயம் பெற்றபிறகு அதனாலடைந்த இன்பத்தை அனுபவித்துக்கொண்டு ஏழுநாட்கள் அந்தப் போதி விருட்சத்தைப்பற்றித் தியானம் செய்தனர். இந்த

இடத்தில் ஒரு ஸ்தூபம் எழுப்பப்பட்டிருக்கின்றது. இதன்றி, போதி விருட்சத்தினடியில் அவர் ஏழுநாள் கிழக்கு மேற்காக நடந்துகொண்டிருந்த இடத்திலும், தேவர்கள் அனைவரும் ஏழுவித ரத்நங்களால் இயற்றப்பட்ட மண்டலத்தைத் தோன்றச் செய்து, ஏழுநாள் வரையில் புத்த பகவானுக்குவழிபாடியற்றிய இடத்திலும், முசிலிந்தன் என்னும் குருட்டு நாகம் ஏழுநாள் வரையில் புத்த பகவானுக்கு வழிபாடு இயற்றுவதற்காக அவரைச்சுற்றிக்கொண்டிருந்த இடத்திலும், நியக்ரோத விருட்சத்தினடியில் ஒரு சதுரக்கற்பாறையின்மீது புத்தபகவான் கிழக்கு முகமாக உட்கார்ந்து கொண்டு, பிரம்மாவின் வழிபாட்டை ஏற்றுக்கொண்ட இடத்திலும், தெய்வீக அரசர்கள் நால்வரும் அவருடைய பிக்ஷாபாத்ரத்தை அவரிடம் சமர்ப்பித்த இடத்திலும், ஐந்நூறு வர்த்தகர்கள் அவருக்குப்பொரியையும் தேனையும் கொண்டுவந்து கொடுத்த இடத்திலும், மூத்தவரும் இளையவருமான காச்யப ஸகோதரர்களையும் அவர்களுடைய ஆயிரம் சிஷ்யர்களையும் அவர் புத்த தர்மத்துக்குக் கொணர்ந்த இடத்திலும் ஸ்தூபங்கள் கட்டப்பட்டிருக்கின்றன. புத்தருக்கு ஞானோதயம் உண்டான இடத்தில் மூன்று ஸங்காராமங்கள் உள்ளன. அவைகள் எல்லாவற்றிலும் பிக்ஷுக்கள் இருக்கின்றனர். இந்தப் பிக்ஷுக்களைச் சேர்ந்தோர்கள் இவர்களுக்கு வேண்டிய ஸாமக்ரியைகளைக்கொடுப்பதால் இவர்களுக்கு ஒன்றிலும் குறைவில்லை. ஆஸனங்களில் அமர்வது, எழுந்திருப்பது, ஸபையில் நுழைவது ஆகிய விஷயங்களில் இவர்கள் நடந்துகொள்ளும் விதமானது விநயத்தின் விதிகளைக் கண்டிப்பாய்ப் பின்பற்றியதாகவே இருக்கிறது. புத்தர் ஜீவந்தராக இருந்த காலத்தில் ஸங்கத்தார் அனுசரித்த விதிகளையே இந்தப்பிக்ஷுக்கள் இன்னும் அனுசரித்து வருகின்றனர். மஹாவிஹாரங்கள் உள்ள நான்கு இடங்களும் புத்த நிர்வாண காலமுதற்கொண்டு ஒன்று சேரவே கூறப்படுகின்றன. அந்த நான்கு மஹாவிஹாரங்களும் அவர் பிறந்த இடம், ஞானோதயம் பெற்ற இடம், தர்மோபதேசம் செய்யத்தொடங்கிய இடம், நிர்வாணமடைந்த இடம் ஆகிய நான்கிடங்களிலும் கட்டப்பட்டவையாகும்.

முன் காலத்தில் அசோகன் தனது இளமைப் பருவத்தில் (அதாவது முன்னொரு பிறப்பில்) வழியில் விளையாடிக் கொண்டிருந்த போது, பிக்ஷைக்காகச் சென்று கொண்டிருந்த சாக்ய புத்தரைக் கண்டான். அவன், தனக்கு நேர்ந்த பாக்கியத்துக்குச் சந்தோஷப்பட்டு, ஒருகை மண்ணை எடுத்து அவருக்குப் பிக்ஷையாக ஸமர்ப்பித்தான். புத்தர் அதைப் பெற்றுக் கொண்டு போய், திரும்புகாலில் தாம் வழக்கமாக வியாபாரம் செய்யுமிடத்தில்

அதைத் தூவினர். இந்தத் தானத்தின் பயனாக அவ்விளைஞன் ஒரு அயஸ் (இரும்பு) சக்கர அரசனாகி ஜம்புத்வீபத்தை ஆண்டனன். அயஸ்சக்கரத்தைக் கைக் கொண்டதும், அவன் ஒரு சமயத்தில் ஜம்புத்வீபத்தினூடே நாடு சோதனை செய்து கொண்டு போகும் போது இரண்டு இருப்பு வட்ட மலைகளுக்கிடையே துஷ்டர் களைச் சிட்சிப்பதற்காக ஏற்பட்ட யாதனாஸ்தலம் ஒன்றைக்கண் டான். உடனே அவன் தன்னுடன் வந்த மந்திரிகளை நோக்கி, "இவ்விடம் யாது?" என்று கேட்டான். அதற்கு அவர்கள், "நரகலோகத்துக்கு அதிபதியான யமராஜன் துஷ்டர்களுடைய பாவச் செயல்களுக்காக அவர்களுக்குத் தண்டனை விதிக்கும் இடம் இது" என்றனர். அப்பால், அவ்வரசன், "யமராஜன் தன்னு டைய தொழிலைச் செய்வதில் துஷ்டர்களைத் தண்டிப்பதற்காக இப் படிப்பட்ட இடமொன்றை ஏற்படுத்திக் கொள்ள வேண்டுமானால், மனிதர்களை ஆண்டு வரும் நானும் குற்றவாளிகளைத் தண்டிப்பதற் காக இப்படிப்பட்ட இடமொன்றை ஏன் ஏற்படுத்திக் கொள்ளக் கூடாது?" என்று சிந்திக்கத் தொடங்கினான். அதன்மேல் அவன் தனது மந்திரிகளைப் பார்த்து, "ஒரு நரகத்தை உண்டாக்கவும் அதில் துஷ்டர்களைச் சிட்சிக்கும் அதிகாரத்தை வகிக்கவுமாக என் னால் நியமிக்கப்படக்கூடிய ஒருவன் எங்கிருக்கிறான்?" என்று கேட் டான். "மிகக்குரூரன் ஒருவனைத் தவிர வேறு யாரும் இந்தப் பதவியை வகிக்க மாட்டார்" என்று அவர்கள் விடை கூறினர். உடனே அவ்வரசன் அப்படிப்பட்ட மனிதன் ஒருவனைத் தேடி வரும்பொருட்டுத் தனது மந்திரிகளை ஒவ்வொரு திசையிலும் அனுப்பினான். அவர்கள் அவ்வாறே தேடிக்கொண்டு போகும் போது ஒரு நதிக்கரையில் செம்பட்டை மயிரும் வெளுத்த கண் களும் கறுத்த நிறமுமுடைய பெருஞ் சரீரி ஒருவனைக் கண்டனர். அவன் தனது கால்களின் நகங்களால் மீன்களைப் பிடித்துக் கொண் டும், வாயினால் சீழ்க்கை (ஊதல்) இடும்போது அருகில் வரும் பசு பட்சிகளை யெல்லாம் ஒன்றுகூடத் தப்பிப்போகாமல் இரக்கமின்றிக் கொன்று கொண்டும் இருந்தான். அவனை அவர்கள் பிடித்து அரசன் முன்னர்க் கொண்டுபோய் நிறுத்தினர். அப்பால் அவ் வரசன் அவனிடம் மந்தனமாக, "நீ சுற்றிலும் உன்னதமான சுவர்களையுடைய ஒரு சதுக்கத்தை உண்டாக்கவேண்டும்; அதற் குள் ஒவ்வொரு விதமான புஷ்பங்களையும் பழமரங்களையும் வைத் துப் பயிராக்கி அழகிய சோலையாக்க வேண்டும்; அதற்குள் என்ன இருக்கிறதென்று ஜனங்கள் பார்க்க ஆவலுள்ளவராகும்படி ஒவ் வொன்றையும் அழகுபெறச்செய்து, அதற்கு விசாலமானதோர்

வாயிலையும் வகுக்க வேண்டும். பிறகு, அதற்குள் யாவனேனும் நுழைந்தால் அவனை உடனே கட்டிப் பிடித்து ஒவ்வொரு வித மான சித்ரவதையையும் செய். உள்ளே நுழைந்தவன் எவனாயி னும் அவனை மறுபடி வெளியே போகும்படி விடாதே. நானே உள் நுழைந்தாலும் என்னையும் நீ விட்டு விடாமல் அப்படியே சித்திரவதை செய்ய வேண்டும் என்ற கண்டிப்பான உத்தரவை உனக்கு இடுகிறேன். இனி நான் உன்னை இந்த யாதனஸ்தலத் துக்கு அதிபதியாக்குகிறேன்'' என்று சொன்னான். ஒரு சமயம் பிட்சைக்காகச் சென்று கொண்டிருந்த ஒரு பிக்ஷு இந்த வாசலுக் குள் நுழைந்தனர். அந்தக் குரூரன் அவரைப் பிடித்துச் சித்திர வதை செய்யத் தொடங்கினான். மிகவும் பீதியடைந்த அந்தப் பிக்ஷு தமக்கு க்ஷண நேரம் அவகாசம் கொடுக்க வேண்டுமென்று மன்றாடினர். "எனது மத்தியான்ன வேளைப் போஜனத்தை உட் கொள்ளமட்டுமாவது எனக்கு அனுமதி கொடு'' என்று அவர் அவனைக் கேட்டனர். அந்தச் சமயத்தில் அங்கு வேறொரு மனி தன் நுழையவே அவனை அந்தக் குரூரன் பிடித்து, ஒரு கல் உர லில் இட்டுச் செந்நுரை உண்டாகும் வரையில் அவனுடைய சரீ ரத்தை இடிக்கத் தொடங்கினான். இந்தக் காட்சியைக் கண்ட பிக்ஷு அநித்யம், துக்கம், சரீராபிமானம், அச்சரீரம் கடலின் நுரையை யும் குமிழியையும் போன்றிருத்தல் ஆகியவற்றைப்பற்றிச் சிந்தனை செய்யத் தொடங்கியதும் ஓர் அர்ஹத்தின் நிலைமையை அடைந் தார். இதன்பிறகு அந்தக் குரூரன் அவரைப் பிடித்துப் பொங் கிக்கொண்டிருக்கும் ஜலத்தையுடைய பாத்திரத்தில் தள்ளினான். பிக்ஷுவின் மனமும் முகமும் சந்தோஷத்தால் நிரம்பியிருந்தன. நெருப்பு அவிந்து போயிற்று; ஜலம் குளிர்ந்தது. அதன் நடுவில் ஒரு தாமரைப்பூத் தோன்ற, அதன் மீது அந்தப் பிக்ஷு வீற் றிருந்தனர். உடனே அந்தக் காவலாளி அரசனிடம் சென்று, "யாதனஸ்தலத்தில் ஓர் அற்புதம் நிகழ்ந்திருக்கிறது. அதை வந்து காணவேண்டும்'' என்றான். அதற்கு அரசன், "நான் உன்னு டன் முன்பே செய்து கொண்டிருக்கும் உடன்பாடு காரணமாக அங்கு நான் வருவதற்குத் துணியேன்'' என்றான். காவலாளி மறு படியும், "இது ஒரு மஹத்தான காரியம். தாங்கள் வந்து பார்க்க வேண்டியது உசிதம். நாம் செய்து கொண்ட உடன்பாடு இப் போது மாறிவிட்டதாகக் கருதுவோம்'' என்றான். உடனே அர சன் அவனைப் பின்தொடர்ந்து சென்று சிறைச்சாலைக்குள் நுழைந் தான். நுழையவே, அவன் பொருட்டு அந்தப் பிக்ஷு செய்த தர்மோபதேசத்தை அவன் கேட்டு, பத்தியுள்ளவனாகித் தர்மத்தில்

சேர்ந்து கொண்டான். பிறகு அவன் அந்த யாதனு ஸ்தலத்தை இடிக்கச் செய்து, தான் முன் செய்த தீமைகளுக்கெல்லாம் பச்சாத் தாபப்பட்டான். அவன் தர்ம மார்க்கத்துக்குத் திரும்பின கால முதற்கொண்டு புத்த தர்ம ஸங்கமென்னும் மும்மணிகளையும் மிகக் கொண்டாடி, பச்சாத்தாபம், ஆத்ம விசாரணை, உபவாஸம் இவைகளைச் செய்வதற்கு அடிக்கடி போதி விருட்சத்தினடிக் குச் செல்லத் தொடங்கினன். இதன் காரணமாக அவனுடைய ராணி, "அரசர் அடிக்கடி எங்குச் செல்கின்றனர்?" என்று ஒரு சமயம் கேட்டனள். "போதி விருட்சத்தினடியில் அவர் எப் போதும் இருக்கிருர்" என்று மந்திரிகள் விடை கூறினர். இதைக் கேட்ட ராணி, அரசன் அங்கேயிராத சமயம் பார்த்து, அந்த மாத்தை வெட்டிவிடுவதற்காகச் சில மனிதர்களை அனுப்பினள். வழக்கம்போல அரசன் அங்குச் சென்று, நிகழ்ந்ததைக் கண்ட வுடன் துக்காக்கிராந்தனய் மூர்ச்சையுற்றுக் கீழே விழுந்து விட் டான். மந்திரிகள் அவனுடைய முகத்தில் தண்ணீரைத் தெளித்து வெகு நேரம் கழித்துப் பிரஜ்ஞை வரச்செய்தனர். அப்பால் அர சன் வெட்டுண்ட அடிமரத்தைச் சுற்றி நான்கு பக்கங்களிலும் மண்ணைக் குவித்து, வேர் நனையும்படி நூறு குடம் பாலைச் சொரியும் படி கட்டளையிட்டான். பிறகு அவன் தரையில் சாஷ்டாங்கமாக விழுந்து பணிந்து, "இந்த விருட்சம் தளிர்க்காவிட்டால் நான் இவ்விடத்தை விட்டு எழுந்திருக்கப் போவதில்லை" என்று பிர திஜ்ஞை செய்தான். அப்படி அவன் செய்த மாத்திரத்திலேயே அந்த மரத்தின் வேரிலிருந்து சிறு சிறு கிளைகள் முளைக்கத் தொடங்கின; அது நூற்றிருபது அடிக்குக் கொஞ்சம் குறைவா யுள்ள இப்போதைய உயரம் உண்டாகும் வரையில் வளர்ந்து கொண்டே வந்தது.

இவ்விடத்துக்கு மூன்று லீ தூரம் தெற்கில் குக்குடபாதம் (கோழிக் கால்) என்னும் மலை இருக்கிறது. மஹா காச்யபர் இப் போது இந்த மலைக்குகைக்குள் இருக்கின்றனர். தமக்கென்று ஒரு வழி வகுத்துக் கொள்வதற்காக அவர் மலையடிவாரத்தை இரு பிளவாக்கினர். அவ்வழி இப்போது மூடப்பட்டுளது. இவ்விடத் துக்கு வெகு தூரத்துக்கப்பால் ஒரு மலைச்சரிவில் பிளவு ஒன்றுள் ளது. இதில்தான் காச்யபரின் முழுச்சரீரமும் வைத்துக் காப் பாற்றப்பட்டு வருகிறது. இப்பிளவுக்கு வெளியே, காச்யபர் ஜீவந் தராக இருந்தபோது தமது கைகளைக் கழுவிக்கொண்ட இடமுள் ளது. இந்தப் பிரதேசத்து ஜனங்களுக்குத் தலைவலி நேர்ந்த தானல் இவ்விடத்திய மண்ணைக் கொணர்ந்து மருந்தாகத்

தடவுவர். உடனே தலைவலி குணமாகிவிடும். சூரியன் அஸ்தமிக்கத் தொடங்கியதும், அர்ஹத்துக்கள் வாசத்துக்காக இம்மலைக்கு வருவார்கள். காச்யபருக்கு வழிபாடு இயற்றுவதற்காக இந்த நாட்டிலிருந்தும் வேறு நாடுகளிலிருந்தும் புத்த யாத்திரிகர்கள் இங்கு வருஷந்தோறும் வருகின்றனர். எவருக்காவது சந்தேகத்தினால் இடருண்டாகுமானால், அஸ்தமனமானதும் அர்ஹத்துக்கள் ஒன்று கூடி, யாத்திரிகர்களுடன் தர்க்கித்து அவர்களுடைய சந்தேகங்களையும் இடர்களையும் போக்குகின்றனர். அப்படிச் செய்த பிறகு அந்த அர்ஹத்துக்கள் உடனே மறைந்து போய் விடுகின்றனர். இந்த மலையில் உள்ள புதர்கள் எல்லாம் அடர்ந்தும் ஒன்றையொன்று பின்னிக் கொண்டும் இருக்கின்றன. அன்றியும் சிங்கங்கள், புலிகள், ஓநாய்கள் பல இங்கு மங்கும் அலைந்து திரிகின்றபடியால் மிகுந்த ஜாக்கிரதையுடனன்றிப் பிரயாணம் செய்யமுடியாது.

பா-ஹியன் பாடலிபுத்ரத்துக்குத் திரும்புகாலையில் கங்கைக் கரை வழியே வந்து மேற்கு நோக்கித் பத்து யோசனை நடந்து, புத்தர் சிறிது காலம் தாமதித்திருந்த 'வனுந்தர' விஹாரத்தையடைந்தனர். இதில் பிக்ஷுக்கள் இன்னும் இருக்கின்றனர். பின்னும் கங்கைக்கரை வழியாகவே மேற்கில் பன்னிரண்டு யோசனை தூரத்தில் காசி நாடும் வாரணவசி நகரமும் இருக்கின்றன. இந்த நகரத்துக்குச் சுமார் பத்து லீ வடகிழக்கில் ரிஷிகளின் மிருக (மான்) வன விஹாரம் இருக்கிறது. இந்த வனத்தில் முன்னம் ஒரு பிரத்யேக புத்தர் இருந்தார். இதில் எப்போதும் காட்டு மான்கள் வந்து தங்கும். புத்த பகவான் ஞானோதயம் பெறவிருந்த தருணத்தில் அந்தரத்திலிருந்த தேவர்கள் எல்லோரும், "ஞானத்தை அடையவேண்டி வீடு வாசல்களைத் துறந்து வந்த சுத்தோதன ராஜனுடைய குமாரன் இன்னும் ஏழு நாள்களில் புத்த பதத்தை அடைவார்" என்று சொல்லி ஒரு காதையைப் பாடத் தொடங்கினர். இதைக் கேட்ட அந்தப் பிரத்யேக புத்தர் உடனே நிர்வாணமடைந்தார். ஆதலால் இந்த விஹாரத்துக்கு ரிஷியின் மிருகவனம் என்ற பெயர் வந்தது. உலகங்களால் கொண்டாடப்படும் புத்த பகவான் ஞானோதயம் பெற்றபிறகு, இவ்விடத்தில் பிற்காலத்திய ஜனங்கள் ஒரு விஹாரத்தைக் கட்டினர். பஞ்சவர் என்ற பெயர் பெற்ற அஜ்ஞாத கவுண்டின்யரையும் அவரது துணைவர்களையும் தர்ம மார்க்கத்துக்குக் கொண்டுவரவேண்டுமென்று புத்த பகவான் கருதினர். இதைத் தெரிந்து கொண்ட அவர்கள் ஒருவரோடொருவர் யோசித்து, "இந்த ச்ரமணனை கௌதமன் தினம்

ஒன்றுக்கு ஒரே ஓர் அவிழ் சோறும் ஒரே ஒரு தான்யம் சணலு மாகக் குறைத்து உட்கொண்டு ஆறு வருஷம் காயக்கிலேசம் செய்து கடுந்தவம் புரிந்தான். அப்படியிருந்தும் இவன் ஞானத்தைப் பெற வில்லை. இனி, இவன் ஜன ஸமூகத்தில் சேர்ந்ததினாலும், மனம், மெய், மொழிகளின் மீது கொண்டிருந்த அடக்கத்தை நிவர்த்தித்துக் கொண்டதினாலும் ஞானோதயத்துக்கு இன்னும் குறைவான சந்தர்ப்பங்களையே பெற்றிருக்கிறான். இன்றைக்கு இவன் இங்கு வரும்போது நாம் இவனுடன் பேசுவதை அறவே ஒழிக்க வேண்டும்'' என்று சொல்லிக் கொண்டனர். புத்த பகவான் அங்கு வந்ததும் அவ்வைவரும் எழுந்து நின்று அவரை வணங்கினார்கள். அவ்விடத்தில் ஒரு ஸ்தூபம் எழுப்பப்பட்டிருக்கின்றது. இன்னும் முன் சொன்ன இடத்துக்கு அறுபது தப்படி வடக்கில் பஞ்சவர் எனப்பெயர் பெற்ற கவுண்டின்யரையும் அவருடைய துணைவர்களை யும் தர்மமார்க்கத்துக்குக் கொண்டு வருவதற்காக, பகவான் கிழக்கு நோக்கி உட்கார்ந்து தர்ம சக்கரத்தை உருட்டத் தொடங்கிய இடத்திலும், அவ்விடத்துக்கு வடக்கே இருபது தப்படி தூரத்தில் புத்தபகவான் மைத்ரேயரைப்பற்றி வரப்போகும் விஷயங்களைத் தெரிவித்த இடத்திலும், இதற்குத் தெற்கே ஐம்பது தப்படி தூரத்தில் ஏலாபத்ரன் என்னும் நாகன் தனக்கிருந்த நாகரூபம் எப்போது நீங்குமென்று புத்த பகவானைக் கேட்ட இடத்திலும், இன்னுமுள்ள ஸ்தூபங்கள் எழுப்பப் பட்டுள்ளன. இந்த வனத்தின் நடுவில் பிக்ஷுக்கள் இன்னும் வசிக்கிற இரண்டு ஸங்காராமங்கள் உள்ளன. மிருக வனத்திலிருந்து வடமேற்காகப் பதின்மூன்று யோசனை தூரத்தில் கௌசாம்பி என்ற நாடு இருக்கிறது. புத்த பகவான் முன்னொரு சமயம் தங்கியிருந்த ''கோக்ஷீர வனம்'' என்ற விஹாரம் அங்குள்ளது. அஃது இப்போது பாழ்பட்டுக் கிடக்கின்றது. அங்குப் பெரும்பாலும் ஹீனயான மார்க்கத்தைச் சேர்ந்த பிக்ஷுக்களின் சங்கங்கள் இருக்கின்றன. அவ்விடத்துக்கு எட்டு யோசனை தூரம் கிழக்கில் புத்த பகவான் ஒரு சமயம் தங்கி, ஒரு பூதத்தைத் திருத்தியருளிய இடமுள்ளது. இந்தப் பக்கங்களில் அவர் தாமதித்தபோது அவர் உட்கார்ந்ததும் வியாயாமத்துக்காக நடந்ததுமான பலவிடங்களிலும் ஸ்தூபங்கள் எழுப்பப்பட்டிருக்கின்றன. இங்கே ஏறக்குறைய நூறு பிக்ஷுக்கள் அடங்கிய ஸங்காராமங்கள் இன்னும் இருக்கின்றன.

(தொடரும்)



# கமலாவின் பயம்

பே. கோ. சுந்தரராஜன்

தன் வீட்டுத் திண்ணையின் ஓரத்தில் சாய்ந்து கொண்டு கமலா, தன்னுடைய மூன்று வயதுள்ள சகோதரனுக்குச் சாதம் ஊட்டிக்கொண்டிருந்தாள். அச் சிறு குழந்தை, நெய் கலந்த உணவு தன் வாயினூட்டப்பட்ட ஒவ்வொரு தடவையும், திண்ணை முழுவதும் பற்பலவிதமாய்க் கத்திக் கொண்டு ஓடி விளையாடினான். சில சமயங்களில் சுவரோரத்தில் நின்று கொண்டு எத்தனை தடவை கூப்பிட்டாலும் வராது சிரித்துக் கொண்டேயிருப்பான். கமலா, வாயிற்படிகளைக்கடந்து ஓடி, திண்ணையின் மறுபக்கம் வருவதற்குள் திரும்பித் தான் முன்னிருந்த இடத்திற்கே ஓடி வந்து விடுவான். இம் மாதிரி மழலைச் சொற்களாலும் குறும்புத் தனமான விளையாட்டுக்களினாலும் கமலாவை அங்கு மிங்கும் ஓட வைத்து, அவளுடைய நெற்றியில் முத்துக்கள்போல் வியர்வைத்துளிகள் தோன்றிப் பொட்டு அழியுமளவும் அவளைச் சிரமப்படுத்திக் கொண்டேயிருந்தான். இத்தகைய சந்தர்ப்பங்களில் அவனைக் கண்டிப்பதாகக் கமலா பயமுறுத்தினால் அக்குழந்தை மகிழ்ச்சியுடன் அவளிடம் ஓடிவந்து, அவளுடைய கன்னத்தையும் காதையும் கிள்ளிப் புன் சிரிப்புடன் விளையாடிச் சாந்தப்படுத்த முயல்வான். சாதம் ஊட்டும்போதே அவன் திடீரென்று தன் உதடுகளைப் பலமாய் மூடிக் கொண்டு, தலையை ஆட்டியதால், அவனுடைய தாமரைப் புஷ்பம் போன்ற அழகிய முகம் முழுவதும் சாதம் பூசப்பட்டுத் தோன்றியது.

பெண்களுக்குண்டான இயற்கைப் பொறுமையுடன் கமலா இந்த விளையாட்டுக்களையெல்லாம் பொறுத்துக் கொண்டிருந்தாள். உண்மையில் அக்குழந்தையின் செய்கைகள் அவளுக்குக் களிப்பே யளித்தன. குழந்தையைப் பார்த்துக் கொண்டிருக்கும் போதே, அவள் ஆற்றங்கரையிலிருந்து நீர் நிறைந்த குடங்களைத் தங்களுடைய மெல்லிய இடைகளிலேந்தி வரும் தன் தோழிகளையும், தங்களுடைய சிறந்த ஆடையாபரணங்களை யணிந்து கோயிலுக்குச் செல்லும் பெண்களையும் நோக்கிப் புன்முறுவல் பூத்துத் தலையாட்டிக் கொண்டிருந்தாள். கமலாவே குடும்பத்தின்

முதல் குழந்தையாதலால், அன்று மாலை தன் பெற்றோர் அடுத்த தெருவிற்குச் சென்றிருந்த சமயத்தில், வீட்டு வேலைகளையும் குழந்தையையும் பார்த்துக்கொள்ளும் பொறுப்பு அவளுக்குண்டாயிற்று. அவளுக்கு வயது பதின்மூன்று தான் இருக்கும். கழுத்தினருகில் பிரகாசிக்கும் ஒரு பொன்னுபரணம் அவளுக்கு விவாஹமாய்விட்டதென்பதைத் தெரிவித்தது. அவள் சென்னையில் படித்துக்கொண்டிருந்த தன்னுடைய கணவனைப் பற்றி நினைத்துக்கொண்டிருந்தாளோ, அன்றித் தன்னுடைய தம்பியின் விளையாட்டிலே முற்றிலும் கருத்துடையவளாயிருந்தாளோ நாமறியோம்; அடிக்கடி வீட்டின் உட்புறத்தைக் கவலையோடு பார்த்துக் கொண்டிருந்தாள்.

"போக்கிரிப்பயலே! வரையா, நான் வந்து உதைக்கட்டுமா?" என்று, அக்குழந்தை கமலாவின் கைக்கெட்டாத இடத்தில் படுத்துக்கொண்டு முன்வர மறுத்த சமயம், கமலா பயமுறுத்தினுள். ஆனல் அக்குழந்தை சிறிதும் பயப்படவேயில்லை. தெருவில் நாக்கைத் தொங்கவிட்டுக் கொண்டு, ஆவலோடு நின்று கொண்டிருந்த ஒரு நாய்க்குச் சாதம் முழுவதையும் போட்டுவிடுவதாக மிகுந்த கோபத்துடன் பயமுறுத்தினுள். கமலா அப்படியே செய்யப் போகும் தருணத்தில் வீட்டுக்குள்ளிருந்து ஓர் ஓசை கிளம்பியது. உடனே கிண்ணத்தைத் திண்ணையின்மேல் வைத்துவிட்டு உள்ளே ஓடினுள்.

தனக்குள்ளேயே ஏதோ முணு முணுத்துக் கொண்டு கரியடுப்பிலிருந்த பால்பாத்திரத்தைக் கீழே இறக்கினுள். பால் பொங்கி விட்டதால் சிறிது பாகம் பாத்திரத்தின் மேல் வழிந்து அடுப்பிற்குள் போய்விட்டது. பிறகு ஓர் கிட்டிலில் நீர் நிரப்பி அடுப்பின் மேல் வைத்துச் சிறிது நேரம் விசிறி விட்டு வாசலுக்கு விரைந்து சென்றுள். திண்ணை காலியாயிருந்ததைக் கண்டு திகைப்படைந்தாள். கிண்ணமும், குழந்தையும் மாயமாய் மறைந்து விட்டன.

வெளியில் அந்தி வெளிச்சம் நீங்கி இருட்டு மூடவாரம்பித்தது. தன் இருதயம் படபடவென்று அடித்துக் கொள்ள, தெருவில் மேலும் கீழும் பார்த்தாள்; ஆனல் குழந்தை காணப்படவில்லை. திகிலடைந்து அலறப் போகும் சமயத்தில், கமலா, தன் முன்னுல் பார்க்க நேரிட, தன் வீட்டுக் கெதிரில் சுமார் இருபதுகஜ தூரத்திலிருந்த புளியமரத்தினடியில் குழந்தையைக் கண்டாள்.

உடனே சந்தோஷத்துடன் முன்பாய்ந்த கமலா, மரத்தினடியிலுள்ள இருட்டைப் பார்த்துப் பின்வாங்கினுள். அம்மரத்தில் ஓர்

பிசாசு வசிப்பதாகக்கேள்விப்பட்டிருந்தாளாதலின், சிறிது தயங்கித் தன் தம்பியைப் பெயர் சொல்லி அழைத்தாள். இருள் நிறைந்த அந்நிழலிலிருந்து அக்குழந்தை, "பார் அக்கா, எப்படி தின்கரது! நல்ல நாய், அக்கா; வந்து பாரேன்" என்று தனது திக்கும் மொழிகளில் கூவினன்.

இதைக்கேட்ட கமலாவுக்குக் குழந்தையின் க்ஷேமமே பெரிதாய்த் தோன்றியதனல், தைரியத்துடன் மரத்தினருகில் ஓடினள். குழந்தையோ களிப்புடன் வெள்ளிக்கிண்ணத்திலிருந்த உணவை நாய்க்கு ஊட்டிக்கொண்டிருந்தான். உடனே அவனைத் தன் இடுப்பில் தூக்கிக்கொண்டு கமலா வீட்டுக்குத் திரும்பினள். தான் ஏதோ போற்றத்தகுந்த காரியத்தைச் செய்துவிட்டதாக எண்ணிக்கொண்டிருந்த அக்குழந்தையை நோக்கிக் கமலா, "இரு; துஷ்டப் பயலே, நாயோடே விளையாட்டென்னடா? இன்னிக்கி ராத்திரி அந்த மரத்திலே இருக்கிற பூச்சாண்டியண்டை போட்டுட்ரேன் உன்னை" என்று கண்டித்து, அவனுடைய கன்னத்தை விளையாட்டுத்தனமாக நிமிண்டினள்.

அவளுடைய வார்த்தைகளைக் கொஞ்சமேனும் கவனிக்காமல் மரத்தைப் பார்த்துக்கொண்டிருந்த குழந்தை, "அதோ பார் அக்கா, பெரிய தாடியோடே பூச்சாண்டி போரான்" என்றான். குழந்தையின் வார்த்தைகளை மதிக்காவிட்டாலும், தன் முயற்சியின்றியே கமலா, ஒரு கால் வீட்டுப்படியிலும், மற்றொரு கால் தெருவிலுமிருக்கச் சிறிது பின்னல் திரும்பினள். ஒரு விநாடியே அப்படிப் பார்த்தாள், உடனே ஓவென்றலறிக்கொண்டு வீட்டுக்குள் ஓடினள். அவள் கூச்சலைக் கேட்டு அக்கம்பக்கத்தார்கள் கூடிவிட்டார்கள். ஒரு வயது முதிர்ந்த மாது, கமலாவைத் தன் மடியிலமர்த்திக்கொண்டு அவளுடைய பயத்திற்குக் காரணமென்னவெனக் கேட்டாள்.

மூச்சு விடுவதற்கே கஷ்டப்பட்டுக்கொண்டு கமலா, "அதைப் பார்த்தேன்—அது—மரத்தடியில்—இருந்—இருந்தது" என்றாள்.

"என்னம்மா பார்த்தே? சொல், பயப்படாதே" என்றனர் இரண்டொருவர்.

ஆனல் கமலா ஒன்றும் சொல்லாமல் தன் முகத்தை மூடிக்கொண்டு அழவாரம்பித்துவிட்டாள். உடனே அங்குக் கூடியிருந்தவர்களெல்லோரும் தமக்குத் தெரிந்ததுபோல் தலைகளை யாட்டினர். அக்கூட்டத்திலிருந்த இளம்பெண்கள் புளியமரத்தின் பெயரைக் கேட்டதும் மருண்ட பார்வையுடன் அவ்விடம் விட்டகன்றனர்.

கமலாவின் பெற்றோரும் வந்து சேர்ந்து அவளைத் தேற்றினார்கள். அன்றிரவே அவ்வூர் மந்திரவாதியை அழைப்பித்துக் கமலாவின் பயத்துக்குக் காரணம் தேடினார்கள். அம் மாந்திரிகன் ஏதோ பல மந்திரங்களை உச்சரித்துவிட்டு, புளியமரத்திலிருந்த பிசாசால் கமலா பீடிக்கப்பட்டிருப்பதாகத் தெரிவித்தான். இது, முன்னாலேயே பரவியிருந்த அபிப்பிராயத்தைப் பலப்படுத்தியது.

ஆகவே, அவ்வீட்டைவிட்டு வேறு வீட்டிற்குப் போவதென்று கமலாவின் பெற்றோர் தீர்மானித்தனர். ஆனால் கமலாவின் உடம்பு இளைத்துக்கொண்டே வந்தது. பேத்தலும், புலம்பலும் அடிக்கடி தோன்றின. பல நாட்டுவைத்தியர்களும், மாந்திரீகர்களும் வந்து பார்த்துவிட்டுத் தலையைச் சொறிந்துகொண்டு ஒன்றும் தோன்றாமல் புருவத்தை நெறித்துக்கொண்டு சென்றனர். கமலாவின் தேகஸ்திதியைப்பற்றிக் கேட்ட அவளுடைய கணவன், ஆங்கிலம் படித்த டாக்டர் ஒருவரை அனுப்பினான். அவர் தம்முடைய 'ஸ்டெதாஸ்கோப்' மூலமாய்க் கமலாவைப் பரீக்ஷித்துவிட்டுத் தம்மால்மட்டுமே உச்சரிக்க முடிந்த ஒரு வியாதியின் பெயரைச் சொல்லி அதனால் கமலா தாக்கப்பட்டிருப்பதாகக் கூறினார். கடையிலிருந்து அநேக மருந்துப் புட்டிகள் வாங்கி உபயோகிக்கப்பட்டும் பலனில்லை. கமலாவோ, பாவம்! மிகுந்த கஷ்டத்துக்குள்ளானாள். அவளுடைய தந்தையோ, பிசாசுக் கோளாறு என்பது சுத்த மூடத்தனமென்று கூறிவிட்டார்.

இப்படி சில மாதங்கள் கழிய, நவராத்திரியும் வந்து சேர்ந்தது. பண்டிகைக்கு முதல் நாளிரவு எல்லா வீடுகளிலும் பரபரப்பு அதிகமாயிருந்தது. பெண்கள் பொம்மைகளை அலங்கரித்துக்கொண்டும் செப்புகளுக்காகவும் மற்ற விளையாட்டுச் சாமான்களுக்காகவும் வரிசையாகப் படிகளமைத்துக்கொண்டுமிருந்தனர். கமலா மாத்திரம் முகம் வெளுத்துக் களைகுன்றிப் படுத்த படுக்கையாய்ப் பயம் நிறைந்த பார்வையுடன் தூக்கமின்றி அவதிப்பட்டுக்கொண்டிருந்தாள்.

அதற்கடுத்தநாள் பண்டிகை தினமானதால், ஆற்றங்கரையில் கூட்டம் அதிகமா யிருந்தது. அங்குக் கூடியிருந்த வம்பர் மகாசபையில் வாதிக்கப்பட்ட பல விஷயங்களில் கமலாவின் தேகஸ்திதியும் ஒன்று.

ஒரு கல்லின்மேல் தன் புடவையைத் தோய்த்துக்கொண்டே, "ஏண்டி, கமலாவுக்கு இன்னுமா உடம்பு தேவலையாகல்லே?" என்று கேட்டாள் ஒருத்தி.

"இல்லையே. அது பெரிய பிசாசுன்னு. உனக்குத்தான் தெரியுமே; என் தங்கை நாட்டுப்பொண்ணுக்கு இந்தமாதிரி பிடிச்சிருந்தபோது ஒரு வைத்தியனாலேயும் சாத்தியப்படல்லெ. கடசியிலே மதுரை மீனாக்ஷியம்மன் கோவிலுக்குப் போனதிலே மூணாம் நாளே சொஸ்தமாயிடுத்து" என்று, தன் குடத்தைத் தேய்த்துக் கொண்டிருந்த மற்றொருத்தி கூறினாள். எல்லோரும் தத்தமக்குத் தெரிந்தசம்பவங்களைப்பற்றிப்பேசவாரம்பித்தனர். பேய்களால் பிடிக்கப்பட்டவர்கள் மதுரைக் கோவிலில் சொஸ்தமாக்கப்படும் விஷயம் கமலாவின் பெற்றோருக்கும் எட்டியது. கமலாவின் பாட்டி அவளுடைய தந்தையை எப்படியோ சம்மதிக்கச்செய்து அன்றைய தினமே கமலாவை அழைத்துக்கொண்டு மதுரைக்குப் புறப்பட்டு விட்டாள்.

நவராத்திரி ஒன்பது நாட்களும் மதுரை மீனாக்ஷியம்மன் கோயிலில் எப்பொழுதும் கூட்டம் நிறைந்திருக்கும். அம்மனுடைய சந்நிதியின் முன்னும், பிராகாரத்தைச் சுற்றியும் கூட்டம் கூட்டமாய்ப் பெண்கள் குழுமி அம்மனுடைய வரப்பிரசாதத்திற்காகக் காத்துக்கொண்டிருப்பதை யாவரும் காணலாம். துவஜஸ்தம்பத்தின்முன் கயிற்றால் கட்டப்பட்ட ஒரு பகுதியில் சில பெண்கள் களையிலா முகங்களுடன் கால்மாடு தலைமாடாய்ப் படுத்துக்கொண்டிருந்தனர். அவர்களின் நடுவில் கமலாவும் களைப்புடன் சாய்ந்து கொண்டிருந்தாள். அப்பெண்களிற் சிலர் தலைவிரி கோலமாய் ஆடிக்கொண்டிருந்தனர். அவர்களைப் பிடித்துக்கொண்டிருந்த பைசாசங்களே அம்மனின் உத்தரவுப்படி அவர்களை விட்டுப் போவதற்குள் அவ்வாறு ஆடிக்கொண்டிருந்தன. அங்கே சந்தோஷமான பேய்களும், வருத்தமுள்ளவைகளும், சாந்தமானவைகளும், சிரிப்பவைகளும், குதிப்பவைகளும் உலகத்தில் மனிதர்க்குள்ள ஸ்வபாவங்கள் ஒவ்வொன்றையும் நிதர்சனமாக வெளியிட்டன. ஓர் அழகிய பெண் பல பாஷைகளில் பேசத் தொடங்கினாள். அவளை, படிப்பில் தேர்ந்து பல பாஷைகளிலும் பயிற்சி பெற்றிருந்து தற்கொலை செய்து கொண்ட ஓர் இளைஞனின் அருவம் பிடித்துக்கொண்டிருந்ததாகச் சொல்லினர். உருவில்லா உலகத்துப் பிராணிகளாகிய இந்தப் பிசாசுகளின் ஆட்டங்களுக்கும் சச்சரவுக்கும் மத்தியில், "என்னை விட்டு விடு! நான் போகிறேன்!" என்ற சப்தம் அடிக்கடி கிளம்பியது. அது, மீனாக்ஷியம்மனுக்குப் பயந்து, தான் பிடித்திருந்த பெண்ணை விட்டு நீங்கும் பிசாசின் குரலே. அங்கு வந்திருந்த பெண்களில் சிலருக்கு உடனே சௌக்கியமாயிற்று; சிலருக்குக் கடைசிதினத்தில் விமோசனமாயிற்று; சிலரை, அடுத்த நவ

ராத்திரி உற்சவ சமயத்தில் வரும்படி அம்மன் கட்டளை யிட்டனள். ஆனால் ஒன்பது நாட்கள் காத்திருந்தும் கமலாவுக்கு அருவமும் தோன்றவில்லை; அம்மனும் அருளவில்லை. பாட்டிக்கோ ஒன்றும் புரியவில்லை. பயன் சிறிதுமின்றிக் கமலா தன் பாட்டியுடன் ஊர் திரும்பினாள்.

மதுரையிலிருந்து வந்தது முதல், கமலா எங்குப் பார்த்தாலும் பயங்கரமான உருவங்கள் தோன்றுவதாய்த் தெரிவித்தாள். வம்பர்கள், கமலாவின் வீட்டினுள் அருவம் சென்றதாகவும், கமலா நடுநிசியில் தெருக்களில் அலைவதாகவும் வதந்திகளைப் பரப்பிக் கொண்டிருந்தனர். கமலாவின் பெற்றோர் தம்மாலியன்ற மட்டும் முயன்றும், அவளுக்குற்ற வியாதி என்னவென்றுவது, அதை எப்படி நீக்குவதென்பதையாவது அறிய முடியாதவர்களானார்கள். கடைசியில் ஒன்றும் தோன்றாது விதி விட்டவழி விடட்டுமென்றிருந்து விட்டனர். தன் வயதுள்ள பெண்கள் அநுபவிக்கும் சுகமெல்லாம் கமலாவுக்கில்லாமற் போயிற்று. அவள் மற்றவர்கள் வீடுகளில் நடக்கும் விசேஷங்களுக்குப் போக முடியாதவளானாள். வெள்ளிக்கிழமை தோறும், மாதரும், பெண்டிரும் கூடி மங்களப் பாட்டுகள் பாட நலுங்கிடப்பட வேண்டிய காலத்தில், அந்தோ! ஓர் அறையில் அடைபட்டுத் துன்பமெய்தினாள் கமலா. அருவங்கள் இரும்பை யணுகாவென்ற நம்பிக்கையின் பேரில் அவ்வறையின் வாயிற்படியருகில் ஓர் இரும்புக்கம்பியும் தடையும் கட்டப்பட்டிருந்தது.

ஊர்ப்புறத்தில் வந்திறங்கி, மழையையும் வெய்யிலையும் சிறிதும் இலக்ஷியம் செய்யாமல், தன் தேகத்திற்கு ஒரு பாதுகாப்புமின்றி நிஷ்டையிலிருந்த ஓர் சாமியாரின் விசேஷ சக்தியைப்பற்றி ஊராரெல்லோரும் பேசிக் கொண்டிருந்தனர். அச்சந்நியாசி பிசாசுகளை விரட்டுவதில் சமர்த்தன் என்ற விஷயம் கமலாவின் பாட்டிக்கெட்டியது. உடனே அக்கிழவி, பக்கிரியின் குடிசைக்குப் பறந்து சென்று கமலாவின் கதை முழுவதும் சொல்லி முறையிட்டாள்.

பரதேசியோ, புன்சிரிப்புடன் தன் தாடியை உருவிக்கொண்டிருந்தான். கிழவியின் முறைப்பாட்டிற்கு அவன் அநுதாபப்படாமல் சந்தோஷப்படுவதுபோல் தோன்றியது. சிறிது நேரங் கழித்து, கமலா அவ்வுருவத்தைப் பார்த்த நாள் எதுவென்று வினவினான்.

கிழவி தேதியைச் சொல்லியதும், "ஆ! நான் அப்படித் தான் நினைத்தேன். உம்—அப்பெண் தன் இடுப்பில் ஒரு குழந்தையை வைத்துக் கொண்டிருந்தாளா?" என்றான்.

"ஆம், பாவம்! குழந்தைக்குச் சாதம் ஊட்ற போதுதான் அந் தப்பிசாசு—அது நாசமாய்ப் போக!—அவளைப் பிடித்தது. ஒரு கருப்பு மேகம் போல அது அந்த மரத்து நிழல்லெ போயிண் டிருந்ததாம்" என்றுள் பாட்டி.

அதன் மேல் அந்தக் காஷாயதாரி, அன்றிரவு வீட்டுக்கு வருவதாய்ச் சொல்லிப் பாட்டியை யனுப்பினான்.

இரவு சுமார் எட்டு மணிக்குக் கமலாவின் வீட்டுக் கூடம் ஒரு சிறு கோயிலைப் போல் தோன்றியது. சுவரோரத்தில் ஒரு பித்தளைக் குத்துவிளக்கு தன்னுடைய ஐந்து எரியும் கொழுந்துகளால் மந்த மான ஒளியைப் பரவச்செய்துகொண்டிருந்தது. கீழே ஒரு தட் டில் தேங்காய் பழங்கள் வைக்கப்பட்டிருந்தன. அதனருகில் பர தேசி உட்கார்ந்துகொண்டு கண்களை மூடியவண்ணம் ருத்திராக்ஷ மாலையுடன் நிஷ்டையி லமர்ந்திருந்தான். வீட்டி னுட்புறத்தில் பாத்திரங்களின் ஓசை, கமலாவின் தாயார் சமையல் செய்துகொண் டிருந்ததைத் தெரிவித்தது. சில நிமிஷங்கள் கழித்துப் பரதேசி விளக்கொளியைக் குறைத்துவிட்டுக் கமலாவை அழைத்துவரும்படி சொன்னான்.

பாட்டி உள்ளே சென்று, தடுமாற்ற நடையுடன் வரும் கமலாவைப் பிடித்து அழைத்துக்கொண்டு வந்தாள். அக்கம் பக்கத்தார்களிற் சிலர் கமலா ஆடுவதைப் பார்க்கவேண்டுமென்று வந்து கூடிவிட்டனர். அப்பொழுது நடந்த சம்பவம் அத் திகம்பர சாமியாரைத் தவிர மற்றெல்லோரையும் திடுக்கிடச் செய்தது.

தன் தம்பியை இடுப்பிலிருந்து கீழே இறக்கிவிட்டுப் பர தேசியை நோக்கி வந்த கமலா திடீரென நின்று பயங்கரமான ஒரு கூச்சலிட்டுக் கீழே விழுந்துவிட்டாள். மூர்ச்சையிழந்த கமலா வைத் தன் மடியின்மேலிருத்திக்கொண்டு பரதேசியைப் பயத்துடன் பார்த்தாள் பாட்டி. எல்லோரும் கமலாவைச் சூழ்ந்துகொண்டார் கள். கமலாவின் தாய் தன்னை மறந்து அழ ஆரம்பித்துவிட்டாள். பரதேசி மாத்திரம் ஒன்றும் பேசாமல் தான் முன்னிருந்தபடியே அசைவின்றி உட்கார்ந்துகொண்டிருந்தான். கமலா மெல்லக் கண் களைத் திறந்து பயத்துடன் சுற்றிப் பார்த்தாள்.

"ஐயோ—அவனை விரட்டுங்கள். அதோ—உங்களுக்குத் தெரியவில்லையா—அதோ இருக்கானே புளியமரத்துக்காரன்" என்று பெருங்குரலில் கூவினாள். எல்லோரும் புன்கிரிப்புடன் உட்கார்ந்திருந்த சாமியாரைப் பார்த்தனர்.

"இப்பொழுது உங்களுக்கு எல்லாம் அர்த்தமாகிறது என்று நினைக்கிறேன். கமலா அருவத்தைப் பார்த்ததாகச் சொல்லப்

பட்ட தினத்தன்றே நானும் இவ்வூருக்கு வந்தேனென்பது உங்களுக்கு நினைவிருக்கலாம். அப்பெண் பார்த்தது பேயுமல்ல, பிசாசுமல்ல; இதோ இருக்கும் இந்தக் கட்டையையே (தன்னையே காண்பித்து). இருட்டும் சமயமாதலால், நான் அம்மாத்தடியில் போனதைப் பார்த்ததும் குழந்தை பயந்துவிட்டாள். குழந்தாய், (கமலாவின் தம்பியை நோக்கி) பயப்படாதே எடுத்துக்கொள்'' என்று கூறி நிறுத்தினான், பேய்களையோட்டும் பக்கிரி.

அவன் தன்னைக் கூப்பிடுவதைக் கேட்ட அச்சிறுவன் திடுக்கிட்டு, அப்பொழுதுதான் அச்சந்நியாசியைப் பார்த்து, தான் ஆவலோடு பார்த்துக்கொண்டிருந்த வாழைப்பழங்களை விட்டுத் தன் தாயாரிடம் ஓடிச்சென்று, தன் மழலைச் சொற்களில், "அம்மா, அதோ பூச்சாண்டியிருக்கான். என்னை அவனிடம் போடாதே அம்மா! நான் இன்னமே அழவேயில்லை'' என்று பயத்துடன் கூறினான்.

---

பேரன் புதியதாக வாங்கிக் கொண்டு வந்த கிராமபோன் பாடிக்கொண்டிருந்ததைக் கேட்ட பாட்டி மகிழ்ச்சியடைந்தாள்.

பாட்டி: "இது ரொம்ப நன்னாப் பாடரதே! இதுக்குப் பேர் என்ன?''

பேரன்: "இதுக்கு க்ராமபோன் என்று பெயர்''

பாட்டி: "அப்படின்னா பட்டணம் போன் வேறே இருக்கா?''

* * * *

ராமன் சாப்பிட்டுக்கொண்டிருந்தான். கிருஷ்ணன் அருகில் உட்கார்ந்துகொண்டிருந்தான்.

ராமன்: "நானும் ஒரு மாதமாகப் பெருங்காயம் போடு, பெருங்காயம் போடு என்று மண்டையை உடைத்துக் கொள்கிறேன். கொஞ்சம்கூடக் காணோம்.''

கிருஷ்ணன்: "உண்மையில் மண்டையை உடைத்துக்கொண்டால் பெருங்காயத்தைப் பார்க்கலாமே!''

* * * *

"எனக்கு இருக்கும் தொல்லைகளை யெல்லாம் சொல்லிவிட்டேன். இந்தக் கஷ்டங்களை யெல்லாம் அநுபவிப்பதைவிடத் தற்கொலை செய்து கொள்ளலாம் என்று எண்ணுகிறேன். நீ என்ன எண்ணுகிறாய்?''

"நல்லெண்ணெயும் அரளிவேரும் உபயோகப்படும் என்று எண்ணுகிறேன்''

# அருணசலத்தின் அலுவல்

ரா. கிருஷ்ணமூர்த்தி

I

இது ஒரு கதை. இந்தச் செய்தியை ஆரம்பத்திலேயே நான் வற்புறுத்திச் சொல்லாமற் போனல், ஒருவேளை இதை ஒரு கட்டுரை யென்றோ, பிரசங்கம் என்றோ நினைத்துக்கொள்வீர்கள். மற்றோர் அபாயமும் உண்டு; இதில் வரும் சம்பவம் உண்மையாகவே நடந்தது என்று எண்ணிவிடலாம். அவ்வளவு நிஜம்போலிருக்கும். பிறகு ஆஸாமி யார் என்று தேடப் புறப்படுவீர்கள். தன்னுடைய விஷயம் அவ்வளவு விளம்பரமாவதை என் நண்பன் அருணசலம் ஒருவேளை விரும்பமாட்டான்.

* * *

இந்தப் பரந்த பூமண்டலத்திலே தற்போது தனிமனிதர்கள் முதல் அரசாங்கங்கள் வரையில் எல்லாரையும் திக்குமுக்காடச் செய்துவரும் பெரியபிரச்னை வேலையில்லாத்திண்டாட்டம் அல்லவா? நமது தேசத்திலும் இதுதான் பெரிய திண்டாட்டமா யிருக்கிறது. கருநாடக காந்திமகான் முதல், நவநாகரிகத்திற் சிறந்த ஸர் எம். விஸ்வேஸ்வரையா வரையில் இந்தியப் பிரமுகர்கள் அநேகர் இந்தப் பிரச்னையைப்பற்றிச் சிந்தித்து, இதைத் தீர்த்துவைக்க வழிதேடுகிறார்கள். வேலையில்லாத் திண்டாட்டத்திலும், மத்திய வகுப்பார் அதாவது படித்த ஜனங்களுடைய திண்டாட்டந்தான் மிகக் கொடியது. ஏழைக்குடியானவர்கள், தொழிலாளிகள் முதலியவர்களின் திண்டாட்டம் அவ்வளவு பெரிதல்ல. ஏனென்றால் அவர்களுக்குப் பட்டினி கிடக்கும் வித்தை நன்றாய்த்தெரியவரும். 'சித்திரமும் கைப்பழக்கம்' அல்லவா? பட்டினியும் வயிற்றுப் பழக்கந்தான். ஒரு நாளைக்கு ஒரே வேளை அரை வயிற்றுக்குச் சாப்பிட்டுவிட்டுச் சந்தோஷமாய்க் காலங்கழிக்கக் கிராமத்துக் குடியானவர்களுக்குத் தெரியும். இத்தகைய மனப்பான்மைதான் நமது தேச முன்னேற்றத்திற்கே தடையா யிருக்கிறதென்பது சிலர் கொள்கை. பட்டணங்களிலுள்ள படித்த ஜனங்களின் விஷயம் இப்படியல்ல. ஒருவேளை

காப்பி கிடைக்காவிட்டால் போதும்; அவர்களுடைய வாழ்க்கை சோகமயமாகி விடுகிறது.

இந்த வேலையில்லாத் திண்டாட்டத்திலிருந்து விடுதலையடைய அநேகர் அநேக வழிகளில் முயற்சி செய்கிறார்கள். இவைகளில் சர்வ சாதாரணமாக 100-க்கு 90 பேர் முயன்று பார்க்கும் வழி ஒன்றிருக்கிறது. இதுதான் பத்திரிகைக்கு எழுதுவது. தினசரிப் பத்திரிகையில் ஒரு விசேஷக் கட்டுரையைப் படிப்பார்கள்; அல்லது மாதப்பத்திரிகையில் ஒரு சிறு கதையை வாசிப்பார்கள். "என்ன பிரமாதம்? இதைப்போல் நாம் ஒன்று எழுதக்கூடாதா?" என்று தோன்றும். உடனே பத்திரிகைத் தொழிலில் பர்னர்ட்ஷாவையும் செஸ்டர்ட்டனையும் போல் பணம் சம்பாதிப்பதாகப் பகற் கனவுகள்!

"என்ன எழுதுவது?" என்பது அவர்கள் மனதில் தோன்றும் அடுத்த கேள்வி. "என்ன எழுதுவது?" என்பதையே தலைப்பாகப் போட்டுக்கொண்டு சிலர் எழுதத் தொடங்குவார்கள். "ஒன்றுமில்லை" என்ற தலைப்புடன் ஒரு வெள்ளைக்காரர் பெரிய புத்தகம் ஒன்று எழுதிவிடவில்லையா? வேறு சிலர், வேலையில்லாத் திண்டாட்டத்தையே விஷயமாகக்கொண்டு, "உத்தியோகவேட்டை" என்பது போன்ற தலைப்புக்களுடன் கட்டுரையோ கதையோ எழுதுவார்கள். தங்களுடைய சொந்த அநுபவங்களுடன் கொஞ்சம் கைச்சரக்கும் சேர்த்தால் நல்ல கதையாகிவிடுமென்று நம்பிக்கை.

* * *

இத்தகைய கதை ஒன்றைக் கையிலெடுத்துக்கொண்டு ஒருநாள் அருணசலம் என்னிடம் வந்தான். அவன் என்னுடைய பாலிய நண்பன். ஆனல் இடையில் பல வருஷங்களாக நாங்கள் சந்திக்கவில்லை. அவனுடைய க்ஷேம லாபங்களைப்பற்றிக் கேட்டேன். மூன்று வருஷங்களாக முயன்று பி. ஏ. பரீக்ஷையில் தேறியவரையில் க்ஷேமந்தான் என்றும், அதனல் லாபந்தான் இன்னும் கிடைக்கவில்லை என்றும் கூறினன். வயது இருபத்தைந்து ஆகிவிட்டபடியால் சர்க்கார் உத்தியோகம் பெறும் ஆசையை விட்டுவிட்டானும். மற்றப்படி தன்னுடைய அநுபவங்களை என் கையில் கொடுத்த கட்டுரையில் காணலாம் என்று தெரிவித்தான்.

அதை வாசித்துப் பார்த்தேன். சில அநுபவங்கள் மிகவும் ருசிகரமாய்த்தானிருந்தன. உதாரணமாக ஒன்றை இங்கே குறிப்பிடுகிறேன். ஒரு முறை அருணசலம் ஆங்கிலப் பத்திரிகைகளில் பின்வருமாறு ஒரு விளம்பரஞ் செய்தான்:

விளம்பரம் வெளியான மூன்றும் நாள் கடிதங்கள் வரத் தொடங்கின. அக்கடிதங்களில் பல, பெட்டி நம்பர் 7032-ஐ வாயார மனமார வாழ்த்திவிட்டு ரூ. 1000 தந்தி மணியார்டரில் அனுப்பத் தயாராயிருப்பதாகவும், எப்பொழுது வந்து உத்தியோகம் ஏற்றுக் கொள்ளலாமென்றும் விசாரித்திருந்தன. இப்படி எழுதியவர்கள் வெறும் பி. ஏ. க்கள்மட்டுமல்ல. அவர்களில் சிலர் 'லிடரேசர் ஆனர்ஸ்' பட்டம் பெற்றவர்கள். வேறு சிலர் டைப் ரைடிங், ஷார்ட் ஹாண்டு, புக் கீபிங் முதலியவைகளும் கற்றுத்தேர்ந்தவர்கள்.

உண்மை யென்ன வென்றால்: இங்கிலீஷ் என்னமோ சுலபந் தான்; ஆனால் விளம்பரத்தைக் கண்டதும் அவர்களுக்கேற்பட்ட பரபரப்பினால் விஷயத்தை நன்கு கிரஹிக்க முடியாமல் போயிற்று. அவர்களுடைய கண்கள் விளம்பரம் முழுவதையும் பார்த்தன; அவர்களுடைய வாய்கள் விளம்பரம் முழுவதையும் படித்தன; ஆனால் அவர்களுடைய மனதில்மட்டும் பின்வரும் வார்த்தைகள் தான் பதிந்தன:—"பி. ஏ.—ரூ. 100 சம்பளம்—ரூ. 1000 ரொக்க ஜாமீன்—பெட்டி நம்பர் 7032."

இன்னும் சிலர், விளம்பரத்தைச் சரியாக அர்த்தம் செய்து கொண்டு பதில் எழுதியிருந்தார்கள். ஆனால் அவர்களில் ஒருவரைத் தவிர மற்ற எவரும் மாதம் 30 ரூபாய்க்குமேல் சம்பளம் கொடுக்கத் தயாராயில்லை. அந்த விதி விலக்கான ஒருவர் மட்டும் கேட்டதற்கு மேலேயே, அதாவது மாதம் ரூ. 125 சம்பளம் கொடுப்பதாக எழுதியிருந்தார். இந்தத் தவறுதலினால், அவருக்கு ரூ. 1000 நஷ்டமாயிற்று. மாதம் 80 ரூபாய் அல்லது 90 ரூபாய் சம்பளம் கொடுப்பதாக அவர் எழுதியிருந்தால், அருணசலம் வலையில் விழுந் திருப்பான். கேட்டதற்குமேல் கொடுப்பதாகச் சொன்னபடியால் சந்தேகம் தோன்றி நேரில்போய் விசாரிக்கப் போனான். வால்டாக்ஸ் சாலையில், கரிமூட்டைகள் அடுக்கியிருந்த ஓர் அறைக்குப் பக்கத்து அறையில் மேற்படி நனவானைச் சந்தித்தான். தமது "கர்ரி பவுடர் ஏற்றுமதிக் கம்பெனி" யின் மானேஜர் உத்தியோகத்தை அவர்

அருணாசலத்துக்குத் தருவதாகக் கூறினார். கர்ரி பவுடர் எனப் படும் இந்தியக்குழம்புப் பொடியை வாங்க இங்கிலாந்து, ஆஸ்திரே லியா முதலிய தேசங்களிலுள்ள துரைசானிமார் ஆவலுடன் காத் துக்கொண்டிருக்கிறார்களென்றும், இப்போதுதான் கம்பெனி ஆரம்ப நிலையிலிருக்கிறதென்றும், போகப்போகச் சம்பளம் அதிகம் தருவதாகவும், ஆனால் ரூ 2000 ரொக்க ஜாமீன் கட்டினால் இப் போதே ரூ. 250 சம்பளம் தருவதாகவும் சொன்னார். அருணா சலம் புத்திசாலித்தனமாக, "யோசித்துக்கொண்டு வருகிறேன்" என்று திரும்பி வந்துவிட்டான்.

"கதை எப்படியிருக்கிறது?" என்று அருணாசலம் கேட்டான்.

"நன்றாய்த்தான் இருக்கிறது. ஆனால் கதை முடிவு சுகமில்லை" என்றேன்.

"அதில் என்ன குற்றம்?" என்று கேட்டான்.

"மங்களகரமாக முடியும் கதைகள் எப்போதும் இரண்டாந் தரந்தான். இங்கிலீஷ் கதைகள் படித்திருக்கும் உனக்கு இது தெரிந்திருக்கவேண்டும். 'கலியாணம் செய்து கொண்டு சுகமாக இருந்தார்கள்' என்று முடிப்பது நம்முடைய தேசத்துக் கருநாடக முறை. புதிய முறைக் கதைகளில் கதா நாயகனோ, நாயகியோ அகால மரணமடைய வேண்டியது மரபு. எதிரியைக்கொண்டு கொல்விக்க முடியாவிட்டால், விஷங்குடித்தோ, தூக்குப்போட்டுக் கொண்டோ தற்கொலை செய்விக்கவேண்டும். அல்லது கதா பாத் திரங்களை உயிரோடு விட்டாலும், அவர்களைத் தீராத துக்கத்தி லாவது ஆழ்த்திவிட்டுக் கதையை முடிக்கவேண்டும்" என்று பிரசங் கம் செய்தேன்.

"வாழ்க்கையில்தான் வேண்டிய துக்கம் இருக்கிறதே! கதைக ளாவது சந்தோஷமாய் முடியக்கூடாதா?" என்று கேட்டான் அருணாசலம்.

"வாழ்க்கையில் துக்கம் அதிகமாயிருப்பதால்தான் கதைகளும் துக்கமாய் முடியவேண்டும். அப்போதுதானே உண்மைக்குப் பொருத்தமாயிருக்கும்?"

"சரிதான். ஆனால் இந்தக் கதையைப் பொறுத்தவரையில் அது பொருத்தமில்லை. ஏனென்றால் இதில் வரும் கதாநாயகன் நானே. விஷங்குடித்தோ, தூக்குப்போட்டுக் கொண்டோ உயிர் விட எனக்குச் சிறிதும் விருப்பமில்லை. படிப்பிலும், அழகிலும், குணத்திலும் சிறந்த மனைவியை விட்டுவிட்டு உயிரைவிட யாருக் குத்தான் மனதுவரும்?"

ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விஷயத்தில் பெருமையுண்டு. அருணசலத்துக்கு அவன் மனைவி விஷயத்தில் பெருமை. இப்போது ஸ்ரீமதி சம்பங்கி எல். டி. பரீட்சைக்குப் படித்துக்கொண்டிருந்தாள்.

"அப்படிக்கதையைச் சந்தோஷமாய் முடிப்பதாயிருந்தாலும், நீ முடித்திருக்கும் முறை சரியல்ல. ஒருவேலையும் கிடைக்காமல் கடைசியில் தமிழ்ப்பத்திரிகைகளுக்குக் கதை எழுதத்தொடங்குகிறனென்றும், வெகு சீக்கிரத்தில் பிரசித்த பத்திரிகாசிரியனாகவும், நூலாசிரியனாகவும் ஆகி மாதம் ஆயிரம் ரூபாய் சம்பாதிக்கலானனென்றும் முடித்திருக்கிறாய். இது உண்மைக்கு நேர் மாறுபாடாயிருக்கிறது. நல்ல கதையின் இலட்சணம் அது நிஜம்போல் தோன்றவேண்டும்......"

"கதை இருக்கட்டும், நான் பத்திரிகைகளுக்கு எழுதிப் பணம் சம்பாதிப்பதைப்பற்றி என்ன சொல்கிறாய்?"

பணம் சம்பாதிப்பதற்கு எத்தனையோ வழிகள் இருக்கின்றன. ஸோப்பு விற்றுப் பணம் சம்பாதிக்கலாம். மூக்குப்பொடி வியாபாரம் செய்து லட்சாதிபதியாகலாம். காமகேசரி லேகியம் விற்றுக் குபேரனாகலாம். வெற்றிலை பாக்குக் கடை லாபத்தில் மோட்டார் வைத்துக்கொள்ளலாம். ஆனல் பத்திரிகைக் கெழுதிப் பிழைக்கும் ஆசையிருந்தால் பட்டினி கிடப்பதில் காந்தி மகானுடன் போட்டி போடத் தயாராயிருக்க வேண்டும்."

"வேண்டாம். என்னிடம் ரூ. 2000 இருக்கிறது. அதைக் கொண்டு நானே ஒரு தமிழ்ப்பத்திரிகை நடத்துவதினலென்ன?" என்று வினவி, தமிழ் நாட்டில் வெற்றியடைந்த இரண்டு, மூன்று பத்திரிகையின் பெயரையும் கூறினன்.

சென்ற பத்து வருஷத்திற்குள் தமிழ் நாட்டில் பிறந்து இறந்த தமிழ்ப்பத்திரிகைகளின் ஜாபிதா ஒன்று வைத்திருந்தேன். அதை அவனுக்குப் படித்துக்காட்டி, "இதில் 99 பெயர்கள் இருக்கின்றன. சதம் பூர்த்தியாவதற்கு இன்னும் ஒன்று பாக்கி. வேண்டுமானல் நீ ஆரம்பி" என்றேன்.

II

ஏழெட்டு மாதங்களுக்குப் பிறகு ஒரு நாள் அருணசலம் மறுபடியும் வந்தான். அவன் முகத்தைப் பார்க்க முடியவில்லை. அவ்வளவு சோகமயமாயிருந்தது.

"உன்னிடம் ஏதாவது வைரமிருக்கிறதா?" என்று கேட்டான்.

"வைரமா? என்னிடம் ஏது? விதேசிப் பொருள்களில் எனக்குச் சிரத்தை கிடையாது என்று தெரியாதா?" என்றேன்.

"வேண்டாம்! சுதேசிக் கயிறுவது, நீளமான கயிறுக ஏதாவது இருக்கிறதா?" என்று கேட்டான்.

எனக்குச் சந்தேகம் உண்டாகி விட்டது; "கயிறு எதற்காக?" என்றேன்.

"இன்றைய தினம் என் உயிரை விட்டு விட்டு மறுகாரியம் பார்க்கப் போகிறேன்" என்றான்.

அவனைச் சமாதானப்படுத்தி விசாரித்ததில் விஷயம் என்ன வென்று தெரிய வந்தது. அவன் மனைவி ஸ்ரீமதி சம்பங்கி அம்மாள் எல். டி. பரீட்சையில் தேறி, உபாத்தியாயினி வேலைக்காக முயற்சி செய்துகொண்டிருந்தாளாம். திருச்சினாப்பள்ளியிலுள்ள பெண்களின் ஹைஸ்கூல் ஒன்றில் மாதம் ரூ. 120 சம்பளத்தில் உபாத்தியாயினியாக நியமிக்கப்பட்டிருப்பதாய் அன்றையதினம் உத்தரவு வந்ததாம். "உத்தியோகம் புருஷ லட்சணம்" என்று பெரியோர் சொல்லியிருக்க, மனைவிக்கு உத்தியோகம் ஆனபிறகு, தான் உத்தியோகம் இல்லாமல் எப்படியிருப்பது என்று அருணாசலம் கவலைப்பட்டான். மனைவி சம்பாதித்துப் போட்டுத் தான் சாப்பிட்டுக் கொண்டு மானங் கெட்ட வாழ்வு வாழ்வதைவிட ஏன் இப்போதே பிராணத்தியாகம் செய்து விடக்கூடாது என்பதற்கு நான் ஏதேனும் தக்க காரணம் எடுத்துக் காட்டமுடியுமா என்று வினவினான்.

"உயிர் உள்ள வரை நம்பிக்கைக்கு இடமுண்டு" என்ற மொழியை அவனுக்கு எடுத்துக் காட்டி ஆறுதல் கூறினேன். அவன் இவ்வளவு வைராக்கிய புருஷன் என்பது எனக்குத் தெரியாதென்றும், இனிமேல் கண்ணுங் கருத்துமாயிருந்து ஏதாவது ஒரு வேலை அவனுக்குத் தேடிக் கொடுப்பதாகவும் உறுதி கூறினேன். "இப்போதைக்கு நீ உன் மனைவியுடன் திருச்சிக்குப் போ. என்ன படித்திருந்தாலும் ஸ்திரீதானே? அங்கே திக்குத்திசை தெரியாமல் தவிப்பாள். கொஞ்ச நாளைக்கு நீ அவளுடன் இருக்க வேண்டியது அவசியம்" என்றேன்.

"அப்படியே செய்கிறேன். ஆனால் நீ உன்னுடைய வாக்குறுதியை மறந்துவிடக் கூடாது. 30 ரூபாய் சம்பளம் கிடைத்

தானும் போதும். ஆனால் உத்தியோகமின்றி இனி அதிக காலம் நான் உயிர் வாழமாட்டேன்'' என்று சொல்லிவிட்டுப் போனான்.

* * *

ஐந்தாறு மாதத்திற்குப் பிறகு எனக்குத் தெரிந்த முதலாளி ஒருவர் ஒரு தமிழ் வாரப்பத்திரிகை ஆரம்பிப்பதாகச் சொன்னார்; உதவி ஆசிரியர் ஒருவர் வேண்டுமென்று தெரிவித்தார். உடனே அருணாசலத்தின் ஞாபகம் வந்தது. மூன்று மாதமோ, ஆறு மாதமோ பத்திரிகை நடக்கிறவரையில் நம்முடைய நண்பன் தான் வேலை பார்க்கட்டுமே என்று நினைத்தேன். ஆரம்பத்தில் 30 ரூபாய் சம்பளம் என்று பேசி, அருணாசலத்துக்குக் கடிதம் எழுதினேன். அவனுடைய பதில் எனக்கு ஆச்சரிய முண்டு பண்ணிற்று. மாதம் 55 ரூபாய் சம்பளத்தில் தனக்கு முன்பே உத்தியோகம் ஆகி விட்டதாகவும், சம்பள உயர்வுக்கு இடம் உண்டென்றும் தெரிவித்திருந்தான். என்னுடைய முயற்சிக்காக நன்றி செலுத்தி விட்டுத் திருச்சிக்கு வந்தால் தன் வீட்டுக்கு வாராமல் போகக்கூடா தென்று வற்புறுத்தி யிருந்தான். அலுவல் என்ன என்றுமட்டும் சொல்லவில்லை.

## III

சமீபத்தில் ஒரு காரியமாக நான் திருச்சிக்குப் போக நேர்ந்த போது, அருணாசலத்தை அவசியம் பார்த்து விட்டு வருவது என்று தீர்மானித்தேன். அவனைப் பார்ப்பதில் இருந்த ஆவலை விட, அவனுடைய அலுவல் என்னவென்பதை அறிவதில் அதிக ஆவல் இருந்தது. அவனுடைய கடிதங்களில் அதைப்பற்றி அவ்வளவு மூடுமந்திரம் செய்திருந்தான்.

மாலை ஆறரை மணிக்குமேல் வீட்டில் வந்து பார்க்கும்படி எழுதியிருந்தான். அன்று மாலை எனக்கு வேலையொன்று மில்லாமையால் நாலு மணிக்கே புறப்பட்டு அவன் வீட்டைத் தேடிக் கொண்டு போனேன். வெளிச்சத்திலேயே வீட்டை அடையாளங் கண்டு பிடித்து விட்டால், பிறகு இரவில் சுலபமாகப் போகலாம் என்று எண்ணம். ஐந்து மணிக்கு அவன் வீட்டைக் கண்டு பிடித்தேன். கதவு உட்புறம் தாளிட்டிருந்தது. தட்டினேன். உள்ளிருந்து, "யார் அது?" என்ற சத்தம் கேட்டது. அது அருணாசலத்தின் குரலாயிருக்கவே, "நல்ல வேளை; மறுபடியும் போய்விட்டு வர வேண்டியதில்லை" என்றெண்ணி, "நான் தான், அருணாசலம். கதவைத் திற!" என்றேன்.

அருணாசலம் உள்ளிருந்து "ஊ! ஊ!" என்று ஒரு விநோதமான சத்தம் இட்டான். அடுத்த நிமிஷம் வந்து கதவைத்திறந்தான்.

அவனுடைய கோலத்தைக் கண்டதும் திகைத்துப்போனேன். கலாசாலையில் "டம்பாச்சாரி" என்று பெயர் பெற்ற அருணாசலம் இடுப்பில் ஒரு முழத்துண்டை மூலக்கச்சம் கட்டிக்கொண்டு வந்து எதிரில்நின்றால் திகைக்காமல் என் செய்வது? போதாதற்கு அவனுடைய ஒரு கை ஏதோ மாவில் அளைந்த அடையாளத்துடன் இருந்தது. அச்சமயம் அவன் சமையல் வேலையில் ஈடுபட்டிருந்தான் என்பதைக் கண்டு பிடிப்பதற்கு புத்திக் கூர்மை அதிகம் வேண்டியதில்லை. என்னை மளமளவென்று அழைத்துச் சென்று கூடத்திலிருந்த ஒரு நாற்காலியில் உட்கார வைத்து, "சற்று உட்கார்ந்திரு. இதோ குக்கரை இறக்கிக் குழம்புக்குத் தாளித்துக் கொட்டிவிட்டு வந்து விடுகிறேன்" என்றான். அப்போது அங்கே தொங்கிய தொட்டிலில் கிடந்த ஒரு குழந்தை "வீல்" என்று கத்தியது.

"இந்தப் பயல் அழுதால் கொஞ்சம் தொட்டிலை ஆட்டு. ரொம்பத் துஷ்டன்" என்று சொல்லிவிட்டு உள்ளே போய்விட்டான்.

தலையெழுத்தை நினைத்துக் கொண்டு தொட்டிலை ஆட்டினேன். அப்போது எனக்கு என்ன வெல்லாமோ எண்ணம் தோன்றிற்று. அருணாசலத்தின்மேல் அளவில்லாத இரக்கமுண்டாயிற்று. படித்த பெண்களைக் கலியாணம் செய்து கொண்டால் இந்தக் கதி தான். அவளுந்தான் உத்தியோகம் பார்க்கிறாள்; இவனுந்தான் உத்தியோகம் செய்கிறான். ஆனால் அவளுக்குச் சம்பளம் அதிகமாயிருப்பதால், வீட்டு வேலைகளை யெல்லாம் இவன் செய்ய வேண்டியிருக்கிறது போலும்! அருணாசலத்தின் ரோஷமெல்லாம் எங்கே போயிற்று?

சற்று நேரத்திற் கெல்லாம் சம்பங்கி அம்மாள் வந்தாள். என்னைப் பார்த்ததும், "ஓ! நீங்கள் ஆறரை மணிக்கல்லவா வருவீர்களென்று நினைத்தேன்?" என்றாள். அவள் முகத்தில் ஒரு சிறிது அதிருப்திக்குறி தோன்றியது. ஆனால் உடனே அதை மறைத்துப் புன்னகையுடன், "முன்னால் வந்ததற்குத் தண்டனை தொட்டில் ஆட்டும் வேலை கிடைத்ததாக்கும்" என்று கூறினாள். அப்போது எனக்கேற்பட்ட மனக் குழப்பத்தில் இன்ன பதில் சொன்னேன் என்பதே இப்போது ஞாபகம் இல்லை. ஏதோ உளறியிருக்கவேண்டும்.

இதற்குள் அருணாசலம் சமையலை முடித்து விட்டு, வேஷ்டி சொக்காய் முதலியவை போட்டுக் கொண்டு வந்து சேர்ந்தான்.

பேச்சினிடையில், "இவர் இப்போது உயிரோடிருப்பதற்காக உங்களுக்கு நான் நன்றி செலுத்த வேண்டுமல்லவா? தூக்குப்போட்டுக்கொள்ளக் கயிறு கொடுக்க மாட்டேன் என்று கண்டிப்பாய்ச் சொல்லி விட்டீர்களாமே!" என்று சம்பங்கி சொன்னாள்.

"ஆமாம், வைரங்கூடக் கிடையாது என்று சொல்லி விட்டேன்" என்று நானும் சிரித்துக் கொண்டே கூறினேன்.

"இங்கு வந்த பிறகு கூடக் கொஞ்ச நாள் அப்படித்தான் பயமுறுத்திக் கொண்டிருந்தார். நான் பதிலுக்கு ஒன்று சொல்லிப் பயமுறுத்திய பிறகுதான் அந்தப் பேச்சு நின்றது. சொல்லிவிடட்டுமா?" என்று சம்பங்கி அருணாசலத்தைப் பார்த்தாள்.

"தாராளமாய்ச் சொல். எனக்கு ஆட்சேபமில்லை" என்றான் அருணாசலம்.

"இவர் அப்படி ஏதாவது தற்கொலை செய்து கொண்டு இறந்தால், நான் மறுநாளே பத்திரிகைகளில் 'படித்து உத்தியோகம் பார்க்கும் இளம் விதவைக்குப் புருஷன் தேவை' என்று விளம்பரம் செய்து, மறுமணம் செய்து கொள்வேனென்று கூறினேன். அது முதல் செத்துப் போவதைப்பற்றி வாய் திறப்பதில்லை."

"ஒரு வேளை உத்தியோகம் கிடைத்ததும் அந்தப் பேச்சை மறந்ததற்கு ஒரு காரணமாயிருக்கலாமல்லவா?" என்றேன் நான். ஆரியக் கூத்தாடினாலும்காரியத்தின்மேல் கண் என்பதுபோல், அவனுடைய அலுவல் என்னவென்று தெரிந்து கொள்வதிலேயே என் நோக்கம் இருந்தது.

"அதுவும் ஒரு காரணந்தான்" என்றான் அருணாசலம்.

"எந்த ஆபீஸில் அப்பா, உனக்கு வேலை? அதை நீ சொல்லவேயில்லையே" என்றேன்.

அருணாசலம் சிரித்துக்கொண்டே, "ஆமாம்; நேரில் தான் சொல்ல வேண்டுமென்றிருந்தேன். என்னுடைய ஆபீஸ் இந்த வீடுதான். நீ வந்தபோது செய்துகொண்டிருந்தேனே, அதுதான் என்னுடைய வேலை" என்றான்.

முதலில் எனக்கு ஒன்றுமே புரியவில்லை. அப்புறம் நன்றாக விசாரித்ததில் பின் வரும் ஆச்சரியமான விவரங்கள் தெரிய வந்தன:—

சம்பங்கி அம்மாளுக்குக் கிடைத்த ரூ. 120 சம்பளத்தில், அருணாசலத்துக்கு மாதம் ரூ. 55 சம்பளம் கொடுப்பாளாம். வீட்டுச்செலவுகளுக்குத் தலைக்குச் சரிபாதி போட்ட பின்னர், பாக்கி

மிருந்ததை அவரவர்கள் இஷ்டம்போல் செலவு செய்வார்களாம்; அல்லது சேர்த்து வைத்துக் கொள்வார்களாம். மேற்படி சம்பளம் வாங்குவதற்காக அருணாசலம் சமையல், குழந்தை பார்த்துக் கொள்வது உள்பட எல்லா வீட்டு வேலைகளையும் செய்ய வேண்டியது. ஒருவர் வேலையில் மற்றவர் உதவி செய்வது அவரவர் களுடைய இஷ்டத்தைப் பொறுத்தது.

"ஆமாம், ஸார்! இவர் மாதம் 30, 40 சம்பளத்திற்கு எங்கே யாவது போய் உழைப்பதில் என்ன சாதகம்? இவர் இல்லா மற்போனால் நான் சமையற்காரியும் குழந்தைக்கு நர்ஸும் வைத்தாக வேண்டும். இவரும் வேறெங்கேயோ போய்ச் சேவகம் செய்து, நானும் இங்கே பணம் செலவழிப்பதில் என்ன நன்மை? இப்போது நாங்கள் சேர்ந்து இருப்பதற்கும் வசதியிருக்கிறதல் லவா?" எனச் சம்பங்கியம்மாள் ஆத்திரமாய்ப் பேசினாள். நான் எங்கு ஏதாவது அநுசிதமாய்ப் பேசி, அருணாசலத்தின் மனதை மாற்றி, அவர்களுடைய குடும்ப வாழ்க்கைக்குச் சனியனாய் விடப் போகிறேனோ என்று அந்த அம்மாள் பயந்ததாகத் தோன்றியது. ஆனால் அந்த பயம் அனாவசியமே யாகும். ஏனெனில், அருணா சலம் தன்னுடைய நிலைமையில் முற்றும் திருப்தியுள்ளவனாயிருந் தான். அவனுடைய மனதை மாற்றுவதற்கு யாராலும் முடியாது.

"ஆனால் ஒரு தகராறு இருக்கிறது, அப்பா! அதை நீ தான் பஞ்சாயத்துச் செய்து தீர்த்து வைத்துவிட்டுப் போகவேண்டும்" என்றான்.

"முடியுமானால் செய்கிறேன். அது என்ன?" என்று கேட் டேன்.

"நான் வேலை ஒப்புக்கொண்டு ஒரு வருஷம் ஆகிறது. அவ்வப் போது சம்பளம் உயர்த்தவேண்டுமென்று அப்போது பேச்சு. இந்த வருஷம் பள்ளிக்கூடத்தில் இவளுக்குச் சம்பளம் உயர்த்ாத படியால் எனக்கும் சம்பள உயர்வு கிடையாது என்கிறாள். இது நியாயமா? இவளுடைய சம்பளத்துக்கும் என்னுடைய சம்பளத் துக்கும் என்ன சம்பந்தம்?" என்றான்.

"ஆமாம், ஸார்! உலகமெல்லாம் 100-க்கு 10 சம்பளம் குறைத்திருக்கிறார்கள். இவருக்கு எப்படி, ஸார்! உயர்த்த முடி யும்?" என்றாள் சம்பங்கி.

நான் யோசித்தேன். என்னுடைய அநுதாபமெல்லாம் அருணா சலத்தின் பக்கந்தான் இருந்தது. ஆனால் அவன் பக்கம் பேசுவதில் ஓர் அபாயம் இருப்பதை உணர்ந்தேன். என்னுடைய வீட்டில்

என் மனைவி குடும்ப வேலை பார்ப்பதற்கு இந்த மாதிரி சம்பளம் கேட்கத் தொடங்கினால் நான் தாராளமாய் இருக்க முடியுமா? நீங்கள் தான் இருக்க முடியுமா? ஆகவே இப்போது அருணாசலம் பக்கம் பேசினால் ஆண் குலம் முழுவதற்குமே ஒரு பிரதிகூலத்தைச் செய்தவர்களாவோம் என்று தோன்றியது. தீர ஆலோசித்துப் பின் வருமாறு தீர்ப்புக் கூறினேன்:

"அம்மாளுடைய சம்பளத்துக்கும் உன் சம்பளத்துக்கும் சம்பந்தமில்லை. இதைக் காரணமாய்க் காட்டி உனக்குச் சம்பள உயர்வு இல்லையென்று சொல்வது தவறுதான். ஆனால் நீயும் காரணமின்றிச் சம்பள உயர்வு கேட்கக் கூடாது. உன் உத்தியோகத்துக்கு வருஷாவருஷம் சம்பள உயர்வு சரியன்று. ஒரு குழந்தை அதிகமானால் ஓர் ஐந்து ரூபாய் சம்பளம் அதிகமென்று ஏற்படுத்திக் கொள்வது நியாயமாயிருக்கும்."

இந்தத் தீர்ப்பு, சம்பங்கி அம்மாளுக்கு மிகவும் திருப்தி யளித்திருக்கவேண்டுமென்று தோன்றியது. ஏனெனில், அவள் எங்களிருவரையும் உட்காரவைத்துச் சாப்பாடு பரிமாறினாள். அருணாசலத்தின் வேலையில் உதவி செய்யத் தனக்கு அன்று இஷ்டம் என்று தெரிவித்தாள்.

அவர்களிடம் விடை பெற்றுக் கொண்டு வாசற்படியைத்தாண்டும்போது "இந்த ஏற்பாட்டின் கீழ் அந்தத் தம்பதிகள் சந்தோஷமாய் வாழ்க்கை நடத்த முடியுமா? அவர்களிடையில் அன்பு இருக்குமா?" என்ற எண்ணம் மனதில் தோன்றியது. அப்போது என்னை யறியாமல் நான் விட்டுப் பிரிந்தவர்களைத் திரும்பிப் பார்த்தேன்.

வெட்கங் கெட்டவர்கள்! நான் அப்பால் போகிற வரையில் தாமதிக்கக் கூடாதா?

---

## கிறள்

பண்ணார் கிராப்பில்லாத் தலையிற் பயனிலவே
கண்ணாடி போடாத கண்.

ஒல்லும்வா யெல்லாம் உயர்சோடாப் பானத்தைச்
செல்லும்வா யெல்லாம் செயல்.

சீடை முறுக்கிரண்டு சேர்ந்தாற்போ லேதின்றால்
தாடை வலியைத் தரும்.

# தமயந்தி நாடகம்

ஸ்ரீ.

## முதற் காட்சி

[ஒரு நாடக மேடைமேல் சூத்திரதாரியும் நடியும் பிரவேசிக்கிறார்கள்.]

சூத்திரதாரி :—ஆகா! இறைவனருளால் இன்று நம் நாடக சபை நிறைந்திருக்கிறது. நடீ ! இங்கு வந்திருக்கும் பல ஜனங்களுக்கும் நம்மாலியன்றவரை திருப்தி அளிக்கவேண்டும். இவர்கள்முன் என்ன கதை நடித்துக் காட்டுவது? இராம நாடகமா? ஸ்ரீவள்ளியா? அல்லது தற்கால ஸம்பவங்களை உள்ளபடி காட்டும் நாடகம் ஏதேனும் உண்டா? விஜயகாருண்யமா? பொன் விலங்குகளா? உன் இஷ்டத்தைச் சொல்.

"பழசோ புதுசோ, என்று, பாவையாளே, நீயே சொல்லு"

(பாடி, மேடைமேல் கூத்தாடுகிறான்.)

நடி :—நாதா, தங்களிஷ்டம் கதை எதுவானால் என்ன? வேஷம் எதுவாயினும், 'ஜில்' என்று கண்ணைக்கவரும் ஆடையாபரணங்களை நிரம்பச் சேகரித்து வைத்திருக்கிறேன். விதூஷகன் நன்றாய்க் கோமாளி செய்வான். நமது நாடகத் தலைவியின் குரல் எல்லாருடைய மனத்தையும் களிக்கச் செய்யும் என்பதில் சந்தேகமில்லை. இனித் தாங்கள் என்னை மதித்துக் கேட்டபடியால், தமயந்தி நாடகத்தை நாம் இன்றிரவு நடித்துக் காட்டலாம் என்று எனக்குத் தோன்றுகிறது.

சூத்திரதாரி :—சபாஷ்! எனக்கும் அதுவே இஷ்டம். இனி நாம் காலதாமதம் செய்யலாகாது. பொழுது சென்றுவிட்டது. கதை கூடியவரை இரத்தினச் சுருக்கமாகவே இருக்கட்டும்.

நடி :—அப்படியே; நாடகத்தை வளர்ப்பது பாட்டுக்களே. சில பாட்டுக்களை எடுத்துவிட்டாற் போகிறது. இந்த நாடகத்தில் அதிகப் பாட்டுக்கள் இல்லை.

சூத்திரதாரி :—பெண்ணே! உன் மதியே மதி. எல்லா ஏற்பாடுகளையும் நீயே செய்.

நடி :—எல்லாம் தயாராயிருக்கின்றன. க்ஷணப்பொழுதில்...

(அவர்களிருவரும் உள்ளே போகிறார்கள்.)

## இரண்டாம் காட்சி.

[பின்திரை: ஒரு நந்தவனம். ஒரு கல் மேடைமேல் ஒரு பெண் பூத்தொடுத்துக்கொண்டு நிற்கிறாள். அவளருகில், கையில் ஒரு மயில் விசிறியை ஆட்டிக்கொண்டு மற்றொருத்தி நிற்கிறாள். இருவரும் சரிகைப் பூக் கரைபோட்ட காசிப் புடைவை உடுத்தி, ஒட்டியாணம் அணிந்துகொண்டிருக்கிறார்கள். ஒருத்தி காதில் வைரக் கம்மலும் மற்றொருத்தி காதில் பச்சைக்கல் தோடும் ஜ்வலிக்கின்றன.]

முதல் தோழி :—தமயந்தி ஏன் இன்னும் வரக்காணோம்.

(பாடுகிறாள்)

"இன்னும் வரக்காணேனே, என் சகியை—இன்னும்."

இரண்டாம் தோழி :—(சிரித்துக்கொண்டு) நீதான் அவள்மேல் பிராணனாயிருக்கிறாய். அவளுக்கு வேறு நினைவு கிடையாதா? அவள் காதலனிடமிருந்து ஏதாவது செய்தி வருவதாயிருக்கும்; அதற்காகக் காத்திருப்பாள். அவளுக்கு அப்பொழுது அன்ன ஆகார நினைவுகூடக் கிடையாது.

முதல் தோழி :—பொன்னூரிலிருந்து யாரோ சிலர்...

இரண்டாம் தோழி :—தமயந்திமேல் ஆசைப்பட்டுக் கேட்டது தானே? அது பழம் கதை; எனக்குத் தெரியும். அவள் யாரையும் லக்ஷியம் செய்யமாட்டாள். அவள் நினைத்தபடிதான் கலியாணம் முடியும்.

முதல் தோழி :—அப்படி முடிந்தால் நல்லதுதான். ஆனால் அதற்குப் பல தடைகள் இல்லையோ?

இரண்டாம் தோழி :—சை! பேசாதிரு. அதோ தமயந்தி வருகிறாள்.

(தமயந்தி, பனாரிஸ்பட்டு உடுத்தி "ஆனந்த சாகரமே" என்று பாடிக்கொண்டு தோழிகளிடம் வருகிறாள்.)

முதல் தோழி :—தமயந்தி! என்ன விசேஷம்?

தமயந்தி :—ஒன்றுமில்லை.

(உட்காருகிறாள்.)

இரண்டாம் தோழி:—நேற்றுப் பாடின பாட்டைச் சற்று பாடிக் காட்டேன்.

தமயந்தி :—இப்பொழுது வேண்டாம். இங்கே எவ்வளவு மனோகரமாயிருக்கிறது! இந்தச் சமயத்தில் அழுதாற்போலுள்ள ஒரு பாட்டைப் பாடச்சொன்னால் எப்படி முடியும்?

முதல் தோழி :—ஓகோ! உன் முகத்தைப் பார்த்த உடனேயே நேற்றைக்கின்று உனக்கு உற்சாகம் உண்டாயிருப்பதைக் கண்டு கொண்டேன்.

தமயந்தி :—நீ வெகு கெட்டிக்காரி!

முதல் தோழி:—உனக்கு இப்பொழுது சந்தோஷமில்லை யென்று சொல்லடி.

தமயந்தி:—மாட்டேன். என்னைவிடச் சந்தோஷமுள்ளவர்கள் இந்த நிமிஷத்தில் யாருமேயில்லை.

தோழிமார் :—பார்த்தாயா? உன் தகப்பனார் சம்மதித்துவிட்டாரா? உன் இஷ்டப்படிதானா? சுயம்வரமா ?

தமயந்தி:—(மெதுவாக) சுயம் வரம்.

(தோழிமார் ஆவலாய்க் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் சொல்லிக்கொண்டே தமயந்தி அவர்களுடன் உள்ளே போகிறாள்.)

## மூன்றாம் காட்சி.

[பின்திரை: ஒரு மாடமாளிகை. பல ஜனங்கள் சூழ, தோழிமார் ஹாரத்தி கொண்டுவர, தமயந்தியும் அவள் நாயகனும் மாலையணிந்து கை கோத்து வருகிறார்கள். விதூஷகன் மஞ்சள்நீரை வாரி இறைக்கிறான்.]

தோழிமார்:—(பாடுகிறார்கள்) "மங்களம், ஜயமங்களம்"

(தம்பதிகளும், வேறு சிலரும் உள்ளே போகிறார்கள்.)

வைதீகர்:—என்ன விருந்து! என்ன விருந்து! மூன்று கோசும் பரி, முப்பத்தெட்டுக் கறி, பாயஸம் பத்துவகை, ஹலுவா, ஜிலேபி.

விதூஷகன் :—வாழைப்பழம் வேண்டுமா ? இதோ உரித்து வாயில் போடுகிறேன்.

வைதீகர்:—வேண்டாம் அப்பா, வயிற்றில் இடமில்லை.

விதூஷகன்:—இது சாதாரணப் பழமல்ல. சக்ரகேளி!

(விதூஷகன் பின்தொடர்ந்து பரிகாசம் செய்ய, எல்லாரும் உள்ளே போகிறார்கள்.)

## நான்காம் காட்சி.

[பின்திரை: ஒரு பாழுஞ் சத்திரம். தமயந்தியும் அவள் கணவனும் தூசியடைந்த உடை உடுத்தி, சோர்ந்த முகத்துடன் வருகிறார்கள். தமயந்தி கீழே உட்காருகிறாள். அவள் கணவன் அங்குமிங்கும் உலாவுகிறான்.]

தமயந்தி:—இன்னும் என்ன கஷ்டம் வந்தாலும் என்னால் தாங்கிக்கொள்ள முடியும். நீ எனக்காகக் கவலைப்பட வேண்டாம்.

**கணவன்:**—உன் மனத்தில் தீரமிருக்கிறது. உன் தேகத்தால் தாளவில்லை. நான் சொல்வதைக் கேள்.

**தமயந்தி:**—நீ கூடவந்தாலொழிய நான் தனியே ஊருக்குப் போகமாட்டேன்.

**கணவன்:**—தமயந்தி! உனக்கு என் மனத்தின் நிலைமை தெரியவில்லை. எனக்குப் பைத்தியம் பிடிக்கும்போலிருக்கிறது. எல்லாச் சொத்தும் பாழாய்விட்டது. ஊரார் சிரிக்க உற்றார் வெறுக்க, நான் இன்னார் என்று தெரிந்தவர் முகத்தில் விழிக்க எனக்கு யோக்கியதை யில்லை. உன் வீட்டுக்கு நான் வருவதென்பது முடியாத காரியம். நீ போய்ச் சுகமாயிருந்தால் அதுவே எனக்கு ஆறுதலாயிருக்கும்.

**தமயந்தி:**—உன்னை விட்டுப் பிரிந்தால் எனக்குச் சுகமேது? நீ வீணாய் மனம் கசந்து கொள்ளுகிறாய். ஊரார் என்ன சொன்னால் நமக்கென்ன? நமது கஷ்ட காலத்தில் நம்மைச் சிரிக்கும் ஜனங்களின் மதிப்பு நமக்கு இல்லாவிட்டாலென்ன? சொத்து அழிந்துபோனது நமது கஷ்டகாலம். அதற்காக நீ இவ்வளவு தூரம் மனங்கசந்துகொள்வது, வேண்டாத கஷ்டத்தை விலைக்கு வாங்கிக்கொள்வதுதான். நாம் இருவரும் ஊருக்குப்போனால், எப்படியோ ஒன்றாயிருந்து குடித்தனம் செய்யலாம்.

**கணவன்:**—ஊர் சிரிக்க...

**தமயந்தி:**—சிரித்தவர் வாய் வலிக்கட்டும்.

**கணவன்:**—உனக்குள்ள துணிவு எனக்கில்லை. அவமதிப்புக்கு அஞ்சிப் பிராணனை விடுவதே மேலென்று எனக்குத் தோன்றுகிறது. நான் எங்கேயாவது கண்காணாத ஊரில் தனியே தொலைந்தால் அதுவே நல்லது என்றால் உன் கஷ்டத்தை மாற்ற முடியவில்லை. உன்னால் என் கஷ்டத்தை மாற்றமுடியாது. நீயேனும் போய்ச் சுகமாயிரு.

**தமயந்தி:**—நம் சொத்துத்தானே தொலைந்தது. பிறர் சொத்தை நீ அபகரிக்கவில்லையே? பாவத்துக்கு அஞ்சவேண்டும்; பழிக்கு அஞ்ச வேண்டாம். நீ...

**கணவன்:**—உன் தகப்பனார் வீட்டுக்கு நான் தரித்திரனாய் வந்தால் என்னை எல்லாரும் தூற்றுவார்கள்; நன்றாய்த் தூற்றுவார்கள்.

**தமயந்தி:**—எல்லாம் சில நாளைக்குத்தான். அப்படியும் வேண்டாமானால், வேண்டாம். நானும் போகவேண்டாம்.

**கணவன:**—ஐயோ கஷ்டமே!

(தமயந்தி சாய்ந்து தூங்குகிறாள். கணவன் அவளைவிட்டுப் போய்விடுகிறான்.)

—

## ஐந்தாம் காட்சி.

[பின்திரை: ஒரு வீட்டின் உள்புறம். தமயந்தியின் தகப்பனார் ஒரு நாற்காலியிலும், அவள் தாயும் அத்தையும் ஒரு பெஞ்சுமேலும் உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கிறார்கள்.]

அத்தை:—'சுடச்சுடச் சொல்லுவார்தமர்'. நான் சொன்னால் உங்களுக்கு வருத்தமாயிருக்கிறது. ஊர் வாயை மூடமுடியுமா?

தகப்பனார்:—நீ என்னதான் செய்யவேண்டுமென்று சொல்கிறாய்? பெற்ற பெண்ணை வெளியில் தள்ளுவார்களா?

அத்தை:—வேண்டாம். அவளைச் சற்று அடக்கிவைத்துக்கொள்ளவேண்டாமா? பெற்றபெண் கஷ்டம் வந்தவுடன் நமக்குச் சொன்னாளா? எழுதினாளா? ஆறுமாதம் அகமுடையான் கைவிட்டுப் போனபின்பு அவள்பாட்டில் யார் வீட்டிலோ, எப்படியோ சம்பாதித்துச் சாப்பிட்டாளாமே! உனக்கு ஒரு சங்கதியேனும் தெரியுமா? ஊரார் அதையெல்லாம் சொல்லிக்காட்டாமலிருப்பார்களா?

தகப்பனார்:—அவள் துக்கத்தின் கொடுமை, அவளுக்கு முதலில் நம்மிடம் சொல்லி ஆறவேண்டுமென்றுகூடத் தோன்றவில்லை. அவளிருந்தது ஒரு கோஷா ஸ்திரீயுடன்.

அத்தை:—அதை யெல்லாம் ஒவ்வொருவருக்கும் சொல்லி ரூபிக்க முடியுமா? அவளுடைய துக்கமா அவளையப்படி யிருக்கச் சொல்லிற்று? அவளுடைய நெஞ்சுத் துணிவு.

தாய்:—நம்முடைய கஷ்டகாலம்!

அத்தை:—நீங்கள் பெண்ணை இப்படி வளர்த்துவிட்டீர்கள். குழந்தைமுதல் என் இச்சைப்படி நான் நடப்பேன் என்று சொன்னாள். நீங்களும் விட்டுவிட்டீர்கள். குலத்தில் பிறந்த பெண்ணுக்கு இச்சையாவது இச்சை! அவள் இச்சைப்படி கலியாணமாச்சு; கெட்டலைந்தாச்சு. இவ்வளவும் போதாதென்று, இனிமேலாவது அடங்கிக்கிடக்காமல், பேபரில் விளம்பரஞ்செய்து அகமுடையானைத் தேடப்போகிறாளாம்! அப்படியும் கிடைக்காவிட்டால், தொந்தம் விட்டதென்று, இனி மறுகல்யாணம் செய்துகொள்வதற்குத் தனக்குப் பாத்திய முண்டென்று கோமாளிச் சுப்பனிடம் சொன்னாளாம்.

தாயார்:—ஏதோ பிதற்றுகிறாள்; கேலிப்பேச்சு.

அத்தை:—கேலிப்பேச்சுக்கு இதுவா சமயம்? ஊர்வாய்க்குப் பயந்து 'கப்சிப்' என்றில்லாமல், இவளென்ன இப்படி எல்லாம்

பேசுகிறது? இதைக்கேட்டால் என்ன தோன்றுகிறது? அவள் மாட்டாளா, மதிபோதாதா என்று தோன்றுகிறது. இஷ்டப்படி செய்துகொண்ட கல்யாணத்தை, இஷ்டப்படி ரத்து செய்துவிடலாமே; யாருக்கு என்ன பயம்?

தகப்பனர்:—அவள் படும் சோகத்தைக்கண்டால் நீ இப்படிச் சொல்ல மாட்டாய்.

அத்தை:—சோகப்படுவானேன்; வேண்டுமென்று ஒரு சூதாடியைக் கட்டிக்கொண்டாள். அவன் தொலைந்தான். ஆதரிக்கத் தாயார் தகப்பனரில்லையா? என் இஷ்டம், என் கஷ்டம், என் துக்கம் என்று பெண்கள் தலையெடுக்கக்கூடாது. ஒரு அத்து மீறக்கூடாது. நான் சொல்வதைச் சொல்லியாச்சு. போய்வருகிறேன்.

(போகிருள்.)

தகப்பனர்:—ஐயோ! நான் இந்தப்பெண்ணை அருமையாய் வளர்த்ததே மோசமாய்ப் போச்சு.

(தலையிலடித்துக்கொள்கிருர். தாய் அழுகிருள். தமயந்தி வருகிருள்.)

தமயந்தி:—அம்மா! ஏன் அழுகிருய்?

தகப்பனர்:—எல்லாம் உனக்காகத்தான். நீ மனம்போனபடியெல்லாம் நடக்கப் பார்க்கிருய். ஊரார் இந்த வீட்டின்மேல் கல்லை விட்டெறிகிருர்கள்.

(போகிருர்.)

தமயந்தி:—அத்தைவந்து ஊர்வம்பெல்லாம் சொன்னுளாக்கும்.

தாய்:—ஊர்ப்பேச்சைக் கேட்டு என் மண்டை உடைந்து போகிறது. நீயோ சிலைபோல் நிற்கிருய்.

தமயந்தி:—ஊர் வார்த்தைக்கு எனக்குத் துளிகூட லக்ஷியமில்லை.

தாய்:—அடி பாவிப்பெண்ணே! அவர்கள் என்னவெல்லாம் சொல்கிருர்கள் தெரியுமா?

தமயந்தி:—எனக்குக் கேட்க வேண்டாம். ஊர்வாய்க்குப்பயந்துதான் என் அகமுடையான் ஓடிப்போனுன். நீயும் அப்பாவும் அப்படியே பயப்படுகிறீர்கள்.

தாய்:—நீயும் பயப்படத்தான் வேண்டும். இல்லாவிட்டால் அவர்கள் சொல்லுவதெல்லாம் நிஜந்தான் ஆய்விடும்.

தமயந்தி:—எப்படி, அம்மா? கற்பு, காதல் இதையெல்லாம் விண்டு ரூபிக்க முடியுமா? ஊருக்கு ஒப்புவித்தா நான் கலியாணம் செய்துகொண்டேன்? படாத கஷ்டமும் பட்டேன்? இப்போது

என் நெஞ்சு 'பக் பக்' என்று அடித்துக்கொள்கிறது? ஊரார் பேச்சையும் என்னிடம் வந்து சொல்லாதே.

தாய்:—இந்தக் கஷ்டத்தை யெல்லாம் சகிப்பதைக்காட்டிலும் கிணற்றில் விழுந்து செத்துவிடலாம்.

(இருவரும் போகிறார்கள்.)

## ஆறும் காட்சி.

[சூத்திரதாரி அவசரமாய்ப் பிரவேசிக்கிறான்.]

சூத்திரதாரி:—நடீ, நடீ, உடனே இங்குவா.

(நடி வருகிறாள்.)

இதென்ன கதை! எப்படி முடியப்போகிறது? தமயந்தி கதை என்று சொன்னாயே; பிள்ளையார் பிடிக்கப்போய்க் குரங்கு பிடித்தாற் போலல்லவோ இருக்கிறது, இந்தக்கதை!

நடி:—இது நள நாடகமில்லை. ஆரம்பத்தில் அதை ஒட்டி எழுதின நவீன நாடகம். தமயந்தி நாடகம் அல்லது ஊரார் கொடுமை என்ற பெயருள்ளது. இனிமேல் காட்சிகள் சோகரஸமாயிருக்குமாம். தாங்கள் புதுவிஷய நாடகமாயிருக்கலாமென்று சொன்னீர்களே.

சூத்திரதாரி:—ஐயோ! மோசம் போனேன். இந்தக்கதை எல்லாருக்கும் வெறுப்பைத்தாத்தக்கது. இது ஏன் உனக்குத் தெரியவில்லை. பண்டைக்கால உத்தமிகளின் துணிவையும் தீரத்தையும் கொண்டாடுவது ஜனங்களுக்குள் சகஜம். அந்தப்பேச்சு வேறு; தற்கால ஸம்பிரதாயம் வேறு. இதிலுள்ள விபரீதத்தை எடுத்துக் காட்டுவதில் எவருக்கும் லாபமில்லை. புதிய நாடகமென்றால், ஏதோ தற்கால நாகரிகத்திலுள்ள காபி, டீபன், டிராம், பஸ் இவைகளைப்பற்றி விகடப்பேச்சுக்கள்வர, கதை அழகாய் முடியும் நாடகம் ஒன்றை நீ தெரிந்தெடுப்பாய் என்று நினைத்தேன். பெண்புத்தி இவ்வளவுதான்.

நடி:—இனிமேல் என்ன செய்வது?

சூத்திரதாரி:—போதும், இந்தக்கதை. ஜனங்கள் இப்பொழுதே வெளியே போகப் பார்க்கிறார்கள். கடைசிப் பாட்டைப்பாடி நாடகத்தை முடித்துவிடச்சொல்.

நடி:—அப்படியே.

(உள்ளே போகிறாள்.)

## ஏழாம் காட்சி.

[எல்லா நடிகர்களும் முன் வந்து பாடுகிறார்கள்.]

"எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி
இருந்ததும் இந்நாடே—அவர்
முந்தையர் ஆயிரம் ஆண்டு வளர்ந்து
முடிந்ததும் இந்நாடே—அவர்
சிந்தையில் ஆயிரம் எண்ணம் மகிழ்ந்து
சிறந்ததும் இந்நாடே—இதை
வந்தனை கூறி மனத்தி லிருத்தி என்
வாயுற வாழ்த்தேனே—இதை
வந்தே மாதரம் வந்தே மாதரம்
என்று வணங்கேனே."

---

## குறள்

மகன்றந்தைக் காற்று முதவி உளபோதே
பாகம் பிரித்துக் கொளல்.

தந்தை மகற்காற்றும் நன்றி மதிதோறும்
ரூபாய் அனுப்பி விடல்.

ஈயான் பணத்தை இறுக முடிந்தானைத்
தாயா உலகம் தொழும்.

ரயில்வேகம் கார்வேகம் என்பர்ஏரோப்ளேன்
பயில்வேகம் பாரா தவர்.

# ஜாடிக்கேற்ற மூடி

## குகப்பிரியை

"தை மாதம் பதினைந்து தேதியாகிவிட்டது. இன்னும் ஒன்றும் சரிப்பட்டுவரவில்லை. நானும் சென்ற நான்கு வருடமாய்த் தான் வரன், வரன் என்று அலைகிறேன். கத்தை கத்தையாய் ஜாதகங்கள் வைத்திருக்கிறேன். எல்லாம் பொருந்தித்தான் இருக் கிறது. பணந்தான் தட்டு. வருகிற பையன்களெல்லாரும், பெண் ணுக்குப் பாடத்தெரியுமா ? ஆடத்தெரியுமா ? ஸ்கூல்பைனல் வரை யிலுமாவது படித்திருக்கிறுளா ? என்கிறுர்கள். நான் என்னத் தைச் சொல்லுகிறது. உள்ளபடி சொன்னல் கலியாணமே ஆகாது என்றுதான் தோன்றுகிறது. உன்பாடு, உன்பெண்பாடு; நீ என்ன வேண்டுமானுலும் செய்துகொள். பணம் எப்படியாவது என் தலையை அடகு வைத்தாவது வாங்கிக்கொடுத்துவிடுகிறேன். என்னை மட்டும் அரிக்காதே. நீ என்ன புளுகு புளுகினுலும் நான் ஒன்றும் வாயே திறக்கவில்லை. என்பேரில் ஒன்றும் பழிபோடாதே. பிறகு ஆம், ஊம், என்ருல், நீதானே செய்தாய், நீதானேசெய்தாய் என்று என்னை ஏசிக் காட்டாதே. போதும், போதும்! ஒரு தங்கையின் கலியாணத்திற்கே இந்தப்பாடாய் இருக்கிறதே! இன்னும் ஐந்தாறு தங்கைகளிருக்கிறவன் பாடு கேட்கவே வேண்டாம். அவர்களெல் லோருக்கும் பைத்தியம் பிடிக்காமலிருக்கிறதே, அதுவே பெரிய ஆச்சரியம். என்ன கலியாணம்? இருக்கிறவன் பிராணனை ஓட்ட வாங்கிவிடுகிறது. போதுமே! ஏழேழு தலைமுறைக்கும் போதும்!'' என்று கூறியவண்ணம் தொப்பென்று விசிப்பலகையின்மே லுட் கார்ந்தான் ராமு.

'' என்னமோ, நீயாகப் பார்த்துப் பெரிய மனஸு பண்ணி இந்த மட்டுமாவது உத்தரவு கொடுத்தாயே; அதுவே பெரிய காரியம். நம்ம கோடியகத்துக் கோமதி மைத்துனன் குப்புண்ணிக்குச் சினே கிதனும். ஸிம்லாவிலே வேலையாம். 400 ரூ. சம்பளமாம். இளை யாள். வயது 33 தான். கிரிஸ்மஸ் பண்டிகைக்கு இங்கே வருவானும். ஜாதகம் பாதகம் ஒண்ணும் கிடையாதாம். வந்து பெண்ணைப் பார்த்துப் பிடித்திருந்தால், உடனே நிச்சயம்தான். ஒரு நாள் கலியாணம் பண்ணினுல் போதும் என்கிறுன். என்ன

சொல்லுகிறாய்?'' என்று நிரம்பவும் சாவதானமாய்க் கூறினாள் லக்ஷ்மியம்மாள்.

"அவள் என்ன படித்திருக்கிறாள், என்ன பாடுவாள் என்பானோ என்னவோ. பெண் கருப்பு என்றானால் என்ன செய்கிறது? சும்மா பார்த்துவிட்டுச் சம்மதம் தெரிவிப்பதானாலும் எப்படியாவது சரிப்படுத்திவிடலாம். வடக்கேயிருந்து வந்து குதிக்கப் போகிறபடியால், ஆசாரச்சீர்திருத்தம், நேரில்கேட்டுத்தான் ஆக வேண்டும் என்றால், நாம் இவளுக்கு இங்கிலீஷ் தெரியுமென்று புளுகமுடியாது. பிறகு அவன் ஏதாவது கேட்டு, இது ஏதாவது உளறிவைக்கப்போகிறது ...'' என்று ராமு கூறிக்கொண்டிருக்கையில், "ஏண்டீ, எச்சா! என்னடீ, பேசறே. கல்யாணிக்குக் கலியாணம் பண்ணுகிறதுதானே. அதுதான் நாலுவர்ஷமாச் சல்லடை போட்டு சலிக்கறயே. ஒனக்குத் துப்பில்லே. இல்லாட்டா இதுக்குள்ளே மாப்ளெகள் வந்து ஓங்காத்துப் பொண்ணை ஒனக்கு எனக்குன்னு போட்டி போடமாட்டாளா? நாஞ் சொல்றத்தைக்கேளு. அந்தமாதிரி நட. பங்குனி பத்து தேதிக்குள்ளெ கல்யாணம் நடக்காட்டா என் காதை அறுத்துக்கறேன். என்னமோ ஆண்டிகள் கூடி மடங்கட்டின கதையா நீயும் ஓம் பிள்ளையுமா கூடிக்கூடிக் கும்மியடிச்சா கல்யாணம் நடந்துடுமா? நன்னாருக்கு. போருமே சவரணை'' என்று சொல்லி முகத்தைச் சுளித்து வலித்துத் தன் இருதோள்களிலும் இடித்துக்கொண்டாள் ஆனிப்பாட்டி.

"என் பாட்டி. நீங்கள்தான் சொல்லுங்களேன் ஒரு யுக்தி. எங்கம்மாதான் அசடு. எனக்குந்தான் ஒன்றும் தெரியவில்லை. உங்களைப்போல் யாராவது பெரியவர்கள் சொன்னால் அதன்படி நடக்கலாம். எங்களுக்கு யார் பெரியவர்களிருக்கிறார்கள்?'' என்றான் ராமு.

"அடி எச்சா! நாஞ் சொல்றத்தை நன்னாக் கேட்டுக்கோ. மாப்ளே பொண்ணைப் பார்க்க வரதானா சாயங்காலம் அஞ்சு மணிக்கி மேலேயே வரச்சொல்லு. நல்லதா ரெண்டு 'மாங்காப் பால், தேங்காப்பால், ஆரேசையா, ராட்டினமே, காந்தியோபரம' இந்தமாதிரி புது மோஸ்தர் பாட்டா அடுத்தாத்து அம்புலுவண்டெ சொல்லிகத்துக் குடுக்கச்சொல்லு. ராமுவண்டை சொல்லி, டிக்கிரி, டக்கிரின்னு குட்டிகளெள்ளாம் கத்துமே அதிலே ரெண்டு கத்து வெக்கச்சொல்லு. அப்புறம், வரமே பூமிஸுதா, இன்னம் ஏதானும் ஒரு ச்லோகம் நீயே சொல்லிக்குடு. தேவராஜமுதலி தெருவிலேருந்து, ஒருசவுரியும் இரண்டு ரிப்பனும், மூஞ்சிக்கி ஒத்திக்கற 'மா' பவுடல் எங்கருளே அதையும் வாங்கிண்டு வரச்சொல்லு. நன்னா

சோப்பு தேச்சுக் குளிச்சு அந்த மாவை ஒத்திப்புட்டா, நம்ப கல்யாணி அட்டைக்கரின்னு ஒத்தரும் சொல்லமாட்டா. கைகாலெல்லாம் வெளிலெதெரியாதெ பொளப் பொளப் பொடவெ உடுத்தி, லக்ஷணமா முதுகுப் பொடவெயெ போத்திண்டு எதிரபோய்க் கூட யாரானு வந்தா சேவிக்கச்சொல்லு. வெளக்கெ தீவட்டியாட்டம் வெக்காதெக்கி சிறுசா சாஸ்திரத்துக்கு வெச்சுவை. எவன் தான் மாட்டேங்கருனே பாக்கலாமே. நீங்கபாட்டுக்கு நெனச்சப்போ கொழுந்தெ தோசெக்கரைக்கச்சேயும், தூக்கிக்கட்டிண்டு முத்தம் பெருக்கச்சேயும் தடபடன்னு பட்டப்பகல்லே கூட்டிண்டு வந்தா கருப்புங்கருன்; அம்மைவடுங்கருன். கோர்க்காலியாட்டமா ஒசறங்கருன்னு சொல்றேள். அப்படி அழைச்சுண்டு வருவாளா? நானும் பத்துப் பொண்ணெப் பெத்துக்கொண்டுகுடுத்து சம்பந்தம் பண்ணிருக்கேன். என்னமோ அதிசியமா ஒரு பொண்ணுக்குக் கலியாணம் பண்றத்துக்கு இந்தப்பாடு படறயே! நீ என்வார்த்தையெ பரீக்ஷைவேணு பாரு. நாஞ்சொல்றபடி நட. இந்த லிம்லா மாப்பளெ ஆஹா பண்ணிக்கறேன்னு சொல்லாட்டாப் பாரு. எல்லாம் நாம்ப பண்றதிலேதான் இருக்கு. சீக்கிரமா அவன் தை மாசக் கடெசிலே வரத்துக்குள்ளே கொஞ்சம் பாட்டு கீட்டு எல்லாந் தயார்பண்ணு. அப்பறம் கல்யாணம் நிச்சயமாச்சோ என் நெனவுகூட இருக்காது. வரேண்டீம்மா, நாழியாறது'' என்று திரும்பினுள் ஆனிப்பாட்டி.

"என்ன? நின்றபடியே சொல்லிவிட்டுப் போகிறீர்களே. உட்காருங்கள். உட்கார்ந்தால்தான் கலியாணம் நடக்கும். நின்றுவிட்டுப் போனல் நின்றுபோய்விடும்'' என்றுன் ராமு.

"ஆனு சரி. உக்காரப் போதில்லே. உக்காந்து வந்தூட்றேன். வரேண்டி எச்சா. நான் சொன்னது பத்ரம். அசட்டுப் பிசட்டுன்னு முழிக்காதே'' என்று எழுந்து சென்றுள் பாட்டி.

* * *

"என்னடா, ராமு. நம்ப கல்யாணி நல்ல அதிருஷ்டசாலி. நமக்கு ஒரு செலவுமில்லாமல், வைரத்தோடு, தங்க ஒட்டியாணம், தொட்டிப்பூ புடவை முதலியவைகளெல்லாம் தானேவாங்கித் தானே கலியாணச்செலவும் செய்துகொண்டது ஆச்சரியமில்லையா? 'செக்கச்சிவக்க' மாப்பிள்ளை ராஜாவாட்டமாயிருக்கிறுன். என்ன குறைச்சல். ஒருகாசா, இரண்டுகாசா, 400 ரூபாய் சம்பளம். அவளுக்கென்ன குறைவு. சுகமாய் மகாராணிமாதிரி இருக்கலாம். இத்தனை வருடமாய்த்தட்டினுலும் கடைசியில் வரன் என்னமோ ரொம்ப சிலாக்யந்தான். நம்ம யோக்யதைக்கி எட்டேணி

வைத்தாலும் எட்டாது. எங்கேயாவது ஆயிரங்காலத்துப் பயிராய் நன்னாயிருக்கணும். நல்ல சாது. வாயைத் திறக்கவில்லை; கண்ணை முழிக்கவில்லை. பெண்ணைப்பற்றி அப்படி இப்படி என்று நொண்டு சொல்வானோ என்று ரொம்ப பயந்தேன். நல்லவேளை. உடனே சம்மதித்துவிட்டான். கிரகப்பிரவேசமும் ஆய்விட்டது. நாளைக்கோ நாளன்னைக்கோ சிம்லாவுக்கு அழைத்துப்போய்விடுவான். அப்புறம் அவளுக்கென்ன? ஊருக்கெல்லாம் ஒருபிடி உயர்வாய்த்தானிருப்பாள்'' என்று சந்தோஷமிகுதியினால் ஓயாமல் சளசளவென்று பேசிக்கொண்டிருந்தாள் லக்ஷ்மியம்மாள்.

அவளுடைய சிறுகுழந்தையாகிய ஏழுவயதுள்ள ரகு குதித்துக்கொண்டே ஓடிவந்து, "அம்மா! அம்மா! அக்காவும் அத்திம்பேரும் ரிக்ஷாலே வரா; நான்மின்னாலயே ஓடிவந்தூட்டேன். இன்னொரு வேடிக்கை; தெரியுமா? அம்மா! அத்திம்பேர் தூங்கறச்சே எடது (இடது) கண்ணை மூடிக்கறதேல்லே. நான் நேத்து மத்யானமே பாத்தேன். வெறுன்னெ இருக்கறச்சேகூட கொட்றதேல்லே! அதனாலெ அத்திம்பேர் தூங்கறச்சே திருடன் வந்தாக்கூட அவர் கண்ணைப்பார்த்து முழிச்சுண்ட்ருக்கார்னு நெனச்சுண்டு ஓடியே பேடுவன். அதுக்கோசரம்தான் மூக்குக்கண்ணாடியெ கழட்றதேல்லே'' என்று கூறிக் குதிக்கலானான்.

விஷயம் விளங்கிவிட்டது. அப்பொழுதுதான் மாப்பிள்ளைக்கு ஒரு கண் குருடு, கண்ணாடிக்கண் வைத்துக்கொண்டிருக்கிறான் என்று ராமுவுக்குத் தெரியவந்தது. "அப்படியா! எனக்குத் தெரியவே இல்லையே'' என்று திகைக்கலானான்.

---

## கிறள்

சிறப்பொடும் ஊர்வலம் செல்லாது மோடார்
வறக்குமேல் மன்னர்க்கும் ஈண்டு.

மழைக்காலத் தேவீதி வந்தார்மேல் மோடார்
விழையாதே சேற்றைவீ சும்.

யாம்ருசியாக் கண்டவற்று ளில்லை யெனைத்தொன் றும்
ஆமவடை யல்ல பிற.

# புகையிலையும் தேயிலையும்

தமாஷ்வாலா

புத்தூருக்குப் புகையிலை வந்த அதிசயத்தை நீங்கள் கேட்டிருக்கமாட்டீர்கள். 'காடுமேடெல்லாம் புகையிலை விளையும் இந்தக் காலத்தில் புகையிலை வந்தது ஓர் அதிசயமா?' என்று நீங்கள் நினைக்கிறீர்களல்லவா? புகையிலை நமது நாட்டுச் சரக்கு அல்ல என்பதை உங்களுக்கு முதலிற் சொல்லியிருந்தால் இவ்வளவு தொந்தரவில்லை. பல வருஷங்களுக்கு முன்பு இந்த நாட்டுக்குப் புகையிலை வந்தது. அப்பொழுது அது அதிசயப்பொருளாக எண்ணப் பட்டதென்றால் அது ஒரு தோஷமா?

புத்தூர் மணியகாரக் கவுண்டர்தான் புகையிலையை முதல் முதலில் வாங்கிவந்தவர். அதோடு தேயிலையையும் வாங்கிவந்தார். புகையிலைச் சுருட்டும் தேயிலைச் சருகும்—வற்றலென்றோ, பொடியென்றோ, பாவன தேயிலையென்றோ நீங்கள் சொல்லுங்கள். அதைப் பற்றி இங்கே 'தகராா்' இல்லை—அவர் கொண்டுவந்தார். வந்த அன்றைக்கே ஒரு பிடிச்சபிடித் தேயிலை எடுத்துத் தமது அருமைப் பெண்சாதி கையில் கொடுத்தார். அவள் ஒரு கோணற்சிரிப்புச் சிரித்துக்கொண்டே அதை வாங்கினாள்.

"இதை என்ன செய்யவேணும் தெரியுமோ? முதலில் தண்ணீரை நன்றாகக் கொதிக்கவைத்து அப்புறம் இதைப் போட்டு....."

"சரித்தான்! இது தெரியாதா?" என்று சொல்லிவிட்டுப் போய்விட்டாள் அவள்.

கவுண்டர், "இவளுக்கு எப்படித் தெரிந்தது 'டீ' போட?" என்று ஆச்சரியப்பட்டுக்கொண்டே இருந்தார்.

கொஞ்சநேரம் கழித்துக் கவுண்டர் மனைவி ஒரு தட்டில் ஏதோ சமைத்த கீரையைக் கொண்டுவந்தாள்.

"என்ன இது?" என்றார் கவுண்டர்.

"இதுதான் நீங்கள் கொடுத்த இலை"

"அடி பைத்தியம்! என்ன பண்ணிவிட்டாய்?"

"நீங்கள் சொன்னபடி தண்ணீரைக் கொதிக்கவைத்து அப்புறந் தான் போட்டேன்."

"அந்த ஜலத்தை என்ன பண்ணினாய்?"

"நன்றாக வடிகட்டிவிட்டேன்."

"சட், என்ன முட்டாள்தனம்! அந்தத் தண்ணீர்தானே வேண்டும். நிரம்பத் தெரிந்தவள்மாதிரிப் பேசினாயே. இதைத் தூக்கி வாசலில் எறி. இந்தா, இதை எடுத்துக்கொண்டுபோய்த் தண்ணீரை வடிகட்டிக் கொண்டுவா" என்று பல்லைக் கடித்துக் கொண்டு சொன்னார் கவுண்டர்.

"முந்தியே கஷாயமென்று சொல்லக்கூடாதோ?" என்று முணுமுணுத்துக்கொண்டே அவள் போய்விட்டாள்.

கவுண்டருடைய கோபம் தணிந்தது. தாம் புதிதாக வாங்கிக் கொண்டுவந்த புகையிலைச் சுருட்டைக் கொளுத்திப் பிடித்துக் கொண்டிருந்தார். அந்த ஊராருக்குச் சுருட்டுப் பிடிப்பதே தெரியாது.

அவர் மனைவி மெதுவாக வந்தாள். புகையிலைச்சுருட்டின் புகை எங்கும் பரவியிருந்தது. 'இது என்ன புகை' என்று அவளுக்குச் சந்தேகம். கவுண்டரைப் பார்த்தாள். அவருடைய வாயில் நெருப்பும் புகையும் இருப்பதைக்கண்டு அவள் பயந்தே போய்விட்டாள். அவருடைய பெரிய அழகான மீசையில் நெருப்புப் பிடித்துவிட்டால் அப்புறம் என்ன செய்வது? "ஐயோ, நெருப்பு!" என்று கூவிக்கொண்டு ஓட்டமாக ஓடிவந்தாள். கையிலேயிருந்த சூடான தேயிலைக்கஷாயத்தைச் சடேரென்று கவுண்டர் முகத்தில் ஊற்றிவிட்டு மேலும் ஒரு குடம் தண்ணீரை எடுத்துவந்து ஊற்றுவதற்காக வீட்டிற்குள் ஓடினாள்.

---

## குறள்

சூடான காப்பியுண்டு தூங்காதார்க் கல்லாமல்
நீள்தாகம் போக்கல் அரிது.

செல்வன உண்டு வருமுணவு பார்த்திருப்பான்
நல்விருந்தோட் டற்காரர்க் கு.

# குழந்தையின் கல்வி

## 1. குழந்தையின் வளர்ச்சி

எஸ். ஜகந்நாதன்

மிகவும் உத்கிருஷ்டமான மானிடப் பிறவியை அடைந்த நாம் ஒவ்வொருவரும் அஷ்ட ஐசுவரியங்களில் ஒன்றான புத்திரன் ஒருனைப் பெற்றெடுத்துப் பாராட்டி வளர்க்கவேண்டுமென்று விரும்புகிறோம். 'புத்' என்னும் நரகத்திலிருந்து நம்மை விடுவிக்கவல்லவன் ஒரு புத்திரனே என்று ஹிந்துக்கள் கருதுகிறார்கள். புண்ணிய தீர்த்தங்களில் நீராடி ஆலயங்களைத் தரிசித்துப் பல நாள் தவமிருந்த மகிமையினாலும், பாக்கியவசத்தினாலும், கடவுளது கடாக்ஷத்தினாலும் ஒரு குழந்தை பிறந்து நம்மைச் சந்தோஷிக்கச்செய்கிறது. "அது ஒரு வளரும் வஸ்து, நமக்குச் சந்தோஷத்தை அளிக்கத் தகும் வஸ்து" என்று ஒரு சிறு ஆசையை அடையாமல் அதை நன்கு பழக்கி மனோவளர்ச்சியை விருத்திசெய்து, நல்ல குழந்தையாகச் செய்வது நமது கடமையாகும். ஐந்து வயதில்தான் படிப்பு ஆரம்பிக்கிறதென்றும், ஐந்து வயதில் பள்ளிக்கூடம் அனுப்பி ஓர் உபாத்தியாயரிடம் ஒப்படைத்துவிட்டால் தானே படிப்பு வந்துவிடுமென்றும் நாம் நினைத்து வருகிறது தப்பான கொள்கையாகும். குழந்தை ஜனனகாலம் முதற்கொண்டே அறிவையும் கைக்கொண்டு வருகிறதென்றும் தேக வளர்ச்சியும் மனோவளர்ச்சியும் ஒருங்கு சேர்ந்து வருகின்றன என்றும் நாம் நன்கு அறிந்துகொள்வது அவசியமாகும். குழந்தைகளோடு பழகிவரும் உபாத்தியாயர்கள் மாத்திரமல்ல, குழந்தைகளைப் பரிபாலித்துவரும் பெற்றோர்களும் குழந்தைகளிடம் அபிமானமுள்ள மற்றெல்லோரும் குழந்தையின் கல்வி விருத்தியில் சிரத்தை எடுத்துக்கொள்ளவேண்டும்.

## 2. குழந்தையின் பள்ளிக்கூடம் பாடம் புஸ்தகம் பரீக்ஷை

மேல்நாடுகளில் இரண்டு வயதுக்கு மேற்பட்டு ஐந்து வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்குப் பிரத்தியேகமான பள்ளிக்கூடங்கள், பாடங்கள், புஸ்தகங்கள், பரீக்ஷைகளென்று ஏற்பாடு செய்து வருகிறார்கள். நம்மவர்களில் பலர் "பால்மணம் மாறாத பச்சைக்

குழந்தைகளுக்குப் பள்ளிக்கூடமாம்! பாடமாம்! புஸ்தகமாம்! போதாக்குறைக்குப் பரீக்ஷையாம்! இவையெல்லாம் நவீனக் கலி கால விண்கூத்து'' என்று பரிகாசம் செய்வார்கள். பாலர்களின் **பள்ளிக்கூடம்** என்றால் நான்கு பக்கமும் சுவர் எழுப்பிக் காற்று வெளிச்சம் உள்ளே புகமுடியாத சிறைபோன்ற அறையல்ல. அது ஓடியாடி விளையாடி வரும்படியான ஒரு நந்தவனமாகும். **பாடம்** என்றால் புஸ்தகத்தைப் படிப்பதல்ல. சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரஸம், கந்தம் என்னும் ஐந்து உணர்ச்சிகளைக் கிரகிக்கும் ஐம்புலன்களே குழந்தைகளுக்கு அறிவைப்புகட்டும் ஐந்து கோட்டை வாயில்களாகின்றன இவைகள் வழியாகப் புகும் ஞானமே பாடமாகின்றது. **புஸ்தகம்** என்றால் வெள்ளைக் காகிதத்தில் அச்சுமசியால் இடைவெளியில்லாமல் வார்த்தைகளால் நிரப்பப்பட்ட ஒன்பது பை விலையுள்ள புஸ்தகமல்ல. மனத்தைக் கவரத்தக்க அழகிய வர்ணப் படங்களாலும் குழந்தைகளுக் கேற்ற பாட்டுக்களாலும், கதைகளாலும் நிரப்பப்பட்ட புஸ்தகமும், கண்ணால் பார்த்து, காதால் கேட்டு, கையால் எடுத்து ஆளக்கூடிய சாதனங்களும், உபகரணங்களும், அதன் விளையாட்டுக் கேற்ற விளையாட்டுச் சாமான்களும், இயற்கையிலேயே காணப்படும் மரம், செடி, கொடி, புஷ்பம், மிருகம், பறவைகளும், பொதுவாகச் சொல்லுமிடத்து இந்தப்பேர் உலகமும் குழந்தைகளின் புஸ்தகமாகும். **பரீக்ஷை** என்றால் சரீர சுகத்தை நாடும் பால வைத்திய நிபுணர்கள் செய்யும் பரீக்ஷைகளும் குழந்தை மனோதத்துவ நிபுணர்கள் செய்துவரும் பரீக்ஷைகளுமே தவிரச் சாதாரணமாய் எண், எழுத்து அபிவிருத்தியைக் குறித்துச் செய்யப்படும் பள்ளிக்கூடப் பரீக்ஷையல்ல. மேலே சொல்லிய பரீக்ஷைகள் பெற்றோர்களுக்குப் பலவாறு பயன்படும். ஆகவே குழந்தையின் கல்வியில் சம்பந்தப்பட்டவர்கள் உபாத்தியாயர், பெற்றோர், வைத்தியர், மனோதத்துவ சாஸ்திரி முதலியவர்களும் குழந்தைகளிடத்து அன்பு வைக்கும் எல்லோருமாவர்.

# குழந்தைக் கதை



## ஊசியுடன் தட்டானும் உருண்டு போனதும்

### I

கதை கதையாம் காரணமாம்.
காரணத்தில் ஓர் உழக்காம்;
ஓர் உழக்கு ஓர் உரியாம்;
ஓர் உழக்கு அப்பம் சுட
ஓர் உரி குழக்கட்டை சுட
அப்பம் கொதிக்க, குழக்கட்டை கூத்தாட
குழக்கட்டை வேக வைக்கோலுக்குப் போனேன்.
வைக்கோல் மேலே பாம்பு கிடந்தது.
பாம்பை அடிக்கத் தடிக்குப் போனேன்.
தடி முழுவதும் சேருக இருந்தது.
சேறு அலம்பக் குளத்திற்குப் போனேன்.
குளம் முழுவதும் மீனுக இருந்தது.
மீன் பிடிக்க வலைக்குப் போனேன்.
வலை முழுவதும் கிழிந்து கிடந்தது.
வலையைத் தைக்க ஊசிக்குப் போனேன்.
ஊசி எல்லாம் ஒடிந்து கிடந்தது.
ஒடிந்தஊசியை ஒக்கிட, தட்டானிடம்போனேன்.
தட்டான் ஊசியை ஒக்கிட்டுத் தட்டினுன்.
தட்டின ஊசி தவறிவிழுந்து உருண்டுபோச்சுது.



உருண்டு போன ஊசியைப் பிடிக்க
ஊசியுடன் தட்டானும் உருண்டு போனனும்.

II

உருண்டுபோன தட்டான் ஊசியைஎடுத்தான்.
ஊசியை எடுத்து என்னிடம் தந்தான்.
ஊசியாலே வலை தைத்தேன்.
வலையாலே மீன் பிடித்தேன்.
மீனில்லாக் குளத்திலே தடி அலம்பினேன்.
அலம்பின தடியாலே பாம்பை ஓட்டினேன்.
பாம்பை ஓட்டி வைக்கோல் கொண்டு வந்தேன்.
வைக்கோல்மேலே குழக்கட்டைவேகவைத்தேன்.
அப்பம் கொதித்தது;குழக்கட்டை கூத்தாடினது.

அப்பம் குழக்கட்டை சுட்டு
அணியாகத் தட்டில் வைத்து
ஆற ஆறப் பிட்டுப் பிட்டு
ஆசை தீரத் தின்றேன்.

[சூடாமணி.]

# குழந்தைப் பாட்டு



## அழகு

[குழந்தையின் அழகைப் பாராட்டிப் பாடுதல்.]

திருவாரூர்த் தேரழகு.
திருவிடை மருதூர்த் தெருவழகு.
தென்னூர் மதுரைக் குளமழகு.
மன்னூர் கோயில் மதிலழகு.
தேனுக் கந்தச் சுவையழகு.
ஊருக் கந்த ஆறழகு.
தாருக் கந்த மணமழகு.
பூவில் தாமரைப் பூவழகு.
தேவில் திருமால் தானழகு.
எவருக்கு மில்லை இவ்வழகு.
என்தன் கண்மணி தன்னழகு.

[சூடாமணி.]

---

## எங்கள் ஆனை

[குழந்தையை மடியில் வைத்துக்கொண்டு அங்குமிங்கும் அசைத்தாட்டுகையில் பாடுவது.]

ஆனை ஆனை, அழகர் ஆனை;
அழகரும் சொக்கரும் ஆடும் ஆனை;
கட்டிக் கரும்பை முறிக்கும் ஆனை;
காவேரித் தண்ணீக் கலக்கும் ஆனை;
கலக்கிக் கலக்கி நீர் குடிக்கும் ஆனை;

முறக்காதை வீசும் முகில் நிறத்தானை;
தம்பக்காலால் தரைமேலே நடக்கும் ஆனை;
குழந்தையைக் குழைத்து ஆட்டும் பேர் ஆனை;
அசைந்து அசைந்து ஆடும் மத ஆனை;
ஆடிப்பாடி மகிழும் எங்கள் ஆனை.

[சூடாமணி.]

---

## பாப்பா தந்த முத்தம்*

கிதைகதையாம் காரணமாம்.
காரணத்தில் ஊருணியாம்.
ஊருணியில் புல் முளைத்ததாம்.
புல்லைக்கொண்டு மாட்டுக்குப் போட்டேன்.
மாடு எனக்குப் பால் தந்தது.
பாலைக்கொண்டுபோய், பாட்டியிடம்கொடுத்தேன்.
பாட்டி எனக்குச் செம்பு தந்தாள்.
செம்பைக் கொண்டுபோய், கிணற்றில் இட்டேன்.
கிணறு எனக்கு நீர் தந்தது.
நீரை எடுத்துப் பூச்செடிக்கு விட்டேன்.
பூச்செடி எனக்குப் பூ தந்தது.
பூவை எடுத்துப் பாப்பாவிடம் கொடுத்தேன்.
பாப்பா எனக்குக் கட்டிமுத்தம் தந்தாள்.

[சூடாமணி.]

---

* இது சென்ற மாதம் கலைமகளில் வெளிவந்த, "காக்காய் காக்காய் எங்கே போனாய்" என்ற கதையின் வேறொரு விதமான பாடம். இதில் காக்கை இல்லை. ஆனால், பாட்டியும் பாலும் புதியவை. ப—ர்.




# குழந்தைகள்

வி. விசாலாக்ஷி அம்மாள்

'பொன்னுடையரேனும், புகழுடையரேனும், மற்றென்னுடையரேனும், உடையரோ? இன்னடிசில் புக்களையும் தாமரைக் கைப் பூ நாறும் செய்யவாய் மக்களை இங்கில்லாதவர்?' என்றும், 'குழலினிது யாழினிது என்ப தம்மக்கள் மழலைச் சொல் கேளாதவர்' என்றும் குழந்தைகள் பேச்சிலும், விளையாட்டிலும் தாய்தகப்பன்மார் அடையக்கூடிய ஆனந்தத்தைச் சிலாகித்துக் கவிகள் எழுதியுள்ளார்கள். குழந்தைகள் விளையாட்டைக் கண்டு இன்புறுவதுடன், அவர்கள் சரீரத்திற்கும் மனதிற்கும் ஏற்ற முறைகளில் போஷணை செய்யும் பொறுப்பும் தாய் தகப்பன்மார்களைச் சார்ந்ததே.

அதிலும், 'தொட்டிலை ஆட்டும் கையே பிரபஞ்சத்தை ஆளுகின்றது' என்ற ஆங்கில வசனத்திற்கு ஏற்ப இந்தப் பொறுப்பு சிறு பிராயத்தில் முற்றிலும் தாயைச் சேர்ந்தது. சிறிய வயதில் குழந்தைகளுக்கு நல்ல பழக்கவழக்கங்களைக் கற்பிக்கவேண்டும். இளம்பிராயத்தில் குழந்தைகளுக்குச் சரியான பயிற்சி கொடுத்தலே, பிறகு அவர்கள் தங்களுடைய தேசத்திற்கும் பெற்றவர்களுக்கும் ஒரு பாரமாக இராமல் சீருடன் வாழ்வதற்கு ஒரு முக்கிய ஏதுவாக இருக்கிறது.

குழந்தை பிறந்தநாள் முதல், ஆகாரம், நித்திரை முதலிய விஷயங்களில் ஒழுங்கான பழக்கங்கள் ஏற்படும்படி முயலவேண்டும். இது ஆரம்பத்தில் சற்றுச் சிரமமாகவே இருக்கும். பிறகு, குழந்

தைக்கும் தாய்க்கும் நல்ல சௌகரியம் ஏற்படும். குழந்தைக்கு ஒருநாளைக்கு எத்தனை தரம் ஆகாரம் கொடுப்பது, எத்தனை மணி நேரத்திற்கு ஒருதரம் கொடுப்பது என்ற விஷயங்களைக் குழந்தையின் சரீர ஸ்திதியைக் கவனித்துத் தாய் நிர்ணயிக்கவேண்டும். 'அழும்பொழுதெல்லாம் பால் கொடுக்கவேண்டும்' என்று சொல்லும் பெரியவர்களுக்கும், 'நாலு மணி நேரத்திற்கு ஒருதடவைதான் கொடுக்கவேண்டும்; அதுவும் இரவில் எட்டு மணிக்குப் பிற்பாடு காலை ஆறு மணிவரை கொடுக்கக்கூடாது' என்று கூறும் புதிய தாய்மார்களுக்கும் நடுவில் குழந்தையின் நிலை சிலவேளைகளில் திண்டாட்டமாகிவிடுகிறது. சில குழந்தைகள் இரவில் அழுவதில்லை. பத்து மணிக்குப் பால்கொடுத்துத் தூங்கவைத்தால், பிறகு காலையில் தான் எழுந்திருக்கும். அநேகம் குழந்தைகளுக்கு இரவில் ஒரு முறை ஆகாரம் வேண்டியிருக்கிறது. புஸ்தகத்தில் போட்டிருக்கிறது என்று இரவெல்லாம் அழும் குழந்தையை ஆட்டிச் சமாதானப்படுத்துவதில் யாதொரு பிரயோஜனமும் இல்லை. 'பட்டினியே சீராட்டி'னால் குழந்தை அழாமலிருக்குமா? நல்ல தேகஸ்திதியில் இருக்கும் குழந்தைக்கு மூன்றிலிருந்து நான்கு மணி நேரத்திற்கு ஒருதடவை ஆகாரம் கொடுத்தால் போதும். பலஹீனமான குழந்தைகளுக்கு நேரம் பொறுத்து ஆகாரம் கொடுக்கக்கூடாது. இதெல்லாம் குழந்தையின் சரீரவாகு, ஜீர்ணசக்தி முதலியவைகளைக் கவனித்துத் தாயார் அவற்றிற்கு ஏற்றாற்போல் செய்துகொள்ளவேண்டும். பொதுவாகச் சில விதிகளைச் சொல்லலாம்; பிறகு தேகக் கூறுக்கு ஏற்றாற்போல் அவைகளைக்கூட்டியும், குறைத்தும் செய்துகொள்ள வேண்டும். இவ்வளவு மணிக்கு ஒருதடவை என்று நிச்சயித்தபின் ஒழுங்காக ஆகாரம் கொடுக்கவேண்டும். சிற்சில வேளைகளில் தூங்கும் குழந்தையை எழுப்பவேண்டி இருக்கலாம். இதனால் பாதகமில்லை; 'என், குழந்தை அதிக நேரமாகத் தூங்குகிறது; நெஞ்சு காய்ந்துபோகும்; எடுத்துப் பால் கொடு' என்று நாம் சொல்லுவதில்லையா? ஆரம்பத்தில் உள்ள அசௌகரியத்தைப் பொருட்படுத்தாமல் சற்றுச் சிரமம் எடுத்துக்கொண்டால் குழந்தைகளுக்கும் நல்ல ஒழுங்கான வழக்கங்கள் ஏற்படும்; தாய்மார்களுக்கும் சுகம் உண்டாகும்; பிற்காலத்திலும் அவர்கள் நல்ல பழக்கவழக்கங்களில் ஈடுபட்டுச் சௌக்கியமாக வாழ்வார்கள்.




ஸ்ரீ சங்கராசாரியரவர்கள் விஜயம்: ஆதியில் ஸ்ரீ சங்கர பகவத்பாதர்களால் ஸ்தாபிக்கப்பட்ட பீடங்களில் ஒன்ருகிய காஞ்சி காமகோடி பீடத்தில் இப்பொழுது வீற்றிருக்கும் ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதியவர்கள் சுமார் பதினைந்துவருஷ காலமாய்த் தென்னிந்தியாவில் பல விடங்களிற் சென்று யாவரும் எளிதிலுணரும்படி தர்ம ரகஸியங்களை உபந்நியாஸ வாயிலாய் விளக்கியும், தமது ஆச்ரமத்திற்குரிய தர்மங்களை அனுஷ்டித்துக் காட்டியும் இந்து தர்மத்தை நிலை நாட்டக் கருதி முயன்று வருகிருர்களென்பது யாவரும் அறிந்த விஷயம்.

அம்மகான், இச்சென்னைக்கு இதுகாறும் வாராதிருப்பது குறையெனக் கருதிய பக்தர்களின் வேண்டுகோளுக் கிணங்கிப் புரட்டாசி மாதம் 13உ புதன் கிழமை மயிலாப்பூருக்கு விஜயம் செய்தார்கள். அன்று மாலை 6-மணி முதல் இந்நகர மாந்தர்கள் ஊர் எல்லையிற்சென்று பூர்ணகும்பம் முதலிய உபசாரங்களுடன் காத்திருந்தார்கள். மயிலையிலுள்ள தேவஸ்தானங்களின் அதிகாரிகளும் சகல பிருதுகளுடன் வந்து எதிர்கொள்வதற்குத் தயாராயிருந்தார்கள். சுவாமிகள் அவ்விடம் வந்தவுடன் அவர்களுக்கேற்ற உபசாரங்கள் செய்யப்பட்டன. பிறகு சுவாமிகளைப் பல்லக்கிலேற்றிச் சகல பிருதுகளுடனும் வாத்திய கோஷத்துடனும் அநேக ஆயிரம் ஜனங்கள் சூழக் காபாலீசுவரர் கோவில் நான்கு மாட வீதிகளின் வழியாய் ஊர்வலம் செய்தார்கள். ஆங்காங்கு வீடுகள்தோறும் பூர்ண கும்பம் ஆரத்தி முதலிய மரியாதைகள் செய்யப்பட்டன. இராத்திரி பன்னிரண்டு மணியளவில் ஸமஸ்கிருத கலாசாலையில் புதிதாய் இயற்றப்பட்ட பந்தலில் சுவாமிகள் வந்திறங்கினர்கள். அவர்கள் சிம்மாஸனத்திலமர்ந்தவுடன் கலாசாலைத் தலைமை உபாத்தியாயராகிய பிரம்மஸ்ரீ மகாமகோபாத்தியாய கருங்குளம் கிருஷ்ண சாஸ்திரிகள் தாமியற்றிய சுலோகங்களைப் படித்துப் பொருள் கூறினர். மயிலை வாசிகளுக்காக ஸமஸ்கிருதத்தில் வாழ்த்துரைகள் பிரம்மஸ்ரீ தண்டலம் இராமசுவாமி ஐயரவர்களாலும் பிரம்மஸ்ரீ ஐயாசாமி சாஸ்திரிகளாலும் வாசிக்கப்பட்டன. அதன்பின் பிரம்மஸ்ரீ கி. பாலசுப்பிரமணிய ஐயரவர்கள் தமிழிலும் பிரம்மஸ்ரீ வேங்கடாசல சாஸ்திரிகள் தெலுங்கிலும் நல்வரவு வாழ்த்துக்கள் வாசித்தார்கள்.

பின்னர், சுவாமிகள் மயிலை க்ஷேத்திரத்தின் பெருமை தேவாரத்திலன்றி ஸ்ரீ சங்கர பகவத்பாதர்கள் செய்த தோத்திரங்களிலும் பாராட்டப் பட்டிருப்பதாகக் கூறித் தேவி கற்பகாம்பிகை தன் பெயருக்கேற்றபடி அனைவரையும் ஆதரிப்பாளென்று அனுக்கிரகித்தார்.

மறுநாள் சுவாமிகள் இவ்வூருக்கு விஜயஞ் செய்ததற்காக ஆயிரத்திற்கு மேற்பட்ட ஏழை ஜனங்களுக்கு அன்னமளிக்கப்பட்டது. சுவாமிகள் அவர்களுக்குத் தரிசனங் கொடுத்தருளினார்கள். வியாழன் வெள்ளி இரண்டு தினங்களிலும் சுவாமிகள் திரிபுரசுந்தரீ ஸமேத சந்திரமௌலீசுவரர் பூஜையை வெகு விமரிசையாய் நடத்தியதுடன் இரவில் உபந்நியாஸங்களும் செய்தார்கள். பிறகு நவராத்திரி தினங்களில் சுவாமிகள் மௌன விரதத்தோடு பூஜை செய்தார்கள். தினந்தோறும் ஆயிரக் கணக்கான மாந்தரும் மங்கையரும் வந்து தரிசனஞ்செய்து தீர்த்தம் முதலிய பிரஸாதங்களைப் பெற்றார்கள். ஒவ்வொரு தினமும் ஆயிரத்திற்குக் குறைவில்லாமல் பிராமண போஜனமும் நடைபெற்று வருகிறது. அதற்காகவும் பூஜை முதலியவற்றிற்காகவும் வேண்டும் பொருளைக் கனவான்கள் தினத்திற் கொருவராகச் சுவாமிகளுக்குச் சமர்ப்பித்து வருகிறார்கள்.

டி. எஸ். ரா.

ஆயிரம் ரூபாய்த் தமிழ்ப் பரிசு: திருப்பனந்தாளிலுள்ள ஸ்ரீகாசி மடாலயத்துத் தலைவர் வருஷந்தோறும் சென்னைச் சருவகலாசாலையாரால் நடத்தப்பெறும் தனித்தமிழ் வித்வான் பரீட்சையில் முதல் வகுப்பில் முதல்வராகத் தேர்ச்சி பெறுபவருக்கு ஆயிரம் ரூபாய்ப் பரிசு ஒன்று வழங்கி வருகின்றார். அதற்காக அமெரிக்காவிலுள்ள ஓர் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியில் ரூ. 40,000-க்கு இன்ஷ்யூர் செய்திருக்கிறார். இந்தப் பரிசு இந்த வருடம் நாலாவது முறையாகத் திருச்சி நேஷனல் கல்லூரித் தமிழ்ப் பண்டிதர் ஸ்ரீமான் தி. பொ. பழனியப்பப்பிள்ளையவர்களுக்கு வழங்கப்பட்டது. பரிசளிப்புக் கொண்டாட்டம் மதுரையில் எட்வர்டு ஹாலில் 1-10-1932-இல் இராமநாதபுரம் மகாராஜா ஸ்ரீமத் ஷண்முகராஜேசுவர நாகநாத ஸேதுபதி அவர்கள் தலைமையில் நடைபெற்றது. காசிமடாலயத் தலைவர் சார்பாக பிரம்மஸ்ரீ மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் விடுத்த அழைப்புக்கிணங்கப் பல வித்வான்களும் உத்தியோகஸ்தர்களும் கனவான்களும் வந்திருந்தனர். இந்தத் தமிழ்ப் பரிசைப் பாராட்டிப் பலர் பேசினார்கள்.




திருப்பாதிரிப் புலியூர் ஸ்தல மான்மியம்: [ஸ்ரீமான் சு. கு. கோவிந்த சாமிப்பிள்ளை அவர்கள் எழுதியது; ஸ்ரீவாணி விலாச புத்தகசாலை, திருப் பாதிரிப் புலியூர்; விலை கிளேஸ் 8 அணா—ரப் 6 அணா.]

தேவாரம் பெற்ற சிவ ஸ்தலமாகிய திருப்பாதிரிப் புலியூருக்கு ஸ்ரீ சிதம் பரநாத முனிவர் என்பவரால் செய்யுள் வடிவில் இயற்றப்பெற்ற ஒரு புரா ணம் உண்டு. அதனைப் பெரும்பாலும் தழுவி எழுதப்பட்ட வசன உருவில் உள்ளது இப்புத்தகம். நல்ல நடையில் எழுதப்பட்டிருக்கிறது. பல அறி ஞர்கள் இதற்குச் சிறப்புப்பாயிரம் அளித்திருக்கிறார்கள்.

ஆல்கபோன்: [ஸ்ரீமான் டி. எஸ். கனகசபை அவர்கள் எழுதியது; ஸ்ரீவாணி விலாச புத்தகசாலை, திருப்பாதிரிப் புலியூர்; விலை 8 அணா.]

அமெரிக்கா தேசத்திலே சட்ட வரம்புக்கு மீறிய பல காரியங்களைச் செய்து பிரசித்தி பெற்றுள்ள ஒரு கொள்ளைக்காரனுடைய உண்மை வர லாறு இது; ஆங்கிலத்திலிருந்து மொழிபெயர்க்கப்பட்டது. இதிற் சில பகுதி கள் 'இந்தியா வாரப்பதிப்'பில் வெளி வந்துள்ளன. இப்போது இது முழுதும் வெளியிடப்பட்டுளது. இடையிடையே பல படங்கள் அமைந்துள்ளன.

பிம்ப தர்சனி: [ஸ்ரீமான் என். கோபால நாயுடு அவர்கள் இயற்றியது; என். கோபால் அண்டு கம்பெனி, சென்னை; விலை 8 அணா.]

ஒரு காகிதத்தின் மீது சித்திரித்த படத்தினுடைய உருவத்தை உலோ கத்தின் மீது சாயாக்கிரஹண முறையினால் அச்சுக் கூடங்களுக்கு உபயோக மாகும் சித்திர உருவ அச்சுக்களாகச் செய்யும் முறைகள் இப்புத்தகத்தில் சொல்லப்படுகின்றன. இதனை எழுதியவர் இயன்றவரையில் குறைந்த செலவில் அச்சுக்களைச் செய்யும் முறைகளைச் சொந்த அனுபவத்தாலறிந்து சொல்லியிருக்கிறார். விஷயத்தை விளக்கும் படங்கள் இடையிடையே அமைந்துள்ளன. இதன் தமிழ்நடை திருந்தியதாக இல்லாவிட்டாலும் இதிலுள்ள விஷயங்கள் அரியனவாக உள்ளன. இத்தகைய நூல்கள் தமி ழில் அதிகமாக வெளிவரவேண்டும். தமிழர்கள் இதனை ஆதரிப்பார்க ளென்று நம்புகிறோம்.

**ஸ்ரீ சிவபக்த விலாஸம்:** [நாகரலிபி; மதராஸ் லா ஜர்னல் பிரெஸ், மயிலாப்பூர்; விலை ரூ. 2—8—0.]

சிவனடியார்களாகிய அறுபத்து மூன்று நாயன்மார்களது சரித்திரமாகிய பெரிய புராணத்தைப் போற்றுதார் தமிழுலகிலில்லை. அச்சரித்திரங்கள் வடமொழிச் சுலோக ரூபத்தில் சொல்லப்பட்ட சிவபக்த விலாஸமென்னும் ஒரு பழைய நூலுளது. அதைப் பல ஏட்டுப்பிரதிகளைக் கொண்டு பிழையறப் பரிசோதித்து மகாமகோபாத்யாய பிரம்மஸ்ரீ கருங்குளம் கிருஷ்ண சாஸ்திரிகளவர்கள் பதிப்பித்திருக்கிறார்கள். இந்நூல் வடமொழியறிஞர்கள் சிவனடியார்களின் சரித்திரத்தை அறிதற்குரிய முக்கிய ஸாதனமெனக் கருதுகிறோம். இதிலுள்ள சுலோகங்கள் தெளிவாயும் பக்தி ரஸத்தை ஊட்டுவனவாயுமிருக்கின்றன.

**புகழேந்திப் புலவர் வரலாறு:** [ஸ்ரீமான் சி. கு. நாராயணசாமி முதலியார் எழுதியது; கிடைக்குமிடம்: 139, தாமஸ் வீதி, கோயம்புத்தூர்; விலை 8 அணா.]

புலவர்களுடைய உண்மை வரலாறுகள் தமிழ் மொழியில் மிகச் சிலவே உள்ளன. பல புலவர்களைப் பற்றித் தமிழ் நாட்டில் வழங்கி வரும் பல வரலாறுகள் அவ்வக் காலத்துக் கற்பனைத் திறனுடையவர்களாற் சிருட்டிக்கப் பட்டனவாகவும் அமைகின்றன. இங்ஙனம் வழங்கும் புலவர் சரிதங்களுள்ளே அடங்கியுள்ள ஒருவகைப் பொது அமைப்பே ஒரு செய்தியைப் பார்த்து மற்றொன்று ஆக்கிக் கொண்டது என்னும் உண்மையைத் தெரிவிக்கும். பல நூற்றாண்டுகள் இடையிலிருந்த புலவர்களைச் சமகாலத்தவர்களாக்கி அவர்களுக்குட் சிண்டு முடிந்து விட்டுச் சில தனிப்பாடல்களைச் சிருட்டித்து நாடகம் அமைத்துப் புலவர் வரலாறாகப் போற்றி வரும் வழக்கு, தமிழ் நாட்டில் மலிவு. ஒரு புலவருக்குப் பெருமை தர வேண்டுமென்னும் ஒரு கொள்கையின் மேல் ஏனைய புலவர்களைத் தாழ்த்துவதும் காலம் இடம் நிகழ்ச்சி முறைகளில் முழங்காலுக்கும் மொட்டைத் தலைக்கும் முடிச்சுப் போடுவதும் உண்மை வரலாறாகா. இப்பொழுது வழங்கும் புலவர் சரிதங்களில் இத்தகைய குப்பைகள் அதிகம். அவற்றைத் தூற்றிக் களைந்தெறிந்து உண்மையைக் கண்டுணர்தல் மிக்க அரியதொரு செயலாகும். சில காலமாகப் பல நூல்களின் வெளியேற்றமும் சாஸனங்களும் புலவர் பலருடைய வரலாற்று வீதியை விளக்கிட்டு வருகின்றன.

இப்புத்தகம் புகழேந்திப் புலவரைப் பற்றிக் கூறப்பட்டுவரும் பல வகை வரலாறுகளை எடுத்துக் கொண்டு ஆராய்வது. இப்பொழுது கிடைக்கும் பல சாதனங்களையும் தொகுத்து வைத்துக் கொண்டு அறிந்த செய்திகளை முறையே ஆராய்ந்து முடிவு கண்டுள்ள இந்த நூலின் போக்கு ஒரு புது முறையாக அமைந்துள்ளது. இறுதியில் நளவெண்பாவைப் பற்றிய ஒரு சிற்றாராய்ச்சியும் எழுதப்பட்டுளது. தமிழ் நாட்டார் இவ்வாசிரியரது முயற்சியை ஆதரித்து ஊக்குவார்களென்று நம்புகிறோம்.

ச. து. க.




# லட்சுமி

## அல்லது

# வியாசர் கனவு

பி. ஸ்ரீ.

### முன்னுரை

ஒரு பெரிய கோவிலில் திருவிழா வெகு விமரிசையாக நடைபெறுகின்றது. ஆயிரக்கணக்கான ஜனங்கள் தங்களை அலங்கரித்துக்கொண்டு வந்திருக்கிறார்கள். எத்தனை விதமான தீவர்த்திகள்! மத்தாப்பு வாணவேடிக்கைகள்! கண்கவரும் காட்சிகள்! எத்தனை வகையான கீதவாத்திய விநோதங்கள்! அவ்விழா கண்ணுக்கு விருந்தாக இருப்பதுபோல் செவிக்கும் விருந்தாக இருக்கிறது.

திருவிழாவிற்கு நாட்டுப் புறத்திலிருந்து இரண்டு நண்பர்கள் வருகிறார்கள். இவர்களில் ஒருவன் மற்றவனிடம் உரத்த குரலில், "அண்ணே! என்ன திருவிழா! மேளமும் தாளமும் நாகசுரமும் வேறுபல வாத்தியங்களும் ஒலித்துக்கொண்டே இருக்கின்றன. வெடிகளும் வெடித்துக்கொண்டிருக்கின்றன. ஆனால் ஒரே இருட்டாக இருக்கிறது! கொஞ்சமாவது வெளிச்சம் வேண்டாமா?" என்று சொல்லுகிறான்.

மற்றவனோ, "தம்பி! வெளிச்சத்திற்கு என்ன குறைவு? தீவர்த்தி வெளிச்சம் மட்டுமா? மத்தாப்பு வெளிச்சமும் வாணங்களின் வர்ண ஒளிகளும் எவ்வளவு அற்புதமாக இருக்கின்றன! ஆனால் இந்த ஒளி விசித்திரங்களோடு, இத்தனை கீதவாத்தியங்களும் ஒலி செய்தால், எவ்வளவு நன்றாக இருக்கும்! இவை எப்பொழுது ஒலி செய்யும்? நாகசுரத்தை ஊதப் பார்க்கிறான்; ஆனால் இன்னும் ஊதவில்லை. மேளத்தின்மேல் கோலை வைத்து வைத்து எடுக்கிறான்; எப்பொழுது அடிக்கப் போகிறான்?" என்று மெள்ளப் பேசுகிறான்.

இவ்வாறு திருவிழாவை அனுபவிக்கும் நண்பர்களில் ஒருவன் குருடன், மற்றவன் செவிடன் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ ?

கண்கள் இருந்தும் இவ்வுலகிலுள்ள அழகுகளுக்குக் குருடாக இருப்பவர் உண்டு. காதுகள் இருந்தும் சங்கீத உலகத்திற்கும் கவிதை உலகத்திற்கும் செவிடாக இருப்பவர் பலரன்றோ ?

இயற்கையழகுகளுக்கு ஓர் எல்லை இல்லை. 'அழகே! நீ ஒன்று ; நீ பல. உள்ளதும் நீ; இல்லாததும் நீ. அமுதமும் நஞ்சும் நீ. காதலும் சாதலும் நீ. இன்பமும் துன்பமும் நீ' என்று இவ்வாறு தத்துவ சாஸ்திரிகள் முறையிடுகிறார்கள் ; எனினும் அழகுத் தெய்வத்தை உபாசிப்பவர் அழகுக் கலைஞரே (*Artists*) யாவர். இக்கலைஞர்களிலும் கவிஞனே அழகுத் தெய்வத்தை விசேஷமாக ஆராதிப்பவன். அழகுக் கலைஞர் உள்ளமே அழகுத் தெய்வத்தின் கோயில் ; எனினும் கவிஞர் உள்ளத்திலே தான் அழகுத் தெய்வம் விசேஷமாகக் கொலு வீற்றிருக்கிறது.

அழகுத் தெய்வத்தின் அழகுக் கூத்தை—அழகுத் திரு விழாவை—த்தரிசிக்கும் கண், கவிஞனுக்குத்தான் உண்டு. அத் தெய்வத்தின் வீணாகானத்தையும் தாளபேதங்களையும் கேட்கும் செவியும் அவனுக்குத்தான் உண்டு.

தமிழர் 'திரு' என்ற சொல்லால் அழகை விசேஷமாகக் குறிப் பிடுவதுண்டு. ஒருவன் ஒரு பொருளைப் பார்க்கிறான். அதைப் பார்க்கிலும் சிறந்த 'உருவும் நலனும் ஒளியும்' எந்த வகையிலும் வேறொரு பொருளுக்கு இல்லையென்று நினைக்கிறான். அந்நிலையில், தான் கண்ட பொருளின்மேல் அவனுக்கு விருப்பம் செல்லுகிறது. இத்தகைய விருப்பத்தோடு கூடிய அழகைத்தான் தமிழர் 'திரு' என்று கூறுவர். "எல்லாராலும் விரும்பப்பட்ட அழகு அவட்கு (அழகுத்தெய்வத்திற்கு) உண்டாகையாலே திருமகள் என்று பெய ராயிற்று" என்பது பேராசிரியர் உரை.

அழகுத்தெய்வமாகிய திருமகளைப் பெண்மையின் பேரொளி வனப்பிலே கவிஞர்களும் பௌராணிகர்களும் கண்டு வழிபட்டனர் என்பதில் வியப்பு ஒன்றுமில்லை. பாரதியார் தாம் போற்றிய அழ குத் தெய்வத்தைப் பின் வருமாறு வருணிக்கிறார்:—

"மங்கியதோர் நிலவினிலே
கனவில்இது கண்டேன்
வயதுபதி னாறிருக்கும்
இளவயது மங்கை

பொங்கிவரும் பெருநிலவு
போன்றஒளி முகமும்
புன்னகையின் புதுநிலவும்
போற்றவரும் தோற்றம்
துங்கமணி மின்போலும்
வடிவத்தாள் வந்து
தூங்காதே எழுந்தென்னைப்
பாரென்று சொன்னாள்
அங்கதனில் கண்விழித்தேன்
அடடா ! ஓ ! அடடா !
அழகென்னும் தெய்வந்தான்
அதுஎன்றே அறிந்தேன்.''

இது புதுமைக் கவிஞர் கண்ட கனவு. பழைய உலகில் கவிஞராகவும் பௌராணிகராகவும் ஒருங்கே விளங்கிய வியாச முனிவரும் அழகுத் தெய்வத்தைக் குறித்து ஒரு கனவு கண்டார்.

## வியாசர் கனவு கண்டது

'வர்ணக் களஞ்சியமான இவ்வுலகிலே, அழகுகளெல்லாம்—இன்பங்களெல்லாம்—செல்வங்களெல்லாம் ஓர் உருவமாகச் சமைந்த தெய்வம் ஒன்று (*An ultimate Beauty*) இருக்கவேண்டும் அல்லவா ? அத்தகைய அழகுத் தெய்வத்தை அல்லது திருமகளை ஒருவன் பாராததால் இல்லையென்று சொல்லிவிடலாமா ? அழகைப் பார்த்து அனுபவியாதவர் அழகேயில்லையென்று மறுத்தல் கூடுமா ? அழகுத் தெய்வமே ! எத்தனை காலமாகக் கவிஞர்களும் பௌராணிகர்களுமாகிய நாங்கள் உன்னைத் தேடித் தவிக்கிறோம் !

'அழகே நீ யார் ? எங்களைச் சூழ நிற்கும் சிருஷ்டியாகிய அற்புதத்தைத் தாங்கும் தூணா ? அல்லது உலகின் சூட்சும சக்திகளில் ஒன்றா ? அழகே ! நீயோ உலகின் உயிர் ? உண்மைப் பொருளும் நீ தானோ ? வாழ்க்கை யிருளில் ஒளி காட்டி வழிகாட்டும் மணி விளக்கும் நீயோ ? அழகே ! நீயோ உலகின் தாய் ? நீயோ உலகின் தெய்வ நாயகி ? உன்னை அறிந்துகொள்ளும்பொருட்டு நான் எவ்வளவு காலமாகத் தவம் கிடக்கிறேன்.

'அழகே ! நீ எப்போது தோன்றினாய் ? உன்னை யாவர் படைத்தனர் ? அழகே ! நீ எவ்வளவு உண்மையாக இருக்கிறாய் ! எனினும் உன்னை நாங்கள் கண்டுகொள்ள முடியாமல் இருக்கிறோம்.'

இவ்வாறு வியாசர் தனியாக இருந்து எண்ணமிட்டுக்கொண்டிருக்கிறார். மேற்றிசையில் அஸ்தமன சூரியன் தன் வாணவேடிக்

கைகளைக் காட்டி மறைந்து விடுகிறான். இப்பொழுது எங்கும் ஒரே மத்தாப்பு வெளிச்சம்! 'இதுவோ அழகுச் செல்வத்தின் மேனியொளி!' என்று வியாசர் நினைக்கிறார். அவர் உள்ளத்தில் இன்னதென்று சொல்ல முடியாத மகிழ்ச்சி உண்டாகிறது.

அந்தி மயங்குகிறது. மேற்றிசை வானத்தில் ஒளியை இருள் விழுங்குவதற்குள், கிழ்வானத்திலே கடலிலிருந்து, நேர் அமிர்த கலசம் எழுவதுபோல், பூர்ண சந்திரன் உதயமாகிறது; கடல் உற்சாகமாகத் தன் அலைக்கைகளைக் கொட்டி அழகுமயமான சந்திரனை வரவேற்கிறது. வியாசர் உள்ளத்திலும், மகிழ்ச்சி கடல்போலப் பொங்குகிறது.

சந்திரன் வானவீதியில் தவழ்கிறது. கண்ணையும் நெஞ்சையும் மயக்கும் சந்திரிகை கடலோடு கொஞ்சுகிறது. பால்போல் நிலா. கடலும் சந்திரிகையும் ஒரே பாற்கடலாகக் காண்கின்றன! ஆ! ஆ! இந்த நிலாவோடு அமிர்தமும் கலக்கிறது! அலைகள் ஓ! என்று இரைந்து கரையில் மோதி மோதி மடிந்து விழுகின்றன. அந்த ஓசையைக் கேட்டுக்கொண்டே—அந்தக் காட்சியின்பத்தைப் பருகிக் கொண்டே வியாசர் தியானத்திலே மெள்ள மெள்ள மூழ்குகிறார்.

இப்பொழுது அவர் அப் பாற்கடல்மீது சந்திரனும் அமிர்தமும் எழுவதைக் காண்கிறார்! என்ன அழகு விழா! என்ன மோகனக் காட்சி! அக்காட்சியில் அவர் தம்மை முழுக்க இழந்து விடுகிறார். கடற்காற்று அவர் காதில் ஏதோ இரகசியம் பேசிச் செல்லுகிறது! என்ன அமைதி! என்ன தெளிவு! இப்பொழுது, கட்டழகி ஒருத்தி இன்பம் நிறைந்த உள்ளத்தோடு நகை தந்து ஆசைமுகம் காட்டுவதுபோலச் சந்திரன் காட்சி அளிக்கிறது. 'இதுவோ அழகுத் தெய்வத்தின் ஜோதிமுகம்!' என்று வியாசர் ஆச்சரியம் அடைகிறார். 'அழகுக் கடலாகிய இப் பாற்கடலிலிருந்துதான் இத்திருமகளும் உதயம் செய்கிறாள். அமுதொடு பிறந்த இத் திரு, அமுதினும் இனியள்! என்ன ரூபம்! என்ன காந்தி! பாற்கடல்மீது தேவியின் திருமேனிச் சோபை ஒரு ஜோதி வெள்ளமாகப் பொங்குகிறது!' என்று சிந்திக்கிறார். வியாசர் நனவை மறந்துவிடுகிறார். இயற்கையின் அகண்ட உணர்ச்சி அவரை விழுங்கிவிடுகிறது.

என்ன அற்புதக் காட்சி! திருமகளின் திருமுகம் பூர்ண சந்திரனைப்போல் விளங்குகிறது. கண்களோ 'கடலினும் பெரிய கண்கள்!' அவள் ஒருகால் தன் இயற்கைப் பொற் சிங்காதனமாகிய செந்தாமரை மலர்மீது ஒரு பொன்னங்கொடியெனப் பொலிந்து தோன்றுகிறாள். ஒருகால் மின்னற்கொடிபோல் மின்னுகிறாள். ஒரு

கால் அவள் மேனி நவரத்தினம்போல ஜ்வலிக்கிறது. கணந்தோறும் புதிய புதிய அழகு! புதிய புதிய ஒளி! அத்தேக காந்தி திக்கெல்லாம் நிறைகின்றது! தேவியின் மலர்க் கரங்களில் பலவகைச் செல்வங்களும் காணப்படுகின்றன. வியாசர் பேராச்சரியம் அடைகிறார்.

கங்கை முதலான மகாநதிகள் தேவியை நீராட்டுவதற்குத் தூய நன்னீர் கொண்டு வருகின்றன. எட்டுத் திக்கிலுமுள்ள யானைகள் வந்து, நவரத்தினம் இழைத்த தங்கக் கலசங்களில் நதிகள் கொண்டு வந்த தீர்த்தங்களை எடுத்துத் தேவிக்கு அபிஷேகம் செய்கின்றன. அப்பொழுது மகரிஷிகள் கடல் முழக்கம்போல் வேதகோஷம் செய்கிறார்கள். சித்தர்கள் 'பல்லாண்டு' பாடுகிறார்கள். கந்தர்வர்கள் யாழ்கொண்டு அமுத கீதம் பாடுகிறார்கள். தேவ மாதர்கள் தோகை விரித்தாடும் மயில்களைப்போல் களிப்போடு நடனம் செய்கிறார்கள். மூவுலகங்களிலுமுள்ள பெரியோர்களெல்லாம், 'தாயே! மகாலட்சுமியே! அருள் செய்வாய்!' என்று தோத்திரம் செய்கிறார்கள். வியாசரும் அக்கூட்டத்திலே கலந்துகொண்டு அழகுத் தெய்வத்தை வாயார மனமார வாழ்த்துகிறார்.

படைப்புக் கடவுள் திவ்வியமான ஆபரணங்களை வழங்குகிறான். பூமிதேவி பரிமள வஸ்துக்களைக் கொண்டு வந்து கொடுக்கிறாள். நீலவானம் ஓர் அரிய சித்திரப் பொற் பட்டாடை உதவுகிறது. கலைமகள் நட்சத்திரங்களையே ஒரு வைரமணி மாலையாகக் கோத்துத் திருமகளுக்கு அணிந்து மகிழ்கிறாள். முக்காலங்களிலுமுள்ள கவிஞர்களும் ஓர் அற்புதமான கவிக்கிரீடம் புனைந்து தருகிறார்கள். வியாசர் அக்கிரீடத்தை வாங்கி அழகுத் தெய்வத்திற்கு அளிக்கிறார்.

இவ்விதமாக அவரவர் அன்புகூர்ந்து செய்த பணிவிடைகளைத் திருவுளம்பற்றி, அழகுத் தேவி தன்னை அலங்கரித்து முடிசூடிக் கொள்ளுகிறாள். அப்பொழுது தேவர்கள் பூமழை பொழிகிறார்கள். மேகங்கள் பொன்மழை பொழிகின்றன. கடல்களெல்லாம் பல வேறு இரத்தினங்களைத் தூவி ஆரவாரம் செய்கின்றன. தேவி அதியற்புத அழகுவாய்ந்த சொரூபத்தோடு காட்சி தருகிறாள்.

### திருமகளின் சுயம்வரம்

அழகுத் தேவி தனக்குரிய நாயகனைத் தேடுகிறாள்.

"தேன்அமர் நீல மாலை
செழுந்தளிர்க் கரத்தின் ஏந்தி
வானவர் தொழுது வாழ்த்த
வரன்தனை நோக்கி னாளால்."

தளிர்க்கையில் கருநெய்தல் மாலையொன்று ஏந்தி, அவள் தனக்கு இசைந்த காதலனை நோக்குகிறாள். தேவர்கள் அசுரர்கள் சித்தர்கள் கந்தர்வர்கள் முனிவர்கள் கைகூப்பித் தொழுது வாழ்த்துகிறார்கள்.

பரிபூர்ணமான குண சௌந்தரியம் பெற்றவன் புருஷோத்தமனாகிய திருமாலே யென்றும் அவனே தனது நாயகன் ஆவானென்றும் துணிகிறாள். உடனே அவள் தன் கையிலிருந்த மங்களகரமான நீல மலர்மாலையை மரகதமலைபோலக் காட்சி தரும் மகாவிஷ்ணுவின் தோளிலே அணிந்து இளநகை அரும்புகிறாள். அப்பொழுது திருமால் அழகுத் தெய்வமும் ஐசுவரியங்களின் அதிதேவதையும் அகில லோக மாதாவுமாகிய மகாலட்சுமியைத் தமது மார்பிலே தரித்துக் கொள்ளுகிறார்.

தேவியும் நீலமேகத்தினிடையே ஒளிரும் மின்னற்கொடிபோல வீற்றிருந்து தன் மக்களைக் கடைக்கண்ணால் நோக்கியருளுகிறாள்.

## வியாசர் கதை சொல்லுதல்

வியாசர் தாம் கண்ட அழகிய கனவை ஒரு நல்ல கதையாக்கினார். அவர் ரஸமாகக் கதை சொல்லுவதில் தேர்ச்சி பெற்றவர். தமது 'லட்சுமி கதை'யில் வீரம், சிங்காரம், பயம், ஹாஸ்யம், விநோதம் சோகம் முதலிய ரஸங்களை வேண்டிய அளவிற்குச் சேர்த்தார். தமது சிடர்களும் மற்ற முனிவர்களும், 'இன்னும் கேட்கவேண்டும்! இன்னும் கேட்கவேண்டும்?' என்று ஆசைப்படும்படி கதையை ஒழுங்குசெய்து உருவாக்கினார். கதை நீண்ட காலமாக அவர் உள்ளத்திலே ஊறிக்கொண்டிருந்தது.

அழகுத் தெய்வத்தின் பிறப்பும் சுயம்வரமும் ஆச்சரியமாக இருந்ததால், ரிஷிகளுக்கு ஆனந்தத்தைத் தந்தன. அவர் தமது கதையைக் குறித்து அவர்களோடு சம்பாஷணை செய்தார். அவர்கள் பல கேள்விகளைக் கேட்டார்கள். அவரும் தக்க விடை கூறினார்.

'உலகநாதனாகிய இறைவனது மார்பகத்திலே இனிது வீற்றிருந்து உயிர்கள் யாவையும்—உலகங்கள் யாவையும்—ஈன்றெடுத்த அழகுத் தெய்வமாகிய ஆதிநாயகியும் ஒரு காலத்திலே பாற்கடலில் பிறந்தவள்தானே?' என்று ஒரு முனிவர் கேட்டார். அப்பொழுது வியாசர், 'உலக மாதாவாகிய அழகுத் தேவியும் உலகரட்சகனாகிய இறைவனைப்போல் பிறப்பில்லாதவள்; எனினும் தன் சங்கற்பத்தினால் தோன்றுவதும் மறைவதுமாயிருப்பாள்' என்று பதில் சொன்னார்.

பிறகு அவர் அழகுத் தெய்வம் பாற்கடலில் அவதரித்ததற்குக் காரணம் என்னவென்று யோசித்தார். அதைக்குறித்தும், சாமர்த்தியமாகவும் சாதுரியமாகவும் ஒரு கதையை அமைத்தார். உண்மையில் அவர் அக்காட்சியை மனக்கண்ணால் கண்டார் என்றே கூறுதல்வேண்டும். அப்பால் அவர் தாம் தரிசனம் செய்த காட்சியை உருக்கமாகவும் ருசியாகவும் ரிஷிகளுக்கு எடுத்துரைத்தார்:

'கேளுங்கள், முனிவர்களே! உலக உருண்டைக்கு அப்பாலுள்ள பரமபத ராஜ்யத்திலே சகல அழகுகளும் நிறைந்திருக்கின்றன. அங்கே அழகுத் தெய்வமான திருமகள் பொன்னரசியாகவும் புகழரசியாகவும் பெண்ணரசியாகவும் கொலுவீற்றிருக்கிருள். ஒரு சமயம் ஒரு வித்தியாதரப் பெண் அவ்வுலகத்தில் போய்ச் சேர்ந்தாள். அப்பெண்மணி அழகுத் தெய்வத்தின் புகழை யாழிசையில் அற்புதமாக அமைத்துப் பாடினுள். அழகுத் தெய்வத்தின் செல்வச் சிறப்பே உலகமாகவும் இயற்கையழகாகவும் விரிந்து கிடக்கிறதென்றும் அழகுத் தெய்வமே உலக ரட்சகராகிய திருமாலின் திவ்ய சக்தியாகுமென்றும், இத்திவ்ய சக்தியினுலேயே திருமால் தனது காத்தல் தொழிலை இனிது நிறைவேற்றுகிருரென்றும் பாடித் தோத்திரஞ் செய்தாள். திருமகள் உள்ளம் உவந்து கண்மலர் பரப்பித் தன் கூந்தலில் சூடியிருந்த ஒரு மலர் மாலையை எடுத்து அவள் கையில் வெகுமானமாகக் கொடுத்தாள். அவள் அதைத் தன் வீணையிலே சூட்டிக்கொண்டாள்.

'கேளுங்கள் ரிஷிகளே! ஒரு பெருவனத்தின் வழியாக அப்பெண் போய்க்கொண்டிருந்தாள். அவளது வீணையைச் சூழ்ந்து விளங்கிய பூமாலையின் திவ்விய நறுமணம் 'கம்' என்று திக்கெல்லாம் அதிமனேஹரமாகப் பரிமளித்தது. அப்பொழுது அவள் ஒரு முனிவனை எதிரிலே கண்டாள். அவன்தான்,

"சாபத்தாலும்சாபமொழி
தன்னுல் வளரும் தவத்தாலும்
கோபத்தாலும் பேர்படைத்த
கொடியமுனிவன் துருவாசன்."

'முனிவன் அப்பெண்மணியையும் அவளது வீணையையும் மலர் மாலையையும் கண்ணுற்று ஆறுதலும் ஆனந்தமுமடைந்தான். பெண்மணியும் சந்தோஷத்தினுல் தன் வீணையிலிருந்த மாலையை முனிவனுக்கு நன்ருகக் காட்டினுள். அதன் அருமை பெருமைகளை வருணித்தாள். "திருமகள் தனது திருமுடியிலே சூடிய மாலே இது! அவள் எனக்கு வெகுமானமாகக் கொடுத்தாள். முனி

யரசே ! இதை நான் உமக்கு வெகுமானமாகத் தருகிறேன்'' என்று பூமாலையை அன்போடு அளித்தாள். "இவ்வெகுமானம் இன்று எனக்குக் கிடைத்தது, ஆச்சரியம் ! ஆச்சரியம் !'' என்று துர்வாச முனிவன் மாலையைத் தன் தலையிலே சூடிக்கொண்டு ஆனந்தக் கூத் தாடினன்.'

இவ்வாறு அழகாகக் கதை சொல்லி வந்த வியாசர் அக்கதை தம் கண்ணுக்கு எதிரே நடந்துகொண்டு போவதாகப் பாவித்துச் சொல்லிவந்தார். மதயானையின்மேல் மதோன்மத்தனாக வீற்றிருந்து கோலாகலமாகப் பவனி வரும் இந்திரனைத் துர்வாசன் சந்திப்பதை யும், தன் முடியினின்றும் பூமாலையை எடுத்து முனிவன் அரசன் கையில் வெகுமானமாகக் கொடுக்க முயல்வதையும், தேவராஜன் செருக்கோடு மாலையைக் கையால் வாங்காமல் அலட்சியமாக அங்கு சத்தால் வாங்கித் தனது யானையின் பிடரியிலே வீசி எறிவதையும், மதமிகுதியினல் கண் சுழன்று விரைந்து சென்று கொண்டிருந்த யானை உடனே பனைமரம்போல் திரண்டு உருண்டு நீண்ட தன் துதிக்கையினல் மாலையைப் பறித்திழுத்துக் காலின்கீழ் இட்டுத் தேய்ப்பதையும், தெளிவாகக் கண்ணில் கண்டு வருணித்தார். கதை கேட்டவர்களும் அப்படியே அக்காட்சிகளைக் கண்ணால்கண்டார்கள்.

வியாசர் துர்வாசர் கோபத்தை விசேஷ மனோதர்மத்தோடு வருணித்தார். அவ்வருணனையைக் கேட்டவர்கள் அஞ்சி நடுங்கி னர்கள். 'இந்திரனே ! நீ உன் செல்வச் செருக்கினல் மகாலட்சுமி யின் மலர்மாலையை இகழ்ந்து மதயானையின் கைப்படும்படி செய் தாய். அதன் பயனாக நீ உன் பெருஞ் செல்வங்களை யெல்லாம் இழந்து வறுமையினல் துன்பம் அடைவாயாக !' என்று கடுங் கோபத்தோடு முனிவன் சாபம் கொடுப்பதையும், இந்திரன் மன் னிப்பு வேண்டுவதற்கும் அஞ்சி ஓடுவதையும், இந்திரனது செல்வங் கள் யாவும் பாற்கடலில் போய் மறைவதையும், லட்சுமியின் கடாட்சம் அற்று வருந்தும் தேவர்களை அரக்கர்கள் இம்சிப்பதை யும், தேவர்கள் திருமாலின் அருள் பெறுவதையும், தேவர்களும் அசுரர்களும் மலையை மத்தாகவும் வாசுகி என்ற மகாநாகத்தைக் கயிறாகவும் கொண்டு பாற்கடலைக் கடைவதையும் வியாசர் கேட் போருக்குச் சுவைபிறக்கும்படி சித்திரித்துக் காட்டினர்.

(தொடரும்)




# கமலை ஞானப்பிரகாசர்

ச. சோம சுந்தர தேசிகர்

(1013-ம் பக்கத் தொடர்ச்சி)

ஞானப்பிரகாசரோ தென்றேச யாத்திரை செய்ய எண்ணிப் புறப்பட்டு வழியிலுள்ள தலங்களைத் தரிசித்துக் கொண்டு 'துறந்தார்க்குத் தூநெறியாய் நின்றான்' எழுந்தருளியிருக்கும் தென் கூடலான திருவாலவாய் சென்றடைந்தார். சென்ற ஞானசிகாமணி பொற்றாமரையில் தீர்த்தமாடிச் சொக்கலிங்கப்பெருமானையும் அங்கயற்கண்ணம்மையையும் வெள்ளியம்பலத்துத் திருக்கூத்தாடும் எம்பிரானையும் பணிந்து போற்றிக்கொண்டு சிலநாள் வைகினர். அங்கு வைகும்நாளில் கூடற்பிரானைப் பூசிக்கும் ஓரந்தணன் தன்னுடைய இருகண்ணொளியுமிழந்து துன்புறுவானான். அச்சிவமறையோன் ஞானப்பிரகாசரது பெருமையைக் கேட்டு அவரிருக்கை சார்ந்து தனது குறையை விண்ணப்பித்து நிற்றலும், ஞானவேந்து பரிவுற்றுச் சொக்கேசரை மனத்திலுட்கொண்டு, 'நின்னடியார் துன்புறுவது முறையேயோ' என்று குறையிரந்து நிற்க, கூடற்பெருமானும் திருவுளமிரங்கி ஐயுபட்டரென்ற அவ்வந்தணர்க்குப் பார்வை உண்டாகும்படி அருள்புரிந்தார். அவரும் ஞானப்பிரகாசரை வாழ்த்திக்கொண்டு எப்போதும்போல் சொக்கப் பெருமானுக்குச் சிவபூசை முட்டின்றி நடத்திவந்தார்.

ஞானப்பிரகாசர் சிலநாள் அங்கிருந்தபின், மதுரையம்பதியை விட்டுத் திருக்கானப்பேர் என்னும் காளையார்கோயிலை நோக்கிச் சென்றார். அக்காலத்திலே, அத்திருப்பதியில் 'தலைபறித்துப் புற்பாய் போர்த்துத் திரியும் சமண்' குடி மிகுந்திருந்தது. இவர் வரவைக்கேட்ட சைவராயுள்ள நகரமாந்தர் அனைவரும் கூடி அஷ்டாதச வாத்தியங்கள் முழங்க, குடை, கொடி, தோரணம், கவரி, நிறைகுடம், கண்ணாடி, தீவர்த்தி, முரசு முதலான எண்வகை மங்கலப் பொருள்களோடும் திருக்கோயிலினின்றும் திருநீறு, மாலை முதலான தெய்வச் சேடங்களோடும் எதிர்கொண்டு வரவேற்கச் சென்றனர்.

சமணர் கூடிச் சிவஞானச்செல்வரான அருண்ஞானப்பிரகாசரைச் சிவிகையோடு இத்தலத்துள் வரவிடோமென்றும், இவர் ஞானம் கைவரப்பெற்றவரென்பது உண்மையாயின், இவர் வணங்குங் கடவுள் ஆதியந்தமிலா அருட்பெருஞ் சோதியான சிவபெருமானென்பதுண்மையாயின், இதுபொழுது வெண்மையுற்று நிற்கும் மேகமானது கார்நிறம் பெற்றுக் கறுத்திருண்டு கருமுகிலாகி மழை பொழியும்படி செய்வாராயின் இவர் உண்மைப் பெரியாரென ஒப்புக்கொள்வோமென்றும், ஊர்புக இடங் கொடுப்போமென்றும் வழிமறைத்தனர். இதனைச் சீடரால் அறிந்த ஞானபானு வெண்பா ஒன்றோதிக் கானப்பேரெயிற் பெருமானைச் சிந்தித்தலும், நகரமாந்தர் திடுக்குறும்படி மேகங்கள் கறுத்திருண்டு குமுறி மழைபொழிய ஆரம்பித்தன. அந்நாட்டிலே மழைமுகங்கண்டு சிலவாண்டுகளாயினமையின், நகர மாந்தர் நாங்கள் நன்மைபெற்றோமென்றும் உண்மையிலே இவன் தேவனென்றும் கூறி, பொற்குவியற்றனங் கிடைத்தாற்போல், 'எங்கள் புண்ணியமே, சற்குணமே' என்று அடியார் கூட்டத்தோடு தாங்களும் சேர்ந்து துதித்து ஆடிப்பாடிக் கொண்டு வந்து திருக்கோயிலின்முன்பு விட்டனர். ஞானப்பிரகாசரும் சிவிகைவிட்டிழிந்து கோபுரதரிசனம் செய்துகொண்டு திருக்கோயிலினுள்ளே சென்று சிவபெருமானை வணங்கி, முட்டுப்பட்டு நின்றுபோன நித்திய நைமித்திய விழாக்களைச் சிறப்புறச் செய்யும்படி நிறுவி இருக்கை சார்ந்தார்.

இவ்வற்புதங்களையெல்லாம் கேட்ட அந்நாட்டுத் தலைவன் சிவஞானச் செல்வரை அடைந்து மறுமைப் பேற்றிற்கு ஊன்றுகோலான மகப்பேறின்றித் தான் வருந்துவதை விண்ணப்பித்தலும், 'நன்றுதரு மகப்பேறு உனக்கோராண்டில் நமது கமலைக்கேகித் தீர்த்தமாடில் உண்டாம்' என அருளிச் செய்து விடைபெற்றுத் திருஅஞ்சைக்களம் நோக்கிச் சென்றார்.

திரு அஞ்சைக்களம் சென்று அங்குள்ள சிவபெருமானைத் தரிசனம் செய்து கொண்டு, அங்குநின்றும் கொங்குநாடு போந்து அந்நாட்டுத் தலங்களைக் கும்பிட்டுத் திருவானைக்கா முதலான திருப்பதிகளை வணங்கிக்கொண்டு வடநாடு சென்றார். காசியம் [illegible]தியை யடைந்து கங்கையாடி விசுவேசுரனையும் விசாலாட்சியையும் [illegible]ச்சித்துப் போற்றி மடத்தில் நிட்டையிலமர்ந்தார்.

போரு [illegible] இவ்வாறு சில[illegible]ாள் அங்குக் கழித்து வருகையில், அந்நாட்டு [illegible]து மகனை [illegible]அரவு தீண்ட எவ்விதப் பரிகாரத்தாலும் நீங் [illegible]டு வேந்த[illegible] பரிந்துளைந்தான். 'இவ் விடத்தைப் போக்கு [illegible] என்று ப[illegible]னன் ஓலமிடுவதைக் கண்ட பரிசனரிற் சிலர்

தென் கமலையினின்றும் ஒரு பெரியார் வந்துளாரெனச் சொல்லக் கேட்டு, அரசன் அரவுதீண்டிய தன் மைந்தனோடு அவரிடஞ்சென்று அடியில் வீழ்ந்து தன் மைந்தனைக் காப்பாற்றும்படி வேண்டினான். ஞானமூர்த்தியும் மன்னனது துன்பத்திற்கிரங்கி அடியார் மனமே கோயிலாக் கொண்ட எம்பெருமானை வேண்டித் திருநீறு சாத்தச் சிறுவனும் புன்முறுவலோடு எழுந்தனன். அரசனும் ஆனந்தமுற்று ஞானப்பிரகாசரது இணையடிகளில் வீழ்ந்திறைஞ்சி அரண்மனை அடைந்தான். அந்நாடு ஐந்தாண்டாக மழையின்றி வருந்துவதை நினைந்த அரசன் ஐயன்பாலணுகி நிலையைத் தெரிவித்தலும், கமலை மன்னன் அரசனது வேண்டுகோளை முடித்தருளும்படி கருணையந் தடங்கடலாகிய சிவபெருமானைத் துதித்தார். மழை பொழிய நாடு வளம் மலிந்தது. மன்னவனும் மகிழ்ச்சி கொண்டான். ஞானசூரியனை ஞானப்பிரகாசரது சிவ பூசை, நிஷ்டை முதலாயின தடையுறா வண்ணம் வேண்டும் நிபந்தங்கள் வைத்தான். இவ்வாறு சிலநாள் செல்ல, ஞானப்பிரகாசர் திருவாரூர் செல்ல நினைந்து அரசனிடம் விடை பெற்று மீண்டார்.

மீண்டவர் கச்சியம்பதியை அடைந்து ஒருமாவின் கீழுறையும் பெம்மானைக்கண்டு வணங்கி மடத்திலமர்ந்தருளினர். நாட்டுத் தலைவன் பெரியாரை அடைந்து தமக்கு வீடுதவ வேண்டலும், நாடு சீரழிந்து விடுமென்பதனை அரசனுக்கு எடுத்துக் கூறித் தன்கீழ் வாழுங் குடிகட்கு நன்மை புரிவதே பேரறமாமென்பதை வற்புறுத்தி, அவனால் அநேக சன்மானங்கள் பெற்று, அங்குச் சிலநாள் தங்கினர். அங்கே இவர் தங்கினர் என்பது மான்மியத்தாற் பெறுவதுமன்றி, "மாமாசிலாமணிச் சம்பந்தன் வாழ்தொண்டை மண்டலமே" என்பதாலும் பெறுகின்றோம்.

அங்கிருந்து விடை பெற்றுத் தில்லை யடைந்து மன்றுளாடிய பெருமானை வணங்குகையில், ஆரூர் சென்று பள்ளு என்னும் நூல் பாடும்படி திருவாக்கெழுந்ததாக மான்மியம் கூறும்; அத்திருவாக்கைச் சிரமேற்றாங்கி ஆரூர் சென்று புற்றிடங்கொண்ட பெம்மானையும் தியாகப் பெருமானையும் வணங்கி இல்ல மடைந்தார். 'அரிய சதா சிவமுமொரு வாண்டை யாக அருளுமீ சுரன்றன்னைப் பள்ளராக—இருசத்தி யினையுமே பள்ளீ ராக விசைந்தநந்தி கணக்கனாகப் பின்னும்—அருள்சத்தி யினைத்தோழியாகச்செய்து மாலவனை யுழவு தொழிற்கேயி சைத்து'ப் பள்ளொன்று பாடி, தியாகேசன் சன்னிதியில் அரங்கேற்றினர். இப்பள்ளைக் கேட்டுவந்த பெருமான் நாட்டரசன் கனவிற்றோன்றி, 'நாம் நமது ஞானப்பிரகாசன் பாடிய பள்ளைக் கேட்டு மகிழ்ந்தோம். நீ அதனைக் கேட்டபின் நமது

உருத்திர கணிகைகளைக் கொண்டு நாடகமாக ஆடும்படி செய்வாய்' என்று கூறித் திருவாரூரிலே உருத்திர கணிகைகளிடமும் அவ்வாறே சொல்லி மறைந்தனர் என்றும் மான்மியம் கூறும். அரசனும் திருவருளுக்கு மகிழ்ந்து போற்றித் திருவாரூரை அடைந்து பள்ளைக் கேட்டு அளவிலா மகிழ்ச்சி யடைந்து தேவாசிரயன் காவணத்தில் ஆவணி மாதத்திலே ஆடும்படி செய்து திருவருளைப் பெற்றான். பின்னர் ஞானப் பிரகாசர் சிலநாள் யோக நிட்டையிலிருந்து எம் பெருமானது திருவடி நீழலை அடைந்தார். ஆண்டாண்டு தோறும் ஐப்பசி மாதம் கிருஷ்ணபட்ச சஷ்டியில் இவரது குருபூஜா மகோற்சவம் நடந்து வருகிறது.

## இவர் இயற்றிய நூல்கள்

இவர் இயற்றிய நூல்கள் பலவாம். அவை, சரியை, கிரியை யோகம், ஞானம் என்னும் நான்கு பாதத்திலும் உள்ளன. சரியா பாதத்தனவாக உள்ளவைகளுள் அனுட்டான அகவல் ஒன்று. இது சைவர்கள் செய்ய வேண்டிய அனுட்டான விதி இவ்வாறு எனக் கூறுவது; அகவற் பாவாலமைந்தது; அச்சிடப்பட்டுளது.

அனுட்டான அகவல்.

புட்பவிதி யென்பது மற்றொரு சிறு நூல். பூசைக்குரிய மலர்கள் இவை இவை யென்றும், அவை எடுத்தற்குரிய காலங்களும், இன்ன இன்ன மலர் இவ்விக் கடவுளர்க்கு உகந்ததென்றும், இன்ன இன்ன மலர் இவரிவர்க்கு ஆகாதென்றும், மாதப்புட்பம் இவையென்றும் மற்றும் பலவும் கூறும். இஃது அச்சிடப்பட்டுளது.

புட்பவிதி.

பூமாலை என்பது மற்றொரு சிறு நூல். இண்டை, கொண்டை, மாலை முதலாய மாலை வகைகளையும் அவை சாத்த வேண்டிய முறைகளையும் செவ்வனே விளக்குவது; அச்சேறவில்லை.

பூமாலை.

கிரியா பாதத்திற்குச் சிவ பூசை அகவல் என்ற சிறு நூல் செய்திருக்கின்றார். அதனுள் சிவ பூசை செய்யும் முறையும் அதற்கு அங்கமாகவுள்ள சூரிய பூசை, சண்டேசுர பூசை முதலியனவும் கூறப்பட்டுள. அஃது அகவற் பாவாலமைந்தது; அச்சிடப்பட்டுளது.

சிவ பூஜை அகவல்.

யோக பாதத்திற்குப் பிராசாதமாலை யென்ற நூல் செய்திருக்கின்றார். அஃது உடலிலே ஆன்மா நிற்குந் தானங்களைப் பன்னிரண்டாகவும் பதினாறாகவும் பகுத்து அவற்றுள் ஆன்மா நிற்குமிடமும் நிலைநிறுத்த வேண்டிய

பிராசாத மாலை.

வழியும், அவற்றிற்கு அட்சரங்களும், அதிதேவதைகளும், நிறமும் கூறுவது; விருத்தப் பாவாலமைந்தது. அச்சிடப்பட்டுளது.

**சிவானந்த போதம்.**

ஞானபாதத்தில் பல நூல் இயற்றியிருப்பதாகத் தெரியவருகின்றது. அவற்றுள் சிவானந்தபோதம் என்பதொன்று. இதன் வழிநூலே சிவானந்த போத சாரம் என்னும் நூல். இது தத்துவரூபம் முதலாகச் சிவ போகம் ஈருகவுள்ள தசகாரியங்களையும் கூறும் நூல்; இன்னும் அச்சேறவில்லை.

**ஞானப்பள்ளு.**

திருவாரூர்ப் பள்ளு என்பது ஒன்று. இதனில் சதாசிவர் ஆண்டையாகவும், ஈசுவரன் பள்ளராகவும், சத்திகள் பள்ளிராகவும், நந்தியம் பெருமான் கணக்கராகவும், மற்றைத் தெய்வங்கள் பலவாருகவும் கூறப்பட்டிருக்கின்றனர். இது பலவகைச் சந்தப்பாக்களாலாயது. இதனைச் சோழ மண்டல சதகமுடையார்,

"கருணா கரன்செய் திருப்பணியைக் கருதி நலமாய்க் கண்டுசெய்த
பொருளா னலத் தொன்றுடையன் பூமி யானைப் போலாரோ
திருவா ரூரில் வன்மீகத் தியாக ராசப் பள்ளுகந்து
மருவார் பணிய வரங்கேற்றி வைத்தார் சோழ மண்டலமே"

என்று பாடுவது கொண்டு இதன் பெருமையை ஒருவாறு அறியலாம். இந்நூல் இன்னும் அச்சிடப்படவில்லை.[1]

**அத்துவாக் கட்டளை.**

அத்துவாக்கட்டளை என்பது மற்றொரு நூல். இது காலம், தத்துவம், புவனம், வர்ணம், பதம், மந்திரம் என்ற ஆறு கூறினையுடைய வழிகள் என்று சொல்லப்படும் ஷடத்துவாக்களைப் பற்றி விரிவாகக் கூறும் ஒரு சித்தாந்த நூல். இந்நூல் இன்னும் அச்சிடப்படவில்லை. கிடைப்பதும் அருமை.

**அண்ணாமலைக் கோவை.**

திருவண்ணாமலை யென்னும் அருணகிரியில் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் அண்ணாமலை நாதர்மேல் பாடிய அண்ணாமலைக் கோவை யொன்றுண்டு. இந்நூல் பெயர் மாத்திரம் கேட்கப்படுகிறதேயன்றிப் பாடல்களிற் சிலவேனும் கேட்கப்பட்டதில்லை.

---

1. பள்ளு, திருவாரூரில் ஆவணி மாதத்தில் நடக்கும் பவித்திரோற்சவத்தில் இரவில் ஆடுவதுண்டு. ஆடி முடிந்த பின்னர் அக்கோலத்தோடு இப்பரம்பரையினர் இல்லம் வந்து இவர்களைக் கண்டு வாழ்த்துப் பாடிச் செல்லும் வழக்கும் உண்டு. சென்ற இருபதாண்டுகளுக்கு மேலாக இவ்வுற்சவமே நின்று போயிற்று.

முன்னதைப் போலவே ஒரு பாட்டுக் கூடக் கேட்கப்பட்டாத மற்றொரு நூல் ஆயிரப்பாடல் என்பது. ஆயிரப்பாடலிலுள்ளன

ஆயிரப்பாடல்.

வென்று சில செய்யுட்களை அம்பரம்பரையில் வருபவர்கள் கூறக்கேட்டதுண்டு. ஆனால் அவர்கள் கூறும் கவிகளெல்லாம் ஞானப்பிரகாசரால் இயற்றப்பட்ட வேறு நூல்களிலுள்ளனவாகத் தெரிகின்றன. ஆயிரப்பாடல் என்ற ஒரு நூல் செய்தாரென்பது,

"பகர்ந்த கமலைத் தியாகேசர் பஞ்சாக் கரத்தின் பயனறிந்த
திகந்த குருஆ யிரப்பரபந்தஞ் செய்த குரவன் திருவாரூ
ருகந்த ஞானப் பிரகாச னுண்மைக் குருவி னுயர்குலத்தோன்
மகிழ்ந்த வாழ்வு பன்னாளும் வளஞ்சேர் சோழ மண்டலமே"

என்ற சோழ மண்டல சதகச் செய்யுளால் வலியுறும். சோழமண்டல சதகமுடையார் ஞானப்பிரகாசருக்கு இரண்டொரு நூற்றாண்டே பிந்தியவராகையால் அவர் அந்நூலைப் பார்த்திருத்தல் இயல்பே.

இவைகளையன்றிப் பல தலங்களுக்குப் புராணங்களும் இயற்றியிருப்பதாகத் தெரிகிறது.

"இருந்தமிழ்ப் புலவ ருய்வா னிபவன மழுவை யென்னுந்
திருந்துசீர்த் தலப்பு ராணத் தெள்ளமு தளித்த செல்வப்
பெரும்புகழ்க் கமலை ஞானப் பிரகாச னெனும்பேர் பெற்ற
வருங்கலைத் திரைம ருத வருட்கடற் கன்பு செய்வாம்"

என்ற திருவாரூர்ப்புராணப் பாயிரச் செய்யுளால் திருவானைக்கா, திருமழுவாடி என்ற தலங்கட்குப் புராணம் இயற்றியுள்ளாரென்று தெரிகிறது. அவற்றுள் திருமழுவாடி என்பது கொள்ளிடத்தின் வடகரையில் உள்ளதும் இதுபொழுது திருமலவாடி யென்றும் மழபாடி யென்றும் சொல்லப்படுவதுமான திருப்பதி; திருஐயாற்றுக்கு நான்கு கட்டை வழி வடக்கிலுள்ளது. அந்தத் தல புராணம் பாடிய காலம் சாலிப வாகன சகம் 1487 என்று அந்நூலில் குறிக்கப்பட்டுளது. அஃது அச்சிடப்பட்டுளது.

இபவனமென்பது திரு ஆனைக்கா. இவர் இயற்றிய இத்தல புராணம் இப்பொழுது கிடைத்திலது. இத்தலத்திற்கே சென்ற நூற்றாண்டிலிருந்து தணிகைப் புராணம் முதலியன இயற்றிய கச்சியப்ப முனிவர் ஒரு புராணம் பாடியுள்ளார். அஃது அச்சிடப்பட்டுளது.

இவைகளையே யன்றி வடமொழியில் தியாகராஜர் திருவிளையாடற் சம்பவம் என ஒரு நூல் இயற்றியுள்ளதாகக் கூறுகின்றனர்.

இந்நூலின் பெயராலே இது தியாகப் பெருமானது திருவிளையாடல்களைக் கூறுவதாகக் கருத இடமுண்டு.

## இவரது சீடர்கள்

இவரது சீடர் பலராவர். அவருள் ஒரு சிலரை மட்டும் குறிக்கின்றேன். திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம் என்று வழங்கும் மடத்தின் தலைவரான ஞான சம்பந்தர் இவரது சீடர். இவர் தமது ஆசிரியர்மேல் பல நூல்கள் இயற்றியுள்ளார். ஒரு செய்யுள் கீழே குறிக்கின்றேன்:

"தாயே கமலையுண் ஞானப்ர காசநின் றன்னிடத்து
நாயே னுளத்தன் பொருசற்று மில்லைநல் லோர்கண்முன்னே
நீயே துணையென்றும் நின்னடி யானென்ற நின்பெயரும்
பேயேன் றினஞ்சொல் பிழைபொறுத் தாள்வை பெருமையனே."

தொண்டை மண்டலத்திலே நல்வாயிலென்ற ஊரில் வாழ்ந்த சம்பந்தரென்பவர் ஒருவர். இவரை மாசிலாமணிச் சம்பந்தனென்றே கூறுவர். இதனை,

"பொருமா கடலிடைத் தோன்றலல் லாது புணரிவெள்ளந்
தருமா மணியொன்று கண்டதுண் டோவையந் தந்தவனுந்
திருமாலும் போற்றுந்தென் னாரூரிற் சம்பந்த தேசிகனு
மொருமாசி லாமணி பேரின்ப வாரி யுதவியதே"

என்ற தனிச்செய்யுள் வலியுறுத்தும்.

திரு ஒற்றியூர்ப் புராணம் பாடியவர் ஒருவர். இவரது பெயர் புலப்படவில்லை. இவர் தம் குருவை,

"அகழ்ந்து தீமையை யெங்களை யாண்டு
மகிழ்ந்து தென்கம லாலய மன்னித்
திகழ்ந்த சைவ சிகாமணி பாதம்
புகழ்ந்து சென்னியின் மேற்புனை கின்றும்."

என்று குரு வணக்கத்திலும்,

"ஆரூரி லெனையாண்ட சைவசிகா மணிவாழ்க வடியார் வாழ்க
பேரூராமொற்றியூர் தனிலிருக்குமனைவோரும் பெரிதுவாழ்க"

என்று வாழ்த்துச்செய்யுளிலும் பாடியிருப்பது கொண்டு தெளியலாகும்.

சேது புராணம் பாடிய நிரம்ப வழகிய தேசிகர் மற்றொருவர். இவர் ஞானப்பிரகாசருக்கு உறவின்முறையுடையவர்; திருமறைக் காட்டிலே பிறந்தவர். இவர் தமது ஆசிரியரைத் துதித்துள்ள செய்யுள்களில் ஒன்று வருமாறு:

“வானத்தி லமுதுளது மதரிக்கு மதுபருகின்
மரண மணுகா தென்றுபூ
மண்டலத் தவரறியு மாறுபோ லோலையில்
வரைந்துபதி பசுபாசமென்
றானத்தி லறிவதல வனுபவித் தறிதலுக்
கொன்றுமே யென்றுசொல்லி
யுலகெலாங் குருவெனத் திரிவர்காண் போதனைக்
குனையொத்த குருவாவரோ
தானப்ர காசந் தவப்ரகா சம்பரம
சைவசித் தாந்தநிலையிற்
சகலாக மப்ரகா சம்பிரவுட கவிதைவித்
தாரப்ர காசமுறலான்
ஞானப்ர காசகுரு வேகுருவெ னக்கூறி
நாத்தழும் பேற்றகுருவே
நாதாந்த குருவேநி காந்தகுரு வேகமலை
ஞானசம் பந்தகுருவே.”

அன்றியும்,

“ஆரணமு மெக்கலையு மாகமமுங் கற்றாலுந்
தேருமுதன் மூன்றுந் தெரியாதே—பாரிற்
கருணை பொழிஞானப்ர காசன் கமலச்
சரணமிரண் டில்லையேற் றான்”

என்று பாடித் துதித்தவரும் இவரேயாம்.

## இவரது காலம்

இவ்வாறு பெருமையுடன் வாழ்ந்த இவருடைய காலம் திட்டமாகத் தெரியக் கூடிய பல சான்றுகள் இல்லாமற் போகவில்லை. அவற்றுளொன்று இவர் இயற்றிய திருமழுவாடிப் புராணத்தில் அப்புராணம் சாலிவாகன சகாத்தம் 1487-ல் இயற்றியதாகக்கூறப் படுவது. இஃது ஆங்கிலவாண்டு 1565 ஆகும். இதனை வலியுறுத்த மற்றொரு சான்றாய் நிற்பது திருவாரூர்ப் புராணச் செய்யுள்.

அந்நூல்,

"பார்புகழ்ச காப்தமா யிரத்தைஞ் ஞூற்றுப்
பதினொன்கா கியபிங்க லப்பே ராண்டிற்
சீர்பரவு பங்குனியுத் திரத்துத் தேவா
சிரயனெனுங் காவணத்திற் றேவர் போற்றுங்
கார்பரவு கண்டரா ரூர்ப்பு ராண
காதைநா கரகண்டங் கலைவல் லோர்மு
னேர்பரவு பேரளகை வணிகர் கோமா
னிசைவளர்சம் பந்தனரங் கேற்றி னானே"

என்பதனால் கி. பி. (1514+78=) 1592-ல் அரங்கேற்றப்பட்டது. திருவாரூர்ப் புராண ஆசிரியரான அளகைச் சம்பந்த முனிவர் நிரம்ப வழகிய தேசிகர் சீடர். இவருக்கு ஒரு தலைமுறை முந்தியே ஞானப்பிரகாசர் இருந்திருக்க வேண்டும். மழுவாடிப் புராணம் பாடிய காலத்துக்கும் திருவாரூர்ப் புராணம் பாடிய காலத்துக்கும் இடையில் உள்ள காலப்பகுதி இருபத்தேழாண்டுகளே என்பதையும் மனத்திற் கொள்வோமானால் இச்செய்தி பின்னும் வலியுறும். ஆகவே இவர் பதினாறும் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவராவார்.

---

## தமிழ்

சொல் என்னும் பூம்போது தோற்றிப் பொருள்என்னும்
நல்இருந் தீந்தாது நாறுதலால் — மல்லிகையின்
வண்டார் கமழ்தாமம் அன்றே மலையாத
தண்தாரான் கூடல் தமிழ்.





# அணுவின் அமைப்பும் புதிய இரஸவாதமும்

கே. ஸி. வீரராகவையர்

(1023-ம் பக்கத்தொடர்ச்சி)

**15. மின்சாரம். (2).**

இரண்டாவதாக, மின்சார சக்தியை உபயோகிக்கலாம். இரண்டு பிளாட்டினக் கம்பிகள் செருகிய ஒரு கண்ணாடிக் குழலிலுள்ள காற்றை ஒரு காற்று வாங்கி யந்திரத்தால் வெளியாக்கி, கம்பிகள் மூலமாய் மின்சார சக்தியைப் பிரயோகித்தால், ஒரு நீல ஜோதி காதோட் கம்பியிலிருந்து உண்டாகிறது; இந்த ஜோதி, குழலின்மேல் படவே, அங்கு ஒரு பச்சைப் பிரகாசம் தோன்றுகிறது. இப் பச்சைப் பிரகாசம் கண்ணாடி மூலமாய் வெளிவரும்போது ஏற்படும் கிரணங்களே, ராண்ட்ஜன் அல்லது எக்ஸ் கிரணங்கள் என்று அழைக்கப்படுகின்றன (படம், 5). கண்ணாடிக் குழலுக்குள் உள்ள காற்று, சாதாரணமாய் 76 சதாம்ச மீட்டர் பாரத்திலுள்ளது; காற்றுவாங்கி மூலமாகக் காற்றை வெளியாக்க வெளியாக்கப் பாரம் குறைகின்றது; கடைசியில் ஒரு சதாம்ச மீட்டரின் ஆயிரத்தில் ஒரு பங்கு பாரமாக ஏற்படும்போது, மேற்சொல்லிய நீல ஜோதியும் பச்சைப் பிரகாசமும் கிடைக்கின்றன. காதோட் கம்பியிலிருந்து வரும் கிரணங்கள் காதோட் கிரணங்கள் என்று அழைக்கப்படுகின்றன; அவை வெகு நுட்பமான பொருள்துகள்களாய்த்




5. காதோட் கிரணங்களும் எக்ஸ் கிரணங்களும்.

தோன்றுகின்றன ; இத்துகள்களுக்கு ஜே. ஜே. தாம்சன் என்ற அறிஞர் எலக்ட்ரான்கள் என்று பெயரிட்டார் ; இந்த எலக்ட்ரான்களில் ஒன்று, ஹைட்ரஜன் அணு ஒன்றின் எடையில் ($\frac{1}{1846}$) ஆயிரத்து எண்ணூற்று நாற்பத்தைந்தில் ஒரு பாக எடையாயுள்ளது என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. பிளாட்டினக் காதோட் கம்பிக்குப் பதிலாக வேறு எந்தத் தனிப்பொருளின் கம்பியையும் செருகி மேற்சொல்லிய பிரகாரம் மின்சார சக்தியைப் பிரயோகித்தாலும் முன்சொன்ன லக்ட்ரான்களே கிடைக்கின்றன ; ஆகவே, எல்லாத் தனிப்பொருள்களிலிருந்தும் எலக்ட்ரான் கிடைப்பதனாலே, தனிப்பொருள்களின் அணுவில் எலக்ட்ரான் ஒரு பாகம் என்று ஊகிக்கப்பட்டது ; அப்படியானால் மற்றப்பாகம் எது என்ற கேள்வி ஆராய்ச்சிக்கு வந்தது. காதோடில் (படத்தில் காட்டிய படி) சிறுதுவாரங்கள் இருந்தால், எலக்ட்ரான்கள் போகும் பாதைக்கு எதிர்முகமாகச் சில கிரணங்கள் வருகின்றன ; இக்கிரணங்களின் துகள்கள் கிட்டத்தட்ட ஹைட்ரஜன் அணுவின் எடையை ஒத்திருக்கின்றன ; ஒவ்வொரு துகளும் நேர்முக (*positive*) மின்சாரச் சுமையோடுள்ளது ; எலக்ட்ரான்களோ எதிர்முக (*negative*) மின்சாரச் சுமையோடுள்ளது. இப்படி நேர்முக மின்சாரச் சுமையை ஏந்திய துகள்களுக்குப் புரோடான் (*Proton*) என்று 1920-ம் வருஷத்தில் பெயரிடப்பட்டது.



6. மிகத்தாழ்ந்த பாரவாயுவில் மின் பொறிகளைச் செலுத்தலின் பயன்.

16. அணுவமைப்பு.

புரோடானும் எலக்ட்ரான்களும் சேர்ந்தே தனிப்பொருளின் அணுக்கள் ஏற்படுகின்றன ; புரோடானே நேர்முக மின்சாரச் சுமையைத் தாங்கியுள்ளது ; எலக்ட்ரானே எதிர்முக மின்சாரச் சுமையைத் தாங்கியுள்ளது ; இவ்விரண்டும் ஒத்துச் சமமாக நேர்ந்தால், அலி (*neutral*) அணு ஏற்படுகிறது. சாதாரணமாய் ஒரு தனிப்பொருளின் அணு அலி அணுவாக வுள்ளது ; ஒரு எலக்ட்ரானைப் பிரித்துவிட்டால் நேர்முக மின்சாரச் சுமைதாங்கிய துகள் உண்டாகிறது. அன்றி, ஒரு எலக்ட்ரானை ஏற்றுக்கொண்டால், அது எதிர்முக மின்சாரச் சுமைதாங்கிய துகளாய் ஏற்படுகிறது. எல்லா அணுக்

களிலும் இலேசானது ஹைட்ரஜன் அணு. புரோடான் எடை சுமார் ஹைட்ரஜன் அணுவின் எடைபோன்றுளதால் அது மையத்திலிருக்கும். சுமார் 1900 பங்கில் ஓர் எடை உள்ள எலக்ட்ரான் ஒரு புரோடானுடன் நின்றால், ஹைட்ரஜன் அலி அணு உண்டாகி விடுகிறது. முந்திய அணுக்கட்டத்தில் காட்டப்பட்டுள்ள அணு எடை அந்த அந்தத் தனிப்பொருளின் அணுவின் மையத்திலுள்ள புரோடானைக் குறிக்கிறதென்றும், அணுவெண் அவ் வணுவைச் சுற்றியுள்ள எலக்ட்ரான் எண்ணைக் குறிக்கிறதென்றும், மேலும் அவ்வணுவெண் அணு மையத்தில் காணும் நேர்முக மின்சாரச் சுமை எண்ணையும் குறிக்குமென்றும் இந்த நாளில் நம்பப்பட்டு வருகிறது. உதாரணமாக, யுரேனியம் அணு தன் மையத்தில் 92 நிகர நேர்முக மின்சாரச் சுமையை உடையதென்றும், மையத்தில் 238 புரோடான்களை உடையதென்றும், அம்மையத்தின் சுற்றளவில் 92 எலக்டரான்கள் உள என்றும் நம்பப்படுகிறது. இதேமாதிரி மற்றத் தனிப்பொருள்களின் அணுக்களுக்கும் கொள்க. அணுக்களின் மையத்தைச் சுற்றித் தூர நிற்கும் எலக்டரான்கள் சளையாது சூரியனைச் சுற்றி ஓடும் கிரகங்களைப்போல் சுற்றிச் சுற்றி ஓடிக் கொண்டே யிருக்கின்றன என்று நீல்ஸ் பார் (*Niels Bohr*) என்ற அறிஞர் முதலியவர்கள் நினைக்கின்றனர்; லூயி (*Lewie*), லாங்க்மியூர் (*Langmiur*) போன்ற அறிஞர்கள் வெளி எலக்ட்ரான்கள் எண்மூலை உருவங்களின் மூலைகளில் அமர்ந்து ஒளிர்கின்றன என்று கருதுகின்றனர். இவையே அணு அமைப்பின் இக்காலக் கருத்துக்களாகும். இவ்விரண்டு கருத்துக்களின் பிரகாரம் ஹைட்ரஜன், ஹீலியம் என்ற தனிப்பொருள்களின் அணுக்களின் அமைப்புத்தான் இதுவரை விஸ்தாரமாய் ஆராயப்பட்டு வந்திருக்கிறது. கடைசியாகப் பார்க்குமளவில், சிறு பிள்ளைகள் ஒரு சதுரக்கடிதத்திலிருந்து கப்பல், கத்திக்கப்பல், ஸ்டீமர், மைக்கூடு, பெட்டி முதலியன கலைத்துக் கலைத்துச் செய்தல்போல, எலக்ட்ரான்களும் புரோட்டான்களுமே பலவிதத்திலும் பல எண்ணிக்கையிலும் தம்முள் கலந்து கோத்து நமது ஆளுகையில் கிடைத்திருக்கும் தொண்ணூறு தனிப்பொருள்களையும் தந்திருக்கின்றனவோ என்று அதிசயிக்கத்தக்கனவாயிருக்கின்றன! நிற்க.




7. அணு அமைப்பு விவரம்.

ஆருவது படத்தில் காட்டியபடி வரும் காதோட் கிரணங்களை அந்த வெற்றிடக் குழலில் (*vacuum tube*) முன்னமேயே வைக்கப்பட்டிருக்கும் ஒரு கனிப் பொருளில் (*mineral*) படும்படி செய்தால், அந்தக் கனிப் பொருளில் ஒரு புதிய வர்ணம் தோன்றுகிறது; இன்னும் குழலில் புதிய வாயு ஒன்றும் தோன்றி யிருப்பதாக ஸ்பெக்ட்ரம் சோதனையில் தெரிகிறது; ஸ்பெக்ட்ரம் வரிகளில் நியான் (*Neon*) என்ற வாயு தோன்றி யிருப்பதாகத் தெரிகிறது; புளூரைட் (*Fluorite*) என்ற கனிப்பொருளை உள்ளே வைத்திருந்தாலும், கண்ணாடிப் பஞ்சை (*Glass wool*) வைத்திருந்தாலும் இந்த நியான் வாயு தோன்றிவிடுகிறது. இந்தச் சோதனைகளை ஜேம்ஸ் கல்லி (*James Collie*) என்பவர் லண்டன் யூனிவெர்சிட்டிக் காலேஜில் செய்தார். பிறகு அவர் வெற்றிடக் குழலில் சிறிது ஹைட்ரஜனை விட்டு, குழலைச் சூடுபண்ணி, முன்போல மின் சாரத்தைப் பாய்ச்சிக் காதோட் கிரணங்களைக் கிளப்பி அதில் படும்படி செய்து, பின்னர் ஹைட்ரஜனை ஆக்ஸிஜனோடு சேரச் செய்து விலக்கிவிட்டு, மிகுதியான ஆக்ஸிஜனை திரவக்காற்று (*liquid air*) மூலமாய்த் திரவமாக்கி விலக்கி, எஞ்சி நின்ற ஆக்ஸிஜனையும் சுத்தக் கரியில் கலந்து மறையும்படி செய்து, பிறகு ஸ்பெக்ட்ரம் சோதனையைச் செய்து பார்த்ததில் முன்பு நியான் இல்லாத இடத்தில் இப்பொழுது நியான் தோன்றி யிருப்பதாகத் தெரிந்தது. நியானுக்கு ஆக்ஸிஜனோடு சேர்ந்து புதுப் பொருள் செய்வதற்காவது, சுத்தக் கரித்துவாரங்களில் ஆகர்ஷிக்கப்பட்டு மறைவதற்காவது யோக்கியதை கிடையாது. ஆகவே இந்த நியான் தோன்றின விதம் எப்படி?

17, ஜேம்ஸ் கல்லியின் சோதனை.

(1) வெளியிலுள்ள காற்றிலிருந்து கண்ணாடியின் ஒரு சிறு ஓட்டை மூலமாக உள்ளே நுழைந்திருக்கலாமா? அப்படியானால், நியானை விட 80,000 மடங்கு அதிகமாயுள்ள நைட்ரஜன் வாயு உள்ளே நுழையவில்லையே; நைட்ரஜன் ஸ்பெக்ட்ரம் வரி ஒன்றும் கிடைத்திலது; ஆகையால் இது காரணமல்ல.

18. ஜேம்ஸ் கல்லியின் ஊகம்.

(2) வெற்றிடக் குழாயினுள் விட்ட ஹைட்ரஜன், ஆக்ஸிஜன் மூலமாக நியான் ஏற்பட்டிருக்கலாம். காதோட் கிரணங்களைக் கிளப்பாமல் இவைகளைச் சேரும்வண்ணம் செய்து சோதித்ததில், கொஞ்சம்கூட நியான் கிடைக்கவில்லை.

(3) ஒருவேளை கண்ணாடியே நியானை உள்நுழைய விட்டிருக்கலாம்; அப்படியானால் காதோட் கிரணங்கள் தோன்றாத வெற்

திடக் குழல்களில் இந்தச் சம்பவம் நேருகிறதில்லை ; ஆகையால் கண்ணாடி காரணமில்லை.

(4) வெற்றிடக்குழலைச் சுற்றி வேறு ஒரு குழலை இணைத்து அதில் நிரம்ப நியானைவிட்டு முன்போல் சோதித்துப் பார்த்ததில், முன்பு கண்ட நியான் அளவே இப்பொழுதும் தோன்றிற்றே யல்லாமல் மிகுதியாகக் காணப்படவில்லை; மேற்குழலில் வெளிக் காற்றில்விட நியான் 50,000 மடங்கு அதிகப்பாரத்தில் வைக்கப்பட்டிருந்தது. ஆகையால் ஒழுக்கு, காரணமே யல்ல.

(5) காதோட் கம்பிகளிலிருந்தும் நியான் தோன்றவில்லை என்று நிதர்சிக்கப்பட்டது.

ஜேம்ஸ் கல்லி பின்னும் ஒரு யுக்தி செய்தார். வெற்றிடக் குழலைச் சுற்றி மற்றொரு வெற்றிடக் குழலைப் பிணைத்து முன்போல் சோதித்தார். அப்பொழுதும் உட்குழலில் நியான் தோன்றிற்று. மற்றொரு அதிசயம்; மேல் குழலில் ஆக்ஸிஜனை உட்புகவிட்டு, பிறகு உட்குழலில் முன்போலக் காதோட் கிரணங்களைக்கிளப்பின பிறகு, வெளிக்குழலிலுள்ள ஆக்ஸிஜனைச் சோதித்ததில், அதனுடன் ஹைட்ரஜன் வாயு கலந்திருப்பதாகத் தெரிந்தது. வெளிக் குழலில் ஹைட்ரஜன் எப்படி வந்தது ? பிறகு வெளிக்குழலிலுள்ள ஆக்ஸிஜன் வாயு முழுவதையும் வெளியாக்கிவிட்டு, மிஞ்சியுள்ள வாயுவை ஸ்பெக்ட்ரம் வழியாய்ச் சோதித்தால், அதில் ஹிலியம், நியான் வாயுக்கள் இருப்பதை ஜேம்ஸ் கல்லி கண்டார். இவை எப்படி வந்தன ? இவை முதலில் காதோட் ஏனத்தில் உண்டாகிக் கண்ணாடி மூலமாக வெளிக்குழலுக்குள் வந்தனவா ? வெகு நாளாக உபயோகத்திலிருந்த எக்ஸ் கிரணக் குழல்களில் ஹிலியம், நியான் வாயுக்கள் காணப்படுகின்றன என்று ஸர் வில்லியம் ராம்ஸே அறிவித்திருந்தனர். இவை எல்லாம் நிதர்சனமாகக் கண்டறிந்த விஷயங்கள். ஆகையால், காதோட் கிரணங்களின் சம்பந்தத்தினாலே ஹைட்ரஜன் வாயு ஹிலியமாகவும் நியானாகவும் மாறுபாடடைகின்றது என்று நாம் ஊகிக்கவேண்டியதா யிருக்கிறது. முன் பதினேழாவது பிரிவில் சொல்லியபடி அகண்டமான நக்ஷத்திரப் பிரதேசங்களில் நேபுலப் பொருள்கள் மிக்க அணு எடையுள்ள தனிப் பொருள்களாக மாறுவதைப்போல இருக்கின்றது, ஜேம்ஸ் கல்லி (*James Collie*), ராம்ஸே (*Ramsay*) முதலிய இரசாயனிகள் கண்டு பிடித்துள்ள சம்பவம். இதுவும் வாதமே. இந்த வியாசத்தில் முதலாவது பிரிவின் வினவுக்கும் ஒரு விடை கிடைத்துள்ளது.

19. வில்லியம் ராம்ஸேயின் சோதனைகள்.

ஸர் வில்லியம் ராம்ஸே, இந்த வியாசத்தில் விவரித்துள்ள கிரணச் சுறுசுறுப்பைத் தமது சோதனையில் உபயோகித்தார். ஏழாவது பிரிவில் கண்ட அணு எடைக் கட்டத்தில் 86-வது தனிப்பொருளாகிய ரேடான் என்பது சுயமாகவே, இரண்டாவது தனிப்பொருளாகிய ஹிலியம் என்பதைத் தருவதாக ராம்ஸே கண்டார். பின்னர் அந்த ரேடானுடன் ஜலம் சம்பந்தப்பட்டால், ஹிலியத்துக்குப் பதிலாகப் பத்தாம் தனிப்பொருளாகிய நியான் கிடைப்பதைக் கண்டார். பிறகு ஜலத்துக்குப் பதிலாக மயில்துத்தம் கரைந்த திரவத்துடன் ரேடான் சம்பந்தப்பட்டால், நியானுமில்லாமல், பதினெட்டாம் தனிப்பொருளாகிய ஆர்கானும் லிதியமு (மூன்றுவது)ம் கிடைப்பதை அறிந்தார். ரேடான் (86), ஆர்கான் (18), நியான் (10), ஹிலியம் (2) ஒரு குடும்பத்துத் தனிப்பொருள்கள்; மயில்துத்தத்திலுள்ள செம்பும் லிதியமும் அடுத்த குடும்பத்துத் தனிப்பொருள்கள் (3, 29). மிகுந்த அணு எடையுள்ளவைகள் குறைந்த அணு எடையுள்ள தனிப்பொருள்களாக மாறுகின்றனவாகத் தோன்றுகின்றன. ராம்ஸே தமது சோதனையில் சந்தேகிக்க இடந்தந்த பாகங்களை யெல்லாம் விலக்கி மீண்டும் மீண்டும் இச்சோதனையைச் செய்து பார்த்தார். சில தடவைகளில் செம்புப் பொருளிலிருந்து லிதியம் கிடைத்தது. ஆனல், மாது ஸ்ரீ குயுரே கண்ணுடி ஏனங்களுக்குப் பதிலாகப் பிளாட்டினம் ஏனத்தை உபயோகித்து இச் சோதனையைச் செய்தாள். அவள் சோதனையில் செம்புப் பொருளிலிருந்து லிதியம் கிடைக்கவில்லையாம். ராம்ஸேயும் அவளும் ரேடானையும் தோரியம் நைட்ரேட் கரைந்த திரவத்தையும் சம்பந்திக்கச் செய்து சோதித்தார்கள்; அப்பொழுது அவர்களுக்கு கார்பன் டை ஆக்ஸைட் என்ற வாயு அந்தச் சோதனையில் கிடைத்தது. இதன் விவரம் எப்படி என்று நினைத்தனர். பிறகு அவர்கள் ரேடானுடன் சிலிக்கான் (14), டிடேனியம் (22), சர்க்கோனியம் (40), ஈயம் (82) முதலிய உட்பட்ட பொருள்களைத் தனியே சம்பந்திக்கச் செய்து சோதித்தார்கள். கார்பன் டை ஆக்ஸைட் முன்னிலும் அதிகமாகக் கிடைப்பதைக்கண்டு மகிழ்வெய்தினர். இத்தனிப் பொருள்கள் எல்லாம் நான்காவது குடும்பத்தைச் சேர்ந்ததாகத் தெரிந்தவுடன் மர்மம் அறிந்தார்கள். அதிக அணு எடையுள்ள 90, 82, 40, 22, 14-ம் தனிப்பொருள்கள் தாழ்ந்த அணு எடையுள்ள 6-ம் தனிப்பொருளாய் மாறுவதாக அர்த்தம் செய்தார். அகண்டவானில் கோளங்கள் மோதி அதி உஷ்ண நிலையில் தாழ்ந்த அணு எடையுள்ள தனிப்பொருள்கள் பிறத்தலை ஒத்திருக்கிறது ராம்ஸேயின் சோதனை.

இதுவும் வாதமே; இவ்வியாசத்தில் முதல் பிரிவில் கண்ட வினாவுக்கு இது மற்றொரு விடையாகும்.

நதர் போர்டின் சோதனைகள்.

(20) ஜேம்ஸ் கல்லி, ராம்ஸே இவர்கள் சோதனைகளை எற்பாரும் மறுப்பாரும் பலராயினர். வாத விஷயம் வாதத்திலேயே இருந்துவருகிறது; இருந்தாலும் சிலர் பிடிவாதமாய் இந்தப் பரிசீலனையில் முன் காலத்தில் போல, இக்காலத்திலும் தம் வாழ்நாளைக் கழித்து வருகின்றனர். உண்மையை யறிவதில் யாருக்குத்தான் விருப்பம் இராது? ஒவ்வொரு தனிப்பொருளுக்கும் ஓர் அணு உண்டு என்று ஊகித்துக்கொண்டோம்; பிறகு பிளக்க முடியாதது என்ற அணு பிளவுண்டு ஓர் அமைப்பை அடைந்ததைத் தெரிந்துகொண்டோம். அதாவது எடைக்குப் பாத்திரமான புரோடான்கள் மையத்திலும் ரசாயன மாறுபாடுகளுக்குப் பாத்திரமான எலக்ட்ரான்கள் சுற்றிலும் இருப்பனவாக அறிந்தோம். புரோடான்கள் புதைந்துள்ள பாகத்துக்கு நயூக்கிலியஸ் (*nuecleus*) என்று பெயர்; இந்த நயூக்கிலியஸிலிருந்து புரோட்டான்களைத் தகர்த்து எறிந்துவிட்டால், புதுக் தனிப்பொருள்களை அடைய முடியும். ருதர்போர்டு என்ற இக்காலப் பெரிய மேதாவி கிரணச் சுறசுறுப்பிலிருந்து கிடைக்கும் ஆல்பாக்கிரணங்களின் உதவிகொண்டு பாஸ்பரஸ் (15), அலுமினியம் (14), சோடியம் (11), புலோரின் (9), நைட்ரஜன் (7), போரான் (5) முதலிய தனிப்பொருள்களின் அணுக்களின் நயூக்கிலியஸில் உள்ள புரோடான்கள் சிலவற்றை வெளியாக்கிச் சோதனைகள் செய்துவருகின்றனர். சராசரி பத்துலக்ஷம் ஆல்பாகிரணத்தின் வேலையின் பயனாக ஒரு நயூக்கிலியஸிலிருந்து இரண்டு புரோட்டான்தான் வெளியாகின்றதாம்.

(21) இரண்டு மூன்று வருஷங்களுக்கு முன் ஜெர்மனி தேசத்தில் அடல்ப்மிதே என்பவர் இரஸத்தின் ஆவியில் பலகாலும் மாய்ந்து மின்சார சக்தியின் பந்தத்தால் ஒரு நுண்ணிய எடைத் தங்கம் கிடைத்ததாக அறிவித்தார். அணு எடைக்கட்டத்தில் காட்டியபடி தங்கமும் இரஸமும் 79, 80-வது தனிப்பொருள்களாகும்; இரஸ அணுவில் கிட்டத்தட்ட 200 புரோடானும் 120 எலக்ட்ரானும் நிறைந்த நடு நயூக்கிலியஸும் வெளி எலக்ட்ரான் 80-ம் இருக்கின்றன; இவைகளில் உள் நயூக்கிலியஸில் கிட்டத்தட்ட 197 புரோட்டான்களும் 118 எலக்ட்ரான்களும் நிறைந்ததாகச் செய்துவிட்டால் வெளிச்சுற்றில் 79 எலக்டரான்களாகக் குறைந்துவிடும்; தங்க அணுவும் ஏற்பட்டுவிடும். இதைச் சாதிப்பதற்கு அமெரிக்க அறிஞர்கள் பலரும் ஜெர்மன் அறிஞர்களும் உழைத்துவருகின்றனர். பலன் இனிமேல்தான் தெரியவேண்டும்.

# சுத்த ஜலம்

## 3. நீர்ப் பரிசோதனை

சுசி

(1015-ம் பக்கத்தொடர்ச்சி)

கலைஞர் ஜலத்தைப் பல பரிசோதனைகள் செய்து ஆரோக்கிய மானதா, உட்கொள்ளத் தகுந்ததா என்று நிர்ணயிக்கிறார்கள். சோதனைக்கு வேண்டிய சாதனங்களுள்ள சோதனைச் சாலைகள் (*Laboratories*) இருக்கின்றன. அங்கேயிருந்து பரிசுத்தி செய்து அனுப்பும் கண்ணாடிப் போத்தலில் சோதிக்க வேண்டிய நீரைக் கையால் தொடாமல் எடுத்துப் பனிக்கட்டியிற் பொதிந்து சோதனைக்கு அனுப்புவார்கள். பனிக்கட்டியில் பொதிந்து வைக்காவிட்டால்சோதனைக்கு அனுப்பிய நீரில் நுண்ணுயிர்களின் சந்ததி பெருகி விடும். நீரை எடுத்தபின் எவ்வளவு சீக்கிரம் சோதிக்கமுடியுமோ அவ்வளவு உண்மையான நிலைமை சோதனையில் விளங்கும்.

நீரில் இலை, வேர் முதலிய சாக பதார்த்தங்களும் இரும்பு முதலிய வஸ்துக்களும் சம்பந்தப்பட்டிருப்பதால் பல நிறங்களை அடைகிறது. ஜலத்தின் நிறத்தை வர்ணிப்பதுடன் கனத்த நிறமா, இலேசா என்பதைக் கணக்கிட முறைகளிருக்கின்றன. உபயோகிக்கத் தகுந்த ஜலத்தின் நிறம் ஒரு குறிப்பிட்ட கணக்குக்கு மேற்படலாகாது என்று கலைஞர் வரையறுத்திருக்கிறார்கள்.

ஜலத்திலுள்ள சாக பதார்த்தங்களும் நுண்ணுயிர்களும் பல கந்தங்களை உற்பத்தி செய்கின்றன. கந்தத்திலிருந்து முக்கியமாய் ஜலத்தில் சாக்கடை அசுத்தங்கள் கலந்திருப்பதை அறியலாம். ஆற்றுநீர் ஏரி நீர்களைப் பூதக்கண்ணாடியால் சோதித்ததில் அவற்றின் மணத்துக்குக் காரணங்கள் அநேகம் இன்னும் அறிவாளர்க்கும் தெரியவில்லை. ஜலத்தின் மணத்தைச் சோதனைச் சாலையினர் பத்து விதங்களில் வர்ணிப்பதுடன் பலத்த மணமா, அல்லவா என்பதையும், ஐந்து விதங்களாகக் குறிக்கிறார்கள். உபயோகிக்கத் தகுந்த ஜலத்தில் மணமிருக்கக் கூடாது.

ஜலத்தில் களிமண், வண்டல், இரும்பு, பாசி, நுண்ணுயிர்கள் முதலியவை மிதந்து கொண்டிருப்பதால் கலங்கலாய்த் தோன்றும். டர்பிடிடி (*Turbidity*) என்றால் ஜலத்தில் ஒளி ஊடுருவிச் செல்லத்

தங்கதா யிருக்கிறது என்பதே. கலைஞர் ஜலத்தின் கலங்கலை அளவிடு கிறார்கள். குடிக்கத் தகுந்த நீர் இவ்வளவுக்குமேல் கலங்கி யிருக்கக் கூடாது என்று வரையறுத்திருக்கிறார்கள்.

ரஸாயன சோதனைகள் மூலம் அறிஞர்கள் ஜலத்தில் பிராணவாயுவால் பஸ்மமாகக்கூடிய சாக பதார்த்தம் எவ்வளவிருக் கிறது என்பதையும் நைட்ரோஜன் வாயு (*Nitrogen*) என்ன நிலை மையில் எவ்வளவிருக்கிறது என்பதையும் சோதிக்கிறார்கள். நைட் ரோஜன் சோதனை முக்கியமானது. 'அல்பூமினுயுடு அம்மோனியா' (*Albuminoid Ammonia*) என்ற நிலைமையில் கணக்கிடப்படும் நைட்ரோஜனின் அளவு ஜலத்திலுள்ள சாக மிருக அசத்திகளின் அளவை ஒருவாறு குறிக்கிறது. குடிக்கத் தகுந்த ஆற்றுநீர் குளத்து நீர்களில் இருந்த அம்மோனியா பத்து லக்ஷம் பங்கு ஜலத்தில் (தசாம்சம்)0·3 க்கு (*0·3 parts per million*) மேல் எடைக்கெடை இருப்பது உசிதமில்லை யென்று சொல்கிறார்கள். ஊற்று நீரில் இந்த அம்மோனியா மிகக் குறைவாயிருக்கும். பத்து லக்ஷத் தில் (தசாம்சம்)0·15 க்கு மேற்பட்டால் ஊற்று நீரைச் சாதாரண மாய்க் குடிக்கத் தகுந்ததாக ஒப்புக்கொள்வதில்லை.

தனி அம்மோனியாவாகக் கணக்கிடப்படும் நைட்ரோஜன் ஜலத் தில் அழுகிக் கொண்டிருக்கும் சாக மிருக பதார்த்தங்களையும் மல மூத்திர சம்பந்தத்தையும் காட்டுகிறது. தனி அம்மோனியா பத்து லக்ஷத்துக்கு தசாம்சம் 0·15 க்கு மேற்படுவது உசிதமில்லை. ஆழ மான கிணறுகளில் இதன் அளவை அதிகமாய்ப் பாராட்ட வேண்டி யதில்லை.

நைட்ரோஜன் வாயு நைட்ரைட்டு, நைட்ரேட் (*Nitrites and Nitrates*) என்ற உப்புக்களாகவும் தனித்தனியாயும் எவ்வளவிருக்கி றது என்று சோதித்துப் பார்ப்பார்கள். நைட்ரேட்டுகள் அதிக மாயிருந்தால் ஜலத்தில் சாக்கடை சம்பந்த மிருக்குமோ வென்று சந்தேகிக்க வேண்டும். நைட்ரேட்டுகள் வெகு காலத்துக்கு முன் ஏற்பட்ட அசுத்தியைக் குறிக்கும்; அல்லது ஜலம் வருமிடத்திலுள்ள உப்புக்களைக் குறிக்கும்.

மேற்கண்ட பரிசோதனைகளைத்தவிர ஜலத்தின் கடுப்பு (*Salinity*), காரம் (*Alkalinity*), கடினம் (*Hardness*) என்பவற்றையும் கணக் கிடுகிறார்கள். கடினமென்பது ஜலத்தில் சவுக்காரத்தைக் கரைத்து நுரை வருவதற்கு எவ்வளவு சவுக்காரம் பிடிக்குமென்பதன் அளவு. சுண்ணாம்பு, மாக்னிஷியம் இவை சேர்ந்த ஜலம் கடினம்; இதில் துணி தோய்ப்பது கஷ்டம்; அதிகச் சவுக்காரம் செல்லும். இதைக் கடின பரிசோதனையால் கண்டு கொள்ளலாம்.

ஜலத்திலுள்ள குளோரின் வாயு கடலோரத்திலும் பூமிக்குள்ளும் உப்பினுலேற்பட்டிருக்கலாம். குளோரினையும் கணக்கிடுவார்கள். இயற்கையில் ஜலத்தில் காணப்படும் குளோரின் தனி வாயுவாயிராது. வேறு உலோகங்களுடன் ஐக்யப்பட்டு உப்பாகத்தானிருக்கும். பத்து லக்ஷத்துக்கு 200 பங்குக்கு மேல் எடைக்கெடை ஜலத்தில் உப்பிருந்தால் கடிப்பு ருசிக்குத் தெரியும். 300-க்கு மேற்பட்டால் உபயோகிக்கத் தகாது போய்விடுமென்று மதிக்கிருர்கள்.

ஜலத்தில் கரைத்த வஸ்துக்கள் ஓரளவுக்கு மேற்பட்டால் உபயோகிக்க முடியாது. கரைத்தவைகளில் தாமிரம், துத்தம், ஈயம் இவை கணக்குக்கு மேற்பட்டால் அந்த ஜலம் விஷமாகும்.

இது தவிர ஜலத்தின் *Ph value* என்ற கணக்கையும் கண்டுபிடிக்கிருர்கள். இதன் பொருள் ஆங்கிலத்தில் *Hydrogeu Ion Concentration*, என்பது; தமிழில் "பரமாணுத்துவ வீரியம்", அல்லது "பரமாணுத்துவ நெருக்கம்" என்று சொல்லலாம். இது ஒரு மட்டுக்கு மேற்படுவதும் சரியல்ல, கீழ்ப்படுவதும் சரியல்ல. இந்தக் கணக்கு ஜலசுத்தி முறைகளுக்கு அவசியம் அறியவேண்டிய விஷயம்.

ஜலத்திலுள்ள நுண்ணுயிர்களையும் ஒரு விதமாகக் கணக்கிடுகிருர்கள். இதற்கு நல்ல பூதக்கண்ணுடியினுல் சோதிக்க வேண்டும். நுண்ணுயிர்களெல்லாம் ஆரோக்கியத்துக்கு விரோதிகளாகக் கருதப்படவில்லை. ஆயினும் ஒரு கன ஸெண்டி மீட்டருக்கு (1. c. c.) 1000 நுண்ணுயிர்களுக்கு மேற்பட்ட இயற்கை ஜலத்தை உபயோகிப்பது உசிதமில்லையென்பது அறிவாளர் கொள்கை. எவ்வளவு குறைவாக இருக்கின்றனவோ அவ்வளவு நல்லது. இந்த நுண்ணுயிர்களை இனம் (*Species*) இனமாகப் பிரித்து அறிகிருர்கள். க்ரெனோத்ரிக்ஸ் (*Crenothrix*) முதலிய சில நுண்ணுயிர்கள் இரும்பு, மாங்கனிஸ் என்ற உலோகங்களுள்ள ஜலத்தில் செழிப்பாய் வளர்ந்து அவற்றின் உப்புச் சத்துக்களைக் கவசம் போல் ஏற்படுத்திக் கொள்கின்றன. இவை ஒளியும் சலனமுமற்ற ஏரிகளினடியிலும் வாழ முடியும். இவை மிகுதியாகவுள்ள ஜலம் தண்ணீர்க்குழாய்களைத் துருவேற்றி விடுகிறது. குழாய்களினுட்புறம் பொரிந்து நாளடைவில் ஜலத்தின் போக்குத் தடைப்பட்டுப் போகிறது. இவ்வினத்தைச் சேர்ந்த நுண்ணுயிர்கள் மரித்து அழுகி நீரில் துர்நாற்றங்களையும் கெட்ட சுவைகளையும் உண்டாக்குகின்றன.

இன்னும் சிலஇன நுண்ணுயிர்கள் மனிதர்களுடைய குடற்பிரதேசங்களிலும் மிருகங்களின் குடல்களிலும் மட்டும் வாழ்வன. காலரா (*Cholera*) என்ற வாந்தி பேதி, டைபாயிடு (*Typhoid*)

விஷ ஜுரம், பாரோடைபாயிடு (*Parotyphoid*), என்டரிக் (*Eenteric*) என்பவை போன்ற கொள்ளை நோய்களுக்கு இவ்வினத்தைச் சேர்ந்த சில கிருமிகள் காரணம். இவ்வினம் குடிதண்ணீரிலிருப்பதே மிக்க அபாயமாதலால் நுண்ணுயிர்ப் பரிசோதனையில் இதைத் தனியாகச் சோதிப்பார்கள். (*B. Coli*) என்றும் லாக்டோஸ் பர்மெண்டிங் ஆர்கானிஸ்ம்ஸ் (*Lactose fermenting organisms*) என்றும் குறிப்பிடப்படும் இவ்வித விஷக் கிருமிகள் (*Pathogenic bacteria*) குடிதண்ணீரில் ஓரளவுக்கு மேற்படலாகாது. இல்லாமலே யிருத்தல் நன்று; ஆனால் அவ்வாறிருத்தல் அரிது; குறையக்குறைய நீரின் குணம் மேம்படும்.

மேற்கண்ட சோதனைகளினால் மட்டும் ஒரு ஜலத்தை உபயோகிக்கத் தகாது என்று தீர்மானிப்பது தவறு. அசுத்தி யில்லாத நீர் இயற்கையில் காணப்படுவது அரிது. சோதனைகளும் சாமானியர் செய்யக்கூடியதன்று. சோதனைகளால் அசுத்திகளினளவையும் தன்மையையும் கண்டபின் நீர்நிலையைக் கண்கூடாக ஆராய்ந்து பார்த்து அசுத்தியின் காரணங்களை யறிந்து, அவை அபாயமான அசுத்திகளா, அதிகப் பொருட்செலவின்றி எளிதின் விலக்கக்கூடியவையா என்று தெளிந்த பின்பே நீர் உபயோகிக்கத் தகுந்தது, தகாதது என்று அறிவாளர் அபிப்பிராயம் கூறுவார்கள். அசுத்திகளை எல்லாத் தேசங்களுக்கும் எல்லாக் காலங்களுக்கும் ஒரே ரீதியாய் இவ்வளவுக்கு மேற்படலாகாது என்று வரையறுத்துவிட முடியாது. உதாரணமாய்க் கடற்கரை யோரத்தில் நீர் கொஞ்சம் கடுப்பாயிருந்தாலும் வேறு நீர்நிலை யில்லாதபோது அந்த ஒரு காரணத்தால் மட்டும் கண்டனம் செய்து அதைத் தள்ளிவிடக்கூடாது. தேசகால வர்த்தமானங்களைக் கருதி இவ்விஷயத்தில் அதிகாரிகள் தீர்மானிப்பார்கள். இப்படித் தீர்மானிப்பதற்குப் பொறுப்பை வகிக்கும் அதிகாரி மிகுந்த அநுபவமும், ரஸாயனம், நுண்ணுயிர் நூல், ஆரோக்கியமுறை, பூதத்துவம், ஜலதத்துவம், ஜல சுத்தியின் நுட்பம் என்ற கலைகளில் தம் வேலை சம்பந்தப்பட்டவரையில் தெளிவான அறிவும் உடையவராயிருக்க வேண்டும்.

ஓர் ஊருக்கு ஜல வசதி ஏற்படுத்து முன்னும், ஏற்படுத்தியபின் அடிக்கடியும் ஜலத்தை மேலே கண்டபடி சோதனை செய்ய வேண்டும். குடிதண்ணீர் எப்போதும் சுத்தமாக இருக்கிறதா என்பதை அறிந்து ஜனசமூகத்தின் ஆரோக்கியத்தைப் பாதுகாப்பதற்கு அடுத்தடுத்துச் சோதனை செய்வதொழிய வேறு வழியில்லை.

இனி நீர் நிலைகளை அசுத்தியினின்றும் பாதுகாக்கும் வழிகளைச் சற்றுக் கவனிப்போம்.

(தொடரும்)

# புராதன மனிதனது
# வாழ்க்கையும் வழக்கங்களும்

எம். டி. ராகவன்—பி. என். அப்புஸ்வாமி



(1044-ம் பக்கத்தொடர்ச்சி)

ஆகையால், இக்காலத்திலே தோண்டியெடுக்கும் பல இடங்களிலே நமக்குத் தென்படும் கருவிகள் இன்ன இன்ன வென்று அறிந்துகொள்வதும், அவை நிச்சயமாக எந்த நாகரிக காலத்தைச் சேர்ந்தவை என்பதைத் தெளிவாகத் தெரிந்துகொள்ளுவதும் அவசியம். ஐரோப்பாவிலே உள்ள பண்டைக்கால ஆராய்ச்சி நிபுணர் பற்பல நாகரிகங்களையும் ஒவ்வொன்ருக எடுத்து ஆராய்ந்து, அவற்றை வெவ்வேருகப் பிரித்து, அவை இன்ன இன்ன முறையில் ஒன்றன்பின் ஒன்ருகத் தோன்றியன என்று வரையறுத்துக் கூறுகின்றனர்.

இக்காலத்திலே, பூமியின் மேற் பரப்பிலே அநேக இடங்களில் கற் கருவிகள் அநேகம் காணப்படுகின்றன. இதனினின்று, இக் கருவிகள் பூமியிலே எங்கெல்லாம் பரவி யிருந்தன என்பதை மட்டிலுமே கூறமுடியும். இக் கருவிகள் குறிப்பிட்ட இன்ன நாகரிகத்தைத்தான் சேர்ந்தவை என்று கூற முடியாது. பூமியின் அடுக்குக்களில் (படம், 1) ஏதாயினும் ஒன்றில் இவை காணப்படுமாயின் இவற்றைக்கொண்டு பண்டைக்கால சரிதத்தை ஒருவாறு கூறலாம். இவ்வாறு பூதத்துவ அடுக்குக்களில் காணப்பட்ட கற்கருவிகளினின்றுதான் பழங்காலச் சரிதத்தை ஒரு வகையாக நிருமித்துக் கொண்டிருக்கின்றனர். ஆதலால் இந் நிர்மாணத்துக்கு இவை இன்றியமையாத சாதனங்களாகும். பூதத்துவ சம்பந்தமான தோற்றங்கள் யாவும் உறுதியாக நம்பத்தக்கவை. நாகரிக காலங்களைப்பற்றிக் கூறுவதற்கு இவற்றைத்தாம் மெய்யான அத்தாட்சிகளாகவும் அடிப்படையான ஆதாரங்களாகவும் கொள்ளல்கூடும்.

கற்களை எவ்வாறெல்லாம் உபயோகப்படுத்தக்கூடும் என்பதைப் புராதன மனிதன், முதன் முதலிலே, எப்படி அறிந்து கொண்டான்? இதைப் பற்றி நாம் ஊகத்தால் அறிந்து கொள்ளவேண்டுமே




படம், 1. பூமியின் மேலோட்டின் அடுக்குகள்.



படம், 3. கற் கருவிகள்.



படம், 4. கற் கருவிகள்.



மனிதனும் குரங்குகளும்

படம், 2.

தவிர வேறல்ல. சிற்சில இடங்களிலே உள்ள குரங்குகள் கிட்ட வருவோர்மீது காய்களையும் கொட்டைகளையும் பறித்து வீசி எறிகின்றன என்று பல தேசங்களில் பிரயாணஞ்செய்த தேசசஞ்சாரிகள் கதைகள் சொல்லுகிறார்கள். அதுபோலப் பண்டைக்காலத்திலே எறிவதற்கு உரிய பொருள்களாகவே கற்கள் முதன் முதலிலே உபயோகிக்கப்பட்டிருக்கலாம். இதன் உண்மை எப்படி இருந்தாலும், கொட்டைகளை உடைப்பதற்கும், மரக்கிளைகளைத் தறிப்பதற்கும், எலும்புகளினின்று இறைச்சியைச் சுரண்டி எடுப்பதற்கும், மண்ணிலிருந்து வேர்களைக் கிண்டி எடுப்பதற்கும், இன்னும் இவை போன்ற பற்பல போஷணார்த்தமான காரியங்களுக்கும் கற்கள் மிகவும் பயன்படுமென்பதை மிகமிகப் பழமையான காலத்திலேயே அறிந்திருக்கவேண்டும்.

மனிதனுடைய மூளை வளர வளர, அதன் திறமை மிக மிக, நேராக நிமிர்ந்த நடையை மனிதன் மேன்மேலும் பெறப் பெற, (படம், 2) அவனது கைகள் பற்றும் உறுப்பாக நாளடைவில் மாறி அமைய அமைய, பண்டைக்கால மனிதன் கேவலம் இயற்கையில் காணப்படும் கற்களை மட்டிலும் கருவிகளாக உபயோகிப்பதை விட்டுவிட்டு, குறிப்பிட்ட வடிவம் கொண்ட கருவிகளையும் ஆயுதங்களையும் எண்ணி, நினைவில் வைத்துச் செய்யத் தொடங்கி, கருவி இயற்றும் பிராணியாக ஆகிவிட்டான்.

விருத்தசிலாயுகமெனப்படும் பாலியோலிதிக் யுகத்தின் ஆரம்ப காலத்தில் வாழ்ந்து வந்த மனிதன் செய்த கருவிகளெல்லாம் தடித்த ஆப்பு வடிவமான நுனியை உடையனவாயும், கையில் பிடித்துக் கொள்ளுவதற்கு ஏற்றனவாகக் கனத்து உருண்ட பிடியை உடையனவாயும் இருந்தன. இவ்வகை ஆயுதமானது வெட்டுவதற்குத் தான் முக்கியமாக உபயோகிக்கப்பட்டிருக்கவேண்டும். பாலியோலிதிக் யுகத்தைச் சார்ந்த கருவிகளிலெல்லாம் மிகவும் பிரசித்தமானது (கூத ப்வாங் எனப்படும்) கைக்கோடரிதான். இது தட்டையான பேரிக்காய் வடிவம் உடையது. பிரான்ஸ் தேசத்திலே மார்ன் நதிக்கரையிலே உள்ள செல்லிஸ் என்பதிலிருந்து, இந்த வடிவத்துக்குச் சேல்லியன் வடிவமென்று பெயரிட்டிருக்கிறார்கள்.

இந்தக் கருவியின் பிடிப்புறமானது கனத்ததாயும் சௌகரியமாய்ப் பிடித்துக் கொள்ளுவதற்கு ஏற்றதாயும் இருக்கிறது. இதன் பிடிப்புறத்தில் கல்லின் பொருக்குக்கள் அப்படியே கரடு முரடாகக் காணப்படுகின்றன. கனத்த பிடிப்புறத்தினின்று குத்தும் அல்லது வெட்டும் முனைவரையில் கல்லானது ஒரே வாட்டமாயிருக்

கிறது. அக்காலத்தவர் அந்த ஆயுதத்தைக் கையில்தான் பிடித்துக் கொண்டு உபயோகித்து வந்தனர். தற்காலத்திலே சிற்சில நாகரிக மற்ற சாதியினர் உபயோகிக்கும் கல் ஆயுதங்களைப்போல அதற்குத் தனியான மரப்பிடி ஒன்றும் போடப்படவில்லை. காலத்தால், இதற்கு அடுத்தபடியான கருவிக்கு அசேலீயன் என்ற பெயர் இடப்பட்டிருக்கிறது. ஆமியன்ஸ் நகருக்குப் புறத்தேயுள்ள ஸென்ட் அசெல் என்னும் ஊரைக்கொண்டு இப்பெயர் இடப்பட்டது. இந்தக் காலத்திலே, காணப்படும் ஆயுதங்களின் வடிவமானது சற்று அகன்ற கோழி முட்டையின் வடிவம். இக்காலத்திலே உள்ள ஆயுதங்கள் யாவற்றிலும் இத்தகைய வடிவமுள்ள ஆயுதந்தான் மிகுந்து காணப்படுகிறது. இக் கருவியின் ஓரமெல்லாம் கூர்மையாக்கப்பட்டு வெட்டு முனையை உடையதாயிருக்கிறது. கருவியும் சற்று மெல்லியதாயும் இருபுறமும் ஒன்றுபோல் இணையாகச் செய்யப்பட்டும் இருக்கிறது. இது பற்பல காரியங்களுக்கு உபயோகிக்கப்பட்டிருக்க வேண்டும். அப்பொழுது இந்த ஆயுதத்துக்குக் கைப்பிடி போட்டும் கைப்பிடி போடாமலும் உபயோகித்து வந்தார்களென்று தெரிய வருகிறது (படம். 3, 4.)

விருத்தசிலாயுக நாகரிகத்தின் முற்பிரிவுகளையெல்லாம் ஒருங்கு சேர்த்து, நதிப்பிரவாஹகாலம் என்னும் மொழியால் சிற்சில அறிவாளர்கள் குறிப்பிடுகிறார்கள். அக்காலத்திலே மிகவும் அதிகமாக வழங்கிவந்தது கைக்கோடரி என்னும் கருவியே. நதிப்பிரவாஹ காலத்து மனிதன் அக்காலத்திலுள்ள பெரிய நதிக்கரையோரங்களில் வாழ்ந்துவந்திருக்கலாம். சரல்கற்களிலும், நதி வண்டல்கள் படிந்துள்ள இடங்களிலும் இத்தகைய கருவிகள் காணப்படுகின்றன. ஹைடெல்பர்க் நகரத்திலே கண்டெடுக்கப்பட்ட தாடையானது இத்தகைய நதிப்பிரவாஹகால மனிதனுடையது தான். ஐரோப்பா சம்பந்தப்பட்ட மட்டிலே இதுதான் அக்காலத்து மனிதன் விட்டிருக்கும் அறிகுறி. அவனது தேக அமைப்பை ஆராயுங்கால் நியான்டெர்த்தால் மனிதனைவிட அவன் சற்று அதிகமான அளவில் குரங்கை ஒத்தவனா யிருந்திருக்கவேண்டும் என்றே தோன்றுகிறது. இத்தகைய மனிதர்கள் அநேகமாகக் குடும்பம் குடும்பமாகவோ அல்லது கூட்டம் கூட்டமாகவோ வாழ்பவர்கள் ; இடம் இடமாய் அலையும் சுபாவம் உடையவர்கள் ; திறந்த வெளிகளையும் நதிப்புறங்களையும் நாடுபவர்கள் ; சிற்சில வேளைகளில் மட்டும் தற்கால வசதிக்காகப் பெரும்பிலங்களையும் கற்குகைகளையும் தேடி இருப்பிடமாகக் கொள்ளுபவர்கள். தாங்கள் வாழ்வதற்கென்று ஏதாவது ஒரு வகையான குடிசையை அவர்கள் கட்டிக்கொண்டார்களா, அல்லவா என்பதை இன்னும் நாம் அறியோம். தம் உணவுக்கென்று அவர்கள்

செடி கொடிகளைப் பயிரிட்டுக் கொண்டார்களென்பதற்கும் யாதொரு வகையான அத்தாட்சியும் இல்லை.

செல்லியன், அசெலீயன் மாதிரியுள்ள கருவிகள் இவ்வுலகத்திலே அநேகம் இடங்களில் கண்டெடுக்கப்பட்டிருக்கின்றன. நமது தென் இந்தியாவிலே பல இடங்களிலே கல்லினால் செய்த கருவிகள் அநேகம் அகப்படுகின்றன. அவை பெரும்பாலும் கரடுமுரடாகவே இருக்கின்றன; அநேகமாய் அசெலீயன் தினுசையே மிகவும் ஒத்துக் காணப்படுகின்றன. பெரும்பாலும் கூம்பிய வடிவமுள்ளவைகளாயிருக்கின்றன. ஆதலால், அவை அசெலீயன் நாகரிகத்தையே நமக்கு நினைப்பூட்டுகின்றன. மேற்கு ஐரோப்பாவிலே விருத்தசிலா யுகத்திலே ஏற்பட்டிருந்த நாகரிக காலத்துக்கு ஒப்பிடக்கூடிய ஒரு நாகரிக காலத்தைச் சேர்ந்தவையாகத்தான் இவை இருக்கவேண்டும்.

சரித்திர காலத்துக்கு முற்பட்ட கால ஆராய்ச்சிகள் இந்தியாவிலே நடத்தப்பட்டுவருகின்றன. அவற்றை யொட்டிய முக்கியமான விஷயம் ஒன்றைப்பற்றி இங்கே குறிப்பிடவேண்டி யிருக்கிறது. ஐரோப்பாவிலே அகப்பட்ட மானுட எலும்புகள் அம் மானுடர் இருந்துவந்த காலத்தை நிர்ணயிப்பதற்குரியபடி மிருகவகைகளின் எலும்புகளோடு கலந்து காணப்படுகின்றன. அவற்றைக்கொண்டு அங்கே சரித்திரத்துக்கு முற்பட்ட மிகப் பழைய காலத்தைப் பற்றிய விஷயங்களை ஒருவாறு திருப்தியாக அமைத்துக்கொள்ள முடிந்துவிட்டது. அதுபோல இந்தியாவிலே பண்டைக்காலத்தில் வாழ்ந்துவந்த மிருகங்களின் எலும்புகளோடு கலந்து மனித எலும்புகள் அகப்படவில்லை. ஆயினும் நமது நாட்டிலே அநேக இடங்களில் மனித சேஷங்கள்தாம் என்று உறுதியாகக் கூறத்தக்க பற்பல சின்னங்கள் தனியாக அகப்பட்டுவருகின்றன. இவற்றைக் கொண்டு இந்தியாவிலே புராதன மனிதன் வாழ்ந்து வந்த வாழ்க்கையின் நாகரிக நிலைமையையும் அமைப்பையும் பெம்பாலும் நிருமித்துக் கொள்ளக்கூடும். இந் நிர்மாணத்தின் ஒவ்வொரு படியிலும், ஐரோப்பாவின் நாகரிகத்தைப்பற்றிச் செய்து வந்திருக்கிற ஆராய்ச்சிகளும், ஆராய்ச்சி முறைகளும் மிகவும் பயன் உள்ளனவாயிருக்கின்றன. நாம் பின்பற்ற வேண்டிய நேரான வழிகள் இன்ன என்று அவை நமக்கு எடுத்துக் காட்டுகின்றன. அநேக சந்தர்ப்பங்களில் அவற்றைத் தவிர வேறு ஆதாரம் ஒன்றும் நமக்குக் கிடையாமல் இருக்கிறது. அநாதிகாலந்தொட்டு ஐரோப்பாவும் ஆசியாவும் ஒரே தொடர்பான நிலப்பகுதியைச் சார்ந்தவையாக இருந்து வந்திருக்கின்றன. இரு கண்டங்களுக்கும் நாகரிகத் தொடர்பு இருந்ததும், அந்நாகரிகங்கள் தம்முள் ஒன்றையொன்று பாதித்து வந்ததும்,

இவ்விரு கண்டங்களிலுமுள்ள ஜனங்கள் பண்டைக்காலத்திலே இடம்மாறிச் சஞ்சாரம் செய்துவந்ததும் நாம் யாவரும் அறிந்தனவே. ஆயினும் அவை நிகழ்ந்து வந்த அளவு நாம் சாதாரணமாய் எண்ணுவதைவிட மிகவும் அதிகமாயுள்ளது. ஆகவே ஆசிய நாகரிக ஆராய்ச்சிகளைச் செய்யும்போது ஐரோப்பிய நாகரிக ஆராய்ச்சிகளை அளவு கருவியாகக் கொள்ளுவது உசிதமே என்பது தெளிவாகும். ஐரோப்பா ஆசியாவென்னும் இரு கண்டங்களாலாகிய பெரிய நிலப் பகுதியிலே மானுடரின் வாசஸ்தான விஷயமாய் ஆராய்ச்சி செய்யும் போதெல்லாம் இந்தியாவென்னும் தீபகற்பமுள்ள யூரேசியாக் கண்டத்திலே நிகழ்ந்துள்ள நாகரிகக் கிளர்ச்சி ஒவ்வொன்றிலும் ஐரோப்பாவும் சம்பந்தப்பட்டுத்தான் வந்திருக்கிறதென்பது நன்கு தெரிய வரும். துருக்கிஸ்தானத்திலே பம்பேலியன் ஆராச்சியாளர் 1905-ம் வருஷத்திலே பூமியைத் தோண்டிப் பல விஷயங்களைக் கண்டு பிடித்தனர். மத்திய ஆசியாவினின்று ஒரு நாகரிக வெள்ளமானது கிளம்பி, ஒருபுறம் தென்மேற்கு ஐரோப்பாவிலும், மற்றொருபுறம் மத்தியதரைக் கடலின் கீழ்க்கரை யோரங்களிலும் இந்தியாவிலும் ஓடிப் பரவிற்று என்பதைக் காட்டக்கூடிய அத்தாட்சிகள் பல அவ் வாராய்ச்சியால் நமக்குக் கிடைத்திருக்கின்றன. அவ்வெள்ளத்தின் சிற்றோடைகளிற் சிற்சில பசிபிக் மகா சமுத்திரக் கரையைக்கூட எட்டினவென்றும் தெரியவருகிறது. ஆசியாவையும் ஐரோப்பா வையும் பிணைக்கும் சங்கிலி வளையங்கள் என்று இவற்றைக் கூறலாம். 'பழைய லோகத்திலே' நடந்தேறிய நாகரிக வளர்ச்சி யிலே இந்தியாவானது எவ்வாறு சம்பந்தப்பட்டிருந்தது, அது எவ் வளவு நாகரிகமுற்றிருந்தது என்பவற்றைத் தெரிந்து கொள்ளுவதற் குப் பிற நாடுகள் காலாந்தரத்தில் எவ்வாறு வளர்ந்து வந்திருக்கின் றன என்பதைப்பற்றி ஆராய்வதும் அவசியமாக இருக்கிறது. பண் டைக் காலத்திலே நாகரிக வளர்ச்சி பெற்றிருந்த பிரதேசங்களின் இரு கோடிகளுக்கும் நடுப்புறமாக இருப்பதால், அவை இரண்டனும் நாகரிக சம்பந்தமுடையதாயும் அவை இரண்டையும் ஒன்றோ டொன்று பிணைக்கும் மத்தியாயும் உள்ள நமது இந்திய நாடானது அவ்விரண்டு நாகரிகங்களையும் நாம் சிறிதளது அறிந்துகொள்ளும் விஷயத்தில் உதவி செய்கிறது.

இம் முறையாகப் பார்த்தால்தான், தென் இந்தியாவிலே காணக்கிடக்கின்ற சின்னங்களை அவைகளுக்கு உரிய இடத்தில் நாம் வைத்துப் பார்க்க முடியும். தென் இந்தியாவிலே அநேக இடங்களில் காணப்படும் க்வார்ட்ஸ் கல்லாலாகிய கருவிகளை அசே லீயன் தினுசைச் சேர்ந்தவை என்றுதான் கூறவேண்டும். ஆகவே, நாம் மேலே சொல்லியபடி, மேற்கு ஐரோப்பாவிலே விருத்தசிலா

யுகத்திலே ஏற்பட்டிருந்த நாகரிக காலத்தை ஒட்டியனவாகவே அவை காணப்படுகின்றன.

விருத்தசிலா யுகத்திலே, இந்தியாவின் வடபாகத்தைக் காட்டிலும் தென் பாகத்திலேதான் பண்டைக்கால மனிதன் அதிகமாகக் கூட்டம் கூடி நெருங்கி வசித்து வந்தான் என்பதை நிச்சயமாய்க் கூறுவதற்குப் போதிய ஆதாரங்கள் இருக்கின்றன. தெற்கே போகப் போக, அங்கங்கே அகப்படும் விருத்தசிலாயுகக் கற்கள் மிகவும் செம்மையானவையாய்க் காணப்படுகின்றன. விருத்தசிலாயுக நாகரிகச் சின்னங்கள் பலவற்றைத் தென்னிந்தியாவிலே பல விடங்களிலிருந்து புரூஸ் புட் என்பார் கண்டெடுத்திருக்கிறார். தற்காலத்திலே கடப்பை, கர்நூல், நெல்லூர், செங்கல்பட்டு என்று வழங்கும் ஜில்லாக்களிலேதான் மிகப் பழைய காலத்திலே இத்தகைய நாகரிகம் செழித்தும் ஜனங்கள் ஏராளமாகக் கூடி வசித்தும் வாழ்ந்ததாகத் தெரிகிறது. ஐரோப்பாவைப் போலவே, இங்கும் புராதன மனிதன் பெரிய நதிப்பிரதேசங்களையேதான் தன் வாழ்க்கைக்கு உரிய இடங்களாகக் கருதி வந்தான். ஆதலால் தென்னிந்தியாவிலே பெரிய நதிகள் ஓடும் ஜில்லாக்களிலேதான் விருத்தசிலாயுக மனிதனுடைய சின்னங்களும், அவனது நாகரிக வளர்ச்சியைக் காட்டும் அறிகுறிகளும் அகப்படுகின்றன. குவார்ட்ஸ் கல்லின் விளைநிலமாகிய கடப்பை ஜில்லாவிலேதான் முதன் முதலிலே விருத்தசிலாயுக மனிதன் தங்கியிருந்திருக்க வேண்டும். ஆயினும், சென்னையைச் சூழ்ந்துள்ள பிரதேசத்திலேதான் பண்டைக்காலச் சின்னங்கள் மிகவும் அதிகமாக அகப்பட்டிருக்கின்றன. விருத்தசிலாயுக நாகரிகமானது இப்போது அச்சிறுபாக்கம் என்று சொல்லப்படும் பிரதேசத்திலேதான் செழித்துத் தலைசிறந்து விளங்கினதாகத் தெரிகிறது. இப் பிரதேசத்திலிருந்து செம்மையான வடிவமுடைய 230 சின்னங்கள் வரை அகப்பட்டிருக்கின்றன. இவற்றுள் காணப்படும் ஒரு வடிவத்துக்குச் சென்னை தினுசு என்று பெயர். இது சதுர வடிவமான ஓரங்களையுடையது. இவ்விடத்தைத் தவிரச் சரித்திரகாலத்துக்கு முற்பட்ட பிரதேசங்கள் என்று சொல்லத் தகுந்தவை கோதாவரி கிருஷ்ணா நதிப் பிரதேசங்களே. அங்கே புரூஸ் புட் என்பவர் விருத்தசிலா நாகரிகத்தைச் சார்ந்தவை என்று நிச்சயமாய்ச் சொல்லக்கூடிய கருவிகள் பலவற்றைக் கண்டெடுத்திருக்கிறார். கிருஷ்ணா நதியின் பிற்பகுதியின் கரையோரங்களிலிருந்து அழகான அசெலியன் கைக் கோடரிகள் அநேகம் கண்டெடுக்கப்பட்டிருக்கின்றன.

நமது தேசத்திலே விருத்தசிலாயுகப் பிரதேசங்களை விளக்கிக் காட்டும் படத்தைப் பார்த்தால் (படம், 5), அக்காலத்திலே ஜனங்கள்

படம், 5.

விருத்தசிலாயுக காலத்து இந்தியா.

நாடெங்கும் பரவியிருந்தனர் என்பதும், மேற்குச் சமுத்திரக் கரையோரத்திலே உள்ள மலைகளிலும் காட்டுப் பிரதேசங்களிலும் அவ்வாறு அவர்கள் அதிகமாகப் பரவவில்லை என்பதும் தெரியவரும். கடைசியாகக் கூறிய இப் பிரதேசங்களிலே விருத்தசிலாயுத ஜாதியார் வாழ்ந்ததாகக் காட்டக்கூடிய சின்னங்கள் ஒன்றும் அகப்படவில்லை. பண்டைக்காலத்திலே மனிதர் அங்கங்கே தங்கி வாழ்ந்ததற்கு முக்கிய காரணம் ஒன்றுண்டு. அவர்கள் உபயோகத்துக்கு வேண்டிய இன்றியமையாத கருவிகளை இயற்றுவதற்குத் தக்கவையான கற்பாறைகள் எங்கெங்குக் காணப்பட்டனவோ அங்கங்கெல்லாந்தான் அவர்கள் தங்கி வந்திருக்கின்றனர். ஆதலால்தான் குவார்ட்ஸ் கல் மலைகளையுடைய கடப்பை, செங்கற்பட்டு, வட ஆற்காடு, நெல்லூர் ஜில்லாக்களிலெல்லாம், மற்றெல்லா இடங்களைக் காட்டிலும் அதிகமான அளவிலே, பாலியோலிதிக் வகையாரைச் சேர்ந்த சின்னங்கள் அதிகமாகக் காணப்படுகின்றன. கிருஷ்ணா நதி பாய்ந்தோடும் பள்ளத்தாக்குக்கு வடபுறமாயுள்ள பிரதேசத்தில், குவார்ட்ஸைட் மிகக் குறைந்து காணப்படுவதால், பாலியோலிதிக் மனிதச் சின்னங்களும் வடக்கே போகப் போகக் குறைந்துதான் காணப்படுகின்றன. அதே மாதிரியாகப் பாலாறு பாயும் பள்ளத்தாக்கும் இதற்குத் தென்புற எல்லையாக இருக்கிறது.

பாலியோலிதிக் என்று நிச்சயமாய்ச் சொல்லக்கூடிய கருவிகள் இரண்டு இடங்களிலே அக்காலத்து உயிர்ப்பிராணிகளின் சேஷங்களோடு கலந்து அகப்பட்டிருக்கின்றன. இந்திய நாட்டைப்பற்றிச் சரித்திரத்துக்கு முற்பட்ட கால ஆராய்ச்சியிலே இவற்றுக்கு மிகவும் உன்னத ஸ்தானம் கொடுத்திருக்கின்றனர். இவற்றுள் முதலாவதாக உள்ளது, நர்மதை நதிப் படுகையிலே கண்டெடுத்த செதுக்கிய சிக்கிமுக்கிக் கல். இது செயற்கைப் பொருள்தான் என்பதைப்பற்றி இதுவரை யாவரும் சந்தேகப்பட்டதில்லை.

இந்தியாவிலே பழைய நாகரிகச் சின்னந்தான் என்று சந்தேகமறக் கூறக்கூடிய புராதன சேஷம் ஒன்று 50 வருஷங்களுக்கு முன்பே, கோதாவரியின் முற்பகுதியிலே, அதன் கரையிலே, அறுதியாய் அற்றுப்போன சிற்சில பண்டைப் பிராணிகளின் சேஷங்களோடு தோண்டி எடுக்கப்பட்டது. இவ்விரண்டையும் ஆதாரங்களாகக் கொண்டு, வெகு காலத்துக்கு முன்பு கோதாவரி நர்மதைக் கரைகளிலே ஒருவகைப் புராதன மனிதன் சிற்சில மிருகங்களினிடையில் அவற்றோடு பழகி வாழ்ந்து வந்தான் என்னும் முடிவைக் கொண்டிருக்கின்றனர்.

அசெலீயன் நாகரிகத்துக்குப் பின் தோன்றிய நாகரிகத்துக்கு மூஸ்டீரியன் நாகரிகம் என்று பெயர். இந்தப் பெயர் பிரான்ஸ் தேசத்திலே உள்ள லெமூஸ்டியர் என்னும் குகையைக் கொண்டு அதற்கு இடப்பட்டது. இந் நாகரிகமானது அக்காலத்தில் மிகவும் பரவியிருந்தது. அசெலீயன் நாகரிகத்தோடு பிணைப்புற்றிருந்தது. அதில் முதன்மையுற்றிருந்தவன் நியான்டெர்த்தால் மனிதனே. அவன் உள்ளி ஆயுதங்களை இயற்றுவதை விட்டு விட்டுப் பெரிய கற்களிலிருந்து தகடாகப் பெயர்க்கப்பட்ட கற்களைக் கொண்டு கருவிகளைச் செய்யத் தொடங்கினான். இது நிகழ்ந்தது 50,000 வருஷங்களுக்கு முன்பாவது இருக்க வேண்டும். இக்காலத்தில் செய்யப்பட்டு வந்த கருவிகள் எல்லாம் சில விசேஷ குணங்கள் பொருந்தியவையாயும் அவற்றுக்கு முன்பிருந்த கருவிகளினின்றும் பின் தோன்றிய கருவிகளினின்றும் மிகவும் மாறுபட்டவையாயும் காணப்படுகின்றன.

ஐரோப்பாவிலே அசெலீயன் மனிதனை மூஸ்டீரியன் அல்லது நியான்டெர்த்தால் மனித வெள்ளமானது அடித்துக்கொண்டு போய் விட்டது என்று தோன்றுகிறது. அக்காலத்திலே உள்ள கருவிகள் அக்காலத்து மனிதர் வாழ்ந்து வந்துள்ள குகைகளிலும் பிலங்களிலும் பெரும்பாலும் கிடந்து வந்திருப்பதால் அதிகச் சிதைவு படாமல் இன்றளவும் நன்றாகப் பாதுகாக்கப்பட்டவையாய்க் காணப்படுகின்றன. கிலேசியல் யுகம் என்னும் பனியாற்றுக்காலத்திலே உள்ள சகிக்கொணுக் குளிர்தான் அக்காலத்து மனிதர்கள் குகைகளுள் தங்கி வாழ்வதற்குக் காரணமாயிருக்கலாம். தோன்றிய விரைவைப் போன்றதே அவர் மறைந்த விரைவும். திடீரென்று மூஸ்டீரியன் மனிதர் ஐரோப்பாக் கண்டத்தை விட்டு மறைந்துவிட்டனர். மூஸ்டீரியன் கால இறுதியிலே வேறு சில புதிய வகையினர் படையெடுத்து வந்ததை அக்காலத்தில் புதிதாய்த் தோன்றிய ஒரு நாகரிகத்தின் சின்னங்கள் நமக்கு எடுத்துக் காட்டுகின்றன. இம் மனித ஜாதிதான் ஹோமோ ஸேபியன்ஸ் என்று சொல்லப்படும் தற்கால மனித வர்க்கம். க்ரோ மானியன் மனிதன் இவரது வரவை நமக்கு முன்பாகவே அறிவுறுத்துகிறான். நாகரிகப் போக்கின் இயல்பானது மாறுபடுகின்றது. பிலங்களிலும் கற்குகைகளிலும் வாழ்வதுதான் இக்காலத்திலே பெரும்பாலார் விரும்பிப் புரியும் வாழ்க்கை.

பாலியோலிதிக் நாகரிகத்திலே மேற்பகுதியைச் சேர்ந்த காலங்களுக்கு முறையே ஆரினேஷியன், ஸொப்யூட்ரியன், மாட்லெனியன்

பிரிவுகள் என்னும் பெயர்கள் இடப்பட்டிருக்கின்றன. இக்காலங்களை ஒட்டிய சேஷங்கள் அதிகமாகக் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. இக் காலங்களை எல்லாம் மொத்தமாகச் சேர்த்துக் குகா யுகம் அல்லது பனிமான் (ரெய்ன்டீயர்) யுகம் என்று கூறுவதுண்டு.

குகாயுகத்தின் தொடக்கத்திலேயே மனித வருக்கமானது அதுவரை உபயோகித்துவந்த கல்லினலாகிய கைக் கோடரிகளைச் சிறுகச் சிறுக உபயோகித்து வரத் தொடங்கியது. முன்னொரு காலத்தில் சாதாரணமாக உபயோகப்படுத்தி வந்ததுபோல் மீண்டும் தகடுபட்ட கற்களையே மேன்மேலும் உபயோகிக்கத் தொடங்கிற்று. இத் தகட்டுக் கற்களைக்கொண்டு பலவகையான கருவிகளை இயற்றியது. அவற்றோடுகூடக் குகைகளிலே எலும்பினலும் பனிமான் கொம்பினலும் செய்யப்பட்ட நகை வகைகள் பலவும், ஈட்டி முனைகள், வேல் நுனிகள், காதுள்ள ஊசிகள் போன்ற கருவிகளும் காணப்படுகின்றன.

குகாயுகத்தின் இறுதிக்காலவாக்கில் சித்திரக்கலையும் சிறப்படைந்து எங்கும் பரவி இருந்ததாகத் தெரிகிறது. மிருகங்களின் வடிவங்கள் வியக்கத்தக்கனவாகவும் அழகழகாயும் அநேக இடங்களிலே வரையப்பட்டிருக்கின்றன. இவ்வாறு தோன்றிய கலைப்பயிற்சிக்கு ஒன்றோடொன்று முரண்படுகின்ற இருவகையான காரணங்கள் சொல்லப்படுகின்றன. அழகுக் கலையிலுள்ள பிறநோக்கமொன்றுமில்லாப் பற்றுத்தான் இத்தகைய சித்திரங்களை வரையத் தூண்டியதென்கிறார் ஒரு சாரார். அக்காலத்துச் சித்திரப்பயிற்சியானது பிறநோக்கம் அற்றதல்லவே யல்ல. அது குறிப்பிட்ட ஒரு பயன் கருதிய நோக்கத்துடனேயே கையாளப்பட்டது. அக்காலத்திலே இவ்வாறு மிருகங்களைச் சித்திரித்து வரைந்தால் அம் மிருகங்களை வேட்டையாடி வெற்றி கொண்டு உணவாக்கும் திறமை சித்திரம் வரைந்தோனுக்குக் கிட்டும் என்ற கொள்கை எங்கும் பரவியிருந்தது. அந்த நம்பிக்கையைக் கைக்கொண்டார் தம் நம்பிக்கையின் பலத்தாலேயே தாம் கைக்கொண்ட காரியங்களை இயற்றி வந்தார். இது ஒரு வகை மாந்திரிகம். இதுதான் சித்திரம் எழுதியவர்களின் நோக்கமே தவிர வேறல்ல என்பர் மற்றொரு சாரார். இவ்விரு அபிப்பிராய பேதங்களின் தாராதரங்களை நாம் இங்கே ஆராயாதுபோனலும், பொதுவாகக் கூறும்போது, சித்திரம் எழுதி நற்கலைப் பயிற்சி அடைய வேண்டும், அல்லது நற்கலைத் திறமையை வெளியிட வேண்டும் என்ற எண்ணத்தால் மட்டிலும் இச் சித்திரங்கள் வரையப்படவில்லை என்பதையும், அவைகளின் முக்கிய நோக்கமானது ஏதோ

ஒரு பயன் குறித்ததாகத்தான் இருக்கவேண்டும் என்பதையுந்தான் நாம் முடிவுகளாகச் சொல்லலாம். ஆயினும் சிற்சில சித்திரங்கள் ஓவியக் கலைப்பயிற்சி மிக்க சிலரால் அக் கலையின் பொருட்டே வரையப்பட்டிருக்கின்றன என்பதற்கும் ஐயமில்லை.

தென் இந்தியாவிலே பாலியோலிதிக் யுக மனிதர்கள் வாழ்ந்து வந்த வாழ்க்கையைப்பற்றி நமக்கு அதிகமாக ஒன்றும் தெரியாது. இங்கே பாலியோலிதிக் கருவிகள் அகப்படும் இடங்களிலே மனிதர் நெருப்பை உபயோகித்து வந்தார் என்பதற்கு யாதொரு அத்தாட்சியும் இதுவரை நமக்குக் கிடைக்கவில்லை. ஆனால் அவர்களுக்கு நெருப்பின் உபயோகம் தெரியாமலிருந்தது என்று நாம் ஊகிப்பதற்கு இடமுண்டு. அக்காலத்து மனிதர் வாழ்ந்து வந்த குடித்தனங்களின் அடையாளங்கள் இந்தியாவில் ஓரிடத்திலும் இதுகாறும் அகப்படவில்லை. மரித்தோரின் உடல்களை அவர் என்ன செய்தனர் என்பதைக் காட்டும் சின்னங்கள் ஒன்றும் இதுவரை அகப்படாததும் ஆச்சரியமே. பாலியோலிதிக் கால மனித மண்டையோடு ஒன்றுவது இந்தியாவில் கண்டெடுக்கப்பட்டதாகத் தெரியவில்லை. ஆதலால் அம்மனிதர் எத்தகையவர் என்பதைப்பற்றி நாம் மனக்கோட்டை கட்டுவதில் பயனில்லை. பாலியோலிதிக் கருவிகளோடு மண் பாண்டங்களாவது அவற்றின் சின்னங்களாவது கலந்து காணப்படவில்லை.

இது பாலியோலிதிக் யுக முடிவுவரை, அல்லது நியோலிதிக் யுகத் தொடக்கம்வரை, நம்மைக் கொண்டுவந்து விடுகிறது. தொன்மைக் கால ஆராய்ச்சியார் இவ்விரண்டுக்கும் இடையில் சந்தியா காலம் போன்ற மீஸோலிதிக் என்னும் காலமொன்று உள்ளதென்று ஒப்புக்கொள்ளுகிறார்கள்.

இக்காலத்திலே ஐரோப்பா ஆசியாக் கண்டங்கள் முழுவதிலும் சீதோஷ்ண நிலைமையானது மிகுந்த அளவில் மாறுபாடடைந்தது. இப்பொழுது சம சீதோஷ்ணம் என்று சொல்லத்தக்க ஒரு நிலைமை உண்டாகத் தொடங்கியது. இப்பொழுது நமது பூமியிலுள்ள நிலையை அது ஒத்திருந்தது.

சமீபகாலத்தில் செய்த ஆராய்ச்சிகளிலிருந்து இந்த யுகத்தில் நான்கு முக்கியப் பகுதிகளாவது இருந்திருக்கவேண்டும் என்பது வெளியாகிறது. இப்பொழுதுதான் முதன் முதலாவதாகக் கற்களைக் கருவிகளாக்கும் பொருட்டுத் தேய்த்துவந்தாரென்பதற்கு ஆதாரங்கள் கிடைக்கின்றன. இம் முறைதான் பிற்காலத்திலே தலை சிறந்து விளங்குவது. டார்டேனேசியன் என்று வழங்கப்படும் சின்னஞ்சிறு பிக்மி கற்களும் கற்கருவிகளும் இக்காலத்தையே சேர்ந்தனவாகக் கருதப்படுகின்றன. இவை உலகெங்கும் பரவியிருந்தன வென்பது

இப்பொழுது அறியப்பட்டிருக்கிறது. இந்தியாவில், விசேஷமாக விந்திய மலைப்பிரதேசத்திலும், இவை மிகுந்து காணப்படுகின்றன. இவற்றின் நீளம் சராசரி முக்கால் அங்குலந்தான் இருக்கும். இக் காலத்துள்ள நன்ருகத் தீர்ந்த கருவிகள் மிகவும் அழகாகச் செதுக் கப்பட்டிருக்கின்றன. எத்தனையோ பேர் எத்தனையோ விதமாய் நம்பத்தக்கபடியெல்லாம் கூறிவரினும் இத்தகைய சிறு கற்களின் உபயோகம் இன்னதுதான் என்பது இன்னும் அறியப்படாத இரக சியமாகவே இருந்துவருகிறது. பிக்மி கருவிகள் என்று சொல்லப் படும் கருவிகளுக்கு அவற்றின் சின்னஞ்சிறிய அளவைக் கொண்டு மட்டிலும் பெயரிடப்பட்டிருக்கிறதே ஒழிய, அவற்றுக்கும் பிக்மி ஜாதியார் என்று சொல்லப்படும் சித்திரக் குள்ள மனுஷ ஜாதியா ருக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை.

மீஸோலிதிக் கால இறுதியில் புதியதான ஒரு நாகரிக வெள் ளத்தால் ஏற்பட்ட பெரிய மாறுபாடு நமக்குப் புலனுகிறது. இது தான் நியோலிதிக் நாகரிகம். இதற்கு விசேஷமான அடையாளங் கள் அநேகம் இருக்கின்றன. சிக்கிமுக்கிக் கற்களையும் பிற கற்களை யும் தேய்த்து மெருகு இட்டுக்கொள்வது இக்காலத்தில்தான் முதன் முதலில் தொடங்கியது. ஏன் மெதுவாக இவ்வளவு காலத்திற்குப் பின் இவ்வழக்கம் தோன்றியது என்னும் விஷயமானது, இது நிச்சயமாக எப்போது தொடங்கிற்று என்பதைப் போல மறைந்து கிடக்கும் விஷயமாகவே இருக்கிறது. எலும்புக்கருவிகளைத் தேய்த்து வந்ததுபோல், சிக்கிமுக்கிக்கல் குவார்ட்ஸ் முதலிய கற்களாலாகிய கருவிகளையும் ஏன் விருத்தசிலாயுக மனிதர் தேய்த்துச் செப்பனிட்டு வைத்துக் கொள்ளவில்லை என்பதற்குத் தகுந்த விடையளிப்பது நம் மால் முடியாத காரியம். சரித்திரத்துக்கு முற்பட்ட காலங்களுள் ஒரு பகுதியை மற்றென்றினின்று தெளிவாகவும் உறுதியாக வும் பிரிப்பது சாத்தியமல்ல என்பதை நாம் ஞாபகத்தில் வைத் துக் கொள்ள வேண்டும். இந்தக் காலத்தில் உள்ள மெருகிட்ட நியோலிதிக் கற்கருவிகளுக்கு ஸேல்ட் என்று பெயர். இது உளி என்று பொருள்படும் ஒரு லத்தீன் மொழியிலிருந்து வந்ததென்று சொல்லுகிருர்கள். இதற்கும் வேல்ஸ் மாகாணத்திலுள்ள ஸெல்ட் (கெல்ட்) ஜாதியாருக்கும் யாதொரு சம்பந்தமும் கிடையாது.

தொழிலுக்கேற்றபடி இவற்றின் வடிவத்திலே அமைந்த வித்தி யாசமும் கவனிக்கத்தக்கது. பாலியோலிதிக் காலக் கருவியிலே குத்து முனை போன்ற பாகந்தான் கூர்மையாக்கப்பட்டிருக்கிறது ; அதன் அகன்ற பக்கம் பிடிப்புறம். ஸேல்டிலோ வென்ருல் அகன்ற பாகம் கூர்மையானதாய் வேலை செய்யும் பாகமாய்விடுகிறது ; குத்துமுனை

கனத்துக் கூரியதல்லாததாய் விடுகிறது. பக்கப்புற விளிம்புகள் வேலைக்கு உபயோகப்படுவதில்லை. கருவியும் நேர் முடக்காக உள்ள ஒரு மரப்பிடியை உடையதாகக் காணப்படுகிறது. தற்காலத்திலே நாம் கோடரியை உபயோகிப்பதுபோலவேதான் அந்த ஆயுதத்தை அக்காலத்து மனிதர் உபயோகித்து வந்திருக்கவேண்டும்.

நியோலிதிக் காலத்தைச் சேர்ந்த ஸெல்டின் வளர்ச்சி மாறு பாட்டில் மூன்று முக்கியமான வகைகள் அல்லது தினுசுகள் காணப் படுகின்றன. அதன் முதல் வகை மிகவும் பழமையானது ; டோல் மென் காலத்துக்கு முற்பட்டது. முனையாக முடியும் கைப்பிடியை யும் கோழிமுட்டை வடிவமான வெட்டுமுனையையும் அது உடை யது. இம்முனை சிற்சில கருவிகளுக்கு வாட்டமாயிருப்பதும் உண்டு. இரண்டாவது வகையில் இத்தினுசானது சிறிது சிறிதாக மாறிவந்தது ; கைப்பிடிப்புறம் வரவர மழுங்கிவருகிறது ; பிறகு அகலுகின்றது ; வெட்டு முனையின் வளைவும் வரவரக் குறைகிறது ; இதனால் வெட்டு விளிம்பின் பரப்பு மிகுகின்றது ; குறுக்கு வெட் டுத் தோற்றம் கோழிமுட்டை வடிவமாகின்றது. சிற்சில வேளைக ளில் இரு கோடிகளும் முனையாயிருக்கின்றன. பக்கங்களும் கூரிய னவாயிருக்கின்றன. மூன்றாவது வகையானது மெல்லிய பிடியை யுடைய ஸெல்ட். அதற்குக் கூராக்கப்பட்ட பிடியிருக்கிறது (இது இரண்டாவது வெட்டுமுனைபோலிருக்கிறது.) இதன் குறுக்கு வெட்டுத் தோற்றம் நீண்ட சதுக்கமானது (*oblong*). இதன் பக்கங்கள் மட்டமாய்த் தேய்க்கப்பட்டதால் இது இவ்வாறு தோன்றுகிறது. இதன் வெட்டுமுனை அதிகம் வளையாமல், சற்றேறக் குறைய நேராகவே இருக்கிறது.

இக்கருவிகள் இயற்றப்படும்போது செதுக்கப்படுவதுமுதல் மெருகிடப்படுவது வரையில் உள்ள நான்கு படிகளைக் கவனிப்பதும் நன்று. முதல் படியாகத் தோன்றுவது காடுமுரடாகச் செதுக்கப் பட்ட கருவி. இது அடைய வேண்டிய வடிவம் சுமாராக வரும் வரை இதை முதலில் சற்றுக் கரடுமுரடாகச் செதுக்குகின்றனர். இரண்டாவது இதைக் கொத்துகின்றனர் ; அதாவது கருவியைச் செதுக்கியதால் கருவியில் ஏற்பட்டுள்ள மேடுகளைக் கரைத்துக் கருவியிலுள்ள கல்லின் அளவைக் குறைக்கும் முயற்சியைச் செய் கின்றனர். இதற்குக் கூரிய முனையுள்ள ஓர் ஆயுதத்தை உபயோகிக் கிறார்கள். மூன்றாவது தேய்ப்பது ; அதிகமாக உள்ள சுரசுரப் பெல்லாம் போகும்வரை கருவியை நாற்புறமும் நன்றாகத் தேய்க் கின்றனர். கடைசியாக நன்றாகத் தேய்த்த கருவியை மெருகிட்டுப் பிடியும் போடுகிறார்கள்.

கருவிகளுக்கு உபயோகமாகிவந்த பொருளும் காலக்கிரமத்தில் மாறிவந்திருக்கிறது. இந்தியாவிலே உள்ள நியோலிதிக் கால மனிதர் தார்வார், கடப்பை, கர்நூல் முதலிய பிரதேசங்களிலுள்ள இறுகிய வன்மை பொருந்திய கருங்கற்களைத்தாம் உபயோகித்துவந்தனர். பாலியோலிதிக் ஜனங்கள் உபயோகித்துவந்த குவார்ட்ஸைட்டைக் காட்டிலும் இவை சிறந்தனவென்று அவர் கருதிவந்தனர். பாலியோலிதிக் காலத்து ஜனங்கள் அமைத்துக்கொண்ட கருவி வகைகளைக் காட்டிலும் நியோலிதிக் காலத்து ஜனங்கள் இயற்றிக்கொண்ட கருவிவகைகள் எண்ணில் அதிகம்.

நியோலிதிக் காலத்திலேதான் முதன் முதலில் மண் பாண்டங்கள் தோன்றத் தொடங்குகின்றன. ஆயினும், தென்னிந்தியாவிலே அப் பண்டைக்காலத்திலே மிகுதியான அளவிலே பானைகள் ஓரிடத்திலும் செய்யப்பட்டு வந்ததாகத் தெரியவில்லை. அம்மாதிரியான இடங்கள் ஏதாவது தென்படுமாயின் குயவன் சக்கரம் எப்பொழுது முதன்முதலில் கையாளப்பட்டது என்பதைப்பற்றிய விஷயங்கள் ஏதாவது நமக்குத் தெரியவரலாம். நமக்கு அகப்படும் பானையோடுகளை ஆராய்வதால் அவற்றுள் எவை முன், எவை பின் என்பதும், அவற்றை வனைய எவ்வகைக் கருவிகள் உபயோகமாகி வந்தன என்பதும் தெரியவரலாம். இவற்றுள் சாதாரணப் பானைகளையும் சித்திர வேலை செய்த பானைகளையும் நாம் பார்க்கிறோம். அப்பானைகளில் காணப்படும் சித்திர வேலையை அவற்றின்மீது அச்சைக்கொண்டு அழுத்தியாவது அல்லது கூரிய முனையினால் வரைந்தாவதுதான் செய்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. சாதாரணமாக அவைகளில் மனித உருவம் காணப்படுவதில்லை. அது அருகித்தான் காணப்படும். குவியல்களிலே ப்ரீக்ஸ் கண்டெடுத்த நியோலிதிக் காலத்தைச் சேர்ந்த பானைகளிலே மனித உருவங்களும் மிருகங்களின் உருவங்களும் நிறைந்து காணப்படுகின்றன. பொதுவாகக் கூறின், நியோலிதிக் பானைகள் பளபளப்பற்றவையாயும், மங்கல் நிறமுடையவையாயும், சுரசுரப்பாயும் இருக்கின்றன என்று சொல்லவேண்டும். அயக்காலத்திலே (இரும்புக்காலம்) காணப்படும் பானைகள் இவற்றைக் காட்டிலும் பளபளப்பாயும் பிரகாசமான நிறங்களை உடையவையாயும் காணப்படுகின்றன. மனிதர்கள் பிற்காலங்களிலே கலக்காத நிலைமையில் தென்னிந்தியாவில் நியோலிதிக்காலக் கருவிகளும் நியோலிதிக்காலப் பானைகளும் ஒரே இடத்தில் சேர்ந்து இதுவரை அகப்பட்டதில்லை. ஆகையால் இப்பாண்டங்களைப்பற்றி இவை நிச்சயமாக நியோலிதிக் காலத்தவைகள்தாம் என்று உறுதியாகக் கூறுவதற்கில்லை. இந்தியாவிலே புராதன சிலாயுகத்திலே வாழ்ந்து வந்த மனிதர் கிருஷ்ணா நதிக்கும் பாலாற்றுக்கும் இடையே

உள்ள பிரதேசத்தையே நன்னாடு என்று கருதி அங்கேயே வாழ்ந்து வந்தனர். பிற்காலங்களில் தோன்றிய நவநாகரிக மனிதர்கள் அப் பிரதேசத்துக்கு வடபுறமாக உள்ள நாடுகளிலே பரவத் தொடங்கினர். சேலம், மதுரை, பெல்லாரி ஜில்லாக்களிலே நியோலிதிக்காலக் கற்கருவிகள் அதிகமாக அகப்படுகின்றன. பாலியோலிதிக் நாகரிகத்தின் முதற் பகுதியிலும் இடைப் பகுதியிலும் தோன்றிய நாகரிகத்துக்குக் கடப்பை எப்படி நடுப்பட்டதாக இருந்ததோ, அது போலவே இந்த ஜில்லாக்களும் நியோலிதிக் நாகரிகத்துக்கு நடுநிலைகளாக விளங்கின. 1872-ம் வருஷத்திலே வட பெல்லாரியிலும் கப்கல்லுவிலும் நியோலிதிக்காலச் சேஷங்களை ப்ரேஸர் என்பவர் கண்டெடுத்தார். எங்கும் பரவியிருந்த, மெருகிட்ட கற்கருவிகளையுடைய ஒரு நாகரிகமானது இங்கு இருப்பது அவற்றினின்று தெரியவந்தது. பற்பல வகையான நியோலிதிக்கால ஆயுதங்களும் கருவிகளும் இங்கே அதிகமாக அகப்பட்டன. கப்கல்லு மலையின் வடகிழக்குச் சரிவானது முன் காலத்திலே நியோலிதிக்காலக் கருவிகளை இயற்றும் தொழிற்சாலையாய் இருந்திருக்க வேண்டும். அக்காலத்திலே, மெருகிட்ட கற்கருவிகளை இயற்றும் தொழிலானது வெகு மும்முரமாய் இங்கே நடந்திருக்கவேண்டும். இந்தப் பிராந்தியத்திலே அதன் அருகிலே சரித்திர காலத்துக்கு முற்பட்டவைகள் எனக் கருதக் கூடிய 77 இடங்கள் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. இவ்விடங்களிலே சிறந்த பெரிய நாகரிகமானது செழித்து வளர்ந்து பரவி வந்ததென்பதற்கு ஐயமில்லை. இப்பொழுது பெல்லாரி ஜில்லா என்று சொல்லப்படுகிற பிரதேசத்திலும், முற்காலத்திலே குகைகளிலும் காடுகளிலும் வசித்துவந்த காட்டில்வாழ் மனிதர் (காடவர்) சிலர் வசித்துவந்தார் என்பதற்கும், அவர்கள் நாகரிகமுள்ளவராய் ஒழுங்காக அமைத்துக்கொள்ளப்பட்ட நியமங்களை உடையவராய் இருந்தார் என்பதற்கும் போதுமான சாக்ஷியங்கள் இருக்கின்றன.

வட இந்தியாவிலே, தக்காணத்துக்கு அடுத்துள்ள பிரதேசங்களிலே நியோலிதிக் நாகரிகமுள்ள ஜனங்களின் குடியிருப்புக்கள் மிகுந்து காணப்படுகின்றன. ஒரு புறம் மத்திய மாகாணத்திலும், ஐக்கிய மாகாணத்திலும், வங்காளத்திலும், அஸ்ஸாமிலும், மற்றொரு புறம் ஸிந்து நதிப் பள்ளத்தாக்கிலும், நியோலிதிக் காலத்து ஸெல்ட்களும் உளிகளும் நிறைய அகப்படுகின்றன. பாலியோலிதிக் கால நாகரிகமானது இந்தியாவில் தெற்கிலும் கிழக்கிலும் மெதுவாக நியோலிதிக்கால நாகரிகமாக மாறி, அங்கிருந்து நமது நாட்டிலே பிற இடங்களுக்குப் பரவியதை நாம் அறிகிறோம்.

(தொடரும்)

# பாஹியன் யாத்திரை வரலாறு

ஜி. தாத்தாச்சாரி

(1053-ம் பக்கத்தொடர்ச்சி)

இவ்விடத்துக்குத் தெற்கே இருநூறு யோசனை தூரத்தில் தக்ஷிணம் என்ற தேசம் இருக்கிறது. பூர்வ புத்தரான காச்யபரின் ஸங்காராமம் ஒன்று இங்கேயுள்ளது. அது சரியான அளவுள்ள ஒரு பெரிய மலைச்சரிவில் குடையப்பட்டிருக்கின்றது. இந்தக் கட்டிடத்துக்கு ஐந்து நிலை மாடிகள் உள்ளன. எல்லாவற்றுக்கும் கீழேயுள்ள நிலையானது ஒரு யானையின் உருவமாகச் செதுக்கப்பட்டிருக்கிறது. அதில் ஐந்நூறு அறைகள் உள்ளன. இரண்டாவது நிலை ஒரு சிங்கத்தின் உருவினதாக நானூறு அறைகள் உடையது. மூன்றாவது ஒரு குதிரையின் வடிவினதாய் முந்நூறு அறைகளை யுடையது. நான்காவது நிலை இருநூறு அறைகளை யுடையதாய் ஒரு காளை மாட்டின் உருவமாக அமைந்துள்ளது. ஐந்தாவது நிலை ஒரு புறாவின் வடிவத்தோடு நூறு அறைகளைப் பெற்றுள்ளது. இவை எல்லாவற்றுக்கும் உச்சியில் ஒரு சுனை இருக்கிறது. அது மேற்கூறிய அறைகளுக்கு முன்னால் அருவியாக ஓடி, ஒவ்வொரு நிலையையும் சூழ்வதனால் வளைந்து வளைந்து சென்று கடைசியாக எல்லாவற்றுக்கும் அடிப்பட்டதான கீழ் நிலைக்கு வந்து, அங்குள்ள அறைகளைக்கடந்து, அப்பால் வாயிற் கதவு வழியாக வெளியே போகின்றது. ஒவ்வொரு நிலையிலும் கட்டிடத்தின் வெவ்வேறிடங்களில் வெளிச்சம் வருவதற்காக மலையைக் குடைந்து சாளரங்கள் விடப்பட்டிருக்கின்றன. இதனால் ஒவ்வோர் அறையும் இருட்டாக இராமல் நல்ல வெளிச்சமுள்ளதாக இருக்கிறது.

இந்தக் கட்டிடத்தின் நான்கு மூலைகளிலும் மேலே ஏறுவதற்காகப் பாதையிலேயே படிக்கட்டுகள் வெட்டிவிடப்பட்டிருக்கின்றன. தற்காலத்து மனிதர்கள் குள்ளராக இருப்பதால் எப்போதும் போல ஏணி வைத்து ஏறி மலையுச்சிக்குப் போகின்றனர். முற்காலத்து மனிதர்களோவெனின், ஓரொரு தப்படியினால் மேலேறிச்சென்றனர்.

புரு என்ற பொருளுள்ள ஒரு வார்த்தை காரணமாக இக்கட்டிடத்துக்கு "போ-லோ-யு" என்ற பெயர் கொடுக்கப்பட்டுளது. எப்போதும் இங்கே அர்ஹத்துக்கள் வாசம் செய்கின்றனர். பூமி வளமற்றதாயும் ஜனங்கள் இல்லாததாயும் இருக்கிறது. மலைக்கு வெகு தூரத்துக்கப்பால் கிராமங்கள் உள்ளன. அவைகள் எல்லாவற்றிலும் தர்ம விரோதிகளே வாழ்கின்றனர். அவர்களுக்குப் புத்த தர்மத்தைப் பற்றியாவது, ச்ரமணர்களையும் பிராம்மணர்களையும் பற்றியாவது, பலவகையான தர்சனங்களைப் பற்றியாவது ஒன்றுமே தெரியாது. விஹாரத்துக்கு வருபவர்கள் ஆகாய மார்க்கமாகப் பறந்து வருவதை இந்நாட்டு ஜனங்கள் எப்போதும் காண்பது வழக்கம். ஒரு சமயத்தில் வேறு வேறு நாடுகளிலிருந்து சில புத்த யாத்திரிகர்கள் இங்கு வழிபாடியற்ற வந்தனர். அப்போது மேலே பிரஸ்தாபித்த கிராமவாசிகள் அவர்களைப் பார்த்து, "நீங்கள் ஏன் ஆகாய மார்க்கமாகப் பறந்து வரவில்லை? இங்கு எங்களால் காணப்படும் தர்ம மார்க்கத்தினர் அனைவரும் பறக்கக்கூடியவராக இருக்கின்றனரே" என்று கேட்டனர். அதற்கு அந்த யாத்திரிகர்கள், "எங்களுடைய சிறகுகள் இன்னும் நன்றாக முளைக்கவில்லை" என்று ஒரு சாக்குச் சொல்லினர்.

தக்ஷிண தேசம் உன்னதமான மலைப்பிரதேசமாம். பாதைகள் அபாயமானவை. அங்குப்போக விரும்புகிறவர்கள், இடங்களைத் தெரிந்து கொண்டிருந்த போதிலும், அந்நாட்டு அரசனுக்குப் பணத்தையோ வேறு பொருள்களையோ இனமாகக் கொடுக்கவேண்டும். அதன் பிறகு அவ்வரசன் இவர்களுக்கு வழி காட்டுவதற்காகச் சிலரை அனுப்புவான். இவ் வழிகாட்டிகள் ஒவ்வொருவரும் தங்கள் தங்களுக்குத் தெரிந்த பாட்டைகளையும் சிக்கலான குறுக்குப் பாதைகளையும்காட்டிப் பிரயாணிகளை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்கு அழைத்துச் செல்வர். பா-ஹியனால் முடிவில் அந்நாட்டுக்குப் போக முடியவில்லை. ஆகவே அவர் காதால் கேட்டவற்றை மட்டுமே மேற்கூறியவாறு குறித்துள்ளனர்.

வாராணஸியிலிருந்து புறப்பட்டுக் கிழக்கு முகமாகச் சென்றால் மறுபடியும் பாடலிபுத்ர நகரத்துக்கு வரலாம். விநய பிடகத்தின் பிரதிகளைத் தேடுவதே பா-ஹியனுடைய கருத்து. ஆனால் வட இந்தியா முழுவதிலும் பிடகத்தை அறிந்திருந்தவர்கள், அதன் விதிகளைக் காதால் கேட்டுத் தெரிந்து கொண்டிருந்தனரேயன்றி, பிரதி செய்து கொள்ளும்படியான மூல கிரந்தங்களைப் பெற்றிருக்கவில்லை. ஆதலால் தான் பா-ஹியன் மத்ய இந்தியா வரையில் வந்தனர். ஆனால் அங்குள்ள மஹாயான ஸங்காராமத்தில் மஹா

ஸங்கிக பரிஷத்தில் உபயோகப்படுத்தப்பட்ட விநயத் தொகுதிகளான ஒரு தொகுதி இவருக்குக் கிடைத்தது. இது புத்தருடைய ஜீவிய காலத்திலேயே கூடிய பிக்ஷுக்களின் முதல் பரிஷத்தில் உபயோகிக்கப்பட்டது. ஜேதவன விஹாரத்தில் உபயோகத்திலிருந்ததும் இதுவேயெனச் சொல்கின்றனர். பதினெண் வகையாரும் தங்கள் தங்களுக்கென்று பிரத்யேகமான சரியாவிதிகளையுடையவரென்பதைத் தவிர, மற்ற விஷயங்களில் எல்லோருக்கும் ஒற்றுமையுண்டு. முக்யமல்லாத சில விஷயங்களிலும் அனுஷ்டான ஆசாரங்கள் சிலவற்றிலும் அவர்களுக்குள் அபிப்பிராயபேதம் இருக்கிறது. ஆனால் இந்த வகுப்பாருடைய தொகுதி பெரும்பாலும் பூர்த்தியானதும் திருத்தமுள்ளதுமாகக் கருதப்படுகின்றது. இன்னும் அவர் (பா-ஹியன்) ஏழாயிரம் காதைகள் அடங்கிய விதிகளின் தொகுதி ஒன்றை வாய்ப்பாடமாகக் கேட்டுப் பிரதி செய்து கொண்டார். இது ஸர்வாஸ்திவாதர்களுடைய பரிஷத்தில் உபயோகிக்கப்பட்டதாம். சீன தேசத்தில் பெரும்பாலும் உபயோகத்திலிருப்பது இதுவே தான். இந்த வகுப்பைச் சேர்ந்த ஆசார்யர்களும் வாய்ப்பாடமாகவே விநயவிதிகளை உபதேசிக்கின்றனரேயொழிய அவைகளை எழுதி வைத்திருக்கவில்லை. இன்னும் இந்த ஸங்கத்தில் ஆறாயிரம் காதைகள் அடங்கிய ஸம்யுக்தாபி தர்ம-ஹ்ருதய-சாஸ்திரம் என்பதன் பிரதியொன்று கிடைத்தது. அப்பால் இரண்டாயிரத்தைந்நூறு காதைகள் உள்ள நிர்வாண ஸூத்ரத்தின் பிரதியொன்றும், கிட்டத்தட்ட ஐயாயிரம் காதைகளுள்ள வைபுல்ய-பரிநிர்வாண-ஸூத்ரம் என்பதன் பிரதியொன்றும், மஹா ஸங்கிக வகுப்பார் உபயோகிக்கும் அபிதர்மத்தின் பிரதியொன்றும் இவருக்குக் கிடைத்தன. இவைகளைப் பெறுவதற்காகப் பா-ஹியன் இவ்விடத்தில் ஸம்ஸ்கிருத கிரந்தங்களைப் படித்து அப்பாஷையில் பேசப் பழகி விநயபிடகங்களைப் பிரதி செய்வதற்காக மூன்று வருஷங்கள் தங்கினர்.

தோ-சிங் என்பவர் மத்ய இந்தியாவுக்கு வந்து, ச்ரமணர்களுடைய வழக்கமான ஆசாரத்தையும், பிக்ஷுக்களின் சிஷ்டாசாரத்தையும், வெகு அற்பமான விஷயங்களிலும் அவர்கள் நடந்து கொள்ளும் அனுஷ்டான மாதிரியையும் கண்டு, எல்லைப் புறத்ததான சீன தேசத்தில் உள்ள பலவகைப்பட்ட பிக்ஷுக்களுக்கு விநய விதிகள் வெகு அற்பமாக மட்டும் தெரிந்திருப்பதைச் சிந்தித்துத் துக்கித்து, "இந்த க்ஷணம்முதல் நான் புத்தத்தன்மையை அடையும் வரையில் எல்லைப்புற நாட்டில் பிறவாதிருப்பேனாக" என்று ஒரு பிரதிஜ்ஞை செய்து கொண்டார். இதன் பிரகாரம்

அவர் தமது நாட்டுக்குத் திரும்பிப் போகாமல் இங்கேயே ஸ்திர வாசம் செய்தனர். ஆகவே, பா-ஹியன் மாத்திரம் தமது கருத்துக் கேற்ப ஹன் (சீன) தேசத்தில் விநயவிதிகளைப் பற்றிய ஞானத்தைப் பரவச்செய்வதற்காகத் தனியாகத் திரும்பிச் சென்றார்.

கங்கையின் கரை வழியாகக் கிழக்கு நோக்கிப் பதினெட்டு யோசனை தூரம் சென்றால் அதன் தென்கரையிலுள்ள சேன்-போ (சம்பா) என்னும் பெரிய ராஜ்யத்தை அடையலாம். இதில் புத்த பகவான் முன்னொரு சமயம் தாமதித்த இடத்திலும், வியாயாமத் துக்காக அங்குமிங்கும் உலாவிய இடத்திலும், முந்திய புத்தர்கள் நால்வரும் உட்கார்ந்திருந்த இடத்திலும் ஸ்தூபங்கள் எழுப்பப்பட் டிருக்கின்றன. அங்கு இன்னும் பிக்ஷுக்கள் வசித்துக் கொண் டிருக்கின்றனர். இங்கிருந்து இன்னும் கிழக்கே ஐம்பது யோசனை தூரத்தில் தாம்ரலிப்தி என்னும் ராஜ்யம் உளது. இந்த நாட்டில் இருபத்து நான்கு ஸங்காராமங்கள் இருக்கின்றன. அவைகள் எல்லாவற்றிலும் பிக்ஷுக்கள் இருக்கின்றனர். புத்த தர்மம் பெரும்பாலும் கொண்டாடப்படுகிறது. பா-ஹியன் ஸூத்ரங் களைப் பெயர்த்தெழுதிக் கொண்டும், விக்ரகங்களின் சித்திரங்களை எழுதிக்கொண்டும் இங்கு இரண்டு வருஷகாலம் இருந்தார். பிறகு அவர் ஒரு பெரிய வர்த்தகக் கப்பலிலேறி, மாரிக்காலத்தில் வீசும் முதற்காற்றின் உதவியால் தென்மேற்கு முகமாகக் கடற் பிர யாணம் செய்தார். அவர் பதினான்கு நாட்கள் இரவும் பகலும் கடலில் சென்று ஸிம்ஹள நாட்டை அடைந்தனர். தாம்ரலிப்தி நாட்டிலுள்ள ஜனங்கள் இவ்விரண்டு நாடுகளுக்கு முள்ள தூரம் கிட்டத்தட்ட எழுநூறு யோசனை என்கின்றனர். அந்த ஸிம் ஹள ராஜ்யம் ஒரு பெரிய தீவில் உள்ளது. அது கிழக்கு மேற்கில் ஐம்பது யோசனை தூரமும் தெற்கு வடக்கில் முப்பது யோசனை தூரமும் அமைந்தது. அதன் ஒவ்வொரு பக்கத்திலும் ஏறக் குறைய நூறு சிறு சிறு தீவுகள் இருக்கின்றன. அவைகள் ஒன்றுக்கொன்று பத்து அல்லது இருபது லீ தூரத்திலும், சில இருநூறு லீ தூரத்திலும் உள்ளன. இவைகளெல்லாம் அந்தப் பெரிய தீவையே சார்ந்திருக்கின்றன. அவைகளில் பெரும்பாலன வற்றில் ரத்நங்களும் முத்துக்களும் உண்டாகின்றன. மாணி என்னும் ரத்நமும் சுமார் பத்து லீ விஸ்தீர்ணங்கொண்ட ஒரு பிரதேசத்தில் கிடைக்கிறது. அவ்விடத்தைப் பாதுகாப்பதற்காக அரசன் காவற்காரர்களை அனுப்புகிறான். ரத்நங்கள் அகப் பட்டால் பத்தில் மூன்று பங்குக்கு அரசன் உரிமையுள்ளவனா கிறான்.

இந்த ராஜ்யத்தில் முதன் முதலில் ஜனங்கள் இருந்ததில்லை; ராக்ஷஸர்களும் நாகர்களுமே இருந்தனர். என்றாலும் வேறு வேறு நாட்டு வியாபாரிகள் வாணிகம் செய்வதற்காக இங்கு வந்தனர். வாணிக சமயத்தில் ராக்ஷஸர்கள் நேரில் வராமல் தங்களுடைய அரிய பண்டங்களின் மீது அவைகள் இன்ன விலையுள்ளனவென்பதைக் குறித்து, அவைகளை வெளியே வைத்திருப்பர். அப்பால் அந்த வர்த்தகர்கள் குறிப்பிடப்பட்ட விலைப்பிரகாரம் பண்டங்களை வாங்கி எடுத்துக் கொண்டு போவார்கள். ஆனால் இப்படி அவர்கள் வந்து போனதன் காரணமாக, வேறு நாட்டு ஜனங்களும் இந்நாட்டின் மனோஹரமான சுபாவத்தைக் கேட்டு, திரள்திரளாக வந்து கூடியபடியால், இங்கு ஒரு பெரிய ராஜ்யம் ஏற்பட்டது. இந்த நாட்டின் சீதோஷ்ண ஸ்திதி, கோடையிலும் மாரியிலும் யாதொரு வித்யாசமுமின்றி, சுககரமாக இருக்கிறது. செடிகளும் மரங்களும் எப்போதும் பசுமையாகவே இருக்கின்றன. மனிதர்கள் தங்களுடைய இஷ்டப் பிரகாரமே விளை நிலங்களில் விதை விதைக்கின்றனர். நிலையான ருதுக்கள் (பருவங்கள்) இங்கு இல்லை.

ஒரு கொடிய நாகத்தை நல்வழிப்படுத்தவேண்டுமென்ற விருப்பத்தினால் புத்த பகவான் இந்த நாட்டுக்கு எழுந்தருளினர். ஸித்தியினால் அவர் தம்முடைய பாதங்களில் ஒன்றை ராஜதானியின் வடக்கேயும், மற்றொன்றைப் பதினைந்து யோசனை தூரத்துக்கப்பாலுள்ள ஒரு மலையுச்சியின்மீதும் வைத்தனர். ராஜதானியின் வடக்கேயுள்ள மலைமீது வைத்த அடிச்சுவட்டின் மீது நானூற்றெழுபது அடி உயரமான பெரிய ஸ்தூபம் ஒன்று எழுப்பப்பட்டிருக்கின்றது. அது தங்கத்தாலும் வெள்ளியாலும் அலங்கரிக்கப்பட்டு, ஒவ்வொரு விதமான ரத்நத்தாலும் சம்பூர்ணமாக்கப்பட்டுள்ளது. அந்த ஸ்தூபத்தின் பக்கத்தில் ஐயாயிரம் பிக்ஷுக்கள் உள்ள அபயகிரி என்னும் ஸங்காராமமும் கட்டப்பட்டிருக்கிறது. இஃதன்றியும் இங்கு நிர்மாணிக்கப்பட்டுள்ள பௌத்தாலயம் எல்லா விதமான ரத்நங்களையும் சேர்த்து, பொன்னாலும் வெள்ளியாலும் இழைக்கப்பட்ட வேலைப்பாடமைந்துளது. இவ்வாலயத்தின் நடுவில் இருபத்திரண்டடி உயரத்தில் பல நிறங்கொண்ட ரத்நம் ஒன்றால் இயற்றப்பட்ட புத்த விக்ரகம் ஒன்றுள்ளது. அதன் உடல் முழுவதும் ஏழு வகையான ரத்நங்களின் ஒளியால் பளபளவென்று பிரகாசிக்கின்றது. அதன் அங்க அடையாளங்களோ இத்தன்மையன வென்று சொல்லவொண்ணாதபடி அவ்வளவு சோபிதமாகச் சித்திரிக்கப்பட்டுள்ளன. அதன் வலது கையில் விலை மதிக்க முடியாத முத்து ஒன்று இருக்கிறது.

ஹன் தேசத்திலிருந்து பா-ஹியன் புறப்பட்டு வந்து இப்போது பல வருஷங்களாயின. அவர் சம்சர்க்கம் செய்த ஜனங்களுடைய நடையுடை பாவனைகள் எல்லாம் அவருக்கு முற்றிலும் நூதனமாகத்தோன்றின. அவர் பார்த்த நகரங்கள், ஜனங்கள், மலைகள், பள்ளத்தாக்குகள், செடிகள், மரங்கள் எல்லாம் பழைய காலத் தவைகளைப் போன்றிருக்கவில்லை. இன்னும் அவருடன் வந்த துணைவர்களில் சிலர் பின்னே தங்கி விட்டதனுலும், சிலர் இறந்து விட்டதனுலும் அவருக்குப் பிரிவு ஏற்பட்டது. அவருக்கு மிகுந்திருந்த காரியமெல்லாம் கழிந்து போன காலத்தின் நிழலைச் சிந்திப்பதுதான். ஆகவே அவருடைய மனம் எப்போதும் துக்கத்தால் பீடிக்கப்பட்டிருந்தது. இந்த ரத்ந விக்ரகத்தின் அருகில் அவர் நின்று கொண்டிருந்தபோது, ஒரு வர்த்தகன் சீன தேசத்தில் செய்யப்பட்ட பளபளப்பான வெண் பட்டு விசிறி ஒன்றை அதற்குச் சமர்ப்பித்ததைத் திடீரென்று கண்டார். அவரை அறியாமலேயே அவருக்கு விசனம் மேலிட்டுக் கண்களில் நீர் நிரம்பியது.

இந்த நாட்டில் முன்னமிருந்த அரசர்களில் ஒருவன், போதி விருட்சத்தின் கிளை ஒன்றைப் பெற்று வருவதற்காக மத்ய இந்தியாவுக்கு ஒரு தூது அனுப்பினுன். அந்தக் கிளையை இந்தப் பௌத்தாலயத்தின் பக்கத்தில் நாட்டினர். அஃது இருநூற்றிருபது அடி உயரமான மரமானபோது தென்கிழக்குப் பக்கமாகச் சாயத் தொடங்கியது. அது கீழே விழுந்துவிடுமென்ற பயத்தினுல் அவ்வரசன் அதைத் தாங்குவதற்காக எட்டு அல்லது ஒன்பது முட்டுக்களைக் கொடுத்தான். இப்படி முட்டுக் கொடுத்த விடத்தில் அந்த மரம் ஒரு கிளையை விட்டது. அக்கிளை அந்த முட்டைத் துளைத்துக்கொண்டு பூமியிலிறங்கி வேரூன்றியது. அந்தக் கிளை ஏறக்குறைய இருபது அங்குலச் சுற்றளவுள்ளது. நடுவில் துளைக்கப்பட்டிருந்தபோதிலும் இந்த முட்டுக்கள் இன்னும் அந்த மரத்தைச் சூழ்ந்துள்ளன. இவைகள் அந்த மரத்துக்கு ஆதரவாக இராது போனுலும் ஜனங்கள் இவைகளை இன்னும் அப்புறப்படுத்தவில்லை.

மரத்தின் கீழே ஒரு விஹாரம் கட்டப்பட்டிருக்கிறது. அதன் நடுவில் புத்தருடைய வீற்றிருக்கும் திருக்கோலமான விக்ரகம் ஒன்றுள்ளது. பிக்ஷுக்களும் உபாஸகர்களும் இடையருது அதற்கு வழிபாடியற்றுகின்றனர். இஃதன்றியும், ராஜதானிக்குள் புத்த பகவானுடைய தந்தம் (பல்) ஒன்றை வைத்திருக்கும் விஹாரம் ஒன்றிருக்கிறது. இதை நிர்மிப்பதில் ஏழு வகையான ரத்நங்களும் உபயோகப்படுத்தப்பட்டுள்ளன. அரசன், பிராம்மணர்களுடைய ஸ்மிருதிகளின்படி தன்னைச் சுத்தனுக்கிக் கொள்கிறுன். இந்தத்

தாதுவினிடம் பக்தி பூண்டு வழிபாடியற்றியதும், நகரமாந்தர் விதிப் பிரகாரம் தங்கள் தங்களுடைய ஆசாபாசங்களை அடக்கிக் கொள் கின்றனர். இவ்விதமாக ஆளத்தொடங்கிய கால முதற்கொண்டு இந்த ராஜ்யத்தில் பஞ்சமாவது உற்பாதங்களாவது கலகமாவது நேர்ந்ததில்லை. இந்தப் பிக்ஷுக்களிடம் உள்ள பொக்கிஷத்தில் பல விதமான ரத்நங்களும் விலைமதிக்க வொண்ணாத மாணி ரத்நம் ஒன்றும் இருக்கின்றன. அந்நாட்டு அரசன் ஒரு சமயம் அந்தப் பொக்கிஷத்துக்குள் நுழைந்தான். அதைச் சோதனை செய்யும் பொருட்டுச் சுற்றி வந்த போது அந்த மாணி ரத்நத்தைக் கண் டான். கண்டதும், அதைக் கவர்ந்து கொள்ளவேண்டுமென்ற தீய எண்ணம் அவனுடைய மனத்தில் உதித்தது. ஆகவே அவன் அதைத் தன்னுடன் எடுத்துக் கொண்டுபோக நினைத்தான். மூன்று நாட் கள் வரையில் அந்த எண்ணம் அவனை வருத்தியது. ஆனால் கடைசியில் தர்ம சிந்தையனாகி, பிக்ஷுக்களிடம் உடனே சென்று, அவர்களைத் தலையால் வணங்கி, தனது தீயவெண்ணத்துக்குக் கழி பேரிரக்க மடைந்து, அவர்களைப் பார்த்து, "இந்த க்ஷணம் முதற் கொண்டு இந்தப் பொக்கிஷத்துக்குள் அரசராவது, நாற்பது வரு ஷம் தலைமை வகிக்காத பிக்ஷுவாவது எந்தக் காரணத்தைக் கொண் டும் நுழையக்கூடாதென்றும், நாற்பது வருஷம் தலைமை வகித்த பிக்ஷு நுழையலாமென்றும் நீங்கள் ஒரு சாசுவதமான நியமம் செய்து கொள்ளல் நலம்" என்றனன்.

நகரத்துக்குள் பிரபுக்களும் செல்வம் படைத்த கிருகஸ்தர் களும் பலர் இருக்கின்றனர். ஸா-போ வர்த்தகர்களுடைய வீடுகள் வெகு அழகாக அலங்கரிக்கப்பட்டுள்ளன. தெருக்களும் சந்து களும் சுத்தமாகவும் மேடுபள்ளமில்லாமலும் இருக்கின்றன. நாற்பெருந்தெருக்களின் கோடிகளில் தர்ம மண்டபங்கள் உள்ளன. இவைகள் ஒவ்வொன்றிலும் பிரதிமாதமும் எட்டு, பதினான்கு, பதினைந்தாவது தினங்களில் ஒரு உன்னதமான ஸிம்மாசனத் தைப் போட்டு, நால்வேறு வகையினரைச் சேர்ந்த அறவோர் களுடைய தர்மோபதேசத்தைக் கேட்பதற்காக எல்லோரும் கூடு கின்றனர். இந்த நாட்டில் ஐம்பதினாயிரம் அல்லது அறுபதி னாயிரம் பிக்ஷுக்கள் இருக்கின்றனரென்று இங்குள்ளவர் சொல் கின்றனர். அவர்கள் அனைவரும் ஸஹபோஜனம் செய்பவராவர். இவர்களைத் தவிர, இந்நகரத்திலுள்ள ஐயாயிரம், ஆறாயிரம் ஜனங்களுக்கும் அரசன் ஸஹபோஜனம் அளிக்கிறான். வேண்டிய காலங்களில் இவர்கள் தங்களுடைய பிக்ஷாபாத்ரங்களை எடுத்துக் கொண்டு குறிப்பிட்ட இடத்துக்குப் போய், அவைகளின்

அளவுப்பிரகாரம் அவைகளை நிரப்பிக் கொண்டு திரும்புகின்றனர். மூன்றுவது மாதத்தின் நடுவில் எப்போதும் அவர்கள் புத்த பகவானுடைய பல்லை வெளியே கொண்டு வருகின்றனர். பத்து நாட்கள் முன்னதாக அரசன் ஒரு பெரிய யானையை வெகு நன்றாக அலங்கரித்து, வாக்சாதுர்யமும் சாமர்த்தியமும் உள்ள ஒருவனை ராஜ உடைகளை உடுக்கச் செய்து அவ்யானையின் பிடரிலேற்றி, "மூன்று அஸங்க்யேய கல்ப கால போதி ஸத்வர் ஒவ்வொரு விதமான கடூரத்தையும் சகித்தனர்; அவர் பட்ட சரீராவஸ்தைகளுக்கு அளவு கிடையாது; நாட்டையும் மனைவியையும் மகனையும் தியஜித்தார்; இன்னும் பிறன் ஒருவனுங்குத் தருவதற்காகத் தமது கண்களைப் பறித்தார்; ஒரு பருந்தினின்றும் புறுவை ரக்ஷிப்பதற்காகத் தமது சரீரத்தை அரிந்தார்; பிக்ஷுயின் பொருட்டுத் தமது தலையைக் கொடுத்தார்; பசியால் வருந்திய பெண்புலிக்குத் தமது சரீரத்தைத் தந்தார்; தமது மஜ்ஜையையும் மூளையையும் கூடக் கொடுப்பதற்கு அவர் பின் வாங்கவில்லை. இவ்விதமாக அவர் பிறர் பொருட்டாக ஒவ்வொரு வித வாதனையையும் பொறுத்தார். இன்னும் பூர்ண புத்தரான பிறகு தர்மப்பிரசாரமும் தர்மோபதேசமும் செய்து கொண்டும், மனிதர்களைப் புத்த மார்க்கத்தினராக்கிக் கொண்டும் இவ்வுலகத்தில் நாற்பத்தொரு வருஷங்கள் ஜீவந்தராக விருந்தார். தீனர்களுக்குச் சாந்தியையும் பதிதர்களுக்கு ரக்ஷையையும் அருளினார். கணக்கிறந்த ஜன்மங்கள் எடுத்த பிறகு நிர்வாணமடைந்தார். அது நிகழ்ந்து ஆயிரத்து நானூற்றுத் தொண்ணூற்றேழு வருஷங்களாகின்றன. அப்போது உலகத்தாருடைய கண்கள் குருடாக இருந்தன. மானிடவர்க்க மெல்லாம் மிகவும் துயரடைந்திருந்தது. இன்னும் பத்து நாள்களுக்குப் பிறகு அதே புத்த பகவானுடைய பல் வெளியே கொண்டு வரப்பட்டு அபயகிரி விஹாரத்துக்கு எடுத்துச்செல்லப்படும். ராஜ்யத்தில் புண்ணியம் பெற விரும்பும் எல்லாப்பிக்ஷுக்களும், உபாஸகர்களும் பாதைகளைச் செப்பனிட்டு, வீதிகளையும் தெருக்களையும் அலங்கரித்து, புத்த தாதுவிற்கு ஒவ்வொரு விதமான புஷ்பத்தையும் தூவி பக்தியோடு தூபங்களையும் காட்டட்டும்" என்று முரசு அறையச் செய்கிறான். இவ்வாறு விழாவறைந்த பிறகு, ஒன்றன் பின் ஒன்றான பிறப்புக்கள் தோறும் ஸுதானனாகவும், சாமனாகவும், யூதபதியாகவும், மானாகவும் ஜனித்ததைப்போலப் போதி ஸத்வர் எடுத்த ஐந்நூறு சரீரங்களின் பிரதிமைகளை ஊர்வலம் வரும் பாதையின் இருமருங்கும் அவ்வரசன் அமைக்கச் செய்கிறான். இப்பிரதிமைகள் எல்லாம் வெகு அழகாகப் பல வர்ணங்கள் தீற்றப் பெற்று உயிருள்ளவை போலத்

தோன்றுகின்றன. கடைசியாக, புத்த பகவானுடைய பல் வெளியே கொணரப்பட்டு, பிரதான பாதை வழியே ஊர்வலமாக எடுத்துச் செல்லப்படுகிறது. மார்க்கத்தில் அதற்குக் காணிக்கைகள் சமர்ப் பிக்கப்படுகின்றன. அபய விஹாரத்துக்கு வந்ததும் அவர்கள் அதைப் பௌத்தாலயத்தில் வீற்றிருக்கச் செய்கின்றனர். பிக்ஷுக் களும் உபாஸகர்களுமாக எல்லாரும் பெருங்கூட்டங்கூடி, இரவும் பகலும் இடைவிடாமல் அதற்குத் தூப தீபங்கள் காட்டிப் பலவிதமான வழிபாடுகளை இயற்றுகின்றனர். தொண்ணூறு நாட்கள் பூர்த்தியான பிறகு அதை நகரத்திலுள்ள விஹாரத் துக்குத் திரும்பவும் எடுத்துச் செல்கின்றனர்.

புத்த தர்மப்பிரகாரம் வழிபாட்டுக்காக இந்த விஹாரம் உபவாஸ தினங்களில் திறக்கப்படுகிறது. அபய விஹாரத்துக்கு நாற்பது லீ கிழக்கில் போதி என்ற பேருள்ள விஹாரம் கட்டப்பட் டுள்ள மலை இருக்கிறது. அதில் ஏறக்குறைய இரண்டாயிரம் பிக்ஷுக்கள் இருக்கின்றனர். அவர்களிடையே த-மோ-கி-யூ-தி (தர்ம கீர்த்தி, அல்லது தர்ம குப்தர்) என்னும் பிரபல ச்ரமணர் இருக்கிறார். இந்நாட்டு ஜனங்கள் அவரை மிகப் பாராட்டிக் கௌரவிக் கின்றனர். நாற்பது வருஷ காலமாக அவர் ஒரு குகையில் வசித்து வருகிறார். எப்போதும் நற்செய்கைகளையே செய்து வந்த காரணத் தால், அவர் பாம்புகளையும் எலிகளையும் பழக்கவல்லவராயினர். ஆகவே, அவைகள் ஒருவருக்கும் தீங்கு செய்யாமல் ஒரே குகையில் வாழ்கின்றன.

ராஜதானிக்குத் தெற்கே ஏழு லீ தூரத்தில் மஹா விஹாரம் என்ற விஹாரம் இருக்கிறது. அதில் மூவாயிரம் பிக்ஷுக்கள் உள்ளனர். அவர்களிடையே வெகு பிரபலரான ச்ரமணர் ஒருவர் இருந்தார். அவருடைய ஜீவ வாழ்க்கை வெகு பரி சுத்தமாக இருந்தபடியால் நாட்டு ஜனங்கள் அவரை ஒரு அர்ஹத் எனவே கருதினர். அவருக்கு மரண காலம் சமீபித்த போது, தர்மப் பிரகாரம் அவருடைய க்ஷேம சமாசாரத்தை விசாரிக்க வந்த அரசன் பிக்ஷுக்களைக் கூட்டி அவரை நோக்கி, "தேவரீருக்கு ஏது நிகழ்ச்சி உண்டாயிற்றோ?" என்று கேட்டான். அதற்கு அவர், "நான் ஓர் அர்ஹத்" என்று விடை கூறினர்.

அவருடைய மரணத்துக்குப் பிறகு அவ்வரசன் அர்ஹத்துக் களுக்கான ஈமச்சடங்குகளின் விதிகளைத் தெரிந்து கொள்வதற் காகத் தர்ம கிரந்தங்களைப் பரிசோதிப்பித்தான். அவைகளின் படியே விஹாரத்துக்கு நான்கு அல்லது ஐந்து லீ தூரம் கிழக்கே முப்பத்து நான்கு அடிச்சதுரமும் அதே அளவு

உயரமுமுள்ள பெரிய சிதை ஒன்றை அடுக்கினர். அதன் உச்சியினருகில் சந்தனம், அகில் முதலிய எல்லாவித வாசனைக் கட்டைகளையும் அடுக்கடுக்காகப் பரப்பினர். சிதையின் நான்கு பக்கங்களிலும் படிக்கட்டுக்களை அமைத்தனர். பிறகு மிகவும் சுத்த மானதும் ஆட்டு உரோமத்தால் செய்யப்பட்டதுமான வெண்மை வஸ்திரம் ஒன்றை எடுத்துக் கொண்டு சிதையைச் சுற்றிலும் மேலே இறுக்கிக் கட்டினர். அப்பால், இந்நாட்டின் உபயோகத்தி லிருக்கும் ஈமவண்டியைப் போன்றதும், ஆனால் பாம்பின்காது போன்ற கைப்பிடிகள் இல்லாததுமான ஒரு சகடத்தை நிர் மித்தனர். பின்னர், தகனம் செய்யவிருக்கும் தருணத்தில் நால் வகை ஜனங்களும் கூட்டங் கூட்டமாகப் பின் தொடர, அரசன் வழிபாட்டுக்கான புஷ்பங்களையும் தூபங்களையும் எடுத்துக்கொண்டு வந்து சிதையருகுவரையில் அந்த ஈமவண்டியைப் பின் பற்றினான். இதன் பிறகு அந்த ஈம வண்டியைச் சிதையின் மேலேற்றி, அதன் மீது எல்லாப் பக்கங்களிலும் கற்பூர எண்ணெயை ஊற்றினர். அப் பால் எல்லாவற்றுக்கும் நெருப்பு மூட்டப்பட்டது. நெருப்பு வைக்கப்படும் தருணத்தில் அங்குக் கூடியிருந்த எல்லோருடைய மனமும் தர்ம சிந்தையிலேயே ஆழ்ந்திருந்தது. பிறகு, அவர்கள் தங்களுடைய உத்தரீயங்களை அகற்றி விட்டு, குடையாக உபயோகிக் கிற சிறகு போன்ற விசிறிகளைக் கையில் எடுத்துக் கொண்டு, கூடு மான வரையில் சிதையின் அருகில் சென்று, நெருப்பு பின்னும் நன்றாக எறியும் பொருட்டு அவைகளை அச்சிதையில் எறிந் தனர். எல்லாம் முடிந்த பிறகு அவர்கள் அந்த அர்ஹத்தி னுடைய எலும்புகள் மீது ஒரு ஸ்தூபம் கட்டவேண்டியதற் காக அவ்வெலும்புகளைச் சிரத்தையுடன் தேடிப் பொறுக்கினர். அம்மஹானை ஜீவந்தராக இருக்கும்போதே பார்க்கமுடியாதபடி பா-ஹியன் காலந்தாழ்த்து வந்தபடியால், அவருடைய ஈமச் சடங்குகளை மட்டும் காண்பதற்குரியரானார்.

அக்காலத்தில் புத்த தர்மத்தில் மிகுந்த பற்றுள்ளவனாகவிருந்த அவ்வரசன் அந்தப் பிக்ஷுக்களுக்காக புதிய விஹாரம் ஒன்றைக் கட்டிக் கொடுக்க விரும்பினான். முதன் முதலில் அவன் அவர் களுக்குப் பெருவிருந்து செய்வித்தான். பிறகு இரண்டு வலிய காளைமாடுகளைத் தேர்ந்தெடுத்து அவைகளின் கொம்புகளைப் பொன், வெள்ளி, ரத்நங்களால் அலங்கரிப்பித்தான். பின்னர் அவன் அழகிய பொற் கலப்பை ஒன்றை எடுத்துக்கொண்டு குறிப்பிடப்பட்ட நிலத்தைச் சுற்றி நான்கு முறை தானே உழு தான். அப்பால், அந்த வரம்புக்குட்பட்ட நிலம், வீடுகள், ஜனங்

கள் இவைகளின் மீது தனக்கிருந்த பாத்தியங்களை யெல்லாம் இழந்து முழுவதையும் அந்தப் பிக்ஷுக்களுக்குத் தானம் செய்தான். பிறகு அவன், "இந்த க்ஷணம் முதற்கொண்டு தலை முறை தத்துவமாக இந்தப் பூஸ்திதி ஒருவரிடமிருந்து மற்றொருவரிடம் போய்க் கொண்டே இருக்கட்டும். இந்தத் தானத்தை ஒருவரும் பராதீனப்படுத்தவாவது மாற்றவாவது கூடாது" என்ற வாசகம் அடங்கிய தாமிர சாஸனம் ஒன்றை எழுதுவித்தான். பா-ஹியன் இந்த நாட்டில் தங்கிய காலத்தில் இந்தியாவிலிருந்து வந்த பிக்ஷு ஒருவர், உன்னதமான பீடம் ஒன்றில் வீற்றிருந்து புராணபடனம் செய்யும்போது பின் வருமாறு சொல்லியதைக் கேட்டார்:

"புத்தருடைய பிக்ஷா பாத்ரம் முதன் முதலில் வைசாலியில் இருந்தது. இப்போது அது காந்தார நாட்டெல்லைக்குள் இருக்கிறது. சில காலத்துக்குப் பிறகு (இத்தனை வருஷங்கள் என்று அந்தப் பிக்ஷு சொல்லியது பா-ஹியனுக்கு மறந்து போயிற்று.) அது மேலை யூ-சி நாட்டுக்குப் போகும். பின்னும் சில காலத்துக் கப்பால் அது கோடான் நாட்டுக்குச் செல்லும். பின்னர் அதே அளவுள்ள காலங் கழிந்ததும் ஹன் நாட்டுக்குத் திரும்பும். மறுபடியும் அதே அளவுள்ள காலத்துக்குப் பிறகு ஸிம்ஹள நாட்டுக்கு வரும். பின்னரும் அதே காலவரையறைக்கப்பால் அது மத்ய இந்தியாவுக்குத் திரும்பும். அதன் பிறகு அது துஷித லோகத்துக்கு எடுத்துச் செல்லப்படும். அப்போது மைத்ரேய புத்தர், 'சாக்ய முனி புத்தருடைய பிக்ஷாபாத்ரம் வந்து விட்டது' என்று பெருமூச்சு விட்டுச் சொல்வர். பிறகு தேவர்கள் எல்லோரும் அதற்கு ஏழு நாள் வரையில் புஷ்பங்களாலும் தூபங்களாலும் ஆராதனை புரிவார்கள். அப்பால் அது ஜம்புத்வீபத்துக்குத் திரும்பும். அங்கே ஒரு கடல் நாகம் அதைத் தனது அரண்மனைக்கு எடுத்துச் சென்று மைத்ரேயருக்கு ஞானோதயம் உண்டாகும் தருணம் வரையில் வைத்துக் கொண்டிருக்கும். அப்போது அந்தப் பாத்ரம் முதலில் இருந்த பிரகாரமே நான்கு பிரிவினதாகி, மறுபடியும் பின்-ஞ மலைக்கு ஏறிப்போகும். மைத்ரேயருக்கு ஞானோதயம் உண்டான பிறகு தேவலோகத்தரசர் நால்வரும் முந்திய புத்தர்களுக்குச் செய்ததைப் போலவே மறுபடியும் ஒரு முறை வந்து இவரைப் புத்தருக்குரிய வந்தனை வழிபாடுகளால் ஆராதிப்பர். இந்தப் பத்ர கல்பத்தைச் சேர்ந்த ஆயிரம் புத்தர்களும் இந்தப் பிக்ஷா பாத்ரத்தையே உபயோகிப்பார்கள். பாத்ரம் தோன்றாது போகுமானால் புத்த தர்மமும் வரவர க்ஷீணித்து விடும். அதன்

பிறகு மனிதர்களுடைய வாழ்நாள் ஐந்து வருஷ அளவினதாகும் வரையில் குறுகத் தொடங்கும். அவர்களுடைய வாழ்நாள் பத்து வருஷ அளவுள்ளதாக இருக்கும் சமயத்தில் அரிசியும் வெண்ணெயும் இவ்வுலகில் இராது மறைந் தொழியும். மனிதர்கள் மிகவும் துஷ்டர்களாவர். அவர்கள் கையில் கொண்டிருக்கும் சிறு குச்சிகளே கத்திகளும் தடிகளுமாக, அவைகளைக் கொண்டு ஒருவரை யொருவர் அடித்துக் காயப்படுத்திக் கொன்று கொள்வர். இதன் மத்தியில் புண்ணியம் செய்திருந்தவர்கள் தப்பித்துக் கொண்டு மலைகளில் புகுந்து சரண் பெறுவர். துஷ்டர்கள் எல்லாரும் பரஸ்பரம் கொன்று கொண்ட பிறகு, இவர்கள் (புண்ணியவான்கள்) மறைவிடங்களிலிருந்து வெளிப்புறப்பட்டு வந்து ஒருவரோடொருவர் கலந்து, "முற்காலத்து மனிதர்கள் வயோவிருத்தர்களாக நெடுங்காலம் ஜீவித்திருந்தினர். இப்பொழுதோ, துஷ்டர்கள் கேட்பாரின்றி ஒவ்வொரு விதத்திலும் தர்ம மார்க்கத்துக்குப் புறம்பாக நடந்து கொண்ட காரணத்தால் நமது வாழ்நாள் பத்து வருஷ அளவினதாகக் குறைந்து விட்டது. ஆகவே நாமெல்லோரும் பரஸ்பர அன்பும் ஆர்வமும் உடையவராகி, ஒவ்வொரு விதமான நற்செய்கையையும் செய்து, தர்ம மார்க்கத்தின்படி நன்னெறியிற் செல்வோமாக" என்று பேசிக்கொள்வர். இவ்விதமே ஒவ்வொருவரும் நன்னெறியில் ஒழுகத் தலைப்படவே அவர்களுடைய வாழ்நாள் எண்பதினாயிரம் வருஷ அளவினதாகும் வரையில் விருத்தியாகும். மைத்ரேயருடைய அவதார காலத்திலும், அவர் தமது தர்ம சக்கரத்தை முதன் முதலில் உருட்டத் தொடங்கும்போதும், அவரது முதல் சிஷ்ய கோஷ்டியினர், மனைகளைத் துறந்து மூன்று திவ்ய நாமத்திலும் சரணமடைந்து பஞ்ச சீலங்களைக் கைக்கொண்டு மும்மணிகளையும் இடையறாத வந்தனை வழிபாடுகளால் தொழுத சாக்ய புத்தருடைய தர்மத்தைப் பின்பற்றியவர்களேயாவர். தங்கள் தங்களுடைய பழைய ஒழுக்கங்களால் மோக்ஷம் அடைவதற்கான நிலைமையை அடைந்தவர்களே அவரது இரண்டாவதும் மூன்றாவதுமான சிஷ்ய கோஷ்டியினராவர்."

இந்தப் பிரசங்கத்தைக் கேட்ட பா-ஹியன் இதை எழுதிக் கொள்ள விரும்பினார். ஆனால் அந்தப் பிக்ஷு, "இதற்குக் கிரந்த ஆதாரமில்லை; நான் காதால் கேட்டவற்றையே திரும்பச் சொன்னேன்" என்றார்.

(தொடரும்)

# அரசியல் முறை

தி. சிவராமசேதுப் பிள்ளை

(592-ம் பக்கத் தொடர்ச்சி)

**உத்தியோகஸ்தர்கள்** (*The Services*): கவர்ன்மெண்டின் நித்திய நடவடிக்கைகளை நடத்திவைப்பவர்கள் உத்தியோகஸ்தர்கள். நடைமுதல் உத்தரவுகளில் எவ்வளவோ அதிகாரம் செலுத்திக் கொண்டு, பொது ஜனங்களின் கீழ்ப்பணிவுள்ள பணியாளர்கள் என்று கையொப்பமிடும் பெரியார்கள் அவர்களே. நம் அரசாங்க அமைப்பில் மாகாணங்களைப் பற்றின மட்டும், அவர்கள் நான்கு வகுப்பாகப் பிரிக்கப்பட்டார்கள்: (1) அகில இந்திய வகுப்பார்; (2) மாகாணத் தொகுதியார்; (3) குறிப்பிட்ட வேலைகளில் நிபுணர் (*Specialist Services*); (4) அடிப்படைப் பணியாளர் (*Subordinate Services*). அகில இந்திய வகுப்பினர்கள், இங்கிலாந்தில் உள்ள காரியதரிசியால் நியமிக்கப்பட்டு, அவருடைய கட்டுப்பாடுகளுக்கு மாத்திரமே உட்பட்டவர்கள். சம்பளம் பெற்றுக்கொண்டு அவர்கள் வேலைசெய்வார்கள். குற்றம் ஏற்படுமேல் சிற்சில தண்டனைகள் மாத்திரமே மாகாண கவர்ன்மெண்டார் விதிக்கலாம். ஏனைய பணியாளர்களை, எந்த எந்த மாகாண கவர்ன்மெண்டார் அவர்களை வேலையில் நியமிக்கிறார்களோ அவர்கள் முழு சுதந்திரமாய் அடக்கி ஆளலாம். இந்த ஏற்பாட்டில் மந்திரிகள் இலாகாவிலும் ஒதுக்கப்பட்ட இலாகாவிலும் (*Transfered half*) வேலை செய்யும் சேவகர்களுக்குள் ஏதேனும் வித்தியாசம் உண்டோ என்று கவனிக்கவேண்டும். சாதாரணமாய் எத்தகைய வகுப்பாரும் எவ்விதப் பாரபக்ஷமுமில்லாமல் இரண்டு இலாகாவிலும் வேலைசெய்து வரவேண்டும். ஆனால் அகில இந்திய சேவகர் மேலாவது, அல்லது மாகாணப் பணியாளர் மேலாவது, மந்திரி இலாகா தண்டனை விதிக்க வேண்டுமானால் கவர்னருடைய உத்தரவு வாங்க வேண்டும்.

**மாகாண சட்டசபையும் அதன் அமைப்பும்:** எல்லா மாகாணத்திலும், சட்டசபை இரட்டை வீடு இல்லை; இங்கிலாந்தில் சாதாரண ஜனங்கள் சபை யென்றும், பிரபுக்கள் சபை யென்றும் உண்டு. நம்தேசத்தில் ஒரே சபைதான் உண்டு. கவர்னாது நிர்வாக சபை

யினர் யாவரும் சட்டசபையின் அங்கத்தினர்கள். சபையின் தலைவர் சபையோராலே தேர்ந்தெடுக்கப்பட்டவர். அங்கத்தினர்களின் தொகை சுமார் 53 முதற்கொண்டு, 140 வரை மாகாணத்திற்கு மாகாணம் வேறுபட்டது. ஆனால் நூற்றுக்கு எழுபதின்மர் தேர்ந்தெடுக்கப்பட்டவராக இருக்கவேண்டும். மற்றவர்களைக் கவர்னர் நியமனம் பண்ணலாம். ஆனால் இவ்வண்ணம் நியமிக்கப்பட்டோரில் நூற்றுக்கு இருபதின்மருக்குமேல் சர்க்கார் உத்தியோகஸ்தர்களாக இருத்தல் கூடாது. கவர்னர் ஒரு பாகம் நியமனம் பண்ணலாம் என்று ஏற்பட்டது, தாழ்த்தப்பட்டவர்கள், தொழிலாளர்கள், வியாபாரிகள் முதலானவர்களுடைய பிரதிநிதிகள் சபையில் இருக்கவேண்டும் என்கிற எண்ணம் கொண்டே. இவ்வகுப்பினர்களைத் தகுந்த மாதிரி அவசியம் நியமனம்செய்யவேண்டும் என்று கவர்னர் துரைக்கு அரசர் பெருமான் இட்ட கட்டளை ஒன்றுண்டு. ஆகையால் கவர்னர் இஷ்டப்படி ஒரே வகுப்பினரை மாத்திரம் சபைக்குள் கொண்டு வந்து அடைத்துவிட முடியாது. சில சமயத்தில் சில நிபுணர்களைச் சபையில் சேர்க்கவேண்டியிருக்கும். அதற்கும் கவர்னர் தம்மிடம் ஒப்படைத்திருக்கும் நியமன சுதந்திரத்தைச் செலுத்துவதுண்டு.

தேர்ந்தெடுக்கும் முறை (*The franchise*): சபையின் அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்படும் முறைக்குரிய விதிகள் வகுக்கப்பட்டன. ஜனங்கள் தாங்களே இன்னார் இன்னார் என்று தங்கள் எண்ணத்தை நேரே தெரிவிக்கும்படியான முறை (*Direct election*) ஏற்படுத்தப்பட்டது. யார் யார் ஓட் கொடுக்கும் சுதந்திரம் உடையவர் என்பது வரையறுக்கப்பட்டது. பொதுவாய் எந்த இடத்திலிருந்து ஓட் கொடுக்கிறார்களோ அவ்விடத்தில் வருஷத்திற்கு இத்தனை நாட்கள் குடியிருந்திருக்கவேண்டும் என்பதும், ஒரு குறிப்பிட்ட சொற்பத் தொகையேனும் வரிசெலுத்தவேண்டியதும் முக்கியமான கட்டுப்பாடுகள். பெண்பாலாருக்கும் அநேக மாகாணங்களில் ஓட்டுக் கொடுக்கும் உரிமை கொடுக்கப்பட்டது. மாகாணத்திற்கு மாகாணம் ஓட்டுப்போட உரிமையுள்ளார் தொகை வேறுபட்டது; ஜனத்தொகையில் நூற்றுக்கு ஒருவர் முதல் பதினைல்வர் வரை வேறுபட்டது.

(தொடரும்)



# ஸுகன்யை

## டி. எஸ். சுப்பிரமணிய சாஸ்திரி

ஒரு காலத்தில் சூரியகுலத்தில் சருப்ாதி என்ற ஒரு வேந்தன் இருந்தான். அவன் அழகுமிக்க பல பெண்களை மணந்து இனிய வாழ்க்கையை நடத்திவந்தனன். அவர்களுள் ஒருத்தியினிடம் அன்பே உருவெடுத்ததுபோல, ஸுகன்யை என்ற பெயருடைய வனப்பிற் சிறந்த பெண்குழந்தை யொன்றைப் பெற்றான். அக் குழந்தை புன்சிரிப்புள்ள தன் தாமரைபோன்ற முகத்தாலும், மழலைச் சொற்களாலும், பெற்றவளும் மற்றவர்களுமாகிய எல்லாத் தாய்மாரையும், தந்தையையும் இன்புறுத்தினள்.

அவள், அரசர் செல்வத்திற்கும் குழந்தைப் பருவத்திற்குமுரிய பல விளையாட்டுகளைப் புரிந்துகொண்டே அப் பருவங்கடந்து குமரிப் பருவமடைந்தனள்.

இங்ஙனமிருக்க ஒருகால் சருயாதி, தன் அன்புடை மனைவியர், எல்லாருள்ளத்தையும் ஒருங்கே இன்புறச்செய்யும் தன் அருமைப் புதல்வி, இன்னும் தன்னிடம் அன்புபூண்டொழுகும் பலர் ஆகிய இவர்கள் புடைசூழ்ந்து வர, நன்னீரில் இன்ப விளையாடல்கள் புரிய ஆசையுடையவனாகித் தன் இராசதானியின் பக்கத்திலுள்ள ஒரு குளத்தை அடைந்தான்.

அக்குளமோ, படிகத்தைப்போன்ற நீராலும், பல படிக்கட்டுக்களாலும், அன்னம் சக்கரவாகம் என்னும் பல அழகிய பறவைகளாலும், கிழங்கும் கனியும் விதையும் மலரும் கடவுட்டன்மையுமுடைய பல மரங் கொடிகளாலும் விளங்கிற்று. இவற்றின் அழகு முதலியவற்றில் ஈடுபட்ட மனமுடைய அவ்வரசன் குளத்தில் இறங்கித் தன் தேவியரோடு இன்ப விளையாடல் புரியத் தொடங்கினான்.

ஸுகன்யையோ, தன்னையொத்த தோழிகளோடு வனத்தின் அழகால் கவரப்பட்ட மனமுடையவளாய் மலர் கொய்தும் வேறு சில காரியங்கள் செய்துகொண்டும் விளையாடிக்கொண்டிருந்தாள். இங்ஙனம் விளையாட்டாகவே சிறிது தூரம் சென்றுகொண்டு ஒரு புற்றினை யடைந்தாள். அதன் இரு துவாரங்களின் வழியே ஒளி ஒன்று வீசுவதைக் கண்டு ஈதென்னவென அறிய விரும்பினாள்.

ஒன்றுமே புலப்படாமை கண்டு அருகிருந்த கூர்மையான நீண்ட முள்ளொன்றை எடுத்து, அத்துவாரத்தின் வழியே செலுத்த எண்ணினாள். அதனைக் கண்டதும், "குழந்தாய்! மனுஷ சஞ்சாரம் இல்லாத இக்காட்டில் தவம் புரியும் என்னைத் துன்புறுத்த வேண்டாம்'' என அதனுள்ளமர்ந்து அருந்தவம் புரியும் சியவனரென்னும் முனிவர் சொன்னார். அவர் பிருகுவின் வம்சத்தில் உதித்தவர். அங்ஙனம் கூறும் அவர் சொல்லைச் சிறிதும் கவனியாமல் அவள், தான் தொடங்கிய தொழிலை நிறைவேற்றினாள். பின்பு, அவள் தன் செயலைக் குறித்துக் கவலையுற்றாளானாலும் அதனை ஒருவரிடமும் கூறவில்லை. கண்களையிழந்த முனிவர் கோபம் கொண்டார். உடனே அங்கே உள்ள யாவரும் மலஜலத்துன்ப மெய்தினர். 'இதற்கு என்ன காரணம்?' என வியப்பும் வருத்தமும் உற்ற அரசன் அதை அறிய விரும்பியவனாய்த் தன் அரண்மனைக்கு வந்து, "யாரேனும் முனிவர்க்கு அபராதம் செய்தார்களோ?'' என்று ஒருவர்பின் ஒருவராய் எல்லோரையும் கேட்டான்; எல்லோரும் தாம் தாமல்ல என்று சொல்லிவிட்டார்கள்.

இங்ஙனம் நெருங்கியுள்ளவர்களையும் அன்னையையும் நோக்கி, "தாயே! நான் உங்களுடன் வனத்திற்கு வந்து தோழியருடன் விளையாடும் பொழுது கொடிகளாற் சூழப்பெற்றதும் மின்னொளி வீசும் இருசிறு துளைகளுள்ளதுமாகிய ஒரு புற்றைப் பார்த்து மின்மினிப் பூச்சியென நினைந்து, சிறிய முள்ளின் முனையினால் அதைக் குத்தினேன்; பின் முள்ளை வெளியே எடுத்துப் பார்க்கும் பொழுது அதில் ஜலம் சிறிது படிந்திருந்தது; புற்றின் நடுவிலிருந்து ஆ! ஆ! என்னும் மெலிந்த குரல் ஒன்று கிளம்பியது; அந்தக் குரல் என்னவென்று அறியாதவளாய்ச் சந்தேகமடைந்து திரும்பினேன்'' என்று சொன்னாள். இதனைக் கேட்ட அரசன், "முனிவர்க் கிழைத்த அபராதத்தின் பயனிது'' என எண்ணி உடனே புற்றை அணுகினான். புற்றை அப்புறப்படுத்தி அதனுள் அமர்ந்து தன் மகளின் செயலால் துன்புறும் அம்முனிவரைத் தண்டம் போல் வணக்கம் செய்து, தோத்திரம் பண்ணினான். "முனிசிரேஷ்டரே! பேதைமை மிக்க என் பெண் செய்த பொல்லாச் செயலைப் பொறுத்தருள வேண்டும்; என்னைக் காத்தருள வேண்டும்'' என்று பிரார்த்தித்தான்.

வணக்கம் இரக்கம் இவை பொருந்திய சருயாதியை நோக்கி அவர், "அரசே! என்ன ஆச்சரியம். நான் ஒரு காலமும் கோபிக்க மாட்டேன். இது வரையிலும் யான் உங்களைக் கோபிக்கவில்லை. என்றாலும் தவம் செய்பவர்க்குத் தீமையிழைத்தல் அதற்குரிய

பயனை அளிக்காமற் போகுமோ? உயிரினும் மேலான கண்ணையிழந்த நான் எவ்வாறு தவவிரதங்களை அநுஷ்டிப்பேன்? யார் எனக்குப் பணிவிடை புரிவர்? இவைகளைச் சற்று நீர் ஆழ்ந்து யோசித்துப் பாரும்'' என்றார். இதனைக் கேட்ட அரசன், "தவக்கலனே! பொறுத்தருள்க; என்பால் பல வேலைக்காரர்கள் இருக்கிறார்கள். அவர்கள் தங்களுக்கு வேண்டியவைகளை யெல்லாம் என் ஆணையின் படி வேலை தவறாது புரிவார்கள். ஆகையால், என் அருமைக் குழந்தை இயற்றியதை மனத்தினின்று அகற்றி யருள் புரிக'' எனப் பலமுறை வேண்டினன்.

இதனைக் கேட்ட முனிவர், "அரசே! உம் பணியாளர் யான் விரும்பியபடி எப்படி வேலை புரிவார்? யான் மீண்டும் மனமுவந்து தவம் புரிவது, உம் புதல்வி ஸுகன்யையின் பணிவிடையாலன்றி வேறொன்றாலும் இயலாது; அங்ஙனம் யான் தவம் புரிவனேல் நீரும் உம்மைச் சேர்ந்தோரும் பிணி தீர்ந்து மனமுவந்து வாழ்வீர்; எனவே, இதனை நன்குணர்ந்து செய்யவேண்டியதைச் செய்வீராக'' என்றார்.

இதைக் கேட்டவுடன் அரசன், மிக்க கவலையுற்று ஒன்றும் விடையளிக்காமல், 'குருடும் முதுமையும் அவலட்சணமுமாகிய இவையெல்லாம் ஒருங்கே யமைந்த இவர்க்கு இளமையும் வனப்பும் வாய்ந்தவளாகிய என் அருமைப் புதல்வியை மனைவியாக ஈந்து எங்ஙனம் இருப்பேன்' என நினைந்து மந்திரிகளை அழைத்து, இதனை ஆராய்ந்தான்.

தனக்கு நேர்ந்த துன்பத்தைச் சொல்லி, "நான் என்ன செய்யலாமென்று நீங்கள் ஆலோசித்துச் சொல்லுங்கள்'' என்றனன். அரசனுக்கு நேர்ந்த துன்பத்தை எண்ணி அமைச்சர் பதில் கூறுவதற்குத் துணியாமற் கலக்கமுற்றார்கள். ஸுகன்யை, தந்தையின் அருகில் வந்து, "தந்தையே! என் நிமித்தம், நீங்களும் உங்கள் அமைச்சர் கூட்டமும் கலக்கமுறுவதை நான் பொறுக்கமாட்டேன். நானே அம்முனிவர்க்கு மனைவியாகி அவர் மனம்போல நடந்து எல்லோருடைய துன்பத்தையும் தொலைப்பேன்'' என்றாள். அதைக் கேட்ட அரசன், "என் அருமைப் புதல்வியே! காட்டிற் குடிசையில் வசிப்பவரும் முதியோரும் கோபம் மிக்கோரும் குருடருமாகிய அந்த முனிவர்க்கு, மாநகரில் அரண்மனையில் வாழ்பவளும் இளமைப் பருவத்தினளும் அழகிற் சிறந்தவளுமாகிய உன்னைக் கொடுத்து எவ்வாறு அமைதி பெறுவேன்! இதைவிட நான் பரிவாரத்துடன் உயிரை விடுவதும் அரசியலையே இழத்தலும் மேலானவை யன்றோ?'' என்றனன். "என்றால் நீங்களும் நம்மைச்

சார்ந்தோரும் கஷ்டப் படுதல் நீதியோ? நான் முனிவரை மணந்து, அவர் தவம் புரிவதற்குரிய பணிவிடைகளைச் சந்தோஷத்துடன் செய்து மகிழ்வுடன் வாழ்வேன்'' என அவள் மறுமொழி கூறினுள். பின்பு அரசன் தன் புதல்வியை அவர்க்கு மனைவியாம்படி ஈந்தான்; பல சிறப்புகளையும் வழங்கினன். ஆயினும் அவர் எல்லாவற்றையும் வெறுத்து மகளை மட்டும் ஏற்ருர். முனிவரும், மற்றுமெல்லோ ரும் மகிழ்வுற்றனர். மன்னன் அரண்மனைக்கு மீளும்பொழுது ஸுகன்யை தன் தந்தையைப் பார்த்து, "என்னிடமுள்ள உயர்ந்த ஆடை அணிகலன்களால் நான் அடையும் பிரயோஜனம் என்ன? முனிவர்க்குரிய மரவுரியை வேண்டிய அளவு கொடுங்கள். நான் இவருக்குச் செய்யவேண்டியவற்றைச் செய்து அருந்ததி அனசூயை என்பவர்களைப் போன்ற புகழைப் பெற்று உங்களுக்கும் புகழை உண்டாக்குவேன்'' என்ருள்.

மன்னனும் மகள் மனப்படியே வேண்டியவற்றை அளித்து மனச் சோர்வுடன் நகரை யடைந்தான்.

ஸுகன்யை, கால்கழுவல், பல்துலக்குவித்தல், வெந்நீராட் டல், மான்றோலை யுடுத்துதல், நாட்கடனுக்குரியவைகளைச் சித்தப் படுத்தி யறிவித்தல், நல்ல ஆஸனத்தில் அமரவைத்தல், முற்றும் முதிர்ந்த கனிகளையும் நன்ருகச் சமைத்த நீவார உணவையும் உண் பித்தல், தாம்பூலம் கொடுத்தல், படுக்கையிற் படுக்க வைத்தல், கால் வருடுதல், அருகில் அமர்ந்து பத்தினிப் பெண்கள் செய்யவேண்டிய தர்மங்களை அவர் சொல்லக் கேட்டல், அவர் உண்டு மிகுந்த பழம் முதலியவற்றை அமுதமெனக் கருதி உண்டல், விசிறியால் விசிறுதல், ஆசிரமம் வந்த விருந்தினரை முறைப்படி உபசரித்தல் முதலிய காரியங்களைச் சலிப்பின்றியும் தவறுமலும் விழிப்புடனும் புரிந்து வந்தனள். நீண்ட நாட்கள் இங்ஙனமே நடந்தன. ஒரு சமயம் அசுவினி தேவரிருவரும் குளத்தில் நீராடிச் செல்லும் அவளைப் பார்த்து அவள் வனப்பில் ஈடுபட்டு, "பெண்ணே! நீ யார்? உன் கணவன் யார்? பெற்ருேர் யாவர்?'' என வினவ, அவள் தன் வரலாற் றினைச் சுருங்கச் சொன்னுள். அதைக் கேட்ட அவ்விருவரும் வருத்தமும் வியப்புமுற்று அவளைப் பார்த்து முனிவரைத் துறந்து தங்களுள் ஒருவரை மணந்து இன்புற்று வாழும்படி வேண்டினர். அவள் தர்ம வாக்கியங்களைச் சொல்லி மறுத்தனள்.

பின்பு அவர்கள், "நாங்கள் தேவ வைத்தியராதலின் உன் கண வனின் குருட்டைப் போக்கி எங்களை யொத்த உருவையும் அழகை யும் அடையச் செய்வோம். அப்பால் வேறுபாடின்றி விளங்கும்

எங்கள் மூவருள் ஒருவரை விரும்புவாயாக" என்றனர். அதனை அப்படியே ஸுகன்யை சியவனருக்கறிவித்தாள். அதைச் செவி யுற்ற முனிவர், "அவர்களை இங்கே அழைத்து வா" என்றனர். கட்டளைப்படியே அழைத்து வரப்பட்ட அவர்கள், "பெண்ணே! எம்மை யொத்த உருவைப் பெற விரும்பும் நின் கணவன் வாவியின் நீரில் மூழ்கவேண்டும்" என்றனர். இதைக்கேட்ட முனிவரும் நல்ல உருவத்தை அடையும் ஆசையினால் தூண்டப்பட்டுச் சரேலென நீரிற் பாய்ந்தார். தேவரும் நீருட் புகுந்தனர். சிறிது நேரத்திற்குள், ஒத்த அளவும், விளங்கும் உடலும், இளமையும், பருத்த கை கால் முதலிய உறுப்புக்களும், செவியிலும் கைகளிலும் பொன்னணியும், வெண்பட்டு விளங்கும் மேனியுமுடைய மூவர் நீரினின்றும் வெளியில் தோன்றினர். தோன்றி, "பெண்ணே! எங்களுக்குள் ஒருவரை விரும்பி மணப்பாயாக" என்றனர்.

இதைக்கேட்ட அவள் ஐயமும் நடுக்கமு முற்றாள்; கணவனைத் திண்ணமாய்க் கண்டுகொள்ள இயலாமல் அச்சமுற்றவளாய் ஸ்ரீ பார்வதி தேவியை மனத்தால் நினைத்தாள். "எல்லா உலகிற்கும் அன்னையே! அருள்க. படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் மூன்று தொழிலினையும் முறையே இயற்றும் மூவர்க்கும் நாமகள், பூமகள், மலைமகளாக அருகிலிருந்து இடையூறின்றி அத்தொழில் களை நடத்துவிக்கும் நீ, இங்கே வந்து அடியேனுக்கு உற்ற மயக் கத்தை அகற்றி என் கணவரை நான் தெரிந்தெடுக்கும் ஆற்றலை யளித்தல் வேண்டும்" என வேண்டினாள்; அம்பிகையின் அருளால் சியவனரையே நன்றாகத் தெரிந்துகொண்டனள். ஸுகன்யையின் இடத்துத் தேவிக்குள்ள அருளையும் அவளது கற்பின் பெருமையை யையும் வியந்து, தேவர் முனிவரிடம் விடைபெற்றுச் செல்ல ஆரம் பித்தனர். முனிவரும் அவர்கள் தமக்குச் செய்த நன்றியைப் பாராட்டி, "பெரியீர்! நீர் விரும்பும் வரத்தை என் தவப்பெரு மையால் அளிப்பேன்; வேண்டிக்கொள்க" என்றார். அவர்கள், "யாம் எல்லா விருப்பமும் நிரம்பப் பெற்றவர்கள்; இந்திரன் யாங்கள் மருத்துவத் தொழில் மேற்கொண்டோமென்று வேள்வியில் எமக்குச் சோமபானமில்லை யென்றாக்கினன்; அதனைப் பருகும் அவா அதிகமாக உளது; இனிமேல் அதனைப் பருகுவிப்பீராக" என இயம்பினர். "சருயாதி செய்யவிருக்கும் வேள்வியில் யான் உங்கள் விருப்பம் நிறைவேறச் செய்வேன்" என்று கூறினர் முனிவர். அதைக்கேட்ட அவர் மகிழ்ச்சியோடு தம்முலகடைந்தனர்.

# யுத்தத்தை நிறுத்த

ந. இராமசாமி

குறுகிய நோக்க முள்ளவர்கள் எங்கள் ஊர், உங்கள் ஊர் என்றெல்லாம் சொல்லிச் சண்டை போட்டுக் கொண்டிருப்பார்கள். பரமேசுவரனுக்கு இதெல்லாம் கொஞ்சங் கூடப் பிடிக்காது. ஆசியா கண்ட விஷயம் ஐரோப்பா கண்ட விஷயம் என்று கண்டம் வாரியாகப் பேசினுல் கூடச் சகிக்க மாட்டான். உலகமே அவன் ஊர்; உலக விஷயங்களே அவன் விஷயங்கள்; உலகத்திலுள்ள தெல்லாம் அவனுடையது; அவனுடையதெல்லாம் உலகத்தினரு டையது. அகில உலக நடவடிக்கைகள் தவிர மற்றெதிலும் அவன் சிரத்தையுறுவதில்லே. உலகப் பொருளாதார நிலேமை, உலக சமா தானம், உலக சகோதரத்வம், உலக வியாபாரம் இவை போன்ற விஷயங்களுக்குக் கீழ்ப்பட்ட எந்த அற்ப விஷயத்தையும் அவன் லக்ஷியஞ்செய்து பேசுவதில்லே. வேண்டுமானுல் சந்திர கிரகத்தி லுள்ள மலேகளேப் பற்றியோ, செவ்வாய்க் கிரகத்திலுள்ள மனிதர் களேப் பற்றியோ பேசுங்கள்; அவன் எத்தனே மணி நேரமானுலும் சந்தோஷத்துடன் கேட்டுக் கொண்டிருப்பான். ஆனுல் உள்ளூர் விஷயங்கள்? சே! அவை யாருக்கு வேண்டும்?

பரமேசுவரனுக்கு அன்று பத்திரிகை வரவில்லேயாதலால் அனு மந்தராவ் வீட்டில் போய் வாசித்து வரலாமென்று போனுன். அங்கே அப்பளாச்சாரி, "குப்பை மேடு கும்பாபிஷேக வைபவம் என்ற செய்தியை வாய் விட்டுப் படித்துக் கொண்டிருந்தார். "இங்கே சிறிது பத்திரிகையைக் கொடும். ஆயுதப் பரிஹாரண மகா நாட்டு நடவடிக்கைகள் என்னவாயிற்றென்று பார்த்து விட்டுக் கொடுக்கிறேன். உங்கள் குப்பைமேடு கும்பாபிஷேகத்தைச் சாவ காசமாகப் படித்துக் கொள்ளலாம்'' என்று பரமேசுவரன் பத்திரி கையை வாங்கிப்படித்தான்.

"ஆயுதப் பரிஹாரண மகாநாடு என்றுல் என்ன?'' என்று கேட்டார் பக்கத்திலிருந்த அப்பளாச்சாரி.

"அப்படிக் கேளும் சொல்கிறேன். சும்மா குப்பைமேடு, புளிச்சக்காடு, வேப்பம்பட்டி சமாசாரங்களேயே படித்துக் கொண்

டிருக்காதிர்கள். இப்பொழுது ஸர்வதேசச் சங்கம் என்று ஒன்று இருக்கிறது அல்..."

"யார் இல்லை யென்று சொன்னார்கள்?" என்று கேட்டுக் கொண்டே ஆறுமுகஞ் சேர்வை வந்து சேர்ந்தார்.

"குறுக்கே பேசாதேயும். அந்தச் சங்கத்தினால் ஒரு பயனுமில்லை. பாருங்கள்! ஜப்பான் சீனாவுடன் வலுவிலே யுத்தத்துக்குப் போயிற்று. அதற்காக ஸர்வதேசச்சங்கம் ஜப்பானை என்ன செய்து விட்டது? ஒன்றுமில்லை."

"அந்தச் சங்கம் என்ன தான் செய்யக் கூடும்?" என்று கேட்டார் அனுமந்தராவ்.

"என்ன செய்யக் கூடுமா? ஏன் ஜப்பானுடன் யுத்தஞ்செய்து அது சீனாவுடன் யுத்தஞ் செய்வதை நிறுத்தக் கூடாது?"

"யுத்தத்தை நிறுத்த யுத்தம் செய்வதாமே?" என்று ஆச்சரியப்பட்டார் அப்பளாச்சாரி.

"இது 'ஹோமியோபதி' முறையைச் சேர்ந்தது. உஷ்ணத்துக்கு உஷ்ணம், குளிர்ச்சிக்குக் குளிர்ச்சி கொடுத்து வியாதி நிவாரணஞ் செய்வது போல யுத்தத்தையும் யுத்தத்தால் நிறுத்த முயலுகிறார்கள். ஆயுதப் பரிஹரண மகாநாட்டில் எல்லாத் தேசங்களும் யுத்த ஆயுதங்களைக் குறைத்துவிட வேண்டுமென்று ஏற்பாடு செய்யப்போகிறார்களாம். ஆனால் இதனாலெல்லாம் காரியம் முடியுமா?"

"யுத்தக் கப்பல்கள், விமானங்கள், துப்பாக்கிகள், வெடிகுண்டுகள் ஒன்றுமே இல்லாவிட்டால் பின் எப்படிச் சண்டை போடுவார்கள்?" என்று அப்பளாச்சாரி குறுக்கிட்டுக் கேட்டார்.

"துப்பாக்கி இல்லாவிட்டால் முஷ்டியினால் சண்டை போடுவார்கள். முஷ்டியில்லாவிட்டால் காலினாலும் காலில்லாவிட்டால் பல்லினால் கடித்தும் யுத்தஞ் செய்வார்கள். பல்லில்லா விட்டால் தலையினாலும்..."

பரமேசுவரன் ஆவேசம் பிடித்தவனைப்போல் பேசிக்கொண்டே போனதால் ஒருவரும் அவனைத் தடுத்துக் கேள்வி கேட்கவில்லை. அவன் பெரிய பிரசங்கத்துக்குத் தொடங்கி விட்டான்:

"ஆம்! ஆயுதங்களில்லாமற் செய்வதனால் மட்டும் யுத்தத்தை நிறுத்திவிட முடியாது. யுத்தத்தை நிறுத்துவதற்குத் தக்க உபாயம்

எனக்குத் தெரியும். யுத்தத்துக்குக் காரண புருஷர்கள் யாரென்று நினைக்கிறீர்கள்? ஒவ்வொரு தேசத்திலுமுள்ள பார்லிமெண்ட் அங்கத்தினர்கள்தாம். யுத்தஞ் செய்யலாமென்று அனுமதி கொடுப்பவர்கள் இவர்கள்தாமே. யுத்தம் ஆரம்பித்த மாத்திரத்தில் இந்தப் பேர்வழிகளை யெல்லாம் யுத்த களத்துக்கு அனுப்பி முன்னணியில் நின்று சண்டை செய்யச் சொல்ல வேண்டும். அப்படிச் செய்வதென்றால் ஒருகால் உலகத்தில் யுத்தங்களே இல்லாமற் போய் விடலாம். ஆனால் எனக்கு இதிலும் நம்பிக்கையில்லை. பொதுவாக யுத்தங்களுக்கு ஒவ்வொரு மனிதனும் ஜவாப்தாரியாவான். அவனிடமுள்ள கோப உணர்ச்சி, துவேஷ உணர்ச்சி, மிருக உணர்ச்சியெல்லாம் அடியோடு ஒழிய வேண்டும். அவன் அன்பு மயமாய்...''

பக்கத்து வீட்டுக்குள்ளிருந்த எனக்கு இவ்வளவுதான் காது கேட்டது. அடுத்த நிமிஷம் வாசலில் ஒரே இரைச்சலாயிருந்தது. வாசலில் வந்து பார்த்தேன். பரமேசுவரனையும் ஆறுமுகஞ்சேர்வையையும் தனித்தனியே வண்டியிலேற்றிக் கொண்டிருந்தார்கள். விஷயமென்னவென்று விசாரித்தேன். பரமேசுவரன் யுத்தப் பரிஹாரணத்தைப் பற்றிப் பிரசங்கஞ் செய்து கொண்டிருந்தானல்லவா! அப்பொழுது அவன் தன் மடிமீது வைத்திருந்த பத்திரிகையை அவனைக் கேட்காமலேயே ஆறுமுகஞ் சேர்வை எடுத்துப்படிக்க ஆரம்பித்து விட்டாராம். அதற்காகப் பரமேசுவரன் பிரசங்கத்தை நிறுத்தி விட்டு அவருடன் சிறிது சண்டை போட்டானும். அவ்வளவு தான்! வேறொன்று மில்லை!

---

## குறள்

இட்டிலி என்ப தினியவுண மற்றதனை
ஒட்டி நுகர்வதுசாம் பார்.

விருந்தின் பயனெல்லாம் வீணாகும் காபி
அருந்தத் தராமல்விட் டால்.

மோட்டாரை ஊர்தல் உடற்கின்பம் மூண்டஅதை
ஓட்டுதல் இன்பம் உளக்கு.

# அன்பின் தியாகம்

காதம்பரி

**ரா**கவன் ஒரு கதர்க்கடை வைத்திருந்தான். தன் ஊரி லுள்ளவர்களுக்குச் சுதேசிப் பற்று உண்டாக்கவேண்டுமென்பது அவன் கருத்து. அவனுக்குத் தகப்பனர் கொஞ்சம் சொத்து வைத்துவிட்டுப் போயிருந்தார். ஆகையால் சாப்பாட்டிற்காக உழைக்கவேண்டிய அவசியமில்லை. பொழுதுபோக்கு ஒன்று வேண்டுமல்லவா?

இவன் கடையில் உட்கார்ந்திருப்பதைப் பார்த்து இவன் சிநேகிதர்களும் அங்கு வந்து கூடலானுர்கள். சிநேகிதர்களின் ஸ்வபாவப்படி அவர்கள் எவை எவை எவ்விதம் செய்யப்பட வேண்டும் என்று தாராளமாகப் புத்திமதி கூறுவார்கள்; உதவியும் புரிவார்கள். ராகவன் அவர்களைத் திட்டுவான். அவர்கள் இவனைப் பரிகசிப்பார்கள். காலம் சந்தோஷமாகக் கழியும்.

இதில் ஒரே ஒரு குறை. ராகவன் மனைவி ஜானகி, கதர் அணிய மறுத்துவிட்டாள். நல்ல வார்த்தைகள் சொல்லிப் பார்த்தான்; "தேசத்தின் க்ஷேமத்திற்காகச் செய்" என்முன்; "எனக்காகக் கட்டு" என்முன். ஒன்றும் பலிக்கவில்லை.

"தேசம் எக்கேடடைந்தால் எனக்கென்ன?" என்று அவ்வம்மணி நாஸூக்காக விடையளித்தாள். "திரைபோலிருக்கும் இதை நான் உடுத்த மாட்டேன்; என் குழந்தைகளுக்கும் உடுத்த மாட்டேன்" என்று சொல்லி விட்டாள்.

"பட்டுப் புடவை வாங்கிக் கொடுக்கமாட்டேன்" என்று பயமுறுத்தினுன்.

"வெகு மோசம்! இவ்வளவு காலம் வாங்கிக்கொடுத்த மாதிரி என் தாயார் தகப்பனர் இன்னமும் வாங்கிக் கொடுப்பார்கள்."

"நான் கட்டாயப்படுத்துகிறேன்."

"என்னைக் கட்டாயப்படுத்த உங்களுக்கு என்ன நியாயம்? உங்களை ஜரிகை வேஷ்டி உடுத்திக்கொள்ள வேண்டுமென்று நான்

கட்டாயப்படுத்துகிறேனு? அப்படிச் சொன்னல் நீங்கள் கேட்பீர்களா?''

இதற்குமேல் என்ன சொல்வது? இது விஷயத்தில் நிர்ப்பந்தம் செய்வதற்கு 'நியாயம்' கிடையாது அல்லவா?

தன் கணவன் வாயை அடக்கி விட்டோமென்று ஜானகிக்குக் கொஞ்சம் பெருமையே. ஆனுலும் அவன் வாடின முகத்தைப் பார்க்கும் சமயமெல்லாம் அவள் வயிற்றில் சங்கடம் ஏற்படலாயிற்று.

"கதர்ப் புடவை கனமாக இருக்கிறது. சீக்கிரம் அழுக்காய் விடுகிறது'' என்று மீண்டும் மீண்டும் தனக்குள் சொல்லிக்கொண்டாள். "நான் சொல்வதில் தப்பு ஒன்றுமில்லை. இந்தப் புடவையும் சுதேசி பெங்களூர்ப் புடவை யல்லவா? நான் ஒருத்தி கதர் கட்டினுல் என்ன, கட்டாவிட்டால் என்ன? இதனுல் தேசத்தின் க்ஷேமத்தில் விசேஷ வித்யாசம் ஏற்பட்டுவிடாதே!''

இவ்விதமெல்லாம் மனத்திற்குள் தர்க்கித்தாள். காரணங்கள் மிகவும் சரியானவையாகப் புலப்பட்டன. ஆனுலும், இவள் மனத்திலுள்ள அதிருப்தி மட்டும் நீங்கவே யில்லை. கணவன் முகத்தைப் பார்க்கும் சமயமெல்லாம் சங்கடம் அதிகரித்தது.

"என்னை நிர்ப்பந்திக்க உங்களுக்கு என்ன அதிகாரம்?'' என்று ராகவனை மறுபடியும் கேட்டாள்.

"ஒன்றும் இல்லை. நான் நிர்ப்பந்திக்கவில்லை'' என்று அவன் கூறினுன்.

"முகத்தைக் கடுகடுப்பாக வைத்துக் கொள்வானேன்?''

"நீ உன் தேகம் முழுவதும் ஜரிகைப் புடவையைச் சுற்றிக் கொண்டு விகாரமாக வைத்திருக்கிருய். அதைப்பற்றிச் சொல்வதற்கு எனக்கு அதிகாரமில்லை என்கிருய். என் முகம் எனக்குச் சொந்தமானது. அதை என்னிஷ்டப்படி வைத்துக் கொள்வேன். அதைப்பற்றிச் சொல்வதற்கு உனக்கு அதிகாரம் கிடையாது'' என்று அவன் சொன்னுன்.

ஸதிபதிகளின் ஸல்லாப வார்த்தைகள் இதனுடன் முடிந்தன.

* * * *

அன்று மத்தியானம், முன்பு இவர்கள் வீட்டில் வேலை செய்து கொண்டிருந்த வள்ளி என்ற வேளாளப் பெண், ஜானகியைப் பார்க்க வந்தாள். அவள் நான்கு மாதத்திற்கு முன் மணம் புரிந்துகொண்ட

தால் வேலையிலிருந்து நின்று விட்டாள். இருந்தும் எஜமானியிடம் பிரீதியுள்ளவளாகையால் அடிக்கடி வந்து போவதுண்டு.

" என்ன சமையல் செய்தாய்?" என்று ஜானகி அவளை வினவினாள். விவாகமானது முதல் நாளுக்கு நாள் அந்தப் பெண்ணின் முகத்தில் சந்தோஷம் அதிகரித்து வருவதைப் பார்த்த ஜானகிக்கு அது ஆச்சர்யமாகவும் வேடிக்கையாகவும் இருந்தது.

"சோறு செய்து கீரை போட்டுக் கொளம்பு வெச்சேன்."

"உனக்குக் கீரை பிடிக்காது என்பாயே? இந்த வீட்டில் கீரைக் குழம்பு மிகுந்ததை வாங்கிக் கொள்ளமாட்டேனென்பாயே?"

"ஆமாங்க. எனக்குப் பிடிக்காது."

"அப்படியானால் ஏன் அதைச் செய்தாய்?"

"அவுங்களுக்கு அதுதான் ரொம்பப் பிடிக்கும்."

"இந்த வாரத்திற்குள் நாலு நாள் இங்கே வந்திருக்கிறாய். நாலு தடவையும் 'கீரைக் கொளம்பு செய்தேன்' என்கிறாய். நீ என்ன தின்கிறாய்?"

"சோறு இருக்குதல்லவா?"

"வெறும் சோற்றைத் தின்பாயா?"

"கொஞ்சம் மோர்த்தண்ணி வாங்கிக் குடிப்பேன்."

"அட ஜடமே! உனக்கும் அவனுக்கும் பிடித்ததாகக் கத்திரிக்காய், வெண்டைக்காய் ஏதாகிலும் போட்டுக் குழம்பு செய்து கொள்வதற்கென்ன?"

"அவுங்களுக்கு அது ரொம்ப இஸ்டங்க" என்று ஒரு அசட்டுச் சிரிப்புடன் அந்தப் பெண் கூறினாள். அந்தச் சிரிப்பிலிருக்கும் சந்தோஷத்தைப் பார்த்த சமயம் ஜானகிக்கு அவளை அறியாமல் அந்தக் குட்டியின்பேரில் பொறாமை உண்டாயிற்று. வெறும் சோற்றைத் தின்னும் இந்தக் குட்டிக்கு இவ்வளவு சந்தோஷமா!

"அவன் இஷ்டத்தைத்தான் நீ செய்வாயா? உன் இஷ்டம் உனக்குக் கிடையாதா? உனக்குப் பசிக்காதா?"

"இல்லெங்கோ. அவுங்களுக்கு அதுதான் இஸ்டம். அவுங்க இஸ்டப்படி நான் செய்திடுவேன்."

"அவ்விதம் செய்யாவிட்டால் அடிப்பானா?"

"அதெல்லாம் ஒன்றுமில்லை. திட்டாது கூடக் கிடையாது. நமது கஸ்டத்தை நான் பார்க்கிறதில்லை. அவுங்க இஸ்டப்படி செய்துடுவேன்" என்று கூறி மறுபடி அந்த அசட்டுச் சிரிப்புச் சிரித்தாள். ஜானகிக்குப் பொறுமை தாங்க முடியவில்லை.

"சரி. போ. துலை! நீ ஒரு முழு முட்டாள்" என்று அவளைத் திட்டி அனுப்பினுள்.

* * * *

ஜானகி பெட்டியைத் திறந்து தன் நகைகளை யெல்லாம் எடுத்துப் பார்த்தாள். புடவைகளை எல்லாம் எடுத்துப் பார்த்தாள். எல்லாம் அழகாக இருந்தன. ஆனல் அவளுக்கு ஒன்றும் சிறிதும் சந்தோஷத்தைக் கொடுக்கவில்லை. கணவனின் வாடின முகமே கண்களுக்கு எதிரில் தாண்டவமாடிற்று. "அவுங்களுக்கு அதுதான் இஸ்டம்" என்ற பைத்தியக்காரச்சொல் காதில் ஒலித்துக்கொண்டே இருந்தது.

"என் இஷ்டப்படி செய்ய எனக்கு அதிகாரம் உண்டு, உண்டு, உண்டு" என்று திரும்பத் திரும்ப ஜபம் செய்துகொண்டே இருந்தாள்.

* * * *

அன்று மாலை ராகவன் வீட்டிற்கு வந்த சமயம் தன் மனைவி கதர்ப்புடவை கட்டியிருப்பதைப் பார்த்து ஆச்சரியப்பட்டான். முகம் மலர்ந்து புன்னகை கிளம்பிற்று. அதைக் காணுகையிலேயே ஜானகியின் உள்ளம் குளிர்ந்தது. ஆனல் அதை வெளிக்காண்பித்துத் தன் கௌரவத்தைக் குறைத்துக் கொள்ளுபவளல்ல அவள்.

சிரமப்பட்டுத் தன் முகத்தைக் கடுமையாக வைத்துக்கொண்டு, "நீங்கள் சொன்னதற்காக நான் செய்யவில்லை, தெரியுமல்லவா? வெயில் தாங்கவில்லை. பட்டுப் புடவை உடம்பைத் தகிக்கிறது. அதற்காகக் கதர் கட்டினேன். உங்கள் வார்த்தைக்குப் பயப்படவில்லை" என்றுள்.

முன்பு திரைபோலிருந்த கதர் எவ்விதம் நீலகிரியின் குளிர்ச்சியை உண்டாக்கும் சக்தி பெற்றதென்ற மர்மத்தை விளக்க ராகவன் முயலவில்லை.

# சோதிடப்புலி : : : : சோணசலம்

## சிரிப்பின் சிறப்பு

டி. எஸ். இராமச்சந்திர ஐயர்

சென்ற தீபாவளியன்று மாலை நாலு மணிக்குக் கபாலீசுவரர் கோவிலுக்குப் போகலாமென்றெண்ணி வெளிக் கிளம்பினேன். என் நண்பன் சோணசலம் எதிரில் வரக்கண்டு கொஞ்சம் தயங்கி நின்றேன். அதைக் கண்ட அவன், "நானும் கோவிலுக்குத்தான் போகிறேன்; தயங்க வேண்டாம் வா" என்றான்.

"நீ கோவிலுக்குப் போவதானல் நானும் அங்குப் போக உத்தேசத்திருப்பதாக நீ எப்படிச் சொல்லுகிறாய்?"

"அதுகூடத் தெரியாமலா நான் சோதிடம் சொல்லுகிறேன்."

"அடே! இதுவும் ஒரு வித்தையா! நல்லது; நீ எதற்காகக் கோவிலுக்குப் போகிறாய்."

"என்ன உனக்கு உலக வர்த்தமானம் ஒன்றும் தெரியாது போலிருக்கிறது? பத்திரிகை கூடப் படிப்பதில்லை போலும்! நான் இன்றைக்குக் கோவில் மண்டபத்தில் சிரிப்பின் சிறப்பைப் பற்றி உபந்நியாஸம் செய்யப் போகிறேன்."

"பலே! யாரப்பா உன்னை உபந்நியாஸம் செய்யும்படி கேட்டுக் கொண்டார்கள்? ஆர் அக்கிராசனாதிபதி?'

"நீ இந்த உலகிலில்லைபோலும்! களியர் கழகத்தார் கேட்டுக் கொண்டார். அக்கழகத்துத் தலைவர் ஆனந்தமயர் அக்கிராசனம் வகிப்பார். நாழிகையாய் விட்டது. சரியாய் 5-மணிக்கு அங்கிருக்க வேண்டும். போகலாம் வா."

"சரி வருகிறேன். அங்கு உன் பொய் மூட்டைகளை அவிழ்த்து உதறுவாய் போலும்! போவோம் வா."

"ஆனல் வண்டியில் ஏறு" என்று கூறினவுடன் நானும் ஏற, இருவரும் கோயில் சென்றடைந்தோம். அங்கு மண்டபத்தில் கழகத்தவரும் பின்னும் பலரும் பெருங்கூட்டமாக உட்கார்ந்திருந்

தார்கள். நாங்கள் சென்றவுடன் எல்லாரும் கை கொட்டினர். பிறகு சோணசலம் மேடையில் போய் உட்கார்ந்தான். நானும் பக்கத்தில் உட்கார்ந்தேன். அப்பொழுது அவனருகிலிருந்த கழகத் தலைவராகிய ஆனந்தமயர் எழுந்து பேசத் தொடங்கினர். அவர் நின்றவுடன் அவாது பின்னிடைந்த நெற்றியும், முன்னெழுந்த கண் களும், தொங்கிய உதடும், தோன்றிய பற்களுமே சபையோர் களுக்கு நகை விளைத்தன. சபை அமைதியடைந்தவுடன் அவர் பின் வருமாறு பேசினர்:

"நண்பர்களே! நாம் இன்று இங்குக் கூடியிருக்கும் காரணம் இன்னதென்பது எல்லாருக்கும் தெரிந்ததே. எனது நண்பர் சோணசலத்தையும் அவாது நகை விளைக்கும் திறமையையும் அறி யாதார் ஆருமில்லை. அது நிற்க; என்னை இக்கழகத்தின் தலைவராகத் தேர்ந்தெடுத்ததற்கும் இன்று அக்கிராஸனம் வகிக்கும்படி செய்த தற்கும் காரணம் கேட்பின், அது என் பெயரினாலேயே விளங் கும். நான் பிறந்தபொழுது எனது உருவத்தைக் கவனித்த பெரி யோர்கள், இவன் தனது உருவங்களால் அனைவருக்கும் ஆனந்தம் விளைப்பவன் என்க்கருதி ஆனந்தமயனெனப் பெயரிட்டார்களாம். அதன் உண்மை நான் இன்று எழுந்து நின்றவுடன் நீங்கள் எல்லாரும் நகைத்ததினாலேயே விளங்கும். நீங்கள் நண்பர் சோண சலத்தின் பேச்சைக் கேட்கப் பேராவலுடையவர்களாதலால் நான் அதற்குத் தடையாயிருப்பது தகாது. என்ன சோணசலம்! நீர் ஆரம்பிக்கலாம்."

இவ்வாறு ஆனந்தமயர் கூறி நிறுத்தியவுடன் சோணசலம் எழுந்து பின்வருமாறு பேசத் தொடங்கினன்:—

"நண்பர்களே! ஆனந்தமயர் அன்பு மிகுதியால் என்னைப் பற்றிக் கூறியவை எனக்குத் தகாதவைகளென்பது நானறிவதல்லாது நீங்களும் அறியாததல்ல. அது நிற்க; இக் களிச்சிறப்பு வாய்ந்த கழகத்தினர் என்னை இப்பெரிய விஷயத்தைக் குறித்து உபந்நியாஸம் செய்யும்படி நியமித்ததற்கு நன்றி பாராட்டக் கடமைப் பட்டவனா யிருப்பினும் இப்பெரும்பாரத்தை என்மீது வைத்ததை எண்ணி வருந்துகிறேன். ஆனல் நான் ஏற்றுக்கொண்டது என் குற்றமாத லால் அதை எண்ணி வருந்துவதிற் பயனில்லை. இன்று நாம் எடுத்துக்கொண்ட விஷயம் 'சிரிப்பின் சிறப்பு'. சிரிப்பு என்பதற்கு நகை யென்று பொருள். நகை யென்பது நகு என்னும் பகுதி அடியாகப் பிறந்த சொல். நகுதல் என்றால் விளங்குதல்,

பிரகாசித்தல். அதிலிருந்து உள்ளத்தின் பாவங்களை விளங்கச் செய்யும் சிரிப்பிற்கு நகையென்று பெயர் வந்தது.

ஆதலால் நகை என்பது எல்லா விதமான ரஸானுபவத்தையும் விளக்கிக் காட்டுமென்பது ஏற்படுகிறது. ஒருவேளை நீங்கள், இதென்ன ? சோகம் கருணை முதலிய ரஸங்களைக்கூடச் சிரிப்பு தோற்றுவிக்குமாவென்று சந்தேகிக்கலாம். அவ்வாறு கூடுமென் பதை எடுத்துக் காட்டுவதே எனது முயற்சியாகும். ஆங்கிலக் கவி யொருவர் நமது சந்தோஷமும் கண்ணீரோடு கூடியதென்று கூறி யிருக்கிறார். நம்மவர்கள் நமது பெருந்துக்கமும் சிரிப்போடு கூடிய தென்று சொல்லுவார்கள். இது பற்றியே சர்வ சங்கார காலத்தில் ஈசுவரன் ஆனந்தத் தாண்டவம் செய்வதாகச் சொல்லுகிறார்கள்.

இத்தகைய நகையின் சிறப்பு, தமிழில் ஆதியிலக்கணமாகிய அகத்தியத்தில் பின் வருமாறு கூறப்பட்டிருக்கிறது :

“நகையெனப் படுவது அறுவகைப் படுமே
அவைதாம்,
சரச நகையும் சல்லாப நகையும்
குடில நகையும் கோப நகையும்
வெறிகொள் நகையும் வேதனை நகையும்
எனவிவை யாகு மென்மனார் முனிவர்.”

பிற்காலத்தில் ஒன்பது ரஸங்களாகக் கூறப்பட்டவைகள் இந்த ஆறு வகைக்குள் அடங்குகின்றன. ஆனால் இங்கு இவ்வாறு எல்லா ரஸானுபவத்திற்கும் சிரிப்பு வெளித்தோற்றமெனக் கூறுவதற்கு இலக்கியங்களில் ஆதாரமிருக்கிறதா என்ற கேள்வி ஏற்படலாம். இதற்குச் சமாதானமாகச் சில உதாரணங்களை எடுத்துக் காட்டு வேன்:

முதலில் சரஸ நகை என்பதில் சரஸமென்பது சிருங்காரத் தையே குறிக்கும். இந்த ரஸத்தை மனத்தினாலனுபவிப்பதைக் குறிப்பாலுணர்த்துவதற்குச் சிரிப்பு உபயோகமாகுமென்பதைப் பின்வரும் கவியிற் காணலாம்:

“ஓதிம மொதுங்கக் கண்ட உத்தமன் உழைய ளாகும்
சீதைதன் நடையை நோக்கிச் சிறியதோர் முறுவல் செய்தான்
மாதவள் தானும் ஆண்டு வந்துநீர் உண்டு மீளும்
போதகம் நடப்ப நோக்கிப் புதியதோர் முறுவல் பூத்தாள்”

கோதாவரிக் கரையில் பஞ்சவடியில் இராமனும் சீதையும் பரஸ்பரம் அழகிலீடுபட்டு ஆனந்தமாய்ச் சஞ்சரிக்குந் தன்மையை வர்ணிக்கும்

கவி இது. அன்னங்கள் நடப்பதைக் கண்டு சீதையின் நடையைப் பார்த்து இராமன் சிரித்தான் என்றும், அங்கு வந்து நீருண்டு மீளும் ஆனை நடக்கக் கண்ட சீதை இராமனை நோக்கிச் சிரித்தாளென்றும் கூறியிருக்கிறார் கம்பர். ஆகவே சிங்கார ரஸானுபவத்தைச் சிரிப்பு வெளிப்படுத்து மென்பது கண்டோம்.

இனிச் சல்லாப நகையென்பது அற்புதம் ஆவியம் முதலிய சுவைகளைக் காட்ட நகைப்பதாகும். இது உலகில் பிரசித்த மாதலால் உதாரணம் கூறுவது அவசியமில்லை. குடில நகை யென்பது குச்சிதமான செய்கை கண்டு நகைப்பது. இராமன் மேற் காதல்கொண்ட சூர்ப்பநகை அவனையடைய வந்த சீதையை நோக்கி, 'இவள் மாயம் வல்ல வஞ்சனையரக்கி; இவளை எய்திடாமல் தடுத்தி' என்று கூறியவுடன் அச் சூர்ப்பநகையினது குச்சிதமான செய்கையைக் கண்டு இராமன் சிரித்ததாகக் கவி பின் வருமாறு கூறுகிறார்:

"ஒள்ளிதுன் னுணர்வு மின்னே உன்னையா ரொளிக்கு மீட்டார்
தெள்ளிய நலத்தி னுலுன் சிந்தனை தெரிந்த தம்மா
கள்ளவல் அரக்கி போலாம் இவளைநீ காண்டி யென்னு
வெள்ளிய முறுவல் முத்தம் வெளிப்பட வீரன் நக்கான்."

கோபநகையென்பது கோபத்தையும் வீரத்தையும் குறிப்பதற் குரியது. இதைக் கவி பின்வரும் பாடலில் வருணிக்கிறார்:

"நகைதிறந் திலங்கப் பொங்கி நன்றுநன் றென்ன நக்கு
விசைபிறந் துருமு வீழ்ந்த தென்னவோர் தூணின் வென்றி
இசைதிறந் தமர்ந்த கையால் எற்றினுன் எற்ற லோடும்
திசைதிறந் தண்டங் கீறிச் சிரித்தது செங்கட் சீயம்."

எங்கும் நிறைந்துள்ளானென நீ கூறும் அரியினை இத்தூணிடைக் காட்டென்று இரணியன் கேட்கப் பிரகலாதன், 'எதிரிலுள்ள தூணிலுளன், நீ காணுதி விரைவின்' என்று கூறலும், நன்றெனச் சிரித்து அத்தூணைக் கையாலறைதலும், அங்கிருந்த நரசிம்ம மூர்த்தி திசை திறக்கும்படி சிரித்தாரெனக் கவி கூறுகிறார். இங்கு இரணியன் நரசிம்ம மூர்த்தி ஆகிய இருவரது வீரத் தையும் கோபத்தையும் சிரிப்பே வெளிப்படுத்தினதென்பது கவியின் கருத்து.

வெறிகொள் நகையென்பது களிகொள் மயக்கத்தாலும் பித்தினாலும் நகைத்தலைக் குறிக்கும். களிமயக்கால் சிரிப்புண்டாகும் என்பதை,

"பளிக்குவள் ளத்து வார்த்த பசுநறுந் தேறல் மாந்தி
வெளிப்படு நகைய வாகி வெறியன மிழற்று கின்ற"

என்று கூறியிருக்கிறார். இதில் கள்ளுண்டதனால் அடங்காத சிரிப்புடன் வெறிகொண்ட வார்த்தைகள் வருமென்றார்.

இனி வேதனை நகையென்பது அதிகத் துயரமடைந்த காலத்துத் தோன்றும் சிரிப்பைக் குறிக்கும். இதை இராமனது பாணத்தால் அடிபட்டு வீழ்ந்து முள்ளிட்ட குழியில் வீழ்ந்த யானையைப்போல் துயரெய்திய வாலி வெடிபடச் சிரித்தான் எனக் கவி கூறியிருப்பதில் காணலாம்.

ஆகவே, சிரிப்பே எல்லாச் சுவைக்கும் அறிகுறியாகுமென்பது நன்கு விளங்கும். நிர்க்குணமாயிருக்கும் பிரம்மத்தையும் ஆனந்தமயமென்று வேதாந்திகள் சொல்லுவார்களானால் அவ்வானந்தத்தின் அறிகுறியாகிய சிரிப்பின் சிறப்பை விரித்துணர்த்தல் கூடாது. ஆயினும் ஏதோ என் சிற்றறிவிற் கேற்றபடி ஒருவாறு கூறினேன்."

இவ்வாறு பேசி முடித்துச் சோணசலம் உட்கார்ந்தவுடன் அவனுக்கும் அக்கிராசனாதிபதிக்கும் வந்தனமளித்தபின் சபை கலைந்தது. நானும் சோணசலத்தைப் பார்த்து, "ஏதப்பா நீ பொய்யும் மெய்யும் கலந்து வியாபாரஞ் செய்ய ஆரம்பித்து விட்டாயே!" என்றேன்.

"இப்பொழுது நான் சொல்வதில் மெய் கலந்திருப்பதாகச் சொல்லுகிறாய். இனி, கொஞ்ச நாளில் நான் சொல்லுவதெல்லாம் மெய்யென நம்புவாயென்பதில் சந்தேகமில்லை. நல்லது; அதிக நேரமாகிறது. நாம் வீடு செல்வோம்" என்று அவன் வண்டியேறிச் சென்றான். நானும் என் வீடு நோக்கிச் சென்றேன்.

# குழந்தையின் கல்வி

## 3. குழந்தையின் வளர்ச்சியை அறிதல்

எஸ். ஜகந்நாதன்

(1088-ம் பக்கத் தொடர்ச்சி)

குழந்தைகளின் உபாத்தியாயர் குழந்தைக்குக் கல்வி புகட்டுவதில் கவனிக்கவேண்டிய விஷயம் குழந்தையின் தேகவளர்ச்சியும் மனோ வளர்ச்சியும் ஒருங்கு சேர்ந்து வளர்கின்றன என்பதேயாகும். நாம் ஒரு குழந்தையின் தேக வளர்ச்சியை நன்ருகக் கவனிப்போமானல் அதனுடன் மனோவளர்ச்சியும் உண்டாகி வருகிறதென்றும் நாம் நிச்சயமாக அறியலாம். குழந்தைகளின் ஜாடைகளும், செய்கைகளும், குறிப்புகளும், அசைவும், நடவடிக்கைகளும், 'விஷமம்' என்று நாம் பொதுவாகச் சொல்வதும் ஆகிய எல்லாம் குழந்தையின் ஸ்வபாவமான வளர்ச்சிக்கு இன்றியமையாதனவாகும். தற்சமயம் இங்குக் குழந்தைகளின் வளர்ச்சியைக் கவனிப்போம்:

### முதல் மூன்று மாதம் வரைக்கும்

தேகம் கமகம வென்றிருக்கவும், அடிக்கடி ஆகாரம் உட்கொள்ளவும் இச்சிக்கிறது; வெளிச்சம் பார்க்கிறது; தன் மீதும் படுக்கை மீதும் விரிக்கப்பட்ட துணிகளைக் கையினல் வாரி எடுத்துக்கொள்ளுகிறது; முகம் பார்க்கிறது; தனது தாயைத் தெரிந்துகொள்ளுகிறது; மிருதுவான வஸ்து மேலே பட்டால் சந்தோஷிக்கிறது; தன் கையையே நக்கப்பார்க்கிறது.

### நான்காவது மாதம்

தனது விரல்களையும் தன் கையில் அகப்படும் வஸ்துக்களையும் வாயண்டை எடுத்துச் செல்லுகிறது; தனக்குப் பின் நிற்பவர்களைப் படுத்தபடியே பின் பக்கமாகப் பார்க்கிறது; தாயையும் தன்னோடு பன்முறை பழகினவர்களையும் கண்டு சிரிக்கிறது.

### ஐந்தாவது மாதம்

குப்புறப்படுக்கிறது; ப், ம், ல், எனப் பலவாறு சப்திக்கிறது; பிரகாசமான வஸ்துக்களைப் பார்க்கிறது; காலை இழுத்து இழுத்து நீந்தப் பிரயத்தனம் செய்கிறது.

### ஆறுவது ஏழாவது மாதங்கள்

கையில் ஒரு கிலுகிலுப்பையைப் பிடித்து ஆட்டி அசைத்து அதன் சப்தத்தைக் கேட்டுக் களிக்கிறது; தொட்டிலிலிருந்து தொங்கும் பல நிறமுள்ள வஸ்துக்களைப் பிடிக்க யத்தனம் செய்கிறது; கை விரல்களை மடித்து வைத்துக் கொள்ளுகிறது; சில சமயம் மூடி மூடித் திறக்கிறது; இரண்டு கைகளையும் சேர்த்துக் கொள்ளுகிறது; சற்றுத் தூரத்தில் உள்ள வஸ்துக்களையும் பார்க்கிறது; நீந்திச்செல்லும் வழியில் ஏதாவது இருந்தால் அதைத் தனக்கு ஆதாரமாகக் கொள்ளுகிறது; தன்னுடைய கட்டை விரலை வாயண்டை கொண்டு வருகிறது; மற்றும் சில சப்தங்களைச் சொல்கிறது; தண்ணீரில் அளைந்து சந்தோஷிக்கிறது; கையில் ஒரு பொம்மை வைத்துக் கொள்ள ஆசைப்படுகிறது; நீந்திச் செல்லுகிறது; உட்கார வைத்தால் தலையை நிமிர்த்தி வைத்துக் கொள்ள யத்தனம் செய்கிறது; கையில் எடுத்துக் கொண்டால் கண் காது மூக்கு வாய் இவைகளைத் தடவிப் பார்க்கிறது.

### எட்டாவது ஒன்பதாவது மாதங்கள்

குப்புறப்படுத்திருக்கும்பொழுதே தலையைப் பின்னால் திருப்பிப் பார்க்கிறது; வீட்டிலுள்ள நாய் பூனைகளைப் பார்க்கிறது; உட்கார்ந்து கொள்ள ஆரம்பிக்கிறது; ஒவ்வொரு கைக்கும் ஒவ்வொரு பொம்மை வைத்துக் கொள்ளுகிறது; கையில் கெண்டியைப் பிடித்துக்கொண்டு குடிக்கிறது; வாசற்படி தாண்டப் பார்க்கிறது; நிற்க வைத்தால் குதித்துக் குதித்துக் களிக்கிறது; சில விளையாட்டுகளில் சந்தோஷிக்கிறது; உதாஹரணம்:—கண்ணை மூடிக்கொண்டு 'இட்டாச்சு' என்றால் கண்ணைத் திறக்கிறது; இந்த விளையாட்டை அடிக்கடிச் செய்யப் பிரியப்படுகிறது.

### பத்தாவது மாதம்

தொட்டில் சங்கிலியைப் பிடித்துக் கொண்டு நிற்கிறது; தோழர்களுடன் விளையாட ஆசைப்படுகிறது; கையில் ஒன்றைக் கொடுத்தால் அதைக் கீழே போட்டு எடுத்துக் கொடுக்கும்படி செய்கிறது; இம்மாதிரி பல முறை செய்ய ஆசைப்படுகிறது. பல் முளைக்க ஆரம்பிக்கிறது. கண்டதைக் கடிக்கிறது; நன்றாய் உட்காருகிறது; மண்ணை நக்குகிறது; தவழ்ந்து செல்கிறது; தனக்குப் பிரியமானதைக் கொண்டு அதிகமாகச் சிரிக்கிறது; ஒருவரைக் கூப்பிடுவதுபோல் கையைக் காட்டுகிறது; ஒரு சாமானைப் பூமியிலிருந்து எடுக்கத் தனது கட்டை விரலையும் ஆள்காட்டி விரலையும்

வெகு சாமார்த்தியமாகச் சேர்த்துக் கொண்டு எடுக்கிறது ; தனக்குத் தெரிந்தவர்கள் கூப்பிட்டால் அதற்குப் பதில் அளிக்கிறது.

### பதினேராவது மாதம்

தானே நிற்கிறது ; கஷ்டமாயிருந்தால் கீழே உட்கார்ந்து விடுகிறது ; உட்கார்ந்தபடியே கதவை மூடித் திறக்கிறது. பயம் தெரிகிறது ; உதாஹரணம்:—உயர்ந்த இடத்திலிருந்து தாழ்ந்த இடத்திற்கு இறங்கப் பயப்படுகிறது. சுவரைப் பிடித்துக் கொண்டு நடக்க ஆரம்பிக்கிறது ; தள்ளும் வண்டியைப் பிடித்துக் கொண்டு கொஞ்ச தூரம் நடந்து செல்லுகிறது ; தெளிவாய் அம்மா, அப்பா, அண்ணு என்று சொல்லுகிறது ; சில வஸ்துக்களைப் பார்த்துப் பயப்படுகிறது.

### பன்னிரண்டாம் மாதம்

சந்திரனைக் காட்டினால் பார்க்கிறது ; உற்றுப் பார்க்கிறது. பல் முளைத்துக் கொண்டே வருகிறது. நாயைக் கூப்பிடுகிறது ; தூணைச் சுற்றிச் சுற்றிப் பலமுறை நடக்கிறது.

இம்மாதிரி குழந்தையின் வளர்ச்சியைக் கவனிக்குங்கால் புராதனப்பாட்டு ஒன்று எனக்கு ஞாபகம் வருகிறது. அதாவது:

"மூன்றும் மாதம் முகம் பார்க்கும் ;
நான்காம் மாதம் நகரும் ;
ஐந்தாம் மாதம் குப்புறப் படுக்கும் ;
ஆறும் மாதம் நீந்தும் ;
ஏழாம் மாதம் தவழ்ந்து இருக்கும் ;
எட்டாம் மாதம் எட்டி அடி வைக்கும் ;
ஒன்பதாம் மாதம் ஊரெல்லாம் ஓடும் ;
பத்தாம் மாதம் பல் முளைக்கும்."

மேலும் குழந்தைகளின் வளர்ச்சியைப் பற்றின புலவர்களின் வர்ணனையும் மேலே சொல்லப்பட்ட விவரமும் ஒத்தவைகளாகவே இருக்கின்றன ; உதாஹரணம்:—(தேசிங்கு ராஜனின் வளர்ச்சியை வர்ணிப்பது):

"பாலன் பிறந்த மூன்றும் மாதம் பதைத்து விழுந்தானும் ;
குழந்தை பிறந்த ஏழாம் மாதம் குலுங்கி விழுந்தானும் ;
தொட்டிலை விட்டுக் கீழே இறங்கித் தள்ளி விழுந்தானும் ;
தங்கத் தொட்டிலை எட்டி உதைத்துத் தரையில் விழுந்தானும் ;

பத்தாம் மாதம் தவழ்ந்து நடந்தான் பலரும் அறியவேதான்;
அன்னம் புசிக்க ஆடை உடுக்க அப்பொழுதே அறிவான்.''

### வயது ஒன்று முதல் இரண்டு வரையில்

''மாமா, பாபா, தாதா'' என்ற வார்த்தைகளைச் சொல்லுகிறது; திண்ணையிலிருந்து கீழே இறங்கும்பொழுதும், படியில் காலை வைத்துப் பிடித்துக் கொள்ளாமல் ஏறும்பொழுதும், தன்னைப் பாதுகாத்துக்கொள்ள முயற்சி செய்கையில் தன் பலம் எவ்வளவு என்று அறிந்து கொள்ளுகிறது; கனத்த பலகையை எடுத்துச் செல்லப் பிரயத்தனம் செய்கிறது; முடியவில்லையானால் கத்துகிறது; யாராவது உதவி செய்தால் காரியத்தைச் செய்துவிட்டதாகத் திருப்தியடைகிறது; வெளியே வந்து விளையாடப் பிரியப்படுகிறது; கை வண்டிகளைத் தள்ளுகிறது; ஏதாவது ஒன்றை இழுத்துச் செல்லுகிறது; கையில் ஒரு தமிளரை வைத்து வாயண்டை எடுத்துச் சென்று குடிக்கிறது; சில சாமான்களைச் சேர்க்கிறது; பிரகாசமான வஸ்துக்களையும் புஷ்பங்களையும் பார்க்கிறது; நடக்கிறது; தன் கையில் ஏதாவது தூக்கிக்கொண்டு செல்லுகிறது; ஆச்சரியத்தைக் காட்டுகிறது; எதைக் கண்டாலும், ''பாத்தியா?'' என்று கேட்கிறது; சாமான்கள் இருக்குமிடத்தையும் சில சந்தர்ப்பங்களையும் தெரிந்து கொள்ளுகிறது; உதாஹரணம்:—சர்க்கரை, பிஸ்கோத்து முதலியன இருக்குமிடங்கள் தெரியும்; தகப்பனார் தாயார் வெளியில் போகும் சமயம் முதலியவற்றைத் தெரிந்து கொள்ளும். ஒருவர் செய்கிறது போலச் செய்ய யத்தனம் செய்கிறது; உதாஹரணம்:—பந்தை உதைக்கிறது. பென்ஸிலால் எழுதுகிறது; கை தட்டுகிறது; நமஸ்காரம் செய்கிறது; சீப்பால் வாரிக்கொள்ளுகிறது; துடைப்பத்தால் தள்ளுகிறது; கேட்கிற சப்தம்போல் தானும் சப்தம் செய்கிறது; உதாஹரணம்:—ரயில், பூனை, நாய் போல் கத்துகிறது; வீட்டிலுள்ளவர்களைக் கூப்பிடுகிறது. தகப்பனார் வெளியேயிருந்து வீட்டிற்கு வந்தால், அவர் வருகையை தெரிவிக்கிறது; பாட்டுகள் கேட்டுக் களிக்கிறது; தானும் ஸ, ப என்று பாட முயலுகிறது; சில வார்த்தைகள் வர ஆரம்பிக்கின்றன; உதாஹரணம்:—ஆவா, தோ தோ, போ போ, வா வா, தா தா, இந்தா, சட்டை, மூக்கு, காசு, தாச்சு, பாத்தியா, வாண்டாம், நானும், ஆச்சு, பபாம், ர்ர்ர், ஊவா, வாச்சே, பூபூ, யாரு, அம்மா, அக்கா, அண்ணா, அப்பா, மாமா, தாதா, காகா, கொகொ, மம்மு, தாதும், நேக்கு. சில கேள்விகளுக்கு வாயாலும் செய்கையாலும் பதிலளிக்கிறது; உதாஹரணம்:—வேண்டாம்; ஹூஊ ஹூஊ. தலையை அசைக்கிறது; மாடிப்படி-

ஏறுகிறது; கட்டைகளால் காட்டுகிறது; பெட்டியிலுள்ள சாமானைக் கீழே எடுத்து வைத்து, மறுபடியும் அவைகளைப் பெட்டியினுள் வைக்கிறது; சாக்கட்டி, பென்ஸில், கரி இவைகளில் எழுதுகிறது; தனது தேகத்திலுள்ள உறுப்புக்களின் பெயரை அறிகிறது; மடித்த காகிதம் கீழே கிடந்தால் பிரித்துப் பார்க்கிறது; எந்தப் படங்களைக் கண்டாலும் 'பாப்பா' என்கிறது; பல பண்டங்கள் கலந்திருந்தாலும் தனக்கு வேண்டியதைப் பொறுக்கி எடுக்கிறது; தனது சாமானைத் தெரிந்து கொள்ளுகிறது; தனது கெண்டி தமிளர் முதலியவற்றை எடுத்து வருகிறது; தான் தப்புச் செய்ததைத் தெரிந்து கொள்ளுகிறது.

### வயது இரண்டு முதல் மூன்று வரையில்

குழந்தையின் பாஷையும் பேச்சும் வளர்கிறது வெகு ஆச்சரியமாகவிருக்கிறது. (இக்காலத்தில் குழந்தையின் பாஷை எவ்வளவு தூரம் மேன்மையடைகிறது என்று குழந்தை சொல்லும் வார்த்தைகளைக் கணக்கிடுவது உபயோகமாயிருக்கும். பின்னால் ஒரு சஞ்சிகையில் இதைப் பற்றித் தெரிவிக்கிறேன்.) படங்களைத் தெரிந்து கொள்ளுகிறது; ஒரு சிறு கதையைத் திரும்பத் திரும்பச் சொல்லப் பிரியப்படுகிறது; நாம் சொல்லுவதன்படி செய்கிறது; உதாஹரணம்:—ஓடு, வா, போ, உட்கார், எழுந்திரு, கொண்டுவா முதலியன. எவ்வளவு சாமான் இருந்தாலும் மூன்று என்று சொல்லுகிறது; எதைக் கண்டாலும் "எது? என்ன?" என்று கேட்கிறது; 1, 3, 2 என்று தாறுமாறாகச் சொல்லுகிறது; பொம்மை, விளையாட்டுச் சாமான்கள், படங்கள் இவைகளில் பிரியம் வைக்கிறது; சிறியது, பெரியது, கொஞ்சம், பாதி என்று உரைக்கிறது; உடைகளை உடுத்திக் கொள்ள ஆசைப்படுகிறது; அழுக்குப் படிந்த இடம், சேறு, சாணி இவைகளில் காலை வைத்து விட்டால் வெறுப்பைக் காட்டுகிறது; தான் தினசரி போய் வரும் வழியை ஞாபகம் வைத்துக் கொள்ளுகிறது; "இப்படி, அப்படி, வாண்டாம்" என்று சொல்லுகிறது; உற்சவாதிகள், பண்டிகைகள், வீட்டு விசேஷங்கள் இவைகளைப்பற்றிக் கொஞ்சம் ஞாபகம் வைத்துக்கொள்கிறது; படங்களைப் பார்த்தால் சந்தோஷிக்கிறது; கண்டபடி எண்ணுகிறது; (இன்னும் எண்ணங்கள் சரியாய் மனதில் பதியவில்லை.)

### மூன்று வயது முதல் நான்கு வயது வரையில்

சிறு கதைகளைக் கேட்கப் பிரியப்படுகிறது. அதன் பேச்சு அபிவிருத்தியடைகிறது. சிறு விளையாட்டுகளில் சேர விரும்புகிறது.

செப்பு, விளையாட்டுச் சாமான்களால் சில விளையாட்டுக்கள் விளையாடும்; பதியவைக்கும் உருவங்களை எடுத்துச் சரியாய்ப் பதிய வைக்கும்; சில வஸ்துக்களின் உபயோகம் இன்னதென்று அறிகிறது; வட்டங்களும் கோடுகளும் வரைகிறது; சிறு சிறு குழந்தைப் பாட்டுக்களைத் திருப்பித் திருப்பிச் சொல்லுகிறது; பாடப் புஸ்தகங்களை எடுத்துப் படிக்கிறது; "ஏன் அப்பா? எதற்காக?" என்று பல கேள்விகளைக் கேட்கிறது; நிறங்களைத் தெரிந்து கொள்ளுகிறது.

## குழந்தைகளின் வளர்ச்சியைக் கவனிப்பதன் விசேஷம் என்ன?

மேலே சொல்லியபடி குழந்தைகள் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்க்கப்பட்டுச் சுபாவமாய் வளர்ந்து வருவதைக் கவனிப்பதன் பயன் என்ன? என்ற கேள்வி பிறக்கலாம். "வெகு தூரத்தில் நடக்கும் குதிரைப் பந்தயக் குதிரைகளின் சரித்திரத்தைப் பற்றிப் படிப்பதாவது கொஞ்சம் பிரயோஜனத்தைத் தருகிறது" என்பார், மற்றும் சிலர். எல்லாப் பொருள்களைக் காட்டிலும் ஒரு குழந்தையே அடைவதற்கரிய ஒரு சிறந்த ரத்தினம்; குடும்பத்தையும் குலத்தையும் நாட்டையும் விளங்க வைக்கும் பூஷணம். நாம் வெளியேயிருந்து வருவதை வாசற்படியிலிருந்து எதிர்பார்த்து மலர்ந்த முகத்தோடு எதிர் கொண்டழைத்து நமது வாடினவதனத்தையும் மலரச் செய்யக் கூடிய ஓர் அருமையான புஷ்பத்தைப்பற்றி நாம் அறிய வேண்டுவது அவசியமில்லையா? இந்த வளர்ச்சியை அனுசரித்தே அதன் வாழ் நாளும் அமையப்போகிறது. அதனுடைய கல்வியும் இந்த வளர்ச்யில் காணப்படும் விசேஷ குணங்களோடு பொருந்தியேயிருக்கிறது. இக்காலத்தில் அதன் வளர்ச்சியைக் கவனித்து அதனை நல் வழியில் செலுத்துதல் அவசியமாகும். 'ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமா?' என்பது பழமொழி.

(தொடரும்)




## பாட்டியின் கதை

சந்த்ரா

"இளமையிற் கல்'' என்று பெரியோர்கள் கூறியிருக்கிறார்கள். நான் இளமையிற் கற்றவையெல்லாம் அநேகமாய்ப் பெரியோர்களின் கதை மூலமாகவும், வாக்குகள் மூலமாகவும், நடத்தை மூலமாகவும் தெரிந்துகொண்டவைகளே. ஏதோ இக்காலத்தில் குழந்தைகளின் மனோதத்துவத்திலும் அவர்களைப் பயிற்றுவிக்கும் முறைகளிலும் நிபுணர்கள் என்று மேல்நாட்டுப் பட்டங்கள் பல பெற்றவர்கள், வித விதமான வழிகளையும் விலையுயர்ந்த கருவிகளையும் ஏற்படுத்தி மிகவும் ஆடம்பரத்துடனும் பாட்டுடனும் குழந்தைகளுக்கு விளையாட்டு மூலமாய்க் கல்வி கற்பிக்கவேண்டுமென்று கங்கணம் கட்டிக்கொண்டு பிரயத்தனம் செய்து கொண்டு வருகிறார்கள். நம் பாட்டன் பாட்டிகள் தத்துவ நிபுணர்களோ என்னவோ எனக்குச் சரிவரத் தெரியாது. ஆனால் அவர்களைப் போல ருசியுடனும், கற்றுக் கொடுக்கிறோம் என்ற விளம்பரம் கொஞ்சங்கூட இல்லாமலும் செப்பிடுவித்தைக்காரச் சாமர்த்தியத்துடன் வேண்டிய அறிவை அதிபால்யத்தில் காட்டும் தன்மையுள்ள உபாத்தியாயரை இதுவரையிற் பார்த்ததில்லை.

வைதிகக் கதைகள் சொல்வதில் தேர்ந்தவள் ஒரு பாட்டி. குறும்புக் கதைகள் சொல்வதில் சமர்த்தி எங்கள் அத்தை. தீவட்டிக் கொள்ளைக்காரர் கதைகள்—அம்மம்ம! அவைகளை இப்போது நினைக்கும்போதே உடம்பெல்லாம் மயிர்க் கூச்சலடைகிறது!!—நடந்தது நடந்தாற்போல் நடிக்கும் பாவனையுடன் சொல்வதில் திறமைசாலி எங்கள் பெரிய பாட்டி. ஆகா! இந்தத் தீவட்டிக் கொள்ளைக் கதைகளைக் கேட்டால், 'ஆங்கில மகான் எட்கர் ஆலன் போ (*Edgar Allan Poe*) என்பவருடைய பயங்கரக் கதைகள் (*Tales of Terror*) இவைகளுக்கு எந்த மூலை' என்று தோன்றும். புதிர்களுக்குச் சொல்லவும் வேண்டுமா? ஒரே கூச்சல்

தான். எங்கள் தாத்தாவுக்கு எத்தனை புதிர்தான் தெரியுமோ, எனக்கு எண்ணவே முடிகிறதில்லை.

ஆகா என்ன இன்பம்! என்ன சலிப்பில்லாத சந்தோஷம்!! மஞ்சள் வெயில் சாய்ந்து விட்டது. மாடுகள் வீடு வந்து சேர்ந்து விட்டன. வாசலில் ஆடின குழந்தைகள் அவரவர் வீடு போய்ச் சேர்ந்தனர். ஆச்சு சாப்பாடு. சுமார் ஆறு அல்லது ஏழு மணி இருக்கும். தெருத்திண்ணை இருக்கவே இருக்கிறது; இல்லாவிட்டால் வாசல். என்ன நிலவு! இப்பொழுது ஏன் தூக்கம் வரும்? பாட்டியின் பாடு அம்பலந்தான். இனி என்ன பேச்சு! என்ன கிள்ளு! என்ன கொம்மாளம்! ஏன் வாயை மூடுவார்கள் குழந்தைகள்? ஒரு நிமிஷந்தான் ஆச்சு, பாட்டி திண்ணையில் படுத்து. தங்கை இராகம்பாட ஆரம்பித்துவிட்டாள். ஏன்? 'அண்ணு கிள்ளினுன்!' என்பது அவள் புகார். அப்புறம் விசாரணை! 'நானில்லை; அவள் தான் என் தலகாணியைப் பிடுங்கினுள். நான் கிள்ளினேன். அவள் உதைத்தாள்' என்பது அண்ணுவின் நியாயம்.

முன்னிருந்ததைவிடப் பெரிய அமர்க்களம்!

இதை எப்படி அடக்குகிறது? ஒரு மருந்துதான் உண்டு இதற்கு. அந்த மருந்து பாட்டி கையில்தானிருக்கிறது. ஆகா அது என்ன பெருமருந்தோ? அது ஒரு திருமருந்தென்பதற்கும் சந்தேகமோ? அது தான் பாட்டியினுடைய கதை.

* * * *

குழந்தைகள்:—பாட்டி ஒரு கதை சொல்லேன்.

பாட்டி:—என்ன கதையைச் சொல்லப்போகிறேன்! நான் பட்ட கதையைச் சொல்லுவேனே? நான் கெட்ட கதையைச் சொல்லுவேனே? இந்தப் பாவி வயிற்றில் பிறந்த கதையைச் சொல்லுவேனே?

குழந்தைகள்:—என்ன பாட்டி? கதை சொல்லென்றுல் பாட்டு என்னமோ பாடுகிறுயே? ஒரு கதை சொல்லேன்.

பாட்டி:—கதையா? இதோ பார் சொல்லுகிறேன்.

அப்புறம் பாட்டி கதையை ஆரம்பித்துவிட்டாள். குழந்தைகள் அவள் கதைசொல்லும் ரஞ்சிதத்தால் ஆகர்ஷிக்கப்பட்டுத் திறந்த கண் மூடாமற் கேட்கிறுர்கள்.

* * * *

கதை கதையாம் காரணமாம்.

காரணத்தில் ஓர் தோரணமாம்.

தோரணத்தில் ஓர் பச்சைப்புல்லாம்.

பச்சைப் புல்லைக் கொண்டு போய்,

பசு மாட்டுக்குப் போட்டேன்.

பசு மாடு கொஞ்சம் பால் கொடுத்தது.

பாலைக் கொண்டுபோய்ப் பாட்டிக்குக் கொடுத்
தேன்.

பாட்டி கொஞ்சம் காசு கொடுத்தாள்.

காசைக் கொண்டுபோய்க் கடையில் கொடுத்
தேன்.

கடைக்காரன் ஒரு தேங்காய் கொடுத்தான்.

தேங்காயைக் கொண்டுபோய்ப் பிள்ளையாருக்கு
உடைத்தேன்.

பிள்ளையார் ஒரு பிள்ளை கொடுத்தார்.

அந்தப் பிள்ளை எந்தப் பிள்ளை ?

இதோ இருக்கும் செல்லப் பிள்ளை !
சிங்காரப்பிள்ளை !!

* * * *

இப்படிச் சொல்லியவுடனே பாட்டி அங்கே உள்ள குழந்தைகளுக்குள் மிகவும் சிறிய குழந்தையைத் திடீரென்று இழுத்து அணைத்துக் கொஞ்சி முத்தமிடுவாள். அதில் அந்தப் பாட்டிக்கு ஒரு பேரானந்தம் ; அந்தக் குழந்தைக்கு ஒரு சந்தோஷம். பக்கத்திலுள்ள குழந்தைகளெல்லாம் கதை இந்த மாதிரி முடிந்ததைக் கண்டு கைகொட்டிச் சிரித்துப் பாட்டியை மறுபடியும் ஒரு கதை சொல்லும்படி பிய்த்துப் பிடுங்குவார்கள்.

# குழந்தைக் கதை



## ஆச்சா மரத்துக் கதை

அழகாபுரி, அழகாபுரி என்பது ஒரு இராச்சியம். அதில் அழகேசர், அழகேசர் என்கிற இராஜா இருந்தார். அவருக்கு அழகப்பன், அழகப்பன் என்கிற தோட்டக்காரன் இருந்தான்.

ஒரு நாள் அழகேசர் அழகப்பனைப் பார்த்து, "அழகப்பா! அழகப்பா! அரண்மனைத் தோட்டத்திலே அழகான மரங்கள் இல்லை; அடர்ந்து எழுந்த மரங்கள் இல்லை; வளம் மிகுந்த மரங்கள் இல்லை. சந்தன மரமும் இல்லை; சாதிக்காய் மரமும் இல்லை; வேங்கை மரமும் இல்லை; வேப்ப மரமும் இல்லை; அரச மரமும் இல்லை; ஆல மரமும் இல்லை; அசோக மரமும் இல்லை; ஆச்சா மரமும் இல்லை; தேக்கு மரமும் இல்லை; பாக்கு மரமும் இல்லை. அழகான மரங்களெல்லாம் கொண்டு வந்து அணியாக நடவேண்டும். அதை நான் பார்க்க வேண்டும்" என்று சொன்னார்.

அழகப்பன் அழகேசருடைய அடி பணிந்து, "ஆகட்டும் ஆண்டவரே! அப்படியே நட்டு வைத்துக் காட்டுகிறேன்" என்றான்.

அன்று முதல் அழகப்பன் அழகாகப் பாத்தி வெட்டி அணி அணியாய் விதை விதைத்தான். காடு மலைகளிலும் கண்ட கண்ட இடங்களிலும் சென்று நாற்றுகள் கொண்டு வந்து பாத்திகளில் நட்டு வைத்தான். சந்தன நாற்றும், சாதிக்காய் நாற்றும்,

வேங்கையின் நாற்றும், வேம்பின் நாற்றும் நட்டு வைத்தான்; அரசின் கன்றும், ஆலங் கன்றும் அணி அணியாய் நட்டு வைத்தான்; தேக்கின் கன்றும், பாக்கின் கன்றும் தேடிக்கொண்டு வந்து பாத்தியில் பதிய வைத்தான்; அசோகின் சிறு செடியும், ஆச்சாவின் சிறு செடியும் மண்ணினுள்ளே தோண்டி வைத்தான்; காலையிலும் மாலையிலும் நீர்வார்த்துக் கருத்தாகக் களைபிடுங்கி அவற்றை யெல்லாம் கண்போலக் காத்து வந்தான்.

ஒரு நாள் அழகப்பன் பருத்த கழிகள் பல கொண்டு வந்தான்; அளவாக அறுத்த மணிக்கயிறும் கொண்டு வந்தான். அவன் அந்தச் செடிகளிடம்போய், "என் அருமைச் செடிகளே! இன்று உங்களை ஏற்றபடி கட்டி வைப்பேன். கட்டத் தவறிவிட்டால் கண்ட கண்டபடி வளர்வீர்கள். சித்தப் போக்கே பெரும் போக்காய்ச் சிரிக்கச் சிரிக்க வளைந்திருப்பீர்" என்முன்.

அதைக் கேட்ட சிறு மரங்கள் எல்லாம் அழுது கொண்டே, "அழகப்பா! அழகப்பா! கட்டவேண்டாம்! கட்டவேண்டாம்! எங்களை நீ கட்டவேண்டாம். நாங்கள் எல்லோரும் வளையாமல் நன்முக மேலெழுவோம்" என்றன.

அதற்கு அழகப்பன், "அழகான மரங்களே! அழவேண்டாம். அழகேசர் கட்டளையை யாராலே மீற முடியும்? அழகான மரமாக ஆசையானுல், உங்களெல்லோரையும் கட்டி வைப்பேன்" என்முன். பின்பு ஒவ்வொரு சிறு மரத்தின் பக்கத்திலும் ஒவ்வொரு கழி நட்டு ஒவ்வொரு கயிற்முலே ஒழுங்காகக் கட்டி விட்டான்.

ஆனுல், அங்கே ஆச்சா மரம் மட்டும் தன்னைக் கட்ட இசையாமல், "அழகப்பா! நான் மெத்த அழ

காக வளர்ந்து வருகிறேன்; ஒழுங்காக ஓங்கி வருகிறேன்; நேராக நின்று வருகிறேன்; என்னை நீ கட்ட வேண்டாம்'' என்று மன்றாடி அழுதது.

என்ன செய்வான் அழகப்பன்? அழுது கொண்டே வீடு சென்றான். "ஐயோ! அந்த ஆச்சா மரத்துக்கு அறிவு இல்லையே. கட்டத்தவறிவிட்டால், சித்தப்போக்கே பெரும் போக்காய்ச் சிரிக்கச் சிரிக்க வளைந்து விடுமே!'' என்று துக்கத்தோடு தூங்கி விட்டான்.

அன்று இரவு இடி இடித்து மின்னல் மின்னி, காற்றடிக்கப் புயல் அடித்தது. அழகப்பன் காலையிலே கண் விழித்து, கவலையோடு பாத்தியண்டை வந்தான். அங்கே இருந்த மரங்கள் எல்லாம் நேராக நின்றன. ஆனால், ஆச்சா மரமோ 'அம்மாடா!' என்று படுத்திருந்தது. அதைக் கண்ட அழகப்பன், "ஆச்சா மரமே! ஆச்சா மரமே! அறிவு வந்ததா, ஆச்சா மரமே? இப்பொழுதாவது உன்னைக் கட்டுகிறேன். கட்டத் தவறிவிட்டால், சித்தப்போக்கே பெரும் போக்காய்ச் சிரிக்கச் சிரிக்க வளைந்திருப்பாய்'' என்றான்.

அதற்கு அந்த ஆச்சாமரம், "அழகப்பா! என்னை நீ கட்டவேண்டாம். இன்னும் சில நாளில் நான் திடம் கொண்டு நன்றாக நிற்பேனே'' என்றது.

என்ன செய்வான் அழகப்பன்? அழுது கொண்டே வீடு சென்றான்.

ஆச்சா மரம் சில நாளில் திடம் கொண்டு எழுந்து நின்றது. அது அங்கு இருந்த மரங்களை எல்லாம் பார்த்து, "என்னைப் போல் அழகான மரங்களுண்டா? நான் யாருக்கும் கட்டுப்பட்ட

தில்லை. சுதந்தரமாய் நான் வளர்ந்து சுகமாக இருக்கிறேன். காற்றிலே அசைந்தாடிக் களித்து விளையாடுகிறேன். தங்க வெயிலிலே தள தளத்து விளங்குகிறேன். நீங்களோ கட்டுண்டு கண் பிதுங்க நிற்கிறீர்கள்'' என்று பெருமையோடு பேசிற்று.

அதைக் கேட்ட சிறு மரங்கள் எல்லாம், பெரு மூச்சு விட்டு அசையாமல் நின்றன.

சில நாட்கள் செல்லவே, ஒரு நாள் இரவில், இடி இடித்து மின்னல் மின்னிக் காற்றடிக்கப் புயல் அடித்தது. புயல் அடித்த அடியைத் தாங்கமாட்டாமல், ஆச்சா மரம் 'அம்மாடா!' என்று தரை யோடு தரையாய்ப் படுத்து விட்டது.

அடுத்த நாள் அழகப்பன் காலையிலே கவலை யோடு கண் விழித்துப் பாத்தியண்டை ஓடி வந்தான். அங்கிருந்த மரங்கள் எல்லாம் நேராக நின்றன. ஆனால் ஆச்சா மரமோ 'அம்மாடா!' என்று தரை யோடு தரையாய்ப் படுத்திருந்தது. அதைக் கண்ட அழகப்பன், "ஆச்சா மரமே! மற்ற மரங்களைப் பார். அவை எல்லாம் அழகாய் அசைந்தாட நீ மட்டும் படுத்து விட்டாய். வேண்டாம்! வேண்டாம்! நான் சொல்வதைக் கேள். உன்னையும் கட்டி வைக் கிறேன்'' என்று அழுது அழுது சொன்னான். ஏனென்றால், 'அழுது அழுது சொல்லுவார் தமர்; சிரிக்கச் சிரிக்கச் சொல்லுவார் பிறர்.'

அதற்கு ஆச்சா மரம், "என்னை நீ கட்டவேண் டாம். நான் என் சித்தப் போக்கே பெரும் போக் காய்ச் சிரிக்கச் சிரிக்க வளர்ந்தாலும் என்னை நீ கட்ட வேண்டாம்'' என்றது.

அழகப்பனுக்கு அளவில்லாத துக்கம் வந்து விட்டது. என்றாலும் என்ன செய்வான்? ஆச்சா

மரம், "வர வர மாமியார் கழுதை போல ஆனாளாம்" என்கிற கதையாக, கோணக் கோணப் புளியங்காய் என்று வளர்ந்து கொண்டே வந்தது.

ஒரு நாள் அழகேசர் வரப்போகிறார் என்று அங்கிருந்த மரங்கள் எல்லாம் 'கிசு கிசு' என்று பேசிக் கொண்டன. சந்தன மரம் அசைந்தசைந்து, "என்னைச் சந்தனக் குழம்பாய் அரைத்து அரைத்து என் துரைக்குப் பூசிடுவேன்" என்றது. சாதிக்காய் மரம் தலையை அசைத்தாடி, "மணம் மிகுந்த கனி கொடுத்து மன்னவரை வணங்கிடுவேன்" என்றது. வேங்கை மரம் வெட்கத்தால் முகம் சிவந்து, "என் அரசர் உயிர் காக்க என் இரத்தம் சிந்திப் போர் புரிவேன்" என்றது. வேப்ப மரம், "மன்னவரின் பகை கெடுக்கும் மருந்தாக நான் இருப்பேன்" என்றது. அரச மரம், "அழகான கதை சொல்லி அரசரை நான் மகிழ்விப்பேன்" என்றது. ஆலமரம், "அணி தேர் புரவி ஆட்பெரும் படையோடு மன்னர் இருக்க நிழல் தருவேன்" என்றது. தேக்கு மரம், "அரசர் தங்க அழகான அரண்மனை நான் தருவேன்" என்றது. அசோக மரம், "இனிய மலராலே மன்னவரை அலங்கரிப்பேன்" என்றது. இப்படியே, அங்கிருந்த மரங்கள் எல்லாம் பல விதமாகக் பேசிக்கொண்டு அழகேசன் வரவுக்காகக் காத்திருந்தன.

ஆச்சா மரம் மட்டும், "ஐயோ! அரசர் வந்து என்னைக்கண்டால் என்ன சொல்லுவாரோ?" என்று உடல் நடுங்கிக் கொண்டிருந்தது.

மரங்களெல்லாம் நினைத்தபடியே அழகேசர் வந்தார். அவர் அங்கிருந்த மரங்களை யெல்லாம் கண்டு, 'அழகப்பா! இந்த மரங்களின் அழகை யெல்லாம்



சந்தனமரம்.



சாதிக்காய்மரம்.



வேங்கைமரம்.



ஆலமரம்.



கருங்காலிமரம்.



ஆச்சாமரம்.

எவராலும் சொல்ல முடியாது. பேஷ்! பேஷ்!! பலே! பலே!! நீ இந்த மரங்களை எல்லாம் அரண் மனையைச் சூழ நட்டு விடு'' என்றார். பின்பு அங்கு ஒரு மூலையில் இருந்த ஆச்சா மரத்தைப் பார்த்தார். ''அழகப்பா! இதேன் இப்படி இருக்கிறது?'' என்று கேட்டார்.

அதற்கு அழகப்பன், ''அரசே! என்ன செய் வேன்! என்ன சொல்லியும் கேளாத புத்தி கெட்ட மரம் இது. கட்டுக்கு அடங்க மனம் இல்லாமல், சித்தப் போக்கே பெரும் போக்காய்ச் சிரிக்கச் சிரிக்க வளர்ந்து விட்டது'' என்றான்.

அதைக் கேட்ட அரசர், ''அழகப்பா! அழகாபுரி யில் அழகேசன் அரண்மனையில் அழகு கெட்ட மரம் எதுவும் இருக்கலாகாது. இதை வெட்டி ஆற்றிலே போட்டு விடு'' என்றார்.

அழகப்பன் அழகேசர் கட்டளையை மீற மாட் டாமல், அழகற்ற ஆச்சா மரத்தை வெட்டி ஆற் றோடே போக விட்டான்.

[சூடாமணி.]




I

ஆராரோ ஆரிரரோ!
ஆராரோ ஆரிரரோ!
ஆரடித்து நீ அழுதாய்
அஞ்சனக்கண் மைகரைய ?

அடித்தாரைச் சொல்லி அழு;
ஆக்கினைகள் பண்ணி வைப்போம்.
தொட்டாரைச் சொல்லி அழு;
தோள்விலங்குபோட்டுவைப்போம்.

அத்தை அடித்தாளோ
அஞ்சு விரலாலே?
பாட்டி அடித்தாளோ
பத்து விரலாலே?

II

ஆண்டம்மான் கொல்லையிலே
ஆனை வந்து மேய்கிறது;
ஆனை அடித்தோட்ட
அம்புக் கழுதானோ?
குட்டியம்மான் கொல்லையிலே
குதிரை வந்து மேய்கிறது;
குதிரை அடித்தோட்டக்
கோலுக் கழுதானோ?

III

வாடா வளைச் செட்டி!
வந்திறங்கு திண்ணையிலே.
துப்பட்டியைப் போட்டுத்
தோளின் சுமை இறக்கு;
கம்பளியைப் போட்டுக்
கனத்த சுமை இறக்கு.
பச்சைவளை உண்டோடா
பாண்டியனார் பேரனுக்கு?
வெள்ளைவளை உண்டோடா
விஜயன் மருமானுக்கு?
சிவப்புவளை உண்டோடா
செம்பியனார் பேரனுக்கு?
கறுப்புவளை உண்டோடா
காவலனார் பேரனுக்கு?
நீலவளை உண்டோடா
நீலகண்டர் பேரனுக்கு?
வளையிட்ட செட்டி!
வயிறெரிந்து போகாதே.
வேப்பிலையும் காப்பும்
விசிறி எறி கண்ணனுக்கு;
சுண்ணம்பும் மஞ்சளுமாய்ச்
சுற்றி எறி கண்ணனுக்கு.

[ருக்மிணி அம்மாள்.]

# நன்முத்து

சூடாமணி

ஆழ்ந்த கடலின் அடியினிலே
அழகு மிகுந்த சிறுமுத்து
தாழ்ந்த சிப்பி யதன்வயிற்றில்
தனியே கிடந்து மனம்நொந்தே,
'ஆழ்ந்த கடலில் என்னுடனே
அழகோ டுதித்த முத்தெல்லாம்
சூழ்ந்த மன்னர் சபைதன்னில்
துலங்கும் செல்வர் தோள்சேர்ந்தே ;

தன்னந்தனியே நான்மட்டும்
தாழ்ந்து கடலில் கிடந்தேனே !
என்னை மட்டும் ஏன்கொள்ளார் ?
எனக்கும் அவைபோல் அழகிலேயோ ?'
என்ன எண்ணி அழுதந்த
எளிய சிப்பி யதன்வயிற்றில்
சின்ன முத்து நாள்தோறும்
சிணுங்கி வளர்ந்து வந்ததுவே.

முடிவில் ஒருநாள் முத்தெடுப்போர்
முதிர்ந்த சிப்பி தனைஎடுத்துக்
கடிதில் திறந்த வுடன்கண்டார்
கண்ணைப் பறிக்கும் நன்முத்தை.
வடிவில் மிகுந்த அம்முத்தை
மன்னன் தனக்கே கொண்டுடனே
முடிமேல் விளங்க வைத்தானே ;
முத்தும் களித்து விளங்கியதே.

சிறிய வயதில் சிறுவரெல்லாம்
சிறந்த குணங்கள் நிரம்பிவர
அறிவில் வளர்ந்து முதிர்ந்திட்டால்
அழகு முத்தைப் போலிருப்பார் ;
செறியு மிருளில் தியங்குகின்ற
செல்வத் தாய்நா டெங்கணுமே
அறிவின் ஒளியை விரித்திடுவார் ;
அடிமைத் தனத்தை அகற்றுவரே.

---




# ஆடையும் ஆபரணமும்

வி. விசாலாக்ஷி அம்மாள்

'பாடகம் கழுத்திலிட்டுப் பட்டைக் காரை தோளிலிட்டு, ஒலை விரலிலிட்டு, உத்தண்டா காதிலிட்டு, கருங்குழலும் வீற்றிருந் தாள்' என்று சரியான முறையில் நகைகளை அணியத் தெரியாத விராடன் மனைவி தாறுமாருகச் செய்து கொண்டிருந்த அலங்காரத் தைக்கண்டு, அவளிடம் சேடியாக இருப்பதன் பொருட்டுச் சென்ற திரௌபதி நகைத்தாள் என்று ஒரு பழைய காலத்துப் பாட்டு உண்டு.

நல்ல உடை உடுத்து, ஆபரணங்கள் அணிந்து தங்களைச் சிங் காரித்துக் கொள்ள வேண்டும் என்ற விருப்பம் எல்லாருக்குமே இயற்கையில் பொதுவாக ஏற்பட்டுள்ள எண்ணம்தான். இதில் சிலர் அதிக அலங்காரப் பிரியர்களாக இருக்கலாம். எப்படியானு லும், தாங்கள் செய்து கொள்ளும் சிங்காரம் பொருத்தமானதாக இருக்கிறதா என்பதை முதலில் நிர்ணயித்துக் கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் பாட்டில் கூறியுள்ள கதைபோல்தான் முடியும்.

ஒரு ஜோடிப்பு நகை என்று கூறுகிறோம்; இப்படியே ஆடை யும் ஆபரணமும் ஒத்து ஜோடிப்பாக இருக்க வேண்டும். இப் பொழுது புது தினுசில் இலேசான வர்ணங்களில் புடைவைகள் விற் கிறார்கள். இவ்விதப் புடவைகள் கட்டுவதாக இருந்தால், நகை களைப் பொறுக்காகவே அணிய வேண்டும். புடைவையின் வர்ணத் துக்கு ஒத்தபடி சட்டை போடவேண்டும். சட்டையின் கை சற்றுக் குட்டையாகவே இருக்க வேண்டும். இதனுடன் கழுத்தில் இரண்டு வடம் மெல்லிய சங்கிலி, கையில் ஒன்று அல்லது இரண்டு ஜதை வளையல்கள், ஒரு மோதிரம், காதில் சிறியதோடு, ஒரு

'ப்ரோச்' இவைகளைப் போட்டுக் கொள்ளலாம். கழுத்தில் போட்டுக் கொள்ளும் சங்கிலியில் ஒன்று குட்டையாகவும், ஒரு வடம் நீளமாகவும் இருக்கும்படி ஒரே வடமாகச் செய்துள்ள சங்கிலியைப் போட்டுக் கொள்ளலாம். வளையல்களில் ஒரு ஜதை தங்கமும், மற்ற ஜதை புடைவையின் நிறத்திற்கு ஏற்றபடி கண்ணாடி வளையலுமாகப் போடலாம். கல் வளையல்களாக இருந்தால் தங்க வளையல்கள் கூட அவசியமில்லை. தலையில் பூக்களை வைத்துக் கொள்ளலாம்; ஆனால் நிறைய வைத்துக்கொள்ளாமல் ஒரு நிதானத்தில் சூட்டிக் கொள்ளவேண்டும். வெளியில் செல்லும்பொழுது, காலில் சடாக்கள் போட்டு, கையில் ஒரு கைப்பையையும் பிடித்துக் கொள்ளுவது இந்த அலங்காரத்திற்கு ஏற்றது. இவ்விதம் கட்டும் புடைவைக்குச் சரிகைப் பூக்கொடிகள் மாதிரியில் வேலை செய்திருந்தால் நன்றாக இருக்கும். சிலர் சூட்டிக் கொள்ளும் பூவின் நிறங் கூடப் புடைவையின் வர்ணத்துக்கு ஒத்தாற் போல் சூட்டிக் கொள்ளுகிறார்கள். இந்தத் தினுசில் சிங்காரித்துக் கொள்ளுதல் ஒரு வித நாசூக்கு.

புடைவை, உடலில் சரிகைக் கொட்டடி, நெளி, இவைகள் போட்ட பழைய தினுசுப் புடைவையாக இருந்தால், அதனுடன் கனத்த நகைகளைப் போட்டுக் கொள்ளலாம். கழுத்தில் அட்டிகை, பதக்கம், நாலைந்து வடம் சங்கிலி, கையில் ஐந்தாறு ஜதை வளையல்கள், வங்கி, நாகுத்து, இவை போன்ற நகைகளைப் போட்டுக்கொண்டால் நன்றாக இருக்கும். தலையைப் பின்னித் தொங்க விட்டோ, அல்லது எடுத்துக் கட்டியோ, தலை நிறையப் பூ வைத்துத் திருகுப்பூ திருகிக் கொள்ளலாம். சிறிய பெண்களாக இருந்தால், காலில் சொரியச் சொரியப் பாதஸரம் போட்டுக் கொண்டால் நன்றாக இருக்கும். புது தினுசுப்புடைவைகளிலும், அதிக சரிகை போட்ட புடைவை கட்டி, சரிகை வேலை செய்த சட்டை போட்டு, சரம் சரங்களாக முத்து நகைகளைப் போட்டுக் கொள்ளுவது ஒரு வித நாசூக்கு. மொத்தத்தில் இருக்கும் நகைகளை எல்லாம் ஏக காலத்தில் அணிந்து கொள்ளாமல் ஆடைக்கு ஏற்றாற்போல் பொறுக்கிப் போட்டுக் கொள்ள வேண்டும். எப்பொழுதுமே வைரம் போன்ற கல் நகைகளை அதிகமாகப் போட்டுக் கொள்ளக் கூடாது. 'வைரக் கவசமாக அடித்துப் போட்டிருக்கிறாளே, அவளுக்கென்ன?' என்று நகையின் விலையைக் குறித்துச் சொல் ஏற்பட்டிருந்தபொழுதிலும், ஒரே வைரமாக ஜொலிப்பது அவ்வளவு நாசூக்காகக் கருதப்படுவதில்லை. பிறகு, அவர் அவர்கள் இஷ்டம் பயிற்சி இவைகளைப் பொறுத்தவைகளே ஆடையும், ஆபரணமும் என்று கூறலாம்.

# சட்டைக் கை

சட்டையின் கைகளுக்குப் பல அழகிய விதங்களில் அலங்காரம் செய்யலாம். சாதாரணமாக அகலப்பட்டி வைத்தோ அல்லது 'பைபிங்' வைத்தோ சட்டைக் கைகளைத் தைக்கிறார்கள். 'பைபிங்' வைப்பதாக இருந்தால் அதற்கு உபயோகப்படுத்தும் துணி ஒன்று சட்டைத் துணியின் நிறத்தைவிடச் சற்றுக் கப்பு நிறமாக இருக்க வேண்டும்; அல்லது அதைவிட இலேசான நிறமாக இருக்க வேண்டும். இலேசான நிறமாக இருந்தால் 'பைபிங்' சற்று அகலமாக இருக்கலாம். கப்பு நிற 'பைபிங்' மிகவும் சிறியதாக இருந்தால் தான் அழகாக இருக்கும். பைபிங்குக்கு என்று உபயோகப்படுத்தும் துணியின் வர்ண அமைப்பு சட்டைத் துணிக்கு ஒத்ததாக இருக்கவேண்டும். சிலர் சட்டையில் துணி லேஸ் வைத்துத் தைத்துக்கொள்ளுகிறார்கள். சட்டையின் பட்டையையும் கையையும் சேர்த்து ஒட்டுவதற்கு உபயோகிக்கும் 'இன்ஸர்ஷன்' லேஸைத் தவிர, மேல் சட்டையின் கை ஓரத்தில் துணி லேஸ் வைத்துத் தைத்துக்கொள்ளுவது நாசூக்கில்லை. உள் சட்டையில் லேஸ் வைத்துத் தைத்து, மேலே மெல்லிய சட்டை போட்டுக்கொள்ளுவதே நாகரிகம். அநேக வர்ணங்களில் விற்கும் பட்டை தீர்த்த பாசி மணிகளைச் சட்டைக் கையில் தைத்துக்கொள்ளலாம். சிலர் சட்டைக் கைகளை மிகவும் குட்டையாக வைத்து, பாசி மணிகளை அதன் ஓரங்களில் வளைவாகவும் ஆங்கில 'வீ' என்ற அக்ஷரம்போலவும் இன்னும் பல தினுசுகளிலும் கோத்துத் தொங்கவிடுகிறார்கள். இவ்விதம் தொங்கும் மணிகள் சட்டையின் ஓரத்தில் தைக்கப்பட்டிருப்பதால் வெறுங்கைமேல் விழுந்து படியும். அழகிய உருண்ட கைகள் உடையவர்களுக்கு இது நன்றாக இருக்கும்; மற்றவர்களுக்கு அவ்வளவு பொருத்தமாக இராது. சரிகை லேஸைச் சட்டைக் கையில் வைத்துத் தைத்துக்கொள்ளலாம்; இதற்கு, சட்டை பட்டுச் சட்டையாக இருக்கவேண்டும். அநேகமாகச் சரிகை வைத்துத் தைத்துக் கொள்ளுவதைக் காட்டிலும் சரிகைப் பூவேலை செய்த சட்டைப் பட்டையே எல்லாரும் வாங்குகிறார்கள்.

இவைகள் தவிர, சட்டை, புடைவை முதலியவைகளின் ஓரங்களில் வைத்துத் தைப்பதற்கு ஏற்ற கரைகள் கஜக் கணக்கில் விற்கப்படுகின்றன. இஷ்டமான கரையை வாங்கித் தைத்துக் கொள்ளலாம். சட்டைக் கையை வெட்டும்பொழுதும், தைக்கும்பொழுதும் வளைவைச் சாக்கிரதையாகக் கவனித்து வெட்ட வேண்டும். இல்லாவிட்டால் என்ன அலங்காரம் செய்தாலும் கை பார்ப்பதற்கு

வேடிக்கையாக ஒரு புறமாக இழுத்துக்கொள்ளும். சற்று அதிகப் பருமனாக இருப்பவர்கள் சட்டைக் கையைத் தளர்த்தியாகவே வைத்துக் கொள்ளுவது நல்லது. சட்டைக் கை உடம்புடன் ஒட்டினாற் போலிருந்தால் அது பருமனை பின்னும் அதிகமாகவே எடுத்துக் காட்டும். அதிக இளைப்பாக இருப்பவர்கள் மிகவும் தளர்த்தியாகச் சட்டைக் கையை வைத்துக்கொள்ளக் கூடாது. தளர்த்தியான கை நாலு பக்கமும் தொங்கும்; பார்வைக்கு நன்றாக இராது. சட்டைக் கைகளைக் குட்டையாகவும் நீளமாகவும் அவர் அவர்கள் இஷ்டம்போல் வைத்துக்கொண்டபோதிலும், சிலருக்கு மட்டுந் தான் குட்டையான கை நன்றாக இருக்கிறது. இதெல்லாம் அவர் அவர்களாகப் பார்த்து அறிந்து கொள்ள வேண்டியது அவசியம். கை நீளமான தாராளமான சட்டை ஒன்றை மிகவும் ஒல்லி யான ஒருத்தி போட்டுக்கொண்டதைக் கண்ட அவள் சிநேகிதி அதைக் 'குரங்குக்குச் சட்டை போட்டாற்போலிருக்கிறது' என்று பரிகசித்தாள். ஒருவர் செய்துகொள்ளும் அலங்காரம் மற்றொரு வருக்குப் பொருத்தமாக இருக்காது. 'மாட்கியார்' வெட்டு நாகரிக மாக இருக்கலாம். ஆனால் குட்டைக் கை, நீண்ட கை, அதிக தாராளமான கை, சற்று உடம்புடன் ஒட்டினாற்போன்ற கை, என்று அவர் அவர்கள் சரீர வாகுக்கு ஏற்றாற்போல் தைத்துக் கொண்டால்தான் உடை கண்ணுக்கு நாசூக்காகத் தோன்றும்.

## அவல் கேசரி

இதற்கு முதலில் அவலை நெய் விட்டுக் காந்தாமல் சற்று வறுத்துக் கொள்ள வேண்டும். அதிக நெய் விட்டுப் பொரித்து விடக்கூடாது. வறுத்த அவலைப் பாலில் கெட்டியாக வேக வைத்துக் கொள்ள வேண்டும். பிறகு, ஒரு பங்கு அவலுக்கு இரண்டு பங்கு சர்க்கரை போட்டு நெய் விட்டு நன்றாகக் கிளறி, பிறகு, கேசரி, ஏலக்காய், முந்திரிப் பருப்பு, வாதுமைக்கொட்டை முதலிய வற்றைப் போட்டு இறக்கித் தாம்பாளத்தில் கொட்டி ரவை கேசரியை நறுக்குவது போல் நறுக்கி உபயோகிக்க வேண்டும். அதிகத் தித்திப்பில் இஷ்டமில்லாதவர்கள் சர்க்கரையை ஒன்றரைப் பங்காகப் போட்டுக் கொள்ளலாம். வெந்து கொண்டிருக்கும் அவலில் சர்க்கரையைப் போடுவதாக இருந்தால் அடிக்காந்தாமல் ஜலம் நன்றாகச் சுண்டும் வரையில் கிளறவேண்டும். இதற்குப் பதிலாக, அவலை இறக்கிக் கொண்டு வேகவைத்துச் சர்க்கரையைக் கெட்டிப் பாகாகக் காய்ச்சி அதில் வெந்த அவல் மொத்தையைப் போட்டு நெய் விட்டுக் கிளறலாம். இது வாய்க்கு மணமாகவும் ருசியாகவும் இருக்கும்.




கற்பெனப் படுவதன் சொற்பொருள் நயங்கள்:—கற்பென்றால் பெண் மக்கள் தம் கணவர் சொற்படி நடத்தல் என்றும், அங்ஙனம் கொழு நரைத் தெய்வமெனக் கொண்டு ஒழுகுதலே கற்பின் சிறந்த இலக்கணம் என்றும் நூலோர் கூறுவர்.

"கற்பெனப் படுவது சொற்றிறம் பாமை"

என்றும்,

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை"

என்றும் அற நூல்கள் கோஷிக்கின்றன.

ஆயினும் சாதாரண ஜனங்கள் கற்பென்பது ஒரு பெண் தன் கணவனை யன்றிப் பிற ஆடவரிடம் இச்சை கொள்ளாதிருத்தல் என்றும், அதுவே பதி விரதா தர்மம் என்றும் கொள்கின்றனர். இதனைப் பிறன் வழிப்பட்ட பேதை யொருத்தியைக் கற்பிழந்தவள் பதிவிரதாபங்க முற்றவள் என்று உலகம் கூறுவதால் அறியலாம்.

இனி, கற்பு என்பதன் உண்மைப் பொருள் யாதென ஆராய்வோம். கற்பு என்னும் சொல் கல்வி யென்னும் சொல்லைப் போன்று 'கல்' என்னும் பகுதியடியாகப் பிறந்து, அக்கல்வி யென்னும் பொருளையே குறிக்கின்றது. இக்காலத்திய உலக வழக்கில் கற்பு கல்வி என்பவை பொருள் வேறுபட்டுக் காணப்படினும், நூல் வழக்கில் ஒரே பொருளில் இவை வழங்கக் காண்கின் றோம்.

"நற்றா மரைக்கயத்தில் நல்லன்னம் சேர்ந்தாற்போற்
கற்றாரைக் கற்றாரே காமுறுவர்—கற்பிலா
மூர்க்கரை மூர்க்கர் உகப்பர் முதுகாட்டிற்
காக்கை யுகக்கும் பிணம்"

என்று மூதுரையில் ஔவையார் 'கற்றாரை' என்பதற்கு எதிரிடையாகக் 'கற் பிலா மூர்க்கரை' வைத்திருத்தலால் இது நன்கு உணரப்படும். இங்கே 'கற்பு' என்றதைப் பெண்களுக்கு மாத்திரம் உரிய குணமாக்கி வரையறுத்தற் கில்லை. ஆதலால் கற்பு என்னும் சொல் கல்வி என்று பொருள்படுவது வெளிப்படை.

இதற்கு மற்ெறாரு சிறந்த ஆதாரமும் காட்டுவோம். தொல்காப்பியப் பொருளதிகார உரையில் உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர், "கற்பாவது தன் கணவனைத் தெய்வமென்று உணர்வதோர் மேற்கோள்" என்று ஓரிடத்தும், மற்றோரிடத்து, "கொண்டானிற் சிறந்த தெய்வம் இன்றெனவும், அவனை இன்னவாறே வழிபடுக எனவும் இருமுது குரவர் கற்பித்தலானும், அந்தணர் திறத்தும் ஒழுகும்.........ஒழுக்கம் தலைமகள் கற்பித்தலானும் கற்பாயிற்று" என்றும், பிறிதோரிடத்தில், "அங்கியங் கடவுள் அறிகுறியாக மந்திர வகையாற் கற்பிக்கப்படுதலின் கற்பென்றார்" என்றும் விரித்துக் கூறியுள்ளார். இதனால் தலைவிக்குத் தாய் தந்தையராலும், கணவனாலும், பிறராலும் கற்பிக்கப்படும் நல்லொழுக்கமே கற்பெனப் பெயர்பெற்றது என்பது புலப்படும்.

இவ்வாறு கற்பும் கல்வியும் ஒரு பொருட் சொற்களாகவே, பெண் மக்களுக்கு எங்ஙனம் கற்பு, சிறந்த இலக்கணமோ, அங்ஙனமே கல்வியும் சிறந்ததாமென்றும், பெண்டிர்க்குப் பயிற்றுவிக்கும் கல்வி, குலம் குணம் ஆசாரம் இவற்றுக் கிசைந்ததாய் அவர் மனத்துள்ளே 'கற்பெனும் திண்மை'யை விளைத்து, 'பெண்ணிற் பெருந்தக்கயாவுள?' எனத் திருவள்ளுவரைப்போன்று திரைகடலுலகெல்லாம் மகளிரைப் போற்றத் தக்க முறையில் நடைபெற வேண்டும் என்றும் தெள்ளிதிற் புலனாகின்றது.

இப்படிப்பட்ட அரிய அழகிய இயைபமைந்த கற்பு கல்வி என்னும் சொற்கள் மேற்காட்டியவாறு தமிழ் மக்களுடைய நாகரிக மாட்சிக்கும் தமிழ்ச்சொற்களின் நயமிக்க பொருளாட்சிக்கும் தக்க எடுத்துக் காட்டாக அமைந்திருப்பது உற்று நோக்கி உணரத் தக்கது. வே. முத்துசாமி ஐயர்.

**மலைகளின் உயரம்:**—ஆசியா: ஹிமயமலையிலுள்ள எவரஸ்ட் என்னும் சிகரம், 29,002 அடிகள்; ஆல்டாய், 11,000 அடிகள். ஐரோப்பா: ஆல்ப்ஸ், 15780 அடிகள்; சியாராநிவாடா, 11420 அடிகள்; பிரனீஸ், 11170 அடிகள்; பால்கன்ஸ், 10010 அடிகள்; அபினைன்ஸ், 9,580 அடிகள்; கார்ப்பேதியன்ஸ், 8,740 அடிகள்; ஸ்காண்டினேவியன் ஆல்ப்ஸ், 8400 அடிகள்; ஆவெர்ன், 6190 அடிகள்; யூரல், 5430 அடிகள்; கிராம்பியன், 4406 அடிகள். ஆப்பிரிக்கா: கிலிமாஞ்சரோ, 19,700 அடிகள்; கெனியா, 17200 அடிகள்; ரூவன்ஜோரி, 17,000 அடிகள்; அட்லாஸ் மலை, 14,150 அடிகள்; டிரேகன்ஸ் பர்க், 11,000 அடிகள். அமெரிக்கா: ஆண்டீஸ் 23,081 அடிகள்; ராக்கிமலைகள், 19,515 அடிகள்; மெக்ஸிகன் மலைகள், 17,880; ஸாநிவாடா, 16,700 அடிகள்; காஸ்கேட் மலைகள், 16,440 அடிகள்; அல்லிகனீஸ், 6707 அடிகள். ஆஸ்திரேலியா: நியூஜீலண்ட் ஆல்பஸ், 12,348 அடிகள்; ஆஸ்திரேலியன் ஆல்ப்ஸ், 7340 அடிகள்.

**அரிய செயல்கள்:**—டாக்டர் ஓடோ லெக்டர் என்பவர் ஆஸ்திரியா பார்லிமெண்டில் 1897-ல் 12-மணி நேரம் இடைவிடாமல் பேசினார்.

காலஞ் சென்ற கிளாட்ஸ்டன் ஒருமுறை பர்மிங்ஹாமில் பேசிய பேச்சின் முதல் வாக்கியத்தில் 176 வார்த்தைகள் இருந்தன.

எட்வார்ட் ஹேல் என்பவர் ஒரு நாளைக்கு 100 மைல் வீதம் ஒரு வருடம் முழுவதும் ஸைகிள் பிரயாணம் செய்தார்.

மாண்டே குஹால்பீன் என்பவர் 12 மணி நேரத்தில் 46 மைல் நீந்தினர்.

**நதிகள்:**—ஐரோப்பாவில் உள்ள நதிகளில் மிக நீண்டது 'வால்கா' என்பது. அது 2760 மைல்கள் நீளம் உள்ளது.

ஆசியாவில் உள்ள நதிகளில் யாங்டிசிகியாங்க் என்பதே மிகவும் நீளமானது ; அது3310 மைல்.

ஆப்பிரிக்கா தேசத்தில் 3600 மைல் உள்ள நைல் நதியே மிக நீண்டது.

வட அமெரிக்காவிலுள்ள அமேஜான் நதி 4000 மைல் நீளம் உள்ளது. எல்லா நதிகளிலும் இது நீண்டது.

இங்கிலாந்திலுள்ள நதிகளில் செத்வர்ன் என்பதே நீண்டது. அதன் நீளம் 240 மைல். பிரசித்தி பெற்ற தேம்ஸ் நதியின் நீளம் 215 மைல்.

ஸ்ரீ. சே.

**சர்க்கரை:**—குழந்தைகளுக்குச் சர்க்கரை ஒரு நல்ல ஆகாரம். மழை காலத்தில் அதைக் குழந்தைகளுக்குக் கொடுத்தால் அவர்களுடைய உடம்பில் உஷ்ணம் உண்டு பண்ணுவதோடு நல்ல ஜீரண சக்தியையும் கொடுக்கிறது. சர்க்கரை சாப்பிடுவதால் இருதயத்துக்கும் பற்களுக்கும் நல்ல பலத்தைக் கொடுக்கும். அதனல் கரும்பு தின்னும் நீக்ரோ ஜாதியார்களின் கடைவாய்ப் பற்கள் நேர்த்தியாகவும் உறுதியாகவும் இருக்கின்றன. தமிழ் நாடு.

**ஆட்டுப் பால்:**—பசுவின் பாலைவிட ஆட்டுப்பால் எளிதில் ஜீரணமாகி விடுகிறது. வெண்ணெக் கொழுப்பு ஆட்டுப் பாலில் அதிகமாக இருக்கிறது. க்ஷயரோகக்கிருமிகள் ஆட்டுப்பாலிற் சிறிதும் கிடையாது. மேலும் அதிக அழகையும் அலங்காரத்தையும் விரும்பும் பெண்களுக்கு ஒரு புதிய வழியில் ஆட்டுப்பால் உபயோகப்படுகிறது. தினந்தோறும், சுமார் இரண்டு அல்லது மூன்று தடவைகள் ஆட்டுப் பாலைக்கொண்டு முகம், கழுத்து, கைகள் முதலியவைகளைச் கழுவிக் கொள்ளுவதால் அதிக அழகு ஏற்படுகிறதென்று பிரிட்டிஷ் பெண்கள் கண்டு பிடித்திருக்கின்றனர். தமிழ் நாடு.

**கிறிஸ்துவவேதம்:**—கிருஸ்துவ வேதமாகிய பைபிளில் 66 புத்தகங்கள் இருக்கின்றன. பழைய ஆகமத்தில் 39-ம் புதியதில் 27-ம் ஆகும். பழைய ஆகமத்தில் 929 அதிகாரங்களும் புதியதில் 260-ம் ஆக மொத்தம் 1189 அதிகாரங்கள் இருக்கின்றன. பழைய ஆகமத்தில் 2314 பாட்டுக்களும் புதியதில் 7959-ம் இருக்கின்றன. பைபிள் முழுவதிலும் சற்றேக்குறைய 773,680 வார்த்தைகள் இருக்கின்றன. பைபிளின் முதல் ஆங்கிலப் பதிப்பு விக்லிப் என்பவரால் 1380-ம் வருஷம் வெளி வந்தது. ஸ்ரீ. சே.

நான்கு புருஷார்த்தங்கள் :—இவ்வுலகத்தில் நான்கு புருஷார்த்தங்கள் என்று நமது பெரியோர்கள் காட்டி அருள் புரிந்திருக்கிறார்கள், அவை அறம், பொருள், இன்பம், வீடு என்பன. 1. இவற்றுள் அறமாவது கடமை. அது உனக்கும், உனது சுற்றத்தார்க்கும் பிறருக்கும் நீ செலுத்த வேண்டிய கடமை. 'பிறர்' என்பதனுள் வையக முழுதும் அடங்கும். கடமையில் தவறலாகாது. தொழில்களெல்லாம் நற்பயன் தருமிடத்து அறங்களாகும். 2. பொருள் என்பது செல்வம். நிலமும், பொன்னும், கலையும், புகழும் நிறைத்திருத்தல், நல்ல மக்களைப் பெறுதல், இனப் பெருமை சேர்தல், இவையெல்லாம் செல்வம். இச்செல்வத்தைச் சேர்த்தல் மனித உயிர்க்கு ஈசன் இட்டிருக்கும் இரண்டாங் கட்டளை. 3. இன்பம் என்பது இனிய பொருள்களுடன் உயிர் கலந்து நிற்பது. பெண், பாட்டு, கூத்து, மது முதலிய ரஸ வஸ்துக்களை அனுபவிப்பது. இவ்வின்பங்களெல்லாம், தமிழா, உனக்கு நன்றாக அமையும்படி பராசக்தி அருள் புரிக. உன்னுடைய நோய்களெல்லாம் தீர்க. உனது வறுமை தொலைக. உனக்கு இனிமையும் அழகுமுடைய வஸ்துக்களெல்லாம் வசப்படுக. பஞ்ச பூதங்களும் உனக்கு வசப்படுக. நீ எப்பொழுதும் இன்பமெய்துக. 4. வீடாவது பரமாத்மாவுடன் அறிவு கலந்து நிற்பது. வீடு, என்ற சொல்லுக்கு விடுதலை என்பது பொருள். மேற் கூறப்பட்ட மூன்று புருஷார்த்தங்களிலும் ஈடேறிய பெரியோருக்கு ஈசன் தானாகவே வீட்டு நிலை அருள் செய்வான், தமிழா, உனக்குப் புருஷார்த்தங்கள் கைகூடுக ! ஸி. சுப்பிரமணிய பாரதி.

அணு, நக்ஷத்திரம், மனிதன் :—எல்லாப் பொருள்களிலும் சிறியது அணு. பத்துக்கோடி அணுக்களை ஒன்றோடு ஒன்று பட்டுக்கொண்டிருக்கும்படியாகச் சேர்த்து ஒரே வரிசையாய் வைத்தால் அவை ஒரு அங்குல நீளம் இருக்கும். மிகச் சிறிய நக்ஷத்திரத்தின் குறுக்களவு கூட லக்ஷக்கணக்கான மைல்களால் தான் குறிப்பிடக் கூடியதாயிருக்கிறது. மிகச் சிறிய நக்ஷத்திரங்களுள் ஒன்றாகிய நமது சூரியனது குறுக்களவு 8½ லக்ஷம் மைலுக்கு மேலாக இருக்கிறது. இவ்விரண்டுக்கும் சற்றேறக்குறைய நடுநிலையில் மனிதன் இருக்கிறான். அவன் உடலில் எத்தனை அணுக்கள் இருக்கின்றன என்பதைக் குறிக்கும் தொகையை நேராகச் சொல்லுவது கூடக் கஷ்டம். ஒன்று போட்டு அதற்கப்புறம் இருபத்தேழு பூஜ்ஜியம் போட்டால் என்ன தொகை கிடைக்குமோ அத்தனை அணுக்கள் இருக்கின்றன ஒரு மனிதனது உடலில் ! அதுபோலவே ஒன்று போட்டு இருபத்தெட்டுப் பூஜ்ஜியம் போட்டால் என்ன தொகை கிடைக்குமோ அத்தனை மனிதர்கள் கொண்டது ஒரு சிறு நக்ஷத்திரம்.

அ.




பழனிப் பிள்ளைத் தமிழ்: [பிரம்மஸ்ரீ மஹாமஹோபாத்யாய தாக்ஷிணாத்ய கலாநிதி டாக்டர் உ. வே. சாமிநாத ஐயரவர்கள் பதிப்பித்தது ; கிடைக்குமிடங்கள்: தியாகராஜ விலாஸம், திருவேட்டீசுவரன் பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை ; மதுரைத் தமிழ்ச் சங்கம், மதுரை; விலை. 3 அணா.]

இறைவனைப் பலவகையிற் புனைந்துபாடி இன்புறுவது அன்பர்கள் இயல்பு. தங்களுடைய அன்பின் திறத்தைப் பல வழிகளில் தோய்த்துத் தோய்த்துச் சுவை பார்க்கும் தன்மையினர் அவர்கள். அம்முறையில் இறைவனைத் தலைவனாகவும், பிள்ளையாகவும், தாயாகவும், தந்தையாகவும் அனுபவித்துப் பாடியவர்கள் தமிழ் நாட்டிற் பலர் உண்டு. அப்படிப்பாடுவதற்குத் தமிழ் மொழியும் இடங்கொடுக்கின்றது.

பழனிப் பிள்ளைத் தமிழ் என்னும் இந்த நூல் பழனியாண்டவனைப் பிள்ளையாகக் கொண்டு பிள்ளைப் பருவமாகிய பத்திலும் அவன் செய்வதாகக் கருதும் திருவிளையாடல்களை நினைந்து பாடப்பெற்றது. இதனை இயற்றியவர் சின்னப்ப நாய்க்கர் என்பவர். முருகக் கடவுளிடத்து மெய்யன்பு பூண்டவர். இனிய எளிய நடையில் இந்தப் பிரபந்தத்தை எழுதியிருக்கின்றார். அவனுடைய புகழ் பாடுவது இவ்வாசிரியருக்கு ஓர் இனிமையை உண்டாக்கி விட்டது. அதனால்,

“தோகைக் குடையாய் நீபத் தொடையாய்
சோல்லுக் கினியானே”

என்று சொல்லி இன்புறுகின்றனர். இவர் பல இடங்களில் முருகக் கடவுள் தமிழோடு தொடர்புடைமையைப் புலப்படுத்தி யிருக்கின்றார். அகத்தியருக்குச்செந்தமிழை அறிவுறுத்தியதைப் பல முறை சொல்லுகின்றனர்.

“இசைபெறு மதுரா புரிவரு புலவோன்
இசையை வளர்ப்பவனே”

என்று அவன் நக்கீரருக்கு அருள் புரிந்தமையைக் கூறுகின்றார். அவனை,

“சங்கத் தொருவா பழனித் தலைவா”

என்று விளிக்கின்றார். இத்துணைத் தமிழ்த் தொடர்புடையவன் இருக்கும் இடம் தமிழினால் உயர்ந்திருக்கிறதாம் :

"தமிழா லுயருஞ் சிவமா மலையாய்"

என்கின்றார். சங்கத் தொருவனாக இருந்தவன் தமிழ் இருக்குமிடத்தில் தானே இருக்கவேண்டும்? சிறுபறைப் பருவத்தின் முதற்பாட்டில் முருக வேள் சிறுபறை முழக்குகையில் பல விதமான முழக்கங்களும் நிறைந்து முழங்கும் காட்சியை மனக்கண்ணால் பார்க்கிறார். அந்த முழக்கங்களில் எந்த முழக்கத்துக்கு முதல் இடம் கொடுக்கின்றார் தெரியுமா? அங்கே தான் இவருடைய தமிழ்ப் பேரார்வம் விளங்குகிறது :

"ஐவகை யிலக்கணமும் ஐங்காவி யத்துறையும்
ஆராய்ந்து பாகமுறையால்
ஆசுமது ரம்சித்ர வித்தார முஞ்சொலும்
அருங்கவிஞர் துதிமுழக்க"

என்கின்றார். தமிழ்க் கவிஞர் துதி முழக்கை முழக்கப்பெருங்கடலின் முதல் அலையாக வைத்து விடுகின்றார்; அப்புறந்தான் வேத முழக்கம் கேட்கின்றது; அதற்கப்புறம் தேவலோகத்துக் கந்தருவர் வாத்திய முழக்கம், தேவர்கள் துந்துமி முழக்கம், சங்கு முழக்கம் வருகின்றன. தமிழாலுயரும் சிவமாமலையில் தமிழுக்குத் தானே முதற் கௌரவம் இருக்க வேண்டும்?

இந்த அழகிய நூல் தமிழ் தந்தளிக்கும் தெய்வமென யாவராலும் இப்பொழுது கருதப்பெற்று வரும் ப்ரம்மஸ்ரீ மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்களால் செந்தமிழ்ப் பிரசுரமாக வெளியிடப் பெற்றிருக்கிறது. சுருங்கிய அளவில் அழகிய முகவுரை யொன்றும் ஐயரவர்களுடைய பன்னூலாராய்ச்சியைக் காட்டும் குறிப்புரையும் இப்பதிப்பை அழகு செய்கின்றன. முகவுரையில் பிள்ளைத் தமிழின் இலக்கணம், இந்தப் பிள்ளைத் தமிழில் ஒவ்வொரு பருவத்திலும் பத்துச் செய்யுளிற் குறைந்து வந்ததைப் போல வேறு நூல்களிலும் வந்திருத்தல், ஆசிரியரைப் பற்றிய செய்திகள், பழனித்தலத்தைப் பற்றி இந்நூலிற் காணப்படும் செய்திகள், இந்நூலாசிரியர் எடுத்தாண்ட சிலவகைச் சொற்கள் முதலிய பல அரிய விஷயங்கள் காணப்படுகின்றன. குறிப்புரையில் ஐயரவர்கள் பிற நூல்களிலமைத்திருப்பதைப் போலவே சங்க நூல்களிலிருந்தும் பிற்காலத்து நூல்களிலிருந்தும் உரிய மேற்கோள்களைக் காட்டிப் பொருள் விளங்கச் செய்திருக்கிறார்கள்.

இந்த நூல் அன்பர்களுக்கு ஒரு பாராயண நூலாகவும், தமிழார்வமுடையவர்களுக்கு ஒரு சிறு விருந்தாகவும் பயன்படும் என்று நம்புகிறோம்.

ச. து. க.

## புத்தக வரவு.

1. பழனி ஸ்தலமகத்துவம், 2. தருகூர்ப்பள்ளு,
3. ஆழ்வார் வைபவங்கள்.




## விநோதரசமஞ்சரி

எஸ். அனவரதவிநாயகம் பிள்ளை

தமிழ்மொழியிற் காணும் சிறந்த பழைய வசனநூல்களில் இது ஒன்று. பஞ்சதந்திரம், கதாமஞ்சரி முதலிய நூல்கள் இதற்கு முன்னே ஏற்பட்டிருந்தனவாயினும் இதற்குப் பெயர் அமைந்தது போலவே இந்நூல் விநோதரசங்கள் செறிந்து தமிழ் மக்களுக்குப் பெரிதும் உவகை தருவதாயிற்று.

இந்நூலை இயற்றிய அஷ்டாவதானம் வீராசாமி செட்டியார் சென்னை துரைத்தன வித்தியாசாலையின் தமிழ்ப் பண்டிதர்களில் ஒருவராயிருந்தனர் (*Late Tamil Pandit, Presidency College, Madras*). அவர் நூதனமாக இயற்றிய இந்நூல் மேற்படி வித்தியா சாலையில் திராவிடாந்திர பாஷா போதகராயிருந்த (*Professor of Oriental Literature, Presidency Collge, Madras*) கனம் பொருந்திய பெர்ஸிவல் ஐயரால் பிரதமத்தில் கி. பி. 1876-ல் அச்சிட்டு வழங்கியது.

இரண்டாம் பதிப்பு (*Royal 12 mo pp* ii + 428) கி. பி. 1891-ல் ஊ. புஷ்பரத செட்டியாரால் தமது கலாரத்நாகர முத்திராலயத்தில் அச்சிட்டு வெளியிடப்பட்டது. இரண்டாம் பதிப்பில் நூல் வரலாறும், இரண்டாம் பதிப்பின் வரலாறும் காணப்படுகின்றன.

முதற்பதிப்பு பிரசித்த புஸ்தக நிலயங்களி லெங்குங் காணப்படாமையானும், இவ்விரண்டாம் பதிப்பும் அருகிக் காணப்படுதலானும், இக்காலத்துப் பதிப்புக்கள் வரலாறுகளை மாற்றியுரைத்தலானும்

இரண்டாம் பதிப்பிற் காணும் இவ்விரண்டு வரலாறுகளையும் இங்குத் தருதல் பலர்க்குப் பயன்படக் கூடும்.

நூல்வரலாறு:—தமிழ்ப் பாஷையிலுள்ள நூல்கள் அனைத்தும் சாதாரணமாக உணர்தற்கரிய செய்யுள் நடையா யிருப்பதனால், அவை ஐயந் திரிபறக் கற்றோர்க்கன்றி மற்றோர்க்கு எளிதிற் புலப் படாமைநோக்கி, வசனநடையா யிருந்தால் யாவர்க்கும் உபயோக மாமென்று கருதி, சென்னைத் துரைத்தன வித்தியாசாலையில் திராவிடாந்திர பாஷா போதகராகிய கனம்பொருந்திய பெர்ஸிவல் ஐயரவர்களுடைய அனுமதி கொண்டு, மேற்படி வித்தியாசாலையில் தமிழ்ப் பண்டிதராகிய அ. வீராசாமிசெட்டியாரால் அவரவர் ஆவசிகமாக அறிய வேண்டிய விஷயங்களைத் தெய்வங்கொள்கை, கற்றாய்ந்தொழுகல், கற்புநிலைமை, செய்ந்நன்றி மறவாமை, கீத வாத்திய விநோதம், பயனி லுழவு, மகாபண்டிதனைச் சிறுபிள்ளை வென்றது, காலபேத இயல்பு முதலியவாக நூதனமாய் வகுத்தும், முற்காலத்திலிருந்த கம்பர், ஒட்டக்கூத்தர், புகழேந்தி, காளமேக முதலிய வித்வான்களின் சரித்திரங்களிலும், அவர்கள் பாடிய பாடல் களிலும் சிலவற்றைத் தொகுத்தும், அப்பாடல்களுக்கு உசிதமாக உரையெழுதியும், அவற்றால் உலக வழக்குச் செய்யுள் வழக்குகளை ஒருவாறு விளக்கியும், ஆங்காங்குச் சமயோசிதமும், சாதுரியமு மாகிய பற்பல பழமொழிகளைச் சேர்த்தும், வாசிப்பவர்களுடைய நாவிற்கு நயமும், செவிக்கின்பமும், மனதுக்கு மகிழ்ச்சியும், அறிவுக்கு விர்த்தியும், பொழுது போக்கற்கு உல்லாசமுமாம்படி சிலகாலம் தொடங்கித் தினவர்த்தமானியில் அச்சிடுவித்துப் பிரசுரம் செய்து வந்தும் அவைகள் அப்பத்திரிகையின் கையொப்பக்காரார் களுக்கேயன்றி ஏனையோர்க்குப் பயன்படாததையும், கையொப்பக் காரர்களிலும் பெரும்பான்மையோர் அப்போதப்போது பார்த்தும் பாராமலும் கைவிட்டதையும் குறித்துணர்ந்து, சகலர்க்கும் பயன் படும்பொருட்டு முழுவதும் ஒருசேரத் திரட்டி மறுபடி அச் சிட்டுப் புத்தகமாக்கி இறுதியில் அவிவேக பூரண குரு கதையும் சேர்த்து விநோதரசமஞ்சரி என்று பெயரிடப்பட்டது.

இரண்டாம் பதிப்பின் வரலாறு: சென்னைத் துரைத்தன வித்தியாசாலையில் திராவிடாந்திர பாஷா போதகராயிருந்த காலஞ் சென்ற கௌரவந் தங்கிய பேர்ஸிவல் ஐயர் (*Rev. P. Percival*) அவர்களுடைய அனுமதி கொண்டு 1876-ம் ஆண்டில் பிரசுரஞ் செய்த விநோதரச மஞ்சரி முதற் பதிப்பு செலவான பின்பு சில அசந்தர்ப்பத்தால் மறுபதிப்பு உடனே யச்சிடப்படாமல் நின்றிருந்தது.

இது சேதியறிந்த புதுவை யரசாட்சிக் குட்பட்ட காரைக்காலில் அச்சுக்கூடம் வைத்திருக்கும் புலவரொருவர் அச்சமயம் தமதியற் கைச்செயலுக் கொத்ததாக விருப்பதெனத் தேர்ந்து, உடனே விரைந்து இப்புத்தகத்தைக் காரைக்காலில் பற்பல பிழைகள் செறிய ஆபாசமா அச்சிட்டுத் திருநெல்வேலி இரங்கூன் பினங்கு முதலான தமிழ் வழங்குந் தேயங்களுக் கனுப்பி விற்றுவந்தனர்.

பிந்தி இந்நகரவச்சுக்கூடக்காரருள் அப்புலவர் செயலையவாவிய சிலரு மவ்வாறே யச்சிட்டு வழங்குகின்றனராம். அதனால் விநோத ரச மஞ்சரி படித்துத் தமிழ் வசனநடை கற்க விரும்பும் வித்தி யார்த்திகளும் அவ்வாபாசப் பதிப்புகளையே வாங்கி வாசிக்கும்படி நேர்ந்து "அன்ன நடை கற்கைப்போய் தன்னடயு மிழந்தது போல" அப்பப்புகளி னிடையிடையே செறிந்து கிடக்கும் பிழைகளைக் கற்று இடர்ப்படுகின்றனர். இதைக் கண்ட சில அறிஞர்கள், விநோதரச மஞ்சரியைப் பழையபடி திருத்தமாய் அச்சிட்டு வெளிப் படுத்துவது பேருதவியாகுமென்று தெரிவித்தனராகையால் இவ் விரண்டாம் பதிப்பிற் சிற்சிலவிடங்களைப் புதுக்கியுங் கூட்டியுந் திருத்தியும், காளமேகப் புலவர் சரித்திரம் போல ஔவையார் சரித்திரத்தையும் யாமறிந்தவாறு தொகுத்துத் தெளிவுபெற எழுதிச் சேர்த்தும், புத்தகம் இனிது முடியுமாறு சிறு கூனன் கதை ஒன்று எழுதிக் கடையிற் கூட்டியும் பிரசுரஞ் செய் தனம்.

March, 1891.

விநோதரச மஞ்சரி அடக்கம்.

10. கம்பர் இராமாயணம் பாடி அரங்கேற்றியது
11. ஒட்டக்கூத்தர் ஈட்டியெழுபது பாடியது
12. ஒட்டக்கூத்தர் சோழனுக்குப் பெண்பேசிய சரித்திரம்
13. புகழேந்திப் புலவர் நளவெண்பாப் பாடியது
14. காளமேகப்புலவர் சரித்திரம்
15. ஏகம்பவாணன் சரித்திரம்
16. அவிவேகபூரண குரு கதை

இரண்டாம் பதிப்பிற் சேர்க்கப்பட்டவை.

17. ஔவையார் சரித்திரம்
18. சிறகூனன் கதை

இக்காலத்துப் பதிப்பிற் காணப்படுவன (1921)

19. ஓர் பதிவிரதை சரித்திரம்
20. காளிதாசப் புலவர் சரித்திரம்.




# உயிர்கள் பரவிப் பெருகல்

வே. ப. சுப்பிரமணிய முதலியார்

"ஓரிடத் துயிர்த்தன பறழை ஓம்புவான்
பாரிடைப் பல்வயின் உய்க்கும் பூஞைபோல்,
காருடற் களமர்கை நாறு வாரிப்போய்ச்
சீருடைப் பணைதோறும் நடுதல் செய்வரால்[1]"

(இதன் பொருள்) ஓரிடத்திலே ஈன்றவைகளான குட்டிகளைப் பாதுகாத்தற்கு (அவைகளை அவ்விடத்திலேயே விட்டு வைத்தால் பிழைப்புக் கிடமிராதென்று, அவைகளுக்கு உணவு கிடைக்கத் தக்க) பல இடங்களில் கொண்டு போய்ச் சேர்க்கும் பூனை போல, உழவர்கள் (ஒரு வயலில் உண்டாக்கிய) நாறுகளை வாரிக்கொண்டு போய்த் (தமக்குரிய) எல்லா வயல்களிலும் நடுவார்கள் (என்பது.) உயிர்த்தன பறழ் - (பூனைகள்) ஈன்றவைகள் (ஆன) குட்டிகள். ஓம்புவான் - பாதுகாக்கும்படி. பார் இடை - பூமியில். பல்வயின் - பல இடம். உய்க்கும் - செலுத்தும்; கொண்டு போய்ச் சேர்க்கும். பூஞை - பூனை. கார் - கருமை. களமர் - உழவர். சீர் - அழகுச் செல்வம். உடை - உடைய. பணை - வயல். பணைதொறும் - எல்லா வயல்களிலும். ஆல் : அசை.

மேற்கூறியவாறு, சரமான[2] பூனைக் குட்டிகள் பிறந்த இடத்தே விட்டுவிடப்பட்டால், அவைக ளெல்லாவற்றுக்கும் போதிய உணவு கிடையாமையால், இறந்து படுமென்று, அவைகள் யாவும் உணவு பெற்று உயிர் வாழ்தற்கு உதவியாகத் தாய்ப் பூனை அவைகளைப் பல இடங்களிற் கொண்டுபோய்ச் சேர்க்கும் அதிசய இயற்கை அமைப்பு, அசரமான[3] தாவர விதைகள், பலவகைச்

---

1. காஞ்சிப் புராணம், நாட்டுப் படலம், மருத வருணனை.
2. சரிப்பவை ; சஞ்சரிப்பவை ; இடம் பெயர்பவை.
3. சரியாதவை ; நிலையாயிருப்பவை.

சாதனங்களால் பல இடங்களை அடைந்து பல்குவதை நினைவு கூரச்செய்கின்றது.

எருக்கு விதை போன்ற சில விதைகள், தம்மை ஒட்டியுள்ள பஞ்சு துணையாகவும், வேறு சில விதைகள் தமது சிற்றுருவம் அல்லது இலகுத்துவம் உதவியாகவும், முருங்கை விதை போன்ற இறகுள்ள விதைகள், அந்த இறகுகள் சகாயமாகவும் காற்றுச் செல்லும் வழியே விண்ணிலே பறந்து கொண்டேனும் மண்ணிலே உருண்டு கொண்டேனும் சென்றும்; கொடுக்குடைய சில விதைகள், தம்மை அணுகிய சரப்பொருள்களைத் தம் கொடுக்கினுல் பற்றிக் கொண்டு சென்றும்; சில விதைகள், தாம் உள்ள பழத்துடனே நெற்றுடனே பறவை மிருகங்களால் உண்ணப்பட்டு, அவற்றின் அலகு பல் முதலிய சீரணக் கருவிகள் எவற்றுலும் தீங்குருமல் தப்பி, மலத்தோடு மண்ணில் விழுந்தும்; சில விதைகள், எறும்பு முதலிய பிராணிகளால் பிற்கால உபயோகத்துக்காக் கொண்டு போய்ச் சேர்க்கப்பட்ட சேமத்தலத்திலே தின்னப்படாமல் தப்பியும்; ஆற்றங்கரை கடற்கரை முதலிய நீரோடு நிற்கும் தென்னை முதலிய மரங்களின் மிதக்கும் விதைகள் நீரோட்டத்தோடு சென்றும்; வெயிலிற் காய்ந்து வெடிக்கும் நெற்று விதைகளும், நீரில் நனைந்து வெடிக்கும் நெற்று விதைகளும் அந்த நெற்றுகள் வெடிக்கும் விசையில் திசைதோறும் தெறிக்கப்பட்டுச் சிதறுண்டும்; வேறு விதைகள் வேறு விதமாகப் பரவியும் தாம் தம்மினத்தாலும் பிற இனத்தாலும் நெருக்கப்பட்டு இறவாமல் பிழைத்து, முளைத்து, தழைத்துக்கிளைத்து, வளர்தற்கேற்ற இடங்களை அடைந்து விருத்தியாதல் வியப்பு விளைக்கும் இயற்கை அமைப்பாயிருக்கின்றது. நீர்பட்டு வெடிக்கும் நெற்று வித்துக்கள், தெறிக்கப்பட்ட தற்சமயத்தில் ஏற்ற இடம் பெறுதலேயன்றி முளைத்தற்கின்றியமையாத ஈரமும் பெறும் அநுகூலமுடையனவாயிருத்தல் கவனிக்கத் தக்கது.

மேற்கூறிய விதைகளுள் ஒருவகைப் புல் விதை கருவாகி உருவாதலும் பரவிப் பல்குதலும்பற்றி மனேன்மணீய நாடக நூலாசிரியர் அந்நூலின் மூன்ரும் அங்கத்தில் இரண்டாங்களத்தில் இனிது வருணித்திருப்பது மனத்துப் பதித்து மகிழ்ச்சியுறத் தக்கது. அது பலவகை நயம்படைத்ததோர் பகுதியென்பது, திருவாளர் க. ப. சந்தோஷ மவர்களால் 'செந்தமிழ்ச் செல்வி'யின் சிலம்பு 5, பரல் 5, பக்கம் 285-ல் இனி தெடுத்துக் காட்டப் பெற்றிருப்பதனுல் விளங்கும். அப்பகுதி வருமாறு:—

"எவ்வினை யோர்க்கும் இம்மையில் தம்மை
இயக்குதற்கு இன்பம் பயக்கும்ஓர் இலக்கு
வேண்டும். உயிர்க்குஅது தூண்டுகோல் போலாம்.
ஈண்டு எப் பொருள்தான் இலக்குஅற் றிருப்பது?
இதோ ஓ! இக்கரை மூலைத்தஇச் சிறு புல்
ஈதாதன் குறிப்பொடு சாருதல் காண்டி.
அதன்சிறு பூக்குலை அடிஒன்று உயர்த்தி
இதமனைத் தேன்துளி தாங்கி ஈக்களை
நலமனை அழைத்து நல்ஊண் அருத்திப்
பலமனைத் தனது பராகம் பரப்பி
ஆசு இலாச் சிறு காய் ஆக்கி, இதோ! என்
தூசிடைச் சிக்கும் தோட்டியும் கொடுத்தே,
இவ்வயின் யாமெலாம் செவ்விதில் துன்னில்,
தழைப்பதற்கு இடமிலை: சிறூர்! நீர் பிழைப்பதற்கு
ஏகுமின் புள்ஆ எருது அயத்து ஒருசார்
சிக்கி நீர் செல்மின் எனத்தன் சிறுவரைப்
புக்கவிட் டிருக்கும் இப் புல்.............."

# லட்சுமி

## அல்லது

## வியாசர் கனவு

### பி. ஸ்ரீ.

(1106-ம் பக்கத்தொடர்ச்சி)

### அமிர்த மதனம்—விஷ பட்சணம்

பிறகு அசுரர்கள், 'நாங்கள் உயர் குலத்தில் பிறந்தோம்' என்று சொல்லி, வாசுகியின் வாலைப் பிடித்துக் கடைய மறுப்பதையும், திருமாலும் தேவர்களும் பணிவோடு வாலைப் பற்றி நிற்பதையும், வாய்ப்புறம் நின்ற அசுரர்கள் உற்சாகமாகவும் வேகமாகவும் கடைகையில் வாசுகியின் மூச்சுக்காற்றாலும் விஷாக்கினியாலும் தகிக்கப்படுவதையும் வேடிக்கையாக நகைச் சுவையோடு வருணித்தார்.

'இங்ஙனம் தேவாசுரர் பாற்கடலைக் கடைந்து கொண்டிருக்கையில், துருவாச முனிவன் சாபத்தால் கடலில் சென்றொளித்த சுவர்க்கலோகத்துப் பொருள்களெல்லாம் மீண்டும் ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றுகின்றன. தேவாசுரர்கள் அதிவேகமாகக் கடைகிறார்கள். சமுத்திரம் அலைபட்டு மிகவும் குழம்புகிறது. அதன் வயிறு கிடங்கெழுந்து கிழிகிறது. மீண்டும் சமுத்திரம் அலை புரண்டு கதறுகிறது, அலறுகிறது. தேவாசுரர்கள் கடை கயிற்றை முறுக வாங்கிக் கடைகிறார்கள். பாற்கடல் மறுகிப் பொங்குகிறது. உடனே பிரளயகால நெருப்பை ஒத்த காளகூட விஷம் பிறக்கின்றது.

'ஆலகாலமென்னும் பெயர் வாய்ந்த அக்கொடிய மகா விஷம் உக்கிரமான வேகத்தோடு திக்கெல்லாம் போர்த்து மேலும் கீழும் பரவி நிற்கின்றது. தேவர்களும் பிறரும் நடுநடுங்கி மூச்சுத்திணற ஓட்டம் பிடிக்கிறார்கள். அப்பொழுது 'அஞ்சாதேயுங்கள்! அஞ்சாதேயுங்கள்!' என்று சிவ பெருமான் தேவர்களுக்கு அபயம் அளிக்கிறார்; விஷத்தைப் பட்சித்துத் தேவர்களை ரட்சிக்கிறார்.

'அப்பெருமான் தேவியாரை நோக்கி, "ஒருவருக்கொருவர் உதவி செய்து தியாகம் செய்வது அவசியம். நங்காய்! உயிர்

களுக்கு இரங்கி உதவி செய்வோனே உயிர்க்கு உயிராகிய இறைவனை ஆராதிப்பவன்'' என்று உபதேசிக்கிறார். அம்மகா விஷம் அதிபயங்கரமானதால் தன் கொடுமையைக் காண்பிக்க விரும்பி அவர் திருக்கழுத்திலும் கறுப்பை உண்டாக்குகிறது. சிவபெருமான் அதன் வேகத்தை அப்படியே அடக்கி வைத்து, அவ்விஷக் கறுப்பையும் ஒரு பூஷணமாகவே அணிந்து கொள்ளுகிறார். ''சிவபெருமான் கழுத்திலே தங்கிய ஆலகால விஷமும் ஓர் ஆபரணமாக விளங்குகிறது! கொடியோரும் பெரியோரைச் சேர்ந்தால், தமது கோது நீங்கி நலம் பெற்று உய்வர் என்பது உண்மையேயன்றோ?'' என்று தேவர்களும் பிறரும் அதிசயிக்கிறார்கள்.'

இவ்வாறு வியாசர் கதை சொல்லி வரும்போது ஒரு பிரமசாரி குறுக்கிட்டு, ''சிவபெருமான் விஷபட்சணம் செய்தார் என்றால், தேள்களுக்கும் பாம்புகளுக்கும் விஷம் எங்கேயிருந்து கிடைத்தது?'' என்று ஒரு கேள்வி கேட்டான்.

உடனே வியாசர் சிரித்துக் கொண்டு, ''சிவபெருமான் ஆலகால விஷத்தை உள்ளங்கையில் அடக்கிப் பட்சணம் செய்யும் போது சில விஷபிந்துக்கள் சிந்திப்போயின. அவற்றைத் தேள்களும் விஷப்பாம்புகளும் மற்றுமுள்ள விஷ ஜந்துக்களும் மகிழ்ந்து பங்கிட்டுக்கொண்டன'' என்று பதில் சொன்னார். வியாசரின் சமயோசிதமான ஹாஸ்யபுத்தியை ரிஷிகள் கொண்டாடினார்கள்.

## அமிர்த கலசமும் மாயா மோகினியும்

வியாசர் கதையைக் கண் எதிரே நடத்திக் காட்டியதோடு, கதா பாத்திரங்களான தேவாசுரர் முதலானவர்களின் இதயங்களில் புகுந்து, செருக்கு காதல் பகை வீரம் பேராசை முதலிய உணர்ச்சிகளைத் தாமே அனுபவித்து வருணித்தார்.

'சிவபெருமான் விஷபானம் செய்த பின், தேவாசுரர், 'இன்று புதியவர்களாகப் பிறந்தோம்!' என்னும் குதூகலத்தை அடைந்தவர்களாய்த் திரும்பவும் சமுத்திரத்தைக் கடைகிறார்கள். இப்பொழுது அமிர்த கலசம் எழுகிறது. அதைக் கையில் ஏந்திக் கொண்டு ஒரு மகா புருஷன் தோன்றுகிறான். தேவர்களும் அசுரர்களும் கடல் கடைந்த களைப்பை முற்றும் மறந்து விடுகிறார்கள். அசுரர்கள் வாயில் நீர் ஊறுகிறது. பாற்கடலின் சாரமாகிய அமிர்தமன்றோ இது! அவர்கள் வீண் வியவகாரங்களில் பொழுது போக்க விரும்பவில்லை. ஓடிச் சென்று மகாபுருஷனை வளைத்துக்கொள்ளுகிறார்கள்.

அப்புருஷன் கையிலிருந்து பேராசையோடு அமிர்தகலசத்தை விரைவில் பிடுங்கிக் கொள்ளுகிறார்கள். தேவர்களைப் பயப்படுத்துகிறார்கள். வலிமைக்கு உரிமையும் வேண்டுமோ?

'அப்பொழுது அங்கே மேகலையும் சிலம்பும் சப்திக்கின்றன. ஆரம் முதலிய ஆபரணங்கள் பளபளவென்று ஒளி செய்கின்றன. ஜகன் மோகன ஸ்திரீ ரூபம் ஒன்று உதயமாகிறது. இன்னதென்று அறியப்படாத—பார்க்கப் பார்க்கத் தெவிட்டாத—பேரழகோடு தோன்றும் அவ்வடிவத்தை அசுரர்களும் தேவர்களும் பார்க்கிறார்கள்.

'அம்மோகினியுருவம் திருமாலின் மாயை என்பதை அவர்கள் அறிந்து கொள்ளவில்லை. மோகினிப்பெண் கூந்தல்சோர இள நகையரும்பி அடிமலர் சிவப்ப நடந்து வருவதைக் கண்ணுற்ற தேவர்களும் அசுரர்களும் ஆச்சரியத்தால் விழுங்கப்பட்டவர்களாகி மதிமயங்கி நிற்கிறார்கள். அவர்கள் கலகத்தை மறந்து விடுகிறார்கள்; அமிர்த கலசத்தை மறந்து விடுகிறார்கள். அந்த மோகினியின் கண்களிலே அமிர்தத்தையும் ஆலகாலவிஷத்தையும் ஒருங்கே காண்கிறார்கள்.

'மோகினிப் பெண், அசுரர்கள் கலகம் செய்து கொண்டிருந்த இடத்திற்கு அருகே வந்து நிற்கிறாள். அசுரர்,

"மின்னெழுகு நுண்ணிடை
  மெலிந்துதடு மாற
அன்னமென நின்றவள்
  அடித்தளிர் இறைஞ்சி
இன்னமுதம் நல்குதி
  எமக்கென அளித்தார்."

'அமிர்தத்தைத் தேவர்களும் அசுரர்களுமாகிய எங்களுக்கு நீயே பங்கிட்டுக் கொடுக்க வேண்டும் என்று அசுரர்கள் பிரார்த்தித்த போது, மோகினியாள் குறும்பாகச் சிரித்துக் கொண்டு, "அசுர சிரேஷ்டர்களே! பண்டிதர்களே! பேதையாகிய நான் நியாயமாகப் பங்கிட்டுக் கொடுப்பேன் என்று எவ்வாறு நம்புகிறீர்கள்?" என்று கொஞ்சும் குரலில் கேட்கிறாள்.

'அக் குறுஞ்சிரிப்பும் விநோத வசனமும் அசுரர்நெஞ்சங்களை அள்ளித் திறை கொள்ளுகின்றன. அவர்கள் முன்பின் யோசனை செய்யாமல், அமிர்த கலசத்தை எடுத்து வந்து, அவள் அடிகளில் வைத்து, "பெண்ணமுதே! நீ இப்பொழுது வழங்கிய மொழியே

எங்களுக்கு இன்னமுதம்! இனி உன் இஷ்டப்படி இக் கடலமுதை விநியோகிப்பாய்!'' என்று தொழுது வேண்டுகிருர்கள்.

'மோகினியாள் அமிர்த கலசத்தைக் கையில் எடுத்துக்கொண்டு அசுரர்களைக் கடைக்கண்ணுல் கொல்வது போல நோக்கி நகையாடுகிருள். "நான் செய்வது நன்மையாஞலும் தீமையாஞலும் ஒப்புக்கொள்ளுகிறீர்களா? அப்படியாஞல்தான் இந்த அமிர்தத்தை விநியோகிப்பேன்'' என்று பிடிவாதம் செய்கிருள். அசுரர்கள் மாயா மோகினியின் மாயா விலாசத்தில் மோகித்து, "அன்னமே! நீ சொன்னபடியே செய்வோம்'' என்று இணங்குகிருர்கள்.

பிறகு மோகினி அமிர்த கலசத்தை அழகு ஒழுகும் தளிர்க் கையில் ஏந்திக் கொண்டு வருவதையும், சொல்லின் இடையே அமிர்தம் துளிக்கும் பிரியவசனங்களால் அசுரர்களை வஞ்சித்துத் தாண்டிச் செல்வதையும், சென்று தூரத்திலிருந்த தேவர்களுக்கு அமிர்தத்தை அள்ளி அள்ளி வழங்குவதையும், அசுரர் 'அமுது தா!' என்ருல், அவள், "நீங்கள் எனக்கு அளித்த வாக்குறுதியை மறத்தல் அழகோ?', என்று வெறுத்துரைப்பதையும், ''இப் பேச்சும் செய்கையுமே நமக்கு அமிழ்தம்!'' என்று அசுரர்கள் திருப்தி அடைவதையும், இவளோடு விவாதம் செய்தாலும் சிநேகத்திற்குக் குறைவு வரும் என்று அவர்கள் பயந்திருப்பதையும், "இவை யெல்லாம் உண்மையாகக் கண் முன் நடைபெறுகின்றன!'' என்று ரிஷிகள் நம்பும்படி வியாசர் கற்பனை செய்தார்.

இக் கற்பனைகளை அவர் தாம் அழகுத் தெய்வத்தைக் குறித்துக் கண்ட கனவோடு கலந்து ஒரு கதம்பம் ஆக்கிஞர். இக் கதம்பத்தை ஓர் அழகிய கதையாக்கி, ரிஷிகள் காதிலும் குருகுல மாணுக்கர் காதிலும் போட்டுப் பார்த்தார். தம் இஷ்டப்படி அவர்களைச் சிரிக்கச் செய்யவும் விம்மி விம்மி அழச் செய்யவும் பிரமிக்கச் செய்யவும் நடுங்கச் செய்யவும் தமக்கு ஆற்றல் உண்டென்பதை அவர் நன்குணர்ந்து கொண்டார். இவ்வாறு கதை சொல்லி வருவதால், தமக்கும் சீஷர்களுக்கும் இடையே சிநேக உணர்ச்சி அதிகரித்து வருகிறதென்பதையும் அனுபவத்தில் கண்டறிந்தார்.

### புராணம் பிறந்தது

இந்த இரகசியத்தை உணர்ந்த பின் இனி இத்தகைய அழகிய கதைகளால் பாரத சமுதாயத்தையே வசீகரித்து மலர்ச்சி பெறும்படி செய்யலாம் என்றும், பொது ஜனங்களிடையே நல்ல எண்ணங்

களையும் உயர்ந்த லட்சியங்களையும் விதைக்கலாமென்றும் வியாசர் நினைத்தார். தமது கற்பனைக் கதையை அக்காலத்து ஜனங்களுக்குள் வழங்கி வந்த பலவேறு பழைய கதைகளோடும் நம்பிக்கைகளோடும் சேர்த்துக் கோத்து வைத்தார். பாட்டிமார் கதைகளையும் அவர் அலட்சியம் செய்யவில்லை.

நல்ல கதைகளைத் திரட்டி ஒரு புராணம் ஆக்கினர். இக்கதைகளோடு கவிதை யழகையும் ஒருவாறு கலந்தார். பண்டிதர்க்கும் பாமரர்க்கும் ஒருங்கே இன்பம் தரும் 'செவி நுகர் கனிக'ளாகச் சொரிந்தார். இக்கதைகளைக் கேட்ட நமது முன்னோர் சந்தோஷம் அடைந்தனர். வீர வாழ்க்கையிலும் நல்லொழுக்கத்திலும் சமுதாய தர்மத்திலும் ஆசை கொண்டனர். அவர்களுடைய உற்சாகம் ஓங்கியது; அறிவு வளர்ந்தது; இதயம் விரிந்தது. அவர்கள் அக்கதைகளை அடிக்கடி கேட்க விரும்பினார்கள். வியாசர் புராணம் ஒரு சுவைக் களஞ்சியமாக இருந்தது.

வியாசரும் சிஷ்யர்களும் புராண கதைகளை எழுதி வைத்தார்கள். வியாசர் காலத்திற்குப் பின், சிஷ்யர்கள் அதிகமான கதைகளைச் சேர்த்தார்கள். அவற்றுட் சில சுவையுடையன அல்ல. என்? அவர்களுக்கு வியாசரின் ரஸிகத்தன்மை யில்லை; சௌந்தரிய உணர்ச்சி யில்லை. பிற்காலத்தாரும் கதைகளைச் சேர்த்தார்கள். அவற்றுட் சில நல்ல கதைகளும் அல்ல. எனினும் அவர்கள் வியாசர் பெயராலேயே புராணம் செய்தார்கள்.

இவ்வாறு ஒரே புராணம் நாளடைவில் பதினெட்டுப் புராணங்களாகக் கிளைத்தது. உட்புராணங்கள் தோன்றின. தல புராணங்கள் புற்றீசல் போலப் புறப்பட்டன; சமீப காலம் வரைக்கும் 'திடும்! திடும்!' என்று புறப்பட்டுக் கொண்டிருந்தன; இன்னும் சிற்சில இடங்களில் சிருஷ்டியாகி வருகின்றன. இப்புராணங்களெல்லாம் வியாசர் தலைச்சுமை யாகிவிட்டன!

ஆதியில், சௌந்தரிய உணர்ச்சியைத் தூண்டவும், மனோ தர்மத்தை வசப்படுத்திச் சமுதாய தர்மத்தை வளர்க்கவும் ஏற்பட்ட புராண உலகம் பின்னாளில் மதவெறி கொண்டவர்களின் ஏகபோக ஆட்சியில் இருந்தது. அவர்கள் தங்கள் இஷ்டப்படி அவ்வுலகத்தில் கூட்டல் கழித்தல் பெருக்கல் வகுத்தல் எல்லாம் செய்து பார்த்தார்கள். கதைகளைக் கூட்டினார்கள், பெருக்கினார்கள்; சில கதைகளைக் கழித்து விட்டார்கள். வேறு சில கதைகளை உருத்தெரியாமலே பிரித்து வைத்தார்கள். மதத்தின் பெயரால், வீரத்தை

மறந்தார்கள்; வாழ்க்கையை மறந்தார்கள் ; பல வீனத்தையும், ஒற்றுமைக் குறைவையும், முயற்சியின்மையையும், மறுலோக நினைப்பையும் ஜனங்களிடையே பிரசாரம் செய்தார்கள். 'இவையெல்லாம் கதைகள் அல்ல ; உண்மையாகவே நடந்தவை. நம்பாவிட்டால், நரகம் !' என்று பயப்படுத்தினார்கள்.

இவ்விதமாக ஜனங்களின் அறிவுக் கண்ணை மூடிவிட்டார்கள். அக் கண்ணைத் திறக்க முயன்றவர்களைப் பயப்படுத்துவதற்காகப் பல நரகங்கள் சிருஷ்டிக்கப்பட்டன. அந் நரகங்களை அவற்றின் சிருஷ்டி கர்த்தாக்களுடைய மனக்கொடுமையோடு, கருட புராணம் முதலிய புராணங்கள் படம் பிடித்து வைத்திருக்கின்றன !

## முடிவுரை

ஆதி வியாசர் கண்ட அழகிய கனவு, பிற்காலப் போலி வியாசர்களால் பாழாக்கப்பட்டது. அமிர்தத்தோடு பிறந்த அழகுத் தெய்வத்தின் கதை, பாற்கடல் கடைந்த கதையோடு இரண்டறக் கலந்து, பழைய இந்தியாவில் நமது ஜனங்களுக்குப் பேருணர்ச்சி தந்ததென்று ஊகிக்கலாம். இது சௌந்தரிய உணர்ச்சியோடு தர்ம ஆவேசத்தையும் தோற்றுவித்தது; செருக்கு, பேராசை முதலிய அசுர குணங்களைப் பரிகசித்தது; நன்னம்பிக்கையை ஊட்டியது.

இத்தகைய கதையையும் பிற்காலத்தார் தங்கள் மதப்போர்களிலே ஒரு கொலைக் கருவியாக்கி உபயோகித்துக் கொள்ள முயன்றார். "பாற்கடல் சிவனுக்கு விஷத்தைக் கொடுத்தது ; விஷ்ணுவுக்கோ லட்சுமியைக் கொடுத்தது. இதனால் எங்கள் விஷ்ணுவே முழுமுதற்கடவுள் என்பது உங்களுக்கு விளங்கவில்லையா ?" என்று சைவர்களை நோக்கி வைஷ்ணவர்கள் பரிகாசமாகக் கேட்டார்கள்.

சைவர்களும் அதே கதையை ஆதாரமாகக் கொண்டு, தங்கள் சிவபெருமானே முழுமுதற் கடவுள் என்று ஸ்தாபித்தார்கள். "சிவ பெருமான் விஷ பட்சணம் செய்யாவிட்டால், மகா லட்சுமி விதவையாகி விடுவாள் அல்லவா ?" என்று வைஷ்ணவர்களை நோக்கிச் சிரித்தார்கள்.

இந்நிலையில், கதையின் அடிப்படையான கருத்தை இருதிறத்தாரும் மறந்து விட்டனர். நாடு மத பேதங்களுக்கும் ஜாதி பேதங்

களுக்கும் ஒரு காட்சிச் சாலையாகி விட்டது. மதாவேசம், ஜாதித் திமிர் முதலிய துர்க்குணங்கள் அழகுத் தெய்வத்தைக் கொலைசெய்ய முயன்றன. 'கலியாண அவசரத்தில் தாலி கட்ட மறந்தது' போல எத்தனையோ தெய்வ வழிபாடுகளுக்கிடையே, நாம் அழகுத் தெய்வத்தை மறந்து விட்டோம் !

லட்சுமி கடாட்சத்தால், தேவர்கள் செல்வச் சிறப்பும் விசேஷ உற்சாகமும் சௌகரிய தைரிய சாகசங்களும் பெற்று, அசுரர்களை வென்று வலியழித்தனர் என்று வியாசர் சொல்லுகிறார். நாமும் அழகுத் தெய்வத்தின் அருட் செல்வம் பெற்று, நமது சமுதாய வாழ்க்கையைப் பாழாக்கும் அசுரகுணங்களை ஒழித்து முன்னேற வேண்டும்.

அழகு லட்சுமி நமது முன்னோர்களுக்கு ஆதி லட்சுமி, கஜ லட்சுமி, தன லட்சுமி, தானிய லட்சுமி, வீர லட்சுமி, விஜய லட்சுமி, சந்தான லட்சுமி, சௌபாக்கிய லட்சுமி என்ற அஷ்ட லட்சுமிகளாகக் காட்சி வழங்கினள். நமக்குச் சமீப எதிர்காலத்தில் சுதந்திர லட்சுமியாகவும் காட்சி அளிப்பாள் என்று ஆவலோடு எதிர்பார்க்கிறோம்.

அழகு வேல்க ! அழகு வாழ்க !!

# சாஸ்திரம்

## புராதன மனிதனது வாழ்க்கையும் வழக்கங்களும்

எம். டி. ராகவன்—பி. என். அப்புஸ்வாமி



(1143-ம் பக்கத் தொடர்ச்சி)

நியோலிதிக் ஸெல்ட் வகையில் மிகச் சிறந்ததாயுள்ள கருவி இதுதான் என்று கூறத்தக்க கருவி ஒன்று ஸிந்து நதிப் பள்ளத் தாக்கிலிருந்து நமக்குக் கிடைத்திருக்கிறது. அதன் சிறந்த மெருகும் பெருத்து வளர்ந்த அடியும் எகிப்து தேசத்திலும், ஸ்விட்ஸெர்லாந்து ஏரிகரை வீடுகளிலும், டென்மார்க்கிலும் கண்டெடுக்கப்பட்ட கருவிகளில் உள்ளனபோல் இருக்கின்றன.



படம் 1.

கற்கருவிகள்.

ஸிந்து நாகரிகமானது அதிலிருந்து நூறு மைலுக்குள் உள்ள மொஹேஜோதாரோவின் சிறந்த நாகரிகமாக அபிவிருத்தியடைந்தது என்பதற்கு இவை ஒருகால் அத்தாட்சிகளாயும் இருக்கலாம். நியோலிதிக் காலங்களிலே மனிதர் எங்கெங்கெல்லாம் சஞ்சரித்

தனர்? எங்கெங்கு மனித இனங்கள் யாத்திரையாயின? என்னும் விநோதமான வினாக்களெல்லாம் இவற்றினின்று எழுகின்றன. இந்தியாவிலே சரித்திர காலத்துக்கு முற்பட்டுள்ள நிலைமைகள் திர ஆராயப்பட்ட பிறகு தான் இவ் வினாக்களுக்குச் சரியான பதில் நம்மால் அளிக்க முடியும்.

நியோலிதிக் கால மனிதன் வாழ்ந்துவந்த வீடுகள் முதலியவற்றில் பெரும்பான்மையன இருந்த இடமே தெரியாதபடி முற்றிலும் அழிந்துபோயினவெனினும், தற்காலத்துக் கல்யுக மனிதர்களைப் போலவே அவனும் குடிசைகளையும் கூடாரங்களையும் இயற்றிக் கொண்டிருந்தான் என்பதற்கு ஐயமில்லை. இவற்றைத் தவிரக் குகைகளிலும், பாறைகளிடையில் உள்ள ஒதுங்குமிடங்களிலும் அவன் வாழ்ந்து வந்தான். அவன் இருக்கைகளிலெல்லாம் தற்காலம் வரை அதிகம் சிதைந்துபோகாது தங்கி நிற்கும் சேஷங்கள் என்னவென்றால் **குழி வீடுகளும் தூண் வீடுகளுமே.**

குழி வீடுகள் எனப்படுவன தற்காலத்திலே ஆழமில்லாத பள்ளங்களாகக் காணப்படுகின்றன. இவற்றைக் **குடிசை வட்டங்கள்** என்று கூறுகிறார்கள். இத்தகைய வட்டமொன்று இங்கிலாந்திலே கெண்ட் மாகாணத்திலே ஹேஸ்காமன் என்னும் இடத்திலே காணப்படுகிறது. முற்காலத்திலே இவை சுமார் நாலு ஐந்து அடி ஆழம் தோண்டப்பட்ட குழிகளாயிருந்தன. இவற்றின் குறுக்களவு ஆறு அடி முதல் முப்பது அடி வரையில் இருந்தன. குழிகளின் சுவர்களிலே சிற்சில வேளைகளில் கற்கள் பதிக்கப்பட்டிருந்தன; சிற்சில வேளைகளில் வீட்டின் தரையின் நடுவிலிருந்து ஒரு நீண்ட கொம்பு நாட்டப்பட்டிருந்தது; இது கூரைக்குத் தாங்கலாயிருந்தது. குழியின் ஓரத்திலிருந்து அதன் நடு மையம் வரை உட்புறமாகக் கழிகளையோ கொம்புகளையோ வைத்து அவற்றின் மீது கானையையோ அல்லது பிற பொருள்களையோ பரப்பிக் கூரையாக்கி வந்தனர்; சிற்சில வேளைகளில் இவற்றின்மீது களிமண்ணைப் பூசுவதும் உண்டு. சிற்சில பிரதேசங்களிலே பூமியின் மட்டத்துக்கு மேலேயே, இங்குக் காணும் குடிசைகளைவிட நன்கு இயற்றப்பட்ட குடிசைகளையும் காணலாம். அவையும் நியோலிதிக் கால மனிதனால் இயற்றப்பட்டவைதாம் என்பது அறியப்பட்டிருக்கிறது.

தூண் வீடுகள் அல்லது **பைல் வீடுகள்** என்று சொல்லப்படுபவை ஸ்விட்ஸெர்லாந்து ஏரிகரைகளில் நிறையக் காண்கின்றன. இவை சற்றேறக் குறையச் சதுக்க வடிவமானவை. நதிகளின் படுகைகளிலும் ஏரிகளிலும் நீண்ட தூண்களை நாட்டி, அவற்றின்மீது ஒரு சமமான பரப்பைச் செய்துகொண்டு, அதன் மேலே கட்டிய வீடு

கள்தாம் இவை யாவும். இக்குடிசைகள் எல்லாம் கழிகள் அல்லது தூண்களால்தான் கட்டப்பட்டுள்ளன. கழிகளை நெருக்கமாக வைத்து மெல்லிய கிளைகளாலும் வளைந்து கொடுக்கும் கொப்புக்களாலும் அவற்றை ஒன்றுகச் சேர்த்துப் பின்னிப் பிறகு அவற்றின் மீது மண்ணைப் பூசிய குடிசைகளே இவை. இவற்றின் அளவு சுமார் 30 அடி நீளமும் 20 அடி அகலமும் இருக்கும். தூண் குடிசைகளின் சேஷங்கள் இங்கிலாந்திலே சிற்சில இடங்களில்தான் இப்பொழுது காணப்படுகின்றன.



MODERN PILE VILLAGE ON THE COAST OF THE ADMIRALTY ISLANDS

படம், 2.

அட்மிரால்டி தீவுகளின் கடற்கரை யோரத்திலுள்ள
தற்காலிகத் தூண் வீடுகள்.

தற்காலத்திலே பசிபிக் மகாசமுத்திரத்திலே உள்ள அட்மிரால்டி தீவுகளின் கடற்கரையோரங்களிலே இப்பொழுது வாழ்ந்து வரும் ஒரு ஜாதியாருடைய ஏரிக் குடிசைகளைப் போலவேதான் அக்காலத்துத் தூண் குடிசைகள் இருந்திருக்கவேண்டும். இந்த ஜாதியினரின் நாகரிகமும் நியோலிதிக் ஜாதியினரின் நாகரிகமும் அவ்வாறே ஒத்திருக்கவேண்டும். இவ்வாறு நாம் எண்ணுவதற்குத் தகுந்த ஆதாரங்கள் இருக்கின்றன.

தென்னிந்தியாவிலே நியோலிதிக் குடிசைகள் இருந்தனவா இல்லையா என்பதை நாம் அறிந்துகொள்ளாததற்கு முக்கிய காரணம் ஒன்றுண்டு. அதாவது, நமது நாட்டிலே இதுவரை பூமியைத் தோண்டிப் பண்டைக்காலக் குடியிருப்புக்களைச் செவ்வையாய்ப் பரிசோதனை செய்யாததே. நமது நாட்டிலே மிகப் பழமையான காலத்துக் குடியிருப்புக்கள் அநேக இடங்களில் இருக்கின்றன. தற்காலத்துக் கிராமங்களில் அநேகம் சரித்திரத்துக்கு முற்பட்ட காலம்




படம், 3.
நியோலிதிக் காலத்து இந்தியா.

முதலாகவே அதே இடத்தில் இருந்து வந்திருக்கின்றன. அவற்றைச் சுற்றிலுமுள்ள இடங்களிலே பண்டைக்காலச் சின்னங்களும் பல அகப்படுகின்றன. கடப்பை ஜில்லாவிலே உள்ள பெத்தமுடியம் என்னும் கிராமத்திலுள்ள பதி என்னும் பழங்குடியிருப்பு இதற்கு ஓர் உதாரணமாகும். இங்குள்ள ஒரு மேட்டை 1904-ம் வருஷத்திலே சிறிது சுற்றிப் பார்த்ததைத் தவிர, அதற்குப் பின்பு வேறு எவ்விதமான ஆராய்ச்சியும் இங்கே செய்யப்படவில்லை. இவ்விடத்திலே ஒன்றன் பின் ஒன்றாக வந்துள்ள அநேக நாகரிகங்களின் சின்னங்கள் அடுக்கடுக்காக ஒன்றன்மே லொன்றாகப் படிந்திருப்பது தெரியவருகிறது. அதிலிருந்து வெவ்வேறு காலங்களிலே வெவ்வேறு வகையான நாகரிகங்களை யுடைய பற்பல ஜனங்கள் இவ்விடத்திலே தங்கிக் குடியிருந்தார்கள் என்பது ஏற்படுகிறது.

புராதன மனிதன், தானும் தன் இனமும் அழியாது தங்கி நிற்பதன் பொருட்டுத் துணிகரமான செயல்களைச் செய்து வந்தான். அவற்றினால் அவன் சுகமாக வாழ முயன்றான். இதற்கு முதன் முதலாக நிகழ்ந்த உதாரணமாகக் கூறத்தக்கது, அவன் நெருப்பை அடக்கி அதனை ஆட்சி கொண்டதே. இந்தியாவிலே காணப்படும் பாலியோலிதிக் காலத்தைச் சேர்ந்த சின்னங்களினிடையில் அவன் நெருப்பை உபயோகித்து வந்தான் என்பதை உறுதியாகக் காட்டக்கூடிய அறிகுறிகள் ஒன்றும் இதுகாறும் அகப்படவில்லை. ஆயினும் நமது நாட்டிலே பாலியோலிதிக் காலத்திலே வாழ்ந்துவந்த மனிதனுக்கு நெருப்பின் உபயோகம் தெரியும் என்பதற்கு ஐயமில்லை. பிற துறைகளில் எல்லாம் மனிதனுக்கு முற்காலம் தொட்டே வாழ்ந்துவந்த மிருகங்கள் யாவும் அவனுக்கு வழிகாட்டி நின்றன. ஆனால் தீயின் தீக்குணத்தைத் தனக்கு அடிமையாக்கித் தனக்கு இன்றியமையாத் தொழில்களை யெல்லாம் அதைக் கொண்டே செய்வித்துக் கொள்ளும் முயற்சியிலே மிருகங்கள் புரிந்துவந்த பழைய உயிர்வாழ்க்கை அனுபவமானது அவனுக்கு ஒரு சிறிதுகூடத் துணை புரியவில்லை. நேரான நெறியினின்று விலகிப் போய்ப் பெரிய ஆபத்தை விளைவிக்கக்கூடிய துணிகரமான தீரச்செயலை அவன் செய்து வந்தானென்பதற்கு இது ஓர் அத்தாட்சியாகும். இயற்கையிலே காடுகளிலே காய்ந்துலர்ந்த மரங்கள் ஒன்றோடொன்று உராய்ந்தோ அல்லது மின்னல் ஒழுகுவதாலோ தீப்பற்றியதால் உண்டாகிய காட்டுத் தீக்கள்தாம் இவனுக்கு முதன் முதலில் தீயின் வெம்மையை அறிவுறுத்தி யிருக்கவேண்டும். இவ்வாறு இயற்கையில் உண்டாகிய தீயானது கட்டைகள் குச்சிகள்

முதலியவற்றால் அவிந்துபோகாது சிற்சில செளகரியமான இடங்க ளில் வளர்க்கப்படக்கூடும் என்பதும் நாளடைவில் அவன் அனுபவத் திலிருந்து சிறிது சிறிதாக அறிந்து கொண்ட விஷயமாகும். இதன் பிறகு நெருப்பை யடக்கியாளுவது ஒருவாறு சுலபமாகத்தான் இருந்திருக்கவேண்டும். முதன் முதலில் குறுகுறுப்பால் செய்யப் பட்ட ஒரு பரிசோதனையானது நாளடைவில் இரவில் சஞ்சரிக்கும் மாமிச பக்ஷணிகளான மிருகங்களிடமிருந்து தன்னைக் காத்துக் கொள்ளுவதற்கு உரிய ஒரு துணையாகவும் அமைந்திருக்கலாம். நெருப்பினால் ஆகக்கூடிய பிற காரியங்கள் எல்லாம் பிற்காலத்தில் தான் படிப்படியாகச் சிறிதுசிறிதாக அறிந்து கொள்ளப்பட்டிருக்க வேண்டும். முதன் முதலில் மனிதன் செயற்கையால் எவ்வாறு நெருப்பை இபற்றிக்கொண்டான் என்பதை நேராகக் காட்டக்கூடிய சாக்ஷியம் ஒன்றுகூட நமக்குக் கிடைக்கவில்லை. தற்காலத்திலே அந்தமான் தீவிலேயுள்ள நாகரிகமற்ற ஒரு ஜாதியாருக்கு மட்டும் நெருப்பை எப்படிச் செயற்கையால் உண்டாக்கிக் கொள்வது என் பது சமீபகாலம்வரை தெரியாமலிருந்தது. இந்தியாவிலே பாலி யோலிதிக் மனிதனுக்கு நெருப்பை உண்டாக்கும் முறை தெரிந்து தான் இருந்தது என்பதற்குச் சந்தேகமேயில்லை.

## பிரேத ஸம்ஸ்காரம்

புராதன மனிதன் மரணத்திற்குப் பெரிதும் அஞ்சினான். மர ணத்தைப்பற்றி அவன் எவ்வாறான எண்ணங்கொண்டிருந்தான் என் பதிலிருந்து அவனுக்கு உயிர்வாழ்க்கையிலே எத்தகையதான பற்று இருந்ததென்பது தெரியவரும். புராதன மனிதன் மரணத்தை முற்றிலும் அஞ்சி எதிர்த்து வந்தான்; அவனுக்குச் சாவதற் குச் சம்மதமே கிடையாது. அவனைச் சூழ்ந்துள்ள பயங்கர நிலைமை களிலெல்லாம் சாவுதான் மிகவும் பயங்கரமானது; கோரமானது. அதுதான் அவனை மிகவும் அச்சுறுத்தியது. ஆதலால், இறவாமை என்னும் கொள்கையை ஆயுதமாகக் கொண்டு அதை எதிர்த்து வந்தான். மரணம் உண்டு என்று நம்பமாட்டேன் என்றவன் ஆயினும் சாவது உறுதிதான் என்பதையும் நம்பித்தான் ஆகவேண்டியிருந்தது. ஆதலால் மரித்தோரைப் புதைக்கும்போதெல்லாம் வருங்காலத்தை யும் பற்றி நினைத்துக்கொண்டே அக்காலத்தில் அவர்களுக்குத் தேவையாயிருக்கக்கூடியவைகளை யெல்லாம் எண்ணியே வந்திருக் கிறான். உதாரணமாக: மரித்தவன் ஒருவனைப் புதைக்கும்போது, அவன் வாழ்நாளில் உபயோகித்துவந்த ஆயுதங்களையும், கற்கோட ரியையும் ஏதோ ஒரு பிற்காலத்தில் அவை அவனுக்கு வேண்டி யிருக்குமென்று அவனோடு கூடவே அடக்கம் செய்து வந்தான்.

சிற்சில ஆயுதங்களையும் கருவிகளையும் சவத்தின் தலைக்கு அடியிலும் சிற்சிலவற்றைச் சவத்தின் கையிலும் வைத்து அடக்கம் செய்து வந்தான். இவ்வாறுதான் ஐரோப்பாவிலும் பாலியோலிதிக் காலத்திலே சவங்களை அடக்கம் செய்து வந்தனர். உயிர் இறந்துபோகாது தொடர்ந்துவரும் என்னும் எண்ணத்தாலோ, அல்லது மறு பிறப்பு உண்டு என்னும் நம்பிக்கையாலோ, அல்லது பிசாசுகளைத் திருப்தி செய்யவேண்டும் என்னும் பயத்தாலோ, இவற்றுள் எக்காரணத்தால் அவன் இவ்வாறு செய்து வந்தான் என்பது நமக்கு நிச்சயமாகச் சொல்ல முடியவில்லை. மரண பயத்தைத் தொலைத்து அவன் அச்சமின்றி வாழ விரும்பியதற்கு அவன் இவ்வாறு செய்து வந்தது ஓர் அறிகுறியாகும். மரித்தவனையும் தமது கூட்டத்திற்குள்ளேயே வைத்துப் பாதுகாத்துக் கூட்டத்தைச் சேர்ந்தவனாகக் கருதிவருவது தான் இத்தகைய செயலின் நோக்கம். அச்சம் தரும் சவத்தைத் துணிந்து பக்கத்தில் வைத்துக்கொண்டிருப்பதான இச்செயலும் புராதன மனிதனுடைய நெஞ்சின் தீரத்துக்கு ஓர் அத்தாட்சியாய் இருக்கிறது.

இந்தியாவிலும் மரித்தவரைப்பற்றி இத்தகைய கொள்கையே தான் கொள்ளப்பட்டு வந்ததாகத் தெரியவருகிறது. திருநெல்வேலி ஜில்லாவிலே ஆதிச்ச நல்லூரிலே உள்ள விஸ்தாரமான புதையல் பூமிகளைத் தோண்டிப் பார்த்ததிலிருந்து இது வெளியாகிறது. இந்த இடமானது கிட்டத்தட்ட 100 ஏகராவுக்குமேல் விஸ்தீர்ணமுள்ளதாயிருக்கிறது. இந்தியாவிலே கண்டு பிடிக்கப்பட்ட புராதனப் புதையல் பூமிகள் எல்லாவற்றிலும் இதுதான் அளவில் மிகப் பெரியது. சவத்தை அடக்கம் செய்துள்ள பெரிய சவப் பாண்டத்தின் உள்ளே காணப்படும் சிறு பானைகளிலே மரித்தவனுக்குத் தேவையான ஆகாரம் வைக்கப்பட்டிருக்கவேண்டும் என்று தோன்றுகிறது. அச் சிறு பானைகளுள் சிலவற்றில் நெல்லின் உமி இன்றும் கெடாமல் இருக்கிறது. அதனுள்ளிருந்த நெல்லின் மணியான அரிசியானது வெகு காலத்துக்கு முன்பே அழிந்துபோயிருக்கவேண்டும். அரிசி உணவுக்காகத்தான் வைக்கப்பட்டதென்பதற்கும், அது உணவை உணர்த்தும் அறிகுறிதான் என்பதற்கும் சந்தேகமில்லை. மெல்லிய பொற் கிரீடங்களும் அதிலே காணப்படுகின்றன. அவற்றிலே முக்கோண வடிவமான சிற்சில குறிகள் அலங்காரமாகப் பொறிக்கப்பட்டிருக்கின்றன. இன்னும் இவ்விடத்தை முற்றிலும் ஆராயவில்லை. ஆதலால், பண்டைக்கால உயிர் வாழ்க்கையைப் பற்றிய விஷயங்களைக் குறைவுறாது கொடுக்கும் களஞ்சியமாக இது இருந்து வருகிறது; இன்னும் வெகு காலத்துக்கு அப்படியே இருந்துவரும்.

நியோலிதிக் காலத்திலேயே மனிதர் மிருகங்களைப் பிடித்துப் பழக்கி வீட்டில் வளர்த்து வந்தாரென்பதற்கு அத்தாட்சிகள் இருக்கின்றன. நியோலிதிக் காலத்து மனிதன் பெரும்பாலும் ஆடுமாடுகளை மேய்க்கும் இயல்பினனாகவே இருந்தானென்பது தெரியவருகிறது. ஆதலால் அவனுக்கு உணவைப்பற்றிய விசாரம் அதிகம் இல்லாதிருந்தது. ஆடுமாடுகளை மேய்த்து வளர்க்கும் வாழ்க்கையானது ஒரே இடத்தில் தங்கி வாழச் செய்யும் இயல்பை உடையது. அத் தொழில் புரிவோன் திடீரென்று நினைத்து நினைத்து இடம் மாறமுடியாது. ஆயினும் ஓரிடத்தில் மேய்ச்சலுக்கு வேண்டிய புல்தரைகள் முதலியன இல்லாது போய்விட்டால் அவற்றின் பொருட்டுப் புது மேய்ச்சல் காடுகளுக்கு இடம் பெயர்ந்து போவதும் உண்டு. அவர்கள் கேவலம் இடையர்களல்ல. அவர் விவசாயத் தொழிலும் புரிந்து தான் வந்தனர். ஆதலால் இவ்விரண்டு காரணங்களாலும் ஏற்பட்ட ஒரே இடத்தில் நிலையாயுள்ள வாழ்க்கையினாலே ஜனங்கள் கூட்டங் கூட்டங்களாகவும், தொகுதிகள் தொகுதிகளாகவும் கூடி வாழும் குணத்தைப் பெறலானார்கள். இவ்வாறு கூடிச் சமூக வாழ்க்கை புரியும்போது அந்தச் சமூகத்தைச் சேர்ந்த ஒவ்வொரு தனி மனிதனும் தனக்கு வேண்டிய பொருள்களை யெல்லாம் தானே தேடிக் கொள்ளவேண்டும் என்னும் நிபந்தனை இல்லாது போய்விடும். ஆகவே ஒவ்வொரு தொழிலிலும் அவ்வத் தொழிலில் சிறந்த திறமையை உடையோர் மட்டிலுமே அமர்ந்து தம் இயல்புக்கு ஏற்றபடி சுறுசுறுப்பாகத் தொழில் நடத்தத் தொடங்குவர். இவ்வாறு இயல்போடொத்த தொழில் முறைகளால் நாகரிக வளர்ச்சி சுறுசுறுப்பாக அமையும். அவ்வாறுதான் அமைந்தது.

நாகரிக முன்னேற்றத்திலே வேட்டையாடுவது, மிருகங்களைப் பழக்கி வளர்த்து விருத்தியாக்குவது, செடி கொடி பயிர்களைப் பயிராக்குவது ஆகிய இம் மூன்றும் முக்கியமெனக் கருதத்தக்க சிறந்த படிகள். மனிதன் வேட்டைக்காரனாக ஆகுமுன்னே அவன் இரை தேடும் சுபாவத்தை உடையவனாயிருந்தான். அவன் தனக்குக் கிடைத்த அளவு தாவர உணவை உண்பான். போதாததற்குத் தன் கையில் அகப்பட்ட பூச்சிகளையும், பல்லிகள் ஆமைகள் முதலிய ஊர்வனவற்றையும், பட்சிகளையும், விலங்குகளையும் உண்டு வயிறு வளர்ப்பான். அஸ்திரங்கள் எனப்படும் வேட்டையாடுதற்குரிய ஆயுதங்களையும், பொறிகளையும், கண்ணிகள் வலைகள் தூண்டில்கள் கொக்கிகள் இவைகளையும் அவன் கண்டுபிடித்து அமைத்துக் கொண்ட பிறகுதான் அவன் வேட்டைக்காரனாக முதிர்ச்சி யடைந்தான். ஐரோப்பாவிலுள்ள பாலியோலிதிக் காலத்தினர், குகைக

ளுள் வாழ்ந்துவந்த காலத்திலே முக்கியமாக வேட்டையாடியும் மீன் பிடித்தும் தமது வயிறு வளர்த்து வந்தனர். அவர்க்கு முன் தோன்றிய நதிப்பிரவாஹ காலத்து மனிதரோவெனின் அநேகமாகத் தாவர உணவையே உண்டு வந்ததாகத் தெரிகிறது. அக்காலத்திலே இருந்த சீதோஷ்ண நிலைமைகளாலே தாவர வளர்ச்சி நன்கு உண்டாகியதால் அவர் இவ்வாறு தாவர பக்ஷணிகளாய் இருந்து வருவது சுலபமாகவே இருந்தது.

வேட்டையாடும் ஜனங்கள் பொதுவாகவே நாகரிக ஏணியின் கீழ்ப்படியில் உள்ளவர்களாக இருப்பார்கள். அவர்களுக்கு நாய் ஒன்றுதான் வீட்டிற் பழகிய பிராணி. நியோலிதிக் காலத்திலே எருமை ஆடு பன்றி முதலிய மிருகங்களை வீட்டில் பழக்கி வளர்த்ததால் அவையும் ஆகாரத்துக்கு உபயோகமாகி வந்தன. நியோலிதிக் காலம் தொட்டே ஐரோப்பாவிலே ஆடுமாடுகளைப் பழக்கி வளர்ப்பது வியவசாயத்தோடுகூட நடக்கும் தொழிலாகவே இருந்து வருகிறது. இவ்வகையான அபிவிருத்தியானது முதன் முதலில் ஆசியாவின் மேற்குப் பாகத்திலே தோன்றிற்றென்றும், அங்கிருந்து சிறிது சிறிதாக ஐரோப்பாவுக்குப் பரவிற்று என்றும் நாம் நினைக்க வேண்டி யிருக்கிறது.

கற்காலத்தின் இறுதிப் பகுதியிலேதான் உலோகங்களை மனிதர் உபயோகித்தார் என்பதைக் காட்டக்கூடிய அத்தாட்சிகள் அகப்படுகின்றன. முதன் முதலாக உபயோகிக்கப்பட்ட உலோகம் பொன் என்றுதான் தோன்றுகிறது. பழைய உலகத்திலும் புது உலகத்திலும் உள்ள ஜனங்களுக்கு இது கற்காலத்திலேயே தெரிந்திருந்தது. பொன் இயற்கையிலே பிற பொருள்களோடு சேர்க்கைப் பொருளாய்ச் சேர்ந்திராமல் சுவச்சமாய் அப்படியப்படியே தோன்றியதுதான் இதற்கு உரிய காரணமாய் இருக்கலாம். பளபள வென்று ஜொலிக்கும் பொன்னைப் புராதன மனிதன் கவனியாமல் இருந்திருக்க முடியாது. வெள்ளியையும் அவ்வாறே. ஆயினும் இவ்விரண்டு உலோகங்களையும் புராதன மனிதன் அதிகம் பயன் படுத்தவில்லை. அதனால் இவற்றின் உபயோகத்தால் நாகரிக வளர்ச்சியோ முதிர்ச்சியோ அதிகம் மாறுபாடு அடையவில்லை. பிற நாடுகளிலே செய்த ஆராய்ச்சிகளால் அங்கெல்லாம் இரும்புக் காலத்துக்கு முன்பாக வெண்கலக் காலம் என்றொரு காலம் இருந்ததாகத் தெரியவருகிறது. இந்தியாவிலே மட்டிலும் அப்படிப்பட்ட வெண்கலக் காலம் ஒன்று இருந்ததற்கு யாதோர் அடையாளமும் இல்லை. இந் நாட்டிலே வாழ்ந்த ஜனங்கள் கல்லை மட்டிலும் உபயோகித்து வந்த ஒரு காலத்திலிருந்து, முன்னேற்றமடைந்து, இரும்பையே

முழுக்க முழுக்க உபயோகிக்கத் தொடங்கினுரென்று தோற்று கிறது. நியோலிதிக் காலக் கடையிலே இரும்பைக் கவனிக்காமல் இருப்பதற்கு ஒரு விதமான காரணமும் கூறமுடியாது. இந்தியா விலே இதுதான் நடந்திருக்க வேண்டும். ஆதிச்ச நல்லூரில் தோண் டியவைகளிலிருந்து தென்னிந்தியாவிலே உலோகங்கள் எவ்வாறு உப யோகிக்கப்பட்டு வந்தன என்பது விளங்குகிறது. அங்கே காணப் படும் வெண்கலச் சாமான்கள் யாவும் அலங்காரப் பொருள்க ளாகவோ சிங்காரப்பொருள்களாகவோதாம் இருக்கின்றன. ஆயு தங்களாவது கருவிகளாவது வெண்கலத்தால் செய்யப்பட்டதாகத் தெரியவில்லை. இந்தியாவிலே ஏதாவது ஒரு காலத்திலாவது வெண் கலத்தினுல் கருவிகள் செய்யப்பட்டன என்பதற்கு யாதொரு சாக்ஷி யமும் இதுவரை கிடைக்கவில்லை. இந்தியாவிலே செம்பு ஏராள மாகக் கிடைத்து வந்திருக்கிறது. இரும்புக் கனிஜங்களும் நிறைந்து காணப்படுகின்றன. புராதன மனிதன் ஒரே காலத்தில் செம்பைக் கொண்டும் இரும்பைக் கொண்டும் கருவிகள் முதலியன வற்றைச் செய்ய முயன்று வந்திருக்கலாம். செம்பு மிகவும் மிருது வானதென்றும் அதற்கு முன் உபயோகத்திலிருந்த கல்லைக் காட்டி லும் கருவிகளாக்குவதற்கு அது அவ்வளவு பயன் உள்ளதல்ல வென் றும் எளிதாக அவன் அறிந்திருக்கலாம். ஆதலால் அந்த உலோ கத்தைக் கட்டிப்படுத்துவதற்கு ஏதாவது உபாயமுண்டா என்று ஆராய்வது அவனுக்கு அவசியமாயிருந்தது. ஆனுல் இரண்டு மூன்று உலோகங்களைக் கலந்து மிசிரலோகங்களைச் செய்யும் முறையை அக்காலத்திலே மனிதன் கண்டு பிடித்தாகவில்லை. அவர்கள் வாழ்ந்துவந்த அப் பிரதேசத்திலே தகரம் (வெள்ளீயம்) கிடையாது. அதற்கு வடக்கேயுள்ள பிரதேசத்திலேதான் அது அகப்பட்டது. இரும்பு காடினியம் மிகுந்ததால் இத்தகைய கருவிகளுக்கு மிகவும் உசிதமான மேலான பொருள் என்பது அக்காலத்திலேயே அவர் களுக்கு வெகு சீக்கிரத்தில் பிரத்தியக்ஷமாயிருக்க வேண்டும். ஆகையால் சாதாரணமாக வழங்கவேண்டிய கருவிகளை எல்லாம் இரும்பைக்கொண்டே செய்துவரத் தொடங்கினுர்கள். அலங்காரத் தொழில்களுக்கு மட்டிலுமே வெண்கலத்தை உபயோகித்து வந் தார்கள்.

மேற் கூறிய மூன்று யுகங்களில் வாழ்ந்துவந்த மனிதருள் எவர் பின் எவர் எவ்வளவு காலத்துக்குப்பின் வந்தாரென்பதைப்பற்றி ஆராய்ந்து வந்ததில், பாலியோலிதிக் நாகரிகத்துக்கும் நியோலிதிக் நாகரிகத்துக்கும் இடையே பெருங்கால வெளி யொன்று இருந் திருக்க வேண்டுமென்று தீர்மானித்திருக்கின்றனர். நியோலிதிக்

காலத்துக்கும் இரும்புக் காலத்துக்கும் இடையிலே அத்தகைய பெரும் கால வெளி ஒன்றும் இல்லை. இவற்றுள் இரும்புக் காலத்தவர் நியோலிதிக் காலத்தவரின் நேர் பரம்பரையில் வந்தவர்கள். நாகரிகத்தின் இவ்விரு படிகளும் ஒன்றன்மீதொன்று சிறிதளவு படிந்திருக்கும். தக்காணத்திலே சரித்திர காலத்துக்கு முற்பட்ட காலத்திலேயுள்ளனவாகக் காணப்படும் குடியிருப்பு மனைகளைக் கூர்ந்து ஆராய்ந்ததிலிருந்துதான் இத்தகைய முடிவைக் காட்டும் ஆதாரங்கள் நமக்குக் கிடைத்திருக்கின்றன.

சரித்திர காலத்துக்கு முற்பட்ட நாகரிகப் படிகளின் காலவரையறைகளைப்பற்றி ஒன்றும் இப்பொழுது நிச்சயமாகக் கூறமுடியாதுதான். ஆயினும் இதுவரை நடந்திருக்கிற ஆராய்ச்சிகளைக்கொண்டு ஐரோப்பாவில் காணப்பட்ட பாலியோலிதிக் நாகரிகத்தின் மேற்பகுதியானது சுமார் கி. மு. 12000-த்தில், அதாவது சற்றேறக் குறைய 14000 வருஷங்களுக்கு முன், இருந்திருக்கவேண்டும் என்றும், நியோலிதிக் நாகரிகமானது சுமார் கி. மு. 5000-த்தில் அதாவது 7000 வருஷங்களுக்குமுன் இருந்திருக்க வேண்டும் என்றும், இரும்புக் காலம் சுமார் கி. மு. 2000-த்தில், அதாவது சுமார் 4000 வருஷங்களுக்குமுன் இருந்திருக்க வேண்டும் என்றும் புராதன வஸ்து சாஸ்திரிகள் உத்தேசமாய்க் கூறுகின்றனர்.

சரித்திர காலத்துக்கு முற்பட்ட காலத்தை ஒட்டிய புராதன வஸ்து சாஸ்திரமானது அதிகம் கவனிக்கப்படாத ஓர் ஆராய்ச்சித் துறையாக இருந்து வருகிறது. நமது தென்னிந்தியாவிலே அதைக் கவனிப்பாரே இல்லை. அது மிகவும் ருசிகரமான விஷயமாய் இருப்பதாலும் அதனல் அறிவின் வளர்ச்சிக்கு மிக்க பயன் உண்டாகுமாதலாலும் கவனத்துடன் முறையாகப் போற்றிப்பாராட்டிப் பயிலுவதற்கு உரிய ஒரு நல்ல விஷயமாக அது இருந்துவருகிறது. நமது தென்னுட்டு அறிஞர் அதை நன்கு வளர்ப்பாராயின் அதனல் நமது நாட்டையொட்டிய அறிவுத் தொகுதியானது மிகவும் வளர்ச்சியுற்று மேன்மை அடையும்.

| பூதத்துவ காலங்கள். | | | மனித நாகரிகப் படிகள். | | | மனித வகைகள். | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | காலங்கள். | பிரிவுகள். | | | |
| சதுர்த்தம். | ஹாலோசின் (முழுப் புதுக் காலம்) அல்லது சமீப காலம் | | சரித்திர காலம் | ... | | நார்டிக் | நியான்துரோபிக் காலம்—நவீன கால மனித வகைகள் |
| | | | முன் இரும்புக் காலம் | ... | | ஆல்பைன் | |
| | | | வெண்கலக்காலம் | ... | | மெடிடர்ரேனியன் அல்லது மத்தியதரைக் கடல் | |
| | | | புதுக்கற்காலம் (நியோலிதிக்) | | | | |
| | ப்ளைஸ்டோசீன் (புத்தப் புதுக்காலம்) | | சந்தியாகாலம் முதற்கொண்டு நியோலிதிக் வரை | காம்பினியன் மாக்லிமோஸ் அசிலியன்-டார்டினுய்சியன் | | குரோமானியனும் பிறவகைகளும் | |
| | | கட்டிப் பனிக்குப் பிந்திய காலம் | மேல் பாலியோலிதிக் காலம் (விருத்தசிலாயுகம்) | மாக்ட்லீனியன் சொல்யூட்ரியன் ஆரினேசியன் | குகாயுகம். | | |
| | | கட்டிப் பனிக்காலம் | மத்திய பாலியோலிதிக் காலம் | மூஸ்டீரியன் | | நியான்டெர்த்தால் மனிதன் | பாலியாந்துரோபிக் காலம்—பழங்கால மனிதவகைகள் |
| | | மத்திய பனிக்காலம் | கீழ்ப் பாலியோலிதிக் காலம். | அசெலியன் செல்லியன் | நதிக்கரைகாலம். | ஹைடெல்பெர்க் மனிதன் பில்ட்டௌன் மனிதன் (ஜாவாவில் பிதிகாந்துரோபஸ்) | |
| | | கட்டிப் பனிக்காலமும், மத்திய பனிக்காலமும். | ஈயோலிதிக் காலம் (உதயசிலாயுகம்.) | முன் செல்லியன் செல்லியனுக்கு முற்பட்டது | | பீகிங் மனிதன் | |
| திருதீயம் | ப்ளையோசீன் (சற்றுப் புதுக்காலம்) | | ரோஸ்ட்ரோ காரினேட்டுக்கள் பாக்ஸால் சிக்கிமுக்கிக் கற்கள் முதலியன | | | | |

# சுத்த ஜலம்

சுசி

(1116-ம் பக்கத் தொடர்ச்சி)

## 4. நீர் நிலைகளைப் பாதுகாத்தல்

ஒரு பிரதேசத்தில் பெய்யும் மழையில் ஒரு பகுதி தரையின் வாட்டத்தை அனுசரித்து வழிந்தோடி ஆறு அல்லது ஏரியை அடைகிறது. அப் பிரதேசத்தை அந்த ஆறு அல்லது ஏரியின் "மழை பொழிநிலம்" (*Catchment area*) என்னலாம். குடி தண்ணீருக்கு உபயோகப்படும் நீர் நிலையின் மழைபொழிநிலம் மனிதர்களாலும் மிருகங்களாலும் மலமூத்திராதி அசுத்திகளை யடையாமல் எவ்வளவு செவ்வையாய்ப் பாதுகாக்கப்படுகிறதோ அவ்வளவு தண்ணீரும் சுத்தமாயும் ஆரோக்கியமாயு மிருக்கும். ஆதலால் தண்ணீருக்குரிய நகர சபையார் மழை பொழிநிலம் முழுவதையும் விலைக்கு வாங்கித் தமக்குச் சொந்தமாக்கிச் சுற்றிலும் வேலியாலடைத்து மனிதர்களும் மிருகங்களும் வர வழியின்றி வைத்துக்கொள்ள வேண்டும். மழைபொழிநிலத்தில் வீடுகளும் கிராமங்களும் இருக்கக்கூடாது. நிர்மானுஷ்யமான வனமாயிருத்தல் நலம்; இன்றேல் மனிதருக்குச் சிறிதும் சௌகரிய மில்லாதபடி புதராகவும் வனமாகவும் செயற்கையாலாக்க வேண்டும். நம்பிக்கையான காவலாளிகளை ஏற்படுத்த வேண்டும். சட்ட திட்டங்கள் ஏற்படுத்தி இத்தகைய மழை பொழி நிலங்களில் அசுத்தி செய்பவரைத் தண்டிப்பதும் ஒரு வழி.

ஆனால் சட்டங்களும் உத்தரவுகளும் எவ்வளவு கடுமையாயிருப்பினும் சாதாரணமாய்ப் பயன் படுவதில்லை. அசுத்தி செய்பவரைக் குற்றம் செய்யும்போது கண்டுபிடித்து நியாயஸ்தலத்தில் தகுந்த சாக்ஷியத்துடன் வழக்குத் தொடுத்து தண்டனை யடையச் செய்வது மிகக் கடினம். இதைவிட ஜனங்களுக்கு ஜல நிலையில் அசுத்தி செய்வது எவ்வளவு அபாய மென்பதைக் குறித்து அறிவு புகட்டுவது எளிது. அப்போது அவர்களை விரோதித்துக் கொள்ளாமல் அவர்களுடைய ஒத்துழைப்பை எதிர்பார்க்கலாம்.

மழை பொழி நிலம் சிறிதாயும் தரிசாயுமிருந்தாலல்லவோ நகர சபையால் விலைக்கு வாங்கமுடியும்? திருச்சிராப்பள்ளி முனிஸி

பாலிடியார் காவேரியின் மழை பொழி நிலம் முழுவதையும் விலைக்கு வாங்கி நிர்மானுஷ்யமான வனமாகச் செய்வதென்ருல் மைசூர் ராஜ்யத்தில் பாதி, குடகு, கோயம்புத்தூர், சேலம், திருச்சிராப்பள்ளி ஜில்லாக்களில் பெரும்பாகம் இவைகளை விலைக்கு வாங்கி அழிக்க வேண்டியதுதான்! இவ்வித மூடத்தனங்கள் செய்ய வேண்டுமென்ருவது செய்வது சாத்திய மென்ருவது நமது வாசகர்கள் நினைக்கலாகாது.

மேலும், இயன்றவரை மழை பொழி நிலத்தைச் சொந்தப் படுத்திக் கொண்டு பாதுகாப்பது நகர சபையாரின் கடமை யெனினும் சொந்தமாக்கிவிட்டதாலும் சட்டங்கள் ஏற்படுத்தி விட்டதாலும் மாத்திரம் அவ்விடத்திலிருந்து வரும் ஜலம் எக்காலத்திலும் சுத்தமானது என்று நிச்சயம் சொல்லமுடியாது. பெரிய நதிகளுக்கு மழை பொழி நிலத்தைப் பாதுகாத்தல் முடியாத காரியம். அவற்றிலுள்ள நீரைச் சுத்தி செய்தே தீரவேண்டும்.

ஜல நிலைகளைப் பாதுகாக்கும் விஷயத்தில் முக்கியமாய்க் கவனிக்கவேண்டிய தொன்றுண்டு. ஊராருக்கு உபயோகப்படுவதற்குச் சற்றுமுன் ஒரு டைபாயிடு நோயாளி லக்ஷம் கிருமிகளை ஜலத்தில் கலப்பதிலுள்ள அபாயம் மிக அதிகம். ஒரு நகரின் சாக்கடையை அதே ஜலத்தில் கலந்தாலும் பின் அதை இரண்டொரு மாத காலம் ஓர் ஏரியில் தேக்கிவைத்து உபயோகித்தால் அத்துணை அபாயம் கிடையாது.

ஆகவே, நதிகளிலும் மழை பொழி நிலத்தை யெல்லாம் பாதுகாக்க முடியாவிட்டாலும் குடிதண்ணீ ரெடுக்கு மிடத்துக்குமேல் சிறிது தூரம் வரையாவது மனிதர்களும் மிருகங்களும் அசுத்தி செய்யாமலும், சாக்கடை, குப்பை, தொழிலாலைகளிலிருந்து வரும் அழுக்கு இவை வந்து சேராமலும் பாதுகாப்பது அவசியம். குடிதண்ணீ ரெடுக்குமிடத்துக்கு அருகில் கக்கூசுகள் இருக்கக்கூடாது. மலம் கழிக்கக்கூடாது. அவ்வழியே கக்கூசு வண்டிகளும் வாளிகளும் வரக்கூடாது. வீட்டுச் சாக்கடைகளை அதனருகில் அமைத்து ஜலம் தரையில் ஊறவிடக்கூடாது. குப்பை கொட்டக்கூடாது. எச்சில் இலைகளை எறியக்கூடாது. மிஞ்சிய ஆகாரத்தை எறியக்கூடாது. அவல், பொறி, கடலை முதலியவற்றைச் சிதறக்கூடாது. செத்த பிராணிகளையும் பிணங்களையும் அவ்விடத்தினருகில் எறியவோ புதைக்கவோ கூடாது. ஆடுகள், மாடுகள், கோழிகள் இவற்றிற்கு அதனருகில் தொழுவம் அமைக்கக்கூடாது. அவற்றின் சாணம், மூத்திரம் முதலியவை ஜலத்திலோ நிலத்திலோ விழுந்து ஊறுவது அபாயம். கசாப்புக்கடைகளை ஜல நிலையினருகில்

அமைக்கக்கூடாது. மாடுகளும் மற்ற மிருகங்களும் மனிதர்களும் நகருக்குத் தண்ணீர் எடுக்குமிடத்திலும் அருகிலும் குளிக்கக் கூடாது. வண்டிகளையும் மோட்டார்களையும் அவ்விடங்களில் கழுவக்கூடாது. துணி துவைக்கக்கூடாது.




அசுத்தமான நீர்நிலை.

'இதென்ன? முனிஸிபல் விளம்பரப் பலகையில் கண்டதுபோல் ஞாபகம் வருகிறதே' என்று நினைப்பீர்கள். இவைபோன்ற விதிகளை நியூயார்க் நகர் முதல் கிராமப் பஞ்சாயத்துவரை அதிகாரிகள் விளம்பரப் பலகைளில் எழுதிய எழுத்துக்கள் மங்கிப் போய்விட்டன. இவற்றை அனுஷ்டிப்பவர்கள் மட்டும் மிகச் சிலர். அதிலும் நமது நாட்டில் 'கூடாது' என்ற ஒவ்வொரு செய்கையும் நதிகளிலும் ஏரிகளிலும் வாய்க்கால்களிலும் நிரந்தரமாய்ச் செய்யப்படுகிறது. குடி தண்ணீரும் அவ்விடத்திலேயே எடுக்கப்படுகிறது. கற்றவர் கூட, தினந்தோறும் இவ்விதம் அசுத்தி செய்யாமலிருந்தாலும், ஓய்வு நாட்களில் உல்லாசமாய் மோட்டாரிலேறி அயலூர்களுக்குப் போய் அங்குள்ள ரம்மியமான நதி வாவிகளைக் கண்டு அனுபவித்துவிட்டு வருகையில் தகாத விடத்தில் குளிக்கவும் உண்ணவும் மலம் கழிக்கவும் தயங்குவதில்லை.

குடி தண்ணீரெடுக்குமிடத்துக்கு மேல் சிறிது தூரம் பாதுகாக்க வேண்டுமென்று சொன்னோமே யொழிய எவ்வளவு என்று குறிப்பிடவில்லை. ஏனென்றால் இது இடத்தையும் பூமியின் தன்மையையும் பொறுத்தது. மேடு பள்ளமுள்ள மலைப் பிரதேசங்களில் வெகு தூரத்திலிருந்துகூட அசுத்தி நேரே ஜலத்திற்கு ஓடிவந்து கலக்கும். கல் களிமண் மிகுந்த நிலத்தில் பூமியிலிறங்காமல் அசுத்தி ஜல நிலையையடையும். மணற்பாங்கான சமவெளியில் சமீபத்திலுள்ள அசுத்திகூட மணலில் உறிஞ்சப்படும்; பின் பலவித மாறுபாடுகளடைந்து சுத்தமாய்விடும்.

ஊற்று நீரைப் பாதுகாப்பதற்குத் தரைமட்டத்திலிருந்து ஓடி வரும் நீர் அதனுடன் கலக்காமல் தடுக்க வேண்டும். சில சமயங் களில் ஊற்றிலிருந்து இறைக்கப்படும் நீர் அவ்விடத்திற்கே திரும்பிப் போவதால் ஊற்று அசுத்தியடைகிறது. சரியான சுவர்களும் சுற்றிலும் தளமும் ஜலதாரையுமில்லாத கிராமப் பொதுக் கிணறு களிலும் சுனைகளிலும் ஊரார் தமது வாளிகளையும் பாத்திரங்களையும் இஷ்டம் போலிட்டு நீர் மொண்டு அவ்விடத்திலேயே பல் தேய்த்துக் குளித்துத் துணி துவைக்கிறார்கள். அப்போது எச்சிலும், குளித்த ஜலமும், பாத்திரம் துணிகள் கழுவிய நீரும் அந்தச் சுனையையும் கிணற்றையும் தரை மட்டத்திலோ சற்றுக் கீழேயோ போய்ச் சேரும். அதுமுதல் ஜலம் அசுத்தமடையும். குழாய்க் கிணறுகள் திறந்த கிணறுகளைப்போல் அவ்வளவு இலகுவாய் அசுத்தமடை யாது. அவற்றிற்கும் இறைத்த நீர் கீழ் நோக்கி ஓடாமல் தள வரி சையும் ஜலதாரையும் அவசியம் கட்டவேண்டும். முதலில் தண்ணீர் வருவதற்காகப் பம்புக்குள் நிரப்பும் நீர் சந்தேகமறச் சுத்தமாயிருக்க வேண்டும்.

மணற் பூமியில் பத்தடி ஆழத்துக்குக் கீழிருந்து ஊறும் நீர் குடிக்கத் தகுந்தது. ஆழம் குறையக் குறைய பூமிமட்டத்திலுள்ள அசுத்திகள் கலக்கும். கடலோரத்திலுள்ள மணல் ஊற்றுகளில் கடுப்புக் காணப்படும். நீரிலுள்ள அசுத்தத்தைப் போக்குவதற்கு நிலத்தில் பிராண வாயு இருக்கவேண்டும். நிலத்தில் நீர் எப்பொழு தும் பெய்து கொண்டேயிருந்தால் காற்றும் (அதனுடன் பிராண வாயுவும்) தங்க இடமிராது. பிரகிருதியில் பூமியில் மழை நின்ற பின் காற்றுப் புகுந்து நீரைச் சுத்திசெய்கிறது. மணல், சரளை, சுக்கான் பாறை முதலிய பூமிகளில் காற்றுப் புக இடை வெளி களிருப்பதால் அங்குள்ள ஊற்று நீர், களிமண்போன்ற இடை வெளியற்ற விடங்களில் தோன்றும் ஊற்றைவிடச் சுத்தமாயிருக்கும். நுண்ணுயிர்களில் காற்றிலும் ஒளியிலும் பெருகக்கூடிய மகாவர்க்க மொன்றிருக்கிறது. இவற்றை 'பவனக்கிருமிகள்' (*Aerobic bacteria*) என்பார்கள். இவைகளுக்கு எதிராக இருளில் பெருகக் கூடிய வர்க்கத்தை 'இருட்கிருமிகள்' (*Anaerobic bacteria*) என் பார்கள். பவனக்கிருமிகள் இருட்கிருமிகளைக் காட்டிலும் சீக்கிரமாக ஜலத்தின் அசுத்திகளைச் சுத்தப்படுத்தும். இதனாற்றான் காற்றும் பிராணவாயுவும் உட்புகக்கூடிய பூமியில் நீர் சீக்கிரம் சுத்தியடைகிற தென்பார். நகரங்களில் வீடுகளின் நெருக்கத்தாலும், ரஸ்தாக்கள் தார், கான்கிரீட் இவைகளாலாக்கப்பட்டிருப்பதாலும் மழைநீர் பூமிக்குள் இறங்கவும் அதிக இடமில்லை. இதனால் நகரங்களிலுள்ள

ஆழம் குறைந்த கிணறுகளில் ஊறும் நீர் சற்று அசுத்தமாகவே யிருக்கிறது.

ஆழ்ந்த கிணறுகளில் ஜலத்தை அதிவேகமாய் இறைத்தால் அப்போது வெகு தூரத்திலிருந்து கூட அசுசியான கசிவு நீர் அவ்விடத்தை நோக்கி ஓடிவரும். ஆகையால் கிணறுகளில் இறைப்பதை மட்டுக்கு மிஞ்சி விடக்கூடாது; மிஞ்சினுல் நீர் கெட்டுப் போய்விடும்.

கிணறுகளில் நீரோட்டம் (*Water Table*) தரைக்குப் பத்தடிக்குக் கீழிருந்து அவற்றைச் சுற்றிலும் 50 அடி தூரத்திற்குச் சிறு மணலிருந்தால் ஊறும் நீர் அநேகமாய்ச் சுத்தமாயிருக்கும். மணலில்லாவிட்டால் செயற்கையாலாவது 10 அடிக்குக் குறையாமல், கூடுமாயின் 50 அடியகலத்துக்கு மணலைச் சூழ அமைப்பது நன்று.

ஆழமில்லாத கிணறுகளில் சுவர் தரைமட்டம் முதல் நீர் மட்டம் வரை பொந்து வெடிப்புகளின்றி ஜலம் அருகிலிருந்து வர வழியில்லாமலிருக்கவேண்டும், குறைந்தது 5 அடி ஆழத்துக்காவது இப்படியிருப்பது நலம். கூடுமானுல் 10 அடி ஆழத்துக்கு இப்படிச் செய்யவேண்டும். கைபிடிச் சுவர்கள் தரை மட்டத்துக்குமேல் ஓரடியாவது உயர்ந்திருக்கவேண்டும்; 2 அடி உயரமிருப்பது நலம். கிணற்றுக்குள் ஜலம் ஒழுகாதபடி மூடி போடவேண்டும். (இந்தியாவில் இதை அனுசரிக்க ஜனங்கள் ஒப்பார்). மூடி இரும்பிலாவது கான்கிரீட்டிலாவது செய்யலாம். கிணற்றைச் சுற்றிலும் தண்ணீர் இறங்காத கான்கிரீட் அல்லது கற்றளம் குறைந்தது ஐந்தடி அகலத்துக்காவது இருக்கவேண்டும். தளத்துக்கும் தரைக்கும், அவைமேல் விழும் நீர் கிணற்றைநோக்கி யோடாமல் எதிர்முகமா யோடத் தகுந்த வாட்டம் கொடுக்கவேண்டும். நீரை இட்டுச் செல்ல 25 அடி தூரத்துக்காவது கான்கிரீட் அல்லது செங்கற் சுண்ணும்பால் செவ்வையாய்க் கட்டப்பட்ட ஜலதாரை வேண்டும்.

கிணற்றில் யாரும் இஷ்டம்போல் தங்கள் பாத்திரங்களையும் கயிறுகளையும் இட்டுத் தண்ணீர் எடுப்பது ஆபத்து. பம்பு வைப்பது நலம். அப்போது கைபடாமல் எடுக்கலாம். பம்பிலிருந்து வெளி வந்த நீர் போதிய கனமுள்ள மண் வழியாய் ஊறினலன்றிக் கிணற்றுக்குத் திரும்ப முடியாதபடி அமைக்கவேண்டும்.

கிணற்றின் சுவர் மேல்மட்டத்தில் அருகிலுள்ள தண்ணீர் கசிய இடங்கொடுக்கும் போலிருந்தால் கசிவை நிறுத்துவதற்குச் சுவரைச் சுற்றிலும் வெண்ணெய்போன்ற கொழுங்களிமண்ணைச் சுமந்து இறக்குவது நல்லது.

ஒவ்வொரு கிணற்றைச் சுற்றிலும் குறைந்தது 5 அடி நிலமாவது அசுத்தப்படாமல் பாதுகாக்கப்படவேண்டும். 5 அடிக்கு மேலிருப்பது நலம்.

கிணற்றின் மூடியில் காற்றோட்டத்திற்காகத் துவாரங்களமைக்கப்பட்டிருந்தால் அவற்றின் வழியாய்ப் பூச்சிகளும் சிறு ஜந்துக்களும் போக இடமிருக்கக்கூடாது.

சரியா யமைக்கப்படாமல் அசுத்தியடையும் கிணறுகளுக்கும் செவ்வையா யமைக்கப்பட்டவைக்கும் உதாரணங்களைப் பின் உள்ள படங்களில் பார்க்க.




அனுரோக்கியமான கிணறு.

[குறிப்பு:—நீர்மட்டம் தரையினருகிலிருப்பதையும் தரைக்குக் கிணற்றை நோக்கி வாட்டம் இருப்பதையும் கரையில்லாது பொந்துகளுடன் கற்சுவர் கட்டப்பட்டிருப்பதையும் அதன் மூலம் அருகில் உள்ள நீர் கசிவதையும் ஆள் இறங்கப் படிக்கற்கள் இருப்பதையும் அடிவரை ஊற்றுக்குறைவான களிமண்ணில் அமைந்திருப்பதையும் மரவேர் கிணற்றினுட் புகுவதையும் கவனிக்க.]




ஆரோக்கியமான குழாய்க்கிணறு.

[குறிப்பு:—நீரோட்டம் ஆழ்ந்திருப்பதையும், ஊற்றுநீர் வரும் குழாயில் ஆழத்தில் மட்டுமே கண்களிருப்பதையும் கவனிக்க.]




ஆரோக்கியமான கிணறு.

[குறிப்பு:—நீரோட்டம் ஆழ்ந்திருப்பதையும், தளம், தரைவாட்டம், மூடி, ஜலதாரை இவற்றையும், சுவர் நீரோட்டம்வரை கசிவுக்கு இடமின்றிக் கட்டப்பட்டிருப்பதையும் அதற்கும் மேல்கிணற்றைச் சுற்றி மேல்மட்டத்தில் தண்ணீர் இறங்காதபடி களிமண் இடிக்கப்பட்டிருப்பதையும் கவனிக்க.]

(தொடரும்)

# ஆகாயக் கப்பல்கள்

டி. என். கிருஷ்ணசாமி ஐயர்

தற்காலத்தில், ஆகாசமார்க்கமாய் ஒரு பெரிய மோட்டார் வண்டி கர்ச்சனைபோல் 'பிர்' என்று ஒரு சப்தம் கிளம்பிவருமாகில் அது ஆங்கிலத்தில் ஏரோப்ளேன் என்று சொல்லப்பட்ட ஆகாசக் கப்பலின் சப்தம் என்பது சிறு குழந்தைகள் முதல் எல்லாருக்கும் தெரிந்த விஷயம். அந்த சப்தத்தைக் கேட்டவுடன் எல்லாரும் வெளியேவந்து அதைப் பார்த்து ஒருவித ஆச்சரியத்தையும் ஆனந்தத்தையும் அடைகிறோம். 'என்ன ஜோராய் பறந்து போகிறான் பாரடா!' என்று சிலர் சொல்லுவார்கள். 'நமக்கு இதுமாதிரி ஒன்றிருந்தால், நினைத்தவிடத்திற்குப் பறந்து போகலாமே' என்று சொல்லுவார் மற்றும் சிலர். இன்னும் சிலர் 'இதைக் கண்டுபிடித்தவன் தானடா கெட்டிக்காரன்' என்பார்கள். 'தவறிப்போய் இந்த கப்பல் கீழேவிழுமாகில் அதிலிருப்பவன் கதி என்னவென்று சிலர் சொல்லுவதுடன், இவனுக்கு ஒருநாளில்லாவிட்டால் ஒருநாள் இதிலேதான் மரணம்' என்று ஜோசியமும் சொல்லுவார்கள். அப்படி சாபம் கொடுத்தாலும் அவர்கள்கூட அந்தக்கப்பல் கண்ணுக்கு மறைகிறவரையில் பார்த்துச் சந்தோஷப்படுகிறார்கள் என்பதற்குச் சந்தேகமில்லை, இந்தமாதிரிபார்த்து ஆனந்தப்படுவது, நமக்கெல்லாம் சகஜமான குணம்தான். பூலோக சிருஷ்டி ஆரம்பத்தில் மனுஷன் சூரியன் உதித்த காட்சியைப்பார்த்து எவ்வளவு திகைத்துப் போயிருக்கவேண்டும் என்று யோசித்துப்பாருங்கள். அதே மாதிரி பௌதிக சாஸ்திர சம்பந்தமாய்ப் புதிது புதிதாய்க் கண்டுபிடிக்கப்படுகிற ஒவ்வொரு யந்திரமும், கருவியும், அளவில்லாத ஆச்சரியத்தை உண்டாக்குகின்றன. இந்தக் காலத்தில் தெருவில் ஒரு சைகில் வண்டிபோனால் பச்சைக் குழந்தைகூடக் கவனித்துப் பார்க்கிறதில்லை. ஆனால் சுமார் 30 வருஷங்களுக்கு முன் முதல் முதல் நம் தேசத்துக்கு சைகில் வந்தபோது, அதைக் கண்டு ஆனந்திக்காதவர்கள் ஒருவருமில்லை. சிலர் சந்தோஷம் அடக்க முடியாமல் அதைப்பின் தொடர்ந்து ஓடினார்களாம். அதேமாதிரி இப்பொழுதும் ஒரு மோடார் வண்டி ஒரு கிராமாந்தரத்துக்கு வந்துவிட்டால், அதைச்சுற்றி எவ்வளவு கூட்டம் கூடிவிடுகிறது என்பதை நாம் அனுபவத்தில் காண்கிறோம். ஒரு நாட்டுப்புறத்தான் பட்டணத்துக்கு வந்தால் அவன் ரயில் வண்டி, டிராம் வண்டி,

காந்த விளக்குகள் இவையெல்லாவற்றையும் பார்த்துப் பிரமிக்கிறன். அப்படி அவன் பிரமிப்பது, நமக்குக் கேலியாயிருக்கிறது. நமக்கோ, மேல் சொன்னவைகளெல்லாம், 'பழகப் பழகப் பாலும் புளிக்கும்' என்பது போல் ஆய்விட்டன. ஆனல் ஆகாயக் கப்பல் மாத்திரம் அதிகப் பழக்கமாகாததால் பார்க்க இன்னும் விநோதமாகவே இருந்து வருகிறது.

அநேக நூற்றுண்டுகளாய், மனிதனுக்கு, பக்ஷிகளைப்போல, உல்லாசமாய் பறக்கவேண்டுமென்று ஆசை இருந்துகொண்டிருந்தது. ராமாயணம், மகாபாரதம், புராணங்கள் முதலியவைகளிலும் இன்னும் அநேக காவியங்களிலும், ஆகாய விமானங்களைப் பற்றிப் பலமுறை எழுதப்பட்டிருக்கிறது. யுத்தகளத்திலும் விமானங்களிலேறிக்கொண்டு சண்டை போட்டதாகவும், அந்நூல்களில் படிக்கிறேம். ஆனல், அப்படிப்பட்ட விமானங்கள் தற்காலத்து அனுபவத்தில் காணப்படும் விமானங்களைப் போலிருந்தனவோ, அல்லது வேறு யந்திரசக்தியால் பறந்து கொண்டிருந்தனவோ என்பது நம்மால் அறிய முடியவில்லை. ஒருவேளை அவையெல்லாம் நூலாசிரியர்களின் வீண் கட்டுக்கதைகளாயிருக்கலாம். விமானங்கள் அந்த நாள்களில் இருந்தது பொய்யா யிருந்தாலும், மனிதர்கள் அடிக்கடி பட்சிகளைப்போல் தாங்களும் இரண்டு பெரிய சிறகைக் கட்டிக்கொண்டு பறக்க யத்தனித்ததைச் சரித்திர மூலமாய்த் தெரிந்துகொள்கிறேம். அப்படி வீண் முரட்டுத் தைரியத்தால் அநேகர் கோபுரங்களிலிருந்தும், சார்புகளிலிருந்தும் குதித்து உயிர் மாண்டிருக்கிறர்கள். சிறகுகளை மாத்திரம் கட்டிக் கொண்டு அவைகளை அடிப்பதினல் பறந்து விடலாம் என்று எண்ணினது முட்டாள்தனம் என்றே சொல்லவேண்டும். சுயமாக இறக்கைகள் அமைக்கப்பட்ட குஞ்சுகள்கூடக் கொஞ்சம் நாள் வரையில் தாய்ப் பட்சியினிடம் பறக்க நன்றுகக் கற்றுகொண்டு தான் தனியாகப் பறக்க ஆரம்பிக்கின்றன. அப்படி நன்றுய்ப் பறக்கத் தெரியாமல் சிறகுகளிருந்தும், குஞ்சுகள் 'பொத்' என்று கீழே விழுகிறதை நாம் பார்க்கிறேம் அல்லவா? ஆகையால் சிறகுகளை அடிக்கும் முறையொன்றிருக்கிறதென்றும், அவைகளைச் சரியான வழியில் உபயோகித்தால்தான், எந்தக்காற்றிலும் விழாமல் பறக்கக்கூடும் என்றும் நன்றுய் விளங்குகிறது. இதைச் சரியாய் அறிந்து கொள்ளாமல்தான் அநேகர் முன்காலத்தில் தவறி விழுந்து மாண்டார்கள்.

தற்காலத்தில், ஆகாயத்தில் பறக்கும் விமானங்களில் இரண்டு வகை யுண்டு. காற்றைவிடப் பளுவானதாக, பெரிய கருடன்போல்

பறந்துவரும் ஏரோப்ளேன் என்று சொல்லப்படுகிற விமானங்கள் ஒரு வகை. காற்றைவிட இலேசானதாய் டிர்ஜிபில் அல்லது ஜேப்பலின் என்று சொல்லப்படும் ஆகாயக் கப்பல்கள் மற்றொருவகை. இவைகள் பெரியனவாகவும், கோழிமுட்டை அல்லது மீன் உருவமுள்ளனவாயுமிருக்கும். ஜர்மனி தேசத்தில்தான் முதலில் இவை அப்பியாசத்துக்குக் கொண்டுவரப்பட்டது. நடந்த பெரிய ஐரோப்பிய யுத்தத்தில் ஆயிரக்கணக்கானக் கப்பல்களை ஜர்மானியர் உபயோகித்தார்கள். அவைகளைப்பார்த்து பிரிட்டிஷ் ராஜாங்கத்தார் அநேகம் கப்பல்கள் தயார் செய்து கொண்டார்கள். ஒருகப்பல் தயார் செய்யச் சுமார் ஒன்றரைக்கோடி ரூபாயாகிறதாம். ஆர் 101 என்று பெயர் வகித்த கடைசியாய்க் கட்டின பிரிட்டிஷ் கப்பல் முதல் பிரயாணத்திலேயே சென்ற வருஷம் எரிந்து நாசமடைந்து விட்டது.

நம் முன்னோர்கள் பட்சிகளைப்போலப் பறக்க முயன்றும் அவ் விஷயத்தில் அவ்வளவாகப் பயிற்சியடையவில்லை. ஆனால் அவர்களுக்கு ஆகாயத்தில் புகைக்கூண்டுகள் பறக்கவிடும் விஷயம் நன்றாகத் தெரிந்திருந்தது. இப்பொழுதும் நம் நாட்டில், கார்த்திகைப் பண்டிகையில், இப்படிப்பட்ட புகைக்கூண்டுகளைப் பறக்க விடுவதை அநேகர் பார்த்திருக்கலாம். இதைப்போல, பெரியதாக ஒன்று தயார் செய்து கி. பி. 1782-ம் வருஷத்தில், பிரான்சு தேசத்தில், மண்ட்கோல்பியர் (*Montgolfier*) என்பவர் ஆகாயத்தில் கிளம்பச் செய்தார். அந்தக்கூண்டு மெல்லிய பட்டுத் துணிகளால் தயாரிக்கப் பட்டது. சுமார் 35 அடி உயரமிருந்தது. அதற்கு ஒரு பெரிய இரும்புக் கூடையைக் கீழாகக் கட்டிவிட்டு, அதில் புல்லும் செத்தைகளும் போட்டு எரித்தார். சூடான காற்றும், புகையும் அந்தக் கூண்டில் நிரம்பவே அது மேல் கிளம்பி சுமார் ஒரு மைல்தூரம் சென்று கொஞ்சதூரத்துக்கப்பால் மறுபடியும் கீழே இறங்கிற்று. இதை அநேக ஜனங்கள் பார்த்து ஆனந்திக்க அந்தச் சாஸ்திரி இன்னும் ஒரு பெரிய கூண்டு தயாரித்து ஒரு சிறு கூடையில் ஒரு கோழியையும், ஓர் ஆட்டையும், ஒரு வாத்தையும் ஏற்றிக் கூண்டைப் பறக்கவிட்டார். முன் போலவே மேலே சென்று கூண்டு இறங்கி வந்தது. போன பிராணிகள் க்ஷேமமாய்த் திரும்பி வந்தன. இந்த மூன்று நிலம்வாழ்ஜந்துக்கள்தாம் முதன் முதலாக ஆகாயத்தில் பிரயாணம் செய்தவைகள். அதைக்கண்டு தைரியமடைந்து அடுத்த வருஷம் பிலாடர் (*Pilatre*) என்பவர் தாமே கூண்டில் ஏறிச் சென்று வந்தார். இவர்தாம் முதலில் ஆகாயத்தில் பிரயாணம் செய்து வந்த மனிதர்.



படம், 1. சூடான காற்றுக் கூண்டுகள்.

மேல்சொன்ன கூண்டுகளைச் சூடான காற்றுக் கூண்டுகள் (*Hot air balloons*) (படம், 1) என்று சொல்லலாம். சூடான காற்று, குளிர்ந்த காற்றைவிட இலேசானது. ஜலத்தைவிட நெட்டி இலேசானதல்லவா? ஒரு நெட்டித் துண்டை ஜலத்திற்குள் அழுத்தினுல் அது மேல் கிளம்பி வரும். அது போலச் சூடான காற்று நிரம்பின கூண்டானது மேல்கிளம்பிச் செல்லுகிறது. அதுபோலவேதான் கொதிக்கிற ஜலத்திலிருந்து வரும் நீராவியானது மேல் கிளம்பி ஆகாய மார்க்கம் சென்று மேகங்களாக நமக்குக் காணப்படுகிறது. அப்படிப்பட்ட சூடான காற்று நிரம்பின கூண்டுகள் சரிவரக் கிளம்பிப் போகிறதைப் பார்த்துச் சில பௌதிகசாஸ்திரிகள், அப்போது புதிதாய்க் கண்டுபிடிக்கப்பட்ட ஜலவாயு (*Hydrogen*)வை கூண்டில் நிரப்பியனுப்ப உத்தேசித்தார்கள். ஜலவாயு மிகவும் இலேசான ஒரு காற்று. அதை இங்கிலாந்து தேசத்தில் கேவன்டிஷ் (*Cavendish*) என்னும் ஒருவர் கண்டுபிடித்தார். துத்தநாகத்தைக் கந்தகத்

திராவகத்தில் போட்டால் இந்த ஜலவாயு ஏராளமாகக் கிளம்பி வரும். இந்த வாயு பூலோகத்தில் காணும் எல்லா வஸ்துக்களிலும் இலேசானது. நெருப்புப்பட்டால், இது எரிந்து ஜலமாகிவிடுகிற தென்று ரசாயன சாஸ்திரத்தில் சொல்லப்படுகிறது. இந்தக் காற்றை ஒரு கூண்டில் நிரப்பி, பாரிஸ் நகரத்தில் (*Charles*) சார்லஸ் என்பவர் ஆகாசமார்க்க மனுப்பினர். இந்தக்கூண்டானது அதி வேகமாய்ச் சுமார் 13000 அடி உயரம் கிளம்பித் திரும்பி வந்ததாக இந்தக்கூண்டில் வைத்திருந்த வாயுமானிக் கருவியால் தெரியவந்தது. இந்தக்கூண்டானது மேலே கிளம்பிப் பாரிஸ் நகரத்துக்கருகில் ஒரு கிராமத்தில் வந்து விழுந்தது. அந்தக்கிராமக் குடியானவர்கள் அதைக்கண்டு பயந்து ஏதோ பெரிய பூதம் என்றெண்ணி கத்திகளாலும் ஈட்டிகளாலும் குத்தி அதைக் கிழித்துவிட்டார்கள்.



படம், 2. ஜலவாயுக் கூண்டு.

இப்பேர்ப்பட்ட ஜலவாயுக் கூண்டுகளை (படம். 2), அநேகர் தயார் செய்து பிரான்சு தேசத்தில் வேடிக்கையாய் விடத்தொடங்கினார்கள். இவைகளைக்கண்டு, பொது ஜனங்கள் கிராமாந்தரங்களில் வீண் திகிலடைகிறதைக் கேள்விப்பட்டு, ராஜாங்கத்தில் இந்தக் கூண்டுகளைப்பற்றி ஒரு பிரகடனத்தைக் கிராமங்களுக்கெல்லாம் அனுப்பி ஜனங்களுக்கு அபயம் கொடுத்தார்கள். ஐரோப்பாக்கண்டத்தில் மற்றதேசத்தார் இந்தச்சமாசாரங்களைக் கேள்விப்பட்டு அதேமாதிரி கூண்டுகள் தயார்செய்து விடத்தொடங்கினார்கள். நாடெங்கும் கூண்டுப் பைத்தியம் பிடித்துவிட்டது. ஒருவருக்கொருவர் போட்டி போட்டுக்கொண்டு, யார் கூண்டு அதிக உயரம் கிளம்புகிற தென்று பந்தயங்கள் வைத்தார்கள். இச்சமயம், இங்கிலாந்து தேசத்தில் 1870-ம் வருஷத்தில் கிளேஷர் (*Glaisher*) என்னும் ஒரு வான சாஸ்திரியும் காக்ஸ்வெல் (*Cox-well*) என்று பெயர்கொண்ட அவருடைய சிநேகிதருமாக 35,000 அடி உயரம் (சுமார் 6 மைல்) கூண்டிலேயே சென்று வந்தார்கள். பூமிக்குமேல் பரவியிருக்கும் காற்றின் குணாதிசயங்களைப் பரிசோதிக்கிறதற்காக அவர்கள் கூண்டில் ஏறிப்போய் வந்தார்கள். போன பிரதேசங்களில் குளிர் அதிகமாக இருந்தபடியாலும், காற்றுச் சூனியமா யிருந்தபடியாலும் மூச்சுவிட மிகவும் பிரயாசமாயிருந்தது. கைகால் எல்லாம் மரத்துப்போய், ஸ்மரணையில்லாமல் போய் விட்டார்கள். இன்னது செய்கிறதென்று தெரியாமல் அதிலொருவர் பல்லினால் ஒரு கயிற்றைக் கடித்திழுத்துக் கூண்டில் அடைத்திருக்கும் காற்றை வெளிப்படுத்தினார். உடனே கூண்டு திரும்பி யிறங்க இருவரும் க்ஷேமமாய் வந்து சேர்ந்தார்கள். இவர்கள் போன அவ்வளவு உயரம் பல வருஷங்களாக வேறு எவராலேயும் போக முடியவில்லை. சென்ற வருஷம்தான் பைகார்ட் (*Picard*) என்ற ஒருவர் குளிரில் அவஸ்தைப்படாமலிருக்கும்படி ஒரு நூதனமான கூண்டில் ஏறி 8, 9 மைலுக்குமேல் சென்று வந்தார். அதற்குமேல் யாரும் போனதில்லை.

ஜலவாயு சீக்கிரத்தில் நெருப்புப் பிடித்து எரியக்கூடிய வஸ்து என்று மேல் சொல்லப்பட்டது. அதினாலேதான் சில சமயங்களில் கூண்டில் விபத்துக்கள் நேர்ந்தன. போகும்போது, கூண்டு எரிந்துபோய் அநேகம்பேர் மாண்டிருக்கிறார்கள், அதற்காக 'ஹெலியம்' (*Helium*) என்ற மற்றொரு இலேசான காற்றை உபயோகிக்கிறார்கள். இந்தக் காற்றுக்கு அப்பேர்ப்பட்ட கெடுதலில்லை. ஆனால் விலை உயர்ந்ததால் இதன் உபயோகம் பிரபலத்துக்கு வரவில்லை. கூண்டுகளுக்கு ஏதாவது மேல்சொன்னமாதிரி ஆபத்து

வந்தால் தப்பித்துக்கொள்ள ஓர் உபாயம் கண்டுபிடித்தார்கள். கூண்டில் 'பாரசூட்' என்ற ஒரு விதமான பெரிய குடையைக்கொண்டு போவார்கள். உபயோக மில்லாதபோது அது மடிக்கப்பட்டிருக்கும். அபாய காலங்களில் அதைப் பிடித்துக்கொண்டு கீழே குதிப்பார்கள். காற்றின் பலத்தில் மடித்திருக்கும் குடை விரிந்து மிகவும் மெதுவாக வரும். அதைத் தொத்திக்கொண்டிருக்கிறவன் ஒரு கெடுதியு மில்லாமல் கீழே இறங்கக்கூடும். (படம், 3)



படம், 3. 'பாரசூட் என்னும் குடை'.

இப்பேர்ப்பட்ட கூண்டுகளுக்கு முதலில் ஒரு பெரிய குறைவு இருந்தது. அதாவது அவை மேல் நோக்கிப்போகும் சக்தி மாத்திரம் பொருந்தினவைகளே தவிர வேண்டிய திசைக்குப் போகும் சக்தி அவைகளுக்குக்கிடையாது. மேல் காற்று எந்தத்திசையை நோக்கித் தள்ளுகிறதோ, அப்படியெல்லாம் போய்க்கொண்டே யிருக்கும். ஆகையால் ஜலத்தில் போகும் படகுகளுக்கு எப்படித் துடுப்பும் பாய்மரங்களும் போகவேண்டியதிசைக்கு உபயோகப்படுகின்றனவோ அதுபோல இந்தக் கூண்டுகளுக்கும் துடுப்புக்களைக்கட்டி, சுக்கானையும் உபயோகிக்கத் தொடங்கினர்கள். இன்னும் சில யுக்திசாலிகள் ஒரு நீராவி யந்திரத்தை அமைத்து, துடுப்புக்களுக்குப்

பதிலாக, வேறு விதமான முன்தள்ளும் கருவிகளைப் (*Propella*) பிணைத்தார்கள். இந்தக்கருவி, துடுப்புப்போல அசைகிற தில்லை, காந்த விசிறிக்கைகள் சுற்றுவதுபோல் சுழலும். அப்படி உண்டாகும் சுழல்காற்றின் பலத்தால் கூண்டுகள் முன்னுக்குச் செல்லும். மேல் சொன்ன உபாயங்களால் கூண்டுகள் வேண்டிய திசைக்குப் போதல் சாத்தியமாயிற்று. ஆனால் கூண்டிலிருக்கும் யந்திர பளுவினால் அவை மணிக்கு 4, 5 மைல்தான் போயின. இந்தச் சந்தர்ப்பத்தில் ஜெர்மனி தேசத்து ஒட்டோ (*Otto*) என்ற ஓர் இஞ்சினீர் (யந்திரப்பியாசி) ஒரு புதிய யந்திரம் கண்டுபிடித்தார். அது மண்ணெண்ணெயிலிருந்து எடுக்கப்படும் பெட்ரோல் என்னும் திராவகத்தால் ஓடக்கூடியது. நீராவியந்திரத்தைவிட இலேசானதாயும் அதிக சக்தி உள்ளதாகவு மிருந்தது. ஒரு சிறிய பெட்ரோல் யந்திரம் அநேக குதிரை பலத்துக்கு ஒப்பானதாகக் காணப்பட்டது. ஆகையால் அப்படிப்பட்ட யந்திரத்தை உபயோகிக்கத் தொடங்கினார்கள். கூடுகளை வெகு வேகமாய் நினைத்த திசைக்குச் செலுத்துவது சாத்தியமாயிற்று. இந்தக்கூண்டுகள்தாம் டர்ஜிபில் அல்லது ஜெப்பலின் (படம், 4) என்று சொல்லப்படும்.

மேல் சொல்லியபடி ஜெர்மனி தேசத்தில்தான் இவைகளை விசேஷமாக தயாரித்தார்கள். இவைகள் பூத்தாகார வடிவமுள்ளவை. ஆகாயக்கப்பல்கள் என்ற பெயர் இவைகளுக்குத்தான் சரி என்று சொல்லலாம். ஏறக்குறைய 700 அல்லது 800 அடி நீளமுள்ளனவாயும், சுமார் 80 அடி உயரமுள்ளனவாயுமிருக்கும். இதில் காற்றைச் சிறு சிறு கூண்டுகளான அநேக அறைகளில் நிரப்பியிருப்பார்கள். இதில் அமைத்திருக்கும் இயந்திரங்கள் ஆயிரக்கணக்கான குதிரை பலம் கொண்டதாயிருக்கும். இயந்திரங்களும், சுக்கானுக்கும் பிரயாணஞ் செய்கிறவர்களுக்கும் இடமும் காற்றுப்பைக்குக் கீழே இருக்கும். இதில் நூற்றுக்கணக்கான ஜனங்கள் ஏறிப் போகலாம்.

ஆகாயத்தில் செல்லும் விமானங்களில் இன்னும் ஒருவகையுண்டென்று மேலே கூறினோம். இவைகள்தாம் ஏரோப்ளேன் என்று சொல்லப்படும். இதுவரையில் சொல்லப்பட்ட ஜெப்பலின்கள் சுயமாகவே பறக்கும். இவை காற்றைவிட இலேசானவை. திசை திருப்புவதற்கும் முன்னுக்குத் தள்ளுகிறதற்கும் மாத்திரம் இயந்திரங்களுண்டு. ஆனால், ஏரோப்ளேன் காற்றைவிடப் பளுவானது. இதற்கு மேலே கிளம்புவதற்கும் யந்திரம் வேண்டும். திசை திருப்புவதற்கும் கருவிகள் வேண்டும். இந்த விமானங்களைத்தான் தினசரிப் பழக்கத்தில் அதிகமாய் இப்பொழுது உபயோகிக்கிறார்கள்.



படம், 4. ஜெப்பலின்.

சாதாரணமாக மணிக்கு 100 அல்லது 150 மைல் போகும். பந்தயங்களில் துணிச்சலாளிகள் அநேகர் மணிக்கு 300 அல்லது 350 மைல் கூடப் பறக்கிறார்கள். இந்த விமானம் பார்க்கிறதற்கு ஒரு பெரிய கருடன் போலத் தோன்றுகிறது. பறக்கும் மாதிரியும், திசை திரும்பிச் செல்லுவதும் கூடப் பட்சிகள் பறக்கும்போது வட்டமிடுவது போலவே புலப்படுகின்றன. இந்த விமானம் பறக்கும் முறையைப்பற்றிக் கொஞ்சம் கவனிப்போம்.

சிறு பையன்கள் காற்றாடி விடுகிறதை நாம் எல்லோரும் பார்த்திருக்கிறோம். காற்றாடிகள் நல்ல காற்றிருந்தால்தான் பறக்கும் என்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயம். அதனால்தான் காற்றாடிகளைக் காற்றாடி காலமாகிய ஆடிமாதத்தில் விசேஷமாய் விடுகிறார்கள். காற்றில்லாமலிருக்கும் காலத்தில் காற்றாடியைப் பறக்கச்செய்கிறது கஷ்டம். ஒரு பையன் காற்றாடியை எடுத்துக்கொண்டு கொஞ்சம் தூரத்தில் நின்றுகொண்டு மேல் நோக்கி விட்டுவிடுவான்; காற்றாடிக்குக் கட்டியிருக்கும் நூலைப் பிடித்துக்கொண்டு மற்றொருபையன் வேகமாய் ஓடுவான். காற்றாடி வேகமாய் ஆகாயத்தில் இழுக்கப்பட்டபோது, காற்றாடி மேல் காற்று அடித்தால் எப்படிப்போகிறதோ அதேமாதிரி காற்றாடி நேராக மேல் கிளம்புகிறது. அப்படி கொஞ்சம் கிளம்பி விட்டால் அப்புறம் தானாக மிதந்து கொண்டு பறக்கும், ஏனென்றால் தரைக்குக் கொஞ்சம் உயரத்தில் எப்போதும் காற்றோட்டமிருந்து கொண்டிருக்கிறது. ஆகையால், அந்த உயரத்துக்குக் காற்றாடி சென்று விட்டால், அப்புறம் நூலைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு இருந்துவிட்டால் அது பறந்து கொண்டேயிருக்கும்.

காற்றோட்டமானது ஒரே நிதானமாயிராமல் ஏற்றக் குறைச்சலாக வீசினால் காற்றாடி நின்று பறக்காமல் ஆடிக் கொண்டிருக்கும். ஆனால் காற்றாடிக்கு ஒரு வால் கட்டி விட்டால் அந்த ஆட்டங்கள் நின்று விடுகின்றன. என்ன காற்றடித்தாலும் ஒரே சரியாகப்பறக்கும். காற்றாடி பறக்கிற விதமும் ஏரோப்ளேன் பறக்கும் முறையும் அநேகமாய் ஒத்திருக்கின்றன. காற்றாடியை மேலே கிளப்பக் காற்றடிக்க வேண்டும் என்று சொன்னோம். ஏரோப்ளேன் விஷயத்தில் சாதாரணமாய் அடிக்கிற காற்றுப்பலம் போதாது. ஆகையால் அதற்குள் அமைத்திருக்கும் பெட்ரோல் இயந்திர சக்தியால் அது தானே ஒரு பெரிய சுழல் காற்று உண்டு பண்ணிக் கொள்ளுகிறது. ஏரோப்ளேன் எதிரில் காந்த விசிறியின் சிறகுபோல் ஒரு மரத் துண்டு காணப்படும்; (படம், 5) இயந்திரம் ஓடும்போது இந்தக் கம்பு அதிவேகமாய்ச் சுற்றும்; சுமார் ஒரு நிமிஷத்திற்கு 2000




படம், 4. ஏரோப்ளேன்.

சுற்றுச் சுற்றும். அதே சமயத்தில் விமானமும் வெகு வேகமாய்த் தரையில் ஓடும். . காற்று வேகம் சரியாகி விட்டால் காற்றாடி மேல் கிளம்புவது போல் விமானமும் மேல் கிளம்பும்.

மேலே கிளம்பிப் போகிற போது, செங்குத்தாகவாவது ஒரு பக்கங்களிலாவது சாயாமலிருக்கிறதற்காகச் சில உபாயங்கள்உண்டு. இருபுறமும் பட்சிகளுக்கு உள்ள சிறகுகள் போல மரச்சட்டங் கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. அப்படிப்பட்ட சட்டங்களை மரத்தில் மடக்கக் கூடிய சிறிய சட்டங்களுண்டு. விமானம் சாயும் போலிருந்தால் எந்தப்பக்கம் சாய்கிறதோ அந்தப் பக்கத்திலிருக் கும் ஒரு சட்டத்தைத் தாழ்த்தவோ தூக்கவோ வேண்டும். பட்சி கள் பறக்கும் போது பார்த்தால், அவைகளின் சிறகு நுனிகள்கூடக் கொஞ்சம் கொஞ்சம் கீழும் மேலுமாக அசைந்து கொண்டே யிருக்கும். உயரத்தில் போக வேண்டுமானால் பட்சி தன் வால் தோகை உதவியால் போகிறது. அதே மாதிரி இந்த விமானத்திற் கும் பின்புறம் செங்குத்தாய் மடக்கக்கூடிய ஒரு சட்டமுண்டு. இதைக் கப்பல் ஓட்டுபவன் தன் இடத்திலிருந்து இழுப்பான். விமா னம் வலது புறமாவது இடது புறமாவது திரும்ப வேண்டுமானால், வால் புறம் மேல் பக்கம் இருக்கும் ஒரு சட்டத்தை வலது புறமோ இடதுபுறமோ மாற்றுவான். இது சாதாரணப் படகுக்குள் சுக்கான் போலவே யிருக்கும். சாதாரணமாய்ச் சைகில் வண்டியில் போவ தற்குப் பழகுவது போல் கொஞ்சம் பழக்கத்தால் எல்லாரும் பறந்து போக முடியும். மனத் தைரியமும் துணிச்சலுமிருந்தால் போதும். ஒரு சமயம், விமானத்தில் அமைத்திருக்கும் யந்திரம் ஏதோ ஒரு காரணத்தால் நின்று விட்டாலும் ஒன்றும் பயப் படவேண்டியதில்லை. விமானம் திடீரென்று விழுந்து விடாது. மெதுவாய்த் தான் இறங்கும். மிகவும் சமீபத்திலிருந்து இறங்கி னால்தான் பூமியில் மோதி ஏதாவது அபாயம் நேரிடும்.

முதல் முதலில் இவ்வித விமானத்தில் ஏறிப் பறந்தவர்கள் அமெரிக்கா தேசத்திலிருந்த ஆலிவர் ரைட், வில்லோரைட் (*Oliver Wright & Willow Wright*) என்ற இரண்டு சகோதரர்கள். இவர் கள் முதல் தரம் 1903-ம் வருஷத்தில் பறந்தபோது 1 நிமிஷம்கூட ஆகாயத்திலிருக்க முடியவில்லை. கொஞ்சம் கொஞ்சமாய் இயந்திரத் திலும் அநேக புதியயுக்திகளையுஞ்சீர் திருத்தங்களையுஞ் செய்து மணிக் கணக்காகவும் வேகமாகவும் பறக்க முயன்றார்கள். இதைப்பார்த் துப் பிரான்சு, ஜர்மனி, இங்கிலாந்து தேசங்களிலும் உள்ள ஜனங் கள் ஏரோப்ளேன் விடுவதை அப்பியாசம்செய்யத் தொடங்கினார் கள். வெகு தூரயாத்திரைகளும் சமுத்திரத்தைத் தாண்டி இதர கண்

டங்களுக்குப் பறந்துபோகும் சக்தியும் உண்டாயிற்று. ரயில் வண்டி, மோடார்பஸ்களைபோலத் தினசரி பிரயாணிகளுக்கும் எரோப்ளேன் உபயோகத்துக்கு வந்து கொண்டிருக்கிறது. இங்கிலாந்து தேசத்தி லிருந்து நம் நாட்டுக்குத் தபால் இந்த விமானத்தில் இப்போது ஒவ் வொரு வாரமும் வந்து கொண்டிருக்கிறது. கூடிய சீக்கிரத்தில் நாடெங்கும் மோட்டார் வண்டியைப் போல் எரோப்ளேன் பர விச் சாதாரணக் காட்சியாய் விடும் என்பதற்குச் சந்தேகமில்லை. ஆகாய விமானங்களால் இன்னும் சில பிரயோஜனங்கள் உண்டு. பெரிய காடுகள் தீப்பற்றிக் கொண்டால் விமானங்களிலிருந்து மருந்துகளைப்போட்டு வெகுசீக்கிரத்தில் நெருப்பை அணைத்து விட லாம். ஆப்பிரிக்கா முதலிய தேசங்களில் வெட்டுக்கிளிகள் லட்சக் கணக்காகச் சேர்ந்து கொண்டு பயிர்களை நாசம் செய்கின்றன. அப் படிப்பட்ட சமயங்களில்மேலே விமானங்களிலிருந்து மருந்துகளைத் தூவிக் கூடியசீக்கிரத்தில் அவைகளைக் கொன்று விடுகிறார்கள். அவை களை வேறு எந்த உபாயத்தாலும் கொல்ல முடியாமலிருந்தபடியால் அப்படிப்பட்ட தேசங்களுக்கு எரோப்ளேன் வெகு நன்மையைக் கொடுத்து வருகிறது.

ஆனால் இந்த விமானங்கள் பூலோகத்திற்குச் சில சமயங்களில் பெரிய தீங்கு விளைவிக்கின்றனவாயிருக்கின்றன. சென்ற மஹா ஐரோப்பிய யுத்தத்தில் இந்த விமானங்களிலிருந்து வெடி மருந்து களைப் பிரயோகித்து ஜெர்மனி தேசத்துப் போர்வீரர்கள் அநேக நகரங்களை நாசம் செய்தார்கள். அநேக கிராமவாசிகளும், நகர வாசிகளும், குழந்தைகளும், ஸ்திரீகளும், புருஷர்களும் உயிரை இழந்தார்கள். ஒரே நிமிஷத்தில் ஒரு பட்டணத்தையே நாசம் செய்யக்கூடிய சக்தி இதற்கு இருக்கிறதினால் எல்லா ராஜாங்கத் தலைவர்களும் ஒன்று சேர்ந்து அப்படிப்பட்ட தீங்கு விளைவிக்காத மார்க்கத்தைத் தேடி ஏற்பாடுகள் செய்து கொண்டு வருகிறார்கள்.

# சரித்திரம்

## பாஹியன் யாத்திரை வரலாறு

ஜி. தாத்தாச்சாரி

(1155-ம் பக்கத் தொடர்ச்சி)

இரண்டு வருஷகாலம் பா-ஹியன் இந்த நாட்டில் தங்கியிருந்தார். கிரந்தங்களை இன்னும் தேடியதில் மஹீசாசக வகுப்பார் பின்பற்றிய விநய பிடகத்தின் பிரதி ஒன்று இவருக்குக் கிடைத்தது. பின்னும் தீர்க்காகமத்தின் பிரதி ஒன்றையும் ஸம்யுக்தாகமத்தின் பிரதி ஒன்றையும் ஸங்நிபாத பிடகத்தின் தொகுதி ஒன்றையும் பெற்றார். இவைகள் எல்லாம் ஹன் நாட்டில் இதற்குமுன் தெரியாதவை. மூலபாஷையிலேயே இந்தக் கிரந்தங்களை இவர் பெற்றுக்கொண்டதும், இருநூறு ஜனங்களை ஏற்றிக்கொண்டு போன ஒரு பெரிய வியாபாரக் கப்பலில் தாமும் ஏறினர். அந்தப் பெரிய கப்பலுக்கு ஏதேனும் அபாயம் நேருமானல் அப்போது உபயோகப்படுத்திக்கொள்வதற்காக அதன் பின்னல் ஒரு சிறு கப்பலும் இருந்தது. நல்ல காற்று அடித்தபடியால் அவர்கள் கிழக்குநோக்கி இரண்டு நாள் பிரயாணம் செய்தனர். அப்போது திடீரென்று ஒரு பெரும் புயல் அடிக்கவே கப்பலில் துவார முண்டாகியது. உடனே வியாபாரிகள் அந்தச் சிறு கப்பலில் ஏறிக்கொள்ள விரும்பினர். ஆனல் அதிலிருந்த கப்பலோட்டிகள் பெருங்கூட்டம் ஒன்று வந்து அதில் ஏறினல் அதுவும் அமிழ்ந்துவிடும் என்ற பயத்தினல் இரண்டு கப்பல்களையும் இணைத்திருந்த கயிற்றை அறுத்துவிட்டுப் புறப்பட்டுப்போயினர். பெரிய கப்பலிலிருந்தவர்கள் பிரதி நிமிஷமும் மரணத்தை எதிர்பார்த்தவர்களாகிப் பெரும் பீதி யடைந்திருந்தனர். பிறகு அவர்கள் துவாரம் வழியாகத் தங்களுக்கு ஆபத்து அதிகமாகும் என்ற பயத்தினல் தங்கள் தங்களிடமிருந்த கனமான பண்டங்களையும் சரக்குக்களையும் எடுத்துக் கடலில் எறிந்தனர். பா-ஹியனும் தம்மிடமிருந்த குண்டிகை (தீர்த்த பாத்ரம்), ஸ்நாநபாத்ரம் முதலிய மற்றப் பொருள்களை எடுத்து எறிந்தனர். அந்த வர்த்தகர்கள் எங்கே தம்முடைய தர்ம கிரந்தங்களையும் விக்ரகங்களையும் எடுத்துக் கடலில் எறிந்துவிடுவார்களோ

என்றுதான் இவர் மிகவும் பயந்திருந்தார். ஆகவே இவர் மிகுந்த பயபக்தியுடன் அவலோகிதேசுவரரையும் ஹன் நாட்டு பிக்ஷுகணங்களையும் தியானித்து மனத்தினால் வழிபாடியற்றி, "தர்ம கிரந்தங்களைத் தேடிக்கொண்டு நான் நெடுந்தூரம் வாஸ்தவமாகவே அலைந்து திரிந்திருக்கிறேன். உங்களுடைய ஸித்தியினால் நான் ஓரிடத்தில் மறுபடியும் கரை சேரும்படி செய்தருள வேண்டும்." என்று பிரார்த்தித்தார். புயற்காற்று பதின்மூன்று நாட்கள் இரவும் பகலும் இடைவிடாமல் அடித்துக்கொண்டேயிருந்தது. பிறகு அவர்கள் ஒரு சிறு தீவின் கரையை அடைந்தனர். அலை நின்றவுடன் கப்பலில் துவாரம் உண்டான இடத்தைத்தெரிந்து உடனே அதை அடைத்து மறுபடியும் முன்னோக்கிப் பிரயாணமாயினர். இந்த ஸமுத்திரத்தில் கடற்கொள்ளைக்காரர்கள் பலர் இருக்கின்றனர். அவர்கள் திடீரென்று தோன்றி உங்கள் மேல் விழுந்து கண்டதையெல்லாம் நாசம் செய்துவிடுகின்றனர். கடலும் எல்லை கடந்ததாக இருக்கிறது. சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் இவைகளைக் கவனிப்பதாலன்றி மற்றைய விதங்களால் கிழக்கு மேற்கைத் தெரிந்துகொண்டு போக முடியாது. இருட்டின மாரிக்காலத்தில் வேறொரு வழிகாட்டியுமில்லாமல் காற்றின் உதவியைக்கொண்டு தான் செல்வது வழக்கம். இராத்திரி இருட்டில் அலைகள் ஒன்றோடொன்று மோதிக்கொண்டு நெருப்பைப்போலப் பிரகாசிப்பதும் ஒவ்வொரு விதமான கடல் ஜந்துக்களின் கூட்டமும் கப்பலைச் சுற்றி இருப்பதுந்தான் கண்ணுக்குப் புலப்படும். வியாபாரிகளுக்குக்கவற்சியுண்டாகி, தாம் எந்த நாட்டை நோக்கிப் போகின்றனர் என்பதைத் தெரியாதிருந்தனர். கடலின் ஆழம் அளவுகாணமுடியாதபடி வெகு அதிகமாக இருந்தபடியால் நங்கூரம் பாய்ச்சுவதும் சாத்தியமாகாத காரியமாக இருந்தது. கடைசியாகக் காற்று நின்றதும் அவர்கள் கப்பலைச் சரியான திசையில் திருப்பிக்கொண்டு, தாம் செல்ல வேண்டிய மார்க்கமாக மறுபடியும் போகத் தொடங்கினர். ஆனால் கடல் கொந்தளித்திருந்த காலத்தில் மறைந்திருந்த பாறை ஒன்றில் கப்பல் தாக்கியிருக்குமானால் அவர்களுக்குத் தப்பிப் பிழைப்பதற்கு மார்க்கமே இருந்திராது. இவ்விதமாக இவர்கள் தொண்ணூறு நாள்களுக்கதிகமாகப் பிரயாணம் செய்து எ-போ-தி (ஜாவா தீவு) என்னும் நாட்டையடைந்தனர். இந்த நாட்டில் தர்ம விரோதிகளும் பிராம்மணர்களுமே விசேஷித்திருக்கின்றனர். புத்த தர்மம் அவ்வளவாகத் தெரிந்திருக்கவில்லை. பா-ஹியன் இங்கு ஐந்து மாதங்களுக்கு மேலாகவே தாமதித்துவிட்டு, இருநூறு ஜனங்கள் கொண்ட வேறொரு வர்த்தகக் கப்பலில் ஏறி மறுபடியும்

பிரயாணப்பட்டார். அவர்கள் ஐம்பது நாட்களுக்கான போஜன பதார்த்தங்களை எடுத்துக்கொண்டு நான்காவது மாதத்தின் பதினாறு வது தினத்தில் புறப்பட்டனர். பா-ஹியன் வர்ஷா காலத்தை இந்தக் கப்பலிலேயே கழித்தனர். அவர்கள் க்வாங்-சோ என்னு மிடத்தை நோக்கி வடகிழக்காகச் சென்றுகொண்டிருந்தனர். ஒரு மாதமும் சிலநாட்களும் கழிந்தவுடன் ஒருநாள் இரவின் நடு ஜாமத் தில் கல்லடித்தாற்போன்ற மழையுடன் இருட்டிக்கொண்டு திடீ ரென்று புயல் அடிக்கத் தொடங்கியது. கப்பலோட்டிகளும் ஜனங் களும் மிகவும் பயந்தனர். பொழுது விடியும் வரையில், தங்களை ஷித்தியினால் ரக்ஷிக்கவேண்டுமென்பதற்காகப் பா-ஹியன் அந்தச்சம யத்திலும் மிகுந்த பயபக்தியுடன் அவலோகிதேசுவரரையும் சீன நாட்டுப் பிக்ஷுகணங்களையும் மனத்தில் வணங்கிப் பிரார்த்தித்தனர். பொழுது விடிந்தவுடன், பிராம்மணர்கள் அனைவரும் ஒன்றுகூடி ஆலோசித்து, "கப்பலில் இந்த ச்ரமணன் இருப்பதனால்தான் நமக்குத் துரதிருஷ்டம் ஏற்பட்டு இத்தனை துன்பங்களும் நேர்ந் திருக்கின்றன. மார்க்கத்தில் ஏதேனும் ஒரு தீவு தென்படுமானால் அதில் இவனை இறக்கிவிட்டுவிடுவோம். இவன் ஒருவன்பொருட்டு நாம் எல்லோரும் இறந்து போகவேண்டாம்" என்றனர். இதைக் கேட்டதும், பா-ஹியனுடைய தானபதி, "இந்தப் பிக்ஷுவை எங்கேயாவது இறக்கிவிடுவதானால் என்னையும் இவருடன் இறக்கி விடுங்கள். இல்லையேல் என்னைக் கொன்றுவிடுங்கள். ஏனென்றால் இந்த ச்ரமணனை இறக்கவிட்டு நீங்கள் செல்வீர்களானால், நான் சீன நாட்டுக்குப் போனவுடன், அரசனிடம் நேரில் சென்று உங்கள் மீது குறை கூறுவேன். அந்த நாட்டு அரசன் புத்த தர்மத்தில் உறுதியான பற்றுள்ளவன். பிக்ஷுக்களையும் ச்ரமணர்களையும் வெகுவாக அபிமானிப்பவன்" என்றான். இதனால் வியாபாரிகள் ஒன்றும் செய்வதற்கியலாமல் சற்றுத்தியங்கி, கடைசியாக அவரை இறக்கிவிடத் துணியவில்லை. இருட்டு இன்னும் அதிகமாகவே இருந்தபடியால் மீகாமனின் உத்தேசம் சரியானதாக இருக்கவில்லை. இதற்குள் எழுபது நாட்கள் கழிந்துவிட்டன. ஆகாரத்துக்கான அரிசியும், கஞ்சிக்கான ஜலமும் பெரும்பாலும் செலவாகிவிட்டன. சமைப்பதற்கு உப்புத் தண்ணீரையே உபயோகிக்கவேண்டி யிருந் தது. குடிப்பதற்காக ஒவ்வொரு மனிதனுக்கும் இரண்டு இரண்டு ஆழாக்கு சுத்த ஜலமே கொடுக்கப்பட்டுவந்தது. அதுவும் செலவாகி விட்ட தருணத்தில் வர்த்தகர்கள் ஒன்று கூடி ஆலோசித்து, "க்வங்-சோவுக்குப்போகவேண்டுமானால் சாதாரணமாக ஐம்பது நாள் பிரயா ணம் போதும். இப்போது நாம் அந்த அளவுக்கு மேற்பட்டுப் பல

நாட்களைக் கடந்துவிட்டோம். இன்னும் நாம் பிடிவாதமாக இருக்கலாமா ?'' என்று சொல்லிக்கொண்டனர். அதன்மேல் அவர்கள் கரையை நாடிக் கப்பலை வடமேற்கு முகமாகத் திருப்பினர். பன்னிரண்டு நாட்கள் இடைவிடாது சென்றதும் அவர்கள் சங்-க்வங் மாகாணத்தை யடுத்த லவ்-ஷன் பிரதேசத்தின் தெற்குக் கடற்கரையை அடைந்தனர். அங்கு அவர்கள் நல்ல தண்ணீரையும் காய்கறிகளையும் பெற்றுக்கொண்டனர். இவ்விதமாகப் பற்பல அபாயங்களையும் கஷ்டங்களையும் கடந்து, இடைவிடாத மனக் கிலேசத்தோடு சென்று, திடீரென்று இந்தக் கரைக்குப் பா-ஹியன் வந்தனர். அங்கு லீ-ஹோ என்னும் கானல் புல்லைக் கண்டு அது ஹன் நாடாகத்தான் இருக்கவேண்டுமென்று நிச்சயித்தார். ஆனால் அங்கு மனிதர்களையாவது ஜனஸஞ்சாரத்தின் அடையாளங்களையாவது காணவில்லை. அதனால் அது எந்தப் பிரதேசம் என்பதைத் தெரிந்துகொள்ள முடியாதவராயினர். அவர்கள் இன்னும் க்வங்-சோவுக்கு வரவில்லையென்று சிலரும், அதைத் தாண்டி வந்துவிட்டதாக வேறு சிலரும் கூறுவாராயினர்.

அவர்கள் இப்படிச் சந்தேகப் பட்டுக்கொண்டே, தாங்கள் இருக்கும் இடம் இன்னதென்பதைச் சொல்லக்கூடிய மனிதன் ஒருவனைக் காணலாமென்று நினைத்து, ஒரு சிறு படகில் ஏறிக் கொண்டு சென்று ஒரு கழியில் புகுந்தனர். அங்கு இரண்டு வேட்டைக்காரர்களைக் கண்டு, பா-ஹியன் மூலமாக அவர்களுடைய பாஷையில் பேசி விஷயங்களைக் கேட்டுத் தெரிந்து கொள்ளலாமென்று அவ்விருவரையும் அந்த வர்த்தகர்கள் தங்களுடன் அழைத்துச் சென்றனர். பா-ஹியனும் அவர்களுக்கு நம்பிக்கை உண்டாகும்படி முதன் முதலில் செய்து கொண்டு, பிறகு சாவகாசமாக, "நீங்கள் யாவர் ?'' என்று கேட்டனர். அதற்கு அவர்கள், "நாங்கள் பௌத்தர்கள்'' என்றனர். அப்பால் அவர், "இந்த மலைகளினிடையே நீங்கள் என்ன ஜந்துவை வேட்டையாட வந்தீர்கள் ?'' என்று வினவினர். அவ்வேடர்கள் உடனே பதில் சொல்லத் தயங்கிப் பிறகு, "நாளையதினம் ஏழாவது மாதத்தின் பதினைந்தாவது தினம். புத்த பகவானுக்கு நிவேதனம் செய்வதற்காக எதையேனும் பிடித்துக்கொண்டு போகலாமென நினைத்திருக்கிறோம்'' என்றனர். மறுபடியும் பா-ஹியன், "இது எந்த நாடு ?'' என்று கேட்டனர். "இது லி-யூ ராஜ்யத்தைச் சேர்ந்த சங்-க்வங் மாகாணத்தின் எல்லைப் புறத்துள்ள சிங்-சோ என்பது'' என்று அவர்கள் மறுமொழி கூறினர். இதைக் கேட்டதும் வர்த்தகர்களுக்கு மிகுந்த சந்தோஷம் உண்டாயிற்று. உடனே அவர்கள்

தங்களுடைய சரக்குக்களைக் கரையில் இறக்கிவிடவேண்டுமென்று கேட்டு, தங்களுடன் கூட சங்-க்வங் நகருக்கு வருவதற்காகக் சிலரை நியமித்துக் கொண்டனர்.

புத்த தர்மத்தில் மிகுந்த பற்றுள்ள அந்நாட்டதிபதியான லி-ஐ என்பவன், ச்ரமணன் ஒருவன் கடற்கரைக்கு அப்பால் நெடுந் தூரத்திலிருந்து தர்ம கிரந்தங்களையும் விக்ரகங்களையும் கப்பலில் கொண்டுவந்திருக்கிறானெனக் கேட்டு, அவைகளைத் தனது ராஜ தானிக்கு எடுத்துப் போவதற்காகத் தன் பரிவாரங்களுடன் உடனே புறப்பட்டுக் கடற்கரைக்கு வந்தான். அதன்மேல் அந்த வர்த்தகர்கள் யங்-சோ நகரை நோக்கித் திரும்பிச் சென்றனர். இதனிடையே லி-யூ ராஜன் சிங்-சோவுக்கு வந்து மாரிக் காலமும் கோடைக் காலமும் முடியும் வரையில் பா-ஹியனுக்கு ஸத்காரம் செய்து கொண்டிருந்தான். கோடைக் காலம் அகன்றவுடன், பா-ஹியன் தமது ஸஹ பிக்ஷுக்களை வெகு காலமாகப் பிரிந்திருந்தபடியால், அவர்களைச் சந்திக்கவேண்டுமென்னும் அவாவினால் சங் ஆனுக்குப் புறப்பட விரும்பினர். ஆனாலும் அவருடைய ஏற்பாடுகள் முக்கிய மானவையாக இருந்தபடியால், அவர் முதன்முதலில் தெற்கேயுள்ள ராஜதானிக்கே புறப்பட்டுப் போனார். அங்கு அவர் பிக்ஷுக்களைச் சந்தித்துத் தாம் கொண்டுவந்திருந்த கிரந்தங்களை அவர்களுக்குக் காண்பித்தனர்.

சங்கான் நகரை விட்டுப் புறப்பட்ட பிறகு, பா-ஹியனுக்கு மத்திய இந்தியாவுக்கு வருவதற்கு ஆறு வருஷங்கள் ஆயின. அங்கு அவர் ஆறு வருஷங்கள் தங்கியிருந்தார். அப்பால் சிங்-சோவுக்கு வருவதற்குப் பின்னும் மூன்று வருஷங்கள் ஆயின. இவர் ஒன்றன் பின் ஒன்றாக ஏறக்குறைய முப்பது நாடுகளைக் கடந்து சென்றிருக் கிறார். வனாந்தரத்தைத் தாண்டிய பிறகு, இந்தியாவிலுள்ள எல்லா நாடுகளிலும் பிக்ஷுக்களின் உத்தமமான சரியைகளும் தர்ம மார்க்கத் தின் அத்தியாச்சரியமான பிரபாவமும் போதுமானபடி விவரித்துக் சொல்லவொண்ணாதனவாக இருக்கின்றன. ஆனால் நமது நாட்டுப் பிக்ஷுக்கள் இவைகளைக் கேட்டிராதபடியால், அவர் ஆபத்துக்களைப் பொருட்படுத்தாமல் கடலைத் தாண்டவும் ஜன்ம தேசத்துக்குக் திரும்பு காலையில் பலவிதமான அபாயத்துக்கும் உட்படவும் தூண்டப்பட்டார். அபாயங்களினின்றும் மும்மணிகளாலும் காப் பாற்றப்பட்ட அவர், தாம் அறிந்த விஷயங்களை மற்றவர்களும் தெரிந்துகொள்ள வேண்டுமென்னும் எண்ணத்தோடு தமது பிரயாண வரலாற்றை எழுதியும் வைத்தார்.

(முற்றிற்று.)

# அரசியல் முறை

திவ. சிவராமசேதுப் பிள்ளை

(1157-ம் பக்கத்தொடர்ச்சி)

தேர்ந்தெடுக்கும் பாகங்கள் (*Constituencies*) : இம்மாதிரி சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டு வரும் அங்கத்தினர்களின் தொகுதிகள் பற்பல சாதி வேற்றுமையின் கொடுமையாலும், நிலச் சொந்தக்காரர்கள், வணிகர், வெளி ஊரார், கலப்படைந்த வருணத்தார் முதலான பல மாறுபாட்டாலும் தகுந்த அரசியல் முறைமைக்குப் பொருந்துமாறு பிரிக்கப்படாமல் நின்றன. முதலில், பொதுத்தொகுதி (*General Constituencies*) என்றும், தனித்தொகுதி (*Special Constituencies*) என்றும் தேசத்தைப் பிளவிட்டார்கள். பொதுவாயின எல்லாம் முன்பே அரசாங்கம் நடத்த வேண்டியதற்குப் பிரித்துக்கிடந்த ஜில்லாப் பிரிவுகளை அநுசரித்தவை. மற்றையவை, மதம், சாதி, தொழில், முதலியவற்றைக் கவனித்து ஏற்படுத்தப்பட்டன. பின்னும் பொதுத் தொகுதிகள், நகரத்தொகுதிகள் என்றும் கிராமத்தொகுதிகள் என்றும் இரண்டு வகுப்புகளாயின; தனித் தொகுதிகள் முக்கியமாய் முகம்மதியர்களுக்கும், ஆங்கிலோ இந்தியர்களுக்கும், இந்தியக் கிறிஸ்தவர்களுக்கும், அந்த அந்த மதத்தா வருணத்தார்கள் மாத்திரமே ஓட் கொடுக்கும்படியாக (*Separate Electorates*) நிறுவப்பட்டன.

சட்ட சபையின் தொழிலும் அதிகாரமும் (*The Legislative council : its function and control*) : இம்மாதிரி அமைக்கப்பட்டுக்கிடக்கும் சட்ட சபைகளின் பொறுப்பென்ன? அவைகள் அரசாங்க நடவடிக்கைகளை எம்மட்டும் கட்டுப்படுத்தலாம்? எவ்வளவு அதிகாரம் உண்டு? இவைகளைச் சற்று ஆராயவேண்டும். பார்லிமெண்டின் ஆக்டில் கண்டபடி விளக்கிப் போவதென்றால், சாதாரணமாய் மந்திரி இலாகாவை அடக்கி ஆண்டது, ஒதுக்கப்பட்ட இலாகாவைக் கூடியமட்டும் தங்கள் அபிப்பிராயங்கள் இன்ன இன்ன என்று காட்டும்படி செய்தது மாண்டேகு நிறுவிய சட்ட சபை என்று சொல்லிவிடலாம். ஆனால் நாளடைவில் அது அடைந்த மதிப்பிற்கும் அதிகாரத்திற்கும் அது பொருந்தாது. ஆகையால், கவர்ன்மெண்டின் சர்வ நிர்வாக விஷயத்திலும் சட்டசபை செலுத்தின

ஆட்சி எத்தகையது என்றும், பிறகு ஆட்சியைவிட்டு மதிப்பளவே செல்வாக்குச் செலுத்தினது எத்துணையது என்றும் இரண்டு பிரிவாய் அமைத்துப் பார்க்கலாம்.

அடக்கு முறை (*Control*)-(அ) சட்டத் தொழில் (*Legislative*): முன்னரே சுருக்கமாகச் சொன்னபடி, மாகாண சட்ட சபைக்கு மாகாணம் சம்பந்தப் பட்டவரையும் அதன் நன்மைக்கும் அமைதிக்கும் வேண்டிய சட்டங்களை ஏற்படுத்திக்கொள்ள இந்தியா சட்ட சபையுடன் சமபாத்தியதை உண்டு. ஆனால் இப் பெரும்பாத்தியதைக்கு மூன்று முக்கியமான வரம்புகள் உண்டு. அவ்வரம்புகளினின்றும் தவறக்கூடாது. (1) எந்தச்சமாரத்தைப் பற்றியும், எந்த மாகாணத்தைப் பற்றியும் பார்லிமெண்டிற்குச் சட்டங்கள் நிறுவுபவர் உண்டு. அத்தகைய சட்டங்கள் ஏதேனும் இருந்தால், மாகாண சட்டசபைச் சட்டங்கள் அவைகளுக்கு மாறுபாடு சொல்லக்கூடாது. (2) சில மாகாணங்களில் இந்தியா கவர்ன்மெண்டார் விதிகளால் சில ஏற்பாடு பண்ணலாம். அவ்விதிகள் சட்டங்களை ஒப்பன. (3) இந்தியா முழுவதற்கும் சில அவசரமும் ஆபத்துமான நேரங்களில் அரசப் பிரதிநிதி நிபந்தனை உத்தரவுகள் (*Ordinances*) பிறப்பிக்கலாம். அவ்வுத்தரவுகளும் சட்டங்கள் மாதிரியே; சட்டசபைகளால் அவைகளை மாற்றல் இயலாது.

இம் மூன்று நிபந்தனைகளைத் தவிர, மாகாண சட்ட சபைகளுக்கு வேண்டிய சுய ஆட்சி கொடுக்கப்பட்டது. ஆனால் உடனே கொடுத்த சுய ஆட்சி ஒருவேளை துர் ஆட்சியாய் முடிந்து விடுமோ என்று பயந்து, சில சில்லறைக் கட்டுப்பாடுகள் வரையறுக்கப் பட்டன. பொதுவாய், மாகாண சம்பந்தமான விஷயங்களாய் இருந்தால் தானே சட்டம் நிறுவத் தொடங்கலாம். அதிலும், சர்வ கலாசாலை, நியாய ஸ்தலம் முதலாயின இந்தியா சட்டசபை கவனிக்க வேண்டியவை என்று ஒதுக்கப்பட்டன. வரிபோட வேண்டியது இந்தியா கவர்மெண்டின் இலாகாவைச் சேர்ந்தது; பொதுக் கடன், இந்தியாவின் பாது காப்பு முதலியவற்றைப்பற்றி அரசப் பிரதிநிதியின் சம்மதம் முன்னரே பெற்றுக்கொண்டு ஏதேனும் சட்டங்கள் அமைக்கலாம். கடைசியாய், எந்தத் தீர்மானம் ஆனாலும் சட்டம் ஆகி அமுலுக்கு வரவேண்டுமானால் கவர்னரும், கவர்னர்ஜெனரலும் ஒப்புக்கொள்ளவேண்டும். கவர்னர் ஜெனரல் சிலவற்றை அரசர் பெருமான் உத்தரவு வேண்டும் என்று ஒதுக்கி வைக்கலாம். அவை அரசர் கையொப்பமிட்டால்தான் சட்டங்களாகும். சிற்சில சமயங்களில் கவர்னர் சில சட்டத்தின் பகுதிகளை மாத்திரம் சட்டசபைக்குத் திருப்பி அனுப்பலாம்; சில பகுதிகளுக்

குக் கவர்னர்ஜெனரல் சம்மதம் வேண்டும் என்று குறிப்பிடலாம்; மத சம்பந்தமானவை, இருப்புப்பாதை போடவேண்டி நிறைவேற்றிய தீர்மானங்கள் முதலியவற்றிற்குக் கவர்னர், கவர்னர்ஜெனரலின் சம்மதம் வேண்டும் என்று கட்டாயமாய் நிறுத்திவைக்கவேண்டும். முடிவாக, கவர்னர்ஜெனரல் சம்மதம் கொடுத்த சட்டத்தைக்கூட அரசர் பெருமான் விலக்கிவிடலாம். அம்மாதிரி விலக்கப்பட்டவை சட்டங்கள் ஆகமாட்டா.

மேற்சொன்னவை நிற்க, இன்னம் ஒரு முக்கியமான விதி உண்டு. ஒதுக்கப்பட்ட இலாகாவிற்கு கவர்னர் தாமே பொறுப்பாளியாக இருக்க வேண்டும். அந்த இலாகா சம்பந்தமாக ஏதேனும் சட்டம் வேண்டியிருந்தால், அவர் சட்டசபையை விதிக்கச் சொல்லிக் கேட்டுக் கொள்வார். சட்டசபை ஒரு சமயம் ஒப்பாமல் மறுத்துவிடலாம். பின்னர்க் கவர்னர் அந்தச் சட்டம் அவசியம் என்று பட்டால் அதை உடனே சட்டம் ஆருக என்று விதிக்கலாம். ஆனால் அம்மாதிரி விதிக்கப்பட்ட சட்டங்கள் பார்லிமெண்டு முன்னிலையில் வைக்கப்பட வேண்டும்.

(ஆ) போருள் ஆதாரம் (*Financial*): மாகாணப் பொருள் ஆதார ஏற்பாடு முன்னரே கூறப்பட்டது. சட்டசபை, பொருள் ஆதார சம்பந்தத்தில் எவ்வளவு தலையிடலாம் என்று இப்பொழுது கவனிக்க வேண்டும். சுருங்கச் சொன்னால், பொதுவாகக் கவர்னருடைய சிபார்சின்மேல் பொருள் வேண்டும் என்று கேட்கவேண்டியது நிர்வாக சபையார் கடமை; இப்பொருள் குறிப்பிட்டவகையில் செலவிடப்பட்டிருக்கிறதா என்று கவனிக்கவேண்டியது சட்டசபையின் கடமை. ஆனால் ஒதுக்கப்பட்ட இலாகாவை ஒட்டின செலவுத் திட்ட ஏற்பாட்டைப்பற்றிக் கவர்னருக்குச் சிற்சில தனி உரிமைகள் உண்டு. அவை பின்னர்க் கூறப்படும்.

(தொடரும்)



# அணிலால் வந்த தர்க்கம்*

எஸ். ஜி. எஸ்.

ராமஸ்வாமி ஐயர் ஒரு நாள் பீபிள்ஸ் பார்க்குக்குச் சென்றார். ஒரு மரத்தின் சமீபத்தில் ஓர் அணிலிருப்பதைக் கண்டார். அதன் வாயில் பளிச்சென்று சிவப்பான ஏதோ ஒரு வஸ்துவை அது கவ்விக் கொண்டிருந்தது. அது என்னவென்று தெரிந்து கொள்வதற்காக அடுத்துச் சென்றார். உடனே அந்த அணில் மரத்தின் பேரில் அவர் கண்ணுக்கு மறைவான பக்கத்திற்குத் தாவிற்று. விடா முயற்சியாக அவர் அந்த விருக்ஷத்தைச் சுற்றத்தொடங்கினர். அணிலும் அங்ஙனமே விருக்ஷத்தின் அடியின்மேல் சுற்றிற்று. சுமார் ஐந்து அடி உயரத்தில்தான் அது தொத்திக்கொண்டு இருந்தாலும், அவர் மரத்தைப் பல தடவை பிரதக்ஷிணம் செய்தும், அவர் சுற்றச்சுற்ற அணிலும் அதே அளவாக நகர்ந்து கொண்டபடியால் அவருடைய கண்ணில் அது தென்படவில்லை. மரம் அரசமரங் கூட இல்லை; பெயர் தெரியாத அந்நிய தேசத்து மரம். அதைப் பிரதக்ஷிணம் செய்வதில் புண்யமா, புருஷார்த்தமா என்று வெறுத்துவிட்டு அவர் வீட்டிற்குத் திரும்பி வந்து விட்டார்.

அன்று இரவு அவர் சயனித்துக் கண் மூடி ஆனந்தமான நித்திரை வரும் சமயத்தில் அவருக்கு ஒரு சந்தேகம் உண்டாயிற்று. "இத்தனை தடவை அந்த மரத்தை சுற்றினேனே; அந்த அணிலையும் சுற்றினேனா இல்லையா?" என்ற அந்தச் சந்தேகத்திற்குத் திருப்தியானவிடை அவருக்குத் தோன்றவில்லை. "தூங்கப் போகிற சமயத்தில் இது என்ன விசாரம்?" என்று தம்மை ஏளனம் பண்ணிக் கொண்டார். நெடுநேரம் விடையும் கிடைக்கவில்லை; நித்திரையும் வரவில்லை. விடிய ஜாமப்பொழுதுக்குத்தான் அவருடைய மூளை அசதியுற்று உறங்கச் சம்மதித்தது. அப்பொழுதும் ஒரு பிரம்ம ரக்ஷஸின் தலையுடன் ஓர் அணில் தம்மைத் துரத்துவதாகக் கனுக் கண்டு நித்திரை பங்கப்பட்டு அதிகாலையில் எழுந்து விட்டார்.

அன்று சாயங்காலம் கிளப்பில் அவருடைய சிநேகிதர் மூவரைச் சந்தித்தபொழுது இத்தனை தொந்தரவு கொடுத்த தம்முடைய

---

* ஆங்கிலத்தில் உள்ளதைத் தழுவி எழுதப்பட்டது.

சந்தேகத்தை அவர்களுக்குத் தெரிவித்தார். பின்வருமாறு சம்பாஷணை நடந்தது.

ராமஸ்வாமி ஐயர்:—அந்தப் பாழாய்ப் போகிற அணிலை நான் சுற்றினேனா இல்லையா ?

லக்ஷ்மண ஐயர்:—சந்தேக மென்ன ? சுற்றவில்லை தான்.

ராம:—ஏனோ ?

லக்ஷ்மண:—நீர் தாம் அணிலைப் பார்க்கவே இல்லையே. அதைப் பார்க்கக்கூட இல்லாமல் என்னமாய்ச் சுற்றுகிறது?

ராம:—அந்த மரம் கண்ணாடியினால் பண்ணப்பட்டிருந்தால் அணிலைப் பார்த்திருக்கக் கூடுமே. அப்பொழுது மாத்திரம் நான் சுற்றினதாக ஏற்படுமோ ?

லக்ஷ்மண:—ஒன்றும் ஏற்படாது. எங்கேயாவது கண்ணாடியினால் ஒரு மரத்தை உண்டாக்கக் கூடுமா ?

ராம:—அது இல்லையே என்னுடைய 'பாயிண்ட்'. சுற்றுகிறதற்கும் கண்ணால் பார்ப்பதற்கும் என்ன சம்பந்தம் ?

கணபதி ஐயர் (மற்றொரு சிநேகிதர்):—அணில்களின் முதுகில் மூன்று கோடுகள் இருக்கின்றன தெரியுமா? நேற்றைய தினம்தான் வாசித்தேன்; நிரம்ப விசேஷமான சரித்திரம். ராமர் ஸேது கட்டும்போது அணில்களும் ஒத்தாசை செய்யவேணுமென்று...

ராம:—இதோ பாரும் கணபதி ஐயரே ! நான் அந்த அணிலைச் சுற்றிப் போனேனா இல்லையா ? அதைச் சொல்லும் பார்க்கலாம்.

கணபதி:—என்னைக் கேட்டால் என்ன செய்கிறது? நீர் தாமே அங்கே இருந்தீர். நானும் கூட இருந்தேனா பார்ப்பதற்கு ?

ராம:—நான்தான் அப்பொழுது நடந்ததை எல்லாம் உங்களுக்குச் சொன்னேனே.

லக்ஷ்மண:—நான்தான் உமக்குப் பதிலும் சொல்லி ஆச்சுதே. நீர் அணிலைச் சுற்றவில்லை. ஏனென்றால் அது மரத்தின் மேல் இருக்கும்பொழுது நீர் அதைப் பார்க்கக் கூட இல்லை.

கணபதி:—பார்க்க வில்லையா ! அப்படியானால் அணில் அங்கே இருந்தது என்று ராமஸாமி ஐயருக்கு எப்படித் தெரியும். அது அணிலோ ? பச்சோந்தியோ ? பச்சோந்தியைப் பற்றி வாசித்திருக்கிறேன். நிமிஷத்திற்கு நிமிஷம் வர்ணத்தை மாற்றிக் கொள்ளுமாம்.

ராம:—சங்கரையரே ! நீர் ஒன்றும் சொல்லவில்லையே. உம்முடைய அபிப்பிராய மென்ன ?

சங்கரையர்:—(சற்று நேரம் யோசித்து) நீர் அணிலைச் சுற்றி னீர் என்று தான் எனக்குத் தோன்றுகிறது.

லக்ஷ்மண:—அது என்ன நியாயமோ ?

சங்கர:—இதோ பாரும், லக்ஷ்மணையரே ! ராமஸ்வாமி ஐயர் அந்த மரத்தையாவது சுற்றினர் என்று ஒப்புக்கொள்ளுகிறீரா இல்லையா ?

லக்ஷ்மண:—அவர் தாம் சுற்றினதாகச் சொல்லுகிறாரே.

சங்கர:—அவர் அப்படிச் செய்யும் போது அந்த அணில் மரத்தை விட்டுப் பிரிந்து போயிற்ரு ?

லக்ஷ்மண:—பிரியவில்லை என்றுதான் வைத்துக் கொள் ளுமே.

சங்கர:—அப்படியானல் அதையும் சேர்த்துத்தானே சுற்றி யிருக்க வேணும் ?

ராம:—அதுதான் எனக்கும் தோன்றுகிறது.

லக்ஷ்மண:—அது எப்படி ? அவர்தாம் அணிலைப் பார்க்கவே இல்லையே! ஒரு வஸ்துவைப்பார்க்காமல் அதை எப்படி சுற்றுகிறது ? இதென்ன வித்தை ஐயா !

சங்கர:—போகட்டும்; இதை வேறு விதமாகச் சொல்லுகிறேன். அந்த விருக்ஷத்தை மத்தியாக வைத்துக் கொண்டு ராமஸ்வாமி ஐயர் ஒரு பெரிய வட்டம் இட்டார் அல்லவா ?

லக்ஷ்மண:—சரி.

சங்கர:—அந்த அணிலும் அதே மாதிரியாக அந்த மரத்தை மத்தியாக வைத்துக் கொண்டு-ஆனல் சின்னதாக்-ஒரு வட்ட மிட்டதல்லவா ?

லக்ஷ்மண:—சரி; அதனலே ?

சங்கர:—அந்தச் சின்ன வட்டத்தைச் சுற்றித்தானே பெரிய வட்டம் போடப்பட்டது. ஆகையினல் அணிலைச் சுற்றித்தான் ராமஸ்வாமி ஐயர் போனர்.

ராம:—நிரம்ப நன்ருக ரூபிச்சு விட்டீர் ! நீர் சொல்வது தான் சரி.

லக்ஷ்மண:—நீங்கள் ஒருவருக்கொருவர் ஸ்தோத்திரம் செய்து கொண்டால் அதற்காக நான் மசிந்து விடுவேன ? நீங்கள் சொல்வது முழுவதும் தப்பு. எப்படியும் தப்பு தப்புத்தானே ?

சங்கர:—நான் இன்னம் ஒருவிதமாகச் சொல்லுகிறேன்; கேளும். முதலில் அந்த அணிலுக்கு ஒரு திக்கில் அவர் இருந்தார்; அதாவது கிழக்கில் இருந்தார். பிற்பாடு அவர் நகர்ந்ததன் மேல் அதற்குத் தெற்குக்குப் போனர். பிற்பாடு அதே மாதிரி யாகவே அதனுடைய மேற்குக்கும் வடக்குக்கும் அவர் போனூர் அல்லவா?

லக்ஷ்மண:—நன்றாய்ப் போகட்டும்!

சங்கர:—ஆகையால் அணிலுடைய நாலு திக்குக்களுக்கும் அவர் சென்று விட்டபடியால் அவர் அதைப் பிரதக்ஷிணந்தான் செய்திருக்கிறார்.

ராம:—சற்று நில்லும் சங்கரையரே! இப்படி பார்க்கப்போனல் நான் நகரும் போதெல்லாம் அதுவும் நகர்ந்து கொண்டு, எனக்கு முறையே மேற்கு, வடக்கு, கிழக்கு, தெற்கு ஆக நான்கு திக்கு களுக்கும் அது சென்று இருக்கிறது. ஆகையால் அந்த அணில் என்னைப் பிரதக்ஷிணம் செய்து சுற்றிற்று என்று சொல்லுவீரா?

சங்கர:—ஹூம்! இது சொல்ல முடியாது. நான் இப்பொழுது சொன்ன காரணம் சரியல்ல. ஆனல் முதலில் சொன்ன இரண் டும் சரியான காரணங்கள்.

லக்ஷ்மண:—அதுவும் தப்புத்தான்.

கணபதி:—எங்கேயாவது, ஒரு மநுஷ்யன்-அதுவும் பிராம் மணன்-ஓர் அணிலைப் பிரதக்ஷிணம் செய்வதுண்டா? நீர் ஒரு நாளும் அப்படி செய்திருக்க மாட்டீர். பசு மாட்டைப் பிரதக்ஷிணம் செய்வது தான் வழக்கம். என்னுடைய பாட்டி தினம் காலையில்...

ராம:—சரி, கணபதி ஐயர் வழக்கப்படி சங்கதியை விட்டு விட்டு எங்கேயோ யாத்திரையில் புறப்பட்டு விட்டார்.

கணபதி:—நானு பீபிள்ஸ் பார்க்குக்கு வேலையற்றுப்போனது?

சங்கர:—அது இருக்கட்டும்; ராமஸ்வாமி ஐயரே! உம் முடைய அபிப்பிராயந்தான் என்ன?

ராம:—நீர் சொன்னது சரி.

லக்ஷ்மண:—அவர் சொன்னது தப்பு. முக்காலும் தப்பு.

ராம:—லக்ஷ்மணையர் சொன்னதும் சரி.

சங்கர:—அது எப்படி? நாங்கள் இரண்டு பேர் சொன்ன தும் எப்படி சரியாக இருக்க முடியும்?

ராம:—எனக்குத் தோன்றுகிறது என்னவென்றால், சுற்று கிறது என்கிற வார்த்தைக்கு இரண்டு பேர்களும் வெவ்வேறு அர்த்தம் கொடுத்துப் பேசுகிறீர்கள்.

சங்கர:—அப்பொழுது தானே தர்க்கத்திற்கு இடம் உண்டு?

லக்ஷ்மண:—அதெப்படி?

ராம:—சங்கரையர் எண்ணுகிறார்: சுற்றுகிறது என்றால் ஒரு வஸ்துவின் வடக்கு, கிழக்கு, தெற்கு, மேற்கு ஆக நாலு பக்கங்களில் போவது என்று. அந்த அர்த்தத்தில் நான் அந்த அணிலைச் சுற்றித்தானிருக்கிறேன். ஆனால் நீர் எண்ணுகிறது என்னவென்றால், ஒரு ஜந்துவினுடைய முன்னும் பின்னும் இருபார்சுவமும் ஆக நாலு பக்கங்களையும் கண்ணால் காணவேணுமென்பது. இந்த அர்த்தத்தில் நான் இந்த அணிலைச் சுற்றவில்லை.

லக்ஷ்மண:—பார்த்தீரா! சங்கரையரே, நான் சொன்னது தானே சரி?

கணபதி:—நேற்றிராத்திரி நான் சர்க்கஸுக்குப் போயிருந்தேன். அங்கே ஒருவன் ஒரு பெரிய கூண்டிற்குள் ஸைக்கிலை விட்டுச் சுற்றினான், சுற்றினான்...

மற்ற மூவரும் அவரை விட்டு விட்டுக் காப்பி சாப்பிடப் போய் விட்டார்கள்.

இதுவரை தயையுடன் வாசித்த நண்பரே! உங்களை ஒரு சிறிய கேள்வி கேட்கவேணும்—அல்ல, அல்ல, நீங்கள் எண்ணுகிறபடியல்ல. லக்ஷ்மணையர் சொன்னது சரியா என்று உங்களைக் கேட்கவில்லை. நான் கேட்பது: கணபதி ஐயர் என்ன அபிப்பிராயம் கொடுத்தார்? என்பதுதான்.

# இரவல்

குகப்பிரியை

பொழுது விடிந்தாற் போதும்; சண்டைதான். ஆனால் தினந்தோறும் ஒவ்வொரு புது விஷயத்துக்காக நானும் என் மனைவியும் சண்டை போடுவதில்லை. விஷயம் ஒன்றேதான். அதைக் குறித்து நாள்தோறும் நூதன நூதனமான முறையில் தகுந்த உபமான உபமேயங்களுடன் சண்டை நடந்துகொண்டே இருக்கும். அவள் தனக்கு அநுகூலமான கக்ஷிகளையெல்லாம் சொல்லி வாதிப்பாள். நான் என் கக்ஷிக்கு வேண்டிய ஆதாரங்களையெல்லாம் விவரிப்பேன். வாய்ச்சண்டை கைச்சண்டையாகி, பிறகு-வெளியிலே சொன்னால் சிரிப்பார்கள்-சோற்றுக்கு 'லாட்ரி' போடவேண்டியது தான்.

"தலையை வலிக்கிறது" என்று அவள் இழுத்துப் போர்த்துக் கொண்டு படுத்துவிடுவாள். பிறகு என்ன பண்ணித் தொலைக்கிறது? தெருக்கதவைத் தாளிட்டு அவசர அவசரமாய்க் காப்பி போடுகிறது. 'காப்பி டிக்காஷன்' வாசனையாவது தண்ணீர் விடும் ஓசையாவது கேட்டவுடன் கண்ணைத் திறந்து பார்ப்பாள். வடிகட்டியாவதற்குள் 'முக்கி முனகி' எழுந்து உட்கார்ந்து கொள்ளுவாள். எப்படியாவது நான் போட்ட காப்பியை அவளுக்குக் கொடுக்கக்கூடாதென்பது என் எண்ணம். எப்படியாவது வாங்கிக் குடித்தே தீருவது என்று அவள் மனத்திற்குள் சபதம் செய்துகொண்டிருப்பாள்.

எங்கேயாவது இவள் எழுந்து புறக்கடைக்காவது போகட்டும், நாம் குடித்துவிடுவோமென்று காத்திருந்தாலும், அவள் எழுந்து தொலையவே மாட்டாள். இதற்குள், ஸார், ஸார், மிஸ்டர், ஐயர் வாள் என்று பற்பல ஸ்தாயிகளிற் குரல்கள் கேட்கும். உடனே இவளுக்கு வந்துவிடும். முகம் 'மூன்றும் பேஸ்து' மாதிரி ஆகிவிடும். இதுதான் நல்ல சமயமென்று காப்பியைக் குடித்துவிட்டு அவசர அவசரமாய் வியர்க்க விறுவிறுக்க ஓடி 'எலெக்டிரிக் ரயிலை'ப் பிடிக்கவேண்டியதுதான்.

சென்னையை அடுத்த பரங்கிமலையில் ரயில்வே ஸ்டேஷன் அடுத்திருக்குமிடத்திற்குத்தான் 'ஆதம்பாக்கம்' என்று பெயர்.

அங்கேதான் குடியிருந்தது. ஸ்டேஷனிலிருந்து கூப்பிடுதூரந்தான் வீடு. ஆனாலும் ஒரு நாளாவது நான் நிதானமாய் 'ரேஸுக்கு' —அதுதான் கிண்டி குதிரைப் பந்தயத்துக்கு—போனதே கிடையாது.

அடாடா! சண்டை எதைக் குறித்து என்பதைச் சொல்லாமல் வேறு எதையோ சொல்லுகிறேனே. "குதிரைப் பந்தயம் சூதாட்டம் இரண்டும் ஒன்றுதான். குதிரைப் பந்தயத்தில் தொலைப்பவர்கள் தான் அதிகமே யொழிய யாருக்கு லக்ஷத்து ஐம்பதினாயிரம் ரூபாய் வந்திருக்கிறது? என்னமோ காவாலிகளும் கழுசடைகளுமாக வந்து குவிந்து கிடக்குமே யொழிய நல்லவர்கள் ஒருவரும் அங்குப் போக மாட்டார்கள்" என்று அவள் தொடங்குவாள்.

நான் "இரவல் வாங்குவது கெடுதல்; நகைகளை ஒருவரிட மிருந்தும் இரவலே வாங்கக்கூடாது" என்பேன்.

இந்த இரண்டு மகத்தான விஷயங்களைக் குறித்தே கடந்த ஏழு வருஷங்களாக-அதாவது கலியாணமாகி ஆதம்பாக்கத்திற்கு வந்த நாள் முதல்-வெற்றி, தோல்வி என்பதில்லாமல் ஒருவருக் கொருவர் ஓர் ஊசி முனைகூடச் சளைக்காமல் சண்டையிட்டுவருகிறோம்.

எவ்வளவோ பெரிய பெரிய தர்க்க சாஸ்திரிகள், மெத்தப் படித்த மேதாவிகள், அகப்பட்டவற்றையெல்லாம் ஆராய்ந்து பார்க் கும் ஆராய்ச்சிக்காரர்கள் முதலியவர்களெல்லாம் இந்த விஷயத்தில் எங்களைக் கௌரவிக்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள். அடுத்தகத்து 'நாணிப்பாட்டி' எங்களுக்கு நற்சாக்ஷிப் பத்திரம் கொடுத் திருப்பது அக்கம் பக்கத்திலுள்ள ஒட்டுக் குழந்தை முதல் பழுத்த தொண்டுகிழம் வரையில் எல்லாருக்குமே தெரிந்த சங்கதிதான்.

ஏன் தெரியுமா? அவளுடைய அறுபதாவது வயதில் தாத்தா வுடன் தற்செயலாய் ஒரு நாள் திருவாவடுதுறைத் தம்பிரான் சடைத் தம்பிரானா? மொட்டைத் தம்பிரானா? என்ற சந்தேகத்தினால் சண்டையுண்டாக, அந்தச் சண்டை ஒரு வருடந்தான் நடந்ததாம். ஏனென்றால் அதற்குள் திருவாவடுதுறையில் நடந்த ஒரு கலியாணத் திற்கு நேரில் போகவேண்டி வந்துவிட்டதாம். இந்த விவரத்தை இரண்டாயிரத்து அறுநூற்று இருபத்தைந்து தடவை அவளுடைய அபரிமிதமான வாக்குவன்மையுடனும் அபிநய அலங்காரங்களுட னும் பிரசங்கிக்கக் கேட்டிருக்கிறேன்.

*　　*　　*　　*

சென்னையில் ஜியார்ஜ் டவுனில் நாராயண முதலித் தெருவில் நம்பெருமாள் செட்டி வீட்டில் கலியாணம். இவள் அதற்கு முந்தின நாளே புறப்பட்டுப் பிறந்தகம் போகவேண்டுமென்று ஒரே பிடிவாதம் பிடித்தாள்.

'ஒழியட்டும்! சனிக்கிழமை முதல் ரேஸுக்கே கொஞ்சம் நிச்சிந்தையாய்ப் போகலாம்' என்று அவளை வெள்ளிக்கிழமையே பிறந்தகம் போக அனுமதி கொடுத்தேன். அவள் தகப்பனாரும் செட்டியாரும் பிராண ஸ்நேகிதம். அவள் மிகுந்த சந்தோஷத்துடன் ஒரு நிபந்தனையின்பேரில் போக இணங்கினாள்.

அது என்ன தெரியுமா? அடுத்தகத்துச் சோமாசி சர்மாவின் பெண் தன் கெம்பு அட்டிகையையும் வைர மோதிரத்தையும் (கலியாண வீட்டிற்கு அணிந்து செல்ல) தன் புருஷனைக் கேட்டுக் கொண்டு கொடுப்பதாய்ச் சொல்லியிருப்பதால், ஞாயிற்றுக்கிழமை காலையில் அவ்விரண்டையும் வாங்கிக் கொண்டுவந்து கொடுப்பதாய் ஒப்புக்கொண்டேன்.

ஞாயிற்றுக்கிழமை காலை ஆறு மணிக்கே எழுந்து காப்பி சாப்பிட்டுவிட்டுக் கல்லட்டிகையையும் வெகு ஜாக்கிரதையாய்த் தோற்பெட்டியில் வைத்துப் பூட்டிக்கொண்டு புறப்பட்டேன். 'கொய், கொய்' என்று எலெக்டிரிக் ரயிலின் அபயக்குரல் கேட்டது. அவசர அவசரமாய் ரயிலேறினேன். என் மனம் கட்டுக் கடங்காமல் பூரித்துத் தத்தளித்தது. இன்னது செய்கிறோமென்றே தெரியவில்லை. சந்தோஷமிகுதியால் மறுபடியும் 'ரேஸ் கைடை' எடுத்துப் பிரித்துப்பிரித்துப் பார்த்துக் கூட்டியும் கழித்தும் பெருக்கியும் வகுத்தும் ஆனந்தப்படலானேன்.

ஒரே ஒரு கணத்தில் வண்டி எழும்பூரை அடைந்தது. எல்லோரும் இறங்குவதைக் கண்டு நானும் எழுந்தேன். தோற்பெட்டியைக் காணோம். பகீரென்றது. அட்டிகை 800 ரூபாய்; மோதிரம் இருநூறு ரூபாய். எனக்குத் தெரிந்து இப்பொழுதுதான் வாங்கினார்கள். 'என்ன செய்வேன்! ரேஸில் 800 ரூபாய் வந்த மகிழ்ச்சியில் ஆயிரம் ரூபாய்க்கு உலைவைத்து விட்டேனே!' என்று என்னையே நொந்த வண்ணம் போலீசிலும் எழுதி வைத்துவிட்டு இந்த மங்களசமாசாரத்தை அவளிடமும் சொல்லியழுதுவிட்டுத் தொலைவோமென்று மாமனார் வீட்டை யடைந்தேன்.

என் மனைவி சர்வாபரண பூஷிதையாய்க் கலியாண வீட்டிற்குச் செல்லத் தயாராய்க் காத்திருந்தாள். தெய்வாதீனமாய் மோதிரத்தை

மட்டும் கையில் போட்டுக்கொண்டிருந்திருக்கிறேன். அதைக் கண்ட தும் அவள், "இரண்டையும் கட்டாயம் கொண்டுவருவீர்களென்று தான் காத்துக்கொண்டே இருக்கிறேன்" என்றுபெருமகிழ்ச்சியுடன் கூறினுள்.

எனக்கோ அகங்காரம் அடிவயிற்றிலிருந்து பற்றிக்கொண்டது. கையிலிருந்த ரேஸ் புத்தகத்தையும் டைரியையும் அவள் தலைமீது விசிறி எறிந்தேன். "எல்லாம் உன்னுல் வருகிற அனர்த்தம்தான்; நாசமாய்ப் போக! பாழும் பெண்பிசாசுகளைக் கட்டிக்கொண்டு மாரடிக்கிறதைவிட, சொல்லிக்கொள்ளாமல் ஓடிப்போய்விடலாம். என்ன அவஸ்தை? நீ நாசமாய்ப் போக! இரவல் வாங்கவேண்டாம் வேண்டாம் என்ருல் கேட்கிருயா? என்ன டம்பம்! என்ன அலங் காரம்! வேண்டியிருக்கிறதே!" என்று கையை ஓங்க, என் மைத் துனன், "என்ன அத்திம்பேரே? இவ்வளவு கோபம்" என்று கையைப் பிடித்தான்.

* * * *

இப்பொழுதும் சண்டை ஓய்ந்தபாடில்லை. ஆனுல் எப்படி நடக்கிறதென்பதை நான் சொல்ல வேண்டியதில்லை. நீங்களே சொல்லுங்கள் பார்க்கலாம்?

# தீப்பெட்டி விற்கும் சிறுபெண்*

கே. ஜி. சங்கர்

அச்சம் விளைக்கும் குளிர்! பனி பொழிந்தது. அதற்குள் அநேகமாய் இருட்டியும் விட்டது. மாலைப் பொழுதும் வந்தது. அவ்வாண்டின் கடைமாலை. அந்தக் குளிரிலும் இருட்டிலும் ஓர் ஏழைச் சிறுபெண் தலைமூடாமல் கால் மூடாமல் தெருக்கள்வழியாக நடந்து கொண்டிருந்தாள். தன் சொந்த வீட்டைவிட்டு வெளியிறங்கும் பொழுது அவள் கால்களில் செருப்புகள் அணிந்ததுண்டு. ஆனால் அவைகளால் பயனென்ன? அவைகள் மிகவும் பெரிய செருப்புகள். அதுவரை அவைகளை அவள் தாயார் அணிந்து வந்தாள். அவைகள் அவ்வளவு பெரியவை. இரண்டு வண்டிகள் கடகடவென்று அதிவேகமாய் உருண்டு கொண்டிருக்கும் பாதையில் குறுக்காய் நழுவும் பொழுது அச்சிறுபெண் அவைகளை இழந்துவிட்டாள். ஒரு செருப்பு மறுபடி காணப்படவில்லை. மற்றொன்றை ஒரு பையன் தூக்கிக்கொண்டு ஓடிப்போய் விட்டான். "என்றைக்காவது ஒருநாள் எனக்குக் குழந்தைகள் பிறக்கும். அப்பொழுது இதை ஒரு தொட்டிலாக நன்றாய் உபயோகிக்கலாம்" என்று அவன் சொல்லிக் கொண்டான். ஆகையால் இப்பொழுது அச்சிறுபெண் குளிரால் முற்றிலும் சிவந்தும் நிலமாகவும் இருந்த தன் சிறிய வெறுங்கால்களால் நடந்து கொண்டிருந்தாள். ஒரு பழைய மேலாக்கில் சிலதீப்பெட்டிகளையும் தன் கையில் ஒரு தீப்பெட்டியையும் அவள் ஏந்தியிருந்தாள். அவளிடம் அன்று முழுவதும் ஒருவராவது ஒன்றும் விலைக்கு வாங்கவுமில்லை; அவளுக்கு ஒருவரும் ஒரு காசுகூடக் கொடுக்கவுமில்லை.

குளிராலும் பசியாலும் நடுங்கிக்கொண்டு அச்சிறுபெண் துன்பத்தின் வடிவமாய் ஊர்ந்து சென்றாள். பாவம்! அவள் கழுத்தின் மேல் அழகிய சுருள்களாய்த் தொங்கிக்கொண்டிருந்த அவளுடைய நீண்ட அழகிய கூந்தலைப் பனி ஏடுகள் மூடியிருந்தன. ஆனால் அவள் இப்பொழுது அதைப்பற்றி நினைக்கவில்லை. ஜன்னல்களிலெல்லாம் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. வறுத்த

---

* ஹான்ஸ் க்றிஸ்டியன் அண்டேர்ஸன் ஆங்கிலத்தில் எழுதியதன் மொழிபெயர்ப்பு.

ஹாம்ஸத்தின் நறுமணம் வீசிற்று. ஏனெனில் அப்பொழுது புது ஆண்டு பிறக்கும் மாலை. ஆமாம்! அதைப்பற்றித் தான் அவள் நினைத்துக்கொண்டிருந்தாள்.

ஒன்றுக்குமுன் மற்றொன்று நீட்டிக்கொண்டிருக்கும் இரண்டு வீடுகளின் இடைமூலையில் அவள் நடுங்கிக்கொண்டு கீழே உட்கார்ந்திருந்தாள். அவள் தன் சிறு கால்களைச் சேர்த்துக் குந்திக்கொண்டிருந்தும் அவளுக்கு இன்னும் குளிர் அதிகரித்தது. ஆயினும் அவளுக்கு வீட்டிற்குப் போக மனம் துணியவில்லை. ஏனென்றால் தீப்பெட்டிகள் ஒன்றும் விலைபோகவில்லை; காசொன்றும் கிடைக்கவுமில்லை. வீட்டிற்குப் போனால் அவள் தகப்பன் அவளைக் கட்டாயம் அடிப்பான். மேலும் வீட்டிலும் குளிர்தான். ஏனெனில், மிகவும் பெரிய பொத்தல்களை வைக்கோலாலும் கந்தைகளாலும் அடைத்திருந்தும் கூரையின் வழியாக வாடைக்காற்று சீறிக்கொண்டிருக்கும் வீட்டில்தான் அவர்கள் குடியிருந்தார்கள்.

அவள் சிறு கைகள் பனியால் அநேகமாய் மரத்து விட்டன. ஆமாம்! தீப்பெட்டியிலிருந்து ஒரு குச்சியை உருவிச் சுவரில் கீச்சி அதன் வெப்பத்தில் தன் கைகளைக் குளிர்காய்ந்தால் சிறிது குணமாயிருக்கும். அவள் ஒரு குச்சியை உருவினாள். ர்-ர்-ஆச்! அது எவ்வாறு சுடர் விட்டு எறிந்தது! அதன்மேல் தன் கைகளை நீட்டினபொழுது அது ஒருசிறு மெழுகுவத்தியைப் போல் ஒரு சூடான பிரகாசமான சுடராய் இருந்தது. அது ஒரு ஆச்சரியமான சிறு வெளிச்சம்! பிரகாசமான பித்தளைக்கால்களும் பித்தளை மூடியும் உடைய ஒரு பெரிய பளபளப்பான அடுப்பின்முன் தான் உட்கார்ந்திருந்ததாக அச் சிறு பெண்ணிற்கு உண்மையாய்த் தோன்றிற்று. அச்சுடர் எவ்வாறெரிந்தது! எவ்வளவு ஸுகமாய் இருந்தது! ஆனால் அச் சிறு சுடர் அணைந்து விட்டது. அந்த அடுப்பும் மறைந்து விட்டது. தன் கையில் எறிந்த தீக்குச்சியின் கருகின துண்டு மாத்திரம் இருந்தது.

வேறொரு தீக்குச்சியைச் சுவரில் கீச்சினாள். அது எறிந்ததும் அதன் வெளிச்சம் சுவரின் மேல் விழுந்து ஒரு சன்னமான திரைபோல் தெளிவாய் ஆயிற்று. அதன் வழியாக அந்த அரைக்குள் அவள் பார்க்க முடியும். மேஜையின்மேல் பனிபோல் ஒரு வெள்ளைத்துணி விரித்திருந்தது. அதன்மேல் பளபளப்பான சாப்பாட்டுப் பாத்திரங்கள் இருந்தன. ஆப்பிள்களும் உலர்ந்த பழங்களும் திணித்த வறுத்த ஹம்ஸம் பிரமாதமாகப் புகைந்து கொண்டிருந்தது. அதைவிடப் பார்ப்பதற்குப் பெருமையாயிருந்தது என்னவென்றால், தட்டிலிருந்து அந்த ஹம்ஸம் கீழேகுதித்துத் தரையில்

நகர்ந்து தன் மார்பில் ஒரு கத்தியுடனும் முட்கரண்டியுடனும் அச் சிறு பெண்ணைப்பார்த்து வந்தது. இன்னும் ஒருகுச்சியைக் கொளுத் தினள். அப்பொழுது அவள் ஓர் அழகான க்ரிஸ்ட்மஸ் மரத்தின் அடியில் உட்கார்ந்திருப்பதாகத் தோன்றிற்று. அவள் முந்தின க்ரிஸ்ட் மஸில் அந்தப்பணக்கார வியாபாரியின் வீட்டில் கண்ணுடிக்கதவின் வழியாகப் பார்த்த க்ரிஸ்ட்மஸ் மரத்தைவிட அது பெரிதாகவும் அலங்கரிக்கப்பட்டதாகவும் இருந்தது. அதன் பச்சைக் கொப்பு களில் ஆயிரக்கணக்கான மெழுகுவத்திகள் எரிந்து கொண்டிருந் தன. சித்திரக்கடைகளில் இருப்பவைபோல் சாயச்சித்திரங்கள் அவைகளின்மேல் குனிந்து பார்த்துக் கொண்டிருந்தன. அச் சிறு பெண் அவைகளிடம் தன் கையைநீட்டினள். அப்பொழுது அந்தத் தீக்குச்சி அணைந்து விட்டது. அந்த க்ரிஸ்ட்மஸ் விளக்குகள் உயரக் கிளம்பின. இப்பொழுது அவைகள் ஆகாயத்தில் நக்ஷத் திரங்கள்போல் அவள் கண்களுக்குத் தோன்றின. அவைகளில் ஒன்று ஒரு நீண்ட சுடர்க்கோடாய்க் கீழே விழுந்தது.

"இப்பொழுது யாரோ ஒருவர் இறக்கிறர்" என்று அச்சிறு பெண் நினைத்தாள். ஏனென்றல் இறந்துபோன தன் கிழப்பாட்டி ஒரு நக்ஷத்திரம் கீழே விழும் போதெல்லாம் ஓர் ஆத்மா கடவு ளிடம் ஏறிச்செல்கிறது என்று அவளிடம் கூறியிருந்தாள். அந்தப் பாட்டி ஒருத்திதான் அவளை நேசித்துவந்தாள். மற்றும் ஒரு குச்சி யைச் சிறமி சுவரில் கீச்சினள். அப்பொழுது மறுபடியும் பிரகாச மாயிற்று. அந்த வெளிச்சதில் அவள் கிழப்பாட்டி தெளிவாகவும் பிரகாசமாகவும் சாந்தமாகவும் அழகாகவும் நின்றள்.

"பாட்டி!" என்று அக் குழந்தை கூவினள். "ஐயோ! என்னை யும் உன்னுடன் கூட்டிப்போ. தீக்குச்சி அணைந்ததும் நீபோய்விடு வாய் என்று எனக்குத்தெரியும். சூடான சுடரைப் போலவும், அழகிய வறுத்த ஹம்ஸத்தைப் போலவும், பெரிய அலங்காரமான க்ரிஸ்ட்மஸ் மரத்தைப்போலவும் நீமறைந்து விடுவாய்."

உடனே அவள் தன் கையிலிருந்த தீக்குச்சிகளை யெல்லாம் விரைவாய்க் கீச்சினள். தன்பாட்டியைக் கெட்டியாய்ப் பிடித்து நிறுத்தவிரும்பினள். நடுப்பகலைவிடப் பிரகாசமாய் அவ்வளவு சுடர் விட்டுத் தீக்குச்சிகள் எறிந்தன. அவள்பாட்டி எப்பொழுதும் அவ் வளவு பெரியவளாகவாவது அவ்வளவு அழகாகவாவது இருந்த தில்லை. அவள் அச்சிறு பெண்ணைத் தன்கைகளில் தூக்கிக்கொண்டு இருவரும் குளிர் பசி கவலை ஒன்றும் இராத பூமிக்கு-அவ்வளவு மிகவும் உயர்ந்த உலகத்திற்குப்-பிரகாசமாகவும் களிப்புடனும் பறந்து சென்றர்கள்; ஈசன் அடி சேர்ந்தார்கள்.

ஆனல் அந்தமூலையில் சுவரில் சாய்ந்து கொண்டு பழைய ஆண்டின் கடைமாலையில் குளிர் தாங்காமல் இறந்து சிவந்த கன்னங்களுடனும் புன்னகைபொருந்திய வாயுடனும் அவ்வேழைப்பெண், குளிர்ந்த காலைவேளையில் உட்கார்ந்தபடி இருந்தாள். புது ஆண்டின் சூரியன் ஒரு சிறுபிணம் விளங்க உதித்தான்! ஒரு கட்டுத் தீக்குச்சிகள் எரிந்து கிடக்கக் குளிர்ந்து கட்டையாக அக்குழந்தை அங்கு உட்கார்ந்திருந்தாள். "அப்பெண் குளிர்காய விரும்பியிருக்கவேண்டும்" என்று ஜனங்கள் கூறிக்கொண்டார்கள். ஆனல் ஒருவருக்கும் அவள் எவ்வளவு அழகான காட்சிகளைக் கண்டாளென்றும் எவ்வளவு கௌரவத்துடன் அவள் தன்பாட்டியுடன் புது ஆண்டின் களிப்பை நுகரச்சென்றுள் என்றும் மனத்தில் தோன்றவில்லை.

# சோதிடப்புலி : : : : சோணாசலம்

## சரித்திர ஆராய்ச்சி

டி. எஸ். இராமச்சந்திர ஐயர்

கார்த்திகைத் தீபத்தன்று காலை காபியருந்திய பின்னர் வீட்டுப் புறத்திண்ணையில் நானும் என் நண்பன்-சரித்திரவாராய்ச்சி ஸாம்ப சிவனும் உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கையில் தெருவில் மோடார் வந்து நின்றது. அதினின்றும் சோணாசலம் இறங்கிவந்து திண்ணையில் உட்கார்ந்தான். அவனைப் பார்த்து, "என்ன உனக்கு இவரைத் தெரியுமா?" என்றேன்.

"எனக்குத் தெரியாது. ஆனாலும் இவரது கண் பார்வையிலிருந்து இவர் பூர்வகால விருத்தாந்தங்களைப் பார்ப்பவர்போலக் காணப்படுகிறார்."

"அடே! உன் சோதிடத்தின் சக்தியா இது! உன் பழைய வியாபாரத்திற் காரம்பித்துவிட்டாயே. இவர் சரித்திர ஆராய்ச்சியில் சிறந்தவர். இவர் பெயர் ஸாம்பசிவன். உன் கடையை விரிக்க வேண்டாம். இவரிடத்தில் பல அரிய விஷயங்களைக் கேட்டுச் சந்தோஷிக்கலாம்."

"எனக்கென்ன ஆக்ஷேபணை? இவ்வுலகில் ஜீவர்கள் தோன்றிய காலம் இடம் முதலியவற்றைப் பற்றிக் கண்டுபிடிக்கப்பட்டவைகளைக் கேட்க விரும்புகிறேன்."

"அதுதான் சரி, என்ன, ஸாம்பசிவா! கொஞ்சம் இவ்விஷயங்களைப் பற்றிச் சொல் கேட்போம்."

"ஆகா சொல்லுகிறேன். சில வருஷங்களுக்கு முன் வரைக்கும் மனிதன் இவ்வுலகிற் றோன்றியது ஆறாயிர வருஷங்களுக்கு முன் தான் என்று எண்ணியிருந்தார்கள். அது சரியல்லவென்று பின் அனேக காரணங்களால் ரூபிக்கப்பட்டது. பூமியானது ஆதியில் பெரும்பாலும் கடலால் மூடப்பட்டிருந்ததென்றும் கொஞ்சம் கொஞ்சமாய் நிலம் வளர்ந்து வெளிப்பட்டதென்றும் கண்டுபிடிக்கப் பட்டது. அவ்வாறு ஓர் அங்குலம் வளர்வதற்கு ஆயிரம் வருஷங்கள்

செல்லுமாம். ஆகவே பூமியை வெட்டிப் பார்க்கையில் அகப்படும் வஸ்துக்கள் ஆழத்திற்குத் தக்க காலத்திலிருந்தவைகளென்பது தீர்மானம். இவ்வாறாகப் புதிதாகக் கடலில் தோன்றிய ஒரு தீவில் வெட்டுகையில் ஆயிரம் அடி ஆழத்தில் ஒரு பல்லின் உடைந்தபாதி காணப்பட்டது. அது இருந்தவிடம் அனேக கோடி வருஷங்களுக்கு முன் அமைந்திருக்கவேண்டும் அந்தப்பல் துண்டத்தைப் பரிசோதித்த தத்வ தரிசிகள் அது மனிதனுடையதென்று தீர்மானித்தார்கள். எப்படியென்றால், அதன் அளவிற்கேற்றபடி மற்றப் பற்களை யெழுதிப் பிறகு அவைகளுக்கேற்ற வாய் முதலிய உருவங்களை யெழுதினதும் அது மானிடவுருவமாயிருந்தது. உடனே அவர்கள் அடங்காத ஆனந்த மடைந்தனர். அவ்வளவு வருஷ காலத்திற்கு முன்பே மனிதன் பூமியிலிருந்திருக்கவேண்டுமென்று தீர்மானித்தனர்.''

"என்ன, சோணசலம்! பார்த்தாயா மேல் நாட்டாரின் புத்திக் கூர்மையை? நீ என்னவோ நமது முனிவர்களைப் பற்றிப் பெருமை படித்துக்கொள்ளுகிறாயே.''

"அப்பா, நிறுத்து. நீ முக்காலமுமுணரவல்ல முனிவரது ஆற்றலை அறியாதவன்; ஆதலால் இவர் கூறிய விஷயத்தைக் கேட்டு வியப்படைகிறாய். ஏதோ ஓர் உடைந்த பல்லிலிருந்து மனிதவுருவம் எழுதினர்களென்பதைக் கேட்டு ஆச்சரியப்படுகிறாயே. நான் முன் கிருத யுகத்தில் மாயாபுரியில் ரோமசன் என்னும் அரசன் ஆளுகையில் நடந்த செய்தி யொன்று சொல்லுகிறேன்; கேள்:

"அரசன் ஒரு நாள் பட்டணத்திற்கு வெளியிலுள்ள வனத்தில் சஞ்சரிக்கும்பொழுது அங்குள்ள மாதவிப்பந்தலின் கீழ்த் தளிர்களாலமைக்கப்பட்ட ஒரு படுக்கையைக் கண்டான். அதை உற்று நோக்குகையில் ஒரு நீண்ட அழகிய மயிர் காணப்பட்டது. அதை எடுத்துப் பார்த்து வியந்து இதை உடையவர் யாரோவென அறியவேண்டுமென் றாவல்கொண்டான். அதை எடுத்து அரண்மனைக்குச் சென்று அதற்குரியவரைக் காணும் வழி இன்னதென்று தெரியாமல் திகைத்திருக்கையில் அவனுடைய மந்திரி வந்து சித்திர வேலையில் சிறந்த சிகண்டி யென்பவன் வந்திருப்பதாயும் அவன் பிறவிக் குருடனானாலும் மாந்தர்களது அங்கத்தின் ஏதாவது ஒரு பாகத்தைத் தடவிப் பார்த்துவிட்டு அவர் உருவத்தை எழுதவல்லவனென்றும் சொன்னான். உடனே அரசனவனை யழைத்துத் தன்னிடமிருந்த மயிரை அவனிடத்தில் கொடுத்து அதற்குரியவரின் உருவத்தை எழுதச் சொன்னான். சிகண்டியு மதற்கிசைந்து எழுதி முடிக்கும்

சமயத்தில் அரசன் வந்து பார்த்துச் சித்திரத்திலிருந்த உருவம் தன்னுடைய மனைவியினுடையதாயிருக்கக் கண்டு சினங்கொண்டு, அப்படத்தைக் கிழித்துச் சிகண்டியையும் வெட்டிக்கொன்ருன். உடனே சிகண்டியும் தன்னுடைய நிஜமான யக்ஷவடிவத்தோடு ஆகாயத்தில் நின்று அரசனை நோக்கி 'மகாராஜாவே! உம்மால் நான் சாபத்தினின்றும் நீங்கித் தேவலோகம் செல்லுகிறேன்' என்ருன். அது கேட்ட அரசன் வியப்புற்று அவனது வரலாற்றை வினவ, அவனும் 'நான் அளகாபுரியில் சித்திர வேலையில் பேர்போன சித்ரகேது என்னும் யக்ஷன். நான்குபேருடைய கட்டளைப்படி பூஜைக்காக உமாதேவியின் உருவத்தைப் படத்திலெழுத முயலுகையில் அம்மையின் அழகை முற்றிலும் காட்டமுடியாதவனுய்க் கவலையுற்றேன். பிறகு கயிலையிற் சென்று தரிசித்துக் கண்ணுரத் தேவியைக் கண்டு படமெழுதலாமென்று சென்றேன். நான் அங்குச் சென்றபொழுது ஈசனும் தேவியும் கயிலைமலைச் சாரலில் உல்லாஸமாய் உலாவிக் கொண்டிருப்பதைக் கண்டு திகைத்து நின்றேன். என்னைக் கண்ட ஈசன் கோபங்கொண்டு நீ உலகில் அந்தகனுய்ப் பிறக்கக்கடவாய் என்ற கடுஞ் சாபமளித்தனன். நானும் நடு நடுங்கி அவனையும் அம்மையையும் பணிந்து இச்சாபத்திற்கு விமோசனம் அருள வேண்டுமென்று பிரார்த்திக்கவும் அவர்கள் மனமிரங்கி உன்னை ரோமசனென்னு மரசன் சினந்து கொல்லவும் சாபத்தினின்றும் நீங்கி அளகாபுரி யடைவாய் என்றருளினர்.' இவ்வாறு கூறி அவன் மறைந்தான்."

"அப்பா சோணசலம், உன் புராணப் பொய்யை யார் நம்புவார்கள்?"

"அடே இதென்ன விபரீதம்! இவர் அரைப்பல்லிலிருந்து ஆளுருவமெழுதினர்களென்று சொல்வது சத்தியமென்கிருய். நம் முனிவர்கள் மயிரிலிருந்து மங்கை யுருவத்தை யெழுதினர்களென்று சொல்வது பொய் என்கிருயே! இதென்ன பக்ஷபாதம்! அது சத்தியமானல் இதுவும் சத்தியம்தான். பொய்யானல் இரண்டும் பொய்யாக வேண்டும். அது போகட்டும்; மனிதன் தோன்றிய இடமின்ன தென்று தீர்மானித்துவிட்டார்களா, கேட்போம். நம்முடைய தகரார் இப்பொழுது தீராது."

"அதுதான் சரி; ஸாம்பசிவா, அதைப் பற்றிச் சொல்; கேட்போம்."

"அதைப் பற்றிய அபிப்பிராயங்கள் நாளடைவில் மாறிக் கொண்டே வருகின்றன. சிலகாலம் மனிதன் முதலில் தோன்றிய

இடம் ஆக்ஸஸ் நதிக்கரை யென்றிருந்தார்கள். பிறகு ருஷியா தேசத்தின் வடமேற்குப்பாகமென்றார்கள். பின்னொரு காலம் உத்தரமேருவின் பார்சுவத்திலென்றார்கள். இப்பொழுது இந்து மகா சமுத்திரத்தில் ஒரு பெரிய கண்டம் இருந்ததாயும் அது கடலில் முழுகிவிட்டதாயும் அதில்தான் ஆதியில் மனிதன் தோன்றினான் என்றும் ஊகிக்கிறார்கள். இதைப் பரிசோதிப்பதற்காக அக்கடலின் அடிநிலத்தில் தோண்டிப் பார்க்க ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறார்கள்.''

''என்ன சோணாசலம்! இதற்கும் நீ ஏதாவது ஒரு புராணக் கதை சொல்லுவாயோ?''

''அடே! புராணக் கதையா? இந்தக் கேள்வி இப்பொழுது உண்டானதல்ல. அநேக காலத்திற்குமுன்பு உலகிலுள்ள ஜங்கமங்களனைத்தையும் தோற்றுவித்த காசிப முனிவரை மற்றைய முனிவர்களெல்லாம் இக்கேள்வி கேட்டார்கள். அதற்கவர் பின்வருமாறு விடை கூறினர்:

அவ்வுரைகேட் டருந்தவனும் உரைத்திடுவா னலகில்லா
இவ்வுலகிற் சீவர்கள்தாம் தோன்றியதோ ரிடமதுதான்
கவ்வையிலா வஞ்சியெனும் கருவூரா மற்றதனை
எவ்வமிலா ஆநிலையென் றியம்பிடுவா ரிமையோரே.

நமக்கெல்லாம் இவ்விஷயத்தில் சந்தேகம் உண்டாகக் கூடாதென்ற கருத்தோடு மனிதர்கள் முதலில் தோன்றிய விடத்தின் பெயரை வஞ்சி யென்றும் கருவூர் என்றும் ஆநிலை யென்றும் குறிப்பிட்டிருக்கிறார்கள். ஸாமான்யமாய் ஜீவர்கள் நிலைத்துவளர்வது கருப்பையிலென்றும் அது தங்குமிடம் பெண்ணென்றும் அறிவார்கள். இதுபோல் ஆதியில் ஜீவர்கள் தோன்றி நிலைத்த இடத்தை வஞ்சி அதாவது கருவிருக்கும் ஊர் என்றும் குறிப்பிட்டிருக்கிறார்கள். இதன்றியும் இதுவே தேவாரத்தில் ஆநிலை யென்று கூறப்பட்டிருப்பது உனக்குத் தெரியுமே. ஆ வென்பது பசு. அது சைவர்கள் ஸித்தாந்தத்தில் ஜீவர்களைக் குறிக்குமன்றோ? ஆகவே ஆநிலை யென்பது முதலில் ஜீவன் நிலைத்தவிடமென்பதில் ஐயமுண்டோ? இதன்றியும் அவ்வூருக்கருகில் தான்தோன்றிமலை யென்பதுண்டு? அது ஜீவன் தானே தோன்றிய மலை யென்பதைக் குறிக்குமென்பதில் என்ன சந்தேகம்? இப்படி உள்ளங்கை நெல்லிக்கனி போல விஷயத்தை நமது புராணங்கள் விளக்கியிருக்கையில் கடலின் கீழ் நிலத்தைத் தோண்டிப் பார்க்க இவர்கள் எத்தனிப்பதுவும் வீணேயன்றோ?''

"அப்பா சோணாசலம்! நிறுத்து; கொஞ்சம் மூச்சு விடு. நீ பொய்சொல்லஆரம்பித்தால் யுகம் முடிந்துவிடும். இனி சாப்பாட்டுக்கு நேரமாய்விட்டது. உன் பொய்ப் பிரசங்கத்தை மற்றொரு நாளைக்கு வைத்துக்கொள்வோம்."

"உனக்கு நான் பிரமாணங்களோடு சொல்வதெல்லாம் பொய்; ஆராய்ச்சியாளர் ஆதாரமின்றிக் கூறுவதெல்லாம் மெய். உனக்கு நம்பிக்கை உண்டாக்குவது ஈசுவரனாலும் முடியாது. சரி, நான் போய்வருகிறேன்" என்று சொல்லி அவன் வண்டியேறிச் சென்றான். என் நண்பன் ஸாம்பசிவனும் சோணாசலத்தினுடைய பேச்சைக் கேட்டுப் பிரமித்தவனாய் வீடு சென்றான்.

# குழந்தைகளே புத்திசாலிகள்*

ச. முனிஸ்வாமி பிள்ளை

அச்சமயம் ஈஸ்டர் பண்டிகை நாட்கள். இன்னும் உறை பனி திறந்த வெளியெல்லாம் நிறைந்து கிடந்தது. ஜலம் சிறு அருவிகளாய்க் கிராமத்துத் தெருக்களில் ஓடிக்கொண்டிருந்தது.

வெவ்வேறு வீட்டுப் பெண்கள் இருவர் ஒரு சந்தில் விளையாடும் பொருட்டு வந்து சேர்ந்தனர். இரு புறமுமுள்ள வீட்டு முற்றங்களிலிருந்தும் ஓடிவரும் அழுக்கு நீர் அச் சந்தின் நடுவே ஓடி ஒரு சிறிய பள்ளத்தில் ஒரு குட்டைபோல் தேங்கி நின்றிருந்தது. ஒரு குழந்தை மிகச் சிறியவள். மற்றவள் சற்றுப் பெரியவள். அவர்களின் தாய்மார் அன்றையதினம் அவர்கள் இருவருக்கும் புது ஆடைகளைக் கட்டியிருந்தனர். பெரியவள் மஞ்சள் பாவாடையும், சிறியவள் நீலப் பாவாடையும் அணிந்திருந்தாள். குழந்தைகள் இருவரும் அப்பொழுதுதான் கோயிலிலிருந்து வந்திருந்த சமயம். அழகான தமது ஆடைகளை ஒருவர்க்கொருவர் காட்டிச் சந்தோஷப்பட்ட பின்பு இருவரும் விளையாடத் தொடங்கினர். சிறிது நேரம் விளையாடினதும் குட்டையாய்த் தேங்கி நிற்கும் அழுக்கு ஜலத்தில் இறங்கி விளையாட வேண்டுமென்ற ஆசை அவர்கள் மனத்தில் உதித்தது. சிறியவள் தன் காலில் அணிந்துள்ள அழகிய புதிய பாதரக்ஷையுடனே ஜலத்தில் இறங்கத் தொடங்கவே, பெரிய குழந்தை அவளை வேண்டாமென்று தடுத்து, "மாலா! அப்படியே ஜலத்தில் இறங்காதே; உன் அம்மா திட்டுவாள். இதோ என்னுடைய மிதியடியை வாங்கி வைக்கிறேன். நீயும் அப்படியே செய்" என்றாள்.

பாதரக்ஷைகளைக் கழற்றிவிட்டு இருவரும் பாவாடைகளைத் தூக்கிக்கொண்டு ஒருத்திக்கொருத்தி எதிராய் அக் குட்டையில் இறங்கி நடந்து வந்தனர். ஜலம் மாலாவுக்குக் கணுக்கால்வரையில்

---

*இக் கதை டால்ஸ்டாய் அவர்கள் எழுதியதன் மொழிபெயர்ப்பு; அவர் உபயோகப்படுத்தியிருக்கும் 'Malasha' என்னும் பெயரை "மாலா" என்றும் 'Akoulya' என்னும் பெயரை "அகல்யா" என்றும் இக் கதையில் உபயோகப்படுத்தியிருக்கிறேன். ச. மு.

வரவே, அவள் அங்கேயே நின்று, "அகல்யா! ஓகோ! இது வெகு ஆழமாயிருக்கிறதே; எனக்குப் பயமாயிருக்கிறது அம்மா!" என்றாள்.

பெரியவள் "மாலா! வா; பயப்படாதே. இதோ என்னைப் பார். இவ்வளவுதான் ஆழம். பயப்படாதே; இனிமேல் ஆழமில்லை" என்றாள். சிறியவளும் பயம் நீங்கி நடந்துவர, இருவரும் பக்கத்தில் நெருங்கவே அகல்யா, "மாலா! ஜலத்தைக் காலால் அப்படி அடித்து மேலே தெளிக்காதே. மெள்ள நட" என்றாள்.

இப்படிச் சொல்லி முடிந்தவுடனேயே மாலா தட்டென்று பின்னொரு முறை ஜலத்தில் காலை வைக்கவும் அவ்வழுக்கு நீர் நேராய் மேலெழும்பி அகல்யாவின் பாவாடைமீதெல்லாம் பட்டுப் பாவாடை நனைந்ததுமல்லாமல் ஜலம் அவளுடைய கண் மூக்கு இவற்றின்மேலும் பட்டது. புதிய பாவாடை அழுக்கடையவே அகல்யா கோபமூண்டு மாலாவை யடிப்பதற்குத் தூக்கிக்கொண்டு ஓடினாள். மாலா தானே முதலில் செய்த தப்புக்குப் பயப்பட்டு அகல்யா தன்னை அடிக்க வருவதைக் கண்டு நடுங்கிக் கஷ்டத்துடன் ஜலத்திலிருந்து மேலேறி வீட்டை நோக்கி ஓடத்தலைப்பட்டாள். அச்சமயத்தில் அகல்யாவின் தாயார் தற்செயலாய் அவ்வழியே வர, தன் பெண்ணின் பாவாடையெல்லாம் மண்ணுயிருப்பதைக் கண்டாள். உடனே அவள், "ஓ! அசட்டுப் பெண்ணே! என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" என்று கூச்சலிட்டாள்.

"நானென்ன செய்வேன் அம்மா! மாலா வேணுமென்று இப்படிச் செய்துவிட்டாள்" என்றாள் குழந்தை.

இதைக் கேட்டவுடன் அகல்யாவின் தாயார், மாலாவைப் பிடித்து அவள் பிடரியில்—கழுத்தின் பின் புறத்தில்—ஓர் அடி கொடுத்தாள். அடியுண்ட மாலா அத்தெருவெல்லாம் கேட்கும்படி ஓ வென்று கதறிக்கொண்டு அழத் தொடங்கினாள். இக்குரல் கேட்டு மாலாவின் தாயும் ஓடிவந்தாள். அவ்விடத்திற்கு ஓடிவந்த அவள், "ஏன் என் குழந்தையை அடிக்கிறாய்?" என்று சொல்லிப் பக்கத்தில் நிற்கும் அகல்யாவின் தாயை வாய்க்கு வந்தபடி திட்டத் தொடங்கினாள். வார்த்தைக்கு மேல் வார்த்தை பெருகி இரண்டு ஸ்திரீகளும் பலமாய்க் கோபாவேசத்துடன் சண்டையிடத் தொடங்கினர். சப்தம் அதிகரிக்கவே புருஷர்களும் வெளியே ஓடிவந்தனர். உடனே தெருவில் ஒரு பெரிய கூட்டம் சேர்ந்துவிட்டது. அங்கு வந்த ஒவ்வொருவனும் கோபத்துடன் கத்துகிறானேயன்றி மற்றவன் சொல்வதைக்கேட்பவனே கிடையாது. சண்டை பலக்கவே ஒருவன்

மற்ெருருவனைத் தள்ள, இரு திறத்தாரும் கை கலந்து 'அடி தடி'க்கு வந்து விட்டனர். இச்சங்கடத்தைப் பார்த்து, அகல்யாவின் பாட்டி—தொண்டு கிழவி—இவர்கள் இடையில் வந்து நின்று சண்டையிடும் புருஷர்களைச் சமாதானப்படுத்த முயன்ருள்: "பிள்ளைகாள்! நீங்கள் எதை எண்ணி இவ்விதம் சண்டை போடுகிறீர்கள்? நண்பர்களே! இப்படிச் செய்தல் நியாயமா? அதுவும், விசேஷமான இன்றையதினம் எல்லாரும் கோயிலுக்குப்போய் வந்திருக்கும்போது இன்று நீங்கள் போராடுவது? இச்சமயம் ஈசுவரத்தியானம் செய்துவந்த நாமெல்லாம் சந்தோஷமாயிருக்க, இவ்விதமான புத்தியில்லாக் காரியம் செய்யலாமா?'' என்ருள்.

இக்கிழவி பேச்சையா கேட்கப்பட்டவர்கள் அம் மனிதர்கள்! இரு திறத்தாரும் ஒருங்கு சேர்ந்து கிழவியைக் கீழே தள்ள அவளருகில் வந்துவிட்டனர். பாவம்! கிழவியும் அவர்களிடையில் சிக்கிக் கொண்டு கீழே விழுந்து மிதிபட்டிருப்பாள். அப்படியில்லாமல் அவர்களுடைய சண்டையை விலக்கி அம் மனிதர்களைச் சமாதானப்படுத்த மறுபடியும் மாலாவும் அகல்யாவுமே காரணமாயினர். எப்படி?

ஸ்திரீகள் சண்டை பிடித்துக்கொண்டிருக்கும்பொழுதே அகல்யா தன் பாவாடையிலுள்ள அழுக்கையெல்லாம் துடைத்துவிட்டு மறுபடியும் ஜலம் தேங்கும் பள்ளத்துக்கே விளையாடப் போய்விட்டாள். அங்கே ஒரு கல்லை எடுத்துக்கொண்டு அப்பள்ளத்தின் முன்னே சற்று உயரமாய் ஜலத்தை ஓடவிடாமல் தடை செய்யும் மண் மேட்டைக் கல்லால் வெட்டத் தொடங்கினுள். அவ்வாறு மண்ணைப் பறித்து ஒரு சிறு வாய்க்கால் செய்து ஜலத்தைத் தணிவாக இருந்த தெரு வழியாய் ஓடவிட வேண்டுமென்பது அக் குழந்தையின் நோக்கம். இவ்வேலையை அகல்யா ஊக்கத்தோடு செய்துகொண்டிருக்கையில் மாலாவும் அங்கே வந்து சேர்ந்து ஒரு மரத்துண்டால் அம் மண் மேட்டை வெட்டி அகல்யாவுக்கு உதவி செய்தாள். புருஷர்கள் கை கலக்கும் சமயத்துக்குள் குழந்தைகள் வெட்டின சிறு வாய்க்கால் வழியாக ஜலம் தெரு வழியாய் ஓடத் தலைப்பட்டது. அவ்வாய்க்கால் வழியே ஓடும் ஜலத்தின் இரு புறமும் இரண்டு குழந்தைகளும் ஜலத்தைத் தொடர்ந்து தாங்களும் ஓடி வந்தனர். சண்டை செய்வோரைக் கிழவி சமாதானம் செய்து கொண்டிருக்கும் இடத்துக்குப் பக்கத்தில் ஜலம் ஓடி வந்து கொண்டிருக்க, அதைப் பின்பற்றி மற்றென்றையும் கவனியாமல் வந்து கொண்டிருந்த அகல்யா மாலாவை நோக்கி, "மாலா!

மாலா!! பிடி அதை! பிடி! பிடி!!'' என்றாள். நீரோடும் போது தன் மரக்கட்டையையும் அடித்துக்கொண்டு ஓடுவதைப் பார்த்துச் சந்தோஷத்துடன் சிரித்துக்கொண்டே ஓடி வரும் மாலா வுக்குச் சிரிப்பின் மிகுதியால் பேசவே முடியவில்லை!

வாய்க்கால் வழியே ஜலம் ஓடிவர, அதன்மேல் மிதந்து வரும் சிறு கட்டையைப் பார்த்துக்கொண்டே அதிக ஆனந்தத்துடன் இரண்டு பெண்குழந்தைகளும் தங்களைச் சுற்றிலும் நடக்கும் இதர விஷயம் ஒன்றையும் கவனியாமலே நேராய் ஓடி வந்து சண்டை செய்துகொண்டிருக்கும் மனிதர்கள் கூட்டத்தில் நுழைந்தார்கள்.

இக் காட்சியைக் கண்ட கிழவி, இதுவே நல்ல சமயம் என்று அறிந்து, "ஓ! புருஷர்களே! உங்களுக்கு வெட்கமில்லையா? இவர் கள் பொருட்டல்லவா இவ்வளவு பேரும் சண்டைபோடுவது. ஆனல் சண்டைக்குக் காரணமான இக் குழந்தைகளோ சண்டை யெல்லாம் முற்றிலும் மறந்து ஆனந்தமாய் விளையாடுகின்றனர்! இந்த ஆச்சரி யத்தைப் பாருங்கள்! இதைப் பார்த்தாவது பெரியோர்களான நீங் கள் கற்றுக்கொள்ளக் கூடாதா? உங்களைவிட இக் குழந்தைகளே புத்திசாலிகள் என்று நான் எண்ணுகிறேன்'' என்றாள்.

மூண்ட சண்டைக்குத் தயாராய் அங்கே கூடி நின்ற புருஷர் கள் யாவரும் அவ்விரண்டு குழந்தைகளையும் பார்த்து வெட்கத் தால் தலை குனிந்து ஒன்றும் பேசாமல் தங்கள் தங்கள் வீட்டை நோக்கி விரைந்து நடந்தனர்.

"நீங்கள் மறுபடியும் சிறு குழந்தைகள் போல் ஆனாலன்றி ஒரு காலத்திலும் நீங்கள் தேவலோகத்தை அடையவே முடியாது.''

—பைபிள்.

# குழந்தையின் கல்வி

## குழந்தையின் விளையாட்டுச் சாமான்கள்

எஸ். ஜகந்நாதன்

குழந்தைகள் வளர வளர நாம் எவ்வளவோ விளையாட்டுச் சாமான்களை அவர்களுக்குக் கொடுத்து வருகிறோம். ஒரு கிலு கிலுப்பை எவ்வளவு உபயோகமாயிருக்கிறது என்பது நமக்குத் தெரியும். வர்ணப் பந்துகளும் தொட்டிலில் தொங்கவிடும் கிளிகளும் குழந்தைகளுக்குச் சந்தோஷத்தைக் கொடுக்கின்றன. எவ்வித விளையாட்டுக் கருவிகளையும் கல்வியை அபிவிருத்தி செய்யக்கூடிய கருவிகளையும் நாம் கையாளலாம் என்பதை ஊகித்தறிய வேண்டும். குழந்தையின் வளர்ச்சியை விவரித்துச் சொன்னதில் அந்த அந்தக் காலத்தில் உபயோகிக்கக் கூடிய சிலவற்றைச் சொன்னோம். சாதாரணமாக நமது தேசத்தில் பனை ஓலை, களி மண், மரம், பித்தளை, நூல், துணி இவைகளால் செய்யப்பட்ட பொம்மைகளை உபயோகித்து வருகிறோம். மேல் நாடுகளிலோவென்றால் இந்த விளையாட்டுக் கருவிகளைப்பற்றின சாஸ்திரம் மிகவும் நன்றாக ஆராய்ச்சி செய்யப்படுகிறது. வெகு மும்முரமாக அக்கருவிகள் வியாபாரமும் செய்யப்பட்டு வருகின்றன. ஏதோ ஒரு பத்திரிகையில் சுமார் 6 கோடி ரூபாய்க்கு நாம் விளையாட்டுச் சாமான்கள் வாங்குகிறோம் என்று படித்தது ஞாபகம் வருகிறது. விளையாட்டுச் சாமான்கள் வாங்காத வீடு கிடையாது. ரப்பர், செல்லுலாயிட், காகிதம், தகரம், மெல்லிய தோல் மயிர் இவைகளால் செய்யப்பட்ட சாமான்கள் குழந்தைகளுக்கு இன்பத்தைக் கொடுக்கின்றன. தொழிலாளர்கள் கூடக் குழந்தைகள் மனப்போக்கைக் கவனித்துத் தங்களது தொழிலை அபிவிருத்தி செய்ய நேரிடுகிறது. நம் தேசத்தவர்களும் இவ்விஷயத்தில் ஊக்கங்காட்டுவார்களானால் நமது குழந்தைகளுக்கும், வீட்டிற்கும், நமது நாட்டிற்கும், மிகவும் உபயோகமாயிருக்கும்.

## குழந்தைகளைப்பற்றின சில பரீக்ஷைகள்

நமது வீட்டிலுள்ளவர் பக்கத்து வீட்டுக்காரர்களோடு பேசுகையில் ஒருவர்க்கொருவர் குழந்தைகளின் யோக க்ஷேமங்களை

விசாரிப்பதுண்டு. அப்பொழுது குழந்தையின் பிராயத்தைக் குறிப்பிடாமல், "இப்பொழுது தான் நடக்க ஆரம்பிக்கிறது; இப்பொழுது தான் வார்த்தைகள் வருகின்றன; ஒரு வருஷத்திற்கு மேலாகியும் நடக்க ஆரம்பிக்கவில்லை" என்று பேசிக்கொள்ளுவார்கள். குழந்தைகள் எந்தப் பிராயத்தில் எவ்வளவு வளர்ச்சியடைய வேண்டும் என்பதை அவர்கள் தமது அநுபவத்தில் ஒரு விதமாகத் தீர்மானித்திருக்கிறார்கள். மேல் நாடுகளில் குழந்தைகளின் வளர்ச்சியைக் கவனிக்கச் சில பரீக்ஷைகள் ஏற்படுத்தி வருகிறார்கள். இப் பரீக்ஷைகள் வைத்தியர்களாலும், உபாத்தியாயர்களாலும், மனோதத்துவ சாஸ்திரிகளாலும் நிர்ணயம் செய்யப்பட்டு வருகின்றன. சில உதாரணங்கள் வருமாறு:

நமது தேசத்தில் சில முனிஸிபாலிடிகளில் சுகாதாரவாரக் கொண்டாட்டத்தில் குழந்தைகளைப் பரீக்ஷை செய்து நன்றாய்ச் சம்ரக்ஷணை செய்யப்பட்ட குழந்தைகளுக்குப் பரிசுகள் கொடுக்கிறார்கள். அப்படிப் பரீக்ஷிப்பதில் குழந்தைகளை வயதுப் பிரகாரம் சேர்த்து அவர்களுடைய சுத்தம், தேக சௌக்கியம், நிறை முதலியவைகளைக் கணக்கிடுகிறார்கள். மேலும் காது, மூக்கு, கண்கள் வழியாக அசுத்த நீர் ஒழுகிக் கொண்டிருக்கின்றதா? குழந்தைகளின் பெற்றோர்களின் ஸ்திதி யென்ன? குழந்தைகள் மிக இளைத்தேனும் அதிகம் பருத்தேனும் இருக்கின்றனவா என்றும் கவனித்து அறிகிறார்கள்.

மேல் நாடுகளில் குழந்தையின் மனோ வளர்ச்சியைச் சில மனோதத்துவ சாஸ்திரிகள் பரீக்ஷை செய்து வரும் முறை பின்வருமாறு:

முதல் மாதக்குழந்தை: ஏதாவது ஒரு சாமானைப் பிடித்துக் கொள்ளத் தெரிகிறதா?

6 மாதக்குழந்தை: ஒருவர் பிடித்துக் கொள்ளாமல் உட்காரத் தெரிகிறதா? தனக்குப் படிக்கப்பட்ட வரிகளை அறிந்து கொள்ளுகிறதா?

ஒரு வருஷம்: சில சாமான்களைக் கொண்டு செய்கிற சப்தம் போல் செய்ய முடியுமா? (உ-ம்) கிலு கிலுப்பை ஆட்டுகிறது அல்லது தம்பட்டம் கொட்டுகிறது.

2 வயது வரையில்: நெருப்புப் பெட்டிகளாலும், கட்டைகளாலும் ஏதாவது கட்டுமோ?

3 வயது வரையில் : சில வஸ்துக்களின் பருமன், உருவம் இவற்றை அறிய முடியுமா ? பெரியது, சிறியது என்று பகுத்தறியும் சக்தியிருக்கிறதா ? சில சாதாரணப் பொருள்களை உடனே தெரிந்து கொள்ளுமா ? (இந்தக் காலத்தில் குழந்தையின் பேச்சுத் திறமையையும் பரீக்ஷை செய்கிறார்கள்.)

5 வயது வரையில் : தேகத்தின் உறுப்புக்களைக் காட்டுதல், தெரிந்த வஸ்துக்களின் பெயரைச் சொல்லுதல், படத்தில் காட்டியுள்ள சாமான்கள் இன்னவென்று சொல்லுதல், தகப்பனார் பெயரைச் சொல்லுதல், தான் ஆணா பெண்ணா என்று சொல்லுதல், சொல்லப்பட்ட சில வார்த்தைகளையும் எண்களையும் சொன்ன பிரகாரம் திருப்பிச் சொல்லுதல்.

இப்பரீக்ஷைகளையும் குழந்தைகளின் வளர்ச்சியையும் ஒப்பிட்டுப் பார்க்க இப்பரீக்ஷைகள் அந்த அந்த வயதிற்குத் தக்கபடியே உள்ளன என்று நாம் ஊகிக்கலாம்.

மேல் நாடுகளில் குழந்தையின் கல்வியின் பொருட்டுப் பலர் தங்கள் வாழ் நாளை அர்ப்பணம் செய்து வருகிறார்கள். குழந்தைகளினிடம் அன்பு என்ற ஊற்று அவர்கள் இரத்தத்தில் ஓடிக்கொண்டிருக்கின்றது. அது போலவே நமது நாட்டிலும் அப்படிப்பட்ட பல நிபுணர்கள் முன் வந்து ஒருவன் தனது குழந்தைகளை எப்படி நல்வழிப்படுத்த வேண்டுமென்று சொல்ல வேண்டுவது அவசியம் என்று தோன்றுகிறது. ஸாகரம் போன்ற ஸம்ஸாரத்தில் சிக்கிக் கொண்ட நமக்கு வேலை, கவலை, தொல்லை இவைகள் மேன்மேலும் அலைகளைப் போல் அடித்துக் கொண்டேதா னிருக்கின்றன. கடவுளும் நமது யோகக்ஷேமத்தை வகிக்கக் கடமைப்பட்டவர் என்று உபாத்தியாயர்கள் கடவுளை நம்பித் தம்முடைய நேரத்தில் கொஞ்ச நேரமெனும் கல்வியைப் பற்றின முறைகளைத் தமது குழந்தைகளிடத்திலும் பள்ளிக்கூடத்திலும் பரிசீலனை செய்து பார்க்க வேண்டும். தம்முடைய அனுபவத்தைப் பிறருக்குச் சொல்ல வேண்டும். அயல் நாட்டு முறைகளை அறிய வேண்டும். "குழந்தைகளுடனிருந்து குழந்தைகளுக்காக நாம் ஜீவிப்போம்'' என்பது நம்முடைய கொள்கையாக இருக்கவேண்டும். இவ்வித முயற்சியில் கடவுள் நம்மைச் செலுத்தியருளுவாராக !

# சாரணீயம்

பி. எஸ். நாராயணசாமி

சுமார் 25 வருஷங்களுக்கு முன்னர் இங்கிலாந்தில் சிறுவர்களின் தொகுதிகள், (1) காடட் கோர்ஸ் (*Cadet Corps*) (2)பாய்ஸ்பிரிகேட் (*Boys Brigade*) (3) ப்ளே ஸெண்டர்ஸ் (*Play Centres*) என்ற பெயர்களினால் வழங்கப்பட்டு வந்தன. இந்த அமைப்புக்கள் பொதுவாகச் சிறுவர்களின் நலனைக் கருதியே ஏற்பட்டவை; எனினும் ஒவ்வொன்றிற்கும் தனித்தனி நோக்க முண்டு. உதாரணமாக, ப்ளே ஸெண்டர்ஸ் என்னும் பெயரால் வழங்கப்பட்டு வந்த அமைப்புக்கு, சிறுவர்கள் தெருப்புழுதியில் விளையாடாதபடி வசதிகளை உண்டுபண்ணிக் கொடுப்பதே முக்கிய நோக்கமாகவிருந்தது. பாய்ஸ் பிரிகேட், காடட் கோர்ஸ் என்று சொல்லப்பட்ட அமைப்புக்களின் பிரதம நோக்கம் சிறுவர்கள் அணிவகுத்து நிற்கும்போது தக்க உடையுடன் சிப்பாய்களைப் போன்ற தோற்றத்துடனிருக்க வேண்டுமென்பது. இப்படிப்பட்ட அமைப்புக்களொன்றிலும் திருப்தி அடையாதவராய் லார்ட்பேடன் பவல் என்பவர் சாரணீயம் என்னும் இயக்கமொன்றை ஏற்படுத்தினர். இவ்வியக்கத்தின் நோக்கம், சிறுவர்களை நல்வழியில் நடக்கப் பயில்விப்பதும், ஒவ்வொருவனையும் சமூக வாழ்வுக்கு ஏற்றவனாகவும் சமூகத்தொண்டு புரியும் ஆற்றலுடையவனாகவும் செய்வதுமே யாகும். இவ்வியக்கத்தில் 12 வயதிற்குக் குறையாமலும் 17 வயதிற்கு மேற்படாமலு முள்ள சிறுவர்கள்தாம் சேரலாமென்று ஒரு நியதி ஏற்பட்டிருந்தது. சில வருஷங்கள் சென்றபின் 12 வயதிற்குக் குறைந்த சிறுவர்களும் இவ்வியக்கத்தில் சேரப் பேரவாக் கொண்டிருந்தமையினால் இளஞ்சாரணியம் அல்லது குருளைப்பயிற்சி என்ற ஒரு பகுதி ஏற்படுத்தப்பட்டது.

வனசஞ்சாரிகளின் (*Back-woods-men*) பழக்க வழக்க ஒழுக்கங்களைச் சாரணப்பயிற்சிக்கு அடிப்படையாகவும், 'ரட்யார்ட் கிப்ளிங்' இயற்றிய வன புராணம் (*Jungle book*) என்னும் புத்தகத்திலிருக்கும் மௌக்ளியின் (*Mowgli*) கதையைக் குருளையர் பயிற்சிக்கு அடிப்படையாகவும் கொண்டு பயிற்சி முறை தொகுக்கப்பட்டுளது.

இவ் வியக்கத்தின் நோக்கத்தையும், தத்துவத்தையும் முழுதும் உணராத நம் நாட்டாரிற் பலர், இவ்வியக்கத்தையும் இதில் ஈடுபட்டிருப்பவரையும் ஒருவித வெறுப்புடன் நோக்குகிறார்கள். இவ்வித வெறுப்புக்குக் காரணமாகச் சிலர், "மனிதரை விலங்காக்குவார் போல் லார்ட்பேடன் பவல் விலங்கியல்புகளைப் பெரிதும் போற்றி வனத்தின் கதைகளையே இலக்ஷியமாகக் கொண்டு இயக்கத்தை ஏற்படுத்தியுள்ளார்" என்று கூறுகிறார்கள். இன்னும் சிலர், இது அயல் நாட்டான் ஏற்படுத்திய இயக்கமென்றும், அயல் நாட்டுப் பழக்க வழக்கங்களுக்கு நம்மை அடிமைப்படுத்த வந்த இயக்கம் என்றும் பலவாறு பேசுகிறார்கள். இத்தகைய குறை கூறும் கூற்றுக் களெல்லாம் ஒரு விதமான அலக்ஷிய புத்தியினாலும் முற்றிலும் தத்துவத்தை அறிந்து கொள்ளாமையினாலும் ஏற்படுவன என்றே சொல்ல வேண்டும்.

### நம் நாட்டவர்க்கும் சம்மதமே

"ஐயா, இந்த நவீன நாகரிகமாம் ஒரு நாகரிகம் வந்தாலும் வந்தது! குடியையே கெடுத்து விட்டது. பண்டைக் காலத்தில் ஜனங்கள் எவ்வளவு க்ஷேமமாக விருந்தார்கள்? அவரவர்கள் நாட்டுப் புறங்களில் அவரவர்களுக்கு வேண்டிய பொருள்களை ஆங்காங்கே தேடிக்கொண்டோ, சாகுபடி செய்து கொண்டோ பரம திருப்தியோடு கூடியவர்களா யிருந்தார்கள். இந்நாளிலோ ஜனங்கள் நகரங்களில் குடியேறி நெருக்கமான வீடுகளில் வாஸம் செய்வதுடன், கடவுள் ஒவ்வொரு பிராணிக்கும் மனமுவந்தளித்திருக்கும் நல்ல காற்று, நல்ல தண்ணீர், சூரிய வெளிச்சம் இவைகளைக் கூட அனுபவிக்கக் கொடுத்து வைக்காதவர்களாய்த் தவிக்கிறார்கள். என் தகப்பனார் இரண்டு வருஷங்களுக்கு முன்தான் தமது 88-வது வயதில் இறந்து போனார். சாவதற்கு ஒரு மாதத்திற்கு முந்திக் கூட 30 மைலிலிருக்கும் சென்னைக்குக் காலையில் கால் நடையாகவே போய் ஸாயங்காலம் திரும்பி வீடு சேர்ந்து விடுவார். எதற்குச் சொல்லுகிறேன் என்றால், பழைய காலத்து மனிதர்கள் தாங்கள் நடத்தி வந்த இயற்கை வாஸத்தின் பலனாக எவ்வளவு திடகாத்திர சரீரிகளாக விருந்தார்கள் பாருங்கள்! இது மட்டுமா? அவர் கண்ணாடியே போட்டறியார். வெகு தூரத்தில் இருக்கும் சிறு வஸ்துக்களையும் காணச் சக்தியுடையவராக இருந்தார். கர்ணன் குண்டலங்களுடன் பிறந்ததாகப் புராணங்கள் சொல்லத்தான் கேட்டிருக்கிறோம். இன்னும் கொஞ்ச நாட்களில் குழந்தைகள் கண்ணில் கண்ணாடியுடன் பிறக்கும் போலிருக்கிறது. பிறந்து இரண்டு இலைகூட விடாததன் முன் குழந்தைகள் கண்ணாடி போட்டுக்

கொள்ளுகிறார்கள். என்ன அநியாயம்!'' என்று நம் பெரியோர்கள் இப்படி யெல்லாம் நகர வாஸத்தை இகழ்ந்தும் நாட்டு வாஸத்தைப் புகழ்ந்தும் பேசக் கேட்டிருக்கிறோம். ஆனால் இப்படிப் பெரியவர்கள் சொல்லும் வார்த்தைகள் வீண் வார்த்தைகளோ ? இல்லவே இல்லை. முழுதும் உண்மையே. இதை யாவரும் ஒப்புக்கொள்வது திண்ணம். நாட்டு வாஸத்தில், அதாவது வெளி வாஸத்தில் (*Camp life*) பூர்ண நம்பிக்கையும், நகர வாஸத்தில் வெறுப்பும் கொள்ளும் நம் பெரியோர்களைப் போன்றவர்களில் லார்ட் பேடன் பவல் ஒருவர். இவர் சேனையில் தொண்டாற்றி வந்தபோது அநேக தேசங்களையும் ஆங்காங்கிருக்கும் ஜாதியார்களையும் கண்டும், அவர்களுடைய பழக்க வழக்கங்களை ஆராய்ந்தும் வந்தார். அப்படிப்பட்ட ஜாதியார்க்குள் அமெரிக்காவில் செவ்விந்தியரும் ஆப்பிரிக்காவில் நீக்ரோக்களும் முக்கியமானவர்கள். லார்ட்பேடன் பவல் எழுதியுள்ள புத்தகங்களில் இவ்விரு ஜாதியாரின் புராதனக் கதைகளும் பழக்க வழக்கங்களும் எழுதப்பட்டிருப்பதை நாம் காணலாம்.

செவ்விந்தியரின் பழக்கம் ஒன்றை இங்கே கூறுவோம். இந்த ஜாதியைச் சேர்ந்த ஒவ்வொருவனும் நல்ல வீரனாவதற்கு முயல்வான். நல்ல வீரனென்று பெயரெடுத்தவனை ஜனங்கள் 'ஒநாய்' என்ற மதிப்பான பெயரிட்டழைப்பார்கள். எவன் இப்பட்டம் பெறவில்லையோ அவனை மற்றவர் மதியார். இப்பட்டம் பெறுவதெப்படி என்பதைக் கீழே சொல்லுகிறேன். எவன் இப்பட்டம் பெற விரும்புகிறானோ அவனை ஒரு சிறிய வஸ்திரம் மாத்திரம் அணியச்செய்து அவன் உடம்பு முழுவதும் வெள்ளை வர்ணமொன்றைத் தடவி விட்டு விடுவார்கள். இவ்வர்ணத்தைக் கலைக்க முடியாது. மழை நீர் பட்டும், வெயிலில் உலர்ந்தும், காற்றடித்தும் இவ்வர்ணம் தானாகவே நீங்கச் சுமார் ஒரு மாத காலமாகும். இவ்வர்ணம் முழுவதும் கலையும் வரையில் இம்மனிதன் எவர் கண்ணிலும் அகப்படாமல் ஒளிந்து வாஸம் செய்யவேண்டும். ஒநாய் என்ற பட்டம் பெற்ற எவர் கண்ணிலாகிலும் இம்மனிதன் தென்படுவானானால் இவன் கொல்லப்படுவான். வெகு சாமர்த்தியத்துடன் ஒளிந்திருந்து வாஸம் செய்து வர்ணம் நீங்கியபின் வெளிவரும் வீரனுக்கு மற்றவர்கள், மாலை முதலானவைகள் போட்டு அவனைப் பெருமதிப்புடன் வரவேற்று மிகவும் கொண்டாடுவார்கள். இதைப் படிப்பவர்க்குச் செவ்விந்தியரின் பழக்கம் பயித்தியக்காரத் தனமாக வல்லவோ இருக்கிறது என்று தோன்றுவது நிச்சயம்.

இந்த வழக்கத்தினால் வர்ணம் பூசப்பட்ட மனிதனுக்கு விளையும் நன்மைகள் என்னவென்று ஆராய்வோம்: இதனால் கணக்கில்லாத

நல்ல பழக்க வழக்கங்கள் அம்மனிதனுக்கு உண்டாகின்றன. இக் குணங்களில் எதுவும், நம் வீட்டுச் சிறுவர்கள் போலப் பெற்ருேர்களின் பாதுகாப்பிலிருந்து சிறிதளவும் அகலாமலிருப்பவர்களுக்கு ஒரு போதும் உண்டாகாது. மறைந்து வாழும் அம்மனிதன் தன்னைத் தேடிக்கொண்டிருக்கும் வீரர்கள் கண்களிலும் மற்ற துஷ்ட மிருகங்கள் கண்களிலும் அகப்படாமலிருக்க வேண்டும். ஆகையால் அவனுடைய கண்கள் நல்ல பயிற்சி பெறுகின்றன; காதுகள் சிறிய சத்தத்தையும் கேட்கும் சக்தி பெறுகின்றன; தவிரவும் அடிச்சுவடுகளை ஆராய்ந்தறியும் திறமை பெறுகின்றன; தான் செல்லும்போது சத்தம் சிறிதும் செய்யாமல் போக அவன் கற்றுக் கொள்கிருன்; தூங்கும் போது குறட்டைவிடாமல் தூங்கக் கற்கிருன்; ஆகாரத்திற்காக மிருக வேட்டை கற்கிருன்; வேட்டையாடியதைச் சமைக்கச் சுள்ளி செத்தைகளைக் கொண்டு நெருப்பு மூட்டக் கற்கிருன்; சக்கிமுக்கிக் கற்களைத் தட்டி நெருப்புண்டாக்கத் தெரிந்துகொள்கிருன்; தெரியாத புது இடங்களில் திசை யறிந்து செல்லவும், சூரியன், நக்ஷத்திரங்கள் இவைகளைக்கொண்டு மணியைக் கணக்கிடவும் தெரிந்துகொள்கிருன். உயரம், நீளம், பளு முதலியவைகளைக் கணக்கிட அவனிடம் கருவிகளில்லாததால் சற்றேறக்குறைய மதிப்பிடுவதில் அவனுக்கு அனுபவம் மிகுதியாக உண்டாகிறது. இதுபோன்ற எண்ணிலாப் பயிற்சிகளை அவன் பெறுகிருன். எல்லாவற்றையும் இங்கு எழுதுவதென்ருல் பெருகும்.

மேலே சொல்லப்பட்ட விஷயங்களிலிருந்து இயற்கைவாஸம் எவ்வளவு நன்மை பயக்கத்தக்கதென்று விளங்குகிறதல்லவா? இதை உத்தேசித்தே லார்ட்பேடன் பவல் வெளிவாஸத்தின் அவசியத்தைப் பெரிதும் போற்றுகிருர். நாம் எத்தகைய வாழ்வை விரும்புகிருேமோ, எத்தகைய குணங்களையும் ஆற்றலையும்பெரிதும் போற்றுகிருேமோ, அவைகளையே பேடன் பவலும் சொல்வதாகத் தெரியும்போது அவர் ஏற்படுத்திய இயக்கத்தை நம் முழுமனதுடன் அங்கீகரிப்பதில் நமக்கென்ன விரோதம்?

பின்வரும் கதைதான் குருளைப் பயிற்சிக்கு அடிப்படையாக உள்ளதென்று முன்னே சொன்னேம்:

சியோனி மலைச் சாரலில் (*Seeonee hills*) ஓர் ஓநாய்க் கூட்டம் இருந்தது. அக்கூட்டத்தைச் சேர்ந்த ஓர் ஓநாய் ஷியர்கான் (*Shere Khan*) என்ற ஒரு நொண்டிப் புலிக்குப் பயந்து ஓடிப்போன ஒரு விறகு வெட்டியின் குழந்தையைத் தன் குகையின் வாயிற்படி யருகில் கண்டெடுத்தது. ஷியர்கான் சென்றவிடமெல்லாம் சென்று முகஸ்துதி செய்து அது தின்று எஞ்சிய மாமிசத்தைத்

தின்று வயிறு வளர்த்து வந்த டாபக்கி (*Tabaqui*) என்னும் குள்ள நரி தன் யஜமானனிடம் சென்று குழந்தை ஓநாயின் குகைக்குள் இருப்பதாகச் சொல்லிக் கலகம் செய்தது. இதைக் கேட்ட ஷியர் கான் குகையண்டை வந்து குழந்தையைத் தன்னிடம் சேர்ப்பிக்கும்படி பல வழியிலும் ஓநாயைக் கேட்டுப் பார்த்தது. தாய் ஓநாய் எதற்கும் இணங்காததுகண்டு, "பின்பு என்ன செய்கிறேன் பார்!" என்று சொல்லிக்கொண்டே ஷியர்கான் போய்விட்டது. அக்குழந்தைக்கு மௌக்ளி (*Mowgli*) என்று தாய் ஓநாய் பெயரிட்டது. மௌக்ளி, ஓநாய்க் குட்டிகளின் மத்தியில் ஓடியாடி விளையாடியும் வேட்டையாடியும் வந்தான். அக்குழந்தைக்கு, பாலு (*Baloo*) என்னும் கரடி காட்டுச் சட்டங்களையும், பகிரா (*Bagheera*) என்னும் சிறுத்தை வேட்டையாடுவதையும் சொல்லிக் கொடுத்தன. அக்காட்டிலுள்ள பந்தர் லோக் (*Bandar log*) என்னும் குரங்குகள் மௌக்ளியைத் தங்களினத்தோடு சேர்த்துக் கொள்ள எண்ணித் தூக்கிக்கொண்டு போய் ஒரு பாழ் மண்டபத்தின் மேலிருந்து ஒரு சந்தின் வழியாய் உள்ளே போட்டுவிட்டன. மௌக்ளிக்குப் பக்குவமாகக் குதிக்கத் தெரிந்திருந்ததனால் தப்பித்தான். மௌக்ளியைப் பந்தர்லோக் கொண்டு சென்றதாக ஒரு பருந்து சொல்லக் கேட்டுப் பாலுவும் பகிராவும் கா (*Kaa*) என்னும் ஒரு மலைப் பாம்பைத் துணையாகக்கொண்டு குரங்கினத்தை வேரோடழித்து மௌக்ளியை மீட்டு வந்தன. கொஞ்சகாலம் கழிந்தபின் ஓநாய்க் கூட்டத்தில் அநேக ஓநாய்கள் ஷியர்கானின் துர்ப்புத்தியைக் கேட்டுத் தங்கள் அனுபவம் மிகுந்த தலைவனான ஆகேலா (*Akela*) என்னும் ஓநாயைத் தலைமைப் பதவியிலிருந்து நீக்கிவிட்டன. பிறகு மௌக்ளியானவன், பாலு, பகிரா இவ்விருவருடைய தூண்டுகோலின் பிரகாரம் ஒரு கிராமத்திற்குச் சென்று நெருப்பைச் சட்டியில் கொண்டு வந்து எல்லாக் காட்டுமிருகங்களையும் பயமுறுத்தித் தானே ஓநாய்க் கூட்டத்துக்கு எஜமானனாகி ஷியர்கானையும் கொன்றான்.

இக் கதையிலிருந்து அநேக தத்துவங்கள் அறியக் கிடக்கின்றன என்பது வெளிப்படை. சுருங்கக் கூறின் இக் கதை மனித சமூகத்தின் இயல்பையே காட்டுகிறதென்னலாம். (1) மனித சமூகத்தில் ஷியர்கானைப் போல் சில துஷ்டர்கள் இருக்கிறார்கள். (2) டாபக்கியைப் போல் கலகத்தில் அதிக இஷ்டமுடையவர்களும், சுயமாக ஒரு வேலையும் செய்யாமல் பிறர் தேடிய பொருளின் மிகுதியை எச்சில் பொறுக்குவதுபோல் அடைய விரும்புகிறவர்களும் சிலர் இருக்கிறார்கள். (3) ஓநாய்க் கூட்டத்தைப்போல் ஒன்று கூடி ஒற்றுமையாக

ஒரு தலைவனுக்கும், சமூகச்சட்டங்களுக்கும் அடங்கி நடப்பவர்களே முடிவில் க்ஷேமமடைவார்கள். இதுபோன்ற அநேக நுட்பமான தத்துவங்கள் இதில் அடங்கியிருக்கின்றன. இக்கதையில் முக்கியமாகக் கவனிக்கத்தக்கவை அக் காட்டுச் சட்டங்களே. அச் சட்டங்களாவன: (1) மனிதன் பலஹீனனானதால் அவனைக் கொல்லக்கூடாது; ஆனால் குட்டிகளுக்கு வேட்டை கற்றுக் கொடுக்க வேண்டியிருக்கும்போது மாத்திரம் வேட்டை யாடலாம். (2) காட்டில் மிருகங்கள் தாங்கள் வாஸம் செய்யும் பகுதியைத் தவிர வேறு இடங்களில் அனுமதி இல்லாமல் வேட்டையாடக் கூடாது. அனுமதி பெற்றும் விளையாட்டிற்காக வேட்டையாடக் கூடாது. பசியைத் தணித்துக்கொள்வதற்கு மட்டுமே வேட்டை யாடலாம். (3) ஆகேலா தன் பதவியையிழக்க நேரிட்டால் கூட்டத்தைச் சேர்ந்த ஓநாய்கள் ஒன்றுஒன்றாகச் சென்றுதான் ஆகேலாவைக் கொல்லவேண்டும்.

இச்சட்டங்களை ஊன்றிக் கவனிக்குமிடத்து நமக்குப் பேராச்சரியமே உண்டாகிறது. மிருகங்களினிடையே இப்படிப்பட்ட சட்டங்கள் இருக்குமானால் மனிதர்களிடையே எத்தகைய சட்டங்கள் இருக்கவேண்டும்? அவர்கள் எப்படி சட்டங்களுக்குக் கீழ்ப் படிந்து நடக்கவேண்டும் என்பவையெல்லாம் ஊகிக்கக்கிடக்கின்றன.

குருளைப் பயிற்சியில் இக்கதையைச் சொல்லுவதும், இக்கதை சம்பந்தமாகப் பாடல்களை பாடுவதும், கதையின் பாகங்களை நடிப்பதுமே முக்கியமானவை. இப்படிச் செய்வதனால், டாபக்கி, பந்தர்லோக், ஷியர்கான் இவைகளைப் போன்ற துஷ்ட சுபாவமும், கெட்ட குணமுமுடைய மிருகங்களிடத்தில் வெறுப்பும், நல்ல சுபாவமுடையவைகளிடத்தில் அன்பும் பிரீதியும் ஏற்படுகின்றன. இத்தகைய பயிற்சி சிறுவர்களை நல்வழிப்படுத்த மிகவும் உபகாரமாக இருக்கிறது. இதுவும் தவிரச் சிறுவர்களுக்கு விலங்குகளின் கதைகளைக் கேட்பதில் குதூகலம் உண்டாகிறது. விலங்குகளைவிட நாம் மேம்பட்ட குணங்களுடையவர்களாக இருக்கவேண்டுமென்னும் அவா அவர்களுக் குண்டாகிறது.

இவ்வித நோக்கங்களுடன் குழந்தைகளின் சுபாவத்தையும் இயற்கையையும் நன்றாக அறிந்தவரான லார்ட் பேடன் பவல் இவ் வியக்கத்திற்கு வனவியல்புகளையும் விலங்குகளின் கதைகளையுமே இலக்காகக்கொண்டு பயிற்சி முறையை ஏற்படுத்தியது எவ்விதத்தினும் பொருத்தமே என்பதை நாம் நாம் நன்றாகத் தெரிந்து கொள்ளுகிறோம்.




# நல்ல வேலைக்காரி

பி. என். அப்புஸ்வாமி ஐயர்

ஒரு ஊரிலே ஒரு குடியானவன் இருந்தான். அவனுடைய பெண்சாதி மிகவும் புத்திசாலி; சுறுசுறுப்புள்ளவள். வீட்டு வேலை முழுவதையும் அவளே பொறுப்பாக நன்றாக நடத்தி வந்தாள். வீட்டையும் அதன் சுற்றுப் புறங்களையும் மிகவும் சுத்தமாக வைத்துக் கொள்ளுவாள். பாத்திரங்களைத் தேய்த்துப் பளபள வென்று துலக்கிவைப்பாள். நன்றாகச் சமையல் செய்து, அன்போடு தன் கணவனும் தானுமாக இருந்து சாப்பிடுவாள். அவர்களுக்கு இரண்டு குழந்தைகள் பிறந்தார்கள். குழந்தைகளைத் தேய்த்துக் குளிப்பாட்டுவதிலும், அவர்களுக்கு வேளையில் ஆகாரம் கொடுத்து வருவதிலும், அவர்கள் அதிகமாகத் துஷ்டத்தனம் செய்யாது பார்த்துக் கொள்வதிலும் அவள் நேரம் அதிகம் செலவிட வேண்டியது அவசியமாயிற்று. அவள் புருஷன் அதிகாலையில் எழுந்திருந்து போய் வயல்களில் நாள் முழுதும் வேலை பார்த்துவிட்டு இருட்டும் வேளையில் களைப்போடு வீட்டுக்கு வருவான். ஆகவே, குழந்தைகளுக்குப் படிப்புச் சொல்லிக் கொடுக்கும் வேலையும் அவளுக்கு அமைந்தது. அதனால் வீட்டு வேலைகள் முழுவதையும் முன்போல நன்றாகச் செய்ய அவளுக்கு நேரமில்லை. ஆகையால் வீட்டுவேலை செய்ய ஒரு வேலைக்காரி வைத்துக் கொள்ள வேண்டுமென்று தீர்மானித்தாள். "நல்ல வேலைக்காரியாய்ப் பார்த்து வைத்துக் கொள்ள வேண்டுமே. நாம் ஒருத்தியைப் பார்த்த உடன் அவள் நல்லவளா இல்லையா என்பது எப்படித் தெரியும்? என்ன செய்வது? தெரியவில்லையே!" என்று எண்ணிக் கடைசியில் ஒரு யோசனை செய்தாள். வீட்டு வேலைக்கு வேலைக்காரி வேண்டுமென்று தன் சிநேகிதிகளிடம் சொல்லியிருந்தாள்.

ஒரு நாள் ஒரு வேலைக்காரி வந்து வாசல் கதவைத் தட்டினாள். உடனே குடியானவன் மனைவி ஒரு துடைப்பத்தை வழியில் வைத்து விட்டுக் கதவைப் போய்த் திறந்தாள். உள்ளே வந்த

வேலைக்காரி வழியில் கிடந்த விளக்குமாற்றைப் பார்த்து அதன் மேல் தன் கால் படாமல் தாண்டி உள்ளே வந்தாள். அதைப் பார்த்த வுடன் அவளை வேண்டாமென்று போகச் சொல்லிவிட்டாள். "ஏன்?" என்று அவள் புருஷன் கேட்டான். அதற்கு அவள், "இந்த வேலைக்காரி சுத்தம் தெரியாதவள். பொறுப்பு ஏற்றுக் கொள்ளாதவள். தன்காரியத்தை மட்டிலும் கவனிப்பவள். துடைப்பம் வழியில் கிடப்பது அசுத்தம் என்பது அவளுக்குத் தெரியவில்லை. வழியில் கிடந்த துடைப்பத்தை ஓரமாய் வைப்போ மென்று அவள் தானாகவே செய்யவில்லை; ஆனால் தன் காலில் தூளி கூடப் படக்கூடாதென்று அதைத் தாண்டிப் போனாள்" என்றாள்.

பிறகு இன்னம் ஒரு வேலைக்காரி வந்தாள். அவள் உள்ளே வந்ததும் வழியில் கிடந்த துடைப்பக்கட்டையைக் காலால் வழியை விட்டு ஓரமாகத் தள்ளிவிட்டு உள்ளே வந்தாள். அவளையும் வேண் டாமென்று மறுத்துவிட்டாள் குடியானவன் மனைவி. "ஏன்?" என் றான் குடியானவன். அதற்கு அவள் "இவள் வேலை தெரிந்தவள் தான். சுத்தம் எது அசுத்தம் எது என்பதும் இவளுக்குத் தெரி யும். ஆனால் இவள் இடுப்பு வணங்காதவள்; சோம்பேறி. அத னால்தான் வேண்டாமென்று சொல்லிவிட்டேன். மேலும் வீட்டுச் சாமான்களை இவள் ஜாக்கிரதையாக வைத்துக் கொள்ள மாட்டாள் துடைப்பத்தைக் காலால் தள்ளினாள், பார்த்தீர்களா?" என்றாள்.

அதன் பின் மற்றொரு வேலைக்காரி வந்தாள். அவள் வீட்டுக் குள் வந்ததும் வழியில் கிடந்த வாருகோலை எடுத்து ஜாக்கிரதையாய் ஒரு மூலையில் சார்த்தி விட்டு உள்ளே வந்தாள். "இவள் தான் சரியான வேலைக்காரி. இவள் துப்புரவுள்ளவள்; ஜாக்கிரதையுள்ள வள்; பணிந்து வணங்கிப் பொறுப்பாய் வேலை செய்பவள்" என்று சொல்லி அவளை உடனே வேலைக்கு வைத்துக் கொண்டாள். அவ ளும் அன்று முதல் வீட்டு வேலைகளை நன்றாக, எல்லாரும் கொண் டாடும்படி செய்து வந்தாள். குடியானவன் தன்னுடைய மனைவி யின் புத்திசாலித்தனத்தைப் புகழ்ந்து சந்தோஷித்தான்.

# சிறுவர் தொழிற்பயிற்சி

என். ஆர். சேஷாச்சாரி

பள்ளிச்சிறுர்களே! நீங்கள் பள்ளிக்கூடத்திற்குப் போகும் நேரம், பிறகு விளையாடும் நேரம் போக மற்ற ஓழிந்த வேளைகளில் வீண்பொழுது போக்காமல் மன உற்சாகத்திற்குரிய பல சுலபமான வேலைகளைச் செய்யக் கற்றுக்கொள்ளுங்கள். அட்டையினுல் சிறு சிறு பெட்டிகள், தட்டுகள், கயிற்றினுல் பை முதலியவைகள், வர்ணக் காகிதங்களினுல் விளையாட்டுச் சாமான்கள், மெல்லிய சிறு மரப் பலகைகளினுல் சில வஸ்துக்கள் இவைகளைச் செய்வதில் அதிகப் பணச்செலவு கிடையாது. ஆனுல் ஊக்கமும் முயற்சியும் மாத்திரம் அவசியம் வேண்டும். உங்களது சிறு கைகளினுல் செய்து முடித்த சிறிய வஸ்துக்களை (*Models*), (தினசரி உபயோகப்படும் வஸ்துக்களை)ப் பார்க்கும் உங்களுக்கும், உங்களுடைய பெற்ருேர்க்கும், சகோதர சகோதரிகட்கும் உண்டாகும் ஆனந்தத்திற்கு அளவுண்டோ? இல்லை.

முதன் முதலில் இரண்டு சிறிய சாமான்களைச் செய்யக் கற்றுக்கொள்ளுவோம்: (1) 5 மூலை மேஜை (2) உண்டிப் பெட்டி. வேண்டிய வஸ்துக்கள்: (1) இரண்டு விதமான கத்திகள் (படம், 3) (2) அரைப் பவுண்டு அட்டைகள் (3) ஓரடிக்கோல் (*Foot rule*) (4) பென்ஸில் (5) பெரிதும் சிறியதுமான இரண்டு கத்தரிக்கோல்கள் (6) கோந்து, காலிகோ துண்டுகள், வர்ணக் காயிதங்கள் முதலியனவாம். இவை எல்லாவற்றிற்கும் ஒன்றரை ரூபாய்க்குமேல் செலவாகாது.

## மேஜை செய்யும் விதம்

8 அங்குல நீளம் 8 அங்குல அகலம் உள்ள *A B C D* என்ற ஒரு சதுரமான அட்டையில் (படம், 1) 2 அங்குலக் கட்டங்களைக் குறிப்போம். படத்தில் காட்டிய கருமையான பாகங்களைக் கத்தரித்து எடுத்துவிட்டால் 8 பக்கங்களுள்ள ஒரு துண்டு மிகுதியாகிறது. இதே அளவில் இன்னமொரு 8 பக்க அட்டையைக் கத்தரித்துக்கொள்வோம். வேருெரு 9''×5'' அளவுள்ள ஒரு துண்டை எடுத்து, 8''×4'' அளவில் *E F G H* என்ற பாகத்தையும்



மேஜையின்
மேல் தட்டு
படம். 1.












படம். 2.


உண்டிப்
பெட்டி.
படம். 4.

படம். 3.



புச்சங்கள் என்ற (பு என்று குறிப்பிட்டது புச்சம்) $\frac{1}{2}$'' பாகங்களை யும் வரைந்து கொள்வோம். கனத்த கோட்டின் மீது கத்தியினல் அட்டையின் பாதி கனம் வரையில் அழுத்திக் கோடு கிழிப்போம். பிறகு *M* என்னும் படத்தில் காட்டியபடி மடித்துக்கொள்ளு வோம். மெல்லிய வர்ணக்காகிதத் துண்டுகளையோ அல்லது காலி கோத் துண்டுகளையோ உபயோகித்து *O* என்ற படத்தில் காட்டிய வாறு மேல் தட்டு அடித் தட்டுகளை ஒட்டிவிட்டால் அழகிய மேஜை யொன்று தயாராய் விடுகிறது.

## உண்டிப் பெட்டி

12''×9'' அளவுள்ள ஓர் அட்டையை எடுத்துக்கொண்டு படத்தில் காட்டியபடி கட்டங்களை வரைந்து கனத்த கோடுகளின் வழியே கத்தரித்துக் கறுப்பான பாகங்களை நீக்கிவிட வேண்டும். புள்ளிக் கோடுகளின் மீது பாதி ஆழம் வரையில் அழுத்திக் கிழித்து மடித்தால் படத்திற் (படம், 4) காட்டியபடி ஓர் உண்டிப் பெட்டியாகும். மடிப்பதற்கு முன்னல் 1-வது கட்டத்தின் மத்தியில் $1\frac{1}{2}$''×$\frac{1}{4}$'' அளவுள்ள துவாரஞ் செய்துகொள்ளவேண்டும். பிறகு மடிப்புகளுக்கெல்லாம் காலிகோத் துண்டுகளை ஒழுங்காய் ஒட்டிப் பெட்டியின் 6 பக்கங்களுக்கும் வர்ணக் காகிதங்களை (*Marble paper or Kindergarten paper*) ஒட்டிவிட்டால் அழகான உண்டிப் பெட்டியாய்விடுகிறது. கிடைத்த காசை அதில் சேமித்து வைக்கலாம். ''பலதுளி பெரு வெள்ளம்''. 'தம்படிகளை நீ பத்திரப்படுத்தினல் ரூபாயை அது பத்திரப்படுத்தும்.'

# சிறுமியர் விளையாட்டு

[குழந்தைகள் இருபிரிவாக நின்றுகொள்ள வேண்டும். ஒவ்வொரு கட்சியிலும் ஒவ்வொரு குழந்தை தலைமை வகிக்க வேண்டும்.]

## சம்பாஷணை

முதற்கட்சித் தலைவி:—அக்கரை கொக்கு மாங்காய்!

எதிர்க்கட்சித் தலைவி:—ஏண்டி மலைய மாங்காய்!

முதற்கட்சி:—உன் வீட்டுக்கு உடையார் வந்தாரோ?

எதிர்க்கட்சி:—வரவில்லை.

முதற்கட்சி:—வந்தாரே?

எதிர்க்கட்சி:—இப்பொழுது தான் வந்தார்.

முதற்கட்சி:—என்ன என்ன கொண்டு வந்தார்?



எதிர்க்கட்சி:—எனக்கு ஒரு புடைவை;
அவருக்கு ஒரு சோமன்;

பெண்ணுக்கு ஒரு சிற்ருடை ;
குட்டிக்கு ஒரு பாவாடை ;
பிள்ளைக்கு ஒரு வேஷ்டி ;
காக்காய்க்கு ஒரு கம்பளி.



முதற்கட்சி:—எனக்கு ஒன்று தாயேன்.
எதிர்க்கட்சி:—ஏ ! ஏ ! நான் மட்டேன்.



முதற்கட்சி:—காக்காய் எங்கே ?

எதிர்க்கட்சி:—புளிய மரத்திலே.

முதற்கட்சி:—புளிய மரம் எங்கே ?



எதிர்க்கட்சி:—புளிய மரத்தை வெட்டி விட்டேன்.

முதற்கட்சி:—வெட்டின விறகு எங்கே?



எதிர்க்கட்சி:—அடுப்பு எரித்தேன்.

முதற்கட்சி:—அடுப்பு எரித்த சாம்பல் எங்கே?

எதிர்க்கட்சி :— சாம்பலைப் பல் தேய்த்தேன்.



முதற்கட்சி :— பல் தேய்த்த இடம் எங்கே?

எதிர்க்கட்சி :— பல் தேய்த்த இடத்தில் புல்முளைத்தது.

முதற்கட்சி:—புல் எங்கே?



எதிர்க்கட்சி:—குதிரை தின்றது; யானை தின்றது.

முதற்கட்சி:—குதிரை எங்கே?



எதிர்க்கட்சி:—குதிரை கோபுர வாசலிலே.

முதற்கட்சி:—யானை எங்கே?

எதிர்க்கட்சி:—யானை அரண்மனை வாசலிலே.



முதற்கட்சி:—கோபுர வாசலில் குதிரை வந்து குளத்தைக் கலக்கினது. அரண்மனை வாசலில் யானை வந்து ஆற்றைக் கலக்கினது. யானையையும் குதிரையையும் பிடித்துக் கட்டுகிறாயா? சண்டைக்கு வருகிறாயா?



எதிர்க்கட்சி:—நான் மாட்டேன்; சண்டைக்கு வருகிறேன்; வாருங்கள் சண்டைக்கு.

[இப்பொழுது இரு கட்சியிலுள்ள குழந்தைகளும் நடுவிலே நின்று துள்ளித் துள்ளிக் குதிக்க, ஒரு கட்சியிலுள்ள் குழந்தைகள் எதிர்க்கட்சியிலுள்ள குழந்தைகளுக்கு எதிராகப் பாய்ந்து கையை நீட்டி முகத்துக்கு முன் கொட்டிக்கொண்டே பாடவேண்டும்.]



கொண்டோடு ;
எடுத்தோடு ;
கொண்டைக்கு மேலே தாரோடு.
சந்தனக் கட்டை,
குங்குமக் குடுக்கை,
பன்னீர்ச் செம்பு ;
பந்தியிலே வேண்டாமே ;
சண்டைக்கு வந்தால்,
கொண்டோடு ;
எடுத்தோடு.

[எல்லாரும் ஆடிக் களைத்துப்போனபின் வேறு ஏதாவது விளையாட்டு விளையாடலாம்.]

[சூடாமணி.]




## நிலாவை அழைத்தல்

நிலா நிலா வாவா !
நில்லாமல் ஓடிவா !
மலைமேலே ஏறிவா !
மல்லிகைப்பூக் கொண்டுவா !
நடுவீட்டில் வையே ! [சூடாமணி.]




# நடை

வி. விசாலாக்ஷி அம்மாள்

"அன்ன நடைபோல் ஒரு பெண், ஆடும் மயில் போல் மற்ருெரு பெண், இன்ன மதமுற்ற யானைபோல் ஒரு பெண், இந்தா வருகிருர் பாருங்கோடி" என்று ஒரு நாடோடிப் பாட்டு உண்டு.

இம் மூன்றுக்குள் அன்ன நடை மிகவும் அழகிய நடையாகக் கருதப்படுகிறது. அன்னம் தன் உடம்பை ஆட்டாமல், அசக்காமல் மெதுவாக நடக்குமாம். இது பற்றியே அன்ன நடை அழகான நடையாக இருந்த பொழுதிலும் அவசர வேளைகளில் யாராவது மெதுவாக நடந்தால், "என்னடி, சமயம் பார்த்து அன்ன நடை நடக்கிருய்" என்று கோபிக்கிருர்கள் போலும்! ஆடும் மயில்போல் நடப்பது கர்வத்தைக் குறிக்கும். இதைச் செருக்கு நடை என்றும் கூறலாம். மதமுற்ற யானையைப்போல் நடப்பது கம்பீரமான நடையாகக் கருதப்படுகிறது.

இவைகளைத் தவிர இன்னும் பல நடைகள் இருக்கின்றன. காலை வீசித் தாராளமாக நடக்கும் நடை ஒன்று. இதில் இரண்டு கைகளும் சற்று ஆடும். தலை நிமிர்ந்து இருக்கும். தலைகளில் பாரங்களைச் சுமந்து செல்லும் கூலியாட்கள் இவ்விதம் காலை வீசி நடப்பார்கள். இதற்குச் சகஜமான மனித நடை என்று பெயர். இதுவும் பார்வைக்கு அழகாகத்தான் இருக்கும். வாத்து நடை, தீசல் நடை, சாய்ந்த நடை, கோணல் நடை என்று மனிதர்கள் நடக்கும் நடைகளுக்குப் பலவிதமாகப் பெயர்கள் கொடுக்கலாம். அசைந்து அசைந்து பாதங்களைச் சற்று உள்புறமாக வளைத்து நடக்கும் நடைக்கு வாத்து நடை என்று பெயர். பாதங்களைச் சரிவரப் பூமியைவிட்டுத் தூக்காமல் நடக்கும்பொழுது தீசு தீசு என்ற

ஒருவித சப்தம் பிறக்கும். இதற்குத்தான் திசல் நடை என்று பெயர். ஒருபக்கமாக உடம்பைச் சாய்த்தும், ஒரு கையைமட்டும் தீவிரமாக ஆட்டியும் சிலர் நடக்கிறார்கள். இவைகள் எல்லாம் பார்வைக்கு வேடிக்கையாக இருக்கும் நடைகள்.

சுபாவத்திலே சிலர் கம்பீரமாக நிமிர்ந்து அழகாக நடக்கிறார்கள். 'கஜகாமினி' 'அன்னம்போல் நடையாள்' என்று இவர்கள் நடையைச் சிலாகித்துக் கூறுகிறார்கள். இவ்விதம் இயற்கையிலேயே சீரான நடை ஏற்படாதவர்கள் சற்றுச் சிரமம் எடுத்துக்கொண்டால் தங்கள் அவலக்ஷணமான நடைகளை ஒருவாறு திருத்திக் கொள்ளலாம். சிறு பிராயத்திலேயே சரியான தேகாப்பியாசப் பயிற்சிகளினால் இவைகளைச் சீர்திருத்த வேண்டும். உடம்பையும் தலையையும் நிமிர்த்திக் காலை வீசி நடக்கப் பழக்க வேண்டும். இயற்கையிலேயே ஏற்படாவிட்டால், அன்ன நடை கற்றுக் கொள்ளுவதற்குச் சற்றுக் கஷ்டமானதே. பிறகு ஒரு சிநேகிதர் சொன்னதுபோல் அன்ன நடையும் பிடிபடாமல், சுபாவத்தில் உள்ள காக்கை நடையும் மறந்துபோய்க் கஷ்டப்படவேண்டியதுதான். ஆடும் மயில்போல் நடக்கப் பயிலுவதும் சிரமம்தான். சிலருக்கு இது சுபாவத்தில் ஏற்பட்டிருக்கலாம். இல்லாவிட்டால் மனதில் பணச் செருக்கு, வனப்புச் செருக்குப்போன்ற ஏதாவது ஓர் அகம்பாவமாவது இருக்க வேண்டும்; இல்லையேல் இந்த நடை சுலபத்தில் பிடிபடாது. 'கஜகாமினி' என்று கூறுகிறார்களே அன்றி அவ்விதம் நடப்பதும் கஷ்டம்தான். பொதுவில் சாதாரண மனித நடையைச் சரியாக நடக்கக் கற்றுக்கொண்டால் பார்வைக்கும் நன்றாக இருக்கும்; அவசியம் ஏற்படும்பொழுது நன்றாக வெகு தூரம் நடக்கவும் நடக்கலாம். இயற்கை அழகு வாய்ந்திருந்தபொழுதிலும், அவலக்ஷண நடை அதைக் குறைத்தே காண்பிக்கும். கூடியவரையில் சிறு வயதில் நடையைத் திருத்திக் குழந்தைகளுக்குச் சரியானபடி நடக்கக் கற்பிக்க வேண்டும். 'ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையாது' என்ற முதுமொழிக்கு ஏற்ப வயதான பிறகு சிரமப்பட்டாலும் நடையைச் சீர்திருத்திக்கொள்ளுவது பிரயாசம்தான்.

# நாடோடிப் பாட்டுக்கள்

## ஒரு வேண்டுகோள்

### பி. என். அப்புஸ்வாமி ஐயர்

நமது தென்னாட்டிலே அநாதி காலமாக அநேகம் நாடோடிப் பாட்டுக்கள் பாடப்பட்டு வந்திருக்கின்றன. உயிரளிக்கும் வெயிலும், உணவளிக்கும் மழையும், நீர் வளமும், நில வளமும், பொன்னும், மணியும், முத்தும் செழித்துக் கிடந்த நமது நாட்டிலே நாகரிகமும், சங்கீதமும் செழித்து ஆடவர் பெண்டிர் சிறுவர் சிறுமியர் ஆகிய அனைவர் மனத்திலும் நன்கு பதிந்து வேரூன்றிக் கிடந்தன. ஆதலால் நமது நாட்டில் செய்யப்பட்டு வந்த ஒவ்வொரு செயலும் பாட்டோடு கூடியே காணப்பட்டது. குழந்தைப் பருவத்திலே பலவகை விளையாட்டுக்களுக்கு உரிய பாட்டுக்கள் சிறுவர் பாட்டுக்கள் சிறுமியர் பாட்டுக்கள் பாப்பாப் பாட்டுக்கள் எத்தனை! அம்மானைப்பாட்டு, கழற்சிப்பாட்டு, பாண்டில் பாட்டு, சடுகுடுப்பாட்டு ஆகிய பலவகைப் பாட்டுக்களை நமது சிறுவர் சிறுமியர் இன்றளவும் பாடி வருகிறார்கள். சற்று முதிர்ச்சியடைந்த இளம்பிராயத்தினருக்கு ஏற்ற பாட்டுக்கள் எத்தனையோ அவர்கள் வாழ்க்கைக்கு இன்பம் அளித்து வந்துள்ளன. தொழிலாளருக்கு அவரவர் தனித் தொழில்களுக்கு உரிய பாட்டுக்கள் : நாற்று நடுகைப் பாட்டுக்கள், அறுவடைப் பாட்டுக்கள், வண்டிக்காரன் பாட்டுக்கள், ஓடக்காரன் பாட்டுக்கள், கப்பல் பாட்டுக்கள், இறைவைப் பாட்டுக்கள், ஏலேலோப் பாட்டுக்கள், வில்லடிச்சான் பாட்டுக்கள், பண்டாரப் பாட்டுக்கள் போன்ற பாட்டுக்கள் யாவும் நெற்றி வெயர்வை நிலத்தில் வீழ முனைந்து கடுமையாய் வேலை செய்வோரையும் கூட உற்சாகப்படுத்தி அவர்கள் படும்பாடு அனைத்தையும் பாட்டாகவே செய்து விட்டன. வயது முதிர்ந்தோருக்குரிய பாட்டுக்கள் நமது நாட்டில் எவ்வளவோ உள. நமது நாட்டிலே குழந்தையைத் தாலாட்டிப் பாராட்டிச் சீராட்டுவதும் பாட்டு, அதனைப் போற்றி வளர்ப்பதுவும் பாட்டு, அது விளையாடுவதும் பாட்டு, அதன் வாழ்க்கையும் பாட்டு; செத்த பின்பும் பாட்டு நிற்பதில்லை—ஒப்பாரி முதலான பாட்டுக்கள். காதலர் பாடும் பாட்டுக்களும், போர் வீரர் பாடும் பாட்டுக்களும் நமது நாட்டில் எவ்வளவோ காணப்படுகின்றன. சிலப்பதிகாரத்தில் கோவலனும் கண்ணகியும் கடற்கரையில் பாடியதாகக் காணப்படும் பாட்டுக்களின் இனிமையை எவ்வாறு எடுத்துரைப்பது? அவையும், அதிலுள்ள வரிப்பாட்டுக்களும் மிகவும் எளிய

நடையில் உள்ளவைகளாயும் இன்னிசை நிரம்பியவைகளாயும் இன்பம் ததும்ப நிற்கின்றன.

பிறப்பும் பாட்டு, வளர்ப்பும் பாட்டு, விளையாட்டும் பாட்டு, காதலும் பாட்டு, போரும் பாட்டு, வேலையும் பாட்டு, பிச்சை எடுப்பதும் பாட்டு, வாழ்க்கையும் பாட்டு, தெய்வ வழிபாடும் பாட்டு, சாவும் பாட்டு என்று எல்லாம் பாட்டாகவே இருந்தன நமது இனிய நாட்டிலே.

புது நாகரிக வெள்ளம் வந்து கரை புரண்டு நமது நாட்டைத் தாக்கவே நமது நாடானது பல வகையாக மாறுபட்டு வருகிறது. மோடார்கார்கள் பஸ்கள் இவற்றின் வெள்ளமானது நமது வண்டிக்காரன் தொழிலையும் அவன் பாட்டையும் நசுக்க ஏதுவாகி விட்டது. ஆங்கிலக் கல்வியிலும் ஆங்கில முறைகளிலும் ஓர் ஆசை உண்டாகவே நமது நாட்டுக் கல்வியிலும், முறைகளிலும், பழக்கவழக்கங்களிலும், வாழ்க்கை முறைகளிலும் ஒரு கவனக்குறைவு உண்டாகி விட்டது; அதில் ஓர் இழிவுகூடப் புலப்படத் தொடங்கி விட்டது. ஆகவே தாலாட்டுப் பாட்டுக்களைப் பாடுவது அநாகரிகமாகவும், அது போலவே கழற்சி, பல்லாங்குழி, சோழி, அம்மானை, பாண்டில் முதலிய விளையாட்டுக்களை விளையாடுவது கர்நாடகமாகவும் கருதப்படத் தொடங்கி விட்டன. ஆதலால் அப்பாட்டுக்களும் கற்கப்படுவதில்லை. அவை அச்சிலின்றிக் கர்ண பரம்பரையாகவே வந்து கொண்டிருப்பதால் இன்னும் ஒன்றிரண்டு தலைமுறை செல்லுமானால் அவை இருந்த இடமும் தெரியாதபடி முற்றிலும் மறைந்து போனாலும் போய் விடும். அவ்வாறு அவை அழிந்து போகாவண்ணம் பாதுகாக்க வேண்டியது நமது கடமை என்று கருதுகிறேன். ஆதலால் அப்பாட்டுக்களைத் திரட்டி அச்சிட்டு வைத்து விட்டால் அவை அழியாமல் தங்கிவிடும். நமக்குத் தேசாபிமானம் மிகுந்து, பகட்டான மேல் நாட்டு நாகரிகத்தின் மேல் நமக்கு உண்டாயிருக்கிற கட்டுக்கடங்காத தாற்காலிக ஆசையானது ஒருவாறு அடங்கி, நமது நாட்டிலுள்ள அருமை பெருமைகளை நாம் நன்றாக உணரப்போகும் ஒரு சமீப காலத்திலே அவை யாவும் நமது நாட்டில் மீண்டும் தலையெடுத்துச் சிறப்பாக விளங்கும் என்பது துணிவு.

அப்பாட்டுக்களைத் திரட்டி நமது கலைமகள் பத்திரிகையில் மாதந்தோறும் வெளியிடலாமென்று எண்ணியிருக்கிறோம். ஆகையால் நமது நண்பர்கள் அனைவரும் அவரவர்கள் ஊர்களிலுள்ள நாடோடிப் பாட்டுக்களைத் திரட்டி எழுதி அனுப்பினால் நாம் அவைகளை வந்தனத்துடன் ஏற்றுக் கொண்டு வெளியிட முயலுவோம்.

# ஆசிரியரின் அறிவிப்பு

இப் பகுதியோடு இப்பத்திரிகை தொடங்கி ஒரு வருஷம் பூர்த்தியாகின்றது. இவ் வொரு வருஷத்தில் நமது பத்திரிகையில் வெளிவந்துள்ள சில விசேஷ விஷயங்களைப் பற்றி இங்கே சிறிது எடுத்துக்கூற விரும்புகிறோம்.

நற்கலை :—இப் பகுதியில் காஞ்சீபுரம் கைலாசநாதர் கோயில் மதிலோவியங்களைப் பற்றியும், சித்தன்னவாசல், பாக், அஜண்டா, மகாபலிபுரம் முதலிய இடங்களிலுள்ள ஓவியங்களைப் பற்றியும், சிற்பங்களைப் பற்றியும், சங்கீதம் நாடகம் முதலியவற்றைப் பற்றியும் பல கட்டுரைகள் படங்களுடன் வெளிவந்திருக்கின்றன. இப் பகுதியை இன்னும் விசேஷமான சிறப்புடன் வர்ணப்படங்களோடு நடத்தவேண்டுமென்பது எமது விருப்பம்.

இலக்கியம் :—இப்பகுதியிலே அரிய பெரிய ஆராய்ச்சியாளர் பலர் அருமையான விஷயங்களை எழுதி வருகிறார்கள். இதுவரை அச்சில் வராத நூல்கள் முதன் முதலாக இப் பத்திரிகையில் குறிப்புரையுடன் வெளியிடப் பெறுகின்றன. இன்னும் பல ஆராய்ச்சி விஷயங்களும் நூல்களும் வெளியிடப்படும்.

விஞ்ஞான சாஸ்திரங்கள் :—இவை ஆங்கிலத்தில் இருப்பன போல் நமது தமிழ் மொழியில் இல்லை. ஆதலால் ஆங்கிலமும் தமிழும் உணர்ந்த அன்பர்கள் பலரின் உதவியினால் இப் பகுதியானது சிறப்பாக நடந்து வருகின்றது. இரசாயனம், பூதத்துவம், பௌதிக சாஸ்திரம், தாவர சாஸ்திரம், வானசாஸ்திரம் முதலிய சாஸ்திர விஷயங்கள் பல இதிலே காணப்படுகின்றன. தவிர, சென்னைப் புத்தகாலய சங்கத்தார் பொது ஜனங்களுக்காக நடத்தி வரும் அரிய பிரசங்கங்களில் சிலவும் நமது பத்திரிகையில் மொழி பெயர்ப்பாக வெளிவந்திருக்கின்றன. இனியும் அவ்வாறே வெளி வந்து கொண்டிருக்கும். ஆங்கில பாஷையிலே உலகப் பிரசித்தமாயுள்ள நூல்களையும் மொழிபெயர்த்து நமது பத்திரிகை மூலம் வெளியிட எண்ணியிருக்கிறோம். நமது நாடு மேன்மை பெற வேண்டுமாயின் சாஸ்திர அறிவு எங்கும் பெருக வேண்டியது அவசியம்.

சரித்திரம் :—சரித்திர நூல் விற்பன்னர் பலர் தேச சரித்திரங்களைப் பற்றியும், அரசியல் விஷயங்களைப் பற்றியும், பொருளாதார

விஷயங்களைப் பற்றியும் கட்டுரைகளை உதவியிருக்கிறார்கள். இவ் வருஷத்தில் பூர்த்தியாய் வெளிவந்துள்ள பாஹியன் யாத்திரை வரலாறு குறிப்பிடத் தக்கது. இதுபோலப் பெரிப்ளூஸ் முதலிய சரித்திர விஷயங்களும் இனி வெளி வரும்.

**கதைகள் :**—சிறு கதைகள் எழுதுவதில் பிரசித்திபெற்ற அன்பர்கள் பலர் தங்கள் இனிய கதைகளை உதவியிருக்கிறார்கள். ஆங்கிலத்தினின்றும் பிற மொழிகளினின்றும் மொழிபெயர்க்கப்பட்டும் சில கதைகள் வெளி வந்துள்ளன. புத்தர் ஜாதகக் கதைகளும் சில வெளி வந்துள்ளன. இவற்றையும், ஆங்கிலத்தில் எட்கர் ஆலன் போ முதலியோர் எழுதிய ரசமான கதைகளையும் தொடர்ந்து படங்களுடன் வெளியிடலாமென்று எண்ணியிருக்கின்றோம்.

**மாதர் பகுதி :**—இப் பகுதியானது மாதர்க்கென்றே தனியாக எழுதப்பட்டு வருகின்றது. இதிலே நவநாகரிக விஷயங்களைப் பற்றியும் சிற்றுண்டிகள் முதலியவற்றைப் பற்றியும் பல விஷயங்கள் வெளி வந்துள்ளன.

**சிறுவர் பகுதி :**—சிறுவர் சிறுமியர் தாமாகப் படித்து இன்புற்று மகிழ்தற்கு உரியவாறு பெரிய எழுத்துக்களில் பல படங்களுடன் இப்பகுதி அமைந்துள்ளது. நமது நாட்டிலே வெகு காலமாகச் சிறுவர்க்குச் சொல்லிவரும் பழங்கதைகளும், பாட்டுக்களும், அவர்கள் விளையாட்டுக்களும், தாலாட்டுகளும் திரட்டி வெளியிடப் பட்டிருக்கின்றன. இப் பகுதியை விசேஷமாகவும் சிறப்பாகவும் நடத்தவேண்டுமென்பது எம் கருத்து.

**உபாத்தியாயர் பகுதி :**—கல்வி கற்கும் சிறு மாணவர்களுக்கு என்ன விதமாயெல்லாம் கற்பிக்க வேண்டும் என்னும் விஷயங்களைத் தெளிவாக உணர்த்தும் பொருட்டு இப் பகுதி ஒன்று குழந்தைக் கல்வி என்னும் தலைப்போடு நடத்தப்பட்டு வருகிறது. பாலர் வகுப்புக்களில் போதிக்கும் ஆசிரியர்கள் அனைவருக்கும் இது பயன் படுமென்று கருதப்படுகிறது.

## பிரசுரகர்த்தரின் குறிப்பு

ஆங்கிலத்திலும், வங்காளம் ஆந்திரம் மகாராஷ்டிரம் முதலிய நமது நாட்டு மொழிகளிலும் சிறந்த பத்திரிகைகள் பல இருப்பதைக் கண்டு, நமது தமிழ் மொழியிலும் அத்தகைய சிறந்த பத்திரிகை ஒன்று வேண்டுமெனக் கருதிக் 'கலைமகள்' என்னும் இப் பத்திரிகையைத் தொடங்கலானேன். தமிழ் நாட்டிலுள்ள கல்வி மிக்க பெரியார்கள் பலரையும் நான் எடுத்துக்கொண்ட இம் முயற்சியில் தாங்களும் கலந்துகொண்டு இப் பத்திரிகையைச் சிறப்புற நடத்தித் தரவேண்டுமென்று கேட்டுக்கொண்டேன். அவர்களும் தங்களுக்குத் தாய் மொழியின் மீதுள்ள அன்பு காரணத்தால் என் வேண்டுகோளுக்கு இணங்கி இப் பத்திரிகைக்கு விஷயதானம் முதலியன செய்து எனக்கு ஊக்கம் அளித்துவந்தார்கள். அவர்கள் அனைவருக்கும், சிரமத்தையும் காலச் செலவையும் பொருட் படுத்தாது இப் பத்திரிகையின் ஆசிரியர்களாயிருந்து நடத்திவரும் அன்பர்கள் அனைவருக்கும் என் மனமார்ந்த வந்தனத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

ஆர். நாராயணஸ்வாமி ஐயர்.

## அறிவிப்பு

அடுத்த தை மாதம் இரண்டாவது ஆண்டு தொடங்குகிறது. அது முதல் இராமாயண கதையை விளக்கும் வர்ணப்படங்கள் சிலவும் அவைகளாற் குறிக்கப்பட்ட வால்மீக ராமாயணக் கதையும் அதற்கு நேரான கம்பராமாயணச் செய்யுள்களும் சேர்த்து வெளியிடப்பெறும். பிரம்மஸ்ரீ மகா மகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாத ஐயரவர்கள் தாம் கண்டும் கேட்டும் அறிந்த வித்வான்கள் வரலாறுகளையும் நூலாராய்ச்சி செய்த வரலாறுகளையும் எழுதிவர அன்புடன் இசைந்திருக்கிறார்கள். பண்டிதர் ஸ்ரீமான் மு. இராகவையங்காரவர்கள் சென்னைச் சருவகலா சாலையாரின் ஆதரவிற் செய்த 'தமிழிலக்கியங்களும் சாஸன வழக்காறுகளும்' என்ற பிரசங்க விஷயம் தொடர்ச்சியாக வெளிவரும்.

ப—ர்.




## இது உங்களுக்குத் தெரியுமா ?

1. முதன் முதலில் உலோகங்களை உபயோகித்தவர் யார் ?—சால்டிய நாட்டினர்.

2. முதன் முதலில் காகிதம் செய்தவர் யார் ?—சீன தேசத்தார்; கி. மு. 170-ம் வருஷத்தில்.

3. அமெரிக்காவை முதன் முதலில் கண்டுபிடித்தது யார் ?—நார்த்மென் என்னும் ஜாதியார் ; கி. பி. 975-ம் வருஷத்தில்; கொலம்பஸ் 1492-ம் வருஷம் அக்டோபர் மாதம் 12-ம் தேதியன்று.

4. கார்க் என்பது என்ன ?—ஒருவகை மரத்தின் பட்டை.

5. முதன் முதலில் மண்ணினால் பாண்டங்கள் செய்தது யார் ?—எகிப்து தேசத்தினர் ; சுமார் கி. மு. 2000 வருஷங்களுக்கு முன்பு.

6. மின்சார சக்தி எவ்வளவு வேகமாய் ஓடும் ?—வினாடிக்கு 288000 மைல் வீதம்.

7. கடிதங்களுக்கு உறைகளை வேறாக உபயோகிக்கத் தொடங்கியது எப்பொழுது ?—1839-ம் வருஷத்தில்.

8. மின்சார விளக்குகளை முதன் முதலில் யார் கண்டுபிடித்தது ?—லோடிக்வின், கோன்லாப் என்னும் இருவர்; லண்டனில் 1874-ம் வருஷத்தில்.

9. ஈதர் என்னும் மயக்க மருந்தை முதன் முதலில் உபயோகித்தது எப்பொழுது ?—1844-ம் வருஷத்தில் ஆபரேஷன் செய்வதற்காக.

10. மின்சார விளக்குகளைப்பற்றி எடிஸன் ஆராய்ச்சி செய்யத் தொடங்கியது எப்பொழுது ?—1878-ம் வருஷத்துக்குச் சற்று முன்பின்.

11. அமெரிக்காவுக்கும் இங்கிலாந்துக்கும் தந்தி பேசியது எப்பொழுது ? –1858-ம் வருஷத்தில் ; அட்லாண்டிக் மகாசமுத்திரத்தில் இடப்பட்ட கேபிள் என்னும் பின்னல் கம்பி மூலமாக.

12. முதன் முதலில் தந்தி பேசியது எப்பொழுது ?—1835-ம் வருஷத்தில் இங்கிலாந்திலே பாடிங்டனிலிருந்து ட்ரேடனுக்கு.

13. முதன் முதலில் இங்கிலாந்திலே படம் பிடித்தது எப்பொழுது?—1802-ம் வருஷம் ; இது ஒழுங்குபட சுமார் 40 வருஷங்கள் பிடித்தன.

14. முதன் முதலாகத் தபால் ஆபீசு எங்கே ஏற்படுத்தப்பட்டது ?—1516-ம் வருஷத்திலே வியன்னாவுக்கும் ப்ரஸ்ஸல்ஸ் நகருக்குமாக.

15. முதன் முதலில் நீராவிக்கப்பல் அட்லாண்டிக் மகாசமுத்திரத்தைக் கடந்தது எப்பொழுது ?—1819-ம் வருஷம்.

16. முதன் முதலில் அமெரிக்காவிலே பருத்திப்பயிர் செய்தது எப்பொழுது ?—1621-ம் வருஷத்திலே விர்ஜினியா மாகாணத்திலே ; முதல் ஏற்றுமதி 1747-ம் வருஷம்.

17. முதன் முதலில் அமெரிக்காவிலே கரும்புத்தோட்டம் போட்டது எப்பொழுது ?—1751-ம் வருஷம்; நியூ ஆர்லியன்ஸ் என்னும் மாகாணத்தில் முதல் கரும்பு ஆலையை ஸ்தாபித்தது 1758-ம் வருஷம்.

18. முதன் முதலில் கடியாரங்கள் செய்யப்பட்டது எப்பொழுது ?—1477-ம் வருஷத்திலே நியூரெம்பெர்க் நகரத்திலே.

19. முதன் முதலில் கண்ணாடி செய்தது எப்பொழுது ?—எகிப்திலே சமார் 3000 வருஷங்களுக்கு முன்பு; அக்கண்ணாடிகளின் வழியாக ஒளி ஊடுருவிப் பாயாது; ஒளி ஊடுருவும் கண்ணாடியானது கி.மு. 119-ம் வருஷத்திலே செய்யப்பட்டது.

20. முகம் பார்க்கும் கண்ணாடிகள் முதன் முதலில் எப்பொழுது செய்யப்பட்டன ?—13-ம் நூற்றாண்டில் இத்தாலியா தேசத்திலுள்ள வெனிஷிய மாகாணத்தினரால் செய்யப்பட்டது. அதற்கு முன்னெல்லாம் மெருகிட்ட உலோகக்கண்ணாடிகளை வைத்துக்கொண்டுதான் முகம்பார்த்து அழகுபடுத்திக்கொண்டு வந்தார்கள்.

21. பருந்து எவ்வளவு வேகமாய்ப் பறக்கும் ?—மணிக்கு 150 மைல் வீதம்.

22. புயல் காற்றின் வேகம் எவ்வளவு ?—சாதாரணமாக மணிக்கு 80 மைல்.

23. லத்தின் மொழி வழக்கற்றுப்போனது எப்பொழுது ?—கி. பி. 580-ம் வருஷம்.

24. ஜன்னலுக்கு வர்ணக்கண்ணாடிகள் உபயோகிக்கத் தொடங்கியது எப்பொழுது ?—8-ம் நூற்றாண்டில்.

25. முதன் முதலில் குதிரைகளுக்கு இரும்பு லாடங்கள் அடித்தது எப்பொழுது ?—கி. பி. 481-ம் வருஷத்தில்.

26. இரும்பினால் முதன் முதலில் நீராவிக்கப்பல்கள் செய்தது எப்பொழுது ?—இங்கிலாந்திலே 1843-ம் வருஷத்தில்.

27. முதன் முதலில் விளக்குகளுக்கு மண் எண்ணெயை உபயோகித்தது எப்பொழுது ?—கி. பி. 1826-ம் வருஷத்தில்.

28. ஒளியின் வேகம் என்ன ?—வினாடிக்கு 186000 மைல்.

29. பூலோகத்திலுள்ள பாலங்களில் எல்லாம் நீளமான பாலம் எது?—அமெரிக்காவில் ஸெண்ட் லாரென்ஸ் நதியின் மேலுள்ள பாலம்; அதன் நீளம் 9144 அடி.

30. சாதாரணமாய் வீசும் காற்றின் வேகம் என்ன ?—மணிக்கு 7 மைல்.

**இது நிஜமா பொய்யா ?**—மேல் மீசையைச் சிரைப்பது கண்ணுக்குக் கெடுதல் பண்ணுகிறது என்பது வெகு நாளாகத் தெரிந்த விஷயமாம். சிறிது காலத்துக்கு முன்பு வியென்னா தேசத்திலுள்ள பிரபல வைத்தியர் ஒருவர்—வியென்னா நகரம் வைத்தியத்துக்குப் பெயர்போனது—மீசையைச்சிரைப்பது மூச்சுவிடுகருவிகளில் சிற்சில நோய்கள் உண்டாவதற்குத் துணையாயிருக்கின்றது என்று கூறுகிறார். ஆண்மக்கள் சிங்கம்போல் மீசையும் தாடியும் இல்லாமல் தமது முகங்களை வழவழப்பாய் வைத்துக்கொள்ளச் செய்யும் இந்தக் காரியத்தின் பயனாகப் பலவகை நோய்கள் உண்டாகின்றன என்று அவர் கூறுகிறார். இது மெய்தானா ? அல்லது அவருடைய விசேஷ மனோசக்தியால் அவர் கற்பித்துக்கொண்ட கொள்கையா ? அ.

**முந்நீர்:**—கடலுக்கு முந்நீரென்று ஒரு பெயர் உண்டு. உரையாசிரியர்கள் அதற்கு இரண்டுவகைப் பொருள் கூறுவர். அடியார்க்கு நல்லாரும் நச்சினார்க்கினியரும் மூன்று நீர்மையையுடையதென்று பொருள் கூறுவர். மூன்று நீர்மைகளாவன மண்ணைப் படைத்தலும் காத்தலும் அழித்தலுமாம். மூன்று வகை நீரென்பர் புறநானூற்று உரையாசிரியர். அவை ஆற்று நீரும் ஊற்று நீரும் மழைநீருமாம். இந்தக் கொள்கையை அடியார்க்கு நல்லார் மறுப்பார். முன்னீரென்று ஒரு பாடங்கொண்டு மண் தோன்றுதற்கு முன்பு இருந்த நீரென்பர் சிலர். மண் தோன்றுதற்கு முன் எங்கும் நீர் நிறைந்திருந்ததென்னும் கொள்கையே அதற்கு ஆதாரம். ச. தி. க.




பழனிஸ்தல மதத்துவம்: [கோயம்புத்தூர், ஸ்ரீமான் சி.கு. நாராயணசாமி முதலியார் அவர்களால் எழுதப்பெற்றது; கிடைக்குமிடம்: 139, தாமஸ் வீதி, கோயம்புத்தூர்; விலை அணு 12.]

முருகனது ஆறு படைவீடுகளுள் ஒன்ருகிய திருவாவினன்குடி என்னும் பழனிஸ்தல சம்பந்தமான வரலாற்றைக் கூறுவது இந்நூல். இது பழைய புராண விஷயத்தைக் கூறுவதே ஆயினும் இதில் உள்ள விஷயம் புது முறையில் பல வரலாற்றுக் குறிப்புக்களுடனும் பல தமிழ்நூல்களிலிருந்து காட்டப்பட்ட மேற்கோள்களுடனும் சிறிதளவு கற்ருேரும் எளிதில் விஷயத்தை உணர்ந்து ஆநந்திக்கும் நடையுடனும் திகழ்கின்றது. பல சித்திரப் படங்கள் இந்நூலை அழகுபடுத்துகின்றன. பழனி ஸ்தலத்தைப்பற்றி மற்ற நூல்களில் காணப்பெருத சில அரிய விஷயங்கள் இதில் காணப்படுகின்றன.

மாதவி: [ஆசிரியர்: ஸ்ரீமான் S. K. பார்த்தசாரதி ஐயங்கார், B.A., B.L., டிஸ்ட்ரிக்ட் முன்ஸிப், மன்னர்குடி; புத்தகம் வேண்டுவோர் ஆசிரியருக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்; விலை 9 அணு.]

இப்புத்தகத்தின் ஆசிரியர் நாடக உலகத்திற்குச் செய்துவரும் தொண்டு மிகவும் போற்றற்குரியது. அநேக நாடக நூல்கள் இவரால் வெளிவந்துள்ளன. மாதவி என்பது சிறுமிகளே நாடகபாத்திரங்களாக நடிப்பதற்கென்றே எழுதப்பெற்றதாகும். இதில் மாற்றுமாலினி, தஞ்சைத்தங்கை, விவாக விளம்பரம் என்றும் மூன்று சிறு நாடகங்கள் நகைச்சுவை ததும்ப விளங்குகின்றன. ஒவ்வொரு நாடகமும் நடத்தக்கூடிய காலவரையறையும் அந்த அந்த நாடகத்துக்கு வேண்டிய உபகரணங்கள் முதலிய பிறவும் விளக்கமாக இந்நூலுள் காட்டப்பட்டுள்ளன.

சுருங்கிய கால அளவில் அதிகமகிழ்ச்சியைத் தரும்வண்ணம் அமைந்துள்ள இந்த மூன்று நாடகங்களைப்போல இன்னும் பல நாடகங்களை ஆசிரியர் எழுதவேண்டு மென்று விரும்புகிறோம்.

குருகூர்ப்பள்ளு: [ஆழ்வார் திருநகரி, சடகோபப்புலவர் இயற்றியது; பதிப்பாசிரியர்: ஸ்ரீமான் பெரியன் வெ. நா. ஸ்ரீநிவாஸையங்காரவர்கள்; கிடைக்குமிடம்: திருஞான முத்திரைப் பிரசுராலயம், ஆழ்வார் திருநகரி; விலை, 6 அணா.]

ஆழ்வார் திருநகரியில் எழுந்தருளியுள்ள ஸ்ரீநம்மாழ்வாரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு பாடப்பெற்ற இப்பழைய பிரபந்தம் ஏட்டுச்சுவடியின் உதவியைக் கொண்டு முதன்முதலாகப் பதிப்பிக்கப்பட்டிருக்கிறது. நூலின் இடையிடையே அகப் பொருட்டுறைச் செய்யுட்கள் சில, நூலில் அமைந்துள்ள வரலாற்றோடு தொடர்பின்றிக் காணப்படுகின்றன. அவை மிகவும் சுவையுடையனவாக உள்ளன.

இந்நூலுக்கு ஓர் இனிய அரிய முகவுரையைச் சென்னைத் தமிழ்ப் பேரகராதிப் பதிப்பாசிரியர், ஸ்ரீமான் எஸ். வையாபுரிப் பிள்ளையவர்கள், பி. ஏ., பி. எல்., எழுதியிருக்கின்றார்கள். அதன் கண் பள்ளுப்பிரபந்தங்களைப் பற்றிய வரலாறும், நூற்பொருளும், பிற அரிய செய்திகள் சிலவும் காணப்படுகின்றன. 'பெரும்பாலும் வெயிற்காலத்திலே, வெம்மைமிகுந்தபகலிலே, ஒதுங்க நிழலில்லாத வயற்காட்டிலே, காலை முதல் மாலைவரை ஒரே கவலையாய் உழைத்து வருபவர்கள் பயிரிடுவோர்கள். அவர்களுக்குச் சிரமந்தோன்றாதிருக்கவும், நேரம் எளிதிற்கழிந்து போவதற்காகவும், அவர்கள் வாழ்க்கையோடொத்த எளிய இனிய பாட்டுக்களைப் பாடுவது வழக்கமாயிருந்தது....ஏழை வாழ்க்கையின் இன்பப் பாட்டுக்களிற் பிறவிடங்களிற் காணுதற்கரிய வசீகரத் தன்மை நிரம்பியிருக்கு மென்பது கூறாமலே யமையும்' என்பது போன்ற பகுதிகளால் பிள்ளையவர்கள் நூலமைப்பையும், அதன்கண் காணப்படும் பொருட் சிறப்பையும், அழகையும் எடுத்துச்சொல்வது அறிவுக்கு இன்பத்தை மூட்டுகின்றது. இத்தகைய பிரபந்தங்கள் ஆராய்ச்சியோடு வெளிவருவது தமிழ் நாட்டின் நற்காலம் அணிமையிலுள்ள தென்பதை அறிவுறுத்தும்.

ச. கு. ச.

## புத்தக வரவு

ஓளைஞர் பாடல்கள், கோஸம்ரக்ஷணை, மயூரகிரிக்கலம்பகம், எடம்பர் கோயில் உலா.

---

ஆர். நாராயணசாமி ஐயரால் சென்னை மயிலாப்பூர் லா ஜர்னல் அச்சுக்கூடத்தில் வெளியிடப்படுவது.
நிர்வாகப்பத்திரிகாசிரியர்: டி. எஸ். இராமச்சந்திர ஐயர்.

உ

கணபதி துணை

# பாசவதைப் பரணி

## காப்பு

வெண்பா

1. தேசுவளர் பொம்மைச் சிவஞான தேசிகன்மேற்
பாச வதைப்பரணி பன்னுதற்கு - நேசமிகும்
அம்பவளச் செஞ்சடிலத் தைந்துகரத் தெந்தையருட்
கம்பவளத் தும்பிமுகன் காப்பு.

## 1. கடவுள் வாழ்த்து

நிட்கள சிவம்

தாழிசை

2. திருமருவு மருமன்முத லெவருந் தோன்றத்
திருவிளையாட் டொருதனியே செய்து மாற்றிப்
பொருண்மருவு மருமறையு மறையொ ணாத
பூரணதற் பதப்பொருளைப் போற்றல் செய்வாம். (1)

3. மயல்புரியும் பெரும்பிறவிப் பௌவம் வற்ற
வற்றாத பேரின்ப வாரி பொங்கச்
செயல்புரியுஞ் சிவஞான தேசி கன்பூஞ்
சேவடிசூட் டும்பனுவல் சிறக்க வென்றே. (2)

---

குறிப்புரை

1. பொம்மை - பொம்மையபாளையம்; இவ்வூர் விழுப்புரம் தாலுகா வில் உள்ளது. பன்னுதற்கு - ஆராய்ந்து சொல்லுதற்கு. கம்பம் - கட்டுத்தறி.

பி - ம். 'தேசிகர்மேல்'

2. மருமன் - மார்பை உடையவன்.

3. பனுவல் - நூல்.

## சகள சிவம்

### வேறு

4. நீரேந்து சடாடவியு நெருப்பேந்து காம்புயமும்
நெற்றிக் கண்ணும்
காரேந்து கந்தரமு முடையபிரா னடிக்கமலம்
கருத்துள் வைப்பாம். (3)

5. காரேந்து கந்தரமு நுதல்விழியும் புனற்சடையும்
கனலு மேந்தாச்
சீரேந்து சிவஞான தேசிகன்செந் தமிழ்மாலை
சிறக்க வென்றே. (4)

### திருமால்

6. புவியனைத்துந் தனித்துண்டு போயுறங்கும் படியுறங்கிப்
புரியும் யாக
அவியனைத்து மமருண வருளுதவு மொருமுதலுக்
கன்பு செய்வாம். (5)

7. சகமனைத்துந் தனித்துண்டு தகையுறங்கும் படியுறங்கித்
தற்சொ ரூபச்
சுகமனைத்து நுகரவருள் சிவஞான தேசிகன்சீர்
சொல்ல வென்றே. (6)

### பிரமதேவர்

8. இருவினையு முக்குணமு நாற்கதியு மைம்புலனும்
இயற்று நின்ற
ஒருவினையு முகநான்கு முடையவனை முப்போதும்
உளத்துள் வைப்பாம். (7)

9. புலமைந்துங் கதிநான்குங் குணமூன்றும் வினையிரண்டும்
போக வாண்டு
நிலமைந்துந் தொழவந்த சிவஞான தேசிகன்சீர்
நிலவ வென்றே. (8)

---

4. கந்தரம் - கழுத்து.

பி - ம். 'காம்புசமும்'

6. புவியனைத்தும் தனித்துண்டு: "உலகந் தனித்துண்டவன் றேமுந் தானோன்" (திருச்சிற். 132.) யாகம் திருமால் வடிவென்பர்; "எச்சனுந் தளவிழுனை" காஞ்சிப். தக்கிசப்.

9. நிலம் ஐந்து - குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்னும் ஐந்து நிலைகள்.

விநாயகர்

10. நால்வாயு மைங்கரமு மிருசெவியு முக்கண்ணும்
நயந்து தூய
பால்வாயு மெய்ஞ்ஞான போதனைகூர் மதகளிற்றைப்
பணிதல் செய்வாம். (9)

11. நான்மறையு மஞ்செழுத்து மிருபயனு மூவுலகும்
நயப்ப மாவை
தான்மறையும் படியுதித்த சிவஞான தேசிகன்சீர்
தழைக வென்றே. (10)

முருகக் கடவுள்

12. அயிலேறு கராம்புயமு மருளேறு முகாம்புயமும்
ஆடல் சான்ற
மயிலேறு பதாம்புயமு மருவுமொரு முருகனையாம்
வணங்கல் செய்வாம். (11)

13. விண்ணேறு நெடும்புகழும் புவியேறு தண்ணளியும்
மேவி யுள்ள
எண்ணேறு சிவஞான தேசிகன்பா மாலையரங்
கேற வென்றே. (12)

சூரியன்

14. புவிபரந்த புறவிருள்கள் புறந்தந்து போயிரியப்
புணரி வந்து
சவிபரந்த விரவிதனைப் பரவியன்பு விரவிமுன்பு
தாழ்தல் செய்வாம். (13)

15. நனிபரந்த வகவிருள்கள் புறந்தந்து போயிரிய
ஞாலத் தெய்தித்
தனிபரந்த சிவஞான தேசிகன்செந் தமிழ்மாலை
தழைக வென்றே. (14)

வேறு

16. செயலைச் சிவஞான போதனைச் செயலுட் படவோதி யோர்தரு
மயிலைச் சிவஞான தேசிகன் வளர்மெய்ப் புகழ்வாழி வாழியே.

17. கயிலைப் பதிவாழி வாழியே கனகச் சபைவாழி வாழியே
மயிலைப் பதிவாழி வாழியே வளர்கச் சியும்வாழி வாழியே. (16)

---

10. பால் வாயும் - பகுதி பொருந்திய.

12. ஆடல் - ஆடுதல்.

பி - ம். 'காம்புசமும்' 'முகாம்புசமும்' 'பதாம்புசமும்'

14. சவி - அழகு, ஒளி.

16. செயலைச் செயலுட்பட ஓதி. மயிலை - மயிலம்; இது மயிலாசல மெனவும் வழங்கும்.

# 2. கடை திறப்பு

18. அருவின ராகியு மலரா மருவுரு வாகியு மலராம்
உருவின ராகியு மலரா மொருவரை நாடியர் திறமின். (1)

வேறு

19. அலையு மீனமு மானமு மின்றியே
அன்றி யோடுநா வாய்க்குமெட் டாததாய்
நிலையுந் தாழ்வு மிலாததோ ரானந்த
நீள்க டற்றுறை யாடியர் திறமினோ. (2)

20. அங்க நாடியர் நீடிய வெழுபிறப்
பாழி யேழ்கடந் தப்புறஞ் சென்மறை
வங்க நாடியர் பீடிய வுளமெலா
மகத நாடியர் வருகடை திறமினோ. (3)

21. அல்ல நாடிய ரறுபகை வளர்ப்பவர்
ஆக லாலிக லப்பகை யாவையும்
கொல்ல நாடியர் பேரருட் சிந்துநற்
கோல நாடியர் குளிர்கடை திறமினோ. (4)

---

18. அருவினர் ஆகியும் அலராம்.

பி - ம். 'அருவனர்'

19. அலையும் ஈனமும் மானமும்; அலைகளும் மீனமும் (மீன்களும்) அளவும் என்பது மற்றொரு பொருள். நாவாய்க்கும் - நாவையுடைய வாய்க்கும், கப்பலுக்கும். "அலை நீர்வதோர் துறைநாடியர் திறமின்" அஞ்ஞவதைப் பரணி.

20. அங்க நாடியர் - சரீரத்தை ஆராய்பவர்கள். மறை - மந்திரம். அகதம் நாடியர் - அழிவற்றதை நாடுபவர்கள். கடை - வாயில்.

இதில் அங்க நாடு வங்க நாடு மகத நாடு என்னும் நாட்டின் பெயர்கள் தொனிக்கின்றன.

பி - ம். 'ஏழ்கடலப்புறம்' 'உளமெலாமகத'

21. அல்லாதவற்றை நாடுபவர்கள் ஆறு பகைகளை வளர்ப்பவர்களே. ஆறு பகைகள் காமம் முதலியன. இகல் - மாறுகின்ற. சிந்து - கடல். பேரருட் சிந்துவென்றது குருவை. இதில் கோல்லம், சிந்து என்னும் நாடுகளின் பெயர்கள் தொனிக்கின்றன.

வேறு

22. கடல்கெழுநஞ் சோனக நாடியர்
கடியபுலந் தாழ்பொறி யாயின
அடல்கெழுநஞ் சாவக நாடியர்
அருள்பெறவந் தேகடை திறமினோ. (5)

வேறு

23. திருமணநா டியர்பிறவிச் சிறையினரா கலினமலத்
தருமணநா டியர்விழைவுற் றணிவளருங் கடைதிறமின். (6)
24. பன்னடநா டியர்சனனப் பாவையரா வருண்மன்றிற்
கன்னடநா டியர்குறுகிக் கருணையொடுங் கடைதிறமின். (7)

வேறு

25. இருளு மின்றிய வொளியு மின்றிய
இலது மின்றிய வுளது மின்றிய
மருளு மின்றிய தெருளு மின்றிய
வரமொ டொன்றியர் திறமினோ. (8)

வேறு

26. மண்ணின்மறை யாதுநிறை வாரியமி ழாது
வாடியெரி யாதெரியின் வாதமறை யாது
விண்ணின்மறை யாதுமன மாதிபொறி மேவா
மேலதனை மேவியணை வீர்கடைக டிறமின். (9)

---

22. நஞ்சோன் - நஞ்சைக் கண்டத்தில் உடைய சிவபெருமானை. அகம் நாடியர் - உள்ளத்தில் நாடுபவர்கள். கடிய - வன்மையையுடைய. புலம் தாழ் - புலன்களிற் சென்று தங்கும். பொறியாயின நஞ்சா அகம் நாடியர் - பொறிகளை விஷமாக நெஞ்சில் எண்ணுபவர்கள்.

சோனக நாடியர், சாவக நாடியர் என்பன தொனி.

23. அமலத்து அருமணம்; அருமணநாடு என்பது தொனி; நன்னூல், சூ. 272, மயிலை.

24. பல் நடம் நாடியர் - பலவகை நடனங்களை நாடுவோர். சனனப் பாவையரா - சனனமாகிய கூத்தில் ஆடும் பாவையராக இருப்ப. கல் - கற்கும். நடம் - தாண்டவத்தை. கன்னட நாடு என்பது தொனி.

பி - ம். 'பாவையராலருள்'

25. இன்றிய - இல்லாத; நல்லூர்ப்புராணம், நைமிசப். 48, அக்கினி. 57. வரம் - மேன்மை.

பி - ம். 'இருளுமன்றிய'

26. எரியின் எரியாது. அறையாது - வீசி அடியாது. "புனலி னமி ழாது ககன மிசை யூதை புகுத வசையாத பொருளதாய், அனலி னெரியாது படையி னழியாத வறிவை யறிவார்க டிறமினோ" அஞ்ஞவதைப்.

வேறு

27. பூண்ட பணிகள் புறத்தவிழப்
புளக மெறிய விளகியுளம்
நீண்ட விழிக ளிர்ததும்ப
நேயத் தமர்வீர் திறமினோ. (10)

28. தரித்த கலையி னிலைகுலையத்
தம்மை மறந்து தலைவரொடு
தெரித்த கலவி நலனுகர்வீர்
செம்பொற் கபாடங் திறமினோ. (11)

29. தாளை யெண்ணித் தலைவரொடு
சாரா தகன்று தணந்தநெடு
நாளை யெண்ணி யிரங்கிடுவீர்
நன்பொற் கபாடங் திறமினோ. (12)

30. வென்றே புலனை ரைந்தினையும்
விருப்பும் வெறுப்பு மேவலராய்
ஒன்றே குறித்து விழித்துறங்கும்
உபாயங் தெரிவீர் திறமினோ. (13)

வேறு

31. உலகம்விழித் ததினுறங்கி யுலகுறங்கு மதினொன்றி
இலகவிழித் துறங்கிடுவீ ரிடுகதவங் திறமினோ. (14)

வேறு

32. ஊன நாட்டம் பெற்றுடைய
உலோகா தீத மொன்றேகாண்

---

27. பணிகள் - தொழில்கள், ஆபரணங்கள்.

28. கலை - வித்தியாதத்துவம் ஏழனுள் ஒன்று. ஆடை; "கலைகளை விட்டெறிவீர்" (அஞ்ஞவதைப்.); "மெய்தழுவ வுங்கணிலை யுங்கலையும் வீழ்வுற விரும்பி யிறைமுன், கைதொழுது தம்மையு மிழந்தவிடு வீர்கடை திறந்திடுமினோ" மோகவதைப்பரணி.

இந்தத் தாழிசை ஒரு பிரதியில் இல்லை.

29. தாள் - பதம், முயற்சி. "முன் பிழந்த நாளை நினைந்து போதவிரங்கு வீர்கடை திறமினோ" அஞ்ஞவதைப்.

30. விழித்துறங்கும் உபாயங்தெரிவீர்: "விழித்தே யுறங்கும் விளங்கிழையீர்" (அஞ்ஞவதைப்.); "விழித்த கண்குரு டாத்திரி வீரும் பலரால்" திருவிளை. 55: 38.

31. மேல்தாழிசையின் கருத்தை விளக்கியவாறு.

32. ஊனக்கண்ணையுடைய உலகத்திற்கு அதீதமாகிய ஒருபொருளையே காணும்.

ஞான நாட்டம் பெற்றுடையீர்
நகுபொற் கபாடந் திறமினோ. (15)

33. ஐயங் கழிய மெய்யருளும்
ஐய னடியிற் செய்யன்பின்
மையங் கழிய நீர்ததும்ப
மலர்ந்த விழியீர் திறமினோ. (16)

வேறு

34. உடலு முறுபொருளு முயிரு முமதுபுகல்
உணர்மி னுணர்மினென வுருகவேழ்
கடலு மலையுமென நிலவு சுகசலதி
கனிவி னருளுமவர் திறமினோ. (17)

35. வளரும் விழைவுயர மனதி னிலைதொலைய
வனச விழியினுயிர் பருகியே
தளரு மளவினிலொ ரமுத மொழியுதவு
தகைமை பெருகுமவர் திறமினோ. (18)

36. கொடிய பிறவிநிலை குலைய வுலகின்வரு
குருசி லருளுததி குறுகியே
நெடிய விழியருவி சொரிய நிரதிசய
நிமல மணையுமவர் திறமினோ. (19)

வேறு

37. இப்பொருண் மெய்ப்பொருளே யென்று குறித்துலகோர்
எழுபிற விச்சுழலா திவையல தாயொளிரும்
அப்பொருண் மெய்ப்பொருளே யறிமி னெனப்பகரும்
அருள்வள ருந்தகையீ ரணிகத வந்திறமின். (20)

---

33. மை அங்கு அழிய ; மை - காம முதலிய குற்றங்கள் ; கண் மை யென்பது வேறு பொருள்; "ஐய மொன்றுமற வாத கோனடியி னன்பொ டொன்றியக மின்புற, மையழிந்திட மலர்ந்தி லங்குவிழி மல்கு வீர்கள்கடை திறமினோ" அஞ்ஞவதைப்.

34. சுக சலதி - இன்பக் கடல்.

35. விழியின் உயிர்பருகுதல்: "அளவு கண்டிட வரிய பங்கய நயனம் வந்தும தாவியைக், களவு கொண்டிட வருகு கின்றவர் கனக நன்கடை திற மினோ" (அஞ்ஞவதைப்.); "கண்ணாலுயி ருண்பீர்கடை திறமின்கடை திற மின்" மோகவதைப்.

36. விழியருவி: "கருகு கலியின்வலி தொலைய வுலகின்வரு கருணை மலையினருள் பரவியே, பெருகு மதிசயமொ டுருகி யருவிசொரி பெரிய விழி யினவர் திறமினோ" அஞ்ஞவதைப்.

பி-ம். 'நிமல மலையும்'

38. பிறப்பு மிறப்புமறப் பேதைமை விட்டகலப்
பேச வொணாநிலைமைப் பெற்றியி னுற்றதிலே
மறப்பு நினைப்புமற வல்வினை யோலமிட
மருவி விடாதுறைவீர் வளர்கத வந்திறமின். (21)

வேறு

39. இறையி னிலையிஃ தெமது நிலையிஃ
திருளு மலமுத லுறுபிணிக்
கறையி னிலையிஃ தெனவு மறிவுறு
கலைவ லவர்கடை திறமினோ. (22)

40. உலகி னினைவற வமரர் பெறலற
உருவ மதுகொடு மருவியே
அலகி னவமதை யறிய வுரைசெய
அவச முறுமவர் திறமினோ. (23)

41. கரும மறுமுறை குறுகு மிறைகழல்
கருது தோறும்விழி யுகுபுனல்
மரும முறவுடல் புளக மெழநிலை
வழுவி விழுமவர் திறமினோ. (24)

42. உலகி னிலைமையு மளவில் சமயமும்
உலைவில் வினைகளு முணரவவ்
வலகி னிலைமையு மொழிய மொழியுமோர்
அமுத மயில்பவர் திறமினோ. (25)

வேறு

43. மனநினை வறுமிட நினையவும்
வருமிரு வினைவலி மடியவும்
தனைநினை வறவது தழுவவும்
தலைபளி பெறுமவர் திறமினோ. (26)

44. நிகரறு மிறையுரு வதுகொடு
நிலமிசை யுறுமுறை நினைதோறும்
புகரறு மருணெறி பகர்தோறும்
புளகித மெறிபவர் திறமினோ. (27)

---

39. கலை - நூல்.

41. மருமம் - மார்பு. புளகம் - மயிர் சிலிர்த்தல். "வளைதரு வினைகழ லறவரு மிறையடி மருவுதோ றுளமுடல் புளகம தெறியவும் மலர்தரு குவளைக ளருவிகள் சொரியவும்" அஞ்ஞவதைப்.

பி - ம். 'கருமமுறுமுறை'

43. மனம் நினைவறும் இடம் நினைதல்: "மனனு நினைவரு மிடமது நினையவும்" அஞ்ஞவதைப்.

45. அத்திர விறையுரு வதுபரித்
தவனியில் வருமொரு பவனிபோய்ச்
சித்திர நிலைமையி லும்மையும்
தெருவினி லுய்த்தவர் திறமினே. (28)

வேறு

46. இம்மை யேகருதி வெம்மை யேபுரியும்
எம்ம னேருமரு ளெய்தவே
செம்மை யேயருளி யெம்மை யாளிறைவர்
செல்வ மேவுமவர் திறமினே. (29)

47. நல்ல தென்றிடினு நம்மை யாளுடைய
நாய கன்றிரமி நானிலம்
அல்ல தென்றிடினு மல்ல தொன்றுகன
வதினு மேவலர்க டிறமினே. (30)

48. அலைவி லாதபொரு ளதனெ டொன்றியது
இதுவெ னுமையறி யாதறிந்
துலைவி லாதவமு துண்டு பண்டைநினை
வொருவு வீர்கடைக டிறமினே. (31)

வேறு

49. கருகும்படி நயனங்கொடு களவின்னும துயிரைப்
பருகும்பொழு தருகும்படி படர்வீர்கடை திறமின். (32)

வேறு

50. மருவு மநாதிப் பிறந்தையை
வஞ்சித்து நீங்கி மனுதியும்
பொருவு மிலானெடு கூடியே
பொலிவுறு வீர்கடை திறமினே. (33)

51. ஆவது மழிவது மடைவதும்
அகல்வது மிகல்வது மருள்வதும்
போவதும் வருவது மின்றிய
பொருளை மணந்தவர் திறமினே. (34)

---

45. அத்திர இறை உருவது பரித்து - நிலையற்ற தங்குதலையுடைய உருவத்தைத் தாங்கி.

பி - ம். 'அத்திறவிறை' 'தெரிவினி லூற்றவர்'

50. அநாதிப் பிறந்தை - அநாதிகாலமாகப் வரும் பிறவி. மனுதியும் பொருவும் இலான் - மனம் முதலிய காரணங்களும் ஒப்பும் இல்லாதவன்.

52. ஈருட லோருட லாகவே
இறுக வணைத்தினி தின்புறும்
காருட லோதி மடந்தையீர்
கனக நெடுங்கடை திறமினோ. (35)

53. கூடு நெடுங்கன வதனிலே
குற்ற மிலானுட னுற்றிடா
தூடு மனந்தனொ டூடுவீர்
உமது நெடுங்கடை திறமினோ. (36)

54. ஊரு மலானுயர் தேயமும்
உறுகுல மும்முற வின்முறை
யாரு மிலானொடு கூடியே
இன்புறு வீர்கடை திறமினோ. (37)

வேறு

55. ஊரும் படைத்ததொரு மானிடப் படிவமும்
ஒன்றியே வாழுநா டன்றியே யுயர்திருப்
பேரும் படைத்தசிவ ஞானதே சிகனருட்
பெருமைபா டக்கபா டந்திறந் திடுமினோ. (38)

வேறு

56. செறியு மலவிருள் பறிய வருசிவ
ஞான தேசிக தினகரன்
அறியு மறிவுற வருளு நெறியினை
அறைய வணிகடை திறமினோ. (39)

வேறு

57. தேசம் பரித்த சிவஞான தேசி கன்பார் வந்தெமது
பாசம் பறித்த திறம்பாடப் பைம்பொற் கபாடந் திறமினோ. (40)

58. தெரிக்குஞ் சீர்த்திச் சிவஞான தேசி கன்றாள் சிரத்தணிந்து
பரிக்கும் பாச வதைப்பரணி பாடக் கபாடந் திறமினோ. (41)

---

52. கார் உடல் ஓதி - கரிய ஆணவத்தைப் பகைக்கும் மெய்ஞ்ஞானம்; மேகத்தைப் பகைக்கும் கூந்தல். "அழுந்த வாகம திரண்டு மொன்றுற வழிவி லானொடு தழுவி" (அஞ்ஞவதைப்.); "ஈருருவை யோருருவா யிசைக்கின்ற தேனதம்பே" (372) என்பர் பின்.

53. மனம் தன்னொடு - மனத்தோடு.

55. வாழு நாடன்றியே உயர் - வாழும் நாட்டில் மட்டுமன்றி எங்கும் ஓங்குகின்ற.

57. தேசம் - ஒளி.

பி - ம். 'நேசம் பரித்த சிவஞான நிகழ்தேசிகன்'

58. பரிக்கும் - தாங்கிய.

## 3. காடு பாடியது

59. நெடிய கானமு நிழலென வழல்வது
நெறியு ளத்து நினையினு மெரிவது
கொடிய கானமொன் றுளதத னிலையினிக்
கூறு கின்றது தேறுக தேறுக. (1)

வேறு

60. அடுவிலங் கல்லவ ரறிஞரே யாதலால்
அவரலா தவர்விலங் காதலா லவைகள்வாழ்
கடுநிலஞ் சுடுமழற் கதுவவெந் தெரிதவழ்
கதிமயங் கியநெடுங் கவலைசூர் கானமே. (2)

61. அன்னவவ் வடவியின் கொடுமையை யளவிடா
யாவரே கூறுவார் தேவரே யாயினும்
துன்னவவ் வடவிதா னெளியதோ வடவையச்
சூடுபட் டல்லவோ தொடுகடற் படிவதே. (3)

62. தணிகிலா வருகர்தம் பிண்டியுந் தேரர்தம்
தழைகுலா மரசுமைந் தருவுமே பொருவுமே
அணுகிலா நீளிடை யடையவுஞ் சோலையாய்
அடையவே யடையவே யழலுமவ் வடவியே. (4)

---

59. கானம் - பாலைநிலம். நினையினும் எரிவது: "நினையின்வே முள்ளமும்" கம்ப. தாடகைவதைப்.

பி - ம். 'நெறிநிறைந்து'

60. அவைகளென்றது கல்லாதவர்களாகிய விலங்குகளை; "விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல், கற்றாரோ டேனை யவர்" என்ற குறள் இங்கே அறிதற்குரியது. கதி - தேவகதி முதலியன, வழி. கானம் கடுநில மென முடிக்க.

62. பிண்டி - அசோகு. தேரர் - புத்தர். அடையவும் - முற்றவும். "அணிகொ ளும்பர் தருவுநே ரருகர் பிண்டி மரனுநேர், கனிக பங்க ரரசுநேர் கடிய கான வனலிலே" (அஞ்சுவதைப்.); "தரையினின்ற வவையெனும்பர் தருவுமில்லை சுகதர்தம், அரசுமில்லை யுரைசெயந்த வனலிலெங்கு மழியுமே", "அழியுமிந்த வனலினெந்த வுலகுமென்ற வருகர்தம், மொழியுமந்த வருகர்பிண்டி மாமுமில்லை முடிவிலே" மோகவதைப்.

பி - ம். 'இவ்வடவியே'

63. கனவினு மருளிலா நொதுமலா ரருளுழிக்
காணினும் வேலியாய்க் கடிவன முடிவன
வினவினுங் கடியசொல் வெம்பணை வீசியே
வெருளிமுட் சொரிகரு வேல்பல மிடையுமே. (5)

64. வன்கலா வதுகடுங் கயவர்தம் மனமதே
மரமுமற் றவர்கணே வளரும்வல் லழலவர்
நன்கலா வுரைகளே சீறுகூ ருவளி
நன்றிலா வவர்புரி நயமில்புன் றொழில்களே. (6)

வேறு

65. ஒருக்காலுங் கரையாத வுளமல்லாற் றிரைபொருநீர்ப்
பெருக்காலுங் கரைகின்ற பெருங்கல்லோ கருங்கல்லே. (7)

66. சலங்கிளருங் கொடுங்கயவர் தறுகண்ணே யவையன்றி
நலங்கிளரும் படிக்குதவு நன்மரமோ புன்மரமே. (8)

67. முருக்குகனன் மூர்க்கர்கொடு மொழியேமற் றுடலினைய
உருக்குகன லதுபோல வுயிரினையுஞ் சுடவற்றோ. (9)

68. சுழல்சூறை வளிநீசர் தொழிலேமற் றோரமயத்
தழல்சூறை வளியதுபோ லுலகுலையச் செயவற்றோ.. (10)

வேறு

69. நன்கா டதனைச் சுடுகா டெனவே
நவில்வீ ரறிவின் னடைகூர் பிணவெம்

---

63. நொதுமலார் - அயலார். வேலி - முள்வேலி. பணை - கிளை. கரு வேல் - ஒரு மரம்; "வாளொத்த முட்சரித்து வறிதே காய்க்கும் வன்பாகுங் கருவேலை வளர்க்குங் கானம்" அஞ்ஞவதைப்.

64. நன்கு அல்லா உரைகள்; பாசவதைப். 66, 68 ; "மரக்கண்ணோ மண்ணாள்வார் கண்" (முத்தொள்ளாயிரம்) ; "கல்லுங் கயவோர் மனமே யவர்தங் கண்ணே மரமும் மவர்தண் மையறச், சொல்லும் முரையே சுடுதீ யிடர்சேர் சூறா வளிமற் றவர்தந் தொழிலே" (அஞ்ஞவதைப்.); "நெஞ்சங் கல்லாங், கண்ணிணையு மரமாந்தீ வினையி னேற்கே" திருவாசகம்.

66. சலம் - வஞ்சனை.

67. இனைய - வருந்த. அது போல - அந்தக் கொடுமொழிபோல; "உயி ரைச் சுடவல் லதுவெவ் வழலோ ஓரா விவர்தம் முரையன் றியுமே" அஞ்ஞ வதைப்.

68. சூறைவளி தொழில் : பாசவதைப். 64. வற்றோ - வன்மையை யுடையதோ.

69. புகல்வீர் - சொல்வீராக. "செத்தபிண மிடுகாடு சுடுகா டென்று செப்புவர்க ளறியாதார் சிலர்தன் னெஞ்சத், தொத்ததுதா னுணராதுண்

புன்கா டதனைச் சுடுகா டெனவே
புகல்வீர் புரிதர் புகுதா மையினே. (11)

70. அறியுந் நெறியா லறியா வறநூல்
அறியும் மறிவோ ரறிவா னறையின்
அறியுந் நெறியா லறியா ரார்வாழ்
அவனே சுடுகா டழலும் மவையே. (12)

71. பொய்ந்நீ ரதெனத் தெளியா தணுகிப்
புணரா சையெனும் பொறிமா னுகள
மெய்ந்நீ ரதெனச் செலும்வாழ் வெனுமவ்
வெண்டே ரடவி வெளியெங் கணுமே. (13)

வேறு

72. கவர்த்த நெறியின கரக்கும் விடரின
கறுத்த புறவின மிறுத்தவே
உவர்த்த பயனின பொடித்த கிளையின
உருத்த மறநில பெருத்தவே. (14)

வேறு

73. ஓடியோடி வீடுதோறு முண்ணவுண்ண வெண்ணியே
நாடிநாடி வாடுகின்ற ஞமலிகோடி கோடியே. (15)

74. ஓடுங்கவே படித்தநூ லுலம்பியே விதண்டையால்
நடுங்கவே குரைத்துநின்ற ஞமலிகோடி கோடியே. (16)

---

டுடுத்து வாழு முயிரோடும் பிணம்பயில்கா டொழிய விட்டே" அஞ்ஞ வதைப்.

பி - ம். 'பிணம்வேம்' 'புகலீர்'

70. அவனே - அவ்விடமே. அவை அழலும்.

பி - ம். 'அறியாதனவாழ்'

71. "போாசை மான்செல்லச் செல்லப் போகும் பேய்த்தேரே யெம் மருங்கும் பெருகுங் கானம்" அஞ்ஞவதைப்.

72. விடர் - வெடிப்பு, விட புருஷர்கள். புறவினம் - புறாக் கூட் டங்கள், புறம்பான இனம். மறம் - வேடச்சாதி, பாவம்; சிலேடை. பொடித்த - உண்டான.

73. ஞமலி - நாய்; "தருவர் தருவதில ரெனநினையு மனமொடே தமது தலைமைகெட வவரவர்கள் கடையிலே, ஒருவர் தருமுணவு கருதியுழல் பவையில்வே றுழலு ஞமலிகளு முளவுமல வுணரிலே" அஞ்ஞவதைப்.

74. உலம்பி - முழங்கி. விதண்டை - ஒருவகை வாதம்.

75. செறிந்தவூ மெனுதசிறு சிறியரே சுணங்கன்மற்
றெறிந்தகல்லை விட்டெறிந்த விளையரைச் சினப்பதே. (17)

வேறு

76. வெஃகு கின்றவுயி ரென்ன முன்னணுகி
மெல்ல மெல்லவதை விட்டுவிட்
டஃகு கின்றதொடர் பற்றி றம்பலர்
அரங்க மல்கிய சுரங்களே. (18)

வேறு

77. செறிவற் றவர்தஞ் செறிவைச் சினவிச்
சிறுமைத் தொடர்பைத் தினமுற் றருளும்
அறிவற் றவர்தந் திருமற் றதுவேம்
அழலுற் றணைய நிழலற் றதுவே. (19)

வேறு

78. முழுதி யற்றவா ரணைய ராயகன்
முனிவர் பக்கலு முரண்மி குத்துவெம்
பழுதி யற்றவா ரிசைக ளேநெடும்
பார்ப றிந்துநீள் வேர்ப றிந்தவே. (20)

வேறு

79. எரியு மெரிபெயினு மிகலி யுடன்முழுதும்
இரிய வரிபொழுது மிசையவே
அரியு மரியுமெனு மபய முடையவரும்
அழல வழல்வதுமவ் வடவியே. (21)

வேறு

80. பிளவற்ற பேருளைப் பிரியா தொன்றிப்
பேரானந் தப்பரவை பெரிது மூழ்கும்
அளவற்ற நீராரு மனல வெம்பி
அழல்வீசுங் காந்தார மதுவே யம்மா. (22)

---

76. அரங்க - தன்பப்பட.

பி - ம். 'அரங்கண் மல்கிய', 'பலரங்கண் மல்கிய'

77. செறிவு அற்றவர் - ஏகாந்திகள். செறிவை - சம்பந்தத்தை.

பி - ம். 'அதுவே யழலுற்ற' 'அனைய'

78. இசைகள் - புகழ்கள்.

79. அபயம் - அஞ்சாமை.

80. நீரார் - தன்மையையுடையவர், நீரையுடையவர். காந்தாரம் - காடு.

81. இந்திரனீ ழலின்வருண னிருப்ப மற்றும்
இன்னமிர்த மிருப்பவுமிங் கெய்த வஞ்சி
ஐந்தருநீ ழலினெதுங்கி யங்கா டாள
அழல்வீசுங் காந்தார மதுவே யம்மா. (23)

82. பணநாக வட்டவணைப் பாயன் மேவிப்
பங்கயக்க ணெடுமாலும் பதைத்து நாரா
யணனாக வெந்துவெந்து கொதித்து வெம்பி
அழல்வீசுங் காந்தார மதுவே யம்மா. (24)

83. தண்ணந்தா மரைப்பொகுட்டுத் தவிசி னேறித்
தரணியிது முழுதளித்த தாதை வைகும்
வண்ணந்தா னிவ்வனத்தி னழலா லென்றால்
மற்றினியே ததன்கொடுமை வகுப்ப தம்மா. (25)

84. விண்ணவர்க ளமரரென வறிந்துந் தம்மை
வெய்யவிக்கா னகமஞ்சி மீது செல்ல
மண்ணவர்க ளடிதோயா தாகு மென்றால்
மற்றினியே ததன்கொடுமை வகுப்ப தம்மா. (26)

85. பொன்னாடிக் கானகத்தி னனலால் வெம்பிப்
பொரிந்துபொரிந் துருகிவிழும் புதுமை யாகும்
எந்நாடு மறியவிழு முற்கை யென்றால்
இதன்மேலே ததன்கொடுமை யிசைப்ப தம்மா. (27)

---

83. தாதை - பிரமதேவர். வண்ணம் - இயல்பு. எறி வைகும் வண்ணமென்க.

84. அமரர் - சாவாதவர். அவர்களுடைய அடி மண்ணைத்தோயாது.

85. பொன் நாடு இக்கானகத்தின். உற்கை - விண்வீழ் கொள்ளி.

# 4. பேய்களைப் பாடியது

86. பஞ்ச வாயிலெனும் வஞ்ச யானைவழி
பஞ்சு போன்மெலிய நெஞ்சுபோய்
அஞ்சு வாரையட நஞ்சு போலுழலும்
அஞ்சு பூதகணம் விஞ்சுமே. (1)

87. தொல்லை யேதொடரு மல்ல லூழின்வழி
தொல்லை நீள்பிறவி புல்லவே
வல்லை போகலகை யெல்லை போகியன
வல்ல வாசிறிது சொல்லுவாம். (2)

வேறு

88. கொடியவே பிறவியெனக் குறிக்கின்ற வறிவற்று
முடியவே கெடுகின்ற மூடரே முழுப்பேய்கள். (3)

89. எக்காலங் களுமறியா விழுதையரே கழுதல்லால்
முக்காலங் களுமறிந்து மொழிவனவோ முழுப்பேய்கள். (4)

வேறு

90. ஒன்றென நின்றன சிலவே யுகள முரைப்பன சிலவே
அன்றென நின்றன சிலவே யாமென நின்றன சிலவே. (5)

91. உருவுரு வென்றன சிலவே யுபய முரைப்பன சிலவே
அருவரு வென்றன சிலவே யகணித மென்றன சிலவே. (6)

92. இலதில தென்றன சிலவே யிருமை யுரைப்பன சிலவே
அலதல தென்றன சிலவே யருவினை யென்றன சிலவே. (7)

---

86. பஞ்சவாயில் - ஐம்பொறிவாயில். யானை யென்றது புலன்களை; "உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான், வரனென்னும் வைப்பிற்கோர் வித்து" (குறள்); "ஐம்புலமாந் தறுகண்மை யானையதி னுனைகள்" (277) என்பர் பின்.

87. எல்லை போகியன - அளவு கடந்தன.

90. யுகளம் - இரண்டு. "ஒன்றென்று நின்றசில பலவென்று நின்ற சில வுபயத்து நின்றசிலபேய், அன்றென்று நின்றதனை யாமென்று சொல்லிபுட னலகிட்டு விட்டசிலபேய்" அஞ்ஞவதைப்.

91. அகணிதம் - கணக்கற்றது.

93. கூடியசிகை யினசிலவே குறுகியபறி யினசிலவே
மூடியசடை யினசிலவே முண்டிதமா வனசிலவே. (8)

94. கற்கலைதற் றுவசிலவே கந்தைபரிப் பனசிலவே
வற்கலைதற் றுவசிலவே வறிதினியங் குவசிலவே. (9)

95. கீளுடைசுற் றுவசிலவே கிளர்துவர்நீ வியசிலவே
கோளுடைசுற் றுவசிலவே கோவணவா டையசிலவே. (10)

96. வேத்திரக்கை யினசிலவே விண்டுபரிப் பனசிலவே
பாத்திரக்கை யினசிலவே பாணிவிரிப் பனசிலவே. (11)

வேறு

97. பலகற்றி யாவினையும் விலகுற்ற மூதறிஞர்
பயில்வுற்ற பேரவையி னேடியே
சிலகற்றி யாவரொடு மலகற்ற நூலறிவு
செவிமுட்ட வோதுவன கோடியே. (12)

98. அறிவற்ற நூல்பழகி யதனுக்கு ளேமுழுகி
அமைவற்ற பேய்களுட னூடியே
செறிவற்றி யாவினையு மளவிட்ட தாகமிகு
சிலுகிட்டு லாவுவன கோடியே. (13)

---

93. பறி - தலையைப் பறித்தல்; "தலைபறியே சமயங்க ளென்று தத்தம், தலைபறித்துச் சிலசமண்பேய் சாற்றல் போலும்" அஞ்ஞவதைப்.

"தண்டைப் பிடித்தசில சிகையைத் தரித்தசில சடையைப் பரித்த சிலவே, முண்டித்து விட்டசில முடியைப் பறித்தசில முசுவிற் பொறித்தசில பேய்" அஞ்ஞவதைப்.

94. கற்கலை - காவியுடை. தற்றுவ - இறுக உடுப்பன; குறள், 1023. பரிப்பன - தாங்குவன. வற்கலை - மரவுரி.

பி - ம். 'தத்துவ'

95. கீளுடை - கீளோடு கூடிய கோவணம்; (திருவிடை. மும். 7.) துவர் நீவிய - துவரில் தோய்த்த ஆடையை உடையன.

பி - ம். 'நீடிய சிலவே'

96. வேத்திரம் - பிரம்பு. விண்டு - மூங்கில். பாணி - கை.

97. பி - ம். 'கற்றுமாவினையும்'

98. சிலுகு - சண்டை; 100; "அலைகெட்டி ராதுபல தலைகெட்ட நூல் பழகி யதுமுக்ய மாகமிகவே, கலைகற்ற பேய்களொடு சிலுகிட்டு லாவுவன கரையற்ற பேய்களுளவே" அஞ்ஞவதைப்.

### வேறு

99. பதறித் தாநிதி தேடவே பலகற் றுவன நாடவே
பணியற் றுருட னாடவே பழியைத் தானனி சூடவே
கதறத் தாமிக வோடவே கடையிற் போயிசை பாடவே
கவலைச் சாகர மாடவே கருவிப் பேய்பல கோடியே. (14)

100. சிறுகிட் டேவிழ மோதுவ தெருள்பற் றுதன வோதுவ
தெருவிற் போய்நட மாடவே திசைகெட் டேதடு மாறுவ
கலகத் தேமன மேவுவ கவடற் றேயுரை பாவுவ
கலவிற் றேயுடன் மூடவே கருவிப் பேய்பல கோடியே. (15)

101. தளைபட் டேமனை வாழ்விலே தளர்வுற் றீரென வேகியே
தவமெய்ப் பாடுகள் பேசியே தடையற் றேமலர் வாளியால்
துளைபட் டேயுடல் யாவுமே துருவிப் பாயலின் மேவியே
சுரதச் சாகர மூழ்கிவீழ் துறவிப் பேய்பல கோடியே. (16)

102. கணையொத் தேதம வேடமே கருதத் தான்வளை யாதுமா
கடுமைத் தாய்வினை யாவுமே கரையுற் றேமறை வாகியே
துணையொத் தேவளர் சூதையே துரியத் தானமெ னுமுனோர்
தொடர்புற் றேநனி தோயவீழ் துறவிப் பேய்பல கோடியே.(17)

103. மநுவைத் தான்விழ வோதுவ மதிகெட் டேதலை மோதுவ
வசனத் தானிலை பேசுவ வரைவற் றேபிற வேசுவ
தநுவைத் தாமென நாடவே சகமெய்ப் பாலென நீடவே
தலைகெட் டேதடு மாறுவ சமயப் பேய்பல கோடியே. (18)

104. சாலத் தாமறி யாதன சாதித் தேயுல கோரவர்
தாமுற் றேவிழ வோதுவ தாழ்தற் கேசில போதனை
ஞாலத் தாரெதிர் வாருமி னுடத் தானினி யேதுள
நாவிற் காவன வார்கெனு ஞானப் பேய்பல கோடியே. (19)

---

99. கடை - வாசல். கவலைச் சாகரம்: "கவலைச் சாகர நீச்சுக் குளே" (திருப்புகழ்); "கவலைக் காகர மாவன கடைகட் கோட மாடவே, கலவிற் றேயுண வாவன கருவிப் பேய்பல கோடியே" அஞ்ஞவதைப்.

பி - ம். 'பலதேற்றுவன'

100. கவடு - கபடு, வஞ்சனை.

101. தவமெய்ப்பாடுகள் - தவத்திற்குரிய உண்மைச் சொற்கள்; பாடு - சொல்; "செய்புமென் பாட்டில்" (நன். சூ. 340); தவத்தின் அநுபவங்களுமாம்.

பி - ம். 'தளர்வுற்றேமென'

103. மநு - மந்திரம். "தமைமெய்ப் பாலுண ராதன தநுவைத் தாமென நாடவே" அஞ்ஞவதைப்.

105. மாணத் தாமறி யாவெறு வாதத் தான்மன மாதியை
வாதித் தால்வரு மோகதி வாய்விட் டேயிவை யோதினம்
நாணத் தார்செலு நாணுடை நாரிக் காவன போதியும்
நாடிப் பூண்முலை தோய்கெனு ஞானப் பேய்பல கோடியே. (20)

வேறு

106. வெள்ளைகொண்ட மனத்தினரை மருட்டி மெல்ல
வீட்டுலகங் காட்டுநர்போல் விரகாற் செம்பொன்
கொள்ளைகொண்ட தம்பசியை நீங்க வாங்கிக்
குருக்கொடுக்கும் பேயனந்த கோடி கோடி. (21)

107. உடையார்முன் னில்லார்போ லேக்கற் றுங்கற்
றுயர்ந்திலவா யெவற்றினையு முணர்ந்த வேபோற்
கடையாகித் தலைகெட்டுத் தடுமா றுற்றுக்
கண்ணிழந்துந் தமைமதிக்குங் கழுத நேகம். (22)

வேறு

108. சுளியு மாறு பயனில கேட்பன
தோற்ற மாற்றுஞ் சுகானந்த வாரியைத்
தெளியு மாறு தெளிவிக்கு நன்னெறி
செப்புங் காலைச் செவிடுக ளாவன. (23)

109. நண்பு பெற்ற குடும்பபா ரத்தினல்
நாளிற் றூர்ந்த நயனில் பழந்துளை
பண்பு பெற்றுயர் கேள்விச் சலாகையாற்
பரிந்து தோட்கப் படாத செவியின. (24)

---

106. விரகால் - தந்திரத்தால். "கவலையுற்ற தம்பசியைத் தணிப்ப வேறோர் கதியின்மை யானறந்தாங் காட்டு வார்போற், குவலயத்தோர் பொருள்விரகால் வாங்கிக் கொண்டு குருக்கொடுக்கும் பேய்களொரு கோடி கோடி" அஞ்ஞவதைப்.

107. "உடையார்மு னில்லார்போ லேக்கற்றுங் கற்றார், கடையரே கல்லா தவர்" குறள். 385.

108. "வறிய வான வுரைபல கேட்பன மாண்டு மீண்டினி வாரா வழி யினைச், செறிய லான பொருள்க டெரிந்துரை செய்யு மெல்லை செவிடுக ளாவன" அஞ்ஞவதைப்.

109. "கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியாற், றோட்கப் படாத செவி" (குறள்.) குடும்ப பாரம் : "குடும்பச் சுமை" 122.

110. பன்ன வன்னிய மாத்திறங் கூறவாய்
பாழு டம்பெலா மாகிப் படிப்பன
முன்ன வன்சர ணும்புயம் போற்றியே
மொழிய மற்றழி மூங்கைக ளாவன. (25)

111. வெல்லொ ணாதன வெம்பசி வீழ்த்தவே
மெலிந்து சொல்லற வீழ்ந்துடல் சோர்வன
சொல்லொ ணாதன பாவகங் காட்டவே
துடிது டித்துத்தந் தொல்வாய் பிளப்பன. (26)

112. நிலையி லாதன வாய்நிலை பெற்றபோல்
நின்ற வேதெரிக் கின்ற விழியின
தொலைவி லாத வதித முணர்த்திடிற்
றொடர்ந்து பார்க்கத் துறுங்குரு டாவன. (27)

113. பண்டு நாளையு மின்று மனைவர்க்கும்
பாடி வீடு பயில்புறங் காடெனக்
கண்டு நீலவெங் காச மறைத்திடக்
காண்கி லாதுளே வீழ்ந்தவன் கண்ணின. (28)

114. முற்ற முற்றவுந் தம்புக ழேசொல
முகடு முட்ட வளர்ந்து முரிப்பன
குற்ற மற்றவ ருற்றவன் பெற்றிகள்
கூறுங் காலைக் குறள்களே யாவன. (29)

115. நிறைவி லாத குறைவினை யெய்தியே
நெற்றி யேற நிமிர்ந்திறு மாப்பன
குறைவி லாத நிறைவினை யெய்தியே
குலவ வென்னின்வெங் கூன்களே யாவன. (30)

---

110. பன்ன அன்னியம். உடம்பெலாம் வாயாகி. மூங்கைகள் - ஊமைகள். "வம்பு கூறி னுடம்பெ லாம்வெறும் வாய்க ளாகி வடித்தற்கு வல்லன, உம்பர் கோனடித் தாமரை போற்றிநின் றுரைக்க வென்னில்வெற் றூமைக ளாவன" அஞ்ஞவதைப்.

111. பாவகம்: "பாவ கத்தோன்றி லாதமை காட்டவே படப டத்துத் தம் பாழ்வாய் திறப்பன" அஞ்ஞவதைப்.

112. "பொய்ம்மை யாகிமெய்ப் போல விளங்கிய பொருடெ ரிக்கினற் புற்புதக் கண்ணின, மெய்ம்மையான பொருளை யுளத்தினின் மீண்டு பார்க்கின் வெறுங்குரு டாவன" அஞ்ஞவதைப்.

113. பாடி வீடு - தங்கும் இடம். புறங்காடு - சுடுகாடு. காசம் - கண்ணுக்கு வரும் ஒருவகை நோய்.

114. பி - ம். 'உற்றவன் பெற்றி', 'குறட்களே யாவன'

116. பறையி லார்புன் படிறர் பவனிபோய்ப்
பார்க்க வோடிப் படரும் பதத்தின
கறையி லாருருத் தாங்கி யுலாவுதல்
காண்டல் வேண்டுழிக் கான்முட மாவன. (31)

117. இம்மை யன்றி மறுமையு நண்ணுமா
றியம்பு நூல்கற் றினிதியங் காமலே
செம்மை யன்றி விதண்டைக ளேபல
செப்பு நூல்கற்றுத் தெற்றி நடப்பன. (32)

118. கொல்லுங் கூற்றம் வருஞான்று காறுந்தம்
கொடிய கும்பிக் குழிக்கிரை தேடியே
கல்லுங் கானுங் கடலு மலைகளும்
கடந்து தேய்ந்த கடியவெங் காலின. (33)

119. அரிய நீந்தி யகந்தொறுஞ் சென்றுசென்
றைய மேற்றுணக் கையிரண் டுற்றன
துரிய நீந்திச் சுகானந்த வீடுபோய்ச்
சுதையெ டுத்துணச் சொத்திக ளாவன. (34)

120. வம்பை யேயுளங் கொண்டுல கத்தவர்
மருளு மாறு குருடு தழாவியே
கம்பை யேடு கயிறு கவளிகைக்
காட்சி காட்டுமோர் பொத்தகக் கையின. (35)

121. சிவனி லாத வுருவ மெடுத்தமை
தேர்ந்து பாரந் திருவடி வைத்தில

116. பறை - புகழ் ; ஆகு பெயர் ; பறைதல் - சொல்லுதல். படிறர் - வஞ்சகர். படரும் - போகும்.

117. தெற்றி - பிணங்கி ; சீவக. 972.

118. வருஞான்று காறும் - வரும் காலம் வரையிலும். கும்பி - வயிறு ; வழக்கு ; "வயிறு சாணும் வளர்த்தற் பொருட்டந்த வானஞ் சென்று வாக்கா லுடையன" அஞ்ஞவதைப்.

119. சுதை - அமுதம். சொத்திகள் - முடம்.

120. கம்பை - சுவடிகளின் மேலுள்ள பலகை ; கவளிகை - புத்தகம் இடும் உறை ; "கயிறுங் கம்பையு மேடும் பிறர்க்கொரு காட்சி போல்வரும் புத்தகக் கையின" அஞ்ஞவதைப்.

121. இலாத உருவம் சிவன் எடுத்தமை ; என்றது அவர் குரு மூர்த்தி யாக எழுந்தருளியதை. சிவன், சமன் : வகரத்துக்கு மகரம் எதுகையாக வந்தது ; "சேவலங் கொடியோன் காப்ப, ஏம வைக லெய்தின்றா லுலகே" குறுந். கடவுள்.

சமனி லாத விருவினைக் காவடி
தாங்கி நாளுந் தழும்புறு தோளின. (36)

122. ஒரி மைக்கு ளழிந்திடு மென்பதை
உன்ன லன்றி யுலைத்துலைத் தேதினம்
பாரி மக்க ளெனுங்குடும் பச்சுமை
பரித்துப் பங்கி பறிந்த தலையின. (37)

123. தேற்ற மென்கின்ற தொன்றுமி லாமையாற்
சினந்தி யாரையுஞ் சீறிச் சுடுங்கொடு
மாற்ற மென்கின்ற வல்லழல் புல்லியே
வளரா நாளும் வறண்டிடு நாவின. (38)

124. வழியி லாதவர் சொல்லிய சொல்லற
வகுத்த வான்கரும் பெள்ளிமெய்ஞ் ஞானநல்
விழியி லாதவர் சொல்லிய சொல்லெனும்
வேம்பை நச்சி விரும்பிக் கடிப்பன. (39)

125. சோறுண் டுண்ணவங் கென்னி னவர்களைச்
சுற்றி யுற்றவர் போலத் தொடர்வன
பேறுண் டென்னினுஞ் சோறில்லை யாய்விடிற்
பிரிந்து பாரா பிறகிட்டு நிற்பன. (40)

126. வாய்க்கு மோர்வெறுங் காடியே தாயினும்
வாய்க்கு மாயின் வழுதுணை கல்லிலே
காய்க்கு மோவெனக் கொம்புதோ றுயிரங்
காய்க்கு மேயெனக் கட்டுரை செய்வன. (41)

127. பெற்றி யுற்ற சுகானந்த போனகம்
பெற்றி ருந்தும் பிரிந்தே விடுப்பன
பற்றி யுற்று வெறும்புற்கை யாயினும்
பாடி யாடித்தம் பாழ்வாய் மடுப்பன. (42)

---

122. பாரி - மனைவி. பங்கி - மயிர்.
பி - ம். 'பாரின் மக்கள்'

123. தேற்றம் - தெளிவு. கொடு மாற்றம் - வன் சொல்.

124. பி - ம். 'வெம்மை நச்சி'

125. பிறகிட்டு - பின் புறம் காட்டி ; "உண்ண லான விடந்தொறு மற்றவர்க் குற்ற நட்டவர் போலுற வாடுவ", "பிண்ட மிட்டவர் தம்பிற கேகுந்நைஞ பிஞ்ஞை யென்று பிதற்றித் திரிவன" அஞ்ஞவதைப்.

126. வழுதுணை - கத்தரிக்காய்.

127. புற்கை - கூழ்.

128. வைய மெங்கு நொடியொன்றிற் சுற்றியே
வயிறு சாணும் வளர்த்தற் பொருட்டலைந்
தைய மெங்கு மெடுத்துண் டவாவெனும்
அம்பு ராசி யழுந்திக் கிடப்பன. (43)

129. வான முற்றும் வயிறு விலாவிற
வாரி வாரித்தம் வன்பில வாய்திறந்
தூன மற்ற வுயர்கதி யீதென
உண்டுந் தூரா வுதரக் குழியின. (44)

130. கடிய வாகி நகையு முவகையும்
காய்ந்து கொல்லுங் கடும்பகை யாயடும்
கொடிய வாகிய கோபா னலத்தினாற்
கொதித்த மூன்று கொளுந்து முகத்தின. (45)

வேறு

131. உண்ண விட்டவகை தேடி வீடுதொறும்
ஓடு மேயுருகி வாடுமே
நண்ண விருநிதிகள் கோடி நாடுதொறும்
நாடு மேமயலி னீடுமே. (46)

132. ஐந்து புலன்வழி யேகி யேநிறைய
ஆரு மேநிலைமை சோருமே
சந்து பலமுறை போகி மாயரதம்
ஊருமே கசடு சேருமே. (47)

133. கள்ள மாகவுல கெண்ணு மாறுசடை
கட்டு மேமரண மட்டுமே
வெள்ள மாகவுல கெண்ணு மாறுபடை
வெட்டுமே யரண முட்டுமே. (48)

---

128. அம்புராசி - கடல். "வயிறு சாணும் வளர்த்தற் பொருட்டலந்த வானஞ் சென்று வரக்கா லுடையன" அஞ்ஞவதைப்.

129. தூரா உதரக்குழி: "தூராக் குழியைத் தூர்த்து" (திருவிடை. மும். 7) ; "தூராச் சலதி தூரினுந் தூராப், படுகுழி யுதரம்" மதுரை மும் மணிக்கோவை, 19.

130. கோபானலம் - சினமாகிய தீ ; குறள், 304.

132. சந்து - தூது.

133. கள்ளமாகச் சடைகட்டு மென்க. எண்ணுமாறு - மதிக்கும்படி.

134. ஊறி யேதுவர் பிடித்த வன்கலை
உடுக்கு மேயுடை விடுக்குமே
நாறி யேமுன் முடித்த சண்டைகள்
தொடுக்கு மேபல வடுக்குமே. (49)

135. நல்ல தென்றலகு சொல்ல வேமிக
நடிக்கு மேசொல வடிக்குமே
வல்ல தென்றலகு சொல்ல வேமறை
வடிக்கு மேதலை வெடிக்குமே. (50)

136. கடிய குரன்னுமலி யென்ன வந்தெதிர்
கடிக்கு மேபல படிக்குமே
கொடிய கொலையுழுவை யென்ன வந்துயிர்
குடிக்கு மேயுரு மிடிக்குமே. (51)

137. சோறு கண்டபொழு தேயெ ழுந்துதுடி
துடிக்கு மேமன மடிக்குமே
பேறு கண்டபொழு தேயெ ழுந்தமடி
பிடிக்கு மேசுரை குடிக்குமே. (52)

138. பந்த மீதுவிது முத்தி யென்றுசில
பகுக்கு மேவினை தொகுக்குமே
மந்த மீதுவிது தீவ்ர மென்றுசில
வகுக்கு மேநய முகுக்குமே. (53)

உவமை

வேறு

139. மனனுநு மொழியாலு மறியா வொன்றை
வாக்காலே யறிவிக்கு மாட்சி யம்மா
புனலாலே யனல்சுடுதல் போலும் போலும்
போலாவேற் புனலிலெழுங் கனலே போலும். (54)

140. ஏகாச மிட்டிறுமாந் திருந்து நல்வீ
டினிதளிப்ப மெமக்குவீ டியற்று கென்றல்
ஆகாச கமனமுனக் குணர்த்த விவ்வாற்
றக்கரைக்கே செலுத்துகென வறைதல் போலும். (55)

---

134. நாறி - ஏசி.

136. உழுவை - புலி.

137. சுரை - கள்.

138. பி - ம். 'தீர மென்று'

140. ஏகாசம் - போர்வை; "ஆகாச மிட்ட கைகள், ஏகாச மிட்ட மெய்கள்" (அருணாசலகவி) ; பிரபு. மாயை கோலாகல. 70.

141. அமலமுயிர்க் குயிராகி யகத்தில் வைக
அதையாயுஞ் திறமறியா தலைந்த லைந்து
விமலமதை வெள்ளிடையே நாடுந் தன்மை
விளக்கிருக்கத் தீத்தேடும் விரகு போலும். (56)

142. வினைதொலைக்குந் திறந்தெரியா தருத்தி முற்றும்
விளித்துப்பின் பொன்னெயிலின் மேவ நின்ற
புனைமயிற்பீ லிச்சமண்பேய் கடனீர் வற்றப்
புகுந்துமீ னருந்தநின்ற பூனை போலும். (57)

143. வரல்புக்குச் செறிதலற்ற பொருளைத் தத்தம்
மதியளவால் வகுத்தியம்பல் மத்த யானை
உரலொக்குஞ் சுளகுபெண்ணை மார்ச்ச னைக்கோல்
உலக்கையொக்கு மெனக்குருடற் றுரைத்தல் போலும். (58)

144. விமலவுரு வெடுத்தெய்தி யுணர்த்துந் தன்மை
விரகினென்றுக் கொன்றிகலி விதண்டை சாதித்
தமலமது விதுவென்று தெரியக் கூறல்
அந்தகருக் கந்தர்நெறி யறைதல் போலும். (59)

145. குருமுகத்தா லன்றியுயர் ஞான நாளும்
கொண்டகொண்ட வளவையினாற் குறித்து நோக்கி
ஒருவர்முக மொருவர்பார்த் தியம்பா நிற்றல்
ஊமைகளுக் கூமைமொழி யுரைத்தல் போலும். (60)

146. முன்னைவினை யாலன்றிப் பயன்க ளிம்மை
முயற்சியா லாகுமென மொழியும் பேய்கள்
உன்னின்மலர் வான்வருமென் றுரைக்கும் பேய்கள்
உளவாயி னவற்றினையே யொக்கு மொக்கும். (61)

---

142. பொன்னெயில் - பொன்னெயில் வட்டம்; சமவசரணமென இதனை ஜைனர் வழங்குவர்.

143. பெண்ணை - பனை. மார்ச்சனைக் கோல் - விளக்குமாறு. குருடு - குருடர்கள். "ஒளிதருநூ லோதிமுடி பொருளைக் காணு தோதியநூல் பலவுணர்ந்து பிணங்கும் பேய்கள், களிதரும்யா னையைக்குருடர் கையாற் கண்டு கண்டகண்ட வளவுகொடே கழறல் போலும்" அஞ்ஞவதைப்.

144. "அருவாய பரனுருவா யருள்வ தொன்றை யஞ்சாதே சில வளவை கொண்டு தாமும், குருவாகிச் சிலகுருப்பேய் கூறுந் தன்மை குருடர்க்குக் குருடர்நெறி கூறல் போலும்" அஞ்ஞவதைப்.

## 5. கோயிலைப் பாடியது

### சோலை

147. சொற்ற பேய்கள்புகு மாறிலாத்
தூய யோகநில யந்தனில்
உற்று வாழிறைவி வாழ்தரும்
ஒளிகொள் சோலையுயர் சோலையே. (1)

148. பூமி நீரனலம் வாயுவான்
புல்கி லாதிரவி சோமரும்
தாமி லாதுபர நாதனர்
தாள்வி டாரினிதின் வாழ்வதே. (2)

### வேறு

149. ஆறுகண் ஞானதி வாகர ராறுகள் வீறத டாகமும்
ஆசைகு ரோதமிவாதிய வாறு மிலாதவ ரருளரோ
ஊறுகளாவன வேறில வோதவொ ணுதொளி யாகிய
ஊழிதொ றாழியுமேறுகர்யோகுயர் சாகையி னமுதமே. (3)

### வேறு

150. உடலு மழலுற வுயிரு மழலுற
உறுதி கெடவரு மிறுதிநாட்
கடலு நிகால வெனமு னிலவுமோர்
கருணை நிழறரு பொழிலதே. (4)

---

147. சொற்ற - முன் சொன்ன. நிலயம் - கோயில். "போகாத துயர்மேவு பொல்லாத விப்பேய்கள் புகுமாறிலா, யோகால யத்துள் ளிருப்பா டிருச்சோலை யுட்சோலையே" அஞ்ஞவதைப்.

148. அனலம் - தீ. நாதனது தாளை விடாதவர். "ஆகாச நீர்பூமி யனல்கா லிரவிசோம ரவியாதமு, டேகாச நாநாத னடியார்கள் பயில்வார்க ளினிதாகவே" அஞ்ஞவதைப்.

149. ஆறு : ஆசை, குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம் என்பன.

## தேவி கோயில்

வேறு

151. கூறு வேதமுஞ் சூழு தற்கரும்
கோயி லுக்குநா னளவை கூறுகேன்
ஆறு நாலுதிக் குள்ள நீளமே
அம்மை கோயிலுக் களவை யாவதே. (5)

152. கமல யோனியே முதல தேவரும்
காணு தற்கருங் ககன மண்டலத்
தமலை கோயில்கண் டமைய வோதுமா
றரிய தாகுமெப் பெரிய ராலுமே. (6)

வேறு

153. உன்னு தோறு முணர்விற்கெட் டாதுயர்
உண்மை ஞான மொருங்குடன் சூழ்மதில்
மன்னு கோபுர மாமறை யுச்சியில்
மலிவுற் றோங்கு மகாவாக்கி யங்களே. (7)

154. அண்ட ரண்டநூ றுயிர கோடிகள்
அணுக்க ளாகிமற் றங்கங் குலவிட
மண்டு கின்ற பரம வியோமமே
மண்ட பம்முயர் மாளிகை சூளிகை. (8)

155. பசையி லிவ்விவ கார திசையிடைப்
பயிற்சி நீங்கியப் பார மார்த்திக
வசையி லத்திசை யுள்ளதன் வாய்மையை
வகுக்கொ ணாதது வாங்மனோ தீதமே. (9)

156. பந்தர் வானம் விதான மந்தாகினி
பத்தி வாயி லவித்தை கபாடமே
சந்த்ர சூரிய ருட்களஞ் சக்கரம்
தண்டு சூலஞ் சலியாத காவலே. (10)

---

151. "ஆதி நாலுமா மறைகள் சூழ்வதற் கரிய கோயிலுக் களவு கூறவோ, ஓது நாலிரண் டெனிரண்டுதிக் குண்டமேனியக் கோயிலுள்ளதே" அஞ்ஞவதைப்.

152. கமலயோனி - பிரமதேவன்.

154. சூளிகை - உச்சியிலுள்ள மண்டபம்.

155. பசை - அன்பு. அத்திசையுள் அதன். வாங்மனோதீதம் - வாக்கிற்கும் மனத்திற்கும் அதீதமானது.

156. பி - ம். 'பரந்த வானம்'

## கவிகை முதலியன

157. கடிதெ ழுந்தொருங் கெல்லாந்தன் னுட்படக்
கவித்து நின்ற கவிகை கருணையே
நெடிது சென்று திளைக்கும்வன் கேதனம்
நிரும லானந்த நிரதிச யம்மதே. (11)

வேறு

158. வாய்மை யாகுமே தீபம் யாவையும்
மற்றெ லாமனு குற்றி லாமிகச்
சேய்மை யாகுமே யிறைவி வாழ்தரும்
சினக ரத்தினுக் கனக ருக்கவே. (12)

## பலிபீடம்

159. அளவி லாதன வண்ட கோடிநா
ளுயி ரங்களு மலகி லூழியும்
பிளவி லாதன வாகி நிற்பதோர்
பிண்ட மேபலி பீட மாவதே. (13)

## சாதகர்கள் பலியிடுதல்

160. பிறவி யாரறத் துறவி யார்பலர்
பெரிய வன்பினிற் பரவி முன்புறும்
மறவி யார்நினை வாரு மேயற
வன்ப லிகொடுத் தின்பு றாவரே. (14)

வேறு

161. தம்முரு விறையுரு வணைதலின் மிகுபொறை
தருவது மிஃதல தொருபொரு ளிலதே
எம்முரு வுயிரென விம்முயி ரிதனையும்
இனிதயில் கெனவடி யிடுபலி பலவே. (15)

---

157. கேதனம் - கொடி.

158. வாய்மை தீபம் : "சான்றோர்க்குப் பொய்யா விளக்கே விளக்கு" குறள்.

159. "அண்ட கோடிநா ளுயி ரங்களோர், பிண்ட மாவிடும் பெரிய பீடமே" அஞ்ஞவதைப்.

161. "தமதரு விறைவடி வுறுதலி னிதனிகர் தருவது மொருபொரு ளிலமிது தகவில, தெமதுயி ரெனினுமி தமுதசெய் வதுகட னெனவடி தொழுதிடு பலிபல பலவே" அஞ்ஞவதைப்.

162. உறுவது முடல்பெறு முயிருறு வினையுள
தூணர்வுறி னுலகினி லொருபொருள் பிறிதிலம்
இறுமுறை யமுதுசெய் தனையெவை யெவைகளும்
இனிதயில் கெனும்பலி யிவைபல பலவே. (16)

## ஆலமரம்

### வேறு

163. அமலை யம்பிகை பயிரவி திரிபுரை
அபயை யந்தரி ம்ருகமத பரிமளை
அருண மங்கலை யருள்வள ரயில்விழி
அநகை சங்கரி யகிலமு முதவிய
விமலை சுந்தரி யடியவர் துயர்கெட
விருது கொண்டரு ளுமைபரை யுறைதரு
விளைவு தந்ததொர் வடமுள ததனிலை
வினவி னண்டரு மறிவுற வரியதே. (17)

164. அகில வண்டமும் வயிறெரு சிறுபுரை
அடைய வுண்டபி னளவறு புவனமும்
அடியி லொன்றினி லமைவர நமையருள்
அயனை யுந்தியின் மலர்மிசை யருளிய
முகில்க ருங்கட லறிதுயில் கொளுநெறி
முறைப யின்றது மதில்வரு மொருசினை
முதிர்வின் மென்றளிர் நுனியினு னுனியெனின்
மொழிவ தெங்ஙன மதன்வளர் பணையையே. (18)

165. அலகி லண்டமு மதினெரு சிறுவிதை
அளவு கண்டிட வரியது வெனினதன்
அளித ருங்கனி யளவையை யுலகினில்
அறிய நின்றவ ரெவரதை விடவதின்

---

162. பி - ம் 'உயிருமோருறுவினை'

163. ம்ருகமதம் - கஸ்தூரி. அநகை - பாவமற்றவள். வடம் - ஆலமரம்.

164. முகில் - திருமால். பணை - கிளை. "அபானையுல கடையவரு மோருந்தி மாமலரின் அருளியறி வரியபர யோகொன்றி மாறுயில்கொள், சயனமென மொழிவதொரு தாழ்கொம்பின் மேவுசிறு தளிரினெரு தலை யினுனி யேயென்பர் சாகையையே" அஞ்ஞவதைப்.

165. "ஒருவிதையி னளவளவி லோரண்ட மாருமதி னுளகனியி னளவையினி யார்கண்டு கூறுவரே", அஞ்ஞவதைப்.

உலைவி றன்சினை பொறிவிரி பணகண
உரகர் தம்பதி யெழுமையு முலவுவ
தலக மெங்கணு முருவின ததன்விழு
துரையி றந்தது முணர்வினி லுணர்வதே. (19)

வேறு

166. வசையின் மூவ ரதன்மிசை மன்னு மூச லாடியே
விசையி னென்றி னின்னமு மீள்வ ரல்லர் போவரே. (20)

167. மாய்வி லாத வருளினன் மாற்றி னன்றி வல்விசை
ஒப்வி லாத வூசன்மூவ ரூச லூச லல்லவே. (21)

வேறு

168. விழோட்டி மேனோக்கி மென்கவடு திசையோட்டிக்
கிழோட்டி மலர்ந்தசிகை கிளர்வடமற் றவ்வடமால். (22)

169. ஆசையெனுஞ் சிறகுவிரித் தைம்புலமாங் கொடுங்கண்ணிப்
பாசவலைப் பறந்துவிழாப் பறவையதிற் படிவனவால். (23)

170. தண்ணருளே திருவுருவாய்த் தாயாய்வந் தருள்செய்த
அண்ணறிரு மேனியவ்வா லறிந்தவா றறைகுதுமால். (24)

166. "சடாதாறும், அரியுமல ரவனுமதி லேநின்ற வூசன்மிசை அணையவரி னவர்கள்விசை போயன்றி மீள்விலரே" அஞ்ஞவதைப்.

168. "மேனோக்கி விழோட்டி விரிதிசையே கவடோட்டிக், கீழ்நோக் கிக் கிளையோட்டிக் கிளரவளர் வடமிதவே" அஞ்ஞவதைப்.

170. இனி அறைகுதும். பி - ம் 'மேனியல்லால்'

# 6. தேவியைப் பாடியது*

171. வரமி குத்தன மறைகள் பற்பல வருட முற்றிலவே
பரம் தற்பத வமல சிற்கன பதயு கத்தினளே. (1)

172. அணிய பற்பல பிறவி யுற்றதி னமிழு மத்துயரே
தணிய வற்புத வமுத முற்றருள் தனத டத்தினளே. (2)

வேறு

173. முறுகித் துயர்வாரியின் முழுகிப் பலகாலமும்
முடலைச்சுமை யேகொடு முடிவற்றயர் வேனையுமே
குறுகிப்பணி வாயருள் குலவிப்பணி வாயொரு
குறையற்றிரெ ணநனி குழையுற்றலை காதினளே. (3)

வேறு

174. அழிவற மிகுந்த காரிருள்
அதனிடை மறைந்து நாடொறும்
அருவினை படர்ந்து மூடுற
அயர்வுட னிரங்கு வேனையுமே
ஒழிவற நிறைந்த பேரருள்
உருவொடு நடந்து வாழ்கென
உரையுணர் விகந்த மேன்மைய
ஒருமொழி பகர்ந்த வாயினளே. (4)

வேறு

175. ஈனந்தம் வசமாக வெழுபிறவிச் சுழல்வோரும்
ஆனந்தக் கடலாட வருள்பொழியும் விழியினளால். (5)

176. வாக்கினொடு மனத்தினுக்கு மருவாத பொருளதனைத்
தூக்கினொடு பொருள்படுத்திச் சொல்லுமா றெவ்வாறே. (6)

177. ஒழியாம னிறைந்தவவட் குருவமில்லை யேயென்கோ
அழியாம லாளவந்த வருட்கோலங் கண்டுமே. (7)

---

* பி - ம். காளி நிலை.

172. பி - ம். ‘பிறவியுற்றதி னமிழத்துயரே’, ‘யுற்றதிகமுமத்துயரே’

173. பி - ம். ‘முலைச்’

177. “மருவுரு ததற்குரைக்கும் வடிவமில்லை யென்னவோ, கருவுரும லாளவந்த கருணைமேனி கண்டுமே” அஞ்ஞவதைப்.

178. அவஞான கற்பனையே யல்லதுபே றில்லென்கோ
சிவஞான தேசிகனுந் திருநாமம் பரவியுமே. (8)

179. இணையிலா விணைப்பதத்திற் கெல்லையில்லை யேயென்கோ
புணையிலா நாயினேன் புன்றலைமீ திருப்பவுமே. (9)

வேறு

180. முடிவிலாம னின்றதம்ம முடியதென்ன மொழிவனே
ஒடிவிலாம லென்மனத்தி னுள்ளடங்க லுற்றமே. (10)

181. திசையினிள மன்றிவேறு சேலையில்லை யென்பனே
நசையின்மேவி யென்னகத்தி னடுவனுற் றிருந்துமே. (11)

வேறு

182. தாயாகித் தாதையுமாய்த் தலையளிசெய் தெமையாண்ட
தூயவன் றிருவுருவஞ் சொல்லுபவோ சொல்லுபவோ. (12)

## அமளி முதலியன

183. போதத்தின் வழிநின்றார் புந்தியோ புறங்காடோ
வேதத்தின் மத்தகமோ விடவரவோ மெல்லமளி. (13)

184. என்பாவு மாறுகட லேழிருந்து மென்னன்னை
அன்பாளர் கண்ணருவி யாடுவது திருவுள்ளம். (14)

---

178. பி - ம். 'பேறில்'

179. "தொல்லையாகி நின்றதய்ய துணைமலர்ப்ப தங்களுக், கெல்லை யான தில்லையோவென் னுச்சிமீ திருக்கவே" அஞ்ஞவதைப்.

180. "விளம்புமெப் பொருட்குமேன் மிகுத்தநீண் முடிப்பரப், புளம் புகுந்தி ருக்கவெல்லை யுன்னவில்லை யென்னவோ" அஞ்ஞவதைப்.

181. "அடையமா திரம்படைத்த வப்புறம் புடைப்பதோர், உடையு மில்லை யென்னவோவென் னுள்ளடங்க லுற்றமே" அஞ்ஞவதைப்.

பி - ம். 'செல்வ மில்லை', 'செலவுமில்லை'

182. தலையளி - சிறந்த அன்பு. "அன்னையாகி யத்தனாகி யஞ்சலஞ்ச லென்றவர், தென்னையாளுங் கோலநீர்மை யென்னதா வியம்பவே" அஞ்ஞவதைப்.

183. போதம் - அறிவு. மத்தகம் - உச்சி.

"மாசணமோ மறைத்தலையோ மயானமோ வாக்கிறந்த, தேசுணர்ந்த மெய்யடியார் சிந்தையோ திருந்தமளி" அஞ்ஞவதைப்.

184. என் - என்ன ஆச்சரியம். பாவும் - பரவிய. ஆறுகளும் எழு கடல்களும். "ஒன்பதநீர்த் தருமன்பர் தம்பாதம் விளக்கியநீர்க் கொவ்வா வென்றே, அன்பர்கட் கண்ணீர்கொண் டம்மைக்கு மஞ்சனநீ ராட்டுவார் கள்" மோகவதைப்.

185. பொன்மாலை பூமாலை புறக்கணித்துத் தன்னடியார்
சொன்மாலை யெப்போதுஞ் சூடுவது திருவுள்ளம். (15)

186. கேசாதி பாதாந்த மணியணிகள் கிளரருளால்
ஏசாத ஞாதாதி யொருமூன்று மின்னமுதால். (16)

187. பண்ணேழுங் கர்ணுவ தங்கிசமோ பராபரைக்கு
மண்ணேழு மணிமுன்கை வால்வளையோ மதித்திலனல். (17)

188. மலையேழுங் கந்துகமோ மணிக்கழங்கோ வம்மனையோ
அலையேழு திருநதியு மாரமோ வறிந்திலனல். (18)

189. அண்டபகி ரண்டமெலா மவள்காதிற் குதம்பையதோ
கொண்டபடி கோத்தணியுங் கோவையோ குறித்திலனல். (19)

190. பொழிலேழும் விளையாடிப் பூக்கொய்யு மிளங்காவோ
எழிலேழு பாதலமு மெரிமணிப்பூண் பெட்டகமோ. (20)

191. புவனங்க ளோமாதி புரிந்தபிடே கிப்பவைக்கும்
தவனங்க ளோவன்னை தானடுக்கும் பழங்கலமோ. (21)

192. வேதங்க ளொருநான்கு மெல்லடிமேல் வியன்சிலம்போ
நாதங்க ளொருநான்கு நகுகதிர்வண் சதங்கைகளோ. (22)

193. மிருதிபுரா ணஞ்சடங்கம் வீறுமெண்ணெண் கலையாதி
ஒருதிசிலம் பொடுசதங்கைக் கொள்ளரியோ வுணர்ந்திலனல். (23)

---

185. "சாத்தும்பூ மாலையினுந் தமையுணர்ந்த மெய்யடியார், எத்தும்பா மாலையிலே யெப்போதுந் திருவுளமே" அஞ்ஞவதைப்.

186. ஞாதாதி மூன்று - ஞாதா, ஞானம், ஞேயம் ; அறிபவன், அறிவு, அறியப்படுவது. "பாதாதி கேசாந்த மூவந்தணியும் பணியருளே, ஞாதாதி யாமூன்று மூவந்தயிலு நல்லமுதே" அஞ்ஞவதைப்.

187. கர்ணுவதங்கிசம் - செவிப்பூ ; "பண்ணேழுங் கன்னுவ தங் கிசமோ" குலோத். உலா.

188. கந்துகம் - பந்து. மலை கந்துகம் : "காவன் மலையேழுங் கந்து கமோ" (குலோத். உலா.) நதி ஆரம் : "ஆர்க்கு நதியேழு மாரமோ" குலோத். உலா.

191. ஓமாதி - ஹோமம் முதலியன. தவனங்கள் - ஸ்நபனகலசங் கள்.

பி - ம். 'புவனங்களேயாதி'

192. வேதம் சிலம்பு : "அடிச் சூட்டு நூபுரமோ வாரணங்க ளனைத் துமே" தக்கயாகப்பரணி, 119.

193. மிருதி - வேதம். சடங்கம் - சாஸ்திரங்கள் ஆறு. ஒருதி - ஒருத்தி; தொகுத்தல். அரி - சிலம்பின் உள்ளிடும் பரல்.

194. ஊழிநெடுங் காலங்க ளோங்குசக்ர வாளமெனும்
பாழிநெடும் பொருப்பவள்காற் பாடகமோ பார்த்திலனேல். (24)

195. மூர்த்தைவே தங்களே மொழிகின்ற திருவார்த்தை
சிந்தைவே றற்றவர்தஞ் சிந்தனையே திருமேனி. (25)

196. அறம்புரியு மகவாயில் காக்கின்ற தரும்போதம்
புறம்புரியும் புறவாயில் காக்கின்ற பூதமே. (26)

197. சூர்மகளிர் கருணாதி யாகியன தாயமொழி
ஏர்மகளிர் மருநிலமங் கியன்ஞான யோகமே. (27)

198. பங்கயா சனனறியாப் பான்மைத்தா லவள்பரிசின்
றிங்கியா னிவ்வண்ண மெடுத்தியம்பத் தகுவதுவோ. (28)

199. ஏறுவணம் புள்ளாதி யெனக்கற்பித் திடுவேனே
ஏறுவணஞ் சிறந்தவட் கின்னருட்போ தகமாமால். (29)

200. ஆழிமழுப் படையாதி யாயுதமற் றென்கோவென்
ஏழுபிறப் பையுமெறிந்து மிளையாவன் பிலங்கவுமே. (30)

---

195. "வேதமவ டிருவாயி லோது கீதம் வேறுநினை விலர்காணு மேனி மேனி" அஞ்ஞவதைப்.

196. காக்கின்ற - காக்கின்றவை. "பூதமவ டிருவாசல் காவ லாகும், போதமவ டிருமேனி காவ லானே" அஞ்ஞவதைப்.

197. சூர்மகளிர் - யோகினிகள். கருணாதி - கருணை, முதிதை, மைத்திரி, கீதி, உபேட்சை என்பன; "யோகினிகள் கருணாதி யான மாதர், யோக மரு நிலமாசின் ஞான யோகம்" அஞ்ஞவதைப்.

198. "சோகனக னறியாத கோயில் கோயில் கூறரிய பெருவாழ்வை யாவர் கூற" அஞ்ஞவதைப்.

199. ஏறு உவணம். ஏறு வணம் சிறந்தது - ஏறுதற்குச் சிறந்த வாகனமாக அமைந்தது; அருட்போதகம் - அருளாகிய யானை. "கலை யேறுவணங் களியன்னமெனக் கற்பித்திடவோ சொற்பித்ததுவா, மலையேறு வணங் கிளியன்புறவங் தருள்போதகமே யவள்வாகனமே" அஞ்ஞவதைப்.

200. "பஞ்சாயுதமே திரிசூலமழுப் படையே யெனவோ பகைவெம் பிறவிக், கஞ்சாமுனெழுந் தருளாவெறியு மன்பேதிருவா யுதமாவதுவே" அஞ்ஞவதைப்.

### பரிசனம்

201. தெரிசனத்தின் முறைமைபருள் தேவிபணி விடைபூண்ட
பரிசனத்தின் பரிசதனைப் பகுத்தினிநாம் பகருதுமே. (31)

202. மாலாய போதமற வடிவோவ யோகமுற
மேலாய யோகினவர் வீரிபயி ரவர்களே. (32)

203. செறியுமா றிந்திரிய முதலாய பொருளுண்மை
அறியுமா றறிபவர்க ளமலையோ கினிகளே. (33)

### வேறு

204. உடலெலாம் விழியதா யுறுமவர்க் கருள் செய்வார்
உதயமத் தமனமற் றொளிர்கதிர்க் குவமையார்
கடலுலா வியதிரைப் பிறவிகெட் டிலகுவார்
காளிமா காளிகங் காளியோ கினிகளே. (34)

205. நிலையிலா தனவெலா நிலையெனக் கருதிடார்
நிலையினைக் கருதிநித் திரையறத் துயில்செய்வார்
கலையெலா மடையினுங் கந்தைகோ வணவரே
காளிமா காளிகங் காளியோ கினிகளே. (35)

206. ஒட்டுவிட் டுணர்வுவிட் டுரையும்விட் டுலகுவிட்
டேசலா டுவதுவிட் டுறுபெரும் பிறவியின்
கட்டுவிட் டருணிலைக் கட்டுநிற் பவர்களே
காளிமா காளிகங் காளியோ கினிகளே. (36)

207. தகையுமா யோததிக் கரைகடந் தணையுமே
சகலவாழ் வையுமிந்த்ர சாலமென் றுணருமே
பகையுமார் வமுமிழந் துவகைபெற் றுயருமே
பரைபுரா தனிமனோன் மணிபதா கினிகளே. (37)

---

201. பணிவிடை - குற்றேவல். பரிசனம் - பரிவாரம்.

202. "பரம யோகமுறு பேதமறு போத முடனே, பரம யோகமுறு வாரிறைவி பயிரவர்களே" அஞ்ஞவதைப்.

பி - ம். 'யோகினிவர்'

203. "புணரு மைத்ரிமுத லானபொரு ளுள்ளபரிசே, உணரு மார்க்கம் வரு மாதவர்கள் யோகினிகளே" அஞ்ஞவதைப்.

204. "அவர்களா கமுமெலாம் விழியதா மொழிவரே, எழுதன்மா றுதலிலா விரவியா முருவரே" அஞ்ஞவதைப்.

205. கலை......கோவணவரே : "கலைபொ ழுமலொரு கோவணவ ராய்விடுவரே" அஞ்ஞவதைப்.

206. ஒட்டு - பற்று.

207. தகையும் - துன்பஞ்செய்யும். மாயோததி - மாயையாகிய கடல்.

வேறு

208. தம்மை நாடித் தலைவனை நாடுமே
தலைவன் சீர்த்தி தலைபுனைந் தாடுமே
எம்மை யாள்கென் றிரந்திசை பாடுமே
இறைவி யைத்தொழும் டாகினி வர்க்கமே. (38)

209. அருவி யானந்த வெள்ளம் படியுமே
ஆடு கின்ற தருளும் பொடியுமே
இருமை யுந்துறந் தேமாந் திருக்குமே
இறைவி யைத்தொழும் டாகினி வர்க்கமே. (39)

210. அண்ட மோர ணு வாகக் குறுகுமே
அணுவு மண்டம தாகப் பெருகுமே
எண்டி சாமுக முஞ்சென் றுலாவுமே
இறைவி யைத்தொழும் டாகினி வர்க்கமே. (40)

வேறு

211. சொல்லரிய நனவினொடு துயின்மறந் தவர்களே
தூங்குதனி நிட்டைவிடு தொழில்சிறந் தவர்களே
நல்லதொரு ஞானமுத் திரைதழைத் தவர்களே
ஞானநா யகிகருணை நாடுசா தகர்களே. (41)

வேறு

212. பிறிவி றந்தசுக வாரிதி யழுந்திடுவரே
பிரியம் வந்துபலி யங்கையி னயின்றமைவரே
அறிவி றந்துரை யிறந்திட முணர்ந்திடுவரே
அமலை யம்பிகை யணங்குடை யகம்படியரே. (42)

---

210. "அவனிவா னடையவோ ரணுவதா நெடியரே, அணுவுமே ருகிரியா யறவுகே ரியர்களே, பவனிவா னடையவோர் பவனிபோ துவர்களே" அஞ்ஞவதைப்.

211. "நித்திரை சாகரத மற்றதொரு சீர்மையினரே நிட்டை யாதுமில தானதொரு நீதியினரே, முத்திரை ஞானமெனு முத்திரையல தேதுமிலரே முத்தி சாயகர்க ளானபவ மோசகர்களே." அஞ்ஞவதைப்.

பி - ம். 'ஞான முற்றிசை தழைத்தவர்களே'

212. உரையிறந்திடம் - உரை இறந்த இடம்.

213. யாவ கைப்பல வுயிர்த்தொகுதி கண்டுபோவ
எழுத ரும்பழ மறைப்பொருள் குறித்தபடியே
மூவ கைப்படிவ மாகியழி யாதவொளியாம்
மூல மாகிய முதற்பொருள் பரிந்தபரிசும். (43)

214. வெண்ணி லாவொளி துளும்புகயி லைக்கிரியின்மேல்
விழிகி ழித்ததுத லுங்கரிய கந்தரமுமாய்
அண்ண லாரினித மர்ந்தருளி வாசமலரோன்
ஆதி யர்க்கற மலர்ந்தருள் சுரந்தபரிசும். (44)

215. பரிதி வானவ னுடைத்திட வுடைந்ததிமிரப்
படல மொத்திருள் பரந்திரிய வாலநிழலிற்
சரியை நேர்கிரியை யோகமொடு ஞானமுழுதும்
சனக ராதியர் தமக்கருள் சுரந்தபரிசும். (45)

216. முன்ப ராபர வுருத்தனில் விகாரமிலராய்
முற்று ணர்ந்துருகி மும்மல விரோதமகலும்
அன்ப ரானவர் நினைத்திடு முருக்கொடுபுகுந்
தவர வர்க்குள மகிழ்ந்தருள் சுரந்தபரிசும். (46)

217. காடெ லாம்வரி நெடுங்கண்மயில் பின்புதொடரக்
கைச்ச ரம்பொருத பன்றியொடு முன்புதொடரும்
வேட வேடமு னெடுத்தருளி யன்றுபொருபோர்
விசயன் மெய்த்தவ முடிப்பவருள் வைத்தவிரகும். (47)

---

213. "ஆதி மூலமொரு கோலமுமி லாதவடிவிவ் வகில லோகமு மறிந்தடையும் வண்ணமழகார், சோதி மூவடிவு கொண்டருளி யந்தமறை முன் சொன்ன தன்மைதெரி யும்பரிசு சொன்னதுணிவும்" அஞ்ஞவதைப்.

பி - ம். 'ஏவகை'

214. கந்தரம் - கழுத்து.

"கயிலை மாமலையின் மேலினிதி ருந்தருளியக் கமல யோனிமுத லெக் கடவு ளர்க்குமருளான், மயிலை யேறிவரு மைந்தனுட னந்திமுதலா மற்றும் வந்தடைப வர்க்குமருள் செய்தவகையும்" அஞ்ஞவதைப்.

215. பரிதிவானவன் - சூரியன். திமிரப் படலம் - இருட் பரப்பு. இருள் - அஞ்ஞானம்.

216. "தன்ப ராபரம தானதிரு மேனிநிலையிற் சனன மின்றியொரு தன்மையினி னின்றருளியே, அன்ப ரானவர்க ணெஞ்சினி லுவந்தவடிவா யங்கு வந்தவர்க ளுய்யும்வகை செய்த வருளும்" அஞ்ஞவதைப்.

217. மயில் - உமாதேவியார். விரகு - தந்திரம்.

218. வெந்தி றற்கொடிய சூலமொடு பாசம்விசிறு
மேதி யூர்திமிசை வெங்கதை சுழற்றிவெகுளா
வந்த வந்தக னடங்கிவிழ மோதிவெருவேல்
மாம றைச்சிறுவ வென்றருள் பொழிந்தவளமும். (48)

219. வேத ஞரணனெ டாரணமு மின்னமுணரா
மிக்க பாதயுக ளந்தரணி தோயவிரவிற்
றாத னுகியிரு காலொரு மடந்தையிசையத்
தொண்ட ரேவல்தலை கொண்டருள் சுரந்தபரிசும். (49)

220. முன்பு பின்பினெடி லாததொரு மூலவொளிபால்
முற்றி யுற்றழிவி லாதொரு திறத்தினுருகும்
அன்பு கொண்டக னெகிழ்ந்தணி வளர்க்கவினையும்
அம்ம வைக்கருள் தருங்குழவி யானபரிசும். (50)

221. மேன்மை யுற்றசிவ ஞானதே சிகனிவனெனும்
மிக்க நாமமொடு மேதினி தழைக்குமுறையால்
மானி டப்புதிய கஞ்சுக மணிந்துதமிழ்தேர்
மயிலை மால்வரை வளம்பெருக வந்தபரிசும். (51)

வேறு

222. ஒருமூர்த்த மெனவுணராப் பரப்பிரமந் தனினின்றம்
உபதே சிப்பக்
குருமூர்த்த மெனவெய்தி மான்மழுவுங் கரந்ததிருக்
கோலம் போற்றி. (52)

---

218. மேதியூர்தி - எருமைக்கடா வாகனம். அந்தகன் - யமன். மறைச் சிறுவன் - மார்க்கண்டேயர்.

219. பாதயுகளம் - இரண்டு தாள்கள். ஒருமடந்தை - பரவையார். தொண்டர் - சுந்தரமூர்த்தி நாயனர்.

220. அம்மவை - சிவஞான பாலைய தேசிகரை வளர்த்த தாய்; "பெருகுமம் மவைவளர்க் குங்குழவி செங்கிரை யாடியருளே." சிவ ஞான. பிள்ளைத்.

221. கஞ்சுகம் - சட்டை. மயிலைமால்வரை - மயூராசலம்; இப் பொழுது மயிலம் என்று வழங்கும் ஸ்தலம்.

223. எண்ணாத வினைமுழுது மிரவிவர விரியுமிருள்
எனவே சாயக்
கண்ணாலே கடைக்கணித்துக் கழிபிறவி கெடுத்தபெரும்
கருணை வாழ்த்தி. (53)

224. எங்கள்பிரான் சிவஞான தேசிகனார் திருக்கருணை
என்று மேத்தி
அங்கமெலாம் புளகரும்ப வானந்தச் சலதிபடிந்
தழுந்து வாரே. (54)

---

223. இரியும் - நீங்கும்.

பயிலவர்கள் (202) முதலியவர்கள் (212) பரிசு (213) முதலியவைகளை (221)ப் போற்றி (222) வாழ்த்தி (223) அழுந்துவாரே (224) என இயைக்க.

## 7. பேய் முறைப்பாடு

225. இறப்பதும் பிறப்புமாய விந்த்ரசால வித்தைபைச்
சிறப்பொடுங் குறிக்கொளென்று தேவிமுன்பு காட்டியே. (1)

226. எங்களைய கிக்குமுன்ன ரெய்திவாய் புதைத்துநேர்
தங்கடங்கள் குறைகள்கூளி தாமெடுத்தி யம்புமே. (2)

227. பிறந்திறந்து திரிதிரென்று பேய்களாக வெங்களை
மறந்திருந்து நெஞ்சினால் வருத்தவதென்னை யன்னையே. (3)

வேறு

228. மாயிருந்தண் கடலுலகத் துமையாள் பாகர்
மாணிக்க வாசகரே முதலாந் தொண்டர்
ஆயிரம்பேர்க் களித்தவிடத் தெங்கள் கூட்டம்
அங்கணுகப் பொறுத்தாரோ வவர்க்கே செய்தார். (4)

229. நிறைத்தபெரும் புகழ்க்காழிப் பிள்ளை யார்க்கு
நெடுந்தடத்துப் புகுந்தமுகை நீக்கி நீதான்
துறைத்தமிழு முனதுமுகிழ் முலைத்தீம் பாலும்
சுரந்தளித்தா யெங்களுக்கோர் துளிதந் தாயோ. (5)

230. பொங்கருளா ரமுதத்தை வாகி சர்க்குப்
புனிற்றிளவான் பிறைக்கண்ணிப் புனித ரீந்தார்
எங்களையு மழைத்தாரே லன்றே யுய்வோம்
எம்மையவர் மறத்தலினா லேக்கற் றேமால். (6)

---

227. "உலகிலே சனித்துநின் றழைத்துநீர் பிழைப்பிலா, அலகை யாமி னைவருத்த தென்கொலெம்மை யம்மையே" அஞ்ஞவதைப்.

228. "வாசகத்தா லவியையசின் றருக்கு ஞான மதயானை வாதவூர் வள்ள லோடு, மாசகற்றி யாயிரம்பேர்க் கீச னூர்நல் லமிர்தளித்தா ரெமக் கிரங்கி யருளா ரின்றான்" அஞ்ஞவதைப்.

229. காழிப் பிள்ளையார் - திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்.

"தலைப்பான்மை மிகப்பெரிய காழி ஞான சம்பந்தர் தாம்பிள்ளைத் தனத்தி னாலே, முலைப்பாலைப் பகிராதே தாமே யுண்டு முத்தமிழைப் பாடி யற முதிய ராஞர்" அஞ்ஞவதைப்.

230. வாகீசர் - திருநாவுக்கரசு நாயனார்.

"திருநாவிற் காசர்மிகத் தெள்ளத் தேறித் தெளிந்துதித் திக்குமருட் டேறன் முன்ன, மொருநாளிற் பெற்றெம்மை யொழியப் போயுண் டொளி யுருவா னூர்யாக்க ளுலர்ந்தே போனேம்" அஞ்ஞவதைப்.

231. ஆரூரர் தமையாட்கொண் டலவா வின்பம்
அவர்க்கருளித் தம்மருகே யடைந்து வாழப்
பாரூருந் தொழப்பணித்தா ரந்த நாளும்
பார்த்திருந்து பெரும்பசியாற் பதைத்தோ மம்மே. (7)

232. கோட்டிளந்தண் பிறைக்கண்ணிப் புனித னார்தாம்
கூடலசங் கமத்தருளுங் குருவாய் வந்தே
ஈட்டருஞ்சீர் வசவேசர்க் கமுத மீந்தார்
யாங்களே யந்நாளு மிளைத்தோ மம்மே. (8)

233. கவலையற்ற நிரதிசய வமுத முண்டு
களித்திறுமாந் திருப்பமுக்கட் கடவு ளார்தாம்
குவலயத்தி லருள்செய்தா ரநேகம் பேர்க்குக்
கோமளையே யெம்மளவுங் கொடிய ரானார். (9)

வேறு

234. ஏழ்வயிற்றுப் பிறப்பெல்லா மெங்களுக்கே யுரித்தாக்கிப்
பாழ்வயிற்றுக் கிரைதேடிப் பதைபதைக்கப் படைத்தனையே. (10)

235. மையாக விருட்டறைக்குண் மாயாப்ர பஞ்சமெல்லாம்
மெய்யாக மதித்துறைய வினையேமை விதித்தனையே. (11)

236. சென்றவிடத் தைம்புலனுஞ் செலவிடுத லல்லாமல்
நின்றவிடத் தேயுன்னை நினைந்திருக்க நினைந்திலையே. (12)

237. மண்ணாசை பொன்னாசை மழைத்தடங்கண் வலைவீசும்
பெண்ணாசைக் கடலழுந்திப் பிரியாமற் பிரித்தனையே. (13)

---

231. "அடுத்தனவே செய்துதிரிந் தற்ற நம்பி யாரூரிற் கிறைவர்திரு வருளி னாலே, தடுத்தவரை யாட்கொண்டா ரமிர்த முண்ணத் தாமளித்தா ரெம்மளவுந் தாயே காணோம்" அஞ்ஞவதைப்.

232. கோடு - பக்கம். வசவ தேவருக்குக் கூடல சங்கமேசர் குரு வாக வந்து அருள் செய்தார்; "தாடலை தந்திங் கெம்மையா ணந்தி தாயகட் டினுநின்று தரைமேல், ஏடவிழ் மலர்வாண் முகமது தோன்ற வெழுந்தரு ளுதன்முனங் குருவாய்க், கூடல சங்க மேசன்றாய்க் கொளித்துக் குறுகிநன் னுதலினி றணிந்து, வீடருள் பரம சிற்கன லிங்க மெய்யுறத் தரித்தன னம்மா" பிரபு. அக்கமாதேவி. 25.

234. உரித்து : பன்மையில் ஒருமை வந்த வழுவமைதி; பிறவாறும் கூறுவர்.

235. பி - ம். 'வினையெம்மை'

236. "சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ, நன்றின்பா லுய்ப்ப தறிவு" குறள், 422.

## கனவு

238. இவ்வண்ணம் பலகூளி யெடுத்தியம்பச் சிலகூளி
மெய்வண்ணம் விளைந்தகுறி விமலைதனக் குரைசெயுமால். (14)

239. எண்டிசைமா நிலவரைப்பி னினிதிலங்குஞ் சராசரமாய்க்
கண்டபொரு ளத்தனையுங் கனவாகக் கண்டனனே. (15)

240. ஆதியுமந் தமுமறியே னறிவதொரு குறியல்லாற்
றீதகலும் படிவந்து சேர்ந்தகுறி யொன்றுளதே. (16)

241. மாயமிது வெனவுணரா மயக்கத்திற் குடிபுக்க
காயம்விடுத் துயிர்நீங்கக் கண்டுமனங் கலங்கியதே. (17)

242. சொல்லாத பெருந்தகைமைச் சுவர்க்காதி போகமெல்லாம்
நில்லாத நிலையென்று நிச்சயமாய்த் தோன்றியதே. (18)

243. தாவாத சமதமங்கண் முதலகுணந் தலைப்படுமே
மேவாயா னெனதென்னும் வெறுஞ்செருக்கு விடைகொளுமே. (19)

244. பழிகாட்டு மிருவினைக்கும் பரிபாகம் வந்தெய்த
வழிகாட்டுங் குருவிருந்த வழிதேடி மனஞ்செலுமால். (20)

245. விழிநீரு மயிர்ப்புளகு மெய்விதிர்ப்புந் தனிதோன்றப்
பழியாத குறியிவைதாம் பலித்ததுபண் டறியேமால். (21)

246. தெருள்புகுந்த வடியர்சிலர் சிறப்பிவையென் றுரைத்தனரே
மருள்புகுந்த சிலவலகை மதியாது மயங்கினவே. (22)

247. இவ்வண்ணம் பலகூறி யிறைவடன் றிருப்பாதச்
செவ்வண்ண மலர்சூடித் தெருமரா நின்றிடலும். (23)

248. தெருள்பெருகுஞ் சிவஞான தேசிகனும் புகழ்வேந்தன்
பொருகளங்கண் டோரலகை யவணின்றும் புகுந்ததுவே. (24)

249. புகுந்தகடி கடிதுமிகப் புடைபுடைத்து வாய்திறவா
மிகுந்தபா பரப்பினெடும் விளித்தழையா நின்றதுவே. (25)

---

238. குறி - நிமித்தம்.

243. சமதமங்கள் முதல குணம் - சமம், தமம், உபரதி, திதிட்சை, சமாதானம், சிரத்தை என்பன; இவை சமாதி ஷட்சம்பத்தி எனப்படும். யான் எனது என்னும் செருக்கு - அகங்கார மமகாரங்கள்; "யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க், குயர்ந்த வுலகம் பெறும்" குறள்.

245. விதிர்ப்பு - நடுக்கம்.

246. தெருள் - தெளிவு. அலகை - பேய்.

249. கடி - பேய்.

## வந்த பேயின் கூற்று

### வேறு

250. அணங்கு பிறவி யொழிய
அணங்கு பிறவி யொழிய
கணங்க ளெழுக வெழுக
கணங்க ளெழுக வெழுக. (26)

251. மாய வவல மழிய
மாய வவல மழிய
பேய்க ளெழுக வெழுக
பேய்க ளெழுக வெழுக. (27)

252. மீளி வினைகள் கழிய
மீளி வினைகள் கழிய
கூளி யெழுக வெழுக
கூளி யெழுக வெழுக. (28)

### வேறு

253. வல்லைபுக நீவிரெல்லா மாயாத வப்பசியை
மாற்ற வென்னுச்
சொல்லவமர் விளைந்தபடி சொல்லுகநீ யெனச்சிலபேய்
சொல்ல லோடும். (29)

### வேறு

254. ஆராம லுலர்ந்தவுட றன்னை விட்டங்
கப்புறமே குப்புறவுற் றகன்றெம் மாவி
சோராம லெமையளித்துப் பார்க்கும் வண்ணம்
சொல்லெனச்சில் பேய்க்குதடு துடித்த வன்றே. (30)

### வேறு

255. பணிவுபடச் சிலமுதுபேய் படபடத்துக் கூறுமற்
பையப் பையத்
துணிவுபடச் சமர்விளைந்த படியெல்லாஞ் சொல்லுகெனச்
சொல்லு மன்றே. (31)

---

250. அணங்கு பிறவி - வருத்துகின்ற பிறப்பு. ஒழிய : வியங்கோள்.
251. அவலம் - துன்பம். அழிய : வியங்கோள்.
254. ஏ - மீ. 'அப்புறமே பெபர்பெறவுற்'
255. பையப் பைய - மெல்ல மெல்ல.

# 8. கூளி கூறியது

268. அனந்த சதகோடி தேவரா லும்
அனந்த சதகோடி யோகரா லும்
அனந்த சதகோடி நாகரா லும்
அளந்த றியொணுத நீதிகா ணுமே. (1)

வேறு

269. மன்னவனு மானத்தா லனைத்துங் கூறி
வாக்கிறந்த மெய்ஞ்ஞானம் வகுக்குங் காலை
முன்னவனும் வாய்மலரா தாலி னீழல்
மோனங்கொண் டிருந்தனனுன் மொழிவ தேயோ. (2)

270. சேய்கிடந்த பொருளதனை யணுகி நோக்கித்
தெரிந்ததுபோன் மாலயற்குந் தெரியா நீதி
பேய்கிடந்து பிதற்றுமெனக் குறிக்கொ ளாது
பெரிதாக விததன்னைப் பேணும் பேணும். (3)

271. சீற்றமிகு மஞ்ஞனெனு மிகல்கூர் பாசன்
சேர்ந்தமா யாபுரத்தின் றிண்மை தன்னை
மாற்றுரையார் மெய்ஞ்ஞான வேந்தை யன்றி
மற்றையதன் வலிசிறிது வகுப்பக் கேண்மின். (4)

## மாயாபுரத்தின் அமைப்பு

வேறு

272. மாதாபி தாமதலை மனைவியென வீழ்வோருக்
காதாரம் போன்றேரு தாழ்விக்கு மகழினதால். (5)

---

269. மன்ன - நிலைபெற. அனுமானத்தால் - அனுமானப் பிரமாணத்தால். முன்னவன் - தட்சிணுமூர்த்தி. "ஞான மலாதபாத முரையாடி ஞான முரையாடுகாலை யாஞர், மோனம லாதுகூற முடியாமல் யாது மொழி யாரி தியாவர் மொழிவார்" அஞ்ஞவதைப்.

270. "பேயுரை யாடுகின்ற தெனநீர் கொளாது பெரிதாக வுன்னு மிதுவே" அஞ்ஞவதைப். 271. பி- ம். 'குறிகளோது'

272. "மாதா பிதாமாது லன்ருா மகவென், ருயாவ ருஞ்சுற்றம் வீழ்வோர்க ளேறத் காதார மேபோல வமிழ்விக்கு மன்றே" அஞ்ஞவதைப்.